# சுவாமி விவேகானந்தரின்

# ஞானதீபம்

*சுடர் 1*



**சொற்பொழிவுகள் மற்றும் எழுதியவற்றின்**

**தொகுப்பு**



**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர், சென்னை-600004

# பதிப்புரை

சுவாமி விவேகானந்தர் பேசிய மற்றும் எழுதியவற்றின் தொகுப்பான ஞானதீபத்தின் இந்தப் புதிய பதிப்பை, அவர் மேலை நாடுகளில் இந்திய ஆன்மீகத்தின் வெற்றிக் கொடியை நாட்டிவிட்டுத் தாயகம் திரும்பிய நூறாம் ஆண்டில் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

சுவாமிஜியின் பிறந்தநாள் நூற்றாண்டு விழாவின்போது (1963) ஞானதீபம் பத்து சுடர்களாக, அதாவது பத்து பகுதிகளாக வெளிவந்தது. சுமார் 25 வருடங்கள் அந்தப் பதிப்பு அச்சிடப் பட்டது. பின்னர், சிறுசிறு பகுதிகளாக இருந்தால் எல்லோரும் வாங்கிப் படிக்க எளிதாக இருக்கும் என்று கருதி, அவை பதினாறு பகுதிகளாக வெளியிடப்பட்டன (1987).

இப்போது அவரது முக்கியச் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் சிறிய வடிவில் தனி நூல்களாக வெளிவந்து விட்டன. எனவே ஞானதீபத்தை அதன் பழைய வடிவத்தில் பெரிய நூலாக வெளியிடுகிறோம்.

இந்த நீண்ட காலத்தினிடையே சுவாமிஜி பேசிய மற்றும் எழுதியவைபற்றி இந்தியாவிலும் அமெரிக்காவிலும் எவ்வளவோ ஆராய்ச்சிகள் நடைபெற்றுள்ளன; அவை நமக்குப் புதிய தகவல்களைத் தருகின்றன; எவ்வளவோ புதிய விவரங் களும், சொற்பொழிவுகளும், பத்திரிகைக் குறிப்புகளும் கிடைத் துள்ளன. ஞானதீபத்தின் இந்தப் பதிப்பில் இந்தச் சொற் பொழிவுகள் அனைத்தையும், பத்திரிகைக் குறிப்புகள் பலவற்றை யும் இணைத்துள்ளோம். எனவே இந்தப் பதிப்பில் ஒரு சுடர் அதிகமாகி உள்ளது. புதிதாக இணைத்துள்ளவற்றை அந்தந்தச் சுடரில் குறிப்பிட்டுள்ளோம்.

புதிதாகச் சேர்க்கப்பட்டவை தவிர அனைத்தும் இதற்கு முந்தைய பதிப்பிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன. மொழிபெயர்ப் பாளர்களின் பெயரை அந்தந்தச் சுடர்களிலேயே குறிப்பிட் டுள்ளோம். இந்தப் பதிப்பில் சொற்பொழிவுகளும் கட்டுரை களும் தலைப்புவாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

புதிய பகுதிகளை மொழி பெயர்த்தது, பழைய பகுதிகளை மூல நூலுடன் ஒப்பிட்டுப் பார்த்தது, தலைப்புவாரியாக அவற்றைத் தொகுத்தது, சொல்லடைவுப் பகுதியைத் தயாரித்தது, அச்சுப்பிரதிகளைச் சரிபார்த்தது போன்ற பணி களைச் செய்தவர் எமது மடத்தின் துறவியாகிய சுவாமி ஆசுதோஷானந்தர். அச்சுப் பிரதிகளைச் சரிபார்ப்பதில் பிரம்மச்சாரி புண்ணிய சைதன்யரும் பக்தர்களும் அவருக்கு உதவினர்.

இந்தப் பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் இறைவன் திருவருள் புரிவாராக! ஞானதீபத்தின் இந்தச் சுடர் படிப்போருக்கு ஒளிகாட்டி, வழிகாட்டி ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்லுமாக!

31.1.1997, சுவாமி விவேகானந்தரின் 135-ஆம் ஜெயந்தி
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-4

# சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம்

## ஒரு கண்ணோட்டம்

### காலடித் தடங்கள்

உலகில் இதுவரை வாழ்ந்த மாமனிதர்கள் எல்லாம் நமக்கு உணர்த்தி நிற்கின்ற ஒன்று உண்டு. அது, நாமும் உன்னத வாழ்க்கை வாழலாம் என்பதே. நாம் பின்பற்றி நடப்பதற்காகக் காலமெனும் பெரும் மணற்பரப்பில் தங்கள் வாழ்க்கை மற்றும் உபதேசங்கள் என்னும் காலடித் தடங்களை அவர்கள் விட்டுச் சென்றனர். அப்படிச் சமீபகாலத்தில் அழியாத தடங்களை விட்டுச் சென்றவர் சுவாமி விவேகானந்தர்.

அவர் உலக அரங்கில் இருந்தது என்னவோ பத்து ஆண்டு களுக்கும் குறைவான காலம்தான். ஆனால் அதற்குள் அவர் சாதித்ததுதான் எத்தனையெத்தனை! ஒருவேளை அவர் தமது இறுதி நாட்களில் கூறியதுபோல் 'இந்த விவேகானந்தன் என்ன செய்திருக்கிறான் என்பதை யார் அறிந்தார்கள்? இன்னொரு விவேகானந்தன் இருந்தால் அவனால்தான் அதை அறிந்து கொள்ள முடியும். ஒரு விவேகானந்தன் என்ன, காலப் போக்கில் எத்தனையோ விவேகானந்தர்கள் தோன்றத்தான் போகிறார்கள்!'

அவர் ஏற்றி வைத்த ஞானதீபத்தின் இந்தப் பதினொரு சுடர்களில் நாம் செய்யப்போவதெல்லாம் அவர் விட்டுச் சென்ற அந்தக் காலடித் தடங்களைக் காணவும், அவற்றைக் கண்களில் ஒற்றிக்கொள்ளவும், அவை நமக்குத் தருகின்ற செய்தியைப் புரிந்துகொள்ளவும் முயற்சிப்பதுதான்.

### சுவாமி விவேகானந்தரின் எல்லை

முயற்சி என்று ஏன் சொல்கிறோம் என்றால், தத்துவம், மதம், மனஇயல், சமூகஇயல், விஞ்ஞானம், வரலாறு, புவியியல், வானஇயல், கலை, இசை என்று அவர் பேசாத துறை எதுவுமே இல்லை. பேசியது மட்டுமல்ல, அவை ஒவ்வொன்றிலும் ஒரு

புதிய ஒளியைப் பாய்ச்சியுள்ளார் அவர். ஒவ்வொரு துறை வல்லுனர்களும் இந்த இலக்கியத்தை ஊன்றிப் படிக்கும்போது அந்த முடிவுக்கே வருகிறார்கள்.

விஞ்ஞானத்தை எடுத்துக்கொள்வோம். சுமார் பத்து ஆண்டுகளுக்குப் பின்பு ஐன்ஸ்டீன் நிரூபிக்கவிருந்த சார்பியல் கோட்பாடு (Theory of Relativity) பற்றி, சுவாமிஜி தம்மிடம் கேட்டதாக நிகோலா டெஸ்லா (Nikola Tesla) என்ற விஞ்ஞானி தெரிவித்துள்ளார்.[1]

மொழியியலை எடுத்துக்கொண்டால், அவர் எழுதியவை வங்க மொழிக்கு ஒரு புதிய பார்வையை, ஒரு உத்வேகத்தை அளித்துள்ளதாக வங்க மொழியியல் அறிஞர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். ஆங்கில மொழியிலும் அதுபோலவே—கடினமான பதங்களை உபயோகித்து நீளநீள வாக்கியங்களாக எழுதுவது உயர்நடையாகக் கருதப்பட்ட பத்தொன்பதாம் நூற்றாண்டில், எளிய ஆனால் மிகவும் ஏற்புடைய சொற்களைப் பயன்படுத்தி, சிறிய வாக்கியங்களாக எழுதத் தொடங்கிய முன்னோடிகளுள் சுவாமிஜியும் ஒருவர் என்றால் அது மிகையாகாது.

இனி மனஇயல். இந்தத் துறையில் அவரது கருத்துக்கள் பிரமிப்பைத் தருவதாக உள்ளன. இன்று மேலை மனஇயலின் தந்தையாகப் போற்றப்படுகின்ற ஃப்ராய்ட் (Sigmund Freud, 1856-1939) அப்போதுதான் தமது ஆராய்ச்சிகளைத் தொடங்கியிருந்தார். ஆனால் அந்தக் காலத்திலேயே உணர்வு மனம், ஆழ் மனம், உணர்வறு மனம் என்று சுவாமிஜி தெளிவாகப் பேசியிருப்பது (சுடர் 2. பக். 35, 248) மிகவும் சிந்திப்பதற்கு உரியது.

இப்படியே அவரது எல்லை முடிவின்றி நீள்கிறது. இந்தத் துறைகளில் எல்லாம் நமக்கு நல்ல அடித்தளம் இருந்தால் மட்டுமே, அந்தத் துறைகளில் ஏற்கனவே இருப்பவை என்ன, புதிதாக சுவாமிஜி என்ன அளித்துள்ளார் என்பதை நாம் அறிந்துகொள்ள முடியும். எனவேதான் இதனை ஒரு முயற்சி என்று கூறினோம்.

அறிந்துகொள்வது இருக்கட்டும், நாம் இந்தச் சுடர்களைப் படிக்கும்போது அவரது சிந்தனை ஓட்டத்தைத் தொடர

---

1. இதுபற்றி விரிவாக அறிய எமது ஆங்கில மாத வெளியீடான Prabuddha Bharata, 1985 ஜனவரி மாத இதழ், பக். 34-இல் John L. Dobson எழுதிய Einstein and Vivekananda என்ற கட்டுரை பார்க்கவும்.

வேண்டுமானால்கூடத் தத்துவம், மதம், மனஇயல், சமூகஇயல், வரலாறு என்று குறைந்தது ஐந்து விஷயங்களாவது நமக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

ஆனால் எத்தனைத் துறைகளை அவர் தொட்டாலும், அவரது சிந்தனை ஓட்டம் எங்கெங்குதான் சுற்றிச் சுழன்றாலும் அவையெல்லாம் சென்று சங்கமிக்கின்ற எல்லை ஒன்று உண்டு; அது ஆன்மீகம். அவரது இலக்கு, அவரது துறை ஆன்மீகம். 'ஓ இந்தியா விழித்தெழு, உனது ஆன்மீகத்தால் உலகை வெற்றிகொள்' (சுடர் 5. பக் 125) என்று முழங்கியவர் அவர். அந்த ஆன்மீகத்திற்கு ஒரு புது மெருகு கொடுத்தவர் அவர்.

'எனது லட்சியத்தைச் சுருக்கமாகச் சொல்வதானால் அது இதுதான்: மனிதன் தெய்வீகமானவன் என்பதை மனித குலத்திற்குப் போதிப்பது; இந்த உண்மையை அவர்கள் வாழ்வில் ஒவ்வோர் அசைவிலும் வெளிப்படச் செய்வதுதான்' என்கிறார் அவர். மனிதனில் உறைகின்ற தெய்வீகத்தை வெளிப்படுத்துவதையே அவர் ஆன்மீகம் என்று கருதினார், மதம் என்று கூறினார். 'மதத்தைத் தூக்கியெறிந்துவிட்டு, அரசியலையோ சமுதாயத்தையோ மற்ற எதையோ உங்கள் மையமாக, உங்கள் தேசிய வாழ்வின் ஆதாரமாகக் கொண்டீர்களானால், நீங்கள் மறைந்துபோய் விடுவதுதான் அதன் விளைவாக இருக்கும். இதைத் தடுக்க வேண்டுமானால் உங்கள் எல்லா வேலைகளையும் மதம் என்ற அடிப்படையின் மூலமாகச் செய்யுங்கள். மதம் என்ற முதுகெலும்பின் வழியாக உங்கள் அனைத்து நரம்புகளும் அதிரட்டும்' (சுடர் 5. பக். 154) என்றெல்லாம் கூறும்போது இந்த ஆன்மீகத்தையே, தனிமனித வளர்ச்சிக்கான இந்த மதத்தையே அவர் குறிப்பிட்டார் என்பது நினைவில்கொள்ள வேண்டிய ஒன்று.

### சுவாமிஜியின் பெருங்கொடை

சுவாமிஜி யுகாவதார புருஷர், அதாவது இந்தக் காலத்திற்கேற்ற செய்தியுடன் வந்தவர். ஒருவரின் பாதை மற்றவருக்குச் சரியாக இருக்க வேண்டும் என்பதில்லை என்பதை நன்றாக உணர்ந்திருந்த அவர் மனிதர்களை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்தார்; அவர்கள்: புறமுகமானவர்கள் அதாவது செயல் துடிப்பு மிக்கவர்கள், உணர்ச்சி மயமானவர்கள், அகமுக மானவர்கள், ஆராய்ச்சி மனம் கொண்டவர்கள். இவர்களுக்காக

அவர் வகுத்ததே கர்மயோகம், பக்தியோகம், ராஜயோகம், ஞானயோகம் என்ற நான்கு யோகங்கள்.

கீதையைச் சொன்னது கண்ணனாக இருந்தாலும், அதனைத் தொகுத்தது வேத வியாசராக இருந்தாலும், மகாபாரதத்திலிருந்து அதனைக் கண்டெடுத்து உலகிற்கு அளித்த பெருமை சங்கரரைச் சாரும். நான்கு யோகங்கள் மட்டுமல்ல, இன்னும் எத்தனையோ யோகங்கள் நமது வேதங்கள் என்னும் கருவூலத்தில் உள்ளன. ஆனால் காலத்திற்கு ஏற்ப மனித குலத்தைப் பொதுவாக இவ்வாறு நான்காகப் பிரித்து, நான்கு யோகங்களை அளித்த பெருமை சுவாமி விவேகானந்தரையே சாரும். 'வெவ்வேறு பாதைகள்மூலம் நாம் ஒரே குறிக்கோளை அடைய முடியும் என்பது வேதாந்த மதத்தின் மகத்தான கருத்தாகும். இந்தப் பாதைகளை நான் பொதுவாக கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்று நான்காகப் பிரித்திருக்கிறேன், ஆனால் இந்தப் பிரிவுகள் துல்லியமாகக் கோடிட்டுப் பிரிக்கப்படாதவை. ஒவ்வொன்றும் முற்றிலும் தனியானவை அல்ல, ஒன்றோடொன்று கலந்தவை... எத்தகைய மனப்போக்கு, எந்த அடையாளம் ஒருவரிடம் சிறந்து விளங்குகிறதோ, அதற்கு ஏற்ப இந்தப் பிரிவுகள் வகுக்கப்பட்டுள்ளன' (சுடர் 1 பக். 129) என்று குறிப்பிடுகிறார் அவர்.

இந்த நான்கு வழிகளால் மனிதன் வளர வேண்டும், அதனால் நாடு வளர வேண்டும், அதனால் உலகம் வளர வேண்டும் என்பது அவரது தனிப்பெரும் செய்தியாக இருந்தது.

**விவேகானந்த இலக்கியம்**

சுவாமிஜியின் செய்திபற்றிய கண்ணோட்டத்திலிருந்து, அவரது செய்திகள் புதைந்துகிடக்கின்ற கருவூலமான இலக்கியத்திற்கு வருவோம். விவேகானந்த இலக்கியம் ஐந்து அங்கங்கள் கொண்டது—

1. சொற்பொழிவுகள்
2. கட்டுரைகள்
3. கடிதங்கள்
4. கவிதைகள்
5. உரையாடல்கள், பேட்டிகள்

சொற்பொழிவுகளைப் பொறுத்தவரை, அவற்றுள் பெரும்பகுதி நமக்குக் கிடைக்கவில்லை. இன்று நமக்குக் கிடைத்துள்ளவை கிடைப்பதில் பெரும்பங்கு வகித்தவர்

ஆங்கிலேயரான J. J. குட்வின். 1895 பிற்பகுதியில் சுவாமிஜியைச் சந்தித்த அவர் 1898 ஜூனில் காலமாகும்வரை சுவாமிஜியின் சொற்பொழிவுகளைக் குறிப்பெடுத்து நமக்குத் தந்துள்ளார்.[1] இவரைத் தவிர மிஸ் S. E. வால்டோ என்பவரும் சில சொற்பொழிவுகளைக் குறித்து வைத்துள்ளார். வேறுபலர் எழுதிய சொற்பொழிவுக் குறிப்புகளும் நமக்குக் கிடைத்துள்ளன.

சுவாமிஜியின் பிரபலமான 'சிகாகோ சொற்பொழிவுகள்', அவை ஆற்றப்பட்ட சிகாகோ கலைக்கூடம் வெளியிட்ட சிறப்பு மலரிலிருந்து எடுக்கப்பட்டவை. அந்தக் கலைக்கூடத்திற்கு வெளியில் அந்த நாட்களிலேயே அவர் செய்த வேறு சொற்பொழிவுகள் நமக்குக் கிடைக்கவில்லை; அமெரிக்கப் பத்திரிகைகளில் மட்டுமே இங்கொன்றும் அங்கொன்றுமாக அவைபற்றிய சில குறிப்புகளைக் காண முடிகிறது.

இவ்வாறு ஐந்து அங்கங்கள் கொண்ட இந்த விவேகானந்த இலக்கியத் தொகுதி முதன்முதலில் 1907-இல் மாயாவதி அத்வைத ஆசிரமத்திலிருந்து நான்கு பகுதிகளாக Complete Works of Swami Vivekananda என்ற பெயரில் வெளிவந்தது. சகோதரி நிவேதிதை, சுவாமி சுவரூபானந்தர், சுவாமி விரஜானந்தர் போன்ற பலர் சேர்ந்து, இந்தப் பணியைச் செய்தனர். அதன் பின்னர் சொற்பொழிவுகள், கட்டுரைகள் கடிதங்கள் போன்றவை கிடைக்கக்கிடைக்கச் சேர்க்கப்பட்டு, புதிய பகுதிகள் வரத் தொடங்கின. இவ்வாறு அது தற்போது எட்டுப் பகுதிகளாக உள்ளது.

**ஞானதீபம்**

இந்த எட்டுப் பகுதிகளின் தமிழ் மொழிபெயர்ப்பு, ஞானதீபம் என்ற பெயரில் முதலில் எமது மடத்திலிருந்து 1963-இல் வெளிவந்தது. இரண்டாம் பதிப்பில் அது பதினாறு பகுதிகளாகியது. தற்போது வெளிவருவது புதிய பதிப்பு. பதிப்புரையில் குறிப்பிட்டிருப்பதுபோல் இந்தப் பதிப்பில் பல புதிய பகுதிகள் சேர்க்கப்பட்டு, தலைப்புவாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளது.

இந்தப் தொகுப்புப் பணிக்கு எமது மடம் மற்றும் மிஷனின் துணைச் செயலர்களுள் ஒருவரும், மூத்தத்

---

1. இவரது வரலாறு 'My Faithful Goodwin' என்ற பெயரில் வெளிவந்துள்ளது. வெளியிடுவோர்: அத்வைத ஆசிரமம், கல்கத்தா-700014.

துறவியருள் ஒருவருமான ஸ்ரீமத் ஸ்மரணானந்த சுவாமிகளின் வழிகாட்டுதலும், மேரி லூயி பர்க் எழுதிய ஆராய்ச்சி நூல்களும்[1] பெருந்துணையாக அமைந்தன. தற்போதைய தொகுப்பின்படி ஒவ்வொரு சுடர்களிலும் வரப்போகின்ற முக்கியத் தலைப்புகள் இந்தச் சுடர்களின் பின்புற உள் அட்டையில் (Second Flap) அச்சிடப்பட்டுள்ளன.

சுவாமிஜி வங்க மொழியில் எழுதியவை மற்றும் பேசியவை வங்க மூலத்துடனும் மற்றவை ஆங்கில மூலத்துடனும் ஒப்பிடப்பட்டு, மொழியிலும் பொருளிலும் தேவையான சில மாற்றங்கள் இந்தப் பதிப்பில் செய்யப்பட்டுள்ளன.

சுவாமிஜி சாஸ்திரங்களை மேற்கோள் காட்டுகின்ற இடங்களுக்கு முடிந்த அளவு குறிப்புகள் இணைக்கப்பட்டுள்ளன. இதற்கு வங்க மொழி மற்றும் மலையாள மொழிப் பதிப்புகள் உதவின. சுருக்கமான சொல்லடைவுப் பகுதி ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்த ஞானதீபம், படிக்கும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒளிபரப்பி உண்மையைத் துலங்கச் செய்ய சுவாமிஜியின் பேரருள் துணை நிற்குமாக!

—தொகுப்பாசிரியர்

1. 'Swami Vivekananda in the West: New Discoveris' —6 பகுதிகள்; வெளியீடு: Advaita Ashrama, 5, Dehi Entally Road, Calcutta 700014.

# அணிந்துரை

நமது குருநாதரும் அவரது செய்தியும்

விவேகானந்த இலக்கியம் இந்தப் பதிப்பில் நான்கு பகுதிகளாக[1] வெளிவருகின்றன. இவற்றில் உலகிற்கான செய்தி மட்டும் அல்ல, இந்துமதம் தன் வாரிசுகளுக்கு வழங்கிய ஓர் உரிமைச் சாசனமும் அடங்கியுள்ளது.

பொதுவாக எல்லாம் சின்னாபின்னமாகச் சிதறி வருகின்ற நவீன யுகத்தில் இந்து மதமாகிய கப்பலுக்குத் தேவையான தெல்லாம், அது மூழ்கிவிடாமல் காப்பாற்றுகின்ற நங்கூரத்தை நாட்டுவதற்கு ஒரு பாறை; தன்னை உணர்வதற்கான ஒரு பிரமாண சாசனம். இந்த விவேகானந்த இலக்கியத்தில் அது இந்து மதத்திற்குத் தரப்பட்டுள்ளது.

வேறெங்கோ கூறப்பட்டுள்ளது போல், வரலாற்றில் முதன் முதலாக, இதோ இங்கே, இந்து மதம் மாபெரும் இந்து மனங்களுக்குப் பொதுவாக்கப்பட்டுள்ளது. வரும் யுகங்களில் முன்னோர்களின் மதம் எது என்பதுபற்றி அறிய விரும்புகின்ற இந்துவும், தன் பிள்ளைகளுக்கு அதுபற்றிக் கற்பிக்க விரும்புகின்ற இந்துத் தாயும் தங்கள் நம்பிக்கையைத் திடப்படுத்திக் கொள்ளவும் ஒளி பெறவும் இந்த நூல்களையே நாடுவார்கள்.

ஆங்கிலம் இந்தியாவை விட்டு மறைந்த நெடுங்காலத்திற்குப் பிறகும், உலகத்திற்கு அந்த மொழியின்மூலம் அளிக்கப்பட்ட இந்த அறிவுச் செல்வம் அழியாமல் நின்று மேலை நாடுகளுக்கும் கீழை நாடுகளுக்கும் பெரும் பயனை விளைவிக்கும்.

தனது கருத்துக்களை ஒருங்கிணைத்து, உருக்கொடுப்பது தான் இந்து மதத்திற்கு வேண்டியிருந்தது. உண்மையைக் கண்டு அஞ்சாத ஒரு மதம் உலகிற்குத் தேவைப்பட்டது. இந்த இரண்டும் இதோ இந்த நூல்களில் உள்ளன. சனாதன தர்மமாகிய இந்துமதம் ஒருபோதும் அழியாது என்பதற்கும், பாரதம் பண்டைய காலத்தைப் போலவே இப்போதும் மகோன்னத

---

1. பிறகு இது எட்டு பகுதிகளாகியது.

மாக விளங்குகிறது என்னும் உண்மையை நிரூபிப்பதற்கும் இதோ இந்த இருண்ட வேளையிலும் ஒரு மகாபுருஷர் தோன்றி சமுதாயத்தின் உணர்வுகளைத் திரட்டி அதை முழக்குவதை விட வேறென்ன சான்று வேண்டும்?

தன் எல்லைகளுக்கு அப்பால் உள்ள நாடுகளுக்கும், மனித இனத்திற்கும் உயிரளிக்கின்ற ஆன்மீக உணவைக் கொண்டு செல்லும்போதுதான் இந்தியா தன் தேவை நிறைவேறியதாகக் கருதும் என்பது தெரிந்த ஒன்று. அவ்வாறு நடப்பது இது முதல் முறை அல்ல. நாட்டை உருவாக்கும் அறிவை முன்பொரு முறை சகோதர நாடுகளுக்கு இந்தியா அனுப்பியது. அதன் மூலம்தான் தன் கருத்துக்கள் எவ்வளவு வளம் செறிந்தவை என்பதை அது அறிந்துகொண்டது, அதன்மூலம் தானும் ஒற்றுமை எய்தியது. அந்த ஒற்றுமைதான் இன்றைய நவீன இந்து மதத்தைப் படைத்தது. 'உலகம் முழுவதும் செல்லுங்கள். இந்தச் செய்தியை எல்லா உயிரினங்களுக்கும் வழங்குங்கள்' என்று ஒரு குரு தம் சீடர்களுக்குக் கூறுவதை நாம் இந்தியா வில்தான் முதன்முதலில் கேட்டோம். இதை நாம் ஒரு போதும் மறக்கக் கூடாது. அதே கருத்து, அதே அன்பின் வேகம்தான் புதிய வடிவெடுத்து விவேகானந்தரின் திருவாயி லிருந்து வெளிவந்தது. மேலை நாட்டுப் பேரவை ஒன்றில், அதையே அவர் கூறினார்—

'ஒரு மதம் உண்மையானால் மற்ற மதங்களும் நிச்சய மாக உண்மையே. இந்தக் காரணத்தால், இந்துமதம் எனக்கு எவ்வளவு உரியதோ, அதே அளவு உங்களுக்கும் உரியதாகும்.'

இதே கருத்தை அவர் விளக்குகிறார்—

'இந்துக்களாகிய நாங்கள் பொறுத்துக்கொள்வது மட்டும் அல்ல, ஒவ்வொரு மதங்களுடனும் எங்களைப் பிணைத்தும் கொள்கிறோம். முகமதியர்களின் மசூதிகளில் தொழுகிறோம், சொராஸ்திரியர்களின் அக்கினியை வணங்குகிறோம், கிறிஸ்த வர்களின் சிலுவைக்கு முன்னே முழங்காலிடுகிறோம். மிகக் கீழான மாயமந்திரப் பிரிவுகளிலிருந்து மிக உயர்ந்த கருத்து நிலைகளுக்கு (Absolutism) இடையே உள்ள எல்லா மதங்களும் எல்லையற்ற பரம்பொருளை அறிவதற்காக, உணர்வதற்காக மனிதன் மேற்கொண்ட முயற்சிகளே என்பது எங்களுக்கு நன்றாகத் தெரியும். எனவே இந்த மலர்களைத் திரட்டி அன்பு என்னும் நாரால் தொடுத்து, அற்புதச் செண்டாக்கி நாங்கள் வழிபடுகிறோம்.'

இப்படிப் பேசும் ஒருவருடைய இதயத்திற்கு எதுவும் அயலுமல்ல, அன்னியமுமல்ல. அவருக்குத் தெரிவதெல்லாம் மனித இனமும் சத்தியமுமே.

சர்வமத மகாசபையில் விவேகானந்தர் பேசிய சொற்பொழிவைப் பற்றி என்ன சொல்வது! இந்துக்களின் மதக்கோட்பாடுகளைப்பற்றி பேச ஆரம்பித்தார் அவர். அவர் முடித்த போது இந்து மதம் உருவாக்கப்பட்டிருந்தது என்று கூறலாம். அந்தக் காலமும் சூழலும் இத்தகைய கருத்தை வெளியிடுவதற்கு ஏற்றதாக இருந்தது. அந்தச் சபையில் அமர்ந்திருந்த ஏராளமான பார்வையாளர்கள் முற்றிலுமாக மேலைநாட்டு மனப்போக்கின் பிரதிநிதிகள். சற்று முன்னேறிய மனம் படைத்தவர்களும் இருக்கவே செய்தார்கள். ஐரோப்பாவின் ஒவ்வொரு நாடும் தனது பிரதிநிதியை, அமெரிக்காவிற்கு, குறிப்பாக சர்வமத மகாசபை நடந்த சிகாகோ நகரத்திற்கு அனுப்பியிருந்தது.

மிச்சிகன் ஏரிக்கரைகளில் பாதம் பதிய, வடதிசையின் ஒளி கண்களில் நிலவ, ஆழ்ந்த சிந்தனை உடையவளாக இந்த மேற்றிசை நகர அரசி வீற்றிருக்கிறாள். அவளுடைய எல்லைக்குள் நவீன முயற்சி மற்றும் போராட்டத்தின் அதிகமான நல் அம்சங்களையும், குறைவான தீய அம்சங்களையும் எப்போதும் காணலாம். நவீன உணர்வும், ஐரோப்பாவின் பழங்காலப் பரம்பரைச் செல்வத்தின் ஆதிக்கமும் சிறிதேனும் இல்லாத இடம் சிகாகோவின் எல்லையிலேயே இல்லை. அங்குத் ததும்பி வழிகின்ற மக்கள் வெள்ளமும், அவர்களின் ஆர்வமும் பரபரப்பும் நமக்குப் பேரளவிற்கு ஒரு குழப்பம் போல் தோன்றலாம். ஆனால் அதனுள் மிக உயர்ந்த மனித ஒற்றுமை லட்சியம் ஒன்று உருவாகி வருகிறது என்பதில் சந்தேகம் இல்லை. காலம் கனியும்போது அந்த லட்சியம் வெளிப்பட்டுத் தோன்றவே செய்யும்.

அலையடித்துப் பரவுகின்ற ஆற்றலும் துணிச்சலும் நிறைந்து, அதேவேளையில் ஆராய்ச்சி உணர்வும் கவனமும் நிறைந்த மனங்கள் கொண்ட, இளமைத்துடிப்புமிக்க மக்கள் அங்கே விவேகானந்தரின் முன்னால் அமர்ந்திருந்தார்கள். அவருக்குப் பின்னாலோ, இதற்கு மாறாக, காலங்காலமாக அடையப்பட்ட அமைதியான ஆன்மீகக் கடல். அவருக்குப் பின்னால் இருந்த உலகம் வேதங்களின் காலத்தோடு தோன்றியது; உபநிடதங்களால் தன்னை வளர்த்துக் கொண்டது; அதனுடன் ஒப்பிடும்போது புத்தமதம் நேற்று பிறந்ததுபோல்

தோன்றுவது. அந்த உலகம் மத நம்பிக்கைகளும் பல்வேறு மதப் பிரிவுகளும் நிறைந்தது. வெப்ப மண்டலக் கதிரவனின் ஒளியில் மூழ்கியுள்ள அமைதிப் பேருலகம் அது. காலங்கால மாகத் தன் புழுதிமீது மகான்களின் பொன்னடிகள் பதிந்த உலகம் அது. சுருங்கச் சொன்னால், ஆயிரக்கணக்கான ஆண்டு களாக வளர்ந்துவருகின்ற இந்தியாவே அவருக்குப் பின்னால் நின்றது. ஆம். பல சிந்தனைகளின் ஆழங்களை அளந்து கண்டு விட்ட, பல சிந்தனைகளை மெய்ப்பித்தும்விட்ட இந்தியாவே அவருக்குப் பின்னால் நின்றது. விரிந்த பல்வேறு கால நிலை களும் சூழலும் உடைய மிகப் பரந்த நாட்டின் ஒரு மூலை யிலிருந்து மற்றொரு மூலைவரை உள்ள எல்லா மக்களுக்கும் பொதுவானதும் அடிப்படையானதும் முக்கியமானதுமான உண்மைகளிடையே அமைந்த ஓர் ஒற்றுமையை, தனது அந்த முழுமையான ஒற்றுமையைத் தவிர மற்றதையெல்லாம் உணர்ந்துவிட்ட இந்தியாவே அவருக்குப் பின்னால் நின்றது.

சர்வமத மகாசபையின் மேடையில் அமர்ந்திருந்த காவி உடை தரித்த இந்தத் துறவி கீழ்த்திசை மற்றும் நவீன மேல் திசை ஆகிய இரண்டு சிந்தனை வெள்ளங்களும் கருத்தாறு களும் கலந்து சங்கமிக்கின்ற இடமாக அப்போதைக்கு இருந் தார். எந்தக் கட்டுக்களாலும் எல்லைப்படுத்தப்படாத அந்த மாபெரும் துறவியிடம் இந்த இரண்டு பேராறுகளும் சங்க மிக்கும்போது எழும் அதிர்ச்சியின் தடுக்க முடியாத விளை வாகத் தோன்றின இந்து மதத்தின் பொதுவான அடிப்படைகள். அங்கு விவேகானந்தரின் திருவாயிலிருந்து வெளிப்பட்டது அவரது வாழ்க்கை அனுபவங்கள் அல்ல. அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி அவர் தமது குருதேவரைப்பற்றிக்கூடப் பேச வில்லை. இந்த இரண்டும் அல்ல; அவர்மூலம் பேசியது இந்தியாவின் மத உணர்வு, இந்திய மக்கள் காலங்காலமாக வகுத்துவைத்த செய்தி. இதுதான் அவரிடமிருந்து வெளிப் பட்டது.

எதிர்பார்ப்பு என்னும் பட்டொளியின் நடுப்பகலில், ததும்பும் வாலிபத்தின் சன்னிதியில் அவர் பேசினார். அங்கே பசிபிக் மாக்கடலின் மறுகரையில், பூமியின் இருள் உறைந்து கிடந்த மறுபகுதியின் நிழலில் உறங்கிக் கொண்டிருந்த ஒரு நாடு, தன் சொந்த மகிமை மற்றும் ஆற்றலின் ரகசியத்தை வெளிப்படுத்துவதற்காகத் தன்னை நோக்கிவந்து சேர்ந்த அந்த விடியலின் வார்த்தைகளுக்காக ஏங்கி நின்றது.

விவேகானந்தரைத் தவிர அந்த மேடையில் அமர்ந்திருந்த வர்கள் தாங்கள் சார்ந்திருந்த தனிப்பட்ட மத அமைப்புகளின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் பரப்புகின்ற நோக்கத் துடன் பேசினார்கள். ஆனால் விவேகானந்தர் பேசியதோ, இந்த அனைத்தையும் தன்னுள்கொண்ட ஒரு மதத்தைப் பற்றி. அதுதான் அவரது பெருமை. அவரது வார்த்தையிலேயே சொல்ல வேண்டுமென்றால் அவை ஒவ்வொன்றும் 'பல்வேறு ஆண்களும் பெண்களும் வெவ்வேறு சூழ்நிலையில், வெவ்வேறு நியதிகளின்படிச் செய்கின்ற ஒரு பயணம், ஒரு முயற்சி மட்டுமே.' இதுதான் உண்மை, அது தவறு; இந்த நிலையில் இது உண்மை, அந்த நிலையில் அது தவறு; இந்தக் காரணத் தால் இது உண்மை, அந்தக் காரணத்தால் அது தவறு என் றெல்லாம் சொல்லாமல் 'இவை யாவும் ஒரே நூலில் கோர்க்கப் பட்டுள்ள முத்துக்களைப்போல் என்னில் ஒன்றுசேர்ந்துள்ளன. எங்கெல்லாம் அசாதாரணமான புனிதமும், அசாதாரணமான ஆற்றலும் எழுந்து மனித குலத்தை முன்னேற்றி, தூய்மைப் படுத்துவதைக் காண்கிறாயோ அங்கே நான் இருக்கிறேன் என்பதை அறிந்துகொள்' என்று முழங்கிய ஒருவரைப்பற்றிக் கூறவே தாம் அங்கே சென்றதாக அவர் கூறினார்.

ஓர் இந்துவைப் பொறுத்தவரை 'மனிதன் தவறிலிருந்து உண்மையை நோக்கிப் பயணம் செய்யவில்லை. உண்மை யிலிருந்தே உண்மைக்குச் செல்கிறான், அதாவது தாழ்ந்த உண்மையிலிருந்து உயர்ந்த உண்மைக்கு வருகிறான்' என்கிறார் அவர். இந்தக் கருத்தும், முக்திக் கருத்தும்—அதாவது மனிதன் தன் தெய்வத் தன்மையை உணர்ந்து தெய்வமாக வேண்டும்; மரணம் நடமாடுகின்ற உலகில் மரணமில்லா ஒரே வாழ்க்கை யாக யார் இருக்கிறாரோ, தொடர்ந்து மாறிக் கொண்டேயிருக் கும் உலகில் மாறாத ஒரே அடிப்படை யாரோ, எல்லா ஆன் மாக்களும் எந்த ஒரே ஆன்மாவின் மாயத் தோற்றங்களோ, அந்த ஒரே ஆன்மாவை அடையச் செய்யும்போது மட்டுமே மதம் நம்மிடம் முழுமை பெறுகிறது என்ற கருத்தும்—உலக வரலாற்றில் மிக நீண்ட, மிகவும் சிக்கலான அனுபவங்களால் மெய்ப்பிக்கப்பட்ட அபூர்வமான உண்மைகளாகும். இவையே நவீன உலகமான மேலைநாட்டிற்கு விவேகானந்தர்மூலம் இந்தியா முழங்கிய செய்திகள் என்று கொள்ளலாம்.

இந்தச் சிறிய சொற்பொழிவு அவர் இந்தியாவுக்குத் தந்த சுருக்கமான உரிமைச் சாசனமாகும். அவ்வாறு சொல்லப்

பட்டதும் உண்டு. இந்துமதம் வேதங்கள்மீது நிறுவப்பட்டிருக்கிறது என்கிறார் அவர். இவ்வாறு கூறும்போது வேதம் என்பதுபற்றி நாம் கொண்டுள்ள கருத்துக்களை மாற்றி அவற்றை ஆன்மீக மயமாக்குகிறார் அவர். எவையெல்லாம் உண்மையோ அவையெல்லாம் அவருக்கு வேதங்கள். 'வேதங்கள் என்ற சொல் எந்த நூல்களையும் குறிக்கவில்லை. வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு ரிஷிகளால் கண்டறியப் பட்ட ஆன்மீக உண்மைகளின் கருவூலத்தையே ''வேதம்'' என்ற சொல் குறிக்கிறது' என்கிறார் அவர்.

இந்தக் கருத்தை விளக்கும்போது, சனாதன தர்மத்தைப் பற்றிய தமது கருத்தையும் வெளியிடுகிறார். 'விஞ்ஞானத்தின் மிக நவீனமான கண்டுபிடிப்புகள்கூட எதன் எதிரொலி களாகத் தோன்றுகின்றனவோ, அந்த வேதாந்தத்தின் உயர்ந்த ஆன்மீக உண்மைகள் முதல பல்வேறு புராணங்களுடன் கூடிய உருவ வழிபாடுகள், பௌத்தர்களின் ஆஜ்ஞேயவாதம், சமணர்களின் நாத்திக வாதம் எல்லாவற்றிற்கும் இந்துமதத் தில் இடம் உண்டு. உண்மைப் பாதையிலிருந்து விலகியதுபோல் தனி மனிதனுக்குத் தோன்றினாலும், இந்து மதத்தின் அணைப் பிலிருந்து எந்த மதத்தையோ, இனத்தையோ, உண்மை யான மத அனுபூதியையோ விலக்க முடியாது என்பது அவருடைய கருத்து.

எல்லா இந்திய மதங்களுக்கும் தாய்வீடாகத் திகழும் இந்து மதத்தின் தனிச்சிறப்பு வாய்ந்த கருத்து இஷ்டதெய்வக் கருத்தாகும். ஒவ்வொருவருக்கும் தனக்குரிய பாதையை வகுத்துக் கொள்ளவும், தனக்கு விருப்பமான வழியில் கடவுளை நாடவும் அது வகை செய்கிறது. இப்படிப் பரந்த மனப் பான்மையோடு இந்துமதம் ஏந்திச் செல்கின்ற ஆன்மீகக் கொடியைவிட விசாலமான ஒரு கொடியை எந்தப் படையும் ஏந்திச் செல்ல முடியாது. இந்து மதத்தின் ஆன்மீக லட்சியம் கடவுளைக் காண்பதே. அதுபோலவே அதன் ஆன்மீக நியதியும் ஒவ்வோர் உயிரும் தன்னில் தானாக இருக்கின்ற பரிபூரண சுதந்திரமே.

இப்படி எல்லாவற்றையும் அணைத்துக் கொண்டாலும், எல்லோருக்கும் சுதந்திரம் அளித்தாலும் அவை எல்லாம் சேர்ந்தும் இந்து மதத்தின் இன்றைய பெருமைக்கு ஈடாகாது. ஏனெனில் அதன் இந்தப் பேரழைப்பும் இனிய வாக்குறுதியும் அனைத்தையும் மிஞ்சி அல்லவா நிற்கின்றன!—'அழியாத

ஆனந்தத்தின் குழந்தைகளே! செவி சாயுங்கள். உயர்ந்த உலகங்களில் உறையும் உத்தமர்களே! கேளுங்கள். எல்லா இருளுக்கும், எல்லா மாயைகளுக்கும் அப்பால் உள்ள அந்தப் பழமையானவனை நான் கண்டுவிட்டேன். அவனை அறிவதால் நீங்களும் மரணத்திலிருந்து விடுபடுவீர்கள்!'—இந்த முழக்கத்திற்கு ஈடு இணை ஏது! இந்தக் கருத்தில்தான் அனைத்தும் நிலைபெறுகின்றன, நிலைபெற்றன. இதுதான் அனுபூதிகளின் மணிமகுடம், பிற அனைத்தும் இதனுள் அடங்கியவை.

'நம் முன் உள்ள பணி' என்னும் சொற்பொழிவில் அவர் தாம் நிறுவப்போகும் ஒரு கோயிலுக்கு எல்லோரும் உதவி செய்ய வேண்டுமென்று ஆர்வத்துடன் வேண்டிக் கொண்டார். அந்தக் கோயிலில் எல்லோரும் சென்று வழிபடலாம். அந்தக் கோயிலின் கருவறையில் ஓம் என்ற மந்திரம் மட்டுமே இருக்கும். இதை அவர் கூறும்போது எங்களுள் சிலர், ஏற்கனவே இருப்பதான அதைவிடப் பெரிய கோயிலான இந்தியத் தாய்நாட்டின் கணநேரக் காட்சியை உணர்ந்தனர்; இந்திய மதப் பிரிவுகளுக்கு மட்டுமல்லாமல் மனித இனம் முழுவதும் அங்கே சங்கமிப்பதைக் கண்டனர்; உருவமல்லாத உருவமான, எல்லா ஒலிகளுக்கும் மேலான திருநாமமான ஓம் என்ற மந்திரத்தை வழிபடுகின்ற அந்தப் புண்ணியத் தலத்தில் எல்லாமே கலந்து இழைவதைக் கண்டனர். எல்லா வழிபாடுகளும் எல்லா மதப்பிரிவுகளும் செல்வது அங்கு நோக்கியே, அங்கு நோக்கி மட்டுமே.

பார்க்கின்ற ஒன்றிலிருந்து பார்க்காத ஒன்றுக்கு, பலவற்றிலிருந்து ஒன்றை நோக்கி, தாழ்ந்ததிலிருந்து உயர்ந்ததற்கு, உருவத்திலிருந்து உருவம் அற்றதற்கு—இத்தகைய ஒரு நிலைக்கு, வேறு எதற்கும் அல்ல—செல்வதுதான் முன்னேற்றம் என்பதை முழங்க இந்தியா வேறு எந்தத் தூயப் பிரிவுகளுடனும் கைகோர்த்து நிற்கிறது. ஒரே ஒரு வித்தியாசம் உள்ளது: உண்மையான கொள்கைகள் எங்கிருந்தாலும், எப்படியிருந்தாலும், அவை மகோன்னதத்திற்கான முயற்சிகள் என்ற நிலையில், இந்தியா ஒவ்வொரு கொள்கைக்கும் ஆறுதலையும் உறுதியையும் தருகிறது.

இந்துமதத்தின் பிரச்சாரகரான விவேகானந்தர் தாமாக எதையும் சேர்க்கவில்லை. அப்படிச் சேர்ந்திருந்தாரானால் அவருடைய பெருமை சிறிது குறைந்துதான் போயிருக்கும். கீதை கூறிய கண்ணனைப்போல், புத்தரைப்போல், சங்கரரைப்

போல், இந்தியாவின் மற்ற ஆச்சாரியர்களைப்போல் விவேகானந்தரும் வேதங்கள் மற்றும் உபநிடதங்களிலிருந்து மேற்கோள்களை நிறைய எடுத்துக் கூறுகிறார். இந்தியா தனக்கென்று பெற்றுள்ள கருவூலத்தின் சிறப்புக்களை வெளியிடுபவராகவும் அவற்றிற்கு விளக்கம் தருபவராகவும் மட்டுமே அவர் விளங்குகிறார். அவர் போதிக்கும் உண்மைகள், அவர் பிறக்காதிருந்தாலும் உண்மைகளாகவே விளங்கியிருக்கும். ஏன், ஒருவேளை அவை இன்னும் மேலான கருத்துக்களாக இருந்திருக்கும். ஆனால் வித்தியாசம் என்னவென்றால் நாம் அவற்றை எளிதில் புரிந்து கொள்கின்ற நிலையிலும், அவற்றின் நவீனமான தெளிவிலும், தெளிவாகத் தெரிகின்ற விளக்கத்திலும் ஒரு குறை ஏற்பட்டிருக்கும்; அந்தக் கொள்கைகள் ஒவ்வொன்றின் இடையேயுள்ள இணைப்பும் ஒற்றுமையும் புரியாமல் போயிருக்கும். அவர் தோன்றாமல் போயிருந்தால் பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு அழியாமையைத் தருகின்ற ஆன்மீக உணவைக் கொண்டுசெல்கின்ற சாஸ்திரங்கள், வாதம் புரிகின்ற பண்டிதர்களின் விளங்காத சொற்போர்களாகவே நின்றுவிட்டிருக்கும்.

அவர் ஓர் அதிகாரத்துடன் போதித்தார். அது பண்டிதர்கள் காட்டும் வெறும் சொல்ஜாலம் அல்ல. அவர், தாம் போதித்தவற்றை அனுபூதியில் உணர்வதற்காக ஆன்மீக ஆழங்களில் ஆழ்ந்தார். பின்னர் ராமானுஜரைப்போல் ஆன்மீகப் பேரொளியைத் தாம் கண்டு, திரும்பி வந்து, தாழ்த்தப்பட்டவர்களுக்கும் சமூகத்தால் ஒதுக்கப்பட்டவர்களுக்கும் அன்னிய சமுதாயத்தினருக்கும் அந்த ரகசியங்களை முரசறைந்து தெரிவித்தார்.

அவர் போதித்ததில் எதுவுமே புதுமை இல்லை என்று சொல்வது முற்றிலும் சரியாகாது. இங்கு ஓர் உண்மையை மறக்கக் கூடாது. 'எல்லாமே ஒன்றுதான், இரண்டாவதாக எதுவும் இல்லை' என்ற அனுபவத்தை உள்ளடக்கிய அத்வைதத்தின் மகிமையைப் பரப்பியவர் அவர். என்றாலும் துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்பவை மூன்றும் ஒரே பாதையிலுள்ள மூன்று நிலைகள் அல்லது படிகள் மட்டுமே. இந்த மூன்றினுள் அத்வைதமே லட்சியம் என்ற கருத்தையும் இந்து மதத்தில் இணைத்தவர் அவர். இந்தக் கருத்தும், இதைவிட மேலான, இதைவிட எளிய ஒரு கருத்தின் பகுதிதான். பல்வேறு மனங்களால் பல்வேறு காலங்களில் காணப்படும்

உண்மைதான் இப்படிப் பலவாகவும் ஒன்றாகவும் இருக்கிறது என்ற கருத்துதான் அந்த மேலான கருத்து. அதையே ஸ்ரீராமகிருஷ்ணர், 'கடவுள் சகுணமாகவும் நிர்க்குணமாகவும் இருக்கிறார். அவர் உருவத்தையும் உருவமற்ற நிலையையும் உள்ளடக்கியவர்' என்று கூறினார்.

இதுதான் நமது குருநாதரான விவேகானந்தருடைய வாழ்வின் தலைசிறந்த தனிச் சிறப்பைக் காட்டுகிறது. ஏனெனில் அவர் இங்கே மேலைநாடும் கீழைநாடும் கூடுகிற இடமாக மட்டும் இல்லை; இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் இணைக்கும் பாலமாகவும் நிற்கிறார். பலவும் ஒன்றும் ஒரே உண்மைதான் என்றால் எல்லாவகையான வழிபாடுகள் மட்டுமின்றி, எல்லாவகையான செயல்களும், எல்லாவகையான போராட்டங்களும், எல்லாவகையான படைப்புகளும் இறையனுபூதிக்கான பாதைகளாக அமைந்துவிடும். பிறகு ஆன்மீகத்திற்கும் உலகியலுக்கும் வேறுபாடில்லை. உழைப்பே பிரார்த்தனை. வெற்றிகொள்வதே துறவு. வாழ்வே ஆன்மீகம். சம்பாதிப்பதும் பாதுகாப்பதும், துறப்பதையும் தவிர்ப்பதையும் போன்ற ஒரு சாதனையே.

இந்த அனுபூதிதான் விவேகானந்தரை, கர்மயோகத்தை ஞான பக்தி யோகங்களிலிருந்து விலகியதாக அல்லாமல் அவற்றை வெளிப்படுத்துவதாகப் போதித்த மாபெரும் ஆச்சாரியராக ஆக்கியது. மனிதன் ஆண்டவனை அடைய முனிவரின் குகையும், கோயிலின் வாசலும் எப்படி உண்மையான, ஏற்ற இடங்களோ, அப்படியே தொழிற்சாலைகளும், படிப்பறைகளும், தோட்டமும், வயல்வெளியும் என்று அவர் காண்கிறார். அவரைப் பொறுத்தவரை மக்களுக்குத் தொண்டு செய்வதற்கும் இறை வழிபாட்டிற்கும், பேராண்மைக்கும் முழு நம்பிக்கைக்கும், உண்மையான அறவாழ்விற்கும் ஆன்மீகத்திற்கும் வேறுபாடில்லை. ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் அவரது போதனை எல்லாமே இந்த மையக் கருத்தின் விரிவுரைகளாகவே திகழ்கின்றன. 'கலை, விஞ்ஞானம், மதம்— இந்த மூன்றும் ஒரே உண்மையை வெளிப்படுத்தும் மூன்று வெவ்வேறு வழிகள்; ஆனால் இந்த உண்மையை அறிவதற்கு அத்வைதக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும்' என்று ஒரு முறை அவர் கூறினார்.

விவேகானந்தருக்கு இந்தக் காட்சியை வகுத்துத் தந்தவை மூன்று விஷயங்களாகும். அவற்றுள் வடமொழியிலும்

ஆங்கிலத்திலும் அவர் பெற்ற கல்வியை முதலில் சொல்ல வேண்டும். இந்த இரண்டு இலக்கியங்களுக்கும் இடையே அமைந்த வேறுபாடுகள் இந்து சாஸ்திரங்களுக்கு அடிப் படையான அனுபூதியைப் பற்றிய தனித்த ஓர் ஆழ்ந்த பதிவை அவரிடம் ஏற்படுத்தியது. அவை உண்மைகளாக இருக்கின்ற பட்சத்தில், சிலர் தங்கள் வாழ்வில் ஒரு விபத்தாக இந்த உண்மைகளைப் பெற்றதுபோல் இந்திய ரிஷிகள் எதேச்சை யாகப் பெற்றவையாக இருக்க முடியாது என்பது தெளிவு. மாறாக, அவை ஒரு சாஸ்திரத்திற்கு அடிப்படை உண்மை ஆயிற்று; தர்க்க அறிவின் ஆராய்ச்சிக்குப் பொருளாக அமைந் தது; உண்மையை நாடுகின்ற வழியில் எத்தகைய தியாகத் திற்கும் பின்வாங்காத லட்சியமாக அமைந்தது.

தட்சிணேசுவரக் கோயிலில் வாழ்ந்து உபதேசங்கள் புரிந்தவர் விவேகானந்தரின் குருதேவரான ராமகிருஷ்ண பரமஹம்சர். அப்போது நரேன் என்று அழைக்கப்பட்ட விவேகானந்தரின் இதய உணர்ச்சியும், தர்க்க அறிவும் பழைய சாஸ்திரங்களின் உண்மைக்கு நிரூபணம் தேடியபோது, அதை இவரிலேயே காண முடிந்தது. சாஸ்திரங்கள் அரைகுறையாகக் காட்டிய உண்மை அவரில் அப்படியே இருந்தது. சமாதிதான் அவருக்கு இடையறாத அறிவை அடைகின்ற முறையாயிருந்தது. அவரது மனம் பலவற்றிலிருந்து ஒன்றை நோக்கிச் சென்று, அதில் அடிக்கடி நிலைத்தது. உணர்வுகடந்த நிலைகளில் திரட்டப்பட்ட ஞானத்தின் குரல் இடையீடின்றி அவரிட மிருந்து வந்தது. அவரை அணுகிய ஒவ்வொருவரும் தெய்வீகக் காட்சியைப் பெற்றனர். அனுபூதி பெறும் ஆர்வம் அவருடைய சீடர்களிடம் 'கடுமையான காய்ச்சல்போல்' வளர்ந்தது. சாஸ்திரங்களின் திரண்ட வடிவமாக அவர் திகழ்ந்தார். அது அவருக்குத் தெரியாது. ஏனெனில் அவர் அவற்றில் எதையும் படித்தவர் அல்ல. தம் குருதேவரான ராமகிருஷ்ண பரமஹம்சரிடம் விவேகானந்தர் வாழ்க்கையின் திறவுகோலைக் கண்டார்.

என்றாலும் அவரது பணிகளுக்கான ஆயத்தம் நிறைவுற வில்லை. இமயம் முதல் குமரிவரை அவர் நாடெங்கும் சுற்றித் திரிந்து மகான்களோடும், பண்டிதர்களோடும், சாதுக்களோ டும் சமநிலையுடன் கலந்து பழகி எல்லோரிடமிருந்தும் கற்க வேண்டியிருந்தது. எல்லோருக்கும் கற்பிக்க வேண்டியிருந்தது. எல்லோருடனும் வாழ்வதும், இந்தியா எப்படி இருந்தது எப்படி

இருக்கிறது என்பதை உணரவும், எந்த முழுமையின் எளிய ஆனால் ஆழ்ந்த திரட்சி அவரது குருதேவரின் வாழ்க்கையும் தனித் தன்மையுமோ அந்த விரிவான முழுமையைப் பரந்த முறையில் கண்டறியவும் வேண்டியிருந்தது.

எனவே சாஸ்திரங்கள், குரு, தாய்நாடு—இந்த மூன்றுமே விவேகானந்தரின் நூல்களாகிய பாடல்களுக்குச் சுரங்களாக அமைந்துள்ளன. அவர் அளிக்கக்கூடிய செல்வமும் இவையே. ஆன்மீகக் கொடையாகத் தாம் அளிக்கின்ற, இந்த உலகில் உள்ள நோய் அனைத்தையும் தீர்க்கும் மருந்திற்கான அம்சங்களை அவர் பெற்றது இவற்றிலிருந்துதான்.

அவரது பணிகளின்மூலம், தன் மக்களுக்கும் உலக மக்களுக்கும் வழிகாட்டி உதவ, 1893 செப்டம்பர் 19-லிருந்து, 1902 ஜூலை 4 வரையில் இந்தியா அவருடைய கைகளால் ஏற்றி வைத்த ஞானதீபத்தில் எரியும் மூன்று சுடர்களும் இவைதாம். இந்த விளக்கை ஏற்றி வைத்ததற்காகவும், அவர் தமக்குப் பிறகு இந்தச் சிறந்த கருத்துக்களை விட்டுச் சென்றதற்காகவும், அவரைத் தந்த நாட்டை வாழ்த்தவும், அவரை மேலை நாட்டிற்கு அனுப்பியவர்களுக்கு வாழ்த்துக் கூறவும் எங்களில் சிலர் இன்னும் உயிருடன் இருக்கிறோம். ஆனால் அவரது செய்தியின் விரிவையும் உட்பொருளையும் முற்றிலும் உணரக் கூடிய பெரும் பேற்றை இன்னும் நாங்கள் பெறவில்லை என்றே கருதுகிறோம்.

*ராமகிருஷ்ண—விவேகானந்தர்களின்*

**நிவேதிதை**

ஜூலை 4, 1907

## இந்தச் சுடரில்....

**1. எனது வாழ்வும் பணியும்**

சுவாமி விவேகானந்தர் தமது வாழ்வையும் தமது பணியையும் பற்றிக் கூறுகின்ற 'எனது வாழ்வும் பணியும்' என்ற சொற்பொழிவு ஞானதீபத்திற்கு ஒரு முகவுரைபோல் அமைகிறது.

**2. சிகாகோ சொற்பொழிவுகள்**

இந்தச் சொற்பொழிவுகளே சுவாமி விவேகானந்தரை உலக அரங்கில் அடையாளம் காட்டியவை. கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்த நானூறாம் ஆண்டு விழாவைக் கொண்டாடும் வகையில் மாபெரும் கண்காட்சி ஒன்று அமெரிக்காவிலுள்ள சிகாகோவில் ஏற்பாடு செய்யப்பட்டது. விஞ்ஞானம், பொருளாதாரம் என்று ஏறத்தாழ இருபது பேரவைகள் கூடிய அந்த மாபெரும் கண்காட்சியின் ஓர் அங்கம் சர்வமத மகாசபை.

சுமார் 4000 பேர் அமரக்கூடிய கலைக்கூடத்தில் 1893 செப்டம்பர் 11-ஆம் நாள் காலை 10.00 மணிக்குச் சர்வமத மகா சபை ஆரம்பித்தது. உலகின் முக்கியமான பத்து மதங்களின் பிரதிநிதிகள் அதில் அங்கம் வகித்தனர். பிற்பகலில் பேசினார் சுவாமிஜி. கலைமகளை மனத்தில் இருத்தி, கருணைப் பேரிதயத்தில் பொங்கும் கனிவைச் சொல்லாக்கி, உலகம் தழுவும் பேரன்பை அதில் குழைத்து, உணர்ச்சிப் பெருக்குடன், 'அமெரிக்க சகோதரிகளே, சகோதரர்களே!' என்று அவர் அழைத்தபோது சபையிலிருந்த அனைவரும் அந்த உணர்ச்சிப் பிரவாகத்தில் சிக்குண்டனர்; தங்களை மறந்து கைதட்ட ஆரம்பித்தனர். அந்தக் கரவொலி முழுமையாக இரண்டு நிமிடங்கள் நீடித்தது. அந்தக் கணமே அவர் அமெரிக்காவை வென்றுவிட்டார்.

சர்வமத மகாசபை பதினேழு நாட்கள் நடைபெற்றது. சுவாமிஜி அதில் ஆறு முறை பேசினார். வந்திருந்த சொற்பொழிவாளர்களுள் அவர் மட்டுமே இத்தனை முறை பேசினார்

என்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் சொற்பொழிவுகளைத் தவிர வேறொரு கூடத்தில் நடைபெற்ற விஞ்ஞானப் பிரிவில் எட்டு சொற்பொழிவுகளும், பேரவையின் பெண்கள் பிரிவு கேட்டுக்கொண்டதற்கிணங்க 'கீழைநாட்டு மதத்தில் பெண்கள்' என்ற தலைப்பில் ஒரு சொற்பொழிவும் நிகழ்த்தினார்.

'சிகாகோ சொற்பொழிவுகள்' என்ற தலைப்பில் நாம் இந்த நூலில் காண்பது சுவாமிஜி கலைக்கூடத்தில் செப்டம்பர் 11, 15, 19, 20, 26, மற்றும் 27-ஆம் தேதிகளில் நிகழ்த்திய ஆறு சொற்பொழிவுகள் மட்டுமே. துரதிர்ஷ்டவசமாக வேறு எந்தச் சொற்பொழிவும் நமக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. இந்தச் சொற்பொழிவுகளில் சுவாமிஜி, இந்து மதத்தின் உலகம் தழுவிய அடிப்படை உண்மைகளான, ஆன்மாவின் தெய்வீகத் தன்மை, வாழ்க்கையின் அடிப்படை இயைபு, நிலைத்த அமைதிக்கு வழிகாட்டுவதான ஆன்ம அனுபூதி, மற்றும் சமய சமரசம் என்பவற்றைப்பற்றிப் பேசினார். அதனைப்பற்றி சகோதரி நிவேதிதை அணிந்துரையில் குறிப்பிடுவது போல், 'இந்துக்களின் மதக் கோட்பாடுகளைப்பற்றிப் பேச ஆரம்பித்தார் சுவாமிஜி. அவர் முடித்தபோது இந்து மதம் உருவாக்கப்பட்டிருந்தது'(பக்கம். xv).

**3. தமிழ்ப் பெருமக்களுக்கு...**

தமது சிகாகோ வெற்றியைத் தொடர்ந்து சுவாமிஜி தமிழ் மக்களுக்கு எழுதிய கடிதம். இந்து மத வரலாற்றின் ஒரு சுருக்கம் என்று இதனைக் கூறலாம்.

**4. கர்மயோகம்**

சுவாமிஜியின் பெருங்கொடையான நான்கு யோகங் களுள் ஒன்று இது. நான்கு யோகங்கள் என்றால் என்ன என்று தமது சீடர் ஒருவருக்கு சுவாமிஜி எழுதிய கடிதத்தை ஒரு முன்னுரைபோல் தருகிறோம்.

முதலில் வருகின்ற வகுப்புச் சொற்பொழிவுகள் சுவாமிஜி நியூயார்க்கில் நிகழ்த்தியவை. இவற்றை ஆரம்ப நிலை, உயர் நிலை என்று இரண்டு பிரிவினருக்காக நிகழ்த்தியுள்ளார் அவர். 1895, டிசம்பர் 13,20 மற்றும் 1896 ஜனவரி 3,10 தேதிகளில், வெள்ளிக்கிழமை தோறும் காலையில் உயர்நிலைச் சொற் பொழிவுகளும் மாலையில் ஆரம்பநிலைச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. இந்தச் சொற்பொழிவுகளை மொழிபெயர்த்தவர் பேராசிரியர் திரு ஏ. சுப்பிரமணியம் அவர்கள்.

இவை தவிர தனிச் சொற்பொழிவு ஒன்றும் வகுப்புகளிலும்

சொற்பொழிவுகளிலும் எடுக்கப்பட்ட குறிப்புகளும் இந்தப் பகுதியில் இடம் பெறுகின்றன.

**5. பக்தியோகம்**

இதில் சுவாமிஜியின் வகுப்புச் சொற்பொழிவுகள், கட்டுரைகள், மற்றும் சொற்பொழிவுக் குறிப்புகள் இடம் பெறுகின்றன. வகுப்புச் சொற்பொழிவுகள் நியூயார்க்கில் நடைபெற்றவை. 1895 டிசம்பர் 16, 23, 1896 ஜனவரி 6 தேதிகளில் காலையிலும் மாலையிலும், மற்றும் ஜனவரி 20-ஆம் நாள் காலையிலும் ஆரம்ப நிலைச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. 1896 ஜனவரி 27, பிப்ரவரி 3, 10, 17 தேதிகளில் காலையில் உயர் நிலைச் சொற்பொழிவுகள் நடைபெற்றன.

1896-இல் சுவாமிஜி அமெரிக்காவில் இருந்தபோது, சென்னையிலிருந்து வெளிவந்த பிரம்மவாதின் என்ற பத்திரிகைக்கு அவர் எழுதிய கட்டுரைகளே அடுத்த பகுதியாக வருகிறது.

அடுத்ததாக, சொற்பொழிவு ஒன்றும் இந்தச் சொற் பொழிவுகளின்போது பலர் எடுத்த குறிப்புகளும் இடம் பெறு கின்றன.

இறுதியாக இடம்பெறுவது நாரத பக்தி சூத்திரங்களுக்கு சுவாமிஜி எழுதிய திரண்ட பொருளாகும்.

# பொருளடக்கம்

# I. எனது வாழ்வும் பணியும்

ஷேக்ஸ்பியர் கிளப், கலிபோர்னியா, 27 ஜனவரி 1900

அன்பார்ந்த சகோதரிகளே, சகோதரர்களே!

இன்று காலையில் நான் பேசுவதாக இருந்த தலைப்பு வேதாந்தத் தத்துவம் என்பதாகும். அது சிறந்ததுதான். ஆனால் சற்று வறண்டது, மிக விரிவானது.

இதற்கிடையில் உங்கள் சங்கத் தலைவரும், வேறு சில அன்பர்களும் தாய்மார்களும் எனது பணியைப் பற்றியும், அதற்காக நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பது பற்றியும் பேசுமாறு என்னைக் கேட்டுக் கொண்டனர். உங்களுள் சிலருக்கு இது ஆர்வமூட்டுவதாக இருக்கலாம். ஆனால் எனக்கு அப்படி அல்ல. உண்மையில் உங்களுக்கு இதை எப்படி விளக்கிச் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. காரணம், என்னுடைய வாழ்க்கையிலேயே இதுபற்றி, இப்பொழுதுதான் முதன்முறையாக நான் பேசப் போகிறேன்.

என்னால் முடிந்த எளிய அளவில் நான் என்ன செய்ய முயன்று வருகிறேன் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள, உங்களை இப்போது கற்பனைத் தேரிலேற்றி இந்திய நாட்டிற்கு அழைத்துச் செல்லப் போகிறேன். விரிவான முறையில் இதை விளக்கவோ, இதனுடைய எல்லா அம்சங்களையும் எடுத்துக் கூறவோ இப்போது நேரமில்லை. மேலும், ஓர் அன்னிய இனத்தில் காணப்படும் சிக்கல்கள் அனைத்தையும் இந்தக் குறுகிய நேரத்தில் நீங்கள் புரிந்துகொள்வது என்பதும் இயலாத ஒன்றாகும். ஆயினும் இந்தியாவைப் பற்றிய ஓர் எளிய சித்திரத்தை உங்கள் முன் வைக்க முயல்வேன் என்பதைக் கூறிக் கொள்கிறேன்.

இடிந்து பாழாகிக் கிடக்கின்ற ஒரு பிரம்மாண்டமான கட்டிடம்போல் உள்ளது அது. முதல் பார்வையில் எந்த நம்பிக்கையும் தெரியவில்லை. அழிந்து சிதைந்துபோன நாடு அது. ஆனால் சற்று பொறுமையாக ஆராய்ந்து பார்த்தால், அதற்குப் பின்னால் ஏதோ ஒன்று இருப்பது புலனாகும். உண்மை என்னவென்றால், ஒரு மனிதன் எந்தவொரு உயரிய

கொள்கை அல்லது லட்சியத்தின் புற வெளிப்பாடாக விளங்கு கிறானோ, அந்த லட்சியம் சிதைவுறாதவரை, அழிந்து போகாத வரை அவன் அழிவதில்லை; மீண்டும் தழைப்பான் என்பதற்கு நம்பிக்கையும் இருக்கிறது. உன் சட்டை இருபது தடவை திருடு போய்விட்டது என்பதால் நீ அழிந்துவிடுவாயா என்ன? புதிதாக ஒரு சட்டை வாங்கிக் கொள்ளலாம், அவ்வளவுதான். சட்டை என்பது பெரிய விஷயமல்ல. பணக்காரன் ஒருவன் கொள்ளையடிக்கப்பட்டான் என்றால் அவனது வலிமை போயிற்றா அல்லது உயிர் போயிற்றா? அதற்குப் பிறகும் அவன் உயிர் வாழ்கிறான்.

இந்தக் கருத்தின் அடிப்படையில் இந்தியாவைப் பார்த் தால் நாம் காண்பது என்ன? அது ஓர் அரசியல் ஆதிக்கம் பெற்ற நாடாக இல்லை; அது ஓர் அடிமை நாடு. இந்தியர் களுக்குத் தங்கள் சொந்த நாட்டிலேயே பேசவோ, தங்கள் கருத்தை எடுத்துக் கூறவோ உரிமை இல்லை. அவர்கள் ஒரு முப்பது கோடி அடிமைகளே தவிர வேறு எந்தச் சிறப்பும் இல்லாதவர்கள். ஓர் இந்தியக் குடிமகனின் சராசரி மாத வரு மானம் ஒன்றரை ரூபாய். பட்டினிதான் பெரும்பான்மையான மக்களின் சர்வசாதாரண நிலைமை. எனவே வரவில் சிறிது குறைந்தாலும் லட்சக்கணக்கில் மக்கள் சாகின்றனர். ஒரு சிறிய பஞ்சம் என்றால் மரணம்தான் விளைவு. இந்தியாவின் அந்தப் பக்கத்தைப் பார்க்கும்போது, நான் அழிவைத்தான் காண் கிறேன்; நம்பிக்கைக்குத் துளியும் இடமில்லாத நலிவைத் தான் காண்கிறேன்.

ஆனால் நம்மால் ஒன்றை உணர முடிகிறது; இந்திய இனம் ஒருபோதும் செல்வத்திற்காக வாழ்ந்ததில்லை. ஒருவேளை பிற எந்த நாடும் குவித்திராத அளவிற்கு ஏராள மான செல்வத்தை ஈட்டியபோதிலும், அது செல்வத்தைப் பெரிதென்று கருதியதில்லை. காலங்காலமாக வீரமும் தீரமும் கொண்ட ஆற்றல் மிகுந்த நாடாக இருந்துவந்த போதிலும் வீரமே பெரிதென்று போற்றியதில்லை. வெற்றி வெறி பிடித்துப் பிற நாடுகளுக்குச் சென்றதில்லை. தன் நாட்டிலேயே, தான் வகுத்த தனது எல்லைகளுக்குள் இருப்பதிலேயே அது மன நிறைவு கண்டது. யாருடனும் அது போர் செய்ததில்லை. இந்திய நாட்டிற்கு ஏகாதிபத்திய மோகம் என்றுமே இருந்த தில்லை. செல்வமும் செல்வாக்கும் அதன் குறிக்கோள்கள் அல்ல.

பிறகு எதுதான் அதனுடைய குறிக்கோள்? இங்கு நாம் ஆராயப்போவது அவர்கள் நினைத்தது சரியா தவறா என்பதையல்ல. மற்ற நாடுகளுக்கிடையே அந்த நாடும் ஒன்றை நம்பிற்று; ஆழமாக, தீர்மானமாக நம்பிற்று. இந்த வாழ்க்கை நிலையற்றது, இறைவன் ஒருவனே உண்மைப் பொருள், ஆகவே வாழ்விலும் தாழ்விலும் அவனையே இறுகப் பற்ற வேண்டும் என்று உறுதியாக நம்பிற்று. நலிந்த காலங்களில் எல்லாம் மதமே அங்கு முதலிடம் பெற்றது. ஓர் இந்து, நீரைப் பருகுவது மதவுணர்வுடன், தூங்குவது மதவுணர்வுடன், நடப்பது மதவுணர்வுடன், திருமணம் செய்வது மதவுணர் வுடன், திருடுவதும் மதவுணர்வுடன்தான்.

இத்தகைய ஒரு நாட்டை நீங்கள் எப்போதாவது பார்த்த துண்டா! நீங்கள் அங்கே ஒரு திருடர் கூட்டத்தைத் திரட்ட விரும்பினால், முதலில் அவர்களின் தலைவன் ஒருவிதமான மதக் கருத்து ஏதோ ஒன்றை அவர்களுக்குப் போதிக்க வேண் டும். பிறகு போலியான தத்துவக் கொள்கைகளை உருவாக்கி, அதுவே இறைவனை அடைவதற்குத் தெளிவான, விரைவான வழி என்று கூற வேண்டும். அப்பொழுதுதான் அவனைப் பின் பற்றுவார்கள். இல்லையெனில் அவனுடன் சேர மாட்டார்கள், போய்விடுவார்கள். இதிலிருந்து அந்த இனத்தின் உயிர்நாடி எதுவென்று தெரிகிறது அல்லவா? அந்த இனத்தின் குறிக்கோள் மதம்தான். இதுவரை அதை யாரும் தாக்காததால் அந்த இனம் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

ரோமாபுரியைப் பாருங்கள்! ஏகாதிபத்தியமும் நாடு பிடித்தலும் அதன் குறிக்கோளாக இருந்தது. அந்தக் குறிக் கோள் தாக்குண்டதும் சாம்ராஜ்யமே சிதறிச் சின்னாபின்னப் பட்டு மறைந்தொழிந்தது. கிரேக்க நாடு நிலைநாட்ட வந்த குறிக்கோள் அறிவு. அந்த அறிவு தாக்கப்பட்ட அளவில் அந்த நாடும் அழிந்தது. இதுபோன்றே பிற்காலத்தில் ஸ்பெயின் முதலான புதிய நாடுகளும் அழிந்தன. ஒவ்வொரு நாடும் உலகிற்காக ஒரு நோக்கத்தை முன்வைத்தே செயல்பட்டது. அந்த நோக்கம் பாதிக்கப் பெறாத வரையில் அந்த நாடு, எத்தனை இடர்பாடுகள் வந்தாலும் அவற்றைத் தாக்குப்பிடித்து வாழ்ந்தது; நோக்கம் அழிந்தபோது நாடும் வீழ்ச்சியுற்றது.

இந்திய நாட்டின் இத்தகைய ஆதார சக்தி இன்றுவரை பாதிக்கப் படாமல் இருக்கிறது. அவர்களும் அதை விடாமல் பற்றிக்கொண்டுள்ளனர். பல்வேறு மூடக் கொள்கைகளின்

நடுவிலேயும் அந்த ஆதார சக்தி வலிவுடன் விளங்குகிறது. பயங்கரமான மூடநம்பிக்கைகள் அவர்களிடம் காணப்படு கின்றன, அவற்றுள் சில குலைநடுங்கச் செய்பவை. அதனால் என்ன? தேசிய உயிர்த்துடிப்பு, அதன் நோக்கம், பணி இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

இந்தியா ஒருபோதும் பிறநாடுகளை வெல்கின்ற ஆற்றல் மிக்க நாடாக இருக்காது—ஒருபோதும் இருக்காது. அது ஒரு போதும் வல்லரசாக இருக்காது. அது அவர்களின் வேலை யும் அல்ல. பல நாடுகளின் மாபெரும் இயைபு என்னும் இனிய இசையில் இந்தியாவின் சுரம் அது அல்ல. அப்படியானால் அவளது சுரம், அவளது பங்கு எது? இறைவன், இறைவன் மட்டுமே. உடும்புப் பிடியாக இந்தியா இறைவனைப் பற்றிக் கொண்டிருக்கிறது. எனவே நம்பிக்கைக்கு இன்னும் இடம் இருக்கிறது.

நம்முடைய இந்த ஆராய்ச்சிக்குப் பிறகு நாம் ஒரு முடி விற்கு வருகிறோம். இந்த வறுமைக் கொடுமைகள், துன்பங்கள் ஆகிய அனைத்தும் எந்த விளைவையும் உண்டாக்காது. அந்த நாட்டு மனிதன் இன்னமும் வாழ்ந்து கொண்டிருக்கிறான். எனவே நம்பிக்கைக்கு இடமிருக்கிறது.

நல்லது, நாடு முழுவதிலும் அங்கே மதப் பணிகள் நடந்து வருகின்றன. புதுப்புது மதப் பிரிவுகள் தோன்றாத ஆண்டே அங்கு இல்லை எனலாம். நீரோட்டத்தின் வேகம் வலுப் பெற வலுப்பெற, சுழல்களும் அலைகளும் அதிகரிக்கின்றன. பிரிவுகள் அழிவின் அடையாளம் அல்ல. அவை வளர்ச்சி யின் அடையாளம். ஆகவே பிரிவுகள் பெருகட்டும். ஒவ்வொரு மனிதனும் ஒரு தனித்த பிரிவு என்ற நிலை முதிரும்வரை இந்தப் பிரிவுகள் தழைக்கட்டும். இது பற்றி நாம் அடித்துக் கொள்ள வேண்டியதில்லை.

இனி, உங்கள் நாட்டை எடுத்துக் கொள்வோம். நான் உங்களைக் குறை கூறுவதாக எண்ண வேண்டாம். இங்கு சமு தாயச் சட்டங்கள், அரசியல் அமைப்பு எல்லாமே வாழ்க்கைப் பயணத்தில் மனிதனின் தேவைகளை நிறைவு செய்வதற்காக அமைக்கப்பட்டுள்ளன. இந்த உலகில் வாழும்வரை அவன் மிகவும் மகிழ்ச்சியாக வாழலாம். உங்கள் தெருக்கள் எவ்வளவு துப்புரவாக இருக்கின்றன! உங்கள் நகரங்கள் எவ்வளவு அழகாகக் காட்சியளிக்கின்றன! பணம் சம்பாதிப்பதற்குத்தான் எத்தனை வழிகள்! வாழ்க்கையைச் சுவைத்து மகிழத்தான்

எத்தனையெத்தனை வழிகள்! ஆனால் இங்கேயுள்ள ஒருவன், 'இதோ பாரப்பா! நான் இந்த மரத்தடியில் அமர்ந்து தியானம் செய்வேன். வேலை செய்வதில் எனக்கு விருப்பமில்லை' என்று கூற முடியுமா? கூறினால் என்ன நடக்கும்? ஜெயிலுக்குப் போக வேண்டியிருக்கும். பார்த்தீர்களா! அவனுக்கு எந்தவிதமான வாய்ப்பும் இல்லை, துளியளவுகூட இல்லை. சமூகம் எப்படிச் சொல்கிறதோ அப்படிச் சென்றால்தான் அவனால் வாழ முடியும். இந்த வாழ்க்கையின் சுகங்களை அனுபவிப்பதற்கான ஓட்டத்தில் அவன் சேர வேண்டும். இல்லாவிடில் சாக வேண்டும்.

இப்போது இந்தியாவிற்குத் திரும்புவோம். அங்கே ஒருவன், 'நான் ஒரு மலையுச்சியை அடைந்து மூக்குநுனியில் பார்வையைச் செலுத்தி எஞ்சியுள்ள என் வாழ்நாட்களைக் கழிக்கப் போகிறேன்' என்று சொன்னால், 'நல்லதப்பா போய் வா, இறையருள் உனக்கு விரைவிலேயே கிடைக்கட்டும்' என்று ஒவ்வொருவரும் வாழ்த்துவார்கள். அவன் வாய் திறந்து கேட்கத் தேவையில்லை—யாராவது ஆடை கொடுப்பார்கள், அவனுக்கு எந்தத் துன்பமும் ஏற்படாது. ஆனால் ஒருவன், 'இதோ பாருங்கள். நான் இந்த வாழ்க்கையின் சுகபோகங்களைச் சிறிது நுகரப் போகிறேன்' என்று சொன்னால் அவ்வளவுதான். எல்லா வாசல்களும் அவனுக்கு அடைத்துவிடும்.

இரண்டு நாடுகளின் கருத்துக்களும் நியாயம் அற்றவை என்று நான் கூறுகிறேன். இங்கே ஒருவன் விரும்பினால், ஏன் அமர்ந்து மூக்கின் நுனியைப் பார்க்கக் கூடாது? பெரும்பான்மையினர் செய்வதையே ஏன் ஒவ்வொருவரும் செய்ய வேண்டும்? இதற்கான காரணம் எனக்கு விளங்கவில்லை.

இந்தியாவிலும், ஒருவன் செல்வத்தை ஈட்டி ஏன் இன்பமாக வாழக் கூடாது என்பதும் தெரியவில்லை. கோடிக்கணக்கானோர் தங்களுக்கு முரணானவற்றை ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டிருக்கின்றனர். இந்தக் கொடுமையைச் செய்தவர்கள் அறிஞர்கள், இந்த அநீதியை இழைத்தவர்கள் சான்றோர்கள், ஆன்மீகப் பெருமக்கள். அறிவாற்றல் மிக்கவர்களும் மேதைகளும் சுமத்திய அநீதி இது என்பது தெரிய வரும். அறிஞர்கள் இழைக்கும் கொடுமை, பாமரர் செய்யும் அநீதியைவிடப் பயங்கரமானது என்பதை மறந்துவிடாதீர்கள். ஆன்றோர்களும் சான்றோர்களும் தங்கள் கருத்துக்களை மக்கள்மீது திணிக்கும்போது ஆயிரமாயிரம்

வழிகளில் கட்டுப்பாடுகளையும் முட்டுப்பாடுகளையும் அமைத்து, பாமர மக்களால் அவற்றை உடைத்தெறிய முடி யாதபடிச் செய்து விடுகிறார்கள்.

இந்த நிலை இனியும் நீடிக்கக் கூடாது என்று நான் கூறுகிறேன். ஒரே ஒரு மகானை உருவாக்குவதற்காக லட்சக் கணக்கான பாமர மக்களைப் பலியிடுவதில் எந்தப் பயனு மில்லை. ஆன்மீகப் பெருமகனும் உருவாக வேண்டும், பிறரும் இன்புற்று வாழ வேண்டும். அத்தகையதொரு சமுதாயத்தை உருவாக்க முடியுமானால் அது வரவேற்கத் தக்கது. கோடி மக்கள் அரைபடுவார்களானால் அது நியாயமற்றது. அதை விட உலகம் உய்வதற்காக ஒரு மகான் துன்பங்களை ஏற்பதே மேலானது.

ஒவ்வொரு நாட்டிலும் அவரவர் வழியில் சென்றுதான் நாம் செயலாற்ற வேண்டும். ஒவ்வொரு மனிதனிடமும் அவனது மொழியில்தான் நாம் பேச வேண்டும். இங்கிலாந் திலோ அமெரிக்காவிலோ மதத்தைப் போதிக்க வேண்டு மானால் அரசியல் அமைப்பு முறைப்படித்தான் பணியாற்ற வேண்டும்—சங்கங்கள், மன்றங்கள், வாக்கு எடுத்தல், ஓட்டுப் போடுதல், தலைவர் எல்லாம் வேண்டும். மேலை நாட்டு மக்களின் மொழி அது, முறை அது.

நேர்மாறாக, இந்தியாவில் அரசியலைக்கூட மதம் என்னும் மொழியின் வாயிலாகத்தான் பேச வேண்டும். 'வீட்டைத் தினமும் தூய்மை செய்பவன் இன்ன இன்ன புண்ணியத்தைப் பெறுவான். அவனுக்குச் சொர்க்கம் கிடைக்கும், அல்லது அவன் கடவுளை அடைவான்' என்ற முறையில்தான் அவர் களிடம் சொல்ல வேண்டும். இப்படிப் பேசாவிட்டால் நீங்கள் சொல்வதை யாரும் கேட்க மாட்டார்கள். எல்லாம் அவர்கள் வழியில் பேசுவதில்தான் இருக்கிறது. செயல் என்னவோ ஒன்றுதான். ஒவ்வோர் இனத்தாரிடமும் அவர்களின் மொழி யில் பேசினால்தான் நாம் பேசுவது அவர்களது உள்ளத்தில் சென்று பதியும். இதுதான் நியாயமானது. இது குறித்துக் கலவரப்படத் தேவையில்லை.

நான் சேர்ந்துள்ள சங்கத்தினர் துறவிகள் எனப்படு வார்கள். இந்தச் சொல்லிற்குத் 'துறந்தவன்' என்பது பொருள். இது மிகமிகப் பழமையான நெறி. ஏசு பிறப்பதற்கு ஐநூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த புத்தர் பெருமான் கூட இந்தத் துறவு நெறியைச் சேர்ந்தவர்தான். துறவுநெறியைப்

போற்றி வளர்த்தவர்களுள் புத்தரும் ஒருவர், அவ்வளவே. அத்தகைய பழமை வாய்ந்தது இந்தத் துறவற நெறி. உலகிலேயே மிகவும் பழைய நூல்களான வேதங்களில் இது பற்றிய குறிப்புக்கள் காணக் கிடைக்கின்றன. ஒவ்வோர் ஆணும் பெண்ணும் வயது முதிர்ந்த காலத்தில் சமுதாயத்தை விட்டு முற்றிலும் விலகி, இறைவனையும் சொந்த முக்தியையும் பற்றியே நினைக்க வேண்டும் என்ற நியதி பண்டைய இந்தியாவில் இருந்தது. மாபெரும் நிகழ்ச்சியாகிய மரணத்திற்காக நம்மை ஆயத்தம் செய்துகொள்வதற்காகவே இந்த ஏற்பாடு. எனவே அந்தக் காலத்தில் முதியவர்கள் துறவிகளாவது வழக்கம். பிற் காலத்தில் இளையவர்களும் உலகைத் துறக்க ஆரம்பித்தனர். இளையவர்கள் செயல்துடிப்பு மிக்கவர்கள். மரத்தடியில் அமர்ந்தபடி எப்போதும் மரணத்தைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்க அவர்களால் இயலாது. எனவே அவர்கள் போதனை செய்யவும் மதப் பிரிவுகளை ஆரம்பிக்கவும் தொடங்கினர். புத்தரும் இளந்துறவியாக இருந்ததால்தான் அவரால் பெரிய சீர்திருத்தத்தைச் செய்ய முடிந்தது. வயது முதிர்ந்தவராக இருந்திருப்பாரானால் மூக்குநுனியைப் பார்த்தவாறு அமர்ந்து அமைதியாக உயிர் துறந்திருப்பார்.

துறவுநெறி உங்கள் சர்ச் போன்றது அல்ல. அதில் சேரும் துறவியர் பாதிரிகள் அல்ல. மதபோதனை செய்கின்ற உங்கள் பாதிரிகளுக்கும் எங்கள் துறவிகளுக்கும் பெரிய வேறுபாடு உள்ளது. இந்தியாவில் மத போதனை அல்லது புரோகிதம் எனப்படுவது சமுதாய வாழ்வில் உள்ள பல தொழில்களைப் போன்று பரம்பரையாக வருகின்ற ஒரு தொழில். தச்சன் மகன் தச்சனாக இருப்பதுபோல், கொல்லன் மகன் கொல்லனாக இருப்பதுபோல் புரோகிதனின் மகனும் புரோகிதனாக இருப் பான். அவன் திருமணம் செய்து கொண்டேயாக வேண்டும். மனைவி இல்லாத ஒருவனை முழுமையடைந்தவனாக இந்து சமுதாயம் கருதுவதில்லை. திருமணம் செய்துகொள்ளாதவன் மதச் சடங்குகளைச் செய்யும் உரிமையை இழக்கிறான்.

துறவிகளுக்குச் சொத்து கிடையாது. திருமணமும் கிடை யாது. இதற்குமேல் வேறு எந்தக் கட்டுப்பாடான அமைப்பும் அவர்களுக்கு இல்லை. இந்தியாவிற்கே உரிய தனிச் சிறப்பான குரு-சீடன் என்ற உறவைத் தவிர, வேறு எந்தப் பிணைப்பும் துறவிகளுக்கு இல்லை. நான் பணம் தருகிறேன், அவர் கல்வி கற்பிக்கிறார், அத்துடன் முடிந்தது என்ற முறையில் வெறுமனே

சொல்லிக் கொடுப்பவர் அல்ல குரு. இந்தியாவில் இந்த உறவு முறை உண்மையில் ஒரு தத்தெடுக்கும் முறையாகவே உள்ளது. என் குரு, எனக்கு என் தந்தையைவிட மேலானவர். உண்மையில் நான் அவரது மகன், ஒவ்வொரு நிலையிலும் நான் அவரது மகனே. என் தந்தையைவிட அவரே எனது முதல் மரியாதைக்கும் மதிப்பிற்கும் உரியவர். தந்தை இந்த உடலைத் தந்தவர் மட்டுமே. குருவோ முக்திக்கு வழிகாட்டுபவர். எனவே என் சொந்தத் தந்தையைவிட அவரே மேலானவர் என்று சொல்லப்படுகிறது. அவரிடம் கொள்ளும் இந்த அன்பும் மதிப்பும் என் வாழ்நாள் முழுவதும் நீடிக்கிறது. இந்த ஓர் உறவு அமைப்புத்தான் துறவிகளிடம் காணப்படுகிறது. என் சீடர்களை நானும் மக்களாகவே ஏற்கிறேன். சிலவேளைகளில் குரு வயதில் சிறியவராகவும், சீடன் பெரியவனாகவும் இருப்பதுண்டு. அதனால் பரவாயில்லை. அப்போதும் குருவுக்கு அவன் மகன்தான். அவன் என்னை, 'தந்தையே!' என்றுதான் அழைக்கிறான். நானும் 'மகனே!' என்றும், 'மகளே!' என்றும்தான் அழைக்க வேண்டும்.

ஒரு வயதானவர் எனக்கு குருவாக அமைந்தார். அவர் மிகவும் விசித்திரமானவர். கற்றறிவை அவர் நாடவில்லை. நூல்களையும் அரிதாகவே படித்தார். ஆனால் உண்மையை நேரடியாகக் காண வேண்டும் என்று மகத்தானதொரு எண்ணம் அவர் சிறுவனாக இருந்தபோதே அவரைப் பிடித்து ஆட்டிற்று. முதலில் அவர் தமது சொந்த மத உண்மைகளை ஆராய்ந்தார். பிறகு பிற மத உண்மைகளை அறிந்தால் என்ன என்ற எண்ணம் அவரிடம் எழுந்தது. எனவே பல்வேறு நெறிகளையும் ஒன்றன்பின் ஒன்றாகப் பின்பற்றத் தொடங்கினார். ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அந்தந்த மதச் சான்றோர்கள் என்ன கூறினார்களோ அதை அப்படியே கடைப்பிடித்தார். அந்தந்த மத பக்தர்களுடன் வாழ்ந்து, அந்தந்த மதங்கள் காட்டுகின்ற லட்சியத்தை அடைந்தார். அதன்பின்னர் அடுத்த பிரிவு சாதனையில் ஈடுபடுவார்.

இப்படிப் பல்வேறு நெறிகளையும் பின்பற்றிய பின்னர் அவையனைத்தும் நல்லவையே என்ற முடிவிற்கு வந்தார். எந்த மதத்தையும் அவர் பழிக்கவில்லை—அவை எல்லாம் ஒரே குறிக்கோளை அடையச் செய்யும் பல்வேறு பாதைகள். 'இவ்வளவு பாதைகள் இருப்பது எவ்வளவு சிறப்புடையது! ஒரே ஒரு பாதை மட்டும் இருக்குமானால், அது ஒருவேளை

ஒருவனுக்கு மட்டுமே பொருந்துவதாக இருக்கலாம். எத்தனை வழிகள் இருக்கின்றனவோ, உண்மையை அறிந்துகொள் வதற்கு அத்தனை வாய்ப்புகள் நமக்கு இருக்கின்றன. அதை ஒரு மொழியில் கற்க முடியாவிட்டால் இன்னொரு மொழியில் கற்பேன். இது இல்லை என்றால் மற்றொன்று, இப்படியே' என்பார் அவர். இப்படி எல்லா மதங்களுக்குமே அவரது வாழ்த்து கிடைத்தது.

நான் போதிக்கின்ற கருத்துக்கள் அனைத்தும் அவரது கருத்துக்களை எதிரொலிப்பதற்கான முயற்சியே. அவற்றுள் ஒன்றுகூட எனக்குச் சொந்தமானதல்ல. தவறுகளுக்கும், பக்கு வப்படாத கருத்துகளுக்கும் மட்டுமே நான் சொந்தக்காரன். என் வாயிலிருந்து வரும் உண்மையானதும் நல்லதுமான சொற்கள் ஒவ்வொன்றும் அவரது குரலை எதிரொலிப்பதற் கான முயற்சி மட்டுமே. பேராசிரியர் மாக்ஸ்முல்லர் எழுதி யுள்ள அவரது வாழ்க்கை வரலாற்றைப் படித்துப் பாருங்கள், அப்போது தெரியும்.

இந்தக் கருத்துக்களை நான் மற்ற இளைஞர்களுடன் அவரது திருவடிகளின் கீழ் அமர்ந்து அறிந்துகொண்டேன். அப்போது நான் சிறு பையன். எனக்குப் பதினாறு வயதாகிய போது நான் அவரிடம் சென்றேன். என்னைவிடச் சிறியவர் களும் என்னைவிடச் சற்று பெரியவர்களுமாக ஏறக்குறைய பன்னிரண்டுபேர் நாங்கள், சற்று அதிகமாகவும் இருக்கலாம். இந்த லட்சியத்தைப் பரப்ப வேண்டும் என்று நாங்கள் தீர் மானித்துக் கொண்டோம். பரப்புவது மட்டும் அல்லாமல் அதனை வாழ்ந்து காட்டவும் முடிவு செய்தோம். அதாவது, இந்துக்களின் ஆன்மீகத்தையும், பௌத்தர்களின் கருணையை யும், கிறிஸ்தவர்களின் செயல்திறனையும், முகமதியர்களின் சகோதர மனப்பான்மையையும் நாங்கள் வாழ்ந்து காட்ட வேண்டும் என்று எண்ணினோம். 'இங்கேயே, இப்பொழுதே உலகம் முழுமைக்கும் பொதுவானதொரு மதத்தை உருவாக்கு வோம். கால தாமதம் சிறிதும் வேண்டாம்' என்று உறுதி கொண்டோம்.

எங்கள் குரு கைகளால் பணத்தைத் தொட மாட்டார். இறைவனுக்கு நிவேதனமாக்கப்பட்ட உணவு சிறிது உண்பார்; சில முழங்களைக் கொண்ட பருத்தி ஆடை, அவ்வளவே. வேறெதுவும் இல்லை. எந்த வெகுமதிப் பொருளையும் அவர் ஏற்குமாறு செய்ய யாராலும் முடியாது. வியக்கத்தக்க இந்தப்

பண்புகளோடுகூடிய அவர் கண்டிப்புமிக்கவராக இருந்தார். அதனால்தான் அவரால் சுதந்திரராக இருக்க முடிந்தது. இந்தியாவில் ஒரு துறவி, இன்று அரசனுடைய உயிர்நண்பனாக இருந்து, அவனுடன் அமர்ந்து விருந்து உண்பார்; நாளை, பிச்சைக்காரனுடன் மரத்தடியில் படுத்து உறங்குவார். ஒவ்வொருவருடனும் அவர் கலந்து பழக வேண்டும். எங்கும் தங்காமல் திரிந்துகொண்டே இருக்க வேண்டும். 'உருண்டோடும் கல்லில் பாசி படியாது' என்றுதானே பழமொழியும் சொல்கிறது. கடந்த பதினான்கு ஆண்டுகளாக நான் எந்த இடத்திலும் மூன்று மாதங்களுக்குமேல் தங்கியதில்லை. தொடர்ந்து சுற்றிக் கொண்டிருந்தேன். நாங்கள் எல்லோரும் அப்படித்தான் இருந்துவருகிறோம்.

இந்த ஒருசில இளைஞர்கள் இந்தக் கருத்துக்களையும் அவற்றின் செயல்முறை விளைவுகளையும் அப்படியே ஏற்றுக் கொண்டனர். உலகப் பொது மதம், ஏழைகளுக்கு இரங்கும் பெருங்கருணை இவை எல்லாம் கொள்கையளவில் இனிமை வாய்ந்தவைதான், ஆனால் செயல்படுத்திக் காட்ட வேண்டுமே!

பின்னர் வந்தது துன்ப நாட்கள். எங்கள் குருதேவர் உயிர் நீத்தார். எங்களால் இயன்றவரையில் அவருக்குச் சேவை செய்தோம். எங்களுக்கு நண்பர்கள் இல்லை. பைத்தியக்கார எண்ணங்களுடன் கூடிய இளைஞர்களாகிய எங்களுக்கு யார் செவி சாய்ப்பார்கள்? யாருமில்லை. இந்தியாவில் இளைஞர்களுக்கு எந்த மதிப்பும் இல்லை. சிந்தித்துப் பாருங்கள். பத்துப் பன்னிரண்டு இளைஞர்கள் மக்களுக்குப் பெரியபெரிய கருத்துக்களை விளக்கி, அவற்றைத் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடிக்கவும் உறுதி பூண்டிருப்பதாகக் கூறுகின்றனர். எல்லோரும் வாய்விட்டுச் சிரித்தனர்; பின்னர் தொந்தரவு கொடுத்தனர். அதன்பிறகு கொடுமைகளையே செய்யத் துணிந்து விட்டனர். அத்துடன் நின்றதா? இல்லை. எங்கள் பெற்றோர்கள் எங்கள் கன்னத்தில் அறையவும் விழைந்தனர். துன்பங்கள் பெருகப்பெருக எங்கள் உறுதி தீவிரமடைந்தது.

பிறகு ஒரு பயங்கரமான சோதனைக் காலம் வந்தது. எனக்குத் தனிப்பட்ட முறையிலும் மற்ற இளைஞர்களுக்குமாகத் துன்ப காலம் உருவாகியது. எனக்கு நேர்ந்த துரதிர்ஷ்டம்தான் எவ்வளவு கடுமையானது! ஒரு பக்கத்தில் என் தாயும் சகோதரர்களும். அப்பொழுது என் தந்தை காலமாகியிருந்ததால் நாங்கள் வறுமைத் துன்பத்தில் உழன்றுகொண்டிருந்தோம். மிகவும்

ஏழைகளாக, உண்ண உணவின்றி ஏறக்குறைய முழு நேரமும் பட்டினி கிடந்தோம். என் ஒருவனைத்தான் குடும்பம் நம்பியிருந்தது. நான் ஒருவன்தான் அவர்களுக்கு ஏதாவது உதவ முடியும். இரண்டு உலகங்களுக்கு நடுவில் நான் நிற்க வேண்டியதாயிற்று. தாயும் சகோதரர்களும் பட்டினி கிடந்து இறப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதா? அல்லது இந்திய நாட்டின் நன்மைக்காகவும் உலக நாடுகளின் நன்மைக் காகவும் அமைந்தவை என்று நான் நம்பிய, இந்த மகானின் கருத்துக்களை மக்களுக்கு உபதேசம் செய்து அவற்றைச் செயல்படுத்துவதா? இப்படி ஒரு போராட்டம் என் மனத்தில் நாட்கணக்கில், மாதக் கணக்கில் நடந்து கொண்டிருந்தது. சிலவேளைகளில் ஐந்தாறு நாட்கள் பகலும் இரவும் இடைவிடாமல் பிரார்த்தனை செய்வேன். ஓ! அந்த நாட்களில் நான் அடைந்த மனவேதனை! நரக வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தேன். இளைஞனாகிய என் மனம் இயல்பாகவே என்னைக் குடும்பத்தாரிடம் இழுத்து அலைக்கழித்தது. என் அன்புக்கு உரியவர்கள் படும் துன்பங்களை என்னால் தாங்க முடியவில்லை. என் நிலைமைக்கு இரங்கி எனக்கு அனுதாபம் காட்டுபவர்கள் யாருமில்லை! ஒரு சிறுவனுடைய கற்பனை களுக்கு யார்தான் இரங்குவார்கள்? அதுவும் அந்தக் கற்பனைகள் மற்றவர்களுக்குத் தாங்கமுடியாத துன்பங்களை இழைக்கும் போது, யார்தான் எனக்கு மனமிரங்குவார்கள்? யாரும் இல்லை—ஒரே ஒருவரைத் தவிர.

அந்த ஒருவருடைய இரக்கவுணர்ச்சி ஆசிகளையும் நம்பிக்கையையும் ஊட்டியது. அவர் ஒரு பெண். பெருந்துறவி யாகிய எங்கள் குருதேவருடைய மனைவி அவர். இளைஞனாக இருந்தபோதே அவர் இவரை மணந்துகொண்டார். அப்போது இவர் ஒரு சிறு குழந்தை. இளைஞனாக வளர்ந்து, குருதேவரிடம் ஆன்மீகப் பேருணர்வு தீவிரமாகிய காலத்தில் இவர் கணவரைக் காண வந்தார். திருமணமாகி நீண்ட காலம் ஆகியிருந்தும், வளர்ந்தபின் இருவரும் ஒருவரையொருவர் பார்த்ததில்லை. அவர் தன் மனைவியிடம், 'இதோ பார், நான் உன் கணவன். இந்த உடலின்மீது உனக்கு முழு உரிமை உண்டு. உன்னை நான் மணந்து கொண்டவன்தான் என்றாலும், என்னால் உடல்உறவுகொண்டு வாழ முடியாது. அதை உன் முடிவிற்கே விடுகிறேன்' என்றார். இதனைக் கேட்ட அந்தப் பெண்மணி அழுது, 'இறைவன் தங்களுக்கு அருள்வானாக!

அனைத்து ஆசிகளையும் வழங்குவானாக! உங்களைக் கீழ்மைப் படுத்துகின்றவளா நான்? இல்லவே இல்லை. முடியுமானால் உங்களுக்கு உதவவே விரும்புகிறேன். தாங்கள் மேற்கொண்ட செயலைத் தொடர்ந்து செய்யுங்கள்' என்று மறுமொழி கூறினார்.

அத்தகையவர் அந்தப் பெண்மணி. கணவர் தம் பாதை யிலேயே சென்று மாபெரும் துறவியாகத் திகழ்ந்தார். மனைவி எட்ட இருந்தபடியே தம்மால் முடிந்த அளவிற்கு உதவினார். குருதேவர் ஓர் ஆன்மீக குருவாகத் திகழ்ந்தபோது, அவரிடம் வந்த இந்தப் பெண் அவருடைய சிஷ்யை ஆனார். உண்மையில் இவரே அவருடைய முதல் சிஷ்யை. கணவரது உடல்நலத் தைப் பேணுவதில் இவர் தமது வாழ்நாட்களைக் கழித்தார். அந்த மகானோ, தாம் வாழ்கிறோமா இல்லையா என்பதுகூட அறியாதவராக இருந்தார். சிலசமயம், பேசிக் கொண்டிருக்கும் போதே திடீரென்று உணர்ச்சிவசப்பட்டு, கனன்று எரிகின்ற தணலின்மீது அமர்ந்துவிடுவார். நெருப்பு என்பதையே அறிய மாட்டார். எரிந்து கொண்டிருக்கும் தணல்! அத்தனை நேர மும் உடல்நினைப்பே அற்றவராக இருப்பார்!

எங்கள் குருதேவரின் மனைவியான இந்தப் பெண்மணி மட்டுமே இளைஞர்களாகிய எங்களுக்கு, எங்கள் கருத்துக் களுக்கு ஆதரவு காட்டியவர்; அனுதாபப்பட்டவர். ஆனால் அவரோ ஆதரவற்றவராக இருந்தார். எங்களைவிட ஏழை யாக இருந்தார்.[1] அதனால் என்ன? நாங்கள் பணியில் குதித்து விட்டோம். இந்த உயரிய கருத்துக்கள் இந்திய நாட்டை விவேகம் பொருந்திய பாதையில் அழைத்துச் செல்லும், எவ் வளவோ நாடுகளுக்கும் இனங்களுக்கும் பொன்னான காலத் தைத் தோற்றுவிக்கும் என்றும் நான் நிச்சயமாக நம்பினேன். நான் வாழ்ந்து கொண்டிருப்பது எவ்வளவு நிச்சயமோ அவ் வளவு நிச்சயமாக நம்பினேன்.

இந்த நம்பிக்கையுடன் மற்றோர் உறுதியும் ஏற்பட்டது. இத்தகைய உயர்ந்த கருத்துக்களை உலகிலிருந்து மறைய விடுவதைவிட, ஒருசிலர் துன்பப்படுவதால் எந்த நஷ்டமும் இல்லை என்பதை நான் உணர்ந்தேன். தாயும் இரண்டு சகோதரர்களும் இறந்து போனால்தான் என்ன? அது ஒரு

---

1. ஈடிணையற்ற இவரது பெரு வாழ்வு 'அன்னை ஸ்ரீசாரதா தேவி: விரி வான வாழ்க்கை வரலாறு' என்ற பெயரில் எமது மடத்திலிருந்து வெளியாகி யுள்ளது.

தியாகம், நடந்தேறட்டும்! எந்தவொரு மகத்தான பணியும் தியாகம் இல்லாமல் நடந்ததில்லை. இதயத்தை அப்படியே பறித்தெடுத்து ரத்தம் சொட்டச்சொட்டப் பலிபீடத்தில் வைக்க வேண்டும். அதன்பிறகே உலகில் மகத்தான காரியங்கள் ஆற்றப்பட்டுள்ளன. இதைத் தவிர வேறு ஏதேனும் வழி இருக்கிறதா? உங்கள் ஒவ்வொருவரையும் கேட்கிறேன். உங்களில் செயற்கரிய செயல்களைச் செய்து முடித்த தீரர்களைக் கேட்கிறேன். அத்தகைய வழியை இதுவரை யாரும் கண்டதில்லை. ஓ! எவ்வளவு துன்பங்கள்! எவ்வளவு வேதனைகள்! சித்திரவதைகள்! ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் ஒவ்வொரு வெற்றிச் செயலுக்குப் பின்னால் எவ்வளவு துன்பங்கள்? உங்களுக்கெல்லாம் இது நன்றாகத் தெரியும்.

இப்படியே இளைஞர்களாகிய நாங்கள் பணியைத் தொடர்ந்தோம். எங்களைச் சுற்றி வாழ்ந்த மக்களிடமிருந்து நாங்கள் பெற்றதெல்லாம் உதையும் சாபங்களும்தான். உணவுக்காக நாங்கள் வீடுவீடாக் ஏறிப் பிச்சை எடுக்க வேண்டியிருந்தது. எல்லாம் எங்களுக்கு மறுக்கப்பட்டது. எப்போதாவது ஓரிரு சப்பாத்திகள் கிடைத்தன. தங்குவதற்கு, இடிந்துபோன பழைய வீடு ஒன்று எப்படியோ கிடைத்தது. படமெடுத்துச் சீறும் பாம்புகள் அங்கே ஏராளம். அதைவிட மலிவாக வேறு வீடு கிடைக்காது என்ற காரணத்தால் நாங்கள் அங்கே குடிபுகுந்தோம்.

இப்படிச் சில வருடங்கள் உருண்டோடின. இதற்கிடையில் இந்திய நாடு முழுவதும் நாங்கள் யாத்திரை மேற்கொண்டதுடன் எங்கள் கருத்திற்கும் மெதுவாக உருவம் கொடுக்க முயன்றோம். எந்தவித நம்பிக்கையும் இல்லாமல் பத்து ஆண்டுகள் கடந்தன. பத்து நீண்ட ஆண்டுகள்! மனம் ஆயிரம் தடவைகள் சோர்வுற்றது. ஆனால் ஏதோ ஒன்று எங்களுக்கு நம்பிக்கை ஊட்டிவந்தது. அதுதான் நாங்கள் பரஸ்பரம் வைத்திருந்த நம்பிக்கை, நாங்கள் ஒருவர் மற்றவரிடம் வைத்திருந்த மகத்தான அன்பு. ஆண்களும் பெண்களுமாக நூறு பேர் எனக்குத் துணையாக அமைந்தனர். நாளையே நான் அடியோடு அரக்கனாக மாறினாலும்கூட 'நாங்கள் உனக்கு உறுதுணையாகத்தான் இருக்கிறோம். ஒருபோதும் கைவிடமாட்டோம்' என்று கூறக்கூடிய மாறாத அன்பு கொண்டவர்கள் அவர்கள். அது எனக்கு ஒரு பெரிய வரப்பிரசாதம்! இன்பத்திலும் துன்பத்திலும், பஞ்சத்திலும் பட்டினியிலும், வாழ்விலும்

சாவிலும், நரகத்திலும் சொர்க்கத்திலும் என்னைக் கைவிடாமல் இருப்பவன்தானே உயிர் நண்பன்! இத்தனை சிறந்த நட்பு சாதாரணமானதா என்ன! அப்படி அன்பு வைக்கமுடியுமானால் அது முக்தியையே தந்துவிடுமே! நட்பின் வாயிலாக ஒருவன் முக்தியைப் பெற்றுவிடலாம். இந்த அளவிற்கு ஆழ்ந்த நம்பிக்கை இருக்குமானால், ஏன், அதுவே மன ஒருமைப்பாட்டின் சாரமாகிறது. இத்தகைய நம்பிக்கை, இத்தகைய வலிமை, இத்தகைய அன்பு உன்னிடம் இருக்குமானால் உலகில் நீ எந்தக் கடவுளையும் வணங்கத் தேவையில்லை. அத்தகைய உயர்ந்த அன்பும் நட்பும் எங்களுடைய துன்பக் காலங்களில் எல்லாம் எங்களுக்குத் துணையாக இருந்தது; அழியாமல் இருந்துவந்தது. அதுதான் எங்களை இமயம் முதல் குமரிவரையிலும், சிந்துவிலிருந்து பிரம்மபுத்ரா வரையிலும் போகச் செய்தது.

பிறகு இந்த இளைஞர்களின் கூட்டம் நாடெங்கிலும் பயணப்படத் துவங்கியது. மெதுவாக மக்களின் கவனம் எங்கள் மீது விழத் தொடங்கியது. தொண்ணூறு சதவீதம் எதிர்ப்புதான். வெகுசிலரே உதவ முன்வந்தனர். எங்களிடமும் ஒரு குறை இருந்தது—நாங்கள் இளைஞர்கள், வறுமையில் உழல்பவர்கள், இளைஞர்களுக்கே உரிய முரட்டுத்தனம் கொண்டவர்கள். வாழ்க்கையில் தனக்கு வேண்டியவற்றைத் தானே செய்து கொள்ள வேண்டிய கட்டாயம் உடையவன் சிறிது முரடனாகத் தான் இருப்பான். மென்மையாக இனிமையாக பணிவாக எல்லாம் இருக்க அவனுக்கு நேரம் இல்லை. 'அம்மா, ஐயா!' என்பது போன்ற நாகரீகப் பேச்சிற்கெல்லாம் அவனிடம் இடமிருக்காது. நீங்கள் அத்தகையோரை வாழ்க்கையில் சந்தித்திருப்பீர்கள். அவன் பட்டை தீட்டப்படாத வைரம், போதுமான பளபளப்பு இல்லாதவன், கரடுமுரடான பெட்டியில் வைக்கப்பட்டுள்ள வைரம்.

இப்படி நாங்கள் இருந்து கொண்டிருந்தோம். 'எதற்கும் விட்டுக் கொடுக்கக் கூடாது'—இதுதான் எங்கள் தாரக மந்திரமாக இருந்தது. 'இதுவே லட்சியம். இதை எப்படியாவது நிறைவேற்றியே ஆக வேண்டும். ஓர் அரசனைச் சந்தித்தால், மரணமே ஏற்படுவதாயினும் நமது கருத்தை அவரிடம் கூற வேண்டும்; உழவனைச் சந்தித்தாலும் இதுவேதான்.' எனவே எங்களுக்கு எதிர்ப்பு எழுந்ததில் வியப்பேதுமில்லை.

ஆனால் இதுதான் வாழ்க்கை அனுபவம். உண்மையிலேயே பிறருக்கு நன்மை செய்ய விரும்பினால் உலகமே

நமக்கு எதிராக நிற்கிறது. ஆனாலும் அதனால் நம்மைத் துன்புறுத்த முடியாது. நாம் உண்மையிலே தன்னலமற்றவர்களாகவும், உண்மையான ஈடுபாடு கொண்டவர்களாகவும் இருந்தால் நம்முள் உறையும் இறைவனின் பேராற்றலுக்கு முன் அது தவிடு பொடியாகி விடும்.

அந்த இளைஞர்கள் அப்படித்தான் இருந்தனர். தூய்மையும் அன்றலர்ந்த புதுமையும் நிறைந்த குழந்தைகளாக இயற்கைத்தாயின் மடியிலிருந்து வந்தவர்கள் அவர்கள். 'முகரப்படாத பூக்களையும், கைகளால் தீண்டப்படாதப் பழங்களையுமே நான் இறைவனது திருப்பாதங்களில் சமர்ப்பிக்க விரும்புகிறேன்' என்பார் எங்கள் குருதேவர். அந்தப் பெருமகனின் திருவாய்மொழிகளே எங்களைப் பாதுகாத்து வந்தன. கல்கத்தா நகரத்தின் தெருக்களில் கண்டெடுத்த இந்த இளைஞர்களின் எதிர்கால வாழ்க்கையை அவர் கண்டிருக்க வேண்டும். 'இதோ இந்தச் சிறுவன், அதோ அந்தப் பையன்— இவர்கள் எல்லோரும் பிற்காலத்தில் எப்படி விளங்கப் போகிறார்கள் என்பதை நீங்கள் பார்க்கத்தான் போகிறீர்கள்' என்று அவர் கூறியபோது அதைக் கேட்டுச் சிரித்தவர்கள் பலர். ஆனால் அவரது நம்பிக்கை அசைக்க முடியாதது. 'எனக்கு ஆதிபராசக்தி காட்டியுள்ளாள். நான் ஒருவேளை பலவீனனாக இருக்கலாம். ஆனால் இதைச் சொல்வது அவள். அவளே கூறிய பிறகு அது எப்படி நடக்காமல் இருக்க முடியும்! அவள் தவறு செய்ய முடியாது?' என்பார் அவர்.

இப்படியே பத்து ஆண்டுகள் நம்பிக்கைக் கீற்று எதுவும் இல்லாமல் கழிந்தன. என் உடல்நலமும் நலிந்து வந்தது. சில நாட்களில் இரவு ஒன்பது மணிக்குத்தான் எங்களுக்கு ஒருமுறை உணவு கிடைக்கும். வேறு சில நாட்களில் காலை எட்டு மணிக்கு, அடுத்த உணவு இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகாக இருக்கலாம். கிடைத்ததுகூட மிகவும் மோசமான, நாள்பட்ட உணவு. உடல் கெடாமல் என்ன செய்யும்? நல்லவற்றை யாராவது பிச்சைக்காரனுக்குக் கொடுப்பானா? அது மட்டுமல்லாமல், இந்தியாவில் யாரிடமும் பணம் குவிந்து கிடக்கவில்லை. ஒருவேளையின் உணவிற்காகப் பெரும்பாலும் நடந்தும், பனிமலைமீது ஏறியும், ஏறுவதற்குக் கடினமான மலைமீது பத்து மைல்கள் நடந்தும் இப்படியெல்லாம் துன்பப்படுகிறார்கள். இந்தியாவில் சப்பாத்தி சாப்பிடுகிறார்கள். சிலவேளைகளில் இருபது முப்பது நாட்களுக்கு

அதைச் சேமித்து வைத்திருப்பார்கள். அது கல்லைவிடக் கடின மாக இருக்கும். அதில் ஒரு துண்டைப் பிச்சையாகத் தருவார்கள். ஒருவேளையின் உணவிற்காக வீடுவீடாகப் படியேறி இருக் கிறேன். கிடைக்கின்ற சப்பாத்தியும் கடிக்க முடியாதபடி கெட்டிப்பட்டிருக்கும். வாயிலிருந்து ரத்தம் கசியும். உண்மை யிலேயே உங்கள் பற்கள் உடையும் அளவிற்கு அவை இருக்கும். எனவே அதை ஒரு பாத்திரத்தில் இட்டு, ஆற்று நீரைக் கொண்டு வந்து அதில் ஊற்றி ஊற வைப்பேன். இப்படி எத்தனையோ மாதங்கள் காலத்தைக் கடத்தியிருக்கிறேன். என் உடல்நலம் அதனால் பாதிக்கப்படத்தான் செய்தது.

பிறகு, ‘இந்திய நாட்டில் முயன்று பார்த்தாகிவிட்டது. இனி இன்னொரு நாட்டில் முயல வேண்டும்’ என்று நினைக் கலானேன். அப்போதுதான் சர்வமத மகாசபை கூடுவதாக இருந்தது; இந்தியாவிலிருந்தும் ஒருவரை இங்கே அனுப்ப வேண்டியிருந்தது. நானோ ஒரு நாடோடியாகத் திரிந்து கொண்டிருந்தேன். ‘நீ அனுப்புவதானால் நான் போகிறேன். தொலைப்பதற்கு என்னிடம் அதிகம் இல்லை. அப்படித் தொலைந்து போனாலும் நான் கவலைப்படுவதாக இல்லை’ என்று சொல்லிக் கொண்டேன். பணம் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருந்தது. மிகவும் சிரமப்பட்டு முயன்று என்னு டைய பயணச் செலவிற்குப் போதுமான அளவிற்குப் பணம் திரட்டினார்கள். நான் வந்து சேர்ந்தேன். ஓரிரு மாதங்களுக்கு முன்னதாகவே வந்துவிட்டேன். எனவேதான் யாரையும் தெரியாமல் இங்கே தெருக்களில் அலைந்து கொண்டிருந்தேன்.

ஒருவழியாக சர்வமத மகாசபை தொடங்கியபோது, எனக்கு ஆரம்பம் முதலே உதவிவந்த அன்பார்ந்த நண்பர் களைச் சந்தித்தேன். நானும் சிறிது வேலை செய்து கொஞ்சம் பணம் சம்பாதித்தேன். இரண்டு பத்திரிகைகளைத் தொடங் கினேன். பிறகு இங்கிலாந்திற்குச் சென்று அங்கும் பணிபுரிந் தேன். அதேவேளையில் இந்தியாவிற்கான வேலையையும் அமெரிக்காவில் செய்து வந்தேன்.

இந்தியாவிற்கான எனது பணித் திட்டம் மெதுவாக வளர்ந்து உருப்பெற்றுள்ளது. அது இதுதான்: துறவிகளாகிய எங்கள் வாழ்க்கை முறையையும், வீடுவீடாகச் சென்று பிச்சை ஏற்பதையும் நான் உங்களுக்குக் கூறினேன். இதன் பயனாகக் காசுபணம் செலவழிக்காமலேயே மக்களுக்கு மதம் வீடு தேடி வந்தது. அவர்கள் அதற்காகச் செலவழித்ததெல்லாம் ஒரு

சப்பாத்தித்துண்டுதான். இந்தியாவில் மிகமிகத் தாழ்ந்தவர்கள் கூட உயர்ந்த மத அறிவு பெற்றிருப்பதற்குக் காரணம் இந்தத் துறவிகள்தான். ஒரு பாமரனிடம் 'ஆங்கிலேயன் யார்?' என்று கேளுங்கள். அவன் விழிப்பான். ஒருவேளை, 'நூல்களில் கூறப் பட்டுள்ள அந்த அரக்கர்களுடைய குழந்தைகளாக இருப்பார் களோ அவர்கள்?' என்று கேட்டாலும் கேட்பான். 'உங்களை ஆள்வது யார்?', 'உங்கள் அரசு எது?' என்று கேட்டால் அவர் களுக்கு எதுவும் தெரியாது. ஆனால் அவர்களுக்குத் தத்துவம் தெரியும்.

இவ்வுலகில் வாழ்க்கையை நடத்திச் செல்வதற்கான படிப்பறிவு இல்லாத குறையால்தான் அவர்கள் துன்பப்படு கிறார்கள். ஆனால் லட்சக்கணக்கான அவர்கள் மறுவுலக வாழ்க்கையை அடைவதில் ஆர்வம் உடையவர்களாக இருக் கிறார்கள். அது போதுமே என்றால், போதாது என்று நான் உறுதியாகக் கூறுவேன். உண்பதற்கு இன்னும் நல்ல உணவும், உடுக்க இன்னும் நல்ல உடையும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டும். பிரச்சினை என்னவென்றால் இந்த நல்ல உணவை யும், சீரான ஆடையையும் ஏழ்மையில் மூழ்கிக் கிடக்கும் அவர்கள் பெறுவது எப்படி என்பதுதான்.

அவர்கள் நல்லபடியாக வாழ்வதற்கு இடமிருக்கிறது. இன்னும் அதிக நம்பிக்கை இருக்கிறது என்பதை நான் முதலில் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். காரணம், உல கிலேயே மிகவும் மென்மையானவர்கள் அவர்கள், ஆனால் கோழைகள் அல்ல. சண்டை என்றால் அசுரர்களைப்போல் போரிடுவார்கள். மிகச் சிறந்த போர்வீரர்களை இந்தியாவின் கிராமப் புறங்களிலிருந்துதான் ஆங்கிலேயர்கள் பெற்றார்கள். அவர்களுக்கு மரணம் பெரிய விஷயம் அல்ல. 'இருபது தடவை பிறந்து இறந்துவிட்டேன். இன்னும் எத்தனையோ பிறவிகள் இறந்து பிறப்பேன். ஆகவே இது என்ன பெரிய விஷயம்?' என்ற போக்கு அவர்களுடையது. அவர்கள் என்றும் எதற்கும் பின்வாங்கியதில்லை. அவ்வளவு எளிதாக அவர்கள் உணர்ச்சி வசப் படுவதில்லை. சலிக்காத போர்வீரர்கள் அவர்கள்.

அவர்களுக்கு இயல்பானது உழவுத் தொழில். அவர் களுடைய மதத்தில் தலையிடாமல் அவர்களை நீங்கள் கொள்ளையடித்தாலும், கொன்று குவித்தாலும், வரி வசூலித் தாலும் எது செய்தாலும் அமைதியாக, மென்மையாக அனைத்தையும் தாங்கிக் கொள்வார்கள். அவர்களும்

பிறருடைய மதங்களில் ஒருபோதும் தலையிட மாட்டார்கள். 'எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். எங்கள் தெய்வங்களை நாங்கள் வழிபடும் உரிமையை மட்டும் விட்டு விடுங்கள்'—இதுதான் அவர்களின் மனப்போக்கு. ஆங்கிலே யர்கள் அவர்களது மதத்தில் தலையிட்டால் பிரச்சினை உரு வாகிவிடும். 1857-இல் நடந்த சிப்பாய்க் கலகத்திற்கு அதுதான் காரணம். மத அடக்கு முறையை அவர்களால் தாங்க இய லாது. முகமதியப் பேரரசுகள் தூளாகிப் பறந்து போனதற்குக் காரணமே அவர்கள் இந்திய மக்களின் மதத்தில் தலை யிட்டதுதான்.

இதைத் தவிர அவர்கள் அமைதியானவர்கள்; சாந்தமும் மென்மையும் ஒருங்கே கொண்டவர்கள்: அனைத்திற்கும் மேலாக எந்தத் தீய பழக்கத்திற்கும் இரையாகாதவர்கள். மிகவும் போதையூட்டுகின்ற எந்த மதுப்பழக்கமும் அவர்களிடம் கிடையாது. இதுவொன்றே பிற நாட்டு மக்களிடமிருந்து அவர்களை உயர்த்திக்காட்ட வல்லது. இங்கு வாழ்கின்ற சேரி மக்களைப் போன்றவர்கள்தான் இந்திய நாட்டில் வாழ்கின்ற ஏழைகள் என்று எண்ணிவிடக் கூடாது. சேரியில் வாழ்பவர்கள் ஏழைகள்தான். ஆனால் இந்தியாவைப் பொறுத்தவரை ஏழை களாக இருப்பவர்கள் என்றால் பாவம் செய்தவர்கள், நாகரீக மற்றவர்கள், தீயவர்கள் என்பது ஒருபோதும் பொருளல்ல. பிற நாடுகளில் ஏழையாக இருப்பது தாழ்ந்தவர்களும் சோம் பேறிகளும்தான். முட்டாளாகவோ சுயவனாகவோ இருந்து, நகர வாழ்க்கையின் சுகபோகங்களை விரும்புகின்றவனே இங்கு ஏழையாக இருக்கிறான். இவர்கள் கிராமப்புறங்களுக்குச் செல்ல விரும்புவதில்லை. 'இங்கே சுகங்களை அனுபவிக்கவே நாங்கள் விரும்புகிறோம். எனவே நீங்கள் எங்களுக்கு உணவு அளியுங்கள்' என்று கூறுகிறார்கள். ஆனால் இந்திய நாட்டின் நிலைமை வேறு. அங்கு ஏழைகள் காலையிலிருந்து மாலை வரை முதுகொடிய உழைக்கிறார்கள். ஆனால் உண்பதோ வேறு சிலர், உழைப்பாளிகளின் குழந்தைகளுக்கு உண்ண உணவில்லை. லட்சக்கணக்கான டன் கோதுமை இந்திய நாட்டில் உற்பத்தியாகிறது. ஆனால் ஒரு கோதுமைமணிகூட உழைப்பவனின் வயிற்றுக்குப் போவதில்லை. மிகவும் மோச மான புல்லரிசியைத்தான் அவன் உண்கிறான். அந்தத் தானியத்தை பறவைகளுக்குக்கூட நீங்கள் போடுவதற்கு விரும்ப மாட்டீர்கள்.

நல்லவர்களும் தூயவர்களுமான அந்த மக்கள் எந்தக் காரணமும் இல்லாமல் இத்தகைய கொடிய துன்பத்தை எதற்காக அனுபவிக்க வேண்டும்? துன்பத்தில் மூழ்கிக் கொண் டிருக்கும் மக்களைப் பற்றியும், அவல நிலையில் வாழும் பெண்களைப் பற்றியும் வாய்கிழியப் பேசுகிறார்களே தவிர அவர்களுக்கு உதவ யாரும் முன்வருவதில்லை. அவர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? 'உங்களை நீங்கள் மாற்றியமைத்துக் கொள்வதில்தான் உங்கள் நன்மை உள்ளது. அதற்குத்தான் நாங்கள் உதவ முடியும். நீங்கள் இந்துக்களாக இருக்கும்வரை உங்களுக்கு உதவுவதில் எந்தப் பயனுமில்லை' என்பதுதான். இவர்களுக்கு இனங்களின் வரலாறு தெரியாது. இந்தியர்கள் தங்கள் மதத்தையும் சமுதாய அமைப்புகளையும் மாற்றுவார்களானால் இந்திய நாடே இருக்காது. ஏனெனில் அந்த இனத்தின் உயிர்நாடியே மதம்தான். அப்படி மாற்று வார்களானால் அந்த நாடு மறைவது நிச்சயம். நீங்கள் உதவி செய்யவும் உண்மையாக யாரும் இருக்க மாட்டார்கள்.

இங்கே மற்றொரு பெரிய உண்மையை நாம் அறிந்து கொள்கிறோம். நீங்கள் உண்மையில் யாருக்கும் உதவ முடியாது என்பதுதான் அது. நாம் ஒருவருக்கொருவர் என்னதான் செய்து கொள்ள முடியும்? நீங்கள் உங்கள் வழியில் முன்னேறுகிறீர்கள். நான் என் வழியில் முன்னேறுகிறேன். காலப்போக்கில் எல்லா வழிகளும் ஒரே இடத்தையே அடைகின்றன என்பதை அறிந்து, உங்களை நான் சற்று உந்தி முன்னால் தள்ள முடியும். அது ஒழுங்கான வளர்ச்சி. எந்த நாட்டு நாகரீகமும் இன்னும் நிறை நிலை அடையவில்லை. அந்த நாகரீகத்தைச் சற்று நீங்கள் தூண்டினால், அது தனது குறிக்கோளை அடையும். அதை மாற்ற முயலாதீர்கள். ஒரு நாட்டிலிருந்து சமூக அமைப்பு களையும் பழக்க வழக்கங்களையும் எடுத்துவிட்டால் என்ன மிஞ்சும்? மிஞ்சுகின்ற அவையே அந்த நாட்டை ஒன்றாகப் பிணைத்து நிற்பவை.

இந்த வேளையில் வருகிறான் கல்வி மிகக் கற்ற அயல் நாட்டவன்: 'இதோ பாருங்கள், ஆயிரக்கணக்கான ஆண்டு களாக வந்த பழக்கவழக்கங்களை விட்டுவிடுங்கள். எனது இந்தத் தகர டப்பாவை வைத்துக்கொண்டு மகிழ்ச்சியாக இருங்கள்' என்கிறான் அவன். இது முழு மூடத்தனம்.

நாம் ஒருவருக்கொருவர் உதவி செய்ய வேண்டும். ஆனால் இன்னும் ஒரு படி முன்னே செல்ல வேண்டும். அதாவது

உதவும்போது தன்னலமற்றவராக இருக்க வேண்டும். 'நான் சொல்வதை அப்படியே நீ செய்தால் உனக்கு உதவி செய் வேன். இல்லையெனில் முடியாது.' இது உதவியாகுமா?

இந்துக்கள் உங்களுக்கு ஆன்மீக உதவி செய்ய விரும் பினால் அதில் வரையறைகள் எதுவும் இருக்காது. அது முழுமை யான தன்னலமின்மை. நான் கொடுக்கிறேன், அத்துடன் அது முடிவடைகிறது. அது என்னிடமிருந்து போய்விட்டது. எனது மனம், எனது சக்திகள் என்று நான் கொடுக்க வேண்டிய ஒவ்வொன்றையும் கொடுத்துவிட்டேன். கொடுக்க வேண்டும், கொடுத்தேன், அவ்வளவுதான். உலகில் பாதியைக் கொள்ளை யடித்துள்ள மக்களை நான் பலமுறை கண்டுள்ளேன்; அவர்கள் 'அஞ்ஞானிகளை மதம் மாற்ற' இருபதினாயிரம் டாலர் கொடுத் தார்கள். எதற்காக? அஞ்ஞானியின் நலத்திற்காகவா, தங்கள் சொந்த நன்மைக்காகவா? சற்றே சிந்தியுங்கள்.

தீவினைப் பயன் வேலை செய்துவருகிறது. மனிதர் களாகிய நாம் சொந்தக் கண்களையே மறைத்துக்கொள்ள முயல்கிறோம். ஆனால் மெய்யான பரம்பொருள் இதயத்தில் இருக்கிறார். அவர் ஒருபோதும் மறப்பதில்லை. அவரை ஒரு போதும் ஏமாற்ற முடியாது. அவருடைய கண்களை ஒரு போதும் மறைக்க முடியாது. உண்மையாக தானம் செய் தோமானால் ஆயிரம் ஆண்டுகள் கடந்தாலும் அது பயனைத் தந்தே தீரும். தடைகள் வந்தாலும் அது விழித்தெழுந்து மீண்டும் இடிபோல் வெடிக்கத் தொடங்கும். தன்னலத்தை நோக்கமாகக் கொண்ட, தன்னை முன்வைத்துச் செய்யப் படுகின்ற எந்தச் செயலும், எல்லா பத்திரிகைகளும் அவற்றை எவ்வளவுதான் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்தாலும், மக்கள்கூட்டம் அனைத்தும் எழுந்து நின்று கைதட்டி ஊக்கம்ஊட்டினாலும், அதன் குறிக்கோளை அடைவது இல்லை.

நான் பெருமையடித்துக் கொள்ளவில்லை. ஆனால் கவ னியுங்கள், ஓர் இளைஞர் கூட்டத்தின் கதையைச் சொன்னேன். இன்று அவர்களது பணியை அறிந்து, அவர்களை வாழ்த்தாத ஊரோ, ஆணோ, பெண்ணோ இந்தியாவில் இல்லை. நாட்டில் பஞ்சம் நேரும்போது இந்த இளைஞர்கள் பணி செய்து தங்களால் இயன்றவரை மக்களைத் துயரத்திலிருந்து விடுவிக்க முயல்கிறார்கள். இவர்கள் பணி செய்யாத பஞ்சம் இல்லை. இந்தப் பணி, மக்கள் நெஞ்சில் பதிகிறது. அதனை அவர்கள்

அறிகின்றனர். ஆதலால் உங்களால் இயன்றபோதெல்லாம் உதவி செய்யுங்கள். ஆனால் உங்கள் நோக்கத்தைக் கவனித்துக் கொள்ளுங்கள். அது சுயநலமாக இருந்தால் உதவி செய்பவர்களுக்கும் பயனில்லை; உதவியை ஏற்பவர்களுக்கும் பயனில்லை. சுயநலமில்லையானால் அது ஏற்பவரிடம் ஆசிகளை நிறைக்கும், கொடுப்பவரிடம் பன்மடங்கு ஆசிகளைப் பொழியும். நீங்கள் வாழ்வதைப்போல் இதுவும் உண்மையே. இறைவனின் கண்களை ஒருபோதும் மறைக்க முடியாது. கர்ம நியதியை ஒருநாளும் ஏமாற்ற முடியாது.

சரி, இந்தியாவின் பாமர மக்களை அடைவதே எனது திட்டங்கள் எல்லாம். நீங்கள் இந்தியா முழுவதிலும் ஏழைகளுக்காகப் பள்ளி தொடங்குவதாக வைத்துக்கொள்வோம். அப்போதும் நீங்கள் அவர்களுக்குக் கற்பிக்க முடியாது. எவ்வாறு முடியும்? நான்கு வயதுப் பையன் உங்கள் பள்ளிக்கு வருவதைவிட வயல் வேலைகளுக்குச் செல்வான், மற்ற வேலைகள் செய்யச் செல்வான். அவனால் உங்கள் பள்ளிக்கு வர முடியாது. அது முடியாத ஒன்று. தற்காப்பு என்பதே முதலாவது இயல்புணர்ச்சி. ஆனால் மலை முகம்மதுவிடம் செல்லாவிட்டால் முகமது மலைக்குச் செல்லலாமே! ஏன் கல்வி வீடுவீடாகப் போக முடியாது என்று நான் கேட்கிறேன். விவசாயியின் மகன் கல்விக்கு வர முடியாவிட்டால், அவன் இருக்குமிடத்தில்—வேலை செய்யும் வயலிலோ, தொழிற்சாலையிலோ—ஏன் அவனைச் சந்திக்கக் கூடாது? நிழல்போல் அவனைத் தொடர்ந்து செல்லுங்கள். ஆன்மீகத் துறையில் மக்களுக்குக் கல்வி கற்பிக்கும் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான துறவிகள் உள்ளார்களே, அவர்கள் ஏன் அதே வேலையை அறிவுத் துறையில் செய்யக் கூடாது? அவர்கள் பொதுமக்களுக்குச் சிறிது வரலாறும் வேறு பல விஷயங்களையும் கற்பிக்கக் கூடாதா? கல்வி பெறுவதற்குச் செவிகளே மிகச் சிறந்த கருவிகள். தாயிடமிருந்து நமது செவிகள்மூலம் கேட்டவையே நம் வாழ்க்கையில் மிகச் சிறந்த கோட்பாடுகளாக அமைகின்றன. புத்தகங்கள் வெகுகாலத்திற்குப் பிறகு வந்தவை. புத்தகக் கல்வியில் ஒன்றுமே இல்லை. நம்மை உருவாக்குகின்ற சிறந்த கருத்துக்களைச் செவிகள் வழியாகவே நாம் பெறுகிறோம். பிறகு சிறுவர்களுக்கு ஆர்வம் வளரும்போது, அவர்கள் உங்கள் புத்தகங்களிடம் வரலாம். முதலில் அது உருண்டு உருண்டே முன் செல்லட்டும். இதுவே என் கருத்து.

துறவு அமைப்புகளில் நான் பெரிய நம்பிக்கை கொண்டவன் அல்ல என்பதையும் உங்களுக்குச் சொல்ல வேண்டும். அவற்றில் நன்மைகள் உள்ளன; பெரும் குறைகளும் உள்ளன. துறவிகளுக்கும் இல்லறத்தார்களுக்கும் இடையில் சமநிலை ஏற்பட வேண்டும். துறவறம் இந்தியாவில் எல்லா சக்தியையும் உறிஞ்சிவிட்டது. நாங்கள் மிகச் சிறந்த சக்திக்கு அறிகுறியாகிறோம். துறவி அரசனைவிட உயர்ந்தவன். காவி உடுத்த துறவியின் முன்னர் உட்காரத் துணிகின்ற மன்னன் இந்தியாவில் இல்லை. அவன் தனது ஆசனத்தை விட்டு எழுந்து நிற்கிறான். ஆனால் அது நல்லதல்ல. நல்லவர்களானாலும், மக்களுக்கு அரணாக இருந்து வருபவர்களேயானாலும் அவர்கள் கையில் இவ்வளவு அதிகாரம் இருப்பது சரியல்ல. அவர்கள் புரோகிதர்களுக்கும் அறிவுக்கும் இடையிலிருப்பவர்கள்; அறிவுக்கும் சீர்திருத்தத்திற்கும் மையங்கள். யூதர்களின் தீர்க்கதரிசிகள் எப்படியோ, அப்படியே அவர்கள். தீர்க்கதரிசிகள் எப்போதும் புரோகிதர்களுக்கு எதிராகப் பேசுவார்கள்; மூட நம்பிக்கைகளைப் பிடுங்கி எறிய முயற்சிப்பார்கள். இந்தியாவிலும் அப்படித்தான்.

அது எப்படியானாலும், அவ்வளவு அதிகாரம் அங்கிருப்பது நல்லதல்ல. அதைவிட நல்ல முறைகளை ஏற்படுத்த வேண்டும். எதிர்ப்பு குறைவாக உள்ள வழியில்தான் நீங்கள் வேலை செய்ய முடியும். அங்கே நாட்டின் உயிர்நிலையே துறவில்தான். நீங்கள் ஓர் இல்லறத்தானாக இந்தியாவிற்குச் சென்று மதத்தைப் போதியுங்கள். இந்துக்கள் அதைப் புறக்கணித்துவிட்டு, அப்பால் போய்விடுவார்கள். நீங்கள் துறவியாக இருந்தால் அவர்கள், 'அவர் நல்லவர்; அவர் உலகத்தைத் துறந்தவர், நேர்மையானவர், சொல்வதைச் செய்ய முயற்சிப்பவர்' என்பார்கள். நான் சொல்ல விரும்புவது என்னவென்றால் அங்கே துறவு என்பது ஒரு மாபெரும் சக்தியைக் குறிக்கிறது. நாம் செய்யக்கூடியது, அதனை மாற்றுவது மட்டுமே; அதற்கு வேறொரு வடிவம் கொடுப்பதே. இந்தியாவில் திரியும் துறவிகளிடம் உள்ள இவ்வளவு பெரும் சக்தி மாற்றப்பட வேண்டும். அது பொதுமக்களை உயர்த்தும்.

பாருங்கள், நாம் திட்டத்தைக் காகிதத்தில் அழகாக எழுதி வைத்துவிட்டோம். அதேவேளையில் நான் அதை லட்சிய உலகிலிருந்து வெளியே கொண்டுவந்துவிட்டேன். இதுவரை திட்டம் உறுதியற்றதாகவும் லட்சியமயமாகவும் இருந்தது.

காலம் செல்லச்செல்ல அது இறுகிச் சரியாக அமைந்தது; உண்மையாகவே அதனைச் செயல்படுத்தும்போது அதன் குறை களையும் பிறவற்றையும் காணத் தொடங்குகிறேன்.

நமது வாழ்க்கை நிலையில் அதைச் செயல்படுத்தும் போது நான் என்ன கண்டுபிடித்தேன்? முதலில், கல்வி கற்பிக் கும் முறையில், இந்தத் துறவிகளைப் பயிற்சி அளிக்க மையங்கள் வேண்டும். உதாரணமாக எனது மனிதர்களில் ஒருவரை அனுப்பு கிறேன்; அவர் ஒரு காமிராவுடன் வருகிறார். இந்த விஷயங்களில் அவர்களுக்கே போதிக்க வேண்டியுள்ளது. இந்தியாவில் ஒவ் வொரு மனிதனும் சற்றும் கல்வியறிவு அற்றவனாக இருப்ப தையும், கல்வி கற்பிக்க ஏராளமான நிலையங்கள் வேண்டும் என்பதையும் நீங்கள் காண்பீர்கள். இது எதைத் தெரிவிக்கிறது? பணம் வேண்டும் என்பதைத்தான். லட்சிய உலகிலிருந்து கீழிறங்கி அன்றாட வாழ்க்கைநிலைக்கு நீங்கள் வருகிறீர்கள்.

நான் உங்கள் நாட்டில் நான்கு ஆண்டுகளும், இங்கிலாந் தில் இரண்டு ஆண்டுகளும் கடினமாக வேலை செய்துள்ளேன். சில நண்பர்கள் உதவினார்கள் என்பதற்காக நான் மிகவும் நன்றி பாராட்டுகிறேன். அவர்களுள் ஒருவர் இன்று உங் களிடையில் இருக்கிறார். சில அமெரிக்க நண்பர்களும் ஆங்கில நண்பர்களும் என்னுடன் இந்தியாவுக்கு வந்தனர். மிக எளிய முறையில் பணி ஆரம்பமாகியுள்ளது. சில ஆங்கிலேயர்கள் வந்து மடத்தில் சேர்ந்தனர். ஒருவர் இந்தியாவிற்கு வந்து கடுமையாக உழைத்தார். அங்கேயே உயிர் துறந்தார்.[1] ஓய்வு பெற்ற ஓர் ஆங்கிலேயரும், ஓர் ஆங்கிலப் பெண்மணியும் உள்ளனர்.[2] அவர்களுக்குச் சொந்தமாகச் சிறிது சொத்தும் உள்ளது. இமயமலையில் ஒரு மடத்தைத் தொடங்கி அவர்கள் குழந்தைகளுக்குக் கல்வி கற்பித்து வருகின்றனர். நான் தொடங்கியுள்ள பத்திரிகைகளில் ஒன்றான 'பிரபுத்த பாரதா'[3] என்பதன் பிரதியை மேஜைமீது காண்கிறீர்கள். அதை நடத்தும் படி அவர்களிடம் கூறியிருக்கிறேன். பொதுமக்களுக்கு அவர்கள் போதித்து வருகின்றனர்; பணி செய்து வருகின்றனர். கல்கத்தா வில் இன்னொரு மடம் உள்ளது. எல்லா இயக்கங்களும்

---

1. J. J. குட்வின்.
2. கேப்டன் சேவியர் & மிசஸ் சேவியர்.
3. இந்த ஆங்கிலப் பத்திரிகை (Prabuddha Bharata) தற்போதும் நடை பெற்றுக்கொண்டிருக்கிறது. ராமகிருஷ்ண மடத்தின் கிளைமடமான, இமய மலையிலுள்ள அத்வைத ஆசிரமத்திலிருந்து அது வெளிவருகிறது.

தலைநகரிலிருந்துதான்[1] தொடங்க வேண்டும். தலைநகரம் என்பது என்ன? நாட்டின் இதயம். எல்லா ரத்தமும் இதயத்திற்கு வந்துதான், அங்கிருந்து பல இடங்களுக்கும் பிரித்தளிக்கப் படுகிறது. எனவே எல்லா செல்வமும், எல்லா கருத்துக்களும், எல்லா கல்வியும், எல்லா ஆன்மீகமும் தலைநகரை நோக்கியே ஒன்றுகூடிப் பின்னர் அதிலிருந்து நாலாதிசைகளிலும் பரவும்.

நான் மிக எளிய முறையில் தொடங்கியுள்ளதை உங்களிடம் சொன்னதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் அதே பணியைப் பெண்களுக்காகவும் தொடங்க எனக்கு விருப்பம். ஒவ்வொருவரும் தனக்குத்தானே உதவி செய்து கொள்கிறார்கள் என்பதே எனது கொள்கை. நான் தொலைவிலிருந்து உதவுவேன். இந்தியப் பெண்களும் ஆங்கிலப் பெண்களும் உள்ளனர். அமெரிக்கப் பெண்களும் பணியை ஏற்றுக் கொள்ள வருவார்கள் என்பது எனது நம்பிக்கை. அவர்கள் பணியைத் தொடங்கியதும் நான் விலகிவிடுவேன். எந்த ஆணும் ஒரு பெண்ணுக்குக் கட்டளையிடக் கூடாது. அதுபோலவே எந்தப் பெண்ணும் ஓர் ஆணுக்கு ஆணையிடக் கூடாது. ஒவ்வொருவரும் சுதந்திரமானவர்கள். தளைகள் ஏதேனும் இருந்தால் அது அன்பால் விளையும் ஒன்றாக இருக்க வேண்டும். பெண்கள் தங்கள் விதியைத் தாங்களே சரிசெய்து கொள்வார்கள்; ஆண்கள் அவர்களுக்குச் செய்வதைவிட நன்றாகவே செய்வார்கள். பெண்களின் அவலநிலை அனைத்திற்கும் காரணம், ஆண்கள் அவர்களது விதியை உருவாக்க முயன்றதே. ஆரம்பப் பிழையுடன் தொடங்க எனக்கு விருப்பமில்லை. அந்த ஒரு சிறு பிழை பெருகிக் கொண்டேபோகும். பணியில் நீங்கள் வெற்றி பெற்றால், காலப்போக்கில் அந்தத் தவறும் மிகப் பெரும் அளவினதாக வடிவெடுத்திருக்கும். அப்போது அதனைத் திருத்துவது கடினம். எனவே பெண்களுக்கான பணியை நிறைவேற்ற ஆண்களை உபயோகிக்கின்ற இந்தத் தவறைச் செய்தால் பெண்கள் அதிலிருந்து ஒருபோதும் விலக முடியாது. அது ஒரு வழக்கமாக அமைந்துவிடும். ஆனால் எனக்கு ஒரு வாய்ப்பு கிடைத்துள்ளது. எனது குருதேவரின் மனைவியைப்பற்றி உங்களுக்குச் சொன்னேன். நாங்கள் அனைவரும் அவர்மீது பெருமதிப்பு வைத்துள்ளோம். அவர்

---

1. அப்போது கல்கத்தாதான் இந்தியாவின் தலைநகரம்.

எங்களுக்கு ஒருபோதும் ஆணையிடுவதில்லை. எனவே அது சற்றும் ஆபத்தற்றது. அந்தப் பகுதி இன்னும் நிறைவேற்றப்பட வேண்டியுள்ளது.[1] ❧

---

1. சுவாமிஜியின் இந்தத் தீர்க்கதரிசனம் 1954-ஆம் ஆண்டு மெய்யாகியது. அன்னை ஸ்ரீசாரதாதேவியின் பெயரில் பெண்களுக்கான மடம் உருவாக்கப்பட்டது. ஸ்ரீசாரதா மடம் & ராமகிருஷ்ண சாரதா மிஷன் என்ற பெயரில் அது இயங்கிவருகிறது. கல்கத்தாவிலுள்ள தட்சிணேசுவரத்தில் அதன் தலைமையகம் உள்ளது.

# 1. வரவேற்புக்குப் பதிலுரை

அமெரிக்க சகோதரிகளே, சகோதரர்களே!

இன்பமும் இதமும் கனிந்த உங்கள் வரவேற்புக்குப் பதிலளிக்க இப்போது உங்கள் முன் நிற்கிறேன். என் இதயத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது. அதனை வெளியிட வார்த்தைகள் இல்லை. உலகத்தின் மிகப் பழமை வாய்ந்த துறவியர் பரம்பரையின் பெயரால் உங்களுக்கு நன்றி கூறுகிறேன்; அனைத்து மதங்களின் அன்னையின் பெயரால் நன்றி கூறுகிறேன்; பல்வேறு இனங்களையும் பிரிவுகளையும் சார்ந்த கோடிக்கணக்கான இந்துப் பெருமக்களின் பெயரால் நன்றி கூறுகிறேன்.

இந்த மேடையில் அமர்ந்துள்ள பேச்சாளர்களுள் சிலர் கீழ்த்திசை நாடுகளிலிருந்து வந்துள்ள பிரதிநிதிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'பிற மதங்களை வெறுக்காத பண்பினைப் பல நாடுகளுக்கு எடுத்துச் சென்ற பெருமை, தொலைவிலுள்ள நாடுகளிலிருந்து வந்துள்ள இவர்களைத்தான் சாரும்' என்று உங்களுக்குக் கூறினார்கள். அவர்களுக்கும் என் நன்றி. பிற மதக் கொள்கைகளை வெறுக்காமல் மதித்தல், அவற்றை எதிர்ப்பின்றி ஏற்றுக் கொள்ளுதல், ஆகிய இருபண்புகளை உலகத்திற்குப் புகட்டிய மதத்தைச் சார்ந்தவன் நான் என்பதில் பெருமை அடைகிறேன். எதையும் வெறுக்காமல் மதிக்க வேண்டும் என்னும் கொள்கையை நம்புவதோடு, எல்லா மதங்களும் உண்மை என்று நாங்கள் ஒப்புக்கொள்ளவும் செய்கிறோம்.

உலகிலுள்ள அனைத்து நாடுகளாலும் அனைத்து மதங்களாலும் கொடுமைப்படுத்தப் பட்டவர்களுக்கும், நாட்டை விட்டு விரட்டி அடிக்கப் பட்டவர்களுக்கும் புகலிடம் அளித்த நாட்டைச் சேர்ந்தவன் நான் என்பதில் பெருமைப் படுகிறேன். ரோமானியரின் கொடுமையால், தங்கள் திருக்கோயில் சிதைந்து சீரழிந்த அதே வருடம் தென்னிந்தியாவிற்கு வந்து எங்களிடம் தஞ்சமடைந்த அந்தக் கலப்பற்ற இஸ்ரேல் மரபினர்களுள் எஞ்சி நின்றவர்களை மனமாரத் தழுவிக்

கொண்டவர்கள் நாங்கள் என்று கூறிக்கொள்வதில் பெருமைப்படுகிறேன். பெருமைமிக்க சொராஸ்டிரிய மதத்தினரில் எஞ்சியிருந்தோருக்கு அடைக்கலம் அளித்து, இன்னும் பேணிக் காத்து வருகின்ற மதத்தைச் சார்ந்தவன் என்பதில் பெருமை கொள்கிறேன்.

என் அருமைச் சகோதரர்களே! பிள்ளைப் பருவத்திலிருந்தே நான் பாடிப் பயின்று வருவதும், கோடிக்கணக்கான மக்களால் நாள்தோறும் இன்றும் தொடர்ந்து ஓதப்பட்டு வருவதுமான பாடலின் ஒருசில வரிகளை இங்கு, உங்கள் முன் குறிப்பிட விரும்புகிறேன்:

எங்கெங்கோ தோன்றுகின்ற ஓடையெல்லாம்
இறுதியிலே கடலில் சென்று
சங்கமாகும் பான்மையினைப் போன்று உலகோர்
பின்பற்றும் தன்மை யாலே
துங்கமிகு நெறி பலவாய் நேராயும்
வளைவாயும் தோன்றி னாலும்
அங்குஅவைதாம் எம்பெரும! ஈற்றில் உனை
அடைகின்ற ஆறே யன்றோ![1]

இதுவரை நடந்துள்ள மாநாடுகளில், மிகமிகச் சிறந்ததாகக் கருதக் கூடிய இந்தப் பேரவை, கீதையில் உபதேசிக்கப்பட்டுள்ள பின்வரும் அற்புதமான ஓர் உண்மையை உலகத்திற்குப் பிரகடனம் செய்துள்ளது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்: 'யார் எந்த வழியாக என்னிடம் வர முயன்றாலும், நான் அவர்களை அடைகிறேன். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழிகளில் என்னை அடைய முயல்கிறார்கள், அவை எல்லாம் இறுதியில் என்னையே அடைகின்றன'.[2]

பிரிவினைவாதம், அளவுக்கு மீறிய மதப் பற்று, இவற்றால் உண்டான மதவெறி, இவை இந்த அழகிய உலகை நெடுநாளாக இறுகப் பற்றியுள்ளன. அவை இந்தப் பூமியை நிரப்பியுள்ளன; உலகை ரத்த வெள்ளத்தில் மீண்டும்மீண்டும் மூழ்கடித்து, நாகரீகத்தை அழித்து, எத்தனையோ நாடுகளை நிலைகுலையச் செய்துவிட்டன. அந்தக் கொடிய அரக்கத்தன

---

1. ருசீனாம் வைசித்ர்யாத் ருஜு-குடில நானாபத ஜு-ஷாம் |
நருணாமேகோ கம்யஸ்த்வமஸி பயஸாமர்ணவ இவ ||
—சிவ மஹிம்ன ஸ்தோத்ரம், 3.
2. யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் |
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ||
—கீதை, 4. 11

மான செயல்கள் இல்லாதிருந்தால் மனித சமுதாயம் இன்றிருப் பதைவிடப் பன்மடங்கு உயர்நிலை எய்தியிருக்கும்!

அவற்றிற்கு அழிவு காலம் வந்துவிட்டது. இன்று காலை யில் இந்தப் பேரவையின் ஆரம்பத்தைக் குறிப்பிட முழங்கிய மணி, மத வெறிகளுக்கும், வாளாலும் பேனாவாலும் நடை பெறுகின்ற கொடுமைகளுக்கும், ஒரே குறிக்கோளை அடைய பல்வேறு வழிகளில் சென்று கொண்டிருக்கும் மக்களிடையே நிலவும் இரக்கமற்ற உணர்ச்சிகளுக்கும் சாவு மணியாகும் என்று நான் திடமாக நம்புகிறேன். ②

## 2. நாம் ஏன் ஒத்துப் போவதில்லை?

ஒரு சிறு கதை சொல்லப் போகிறேன். இப்போது பேசியவர், 'நாம் ஒருவரையொருவர் தூற்றுவதை நிறுத்த வேண்டும்' என்று கூறியதைக் கேட்டீர்கள். இவ்வளவு வேறுபாடுகள் இருப்பதற்காக அவர் வருத்தப்பட்டார். இந்த வேறுபாடுகளுக்குக் காரணம் என்ன என்பதை விளக்க ஒரு கதை சொல்ல வேண்டும் என்று நினைக்கிறேன்.

ஒரு கிணற்றில் தவளை ஒன்று வாழ்ந்தது. நீண்ட காலமாக அங்கு அது வசித்து வந்தது. அங்கேயே பிறந்து அங்கேயே வளர்ந்த அது சின்னஞ்சிறியது. அது கண்களை இழந்துவிட்டதா, இல்லையா என்று சொல்வதற்கு, நல்லவேளையாக அங்கே பரிணாம வாதிகள் யாரும் இல்லை. நம் கதைக்காக, அதற்குக் கண்கள் இருந்தன என்றே வைத்துக் கொள்வோம். அந்தத் தவளை நாள்தோறும் நீரிலிருந்து புழுபூச்சிகளையும் கிருமிகளையும் மிகவும் சுறுசுறுப்பாக அகற்றிச் சுத்தப் படுத்தியது. அந்தச் சுறுசுறுப்பு, நம் தற்காலக் கிருமி ஆராய்ச்சியாளர்களுக்கு இருந்தால் அது அவர்களுக்குப் பெருமை தரும் விஷயமாகும். அவ்வாறே வாழ்ந்ததால் அந்தத் தவளை சிறிது பருத்தும் விட்டது.

ஒருநாள் கடலில் வாழ்ந்து வந்த தவளையொன்று அங்கு வந்து அந்தக் கிணற்றில் விழுந்தது.

'நீ எங்கிருந்து வருகிறாய்?'

'கடலிலிருந்து'

'கடலா? அது எவ்வளவு பெரியது? எனது கிணற்றளவு பெரிதாயிருக்குமா?' என்று கூறி, ஒரு பக்கத்திலிருந்து எதிர்ப் பக்கத்திற்குத்தாவிக் குதித்தது கிணற்றுத் தவளை.

'நண்பா, இந்தச் சின்னக் கிணற்றோடு எப்படிக் கடலை ஒப்பிட முடியும்?' என்று கேட்டது கடல் தவளை.

கிணற்றுத் தவளை மறுபடியும் ஒரு குதிகுதித்து, 'உனது கடல் இவ்வளவு பெரிதாய் இருக்குமா?' என்று கேட்டது.

'சேச்சே! என்ன முட்டாள்தனம்! கடலை உன் கிணற்றோடு ஒப்பிடுவதா?'

'நீ என்ன சொன்னாலும் சரி, என் கிணற்றைவிட எதுவும் பெரிதாக இருக்க முடியாது. கண்டிப்பாக, இதைவிடப் பெரிதாக எதுவும் இருக்க முடியாது. இவன் பொய்யன், இவனை வெளியே விரட்டுங்கள்!' என்று கத்தியது கிணற்றுத் தவளை.

காலங்காலமாக இருந்துவருகின்ற கஷ்டம் இதுதான். நான் இந்து. நான் என் சிறிய கிணற்றிற்குள் இருந்துகொண்டு என் சிறு கிணறுதான் முழுவுலகம் என்று நினைக்கிறேன். கிறிஸ்தவன் தனது மதமாகிய சிறு கிணற்றிற்குள் அமர்ந்துகொண்டு, தன் கிணறுதான் முழுவுலகம் என்று நினைக்கிறான். அவ்வாறே முகமதியனும் தன் சிறு கிணற்றில் உட்கார்ந்துகொண்டு, அதுதான் முழுவுலகம் என்று நினைக்கிறான். நமது இந்தச் சிறிய உலகின் எல்லைகளைத் தகர்த்தெறிய, அமெரிக்கர்களாகிய நீங்கள் எடுத்துக் கொண்டிருக்கும் பெரிய முயற்சிக்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். வருங்காலத்தில், உங்கள் விருப்பம் நிறைவேற இறைவன் அருள்புரிவான் என்று நம்புகிறேன்.

# 3. இந்து மதம்

வரலாற்றிற்கு முற்பட்ட காலத்திலேயே தோன்றி, இன்றும் நிலைத்து நிற்கின்ற மதங்கள் மூன்று. அவை இந்து மதம், சொராஸ்டிரிய மதம், யூத மதம் ஆகும். இவை பல கடுமை யான அதிர்ச்சிகளுக்கு உட்பட்டும், இன்றும் நிலைத்திருப் பதன் வாயிலாகத் தங்கள் உள்வலிமையை நிரூபிக்கின்றன.

யூத மதம் கிறிஸ்தவ மதத்தைத் தன்னுடன் இணைத்துக் கொள்ளத் தவறியது மட்டுமின்றி, அனைத்தையும் வெற்றி கொண்டதும் தன்னிலிருந்து தோன்றியதுமான கிறிஸ்தவ மதத்தால், பிறந்த இடத்திலிருந்தே விரட்டி அடிக்கப்பட்டு விட்டது; இன்று தங்கள் பெருமைக்குரிய மதத்தை நினைவு படுத்த ஒருசில பார்சிகள் மட்டுமே வாழ்ந்து வருகிறார்கள்.

இந்திய மண்ணில் ஒன்றன்பின் ஒன்றாக எத்தனையோ கிளைமதங்கள் உண்டாயின. அவை வேதநெறியின் அடித் தளத்தை உலுக்கிவிடுமோ என்று தோன்றியது. ஆனால் பயங்கரமான நிலநடுக்கம் ஏற்பட்டால், எப்படிக் கடல் சிறிது பின்னோக்கிச் சென்று, பின்னர் ஆயிரம் மடங்கு சீற்றத்துடன் பெருகி வந்து அனைத்தையும் வளைத்துக் கொள்கிறதோ, அதுபோல், எல்லா கிளைமதங்களும் ஆரம்ப ஆரவாரம் ஓய்ந்ததும் மிகப் பெரியதான தாய்மதத்தால் கவர்ந்திழுக்கப் பட்டு, அதனுள் இரண்டறக் கலந்துவிட்டன.

அறிவியலின் இன்றைய கண்டுபிடிப்புகள் எந்த வேதாந்தத்தின் எதிரொலிகள் போல் உள்ளனவோ, அந்த வேதாந்தத் தத்துவத்தின் மிக உயர்ந்த ஆன்மீகக் கோட் பாடுகள் முதல் பல்வேறு புராணக் கதைகள் கொண்ட மிகச் சாதாரண உருவ வழிபாட்டுக் கருத்துக்கள், பௌத்தர்களின் சூன்யவாதம், சமணர்களின் நாத்திக வாதம், ஆகிய அனைத் திற்கும் இந்து மதத்தில் இடம் உள்ளது.

அப்படியானால் ஒன்றுக்கொன்று மிகவும் வேறுபட்டு நிற்கின்ற இவை அனைத்தும் ஒன்றுசேரும் பொது மையம் எங்கே இருக்கிறது என்ற கேள்வி எழுகிறது. ஒன்று சேரவே முடியாததுபோல் தோன்றுகின்ற இவை அனைத்தும்

ஒருங்கிணைவதற்கான அடித்தளம் எங்கிருக்கிறது? இந்தக் கேள்விக்குத்தான் நான் விடை கூற முயலப் போகிறேன்.

அருள் வெளிப்பாடான (Revelation) வேதங்களிலிருந்து இந்துக்கள் தங்கள் மதத்தைப் பெற்றுள்ளனர். வேதங்களுக்குத் துவக்கமும் முடிவும் இல்லை என்பது அவர்கள் கூற்று. ஒரு நூலுக்குத் துவக்கமோ முடிவோ இல்லாதிருக்குமா, அது அபத்தம் என்று உங்களுக்குத் தோன்றும். ஆனால் வேதங்கள் என்று குறிப்பிடப்படுவது நூல்கள் அல்ல. வெவ்வேறு மக்களால், வெவ்வேறு காலங் களில் திரட்டி வைக்கப்பட்ட ஆன்மீக விதிகளின் கருவூலமே வேதங்கள். புவியீர்ப்பு விதி, அது கண்டறியப்படும் முன்னரே இருந்தது, மனித இனம் முழு வதும் அதை மறந்து விட்டாலும் அது இருக்கும். அவ்வாறு தான் ஆன்மீக உலகின் விதிகளும். ஓர் ஆன்மாவிற்கும் இன் னோர் ஆன்மாவிற்கும், தனிப்பட்ட ஆன்மாக்களுக்கும் அனைத்து ஆன்மாக்களின் தந்தைக்கும் இடையே உள்ள தார்மீக, ஆன்மீக, நீதிநெறி உறவுகள், அவை கண்டுபிடிக்கப் படுவதற்கு முன்னரும் இருந்தன, நாம் அவற்றை மறந்தாலும் இருக்கும்.

இந்த விதிகளைக் கண்டறிந்தவர்கள் ரிஷிகள் எனப் பட்டனர். பூரணத்துவம் அடைந்தவர்கள் என்று அவர்களை நாங்கள் போற்றுகிறோம். அவர்களுள் மிகச் சிறந்த சிலர் பெண்கள் என்பதைக் கூறுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இந்த விதிகள், அவை விதிகளாதலால், முடிவில்லாமல் இருக்கலாம். ஆனால் தொடக்கம் இருந்திருக்க வேண்டுமே என்று கூறலாம். படைப்பு, தொடக்கமும் முடிவும் இல்லாதது என்று வேதங்கள் போதிக்கின்றன. பிரபஞ்ச சக்தியின் மொத்த அளவு என்றும் ஒரே அளவில்தான் இருக்கிறது என்று விஞ் ஞானம் நிரூபித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. பிரபஞ்சத் தில் ஒன்றுமே இருந்திராத ஒரு காலம் இருந்திருக்குமானால் இப்போது காணப்படும் சக்தி அனைத்தும் எங்கிருந்தது? அது கடவுளிடம் ஒடுக்க நிலையில் இருந்தது என்று சிலர் கூறு கிறார்கள். அப்படியானால் கடவுள் சில காலம் ஒடுக்க நிலை யிலும் சில காலம் இயக்க நிலையிலும் இருக்கிறார் என்றா கிறது. அதாவது, கடவுள் மாறக் கூடியவர். மாறக்கூடிய பொருள் கூட்டுப்பொருளாகத் தானிருக்க வேண்டும். எல்லா கூட்டுப் பொருட்களும் அழிவு என்னும் மாறுதலை அடைந்தே தீர வேண்டும். எனவே கடவுள் இறந்துவிடுவார்

என்றாகிறது. இது அபத்தம். ஆகையால் படைப்பு இல்லா திருந்த காலம் ஒருபோதும் இருந்ததில்லை.

இதை ஓர் உவமையால் விளக்க நினைக்கிறேன். படைப்புத் தொழிலும் படைப்பவனும், ஆரம்பமும் முடிவும் இல்லாது சமதூரத்தில் ஓடுகின்ற இரண்டு இணை கோடுகள். கடவுள் எப்போதும் செயல்பட்டுக் கொண்டிருக்கும் பரம் பொருள். அவரது சக்தியால், ஒழுங்கற்ற நிலையிலிருந்து (Chaos) பல உலகங்கள் (Systems) ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுகின்றன, சிறிது காலம் செயல்படுகின்றன, பின்னர் அழிந்துவிடுகின்றன. இதையே பிராமணச் சிறுவன் தினமும் ஓதுகிறான்: 'பழைய கல்பங்களில் இருந்த சூரியர்களை யும் சந்திரர்களையும் போன்றே சூரியனையும் சந்திரனை யும் கடவுள் படைத்தார்.'[1] இது தற்கால விஞ்ஞானத்திற்குப் பொருந்தியதாக உள்ளது.

இங்கு நான் நிற்கிறேன். கண்களை மூடிக்கொண்டு, 'நான், நான், நான்' என்று என்னைப் பற்றி நினைத்தால் என் னுள் என்ன தோன்றுகிறது? உடலைப்பற்றிய எண்ணம் தான். அப்படியானால் ஜடப்பொருட்களின் மொத்த உருவம்தானா நான்? 'இல்லை' என்கின்றன வேதங்கள். நான் உடலில் உறை கின்ற ஆன்மா. நான் உடல் அல்ல. உடல் அழிந்துவிடும், ஆனால் நான் அழிய மாட்டேன். நான் இந்த உடலில் இருக் கிறேன்; இது வீழ்ந்துவிடும், ஆனால் நான் வாழ்ந்து கொண்டே இருப்பேன். நான் முன்னமும் வாழ்ந்து கொண்டு தான் இருந்தேன். ஆன்மா படைக்கப்பட்டதல்ல. படைக்கப் பட்டதானால் அது பல பொருட்களின் சேர்க்கையாகும். அப்படியானால் வருங்காலத்தில் அது கண்டிப்பாக அழிந்து போகும். எனவே ஆன்மா படைக்கப்பட்டதானால் அது இறக்க வேண்டும்.

சிலர் பிறக்கும்போதே இன்பத்தில் பிறக்கிறார்கள்; உடல் வளத்தோடும் வனப்போடும் மனவலிமையோடும் தேவைகள் அனைத்தும் நிறைவேறப் பெற்று வாழ்கிறார்கள். சிலர் துயரத் திலேயே பிறக்கிறார்கள். சிலர் முடமாகவும் நொண்டியாக வும் இருக்கிறார்கள். சிலர் முட்டாள்களாகவே வாழ்ந்து, வாழ்க்கை முழுவதையும் ஏதோ இழுபறி நிலையிலேயே கடத்துகிறார்கள்.

---

1. ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத் |

இவர்கள் அனைவரும் படைக்கப் பட்டவர்கள் என்றால், நேர்மையும் கருணையும் உள்ள கடவுள், ஒருவரை இன்பத்தில் திளைப்பவராகவும் இன்னொருவரைத் துன்பத்தில் உழல் பவராகவும் ஏன் படைக்க வேண்டும்? அவர் ஏன் இத்தனை வேறுபாடு காட்ட வேண்டும்? இந்தப் பிறவியில் துன்பப்படு பவர்கள் அடுத்த பிறவியில் இன்பம் அடைவார்கள் என்று கூறுவது பொருந்தாது. நேர்மையும் கருணையும் கொண்ட கடவுளின் ஆட்சியில் ஏன் ஒருவர் துயருற வேண்டும்?

ஆகவே படைப்பாளராகிய கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று கொள்வது இந்த முரண்பாட்டைத் தெளிவு படுத்த வில்லை; மாறாக, எல்லா வல்லமையும் வாய்ந்த ஒருவரின் கொடுங்கோன்மையையே காட்டுகிறது. அப்படியானால், ஒருவன் மகிழ்வதற்கோ துயரத்தில் உழல்வதற்கோ உரிய காரணங்கள், அவன் பிறப்பதற்கு முன்பே இருந்திருக்க வேண்டும். அவையே அவனது முற்பிறப்பின் வினைகள்.

ஒருவனுடைய உடல், உள்ளம் ஆகியவற்றின் இயல்புகள் பரம்பரையாக வருவது என்று காரணம் காட்டப்படுகிறது அல்லவா? வாழ்க்கையில் இரண்டு இணைகோடுகள் உள்ளன— ஒன்று மனத்தைப் பற்றியது, இன்னொன்று ஜடப் பொருளைப்பற்றியது. ஜடப்பொருளும் அதன் மாற்றங்களும் மட்டுமே நமது இப்போதைய நிலையை விளக்கிவிடும் என்றால் ஆன்மா என்ற ஒன்று இருக்கிறது என்று கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் ஜடத்திலிருந்து எண் ணம் தோன்றியது என்று நிரூபிக்க முடியாது. தத்துவப்படி, ஒரே ஒரு பொருள்தான் இருக்க முடியுமானால் ஆன்மா ஒன்றே ஒன்றுதான் இருக்க வேண்டும் என்று ஆகிறது. இது, ஜடப்பொருள் ஒன்றே ஒன்றுதான் இருக்க வேண்டும் என் பதைப்போல் பகுத்தறிவுக்குப் பொருந்தியதே; ஜடப்பொருள் மட்டுமே உள்ளது என்று சொல்வதைவிட உயர்வானதும்கூட. ஆனால் இவை எதுவும் இப்போது நமக்கு அவசியமில்லை.

பரம்பரையின்மூலம் உடல்கள் சில இயல்புகளைப் பெறு கின்றன என்பதை நாம் மறுக்க முடியாது. ஆனால் குறிப்பிட்ட மனம் குறிப்பிட்ட விதமாகச் செயல்படுவதற்கு ஆதாரமாக இருக்கின்ற ஒரு தூல உருவத்தையே இந்த இயல்புகள் குறிக் கின்றன. இனி, ஆன்மாவிற்கும் கடந்தகால விளைவுகளின் காரணமாகச் சில குறிப்பிட்ட இயல்புகள் ஏற்படுகின்றன. குறிப்பிட்ட இயல்புகளுடன் கூடிய ஆன்மா குணஒற்றுமை

விதிகளுக்கு (Laws of Affinity) இணங்க, எந்த உடலில் பிறந்தால் அந்த இயல்புகளை வெளிப்படுத்த முடியுமோ, அந்த உடலில் பிறக்கிறது. இது விஞ்ஞானத்திற்கு ஏற்புடையது. ஏனெனில் விஞ்ஞானம் எதையும் பழக்கத்தைக் கொண்டே விளக்க விரும்புகிறது. பழக்கமோ எதையும் திரும்பத் திரும்பச் செய்வதால்தான் உண்டாகிறது. ஆகவே புதிதாகப் பிறந்த ஓர் ஆன்மாவின் இயல்புகளை விளக்குவதற்கு, அது அந்தச் செயலைத் திரும்பத் திரும்பச் செய்திருக்க வேண்டும் என்று ஆகிறது. அந்த இயல்புகள் இந்தப் பிறவியில் பெறப்பட்டவை அல்ல, ஆதலால் அவை முந்தைய பிறப்புகளிலிருந்து வந்திருக்க வேண்டும்.

இன்னொரு கருத்தும் இருக்கிறது. இவையெல்லாம் சரியென்றே வைத்துக் கொள்வோம், ஆனால் ஏன் எனக்கு முற்பிறவியைப் பற்றிய எதுவும் நினைவில் இல்லை? இதை எளிதில் விளக்க முடியும். இப்போது நான் ஆங்கிலம் பேசிக் கொண்டிருக்கிறேன். இது என் தாய்மொழி அல்ல. உண்மையில், என் தாய்மொழிச் சொற்கள் எதுவும் என் உணர்வுத்தளத்தில் இப்போது இல்லை. ஆனால் பேசுவதற்குச் சிறிது முயன்றால் போதும், அவை விரைந்து வந்துவிடும். மனக்கடலின் மேற்பரப்பு மட்டுமே உணர்வுப் பகுதி, மனத்தின் ஆழத்தில்தான் அனுபவங்கள் அனைத்தும் திரண்டு கிடக்கின்றன என்பதை இது காட்டுகிறது. முயலுங்கள், போராடுங்கள், அவை மேலே வரும். முற்பிறவியையும் நீங்கள் அறிய முடியும்.

இது நேரானது, நிரூபிக்கப்படக் கூடியது. நிரூபிக்கப்படுவதுதான் ஒரு கொள்கை சரியென்பதற்குச் சான்று. உலகிற்கு ரிஷிகள் விடுக்கும் அறைகூவல் இதுவே: 'நினைவுக் கடலின் ஆழத்தைக் கிளறிவிடக்கூடிய ரகசியத்தை நாங்கள் கண்டு பிடித்துள்ளோம். முயலுங்கள், முயன்றால் நீங்களும் நிச்சயமாக முற்பிறவி நினைவுகளை முழுமையாகப் பெறுவீர்கள்!'

தான் ஓர் ஆன்மா என்பதை இந்து நம்புகிறான். ஆன்மாவை வாள் வெட்ட முடியாது, நெருப்பு எரிக்க முடியாது, நீர் கரைக்க முடியாது, காற்று உலர்த்த முடியாது. ஒவ்வோர் ஆன்மாவும் சுற்றெல்லையில்லாத, ஆனால் உடலை மையமாகக் கொண்ட ஒரு வட்டம். இந்த மையம் ஓர் உடலிலிருந்து மற்றோர் உடலுக்கு மாறிச் செல்வதே மரணம் என்று இந்து நம்புகிறான். ஜடப்பொருளின் நியதிகளுக்கும் ஆன்மா கட்டுப்பட்டதல்ல. அது இயல்பாகவே சுதந்திரமானது,

தளைகள் அற்றது, வரம்பற்றது, புனிதமானது, தூய்மை யானது, முழுமையானது. எப்படியோ அது, தான் ஜடத்துடன் கட்டுப்பட்டதாகத் தன்னைக் காண்கிறது. எனவே தன்னை ஜடமாகக் கருதுகிறது.

சுதந்திரமான, நிறைவான, தூய்மையான ஆன்மா ஏன் இவ்வாறு ஜடத்திற்கு அடிமையாக இருக்க வேண்டும் என்பது அடுத்த கேள்வி. முழுமையான ஆன்மா, தான் முழுமையற்றது என்ற நம்பிக்கையில் எவ்வாறு மயங்க முடியும்? இத்தகைய கேள்விக்கு இங்கு இடமில்லை என்று கூறி, இந்துக்கள் இதைத் தட்டிக்கழிப்பதாகச் சொல்லப்படுகிறது. சில சிந்தனை யாளர்கள், முழுமை நிலைக்குச் சற்றுக் கீழே இருக்கின்ற, ஆனால் முழுமை பெறாத பல தேவதைகளைக் கூறி, பெரிய பெரிய சொற்களால் இடைவெளியை நிரப்ப முயற்சி செய்வ தன்மூலம் இதற்கு விடை காண விரும்புகிறார்கள். ஆனால் பெரிய சொற்களைக் கூறுவது விளக்கமாகிவிடாது. கேள்வி அப்படியேதான் இருக்கிறது. முழுமையான ஒன்று முழுமை நிலையிலிருந்து எப்படிக் கீழே வர முடியும்? தூய்மையானதும் முழுமையானதுமான பொருள் தன் இயல்பை எப்படி அணு வளவேனும் மாற்றிக் கொள்ள முடியும்?

இந்து நேர்மையானவன். அவன் குதர்க்க வாதம் செய்து தப்பிக்க விரும்பவில்லை. கேள்வியை ஆண்மையுடன் எதிர் கொள்ளும் துணிவு அவனுக்கு உண்டு. அவனது பதில் இது தான்: 'எனக்குத் தெரியாது. முழுமையான ஆன்மா, தான் முழுமையற்றது என்றும், ஜடத்துடன் இணைக்கப்பட்டு அதனால் பாதிக்கப்படுகிறது என்றும் ஏன் தன்னைப்பற்றி நினைக்க ஆரம்பித்தது என்று எனக்குத் தெரியாது.' உண்மை என்னவோ அதுதான். ஒவ்வொருவரும் தன்னை உடலாக நினைத்துக் கொண்டிருப்பது உண்மைதான். தான் உடல் என எண்ணிக் கொள்வது ஏன் என்பதை விளக்க எந்த இந்துவும் முயல்வதில்லை. அது கடவுளின் திருவுளம் என்று பதில் அளிப்பது விளக்கமாகாது. 'எனக்குத் தெரியாது' என்று இந்து கூறுகிறானே, அதற்குமேல் எதுவும் சொல்ல முடியாது.

ஆகவே மனித ஆன்மா நிலையானது, அழிவற்றது, நிறை வானது, எல்லையற்றது. மரணம் என்பது ஓர் உடலிலிருந்து மற்றோர் உடலுக்கு இடம்பெயர்தலே ஆகும். கடந்தகால வினைகளால் நிகழ்காலம் தீர்மானிக்கப் படுகிறது. எதிர்காலம்

நிகழ்காலத்தால் நிர்ணயிக்கப்படுகிறது. பிறப்புக்குப்பின் பிறப்பு, இறப்புக்குப்பின் இறப்பு, என்று ஆன்மா மேல் நிலைக்கு உயர்ந்தோ அல்லது கீழ் நிலைக்குத் தாழ்ந்தோ சென்று கொண்டிருக்கும்.

இங்கு மற்றொரு கேள்வி எழுகிறது: சூறாவளியில் சிக்கி, ஒரு கணம் அலையின் நுரைநிறைந்த உச்சிக்குத் தள்ளப் பட்டு, அடுத்த கணமே, 'ஆ'வென்று வாயைப் பிளந்து கொண்டிருக்கும் பள்ளத்தில் வீழ்த்தப்பட்டு, நல்வினை தீவினைகளின் ஆதிக்கத்தில் மேலும் கீழுமாக உருண்டு உழன்று கொண்டிருக்கும் ஒரு சிறு படகா மனிதன்? கடுஞ்சீற்றமும், படுவேகமும் சற்றும் விட்டுக்கொடுக்காத காரணகாரியம் என்னும் நீரோட்டத்தில் அகப்பட்டு, அழிந்து போகின்ற, சக்தியற்ற, உதவியற்ற பொருளா மனிதன்? அல்லது, விதவையின் கண்ணீரைக் கண்டும், அனாதையின் அழுகுரலைக் கேட்டும், சற்றும் நிற்காமல், தான் செல்லும் வழியிலுள்ள அனைத்தையும் நசுக்கிக் கொண்டு உருண்டு ஓடும் காரணம் என்னும் சக்கரத்தின் அடியில் எறியப்பட்ட புழுவைப் போன்றவனா மனிதன்?

இதை நினைக்கும்போது நெஞ்சு தளர்கிறது. ஆனால் இதுதான் இயற்கையின் நியதி. நம்பிக்கை இழந்த நெஞ்சின் அடித்தளத்திலிருந்து 'நம்பிக்கையே கிடையாதா? தப்பிக்க வழியே கிடையாதா? என்ற குரல் எழுந்து மேலே சென்றது. அந்தக் குரல் கருணைத் திருவுருவின் அரியாசனத்தை அடைந்தது. அங்கிருந்து நம்பிக்கையும் ஆறுதலும் அளிக்கும் சொற்கள் கீழே வந்தன. அவை ஒரு வேத முனிவரைக் கிளர்ந்தெழச் செய்ய, அவர் எழுந்து நின்று உலகோரைப் பார்த்து கம்பீர தொனியுடன் பின்வரும் செய்தியை முழங்கினார்: 'ஓ அழியாத பேரின்பத்தின் குழந்தைகளே! கேளுங்கள். உயர் உலகங்களில் வாழ்பவர்களே! நீங்களும் கேளுங்கள். அனைத்து இருளையும், அனைத்து மாயையையும் கடந்த ஆதி முழுமுதலை நான் கண்டுவிட்டேன். அவரை அறிந்தால்தான் நீங்கள் மீண்டும் இறப்பிலிருந்து காப்பாற்றப் படுவீர்கள்.'[1]

---

1. ச்ருண்வந்து விச்வே அம்ருதஸ்ய புத்ரா:
        ஆ யே தாமானி திவ்யானி தஸ்து: I. ...
    வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
        ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் I
    தமேவ விதித்வாऽதிம்ருத்யுமேதி
        நான்ய: பந்தா வித்யதேऽயனாய II
                    —சுவேதாஸ்வதர உபநிடதம், 2. 5 & 3. 8

'அழியாத பேரின்பத்தின் குழந்தைகளே!' ஆ, ஆ! எவ்வளவு இனிமையான, எவ்வளவு நம்பிக்கை ஊட்டும் பெயர்! அருமை சகோதரர்களே! அந்த இனிய பெயரால் உங்களை நான் அழைக்க அனுமதி தாருங்கள். அழியாத பேரின்பத்தின் வாரிசுகளே! ஆம், உங்களைப் பாவிகள் என்று அழைக்க இந்து மறுக்கிறான். நாம் ஆண்டவனின் குழந்தைகள், அழியாத பேரின்பத்தின் பங்குதாரர்கள், புனிதமானவர்கள், பூரணர்கள். வையத்துள் வாழும் தெய்வங்களே! நீங்கள் பாவிகளா? மனிதர்களை அப்படிச் சொல்வது பாவம்; மனித இயல்புக்கே அது அழியாத களங்கம். சிங்கங்களே, வீறு கொண்டு எழுங்கள். நீங்கள் ஆடுகள் என்கிற மாயையை உதறித் தள்ளுங்கள். நீங்கள் அழியாத ஆன்மாக்கள், சுதந்திரமான, தெய்வீகமான, நிரந்தரமான ஆன்மாக்கள்! நீங்கள் ஜடப் பொருள் அல்ல, நீங்கள் உடல் அல்ல; ஜடப்பொருள் உங்கள் பணியாள், நீங்கள் ஜடப்பொருளின் பணியாளர் அல்ல.

இரக்கமற்ற விதிகளின் ஒரு பயங்கரத் தொகுதியை வேதங்கள் கூறவில்லை; காரண காரியம் என்னும் எல்லையற்ற சிறைச் சாலையை அறிவிக்கவில்லை; ஆனால் இந்த விதிகளுக் கெல்லாம் முடிவில், ஜடம் சக்தி ஆகியவற்றின் ஒவ்வொரு சிறுபகுதியின் உள்ளும் புறமும் ஒருவன் இருக்கிறான்; 'அவனது கட்டளையால்தான் காற்று வீசுகிறது, நெருப்பு எரிகிறது, வானம் பொழிகிறது, உலகில் மரணம் நடைபோடுகிறது'[1] என்று கூறுகின்றன.

அவனது இயல்புதான் என்ன?

அவன் எங்கும் நிறைந்தவன், புனிதமானவன், உருவற்றவன், எல்லாம் வல்லவன், பெருங்கருணையாளன். 'அப்பனும் நீ, அன்னையும் நீ, அன்புடைய நண்பனும் நீ, ஆற்றல் அனைத்தின் தோற்றமும் நீ, எமக்கு வலிமை தந்தருள்வாய்! புவனத்தின் சுமையைத் தாங்குபவனே, இந்த வாழ்க்கையின் சுமையைத் தாங்க நீ எங்களுக்கு அருள் செய்வாய்!'— வேத முனிவர்கள் இவ்வாறு பாடினர்.

அவனை எப்படி வழிபடுவது? அன்பினால். 'இம்மையிலும் மறுமையிலும் உள்ள எதையும்விட அதிக அன்பிற்கு

---

1. ஒப்பிடுக:
பயாதஸ்யாக்னிஸ்தபதி பயாத் தபதி ஸூர்ய: ।
பயாதிந்த்ரச்ச வாயுச்ச ம்ருத்யுர் தாவதி பஞ்சம இதி ॥
—கட உபநிடதம், 2. 3. 3.

உரியவனாக அவனை வழிபட வேண்டும்.' வேதங்கள் முழங்குவதும் இந்த அன்பு நெறியையே. கடவுளின் அவதாரம் என்று இந்துக்கள் நம்பிப் போற்றும் ஸ்ரீகிருஷ்ணர் அதை எப்படி வளர்த்தார், எப்படி மக்களுக்குப் போதித்தார் என்று பார்ப்போம்.

மனிதன் இவ்வுலகில் தாமரை இலையைப்போல் வாழ வேண்டும் என்று ஸ்ரீகிருஷ்ணர் சொன்னார்.[1] அது தண்ணீரில் வளர்கிறது, ஆனால் தண்ணீரால் நனைவதில்லை. அதுபோல் மனிதன் இந்த உலகில் வாழ வேண்டும்—இதயத்தை இறைவன் பால் வைத்து கைகளால் வேலை செய்ய வேண்டும்.

இவ்வுலக நன்மை அல்லது மறுவுலக நன்மை கருதி, இறைவனிடம் அன்பு செலுத்துவது நல்லதுதான். ஆனால் அன்பிற்காகவே அவனிடம் அன்பு செலுத்துவது சிறந்தது. 'எம்பெருமானே, எனக்குச் செல்வமோ, பிள்ளைகளோ, கல்வியோ வேண்டாம். உனது திருவுள்ளம் அதுவானால் நான் மீண்டும்மீண்டும் பிறக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் நான் பலன் கருதாது உன்னிடம் அன்பு கொள்ளவும், தன்னலமின்றி அன்பிற்காகவே அன்புசெய்யவும் அருள் செய்' என்கிறது ஒரு பிரார்த்தனை.

ஸ்ரீகிருஷ்ணரின் சீடர்களுள் ஒருவர், பாரதத்தின் அன்றைய சக்கரவர்த்தியாக விளங்கிய யுதிஷ்டிரர். அவர் பகைவர்களால் நாட்டிலிருந்து விரட்டப்பட்டு, மனைவியுடன் இமயமலைக் காட்டில் வசிக்க நேர்ந்தது. ஒருநாள் அரசி யுதிஷ்டிரரிடம், 'அறத்தில் மிகச் சிறந்து விளங்கும் உங்களுக்கும் ஏன் துன்பம் வர வேண்டும்?' என்று கேட்டாள். அதற்கு யுதிஷ்டிரர், 'தேவி, இதோ, இந்த இமயமலையைப் பார். எவ்வளவு எழிலோடும் மாட்சிமையோடும் காட்சியளிக்கிறது! நான் இதனை நேசிக்கிறேன். இது எனக்கு ஒன்றும் தருவதில்லை. அழகும் கம்பீரமும் நிறைந்தவற்றில் உள்ளத்தைப் பறிகொடுப்பது என் இயல்பு. அதனால் நான் அதனை விரும்புகிறேன். அதுபோலவே இறைவனை நான் நேசிக்கிறேன். அவரே எல்லா அழகிற்கும் கம்பீரத்திற்கும் மூலகாரணம். அன்பு செலுத்தப்பட வேண்டியவர் அவர் ஒருவரே. அவரை நேசிப்பது என் இயல்பு. ஆதலால் நான் அவரை நேசிக்கிறேன்.

---

1. பத்ம பத்ரமிவாம்பஸா ।
—கீதை, 6. 10

நான் எதுவும் கேட்கவில்லை. அவர் விருப்பம்போல் என்னை எங்கு வேண்டுமானாலும் வைக்கட்டும். அன்பிற்காகவே அவரிடம் நான் அன்பு செலுத்த வேண்டும். அன்பை விலை பேச என்னால் முடியாது' என்றார்.

ஆன்மா தெய்வீகமானது, ஆனால் ஜடப்பொருளின் கட்டுக்குள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது என்று வேதங்கள் கூறுகின்றன. இந்தக் கட்டு அவிழும்போது ஆன்மா நிறை நிலையை அடைகிறது. அந்த நிலையே முக்தி. முக்தி என்பது விடுதலை என்ற சொல்லால் அழைக்கப்படுகிறது. விடுதலை—நிறைவுறாத நிலையிலிருந்து விடுதலை, மரணத்திலிருந்தும் துன்பத்திலிருந்தும் விடுதலை.

கடவுளின் கருணையால்தான் இந்தக் கட்டு அவிழும். அந்தக் கருணை தூயவர்களுக்குத்தான் கிடைக்கும். எனவே அவனது கருணையைப் பெறுவதற்குத் தூய்மை அவசியம் என்றாகிறது. அந்தக் கருணை எப்படிச் செயல்படுகிறது? தூய உள்ளத்தில் அவன் தன்னை வெளிப்படுத்துகிறான், ஆம், தூயவர்களும் மாசற்றவர்களும் இந்தப் பிறவியிலேயே கடவுளைக் காண்கின்றனர். அப்போதுதான் இதயக்கோணல்கள் நேராகின்றன, சந்தேகங்கள் அகல்கின்றன. காரணகாரியம் என்ற பயங்கர விதி அவர்களை அணுகுவதில்லை.

இதுதான் இந்து மதத்தின் மையமும், அதன் முக்கியமான அடிப்படைக் கருத்தும் ஆகும்.

இந்து, வார்த்தைகளிலும் கொள்கைகளிலும் வாழ விரும்பவில்லை. புலன்வசப்பட்ட சாதாரண வாழ்விற்கு அப்பாற்பட்ட வாழ்வுகள் உண்டு என்றால், அவன் அவற்றை நேருக்குநேர் காண விரும்புகிறான். ஜடப்பொருள் அல்லாத ஆன்மா என்ற ஒன்று அவனுள் இருக்குமானால் அதனிடம் நேரே செல்ல விரும்புகிறான். கருணையே வடிவான, எங்கும் நிறைந்த இறைவன் ஒருவர் இருப்பாரானால் அவரை நேரே காண விழைகிறான். அவன் அவரைக் காண வேண்டும்; அது தான் அவனது எல்லா சந்தேகங்களையும் அகற்றும். ஆன்மா இருக்கிறது, கடவுள் இருக்கிறார் என்பதற்கு ஓர் இந்து ஞானி கொடுக்கக் கூடிய சிறந்த சான்று, 'நான் ஆன்மாவைக் கண்டுவிட்டேன், நான் கடவுளைக் கண்டுவிட்டேன்' என்று அவர் கூறுவதுதான். நிறைநிலைக்கு அதுதான் ஒரே நியதி. இந்து மதம் என்பது ஏதோ ஒரு கோட்பாட்டையோ கொள்கையையோ நம்புவதற்கான போராட்டங்களிலும்

முயற்சிகளிலும் அடங்கிவிடாது. வெறும் நம்பிக்கை அல்ல, உணர்தலே, உணர்ந்து அதுவாக ஆதலே இந்து மதம்.

இடைவிடாத முயற்சியின்மூலம் நிறைநிலை பெறுவதும் தெய்வத்தன்மை அடைவதும் தெய்வத்தை அணுகுவதும் அவனைக் காண்பதுமே அவர்களது நெறியின் ஒரே நோக்கம். தெய்வத்தை அணுகி, அவனைக் கண்டு, வானில் உறையும் தந்தையைப்போல் நிறைநிலை அடைவதுதான் இந்துக்களின் மதம். நிறை நிலை பெறும் ஒருவன் என்ன ஆகிறான்? அவன் எல்லையற்ற, முழுமையான பேரானந்தப் பெருக்கில் திளைத்து வாழ்கிறான். பேரின்பம் பெற எதனை அடைய வேண்டுமோ, அந்த ஆண்டவனை அடைந்து அவனுடன் பேரானந்தத்தில் திளைக்கிறான்.

இதுவரையில் எல்லா இந்துக்களும் ஒத்துப்போகின் றனர். இந்தியாவிலுள்ள எல்லா மதப் பிரிவினர்களுக்கும் இது தான் பொதுவாக உள்ள மதம். நிறை நிலை என்பது எல்லை யற்றது. எல்லையற்றது இரண்டாகவோ, மூன்றாகவோ இருக்க முடியாது. அதற்கு குணங்கள் இருக்க முடியாது. அது தனிப்பட்ட ஆளாக இருக்க முடியாது. எனவே ஆன்மா நிறைநிலையையும் எல்லையற்ற நிலையையும் அடையும் போது பிரம்மத்துடன் ஒன்றாகியே தீர வேண்டும். அது இறைவனை நிறைநிலையாக, ஒரே உண்மையாக, தானேயாக, தனது இயல்பாக, இருக்கின்ற ஒருவர் மட்டுமாக, தனியறிவு வடிவாக, பேரானந்த வடிவாக உணர்கிறது. தனித்தன்மையை இழந்து, ஒரு கட்டையைப் போன்றோ, கல்லைப் போன்றோ ஆகிவிடுவதுதான் இந்த நிலை என்றெல்லாம் படிக்கிறோம். 'காயம் படாதவன் தான் தழும்பைக் கண்டு நகைப்பான்.'

நான் சொல்கிறேன், அது அம்மாதிரி அல்ல. இந்தச் சிறிய உடலின் உணர்வை அனுபவிப்பது இன்பமானால், இரண்டு உடல்களின் உணர்வை அனுபவிப்பது இன்னும் அதிக இன்ப மாகும். உடல்களின் எண்ணிக்கை பெருகப்பெருக இன்பத் தின் அளவும் பெருகுகிறது. இறுதியாக, பிரபஞ்ச உணர்வாக மாறும்போது நமது குறிக்கோளாகிய எல்லை யற்ற இன்பம் கிட்டுகிறது.

எல்லையற்ற, பிரபஞ்சம்தழுவிய அந்த தனித்தன்மை யைப் பெற வேண்டுமானால், துன்பம் நிறைந்த இந்த உடற் சிறை என்னும் தனித்தன்மை அகல வேண்டும். நாம் உயிருடன் ஒன்றும்போதுதான் மரணம் அகல முடியும். இன்பத்துடன்

ஒன்றும்போதுதான் துன்பம் அகல முடியும். அறிவுடன் ஒன்றும்போதுதான் பிழைகள் அகல முடியும். இதுதான் விஞ்ஞானத்திற்குப் பொருந்துகின்ற முடிவு. உடலைச் சார்ந்த தனித்தன்மை ஒரு மாயை. இடைவெளியற்றுப் பரந்து நிற்கின்ற ஜடப்பொருளாகிய கடலில், தொடர்ந்து மாறிக் கொண்டே செல்லும் ஒரு சிறிய பொருள்தான் என் உடல் என்று விஞ்ஞானம் நிரூபித்துவிட்டது; எனவே என் இன்னொரு பாகமான ஆன்மா அத்வைதம் (ஒருமை), என்ற முடிவிற்குத்தான் வரவேண்டியிருக்கிறது.

ஒருமைநிலையைக் கண்டுபிடிப்பதுதான் விஞ்ஞானம். முழுமையான ஒருமைநிலை கிட்டியதும் விஞ்ஞானம் மேலே செல்லாமல் நின்றுவிடும். ஏனெனில் அது தன் குறிக்கோளை எட்டி விட்டது. அதுபோலவே, எந்த மூலப்பொருளிலிருந்து எல்லா பொருட்களும் படைக்கப்படுகின்றனவோ, அதைக் கண்டுபிடித்த பின்னர் வேதியியல் முன்னேற முடியாது. எந்த மூலசக்தியிலிருந்து எல்லா சக்திகளும் வெளிப்படுகின்றனவோ, அதைக் கண்டறிந்ததும் இயற்பியல் நின்றுவிடும். மரணம் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில், மரணத்தைக் கடந்து நிற்கும் ஒரே உயிரைக் கண்டுபிடித்ததும், மாறிக் கொண்டேயிருக்கும் உலகில் மாறாத ஒரே அடிப்படையான அவனைக் கண்டுபிடித்ததும், எந்த ஓர் ஆன்மாவிலிருந்து பிற ஆன்மாக்கள் வெளிப்படுவது போன்று மாயையால் தோன்றுகிறதோ அந்த ஆன்மாவைக் கண்டுபிடித்ததும், மத விஞ்ஞானம் பூரணமாகிவிடும்.

விஞ்ஞானம் அனைத்தும் கடைசியில் இந்த முடிவிற்குத்தான் வந்தாக வேண்டும். ஒடுங்கி இருப்பவை வெளிப்படுகின்றனவே தவிர படைப்பு என்பதில்லை என்பதுதான் இன்றைய விஞ்ஞானத்தின் கூற்று. தான் பல்லாண்டுகளாக இதயத்தில் வைத்துப் போற்றி வந்த உண்மை, இன்னும் ஆற்றல் மிக்க மொழியில், தற்கால விஞ்ஞான முடிவுகளின் ஆதார விளக்கங்களுடன் புகட்டப்படப்போகின்றது என்பதை அறிந்து இந்து பெருமகிழ்ச்சியே அடைகிறான்.

தத்துவ நாட்டத்திலிருந்து இப்போது நாம் சாதாரண மக்களின் மதத்திற்கு வருவோம். பலதெய்வ வழிபாடு (Polytheism) இந்தியாவில் இல்லை என்பதை முதலிலேயே சொல்லி விடுகிறேன். ஆலயங்களில் வழிபடுபவர்கள், அங்கிருக்கின்ற திருவுருவங்களை, தெய்வத்தின் எல்லா குணங்களும்— எங்கும்

நிறைந்த தன்மை உட்படத்தான்—இருப்பதாகக் கூறி வழிபடுவதை அருகிலிருந்து கவனித்தால் அறியலாம். அது பலதெய்வ வழிபாடாகாது; பல தெய்வங்களுள் ஒருவரை ஆற்றல் மிக்கவராகக் கருதி, அவரை வழிபடுகின்ற கோட்பாடு (Henotheism) என்றும் இதனை விளக்க முடியாது. 'ரோஜா மலரை எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அதே நறுமணம்தான் கமழும்.' பெயர்கள் விளக்கங்களாக மாட்டா.

நான் சிறுவனாயிருந்த போது, கிறிஸ்தவ பாதிரி ஒருவர், ஒரு கூட்டத்தில் பிரச்சாரம் செய்து கொண்டிருந்த நிகழ்ச்சி என் நினைவிற்கு வருகிறது. பல சுவையான செய்திகளைச் சொல்லிக்கொண்டே வந்த அவர் இடையில், 'நான் உங்கள் விக்கிரகத்தை என் கைத்தடியால் ஓங்கி அடித்தால் அது என்னை என்ன செய்துவிடும்?' என்று கேட்டார். அதனைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களுள் ஒருவர் சற்றும் தாமதியாமல், 'உங்கள் ஆண்டவரை நான் ஏசினால் அவர் என்னை என்ன செய்வார்?' என்று கேட்டார், 'இறந்ததும் நீ தண்டிக்கப் படுவாய்' என்று பதிலளித்தார் பாதிரி. 'அப்படியே எங்கள் விக்கிரகமும் நீர் இறந்ததும் உம்மைத் தண்டிக்கும்' என்று திருப்பிச் சொன்னார் அந்த இந்து!

பழத்தைக் கொண்டு மரம் அறியப்படுகிறது. உருவ வழிபாட்டினர் என்று கூறப்படுபவர்களுள், ஒழுக்கத்திலும் ஆன்மீகத்திலும் பக்தியிலும் ஈடிணையற்று விளங்குபவர்களை நான் காணும்போது, 'பாவத்திலிருந்து புனிதம் பிறக்குமா?' என்று என்னை நானே கேட்டுக் கொள்கிறேன்.

மூடநம்பிக்கை, மனிதனின் பெரும் பகைவன்தான். ஆனால் மதவெறி அதைவிட மோசமானது. கிறிஸ்தவன் ஏன் சர்ச்சிற்குப் போகிறான்? சிலுவை ஏன் புனிதமானது? பிரார்த்தனை செய்யும்போது முகம் ஏன் வானை நோக்க வேண்டும்? கத்தோலிக்க சர்ச்சுகளில் ஏன் அத்தனை உருவங்கள் இருக்கின்றன? பிராட்டஸ்டன்டினர் பிரார்த்தனை செய்யும்போது அவர்கள் உள்ளங்களில் ஏன் அத்தனை உருவங்கள் உள்ளன?

என் சகோதரர்களே, சுவாசிக்காமல் உயிர்வாழ முடியாதது போல், உள்ளத்தில் ஓர் உருவத் தோற்றமின்றி, நாம் எதனையும் நினைத்துப் பார்க்க முடியாது. தொடர்பு விதியின்படி (Law of Association), புற உருவம் அகக்கருத்தையும், அகக்கருத்து புற உருவத்தையும் நினைவுபடுத்துகிறது. அதனால்தான் இந்து வழிபடும்போது, ஒரு புறச் சின்னத்தைப்

பயன்படுத்துகிறான். தான் வழிபடும் பரம்பொருளின் மீது சிந்தையைப் பதியச் செய்வதற்கு அது உதவுகிறது என்று அவன் கூறுவான். அந்த உருவம் கடவுள் அல்ல, அது எங்கும் நிறைந்தது அல்ல என்று உங்களைப் போல் அவனுக்கும் தெரியும். 'எங்கும் நிறைந்தது' என்று சொல்லும்போது பெரிதாக என்னதான் புரிந்து கொள்ள முடியும்? அது ஒரு சொல், சின்னம் மட்டுமே. இறைவனுக்குப் பரப்பு இருக்க முடியுமா என்ன? 'எங்கும் நிறைந்தவர்' என்று நாம் திரும்பத்திரும்பச் சொல்லும்போது, மிஞ்சிப் போனால், விரிந்த வானையும் பரந்த வெளியையும் நினைக்கலாம், அவ்வளவுதான்.

எல்லையற்றது என்ற கருத்தை நீலவானத்தின் அல்லது கடலின் தோற்றத்துடன் தொடர்புபடுத்தியே பார்க்க வேண்டியுள்ளது. மன அமைப்பு நியதிகள் அவ்வாறுதான் செயல்படுகின்றன. அவ்வாறே புனிதம் என்றால் சர்ச், பள்ளிவாசல் அல்லது சிலுவை போன்ற உருவங்களுடன் அதனை இணைத்துப் பார்ப்பதுதான் இயல்பானது. இந்துக்களும் தூய்மை, உண்மை, எங்கும் நிறைந்த நிலை ஆகிய கருத்துக்களை பல்வேறு உருவங்களுடனும் தோற்றங்களுடனும் தொடர்புபடுத்தி உள்ளனர். ஆனால் ஒரு வித்தியாசம். சிலர் சர்ச்சின் உருவ வழிபாட்டுடன் தங்கள் வாழ்க்கை முழுவதையும் இணைத்துக்கொண்டு, அதற்குமேல் வளராமல் நின்று விடுகிறார்கள். அவர்களைப் பொறுத்தவரை, மதம் என்றால் சில கோட்பாடுகளை ஒப்புக்கொள்வது, பிறருக்கு உதவி செய்வது என்பவை மட்டும்தான். இந்துவின் மதமோ தெய்வத்தை நேரடியாக உணர்வது. தெய்வத்தை உணர்ந்து, மனிதன் தெய்வமாக வேண்டும். திருவுருவங்கள், கோவில்கள், சர்ச்சுகள், நூல்கள் இவை எல்லாம் ஆன்மீக வாழ்க்கையின் குழந்தைப் பருவத்தில் இருக்கும் மனிதனுக்கு உதவிகள், ஆதாரங்கள். ஆனால் அவன் இன்னும் மேலேமேலே முன்னேற வேண்டும்.

அவன் எங்குமே நின்றுவிடக் கூடாது. 'புற வழிபாடும் ஜடப்பொருள் வழிபாடும் கீழ்நிலை ஆகும். மேல்நிலைக்கு வர முயன்று, மனத்தால் பிரார்த்தனை செய்தல், அடுத்த உயர்நிலை. ஆண்டவனை உணர்வதுதான் அனைத்திலும் மேலான நிலை' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதே உறுதிப்பாடு கொண்டவர், விக்கிரகத்தின் முன்னால் முழந்தாளிட்டுக் கொண்டு கூறுவதைக் கேளுங்கள்: 'அவனை சூரியனும் விவரிக்க முடியாது, சந்திரனும் விளக்க முடியாது.

விண்மீன்களாலும் மின்னலாலும் விளக்க முடியாது. தீயும் அவனை விவரிக்காது. அவை அனைத்தும் அவனால்தான் ஒளிர்கின்றன'[1].

இந்து யாருடைய விக்கிரகத்தையும் இழிவுபடுத்திப் பேசுவதில்லை; எந்த வழிபாட்டையும் பாவம் என்று கூறுவதில்லை. அது வாழ்க்கையின் இன்றியமையாத படி என்று அவன் ஏற்றுக் கொள்கிறான். 'குழந்தை, மனிதனின் தந்தை.' குழந்தைப் பருவம் பாவமானது, அல்லது வாலிபப் பருவம் பாவமானது என்று வயதானவர் சொல்வது சரியாகுமா?

ஒரு விக்கிரகத்தின்மூலமாகத் தனது தெய்வீக இயல்பை ஒருவன் உணர முடியும் என்றால், அதைப் பாவம் என்று கூறுவது சரியா? அந்த நிலையைக் கடந்த பிறகு அவனே அதைப் பிழை என்று கூறலாமா? இந்துவின் கொள்கைப்படி, மனிதன் தவறிலிருந்து உண்மைக்குச் செல்லவில்லை, உண்மையிலிருந்து உண்மைக்கு, அதாவது கீழ்நிலை உண்மையிலிருந்து மேல்நிலை உண்மைக்குப் பயணம் செய்கிறான். அவனைப் பொறுத்தவரை, மிகவும் தாழ்ந்த ஆவி வழிபாட்டிலிருந்து அத்வைதம் வரை எல்லாமே பரம்பொருளை உணர்வதற்காக ஆன்மா செய்யும் முயற்சிகள். ஒவ்வொன்றும் அது தோன்றிய இடத்தையும் சூழலையும் பொறுத்தது, ஒவ்வொன்றும் முன்னேற்றத்தின் ஒரு படியைக் குறிக்கிறது. ஒவ்வோர் ஆன்மாவும் மேலேமேலே பறந்து செல்லும் ஓர் இளம்பருந்தைப் போன்றது, அது உயரச் செல்லச்செல்ல மேன்மேலும் வலுவைப் பெற்று, கடைசியில் ஒளிமிக்க சூரியனை அடைகிறது.

வேறுபாட்டில் ஒருமைதான் இயற்கையின் நியதி. அதை இந்து உணர்ந்துள்ளான். பிற மதங்கள் எல்லாம் சில கோட்பாடுகளை நிர்ணயித்து அவற்றைச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளுமாறு கட்டாயப்படுத்துகின்றன; ஒரே ஒரு சட்டையை வைத்துக் கொண்டு, சமுதாயத்திலுள்ள ஜாக், ஜான், ஹென்றி எல்லாருக்கும் அந்த ஒரு சட்டை பொருந்த வேண்டும் என்று கூறுகின்றன. ஜானுக்கோ ஹென்றிக்கோ சட்டை பொருந்தாவிட்டால் அவர்கள் சட்டையில்லாமல்தான் இருக்க வேண்டும்.

---

1. நதத்ர ஸூர்யோ பாதி சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோSய மக்னி: ।
தமேவ பாந்தமனு பாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥ —கட உபநிடதம், 2. 2. 15.

சார்புப் பொருட்கள்மூலமே எல்லையற்ற இறைவனை உணரவோ நினைக்கவோ பேசவோ முடியும்; திருவுருவங்களும் சிலுவைகளும் பிறைகளும் வெறும் சின்னங்களே, ஆன்மீகக் கருத்துக்களை மாட்டி வைப்பதற்குப் பயன்படும் ஆணிகளே என்பதை இந்துக்கள் கண்டுபிடித்துள்ளனர். இந்த உதவி எல்லோருக்கும் தேவை என்பது அல்ல; ஆனால், தேவைப்படாதவர்கள், அது தவறு என்று கூற உரிமையில்லை. இந்து மதத்தில் அது கட்டாயமும் அல்ல.

ஒன்று நான் சொல்ல வேண்டும். இந்தியாவில் உருவ வழிபாடு என்பது பயங்கரமான ஒன்றல்ல, விலைமகளிரை உருவாக்கும் இடமும் அல்ல. உயர்ந்த ஆன்மீக உண்மைகளைப் புரிந்து கொள்வதற்கு, பக்குவப்படாதவர்களின் முயற்சிதான் உருவ வழிபாடு. இந்துக்களிடம் தவறுகள் உண்டு, சிலவேளைகளில் விதி விலக்குகளும் உண்டு. ஆனால் ஒன்றைக் கவனியுங்கள்: அவர்கள் தங்கள் உடல்களை வருத்திக் கொள்வார்களே தவிர, அடுத்தவனின் கழுத்தை அறுக்க மாட்டார்கள். இந்து மத வெறியன் தன்னைத் தீயில் கொளுத்திக் கொள்வானே தவிரப் பிறரையல்ல. சூனியக்காரிகள் கொளுத்தப்பட்டதற்கு எப்படிக் கிறிஸ்தவ மதம் பொறுப்பில்லையோ, அதேபோல் இதற்கு இந்து மதம் பொறுப்பல்ல.

இந்துவிற்கு, உலகின் எல்லா மதங்களும், பலவித நிலைகளிலும், சந்தர்ப்பங்களிலும் உள்ள பல்வேறு ஆண்களும் பெண்களும் ஒரே இலக்கை நோக்கிச் செய்கின்ற பயணம்தான். சாதாரண உலகியல் மனிதனிடம் கடவுளை வெளிப்படச் செய்வதுதான் எல்லா மதங்களின் நோக்கம். அவர்கள் அனைவருக்கும் எழுச்சியை ஊட்டுபவர் ஒரே கடவுள்தான். அப்படியானால் இத்தனை மாறுபாடுகள் இருக்கக் காரணம் என்ன? மாறுபாடுகள் எல்லாம் வெளித் தோற்றமே என்கிறான் இந்து. வெவ்வேறு சூழ்நிலைகளுக்கும் பல்வேறு இயல்புகளுக்கும் ஏற்பத் தன்னை மாற்றி அமைத்துக் கொள்கின்ற ஒரே உண்மையில் இருந்துதான் இந்த மாறுபாடுகள் எழுகின்றன.

ஒரே ஒளிதான் பல்வேறு வண்ணக் கண்ணாடிகளின் மூலம் பல நிறங்களில் வருகிறது. நம்மை மாற்றி அமைத்துக் கொள்ள இந்த வேறுபாடுகள் அவசியம். ஆனால் எல்லாவற்றின் மையத்திலும் அதே உண்மைதான் ஆட்சி செய்கிறது.

'முத்து மாலையிலுள்ள முத்துக்களைக் கோர்க்கின்ற நூல் போல் நான் எல்லா மதங்களிலும் இருக்கிறேன். மக்களினத்தை உயர்த்திப் புனிதப்படுத்தும் அசாதாரணமான தூய்மையும் அசாதாரணமான ஆற்றலும் எங்கெல்லாம் காணப்படுகின்றனவோ அங்கெல்லாம் நான் இருக்கிறேன் என்று அறி'[1] என்று பகவான் தன் கிருஷ்ணாவதாரத்தின் போது இந்துக்களுக்குச் சொன்னார். அதன் பலன் என்ன? இந்துக்கள் மட்டுமே காப்பாற்றப்படுவார்கள், மற்றவர்கள் காப்பாற்றப்பட மாட்டார்கள் என்று சம்ஸ்கிருதத் தத்துவ இலக்கியத்தில் எங்காவது கூறப்பட்டிருக்கிறதா என்று கண்டுபிடிக்கும்படி நான் உலகத்திற்குச் சவால் விடுகிறேன். 'நமது ஜாதிக்கும் கோட்பாடுகளுக்கும் அப்பால்கூட நிறை நிலை பெற்றவர்களைக் காண்கிறோம்' என்கிறார் வியாசர்.

இன்னொன்று: அனைத்து எண்ணங்களிலும் கடவுளையே மையமாகக் கொண்ட இந்து, எப்படி சூன்யவாதம் பேசும் பௌத்தர்களையும், நாத்திகவாதம் பேசும் சமணர்களையும் நம்புவான்?' பௌத்தர்களோ சமணர்களோ கடவுளை நம்பி வாழ்வதில்லை. ஆனால் மனிதனை தெய்வமாக்க வேண்டும் என்னும் எல்லா மதங்களுடையவும் மையக் கருத்து இருக்கிறதே, அதுதான் அவர்களுடைய மதங்களின் முழு நோக்கமாகும். அவர்கள் தந்தையைப் பார்த்ததில்லை, ஆனால் மகனைப் பார்த்துள்ளார்கள். மகனைப் பார்த்தவன் தந்தையையும் பார்த்துள்ளான்.

சகோதரர்களே! இந்து மதக் கருத்துக்களின் சுருக்கம் இதுதான். தன் திட்டங்களை எல்லாம் நிறைவேற்ற இந்து தவறியிருக்கலாம். ஆனால் என்றாவது உலகம்தழுவிய மதம் (Universal Religion) என்ற ஒன்று உருவாக வேண்டுமானால், அது இடத்தாலும் காலத்தாலும் எல்லைப்படுத்தப் படாததாக இருக்க வேண்டும். அந்த மதம் யாரைப் பற்றிப் பிரச்சாரம் செய்கிறதோ, அந்தக் கடவுளைப் போன்று எல்லையற்றதாக இருக்க வேண்டும். சூரியன், தன் ஒளிக்கிரணங்களை எல்லோர் மீதும் சமமாக வீசுவதுபோல் அது கிருஷ்ண பக்தர்கள், கிறிஸ்து பக்தர்கள், ஞானிகள், பாவிகள், எல்லோரையும் சமமாகப் பார்க்க வேண்டும். அது பிராமண மதமாகவோ

---

1. ஒப்பிடுக: கீதை, 7.7 & 10. 41.

பௌத்த மதமாகவோ கிறிஸ்தவ மதமாகவோ முகமதிய மதமாகவோ இருக்காமல், இவற்றின் ஒட்டுமொத்தமாக இருப்பதுடன், இன்னும் வளர்ச்சியடைய எல்லையற்ற இடம் உள்ளதாக இருக்க வேண்டும். விலங்கினங்களைப் போல் உள்ள காட்டுமிராண்டி மக்களிலிருந்து, இவரும் மனிதரா என்று சமுதாயம் பயபக்தியுடன் வணங்கி நிற்கும் அளவுக்கு, அறிவாலும் இதயப் பண்பாலும் உயர்ந்து மனித இயல்புக்கு மேலோங்கி விளங்கும் சான்றோர்வரை, எல்லோருக்கும் இடமளித்து, தன் அளவற்ற கரங்களால் எல்லோரையும் தழுவிக் கொள்ளும் பரந்த மனப்பான்மை உள்ளதாக இருக்க வேண்டும். அந்த மதத்தில் பிற மதத்தினரைத் துன்புறுத்தலும், சகிப்புத் தன்மையற்று நடந்து கொள்ளுதலும் இருக்காது. அது ஆண், பெண் எல்லாரிடமும் தெய்வத்தன்மை இருப்பதை ஏற்றுக் கொள்ளும். மனித இனம் தன் உண்மையான தெய்வீகத் தன்மையை உணர்வதற்கு உதவி செய்வதே அதன் நோக்கமாக இருக்கும். அதன் முழு ஆற்றலும் அதற்கே பயன்படும்.

அத்தகைய மதத்தை அளியுங்கள், எல்லா நாடுகளும் உங்களைப் பின்பற்றும். அசோகரின் சபை பௌத்த மத சபையாக இருந்தது. அக்பரது சபை இதைவிடச் சற்று உயர்ந்த நோக்கம் கொண்டதாக இருந்தாலும் வீட்டு சபையாகவே இருந்தது. கடவுள் எல்லா மதங்களிலும் இருக்கிறார் என்று உலகம் அனைத்திற்கும் முழக்கம் செய்ய அமெரிக்கா ஒன்றுக்குத்தான் கொடுத்து வைத்திருந்தது.

இந்துக்களுக்கு பிரம்மமாகவும் சொராஸ்டிரர்களுக்கு அஹுரா-மஸ்தாவாகவும், பௌத்தர்களுக்கு புத்தராகவும், யூதர்களுக்கு ஜெஹோவாவாகவும், கிறிஸ்தவர்களுக்கு பரமண்டலத்தில் இருக்கும் பிதாவாகவும் இருக்கின்ற ஆண்டவன் உங்கள் உன்னதமான நோக்கம் நிறைவேற உங்களுக்கு வலிமை அளிப்பானாக! விண்மீன் கிழக்கிலே எழுந்து மேற்கு நோக்கி நேராகச் சென்றது. சிலவேளைகளில் மங்கலாகவும், சிலபொழுது ஒளிமிக்கதாகவும் உலகத்தைச் சுற்றியது. இப்போது கிழக்குத் திசையிலே சான்போ[1] நதிக்கரையினில் முன்னைவிட ஆயிரம் மடங்கு ஒளியுடன் மறுபடியும் உதயமாகிக் கொண்டிருக்கிறது.

---

1. பிரம்மபுத்ரா நதி.

சுதந்திரத்தின் தாயகமாகிய கொலம்பியாவே,[1] நீ வாழ்க! அயலாரின் இரத்தத்தில் கையினைத் தோய்க்காமல், அயலாரைக் கொள்ளையடிப்பதுதான் பணக்காரன் ஆகக் குறுக்கு வழி என்று கண்டுபிடிக்காத உனக்குத்தான் சமரசக் கொடி பிடித்து, நாகரீகப் படையின் முன்னணியில் வெற்றிநடை போடும் பெரும்பேறு கொடுத்து வைத்திருந்தது.

1. அமெரிக்கா.

## 4. மதம் இந்தியாவின் அவசரத் தேவையல்ல!

நல்ல விமர்சனங்களை ஏற்கக் கிறிஸ்தவர்கள் எப்போதும் தயாராக இருக்க வேண்டும். நான் கூறப்போகும் சிறிய விமர்சனங்களை நீங்கள் பொருட்படுத்தமாட்டீர்கள் என்று நினைக்கிறேன். அஞ்ஞானிகளின் ஆன்மாக்களைக் காப்பாற்றுவதற்கு, மதப் பிரச்சாரகர்களை அனுப்பும் கிறிஸ்தவர்களாகிய நீங்கள் அவர்களது உடல்களைப் பட்டினியிலிருந்து காப்பாற்ற ஏன் முயல்வதில்லை? கடுமையான பஞ்சங்களின்போது இந்தியாவில் ஆயிரக்கணக்கானோர் இறந்தனர். இருந்தும் கிறிஸ்தவர்களாகிய நீங்கள் ஒன்றும் செய்யவில்லை.

இந்தியா முழுவதிலும் சர்ச்சுகளைக் கட்டுகிறீர்கள். கீழ்த்திசை நாடுகளின் அவசரத் தேவை மதம் அல்ல. தேவையான மதம் அவர்களிடம் உள்ளது. இந்தியாவில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் லட்சக்கணக்கான மக்கள் தொண்டை வற்றக் கூக்குரலிடுவது உணவுக்காகத்தான். அவர்கள் உணவு கேட்கிறார்கள், நாம் கற்களைக் கொடுக்கிறோம். பசியால் வாடும் மக்களிடம் மதப் பிரச்சாரம் செய்வது அவர்களை அவமதிப்பதாகும். பசியால் துடிப்பவனுக்குத் தத்துவ போதனை செய்வது அவனை அவமதிப்பதாகும்.

இந்தியாவில் பணத்திற்காக மதப் பிரச்சாரம் செய்பவனை ஜாதியை விட்டு விலக்கி, முகத்தில் காறித் துப்புவார்கள். வறுமையில் வாடுகின்ற எங்கள் மக்களுக்கு உதவி கோரி இங்கு வந்தேன். கிறிஸ்தவ நாட்டில் கிறிஸ்தவர்களிடமிருந்து, பிற மதத்தினருக்காக உதவி கிடைப்பது எவ்வளவு கடினமானது என்பதை நன்றாக உணர்ந்துவிட்டேன்.

## 5. புத்த மதம் இந்து மதத்தின் நிறைவு

நான் பௌத்தன் அல்ல என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆனாலும் நான் ஒரு பௌத்தன். சீனாவும் ஜப்பானும் இலங்கையும் அந்த மகானின் உபதேசங்களைப் பின்பற்றுகின்றன. இந்தியாவோ அவரைக் கடவுளின் அவதாரம் என்று போற்றி வணங்குகிறது. நான் புத்த மதத்தை விமர்சிக்கப் போவதாகச் சற்றுமுன் கூறினார்கள். அதன் பொருளை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். கடவுளின் அவதாரம் எனக் கூறி நான் வழிபடுபவரை நானே விமர்சிப்பது என்பது என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத ஒன்று. ஆனால் புத்தர் பெருமானை அவரது சீடர்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதுதான் எங்கள் கருத்து. இந்து மதத்திற்கும்—நான் இந்து மதம் எனக் குறிப்பிடுவது வேத மதத்தைத் தான்—இந்நாளில் புத்த மதம் என்று கூறப்படுகிறதே அதற்கும் உறவு, யூத மதத்திற்கும் கிறிஸ்தவ மதத்திற்கும் உள்ள உறவுதான்.

ஏசு நாதர் ஒரு யூதர்; சாக்கிய முனிவர் ஓர் இந்து. யூதர்கள் ஏசுவை ஒதுக்கித் தள்ளியது மட்டுமின்றி, அவரைச் சிலுவையிலும் அறைந்தார்கள். இந்துக்கள் சாக்கிய முனிவரைக் கடவுள் என்று ஏற்று வணங்குகிறார்கள். இந்துக்களாகிய நாங்கள் எடுத்துக் கூற விரும்பும், தற்கால பௌத்த மதத்திற்கும் புத்த பகவானின் உண்மை உபதேசத்திற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு என்னவென்றால், சாக்கிய முனிவர் எதையும் புதிதாக உபதேசிக்க வரவில்லை என்பதுதான். அவரும் ஏசுநாதரைப் போல், நிறைவு செய்யவே வந்தார், அழிக்க வரவில்லை.

ஏசு நாதர் விஷயத்தில், பழைய மக்களாகிய யூதர்கள்தான் அவரைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. புத்தர் விஷயத்தில், அவரைப் பின்பற்றியவர்களே அவரது உபதேசங்களின் கருத்தை உணரவில்லை. பழைய ஏற்பாடு நிறைவு செய்யப்படுவதை யூதர்கள் புரிந்து கொள்ளாததுபோல், இந்துமத

உண்மைகள் நிறைவு செய்யப்படுவதை பௌத்தர்கள் அறிந்து கொள்ளவில்லை. மீண்டும் சொல்கிறேன்: சாக்கிய முனிவர் இந்துமதக் கொள்கைகளை அழிக்க வரவில்லை; ஆனால் இந்து மதத்தின் நிறைவு, அதன் சரியான முடிவு, அதன் சரி யான வளர்ச்சி எல்லாம் அவரே.

இந்துமதம் இரு பாகங்களாகப் பிரிந்து உள்ளது. ஒன்று கர்மகாண்டம், மற்றொன்று ஞானகாண்டம். ஞானகாண்டத் தைத் துறவிகள் சிறப்பாகக் கற்கின்றனர். இதில் ஜாதி கிடை யாது. மிக உயர்ந்த ஜாதியைச் சேர்ந்தவரும் மிகத் தாழ்ந்த ஜாதியில் பிறந்தவரும் துறவியாகலாம்; அப்போது அந்த இரண்டு ஜாதிகளும் சமமாகி விடுகின்றன.

மதத்திற்கு ஜாதியில்லை. ஜாதி என்பது வெறும் சமுதாய ஏற்பாடு. சாக்கிய முனிவரே ஒரு துறவிதான். வேதங்களில் மறைந்து கிடந்த உண்மைகளை வெளியே கொண்டுவந்து அவற்றை உலகம் முழுவதற்கும் தாராளமனத்துடன் பரவச் செய்த பெருமைக்கு உரியவர் அவர். உலகத்திலேயே முதன் முதலாக மதப் பிரச்சாரத்தைச் செயல்படுத்தியவர், ஏன், மத மாற்றம் என்ற கருத்தை உருவாக்கியவரே அவர்தான்.

எல்லாரிடமும், குறிப்பாக, பாமரர்களிடமும் ஏழை எளியவரிடமும், ஆச்சரியப்படும் வகையில் பரிவு காட்டிய பெரும் புகழுக்கு உரியவர் அவரே. அவரது சீடர்களுள் சிலர் பிராமணர்கள். புத்தர் உபதேசம் செய்த காலத்தில், சம்ஸ் கிருதம் பேச்சுமொழியாக இல்லை. பண்டிதர்களின் நூல் களில் மட்டுமே அந்த மொழி இருந்தது. புத்தரின் பிராமணச் சீடர்களுள் சிலர், அவரது உபதேசங்களை சம்ஸ்கிருதத் தில் மொழிபெயர்க்க விரும்பினர். அதற்கு அவர், 'நான் ஏழை களுக்காக வாழ்பவன், மக்களுக்காக வாழ்பவன். என்னை மக்களின் மொழியிலேயே பேச விடுங்கள்' என்று திட்டவட்ட மாகக் கூறிவிட்டார். அதனால்தான் இன்றளவும், அவரது போதனைகளில் பெரும் பகுதி, அந்நாளைய பேச்சுமொழி யிலேயே உள்ளது.

தத்துவ சாஸ்திரத்தின் நிலை என்னவாகவும் இருக்கட் டும், மெய்ஞான நிலை என்னவாகவும் இருக்கட்டும், உலகத் தில் மரணம் என்ற ஒன்று உள்ளவரையில், மனித இதயத்தில் பலவீனம் என்பது இருக்கும் வரையில், மனிதனின் பலவீனம் காரணமாக, அவனது இதயத்திலிருந்து எழும் கூக்குரல் இருக்கும்வரை, கடவுள்மீது நம்பிக்கை இருந்தே தீரும்.

தத்துவ சாஸ்திரத்தைப் பொறுத்தவரை, புத்த தேவரின் சீடர்கள் நிலையான மலை போன்ற வேதங்களோடு மோதிப் பார்த்தார்கள். ஆனால் அவற்றை அழிக்க முடியவில்லை. மற்றொரு புறம் அவர்கள் ஆண், பெண், அனைவரும் பாசத்தோடு பற்றிக்கொண்டிருந்த அழிவற்ற இறைவனை நாட்டிலிருந்து எடுத்துச் சென்றுவிட்டார்கள். அதன் பயன், புத்த மதம் இந்தியாவில் இயற்கை மரணம் எய்தியது. அது பிறந்த நாட்டிலேயே, பௌத்தன் என்று கூறிக்கொள்ள ஒருவர்கூட இன்று இல்லை.

அதேவேளையில், பிராமண சமுதாயத்திற்குச் சில இழப்புகள் ஏற்பட்டன. சீர்திருத்தும் ஆர்வம், எல்லாரிடமும் வியக்கத்தக்க வகையில் பரிவும் இரக்கமும் காட்டுதல், பக்குவமாக மாற்றியமைக்கும் இங்கிதப் பாங்கு முதலிய பௌத்தப் பண்புகளை பிராமண சமுதாயம் இழந்தது. இந்தப் பண்புகள் தான் இந்தியாவைப் பெருமையுறச் செய்திருந்தது. அந்நாளைய இந்தியாவைப் பற்றி, ஒருகிரேக்க வரலாற்று ஆசிரியர், 'பொய் சொல்லும் இந்துவையோ, கற்பிழந்த இந்துப் பெண்ணையோ நான் பார்க்கவில்லை' என்று கூறுகிறார்.

புத்த மதமின்றி இந்து மதம் வாழ முடியாது. அவ்வாறே இந்து மதமின்றி புத்த மதமும் வாழ முடியாது. பிரிவின் காரணமாக என்ன நேர்ந்ததென்று பாருங்கள்! பிராமணர்களின் நுண்ணறிவும், தத்துவ ஞானமுமின்றி பௌத்தர்கள் நிலைத்து வாழ முடியாது. பௌத்தர்களின் இதயமின்றி பிராமணர்களும் வாழ முடியாது. பௌத்தர்களும் பிராமணர்களும் பிரிந்ததுதான் இந்தியாவின் வீழ்ச்சிக்குக் காரணம். அதனால்தான் இந்தியா முப்பது கோடி பிச்சைக்காரர்களின் இருப்பிடமாகி விட்டது: கடந்த ஆயிரம் ஆண்டுகளாக நாடு பிடிப்பவர்களின் அடிமையாக இருக்கிறது. ஆகவே பிராமணனின் அற்புதமான நுண்ணறிவையும், புத்தரின் இதயம், உயர்ந்த உள்ளம், வியப்பிற்குரிய மனிதாபிமானம் இவற்றையும் ஒன்று சேர்ப்போமாக!

## 6. நிறைவுநாள் உரை

சர்வமத மகாசபை சிறப்பாக நிறைவுற்று விட்டது. இதை உருவாக்க முயற்சி செய்தவர்களுக்கு இறைவன் துணை நின்று, அவர்களுடைய தன்னலமற்ற உழைப்பிற்கு வெற்றிவாகை சூட்டியுள்ளார்.

இந்த அற்புதமான கனவை, முதலில் கண்டு, பிறகு அதை நனவாக்கிய, பரந்த இதயமும் உண்மையில் பற்றும் கொண்ட உத்தமர்களுக்கு என் நன்றி. இந்த மேடையில் கரைகடந்து வழிந்தோடிய பரந்த உணர்ச்சிப் பொழிவுக்கு என் நன்றி. என்மீது ஒருமித்த அன்பு காட்டியதற்காகவும், மதங்களுக்கு இடையே நிலவுகின்ற அதிருப்தியைத் தணிப் பதற்காகக் கூறப்பட்ட கருத்துக்களைப் பாராட்டியதற் காகவும் அறிவுசார்ந்த சபையினருக்கு என் நன்றி. இந்த இன்னிசையில் அவ்வப்போது சில அபசுரங்கள் கேட்டன. அவர்களுக்கு என் சிறப்பான நன்றி. ஏனெனில் அவர்கள் தங்கள் மாறுபட்ட ஒலியால், இன்னிசையை மேலும் இனிமை ஆக்கினர்.

மத ஒருமைப்பாட்டிற்குரிய பொது நிலைக்களன் பற்றி அதிகம் பேசப்பட்டது. இதைப்பற்றி என் சொந்தக் கோட் பாட்டை இப்போது நான் சொல்ல விரும்பவில்லை. ஆனால் இந்த ஒருமைப்பாடு ஏதாவது ஒரு மதத்தின் வெற்றியாலும், மற்ற மதங்களின் அழிவாலும் கிடைக்கும் என்று இங்குள்ள யாராவது நம்பினால், அவரிடம் நான், 'சகோதரா! உனது நம்பிக்கை வீண்' என்று சொல்லிக் கொள்கிறேன். கிறிஸ்தவர் இந்துவாகிவிட வேண்டும் என்பது என் எண்ணமா? கடவுள் தடுப்பாராக! அல்லது இந்துவோ பௌத்தரோ கிறிஸ்தவராக வேண்டுமென எண்ணுகிறேனா? கடவுள் தடுப்பாராக!

விதை தரையில் ஊன்றப்பட்டு, மண்ணும் காற்றும் நீரும் அதைச் சுற்றி போடப்படுகின்றன. விதை மண்ணாகவோ, காற்றாகவோ, நீராகவோ ஆகிறதா? இல்லை. அது செடி யாகிறது. தனது வளர்ச்சி நியதிக்கு ஏற்ப அது வளர்கிறது. காற்றையும் மண்ணையும் நீரையும் தனதாக்கிக் கொண்டு,

தனக்கு வேண்டிய சத்துப் பொருளாக மாற்றி, ஒரு செடியாக வளர்கிறது.

மதத்தின் நிலையும் இதுவே. கிறிஸ்தவர் இந்துவாகவோ பௌத்தராகவோ மாற வேண்டியதில்லை. அல்லது இந்து, பௌத்தராகவோ கிறிஸ்தவராகவோ மாற வேண்டியது இல்லை. ஒவ்வொருவரும் மற்ற மதங்களின் நல்ல அம்சங்களைத் தனதாக்கிக்கொண்டு, தன் தனித்தன்மையைப் பாதுகாத்துக்கொண்டு, தன் வளர்ச்சி நியதியின்படி வளர வேண்டும்.

இந்த சர்வமத மகாசபை உலகத்திற்கு எதையாவது எடுத்துக் காட்டியுள்ளது என்றால் அது இதுதான்: புனிதம், தூய்மை, கருணை இவை உலகின் எந்த ஒரு பிரிவுடையவும் தனிச்சொத்து அல்ல என்பதையும், மிகச் சிறந்த ஒவ்வொரு மதப்பிரிவும் பண்புள்ள ஆண்களையும் பெண்களையும் தோற்றுவித்திருக்கிறது என்பதையும் நிரூபித்துள்ளது. இந்தச் சாட்சியங்களுக்கு முன்பு, தன் மதம் மட்டும்தான் தனித்து வாழும், மற்ற மதங்கள் அழிந்துவிடும் என்று யாராவது கனவு காண்பார்களானால் அவர்களைக் குறித்து நான் என் இதய ஆழத்திலிருந்து பச்சாதாபப்படுவதுடன், இனி ஒவ்வொரு மதத்தின் கொடியிலும், 'உதவி செய், சண்டை போடாதே.' 'ஒன்றுபடுத்து, அழிக்காதே.' 'சமரசமும் சாந்தமும் வேண்டும், வேறுபாடு வேண்டாம்' என்று எழுதப்படும் என்று அவருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ௐ

## III. தமிழ்ப் பெருமக்களுக்கு...

சிகாகோவில் சுவாமிஜி வெற்றிபெற்ற செய்தியை அறிந்து இந்தியாவின் பல பகுதிகளிலும் கூட்டங்கள் கூட்டப்பட்டன, பாராட்டுரைகள் வழங்கப்பட்டன. அவை சுவாமிஜிக்கு அனுப்பப்பட்டன. சென்னை இந்துக்கள் அளித்த பாராட்டு தலுக்கே முதலில் பதில் எழுதினார் சுவாமிஜி. அது வருமாறு:

நண்பர்களே, இந்திய சகோதரர்களே, சென்னையைச் சேர்ந்த இந்து சகோதரர்களே!

நமது மதத்திற்காக நான் செய்த சிறிய பணியை நீங்கள் ஒப்புக்கொண்டது எனக்கு மிகுந்த திருப்தியை அளிக்கிறது. தொலைவில், அன்னிய நாட்டில் செய்யப்பட்ட பணியைப் பாராட்டியதற்காகவோ, என்னைக் கௌரவப்படுத்தியதற் காகவோ அல்ல, நமது உயிர்நாடி அழியாமல், ஆதாரம் நிலை குலையாமல் இருக்கிறதே, அதை நினைத்துத்தான் என் உள்ளம் நிறைகிறது.

நமது புண்ணிய பாரதத்தின்மீது புயலுக்குப்பின் புயலாக அன்னிய படையெடுப்புகள் நிகழ்ந்தன; பல நூற்றாண்டுகளாக நமது கவனக் குறைவாலும், நம்மை வெற்றி கொண்டவர்களின் வெறுப்புணர்ச்சியாலும் நமது புராதன ஆர்யாவர்த்தத்தின்[1] பெருமைகள் மங்கவே செய்தன. அந்தக் கட்டிடத்தைத் தாங்கிய உன்னதமான தூண்களும், அழகிய வளைவுகளும், அற்புத மாடங்களும் நூற்றாண்டுகளின் வெள்ளப் பெருக்கில் அடித்துச் செல்லப்பட்டன. எனினும் அதன் உயிர்நாடி நன்றாக இருக் கிறது, இதயம் பழுதுபடவில்லை. இறைவனின் பெருமை மற்றும் உயிர்களிடம் கருணை என்ற அற்புத நினைவுச் சின் னங்கள் எழுந்தோங்கி நிற்கின்ற ஆன்மீக அஸ்திவாரம் எப் போதும்போல் பலமாகவும் அசைக்க முடியாததாகவும்தான் இருக்கிறது.

இந்த மதிப்பும் மரியாதையும் எனக்கல்ல; யாருடைய உபதேசங்கள் இந்தியாவிற்கும் உலகனைத்திற்கும் அளிக்கப் பட்டதோ அவரையே நீங்கள் இதன்மூலம் போற்றியுள்ளீர்கள். அவரது சேவகர்களுள் சிறிதும் தகுதியற்றவன் நான். இருந்தும்

---

1. பாரத நாடு.

அந்த உபதேசங்களைத் தாங்கிச் செல்வதற்கான பேறு எனக்குக் கிடைத்தது, அவரது புகழையே நீங்கள் மதித்துப் போற்றியிருக்கிறீர்கள். அவராலும் அவருடைய உபதேசத் தாலும் வரப்போகின்ற ஆன்மீகப் பேரலையின் ஆரம்பத்தை உங்கள் இயற்கையான ஆழ்ந்த ஆன்மீக உணர்ச்சியால் கண்டு கொண்டீர்கள். அந்த ஆன்மீகப் பேரலை, எதிர்க்க முடியாத சக்தியுடன் வெகுவிரைவில் இந்தியா முழுவதும் பாயப் போகிறது. அதன் ஆற்றல்மிக்க வெள்ளப்பெருக்கு, குறைகளை யும் பலவீனங்களையும் அடித்துச்சென்று, இந்து இனத்தை, இறைவனுடைய அருள்திட்டத்தில் விதிக்கப்பட்ட உயர்ந்த பீடத்தில் ஏற்றிவைக்கப் போகிறது. இந்துக்கள் பல நூற் றாண்டுகளில் மௌனமாக அனுபவித்த கஷ்டங்களின் பய னாக, இந்த ஆன்மீகப் பேரலை பண்டைக்காலத்தில் அவர்கள் அடைந்த பெருமையைவிட இன்னும் அதிகப் பெருமையை அடையச் செய்யப் போகிறது; உலக இனங்களிடையே ஆன்மீக உணர்வு நிறைந்த மனித சமுதாயத்தை உருவாக்கும் மேலான பணியைப் பூர்த்திசெய்யப் போகிறது.

வட இந்தியர்கள் தென்னாட்டினராகிய உங்களுக்கு நன்றி செலுத்த மிகவும் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஏனெ னில் தற்போது இந்தியாவில் நடைபெறுகின்ற செயல்களுக் குத் தூண்டு சக்தி தென்னிந்தியாவிலிருந்தே எழுந்தது. பெருமைமிக்க விளக்கவுரை ஆசிரியர்களும், வரலாறு படைத்த ஆச்சாரியர்களுமான சங்கரர், ராமானுஜர், மத்வர் ஆகியோர் இங்கேதான் அவதரித்தனர். உலகின் ஒவ்வோர் அத்வைதியும் நன்றி செலுத்த வேண்டிய ஸ்ரீசங்கரர், தாழ்த்தப்பட்ட இனத் தினரையும் தன் தெய்வீக ஸ்பரிசத்தால் ஆழ்வார்களாக மாற்றிய பெருமைமிக்க ஸ்ரீராமானுஜர், இந்திய நாடு முழுவதும் உணர்ந்துகொண்ட சக்தியையுடைய ஒரே வடநாட்டு மகானாகிய ஸ்ரீகிருஷ்ண சைதன்யரைப் பின்பற்றுபவர் களாலும் ஒப்புக்கொள்ளப்படுகின்ற தலைமையுடைய பெருமைமிக்க ஸ்ரீமத்வர் போன்றோர் பிறந்தது தென்னிந்தியா வில்தான். இன்றுகூட வாரணாசியின் பெரும் சிறப்புக் களிடையே வெற்றிச் சின்னத்தை ஏந்தியிருப்பது தென்னாடே. இமயச் சிகரங்களில் இருக்கும் திருக்கோயில்களை நிர்வகிப் பவர்கள் உங்கள் துறவியரே. இந்த மகான்களின் ரத்தம் உங்கள் நரம்புகளில் ஓடுகிறது, இந்த ஆச்சாரியர்களின் அருளைப் பெற்றவர்கள் நீங்கள். இத்தகைய நீங்கள் பகவான்

ஸ்ரீராமகிருஷ்ணரின் செய்தியையும் போற்றுவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

தென்னாடே வேதக் கல்வியின் களஞ்சியமாக இருந்திருக்கிறது. மூடத்தனமான அறியாமையால், மாறுபட்ட பல கருத்துக்களைப் பலமுறை அழுத்திக் கூறினாலும், இந்துமதத்தின் பல பிரிவுகளுக்கும் முதுகெலும்பாக இன்றும் வேதங்களே உள்ளன. இதை நினைவில் இருத்திக் கொள்ளுங்கள்.

வேதங்களின் சம்ஹிதைகளும் பிராம்மணங்களும் மனிதஇன இயல் வல்லுனர்களுக்கும் (Ethnologist), மொழி இயல் வல்லுனர்களுக்கும் (Philologist) எவ்வளவோ அரிய சிறப்புகள் உடையவையாக இருக்கலாம். வேள்விகளில் ஓதப் படுகின்ற அக்னிமீலே, இஷேத்வோர்ஜேத்வா, அல்லது சன்னோ தேவீரபீஷ்டயே[1] போன்ற மந்திரங்களும் ஆஹுதிகளும் எவ்வளவுதான் விரும்பிய பலன்களைக் கொடுத்தாலும், அவை போகத்தின் வழியிலேயே அமைந்திருக்கின்றன. அவை முக்தியை அளிக்கும் என்று இதுவரை யாரும் கூறவில்லை. ஆன்ம லாபத்திற்கான, முக்திக்கான வழியைக் கூறுகின்ற ஞான காண்டமாகிய ஆரண்யகங்களே, அந்த ஈடிணையற்ற சுருதிகளே இந்தியாவை எப்போதும் ஆட்சி செய்துவந்தன; இனியும் அவையே ஆளும்.

நவீன இந்து இளைஞன் 'சனதான மத'த்தின் திகைப் பூட்டும் போக்குகளையும் உட்பிரிவுகளையும் கண்டு கலங்கித் தன்னையே இழக்கிறான். அது தன் கடவுளை 'அணோரணீயான் மஹதோ மஹீயான்'[2] என்று விளக்குகிறது. உலகம் தழுவியதாக இருப்பதில் அந்த மதம், அது கூறுகின்ற கடவுளின் பிரதிபிம்பம் போலவே இருப்பதைக் காண அவன் தவறிவிடுகிறான். முன் அபிப்பிராயங்கள் மற்றும் பாரபட்சக் கருத்துக்களின் காரணமாக அவனால் இத்தகைய பரந்த நோக்கம் உடைய ஒரே மதத்தின் உண்மைப் பொருளை உணர்ந்து கொள்ள முடியவில்லை. இருளில் தட்டுத் தடுமாறி, வடிகட்டின உலகாயதத்தைத் தவிர வேறொன்றும் அறியாத பிற நாட்டினரிடமிருந்து ஆன்மீக உண்மையைக் கடன் வாங்குகிறான் அவன். தன் முன்னோர்களின் மதத்தைப் புரிந்துகொள்ள

---

1. முறையே ரிக்வேத (1.1.1), யஜுர்வேத (1.1.1), அதர்வவேத (1.1.1) மந்திரங்கள்.
2. அணுவிற்கு அணுவானவன், பெரியதில் பெரியவன்.
—கடோபநிடதம் 1.2.20

முயற்சிக்கிறான், அவனால் முடியவில்லை. எனவே அந்தத் தேடலையே விட்டுவிட்டு, நம்பிக்கை இழந்து ஆஜ்ஞேய வாதியாகிறான்; அல்லது தன்னிடம் பதிந்துள்ள மதச் சார்பு களை வளர்க்க வழி தெரியாமல், கீழை நாட்டுச் சுவையுடன் கூடிய மேலை நாட்டு உலகாயதக் கொள்கைகளான பலவித பானங்களை அஜாக்கிரதையாகப் பருகி, 'பரியந்தி மூடா அந் தேனைவ நீயமானா யதாந்தா:—குருடர்களால் வழி நடத்தப் பட்ட குருடர்கள்போல் முட்டாள்கள் அங்கும் இங்கும் தடு மாறிச் செல்கின்றனர்'[1] என்ற வேதவாக்கை மெய்ப்பிக்கிறான். யாருடைய ஆன்மீக இயல்பு, சத்குருவின் உயிரூட்டும் சக்தியால் ஸ்பரிசிக்கப்பட்டு மலர்ச்சியடையுமோ, அவர்கள் மட்டுமே நற்கதி பெற முடியும்.

பகவான் பாஷ்யகாரர் அற்புதமாகவே கூறியுள்ளார்:

துர்லபம் த்ரயமேவைதத் தேவானுக்ரஹஹேதுகம் |
மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷ ஸம்ச்ரய: ||[2]

—மானிடப் பிறவி, முக்தியில் விருப்பம், மாமனிதர்களின் கூட்டுறவு இந்த மூன்றும் கிடைப்பது அரிது. தெய்வங்களின் அருளால்தான் இவற்றை அடைய முடியும்.

பரமாணு, த்வயாணு, த்ரசரேணு[3] போன்ற அற்புதக் கொள்கைகளை அளித்த வைசேஷிகர்களின் கூரிய பகுப்பு முறை; அதைவிட ஆச்சரியமான நையாயிகர்களின்[4] ஜாதி, த்ரவ்ய, குண, ஸமவாய[5] வாதங்கள் மற்றும் விளக்கங்கள்; பரிணாம வாதத்தின் தந்தையராகிய சாங்கியர்களின் ஏற்றமிகு கொள்கைகள்; இந்த ஆராய்ச்சிகளின் முடிவாகக் கனிந்த கனி யாகிய வியாச சூத்திரங்கள்—மனித மனம் பகுத்தும் தொகுத்தும் செய்த இத்தகைய பல ஆராய்ச்சிகளுக்கு அடிப்படையாக இன்றும் திகழ்வது சுருதிகளே. பௌத்தர்களும் சமணர்களும் எழுதியிருக்கும் தத்துவ சாஸ்திர ஆராய்ச்சி நூல்களிலும் சுருதி களின் உதவி ஒருபோதும் மறுக்கப்படவில்லை. சில பௌத்தப் பிரிவுகளும், பெரும்பாலான சமண நூல்களும் சுருதிகளைப் பிரமாணமாக முற்றிலும் ஒப்புக்கொள்கின்றன; ஆனால்

---

1. கடோபநிடதம், 1. 2. 5.
2. விவேக சூடாமணி, 3.
3. அணுக்கள், இரு அணுக்களால் ஆனவை, மூன்று அணுக்களால் ஆனவை.
4. நியாயம், வைசேஷிகம் என்பவை இந்து மதத்தின் ஆறு தத்துவப் பிரிவுகளைச் சேர்ந்தவை.
5. வம்ச பரம்பரை, பொருள், குணம், பிரிக்க முடியாத தன்மை.

சிலவற்றை, ஹிம்சக சுருதிகள் அதாவது பிராமணர்களால் ஏற்பட்ட இடைச்செருகல்கள் என்று கூறி ஒதுக்கி விடுகின்றன. சமீபத்தில் காலஞ்சென்ற மகானாகிய ஸ்ரீதயானந்த சரஸ்வதி சுவாமிகளும்[1] இதே கருத்தைத்தான் கொண்டிருந்தார்.

முற்காலத்திலும் சரி, தற்காலத்திலும் சரி, இந்தியாவின் சிந்தனைகள் எந்தத் தத்துவ முறையை மையமாகக் கொண்டுள்ளன என்று ஒருவரைக் கேட்டால், பல்வேறு பிரிவுகளிடையே இந்து மதத்தின் உண்மையான முதுகெலும்பாகத் திகழ்வது எது என்று ஒருவர் அறிந்துகொள்ள விரும்பினால், அது வேத வியாசரின் சூத்திரங்களே என்று சுட்டிக்காட்டலாம். இதை யாரும் மறுக்க முடியாது.

ஒருவன் விண்ணிலிருந்து இறங்கிய புண்ணிய நதியின் இனிய இசையுடன் கலந்து, இதயத் துடிப்பையும் நிறுத்தும் அளவிற்கு பயபக்தி ஊட்டும் இமாலய வனங்களில், 'அஸ்தி, பாதி, ப்ரியம்'[2] என்று முழங்கும் அத்வைதச் சிங்கத்தின் இடி முழக்கக் குரலைக் கேட்கலாம்; அல்லது பிருந்தாவனத்தின் அழகிய சோலைகளில் பியமும் பிதமும்[3] இனிமையாகப் பாடும் குரலைக் கேட்கலாம்; வாரணாசியிலுள்ள மடங்களின் அமைதியில் தியானத்தில் ஆழ்கலாம்; அல்லது நதியா தீர்க்க தரிசியினுடைய[4] சீடர்களின் ஆனந்தப் பரவச நடனங்களில் ஆடிக் களிக்கலாம்; வடகலை, தென்கலைப்[5] பிரிவுகளுடன் கூடிய விசிஷ்டாத்வைத நெறியின் ஆச்சாரியரின் திருவடிகளில் சரண் புகலாம்; அல்லது மாத்வ சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஆச்சாரியர்களின் உபதேசத்தைப் பக்தி சிரத்தையுடன் கேட்கலாம்; லௌகீக சீக்கியர்களின் போர்முழக்கமான 'வா குருஜீ ஃபட்டே'[6] என்பதைக் கேட்கலாம்; அல்லது உதாசிகளும் நிர்மலர்களும் கிரந்த சாகிப்பைக்[7] குறித்து நிகழ்த்தும்

---

1. ஆரிய சமாஜத்தை உருவாக்கியவர்.
2. அஸ்தி பாதி ப்ரியம் ரூபம் நாம சேத்யம்ச பஞ்சகம் |
ஆத்ய த்ரயம் ப்ரஹ்ம ரூபம் ஜகத்ரூபம் ததோ த்வயம் ||
—இருத்தல் (ஸத்), ஒளிர்தல் (சித்), இன்பம் தருதல் (ஆனந்தம்), உருவம் (ரூபம்), பெயர் (நாமம்) என்ற ஐந்தும் ஒவ்வொரு பொருளுடையவும் ஐந்து அம்சங்கள். இவற்றுள் முதல் மூன்றும் பிரம்ம இயல்புகள், இறுதி இரண்டும் உலக இயல்பு.
3. இரு பறவைகள்.
4. ஸ்ரீகிருஷ்ண சைதன்யர். அவர் பிறந்தது வங்கத்திலுள்ள நதியா என்ற சிற்றூர்.
5. ராமானுஜ சம்பிரதாயத்தின் இரண்டு பிரிவுகள்.
6. குருவிற்கு வெற்றி.
7. சீக்கியர்களின் புனித நூல்.

சொற்பொழிவுகளைக் கேட்கலாம்; கபீர்தாசரின் துறவிச் சீடர்களை 'சத் சாகிப்' என்று சொல்லி வணங்கி, அவர்களின் 'சாகிகள்' எனப்படும் பஜனைகளைக் கேட்டு மகிழலாம்; ராஜபுதனத்தின் சீர்திருத்தவாதியான தாதுவின் வியக்கத்தக்க ஞான நூல்களைப் படித்து உணரலாம்; அல்லது அவரது அரச சீடரான சுந்தர தாசரின் நூல்கள்முதல் அவர்களின் வழிவந்த மகானான நிச்சல தாசரால் அருளப்பட்டதும், கடந்த முன்னூறு வருடங்களாக இந்தியாவில் உள்ள எந்த மொழியிலும் எழுதப் பட்ட எந்த நூலையும்விட அதிகச் செல்வாக்கு உடையதும், புகழ் மிக்கதுமான விசார சாகரம் வரையுள்ள நூல்களைக் கற்றுணரலாம்; அல்லது வட இந்தியாவிலுள்ள பங்கிமேத்தர் வகுப்பைச் சேர்ந்த ஒருவரிடம் அவரது குருவான லால்குருவின் உபதேசங்களை விரித்துரைக்குமாறு கேட்கலாம். இந்தப் பல்வேறு குருமார்களுக்கும் பிரிவுகளுக்கும் அடிப்படையாகத் திகழ்வது சுருதியே. அந்தச் சுருதியின் தெய்வீக விளக்கவுரையே பகவத் கீதை, சாரீரக சூத்திரங்கள்[1] அதன் தொகுக்கப்பட்ட தத்துவ முறை. இந்தியாவில் பரமஹம்ச பரிவ்ராஜக ஆச்சாரி யர்கள் முதல் லால்குருவின் தாழ்ந்த ஏழை மேத்தர் சீடர்கள்வரை அனைவரின் நெறிகளும் சுருதியின் பல்வேறு வடிவங்களே.

ஒன்றுக்கொன்று சிறிது மாறுபட்டவையான துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்று மூன்று விளக்கவுரை களுடன் கூடிய மூன்று பிரஸ்தானங்களும்[2] இந்து மதத்திற்கு அடிப்படையாகத் திகழ்கின்றன. வேதங்களின் சம்ஹிதைப் பகுதிகளாகிய பழமையான நாராசம்ஸியின் (கதைப் பகுதி) தற்கால வடிவங்களே புராணங்கள். வேதங்களின் கர்மகாண்டப் பகுதியாகிய பிராம்மணங்களின் (சடங்குப் பகுதி) தற்கால அமைப்பாகிய தந்திரங்கள் கிரியைகளுக்கு ஆதாரமாக உள்ளன. இவ்வாறு இந்த மூன்று பிரஸ்தானங்களும் எல்லா நெறியினருக்கும் பொது அடிப்படையாக உள்ளன. ஆனால் புராணங்கள் மற்றும் தந்திரங்களைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு பிரிவும் தனக்கென்று தனி நூல்களைக் கொண்டுள்ளன.

தந்திரங்கள், வைதீகச் சடங்குகளின் நவீன வடிவம் என்பதை ஏற்கனவே கூறினோம். ஆதலால் அவசரப்பட்டு

1. பிரம்ம சூத்திரங்கள் மற்றும் வியாச சூத்திரங்கள் என்றும் அழைக்கப் படுகின்றன.
2. உபநிடதங்கள், கீதை, பிரம்ம சூத்திரங்கள்.

அவற்றைப்பற்றித் தவறான முடிவுகளுக்கு வருவதற்குமுன், அவற்றுடன் பிராம்மணங்களை, குறிப்பாக அத்வர்யு பகுதியைச் சேர்த்துப் படிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். தந்திரங்களில் வரும் மந்திரங்களுள் பலவும் வார்த்தைக்கு வார்த்தை அப்படியே பிராம்மணங்களிலிருந்து எடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களைத்[1] தவிர, இமய மலை முதல் குமரிமுனைவரையில் பழக்கத்திலுள்ள பல்வேறு கிரியைகளும் சடங்குகளும் தந்திரங்களிலிருந்து எடுக்கப் பட்டவை; அவையே சாக்தர்கள், சைவர்கள், வைணவர்கள் மற்றும் பல பிரிவினரின் பூஜைமுறைகளுக்கு அடிப்படையாக உள்ளன. அவ்வளவு ஆதிக்கம் பெற்றவை தந்திரங்கள்.

இந்துக்கள் எல்லோரும் தங்கள் மதத்தின் ஆதாரங்களான இவற்றை முற்றிலும் அறிந்துள்ளனர் என்று நான் கூறவில்லை. பலர், முக்கியமாகத் தெற்கு வங்காளத்தில் இந்தப் பெரும் பிரிவுகள், அமைப்புக்கள், ஏன், இவற்றின் பெயர்களைக்கூடக் கேட்டிருக்க மாட்டார்கள். ஆனால் அறிந்தோ அறியாமலோ, இந்த மூன்று பிரஸ்தானங்களில் வகுக்கப்பட்டிருக்கும் திட்டத்தையே அவர்கள் செயல்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

மாறாக, இந்தி பேசப்படும் இடங்களில் மிகத் தாழ்ந்த வகுப்பினர்கூட, தென் வங்காளத்திலுள்ள உயர்ந்த வகுப்புகளைச் சேர்ந்த பலரைவிட, வேதாந்த மதத்தைப்பற்றி அதிக அறிவு உடையவர்களாக இருக்கிறார்கள்.

அதற்குக் காரணம் என்ன?

மிதிலையின் மண்ணிலிருந்து நவத்வீபத்திற்குக் கொண்டு வரப்பட்டதும், சிரோமணி, கதாதரர், ஜகதீசர் போன்ற எத்தனையோ பேரின் அறிவொளியால் வளர்க்கப்பட்டதும், தர்க்க சாஸ்திரக் கோட்பாடுகளில் உலகிலுள்ள மற்ற எல்லா முறைகளையும்விட சில அம்சங்களில் மேலானதும், தெளிவான, பொருத்தமான, அற்புத அழகு வாய்ந்த மொழியில் விளக்கப் பட்டதுமாக வங்காளத்தின் நியாய சாஸ்திரம் திகழ்கிறது. அது ஹிந்துஸ்தானம் முழுவதும் பெரிதும் மதிக்கப்பட்டு, படிக்கப்படுகிறது. ஆனால் அந்தோ! வேதக் கல்வி, வங்காளத்தில் வருந்தத்தக்க விதமாக அசட்டை செய்யப்பட்டு வருகிறது. சமீபகாலம் வரை பதஞ்ஜலி முனிவரின் மஹாபாஷ்யத்தைக்

---

1. வேதங்கள் கூறும் விதிகளும், வேதங்களுக்கு முரணில்லாமல் எழுதப் பட்ட பிற விதிகளும்.

கற்பிப்பதற்கு ஒருவர்கூடக் கிடைக்கவில்லை. முடிவில்லாத 'அவச்சின்னங்களையும், அவச்சேதகங்களையும்'[1] மீறி ஒரே ஒருமுறை மாபெரும் மேதையான ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் தோன்றினார். அப்போது வங்காளத்தின் மதத் துறையில் இருந்த மந்தநிலை உலுக்கப்பட்டு, அது சிறிதுகாலம் இந்தியாவின் மற்ற பகுதிகளின் மத வாழ்க்கையுடன் தொடர்பு வைத்திருந்தது.

ஸ்ரீசைதன்யர் ஒரு பாரதியிடம் சன்னியாச தீட்சை பெற்று அவரும் ஒரு பாரதியாகத் திகழ்ந்தும், மாதவேந்திர புரியின்[2] மூலமாகத்தான் அவரது ஆன்மீகப் பேருணர்வு முதன்முத லாக விழிப்படைந்தது. இது கவனித்தற்குரிய ஒன்று.

வங்காளத்தின் ஆன்மீக உணர்வைத் தட்டி எழுப்புவதில் புரி சன்னியாசிகளுக்கு ஒரு விசேஷப் பங்கு இருப்பதாகத் தோன்றுகிறது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், தோதாபுரி என்ற துறவியிடமிருந்தே சன்னியாச தீட்சை பெற்றார்.

வியாச சூத்திரங்களுக்கு ஸ்ரீசைதன்யர் எழுதிய விளக்க வுரை தொலைந்து போயிருக்க வேண்டும், அல்லது இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. அவரது சீடர்கள் தென்னாட்டு மாத்வ நெறிகளுடன் சேர்ந்தனர்; ஈடிணையற்ற மகான்களான ரூப, சனாதன, ஜீவ கோசுவாமிகளின் இடத்தைப் படிப்படியாக பாபாஜிக்கள்[3] வகிக்கலாயினர். சைதன்யரின் மாபெரும் இயக்கம் வேகமாக நிலைகுலையத் தொடங்கியது. ஆனால் சமீபகாலங்களில் அதில் மறுமலர்ச்சி ஏற்படுவதற்கான அறி குறிகள் தெரிகின்றன. இழந்த மகிமையை அது மீண்டும் அடை யும் என்று நம்புவோம்.

சைதன்யரின் தாக்கம் இந்தியா முழுவதிலும் உள்ளது. பக்தி நெறி கடைப்பிடிக்கப்படும் இடங்களில் எல்லாம் அவர் ஏற்றுக்கொள்ளப்படுகிறார், படிக்கப்படுகிறார், வழிபடப்படு கிறார். வல்லபாச்சாரியாரின் நெறி சைதன்ய நெறியின் ஒரு பிரிவுதான் என்று நான் நம்புகிறேன். அதற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றன. ஆனால் சைதன்யரின் சீடர்கள் என்று அழைக்கப்படும் பலருக்கு அவரது சக்தி எப்படி இந்தியா முழுவதும் இன்னும் இயங்கி வருகிறது என்ற விஷயம்

---

1. நியாயத் தத்துவத்தில் வரும் சொற்றொடர்கள்; பானை என்ற உதாரணத்தை எடுத்துக்கொண்டால், பானை அவச்சின்னம், பானைத்தன்மை அவச்சேதகம்.

2. ஆதிசங்கரர் துறவியருக்கென்று பத்து பட்டப் பெயர்களை வகுத்தார். பாரதியும் புரியும் அவற்றுள் இரண்டாகும்.

3. வைணவ சாதுக்கள்.

தெரியாது. எப்படித் தெரியும்? சைதன்யர் செருப்பின்றி இந்தியா முழுவதும் நடந்து வீடுவீடாகச் சென்று போதனைகள் செய்தார்; இறைவனை நேசிக்கும்படி சண்டாளர் வரையுள்ள அனைவரையும் கெஞ்சி வேண்டினார். அவரது சீடர்களோ இன்று மடாதிபதிகளாக அல்லவா ஆகிவிட்டார்கள்!

இந்தியாவின் மற்ற பகுதிகளிலுள்ள மத வாழ்வின் தொடர்பிலிருந்து வங்காளம் துண்டிக்கப்பட்டதற்கு மற்றொரு காரணம், அங்கு நிலவுகின்ற விசித்திரமானதும் வைதிக நெறிக்குப் புறம்பானதுமான பரம்பரைக் குலகுரு முறை.

எல்லாவற்றையும்விட மிகவும் முக்கியமான காரணம், இந்தியாவின் மிக உயர்ந்த ஆன்மீகப் பண்பாட்டின் பிரதிநிதிகளாகவும் உறைவிடமாகவும் இன்றும் விளங்கும் மகத்தான துறவுச் சங்கங்கள் வங்காளத்தில் ஏற்படாததுதான்.

வங்காளத்தில் உயர்வகுப்பினர் ஒருபோதும் தியாகத்தை (துறவை) விரும்பவில்லை, இன்பநுகர்ச்சியையே அவர்கள் நாடினர். ஆன்மீக விஷயங்களில் ஆழ்ந்த உள்ளுணர்வு அவர்களுக்கு எப்படி ஏற்படும்? 'த்யாகேனைகே அம்ருதத்வ மானசு:—தியாகம் ஒன்றினாலேயே மரணமிலாப் பெருநிலை அடையப்படுகிறது.'[1] அது எப்படி வேறுவிதமாக இருக்க முடியும்?

மாறாக, இந்தி பேசும் பகுதிகளில் எல்லாம், ஆன்மீக ஒளி பெற்ற தியாகிகளான குருமார்கள், மிகுந்த செல்வாக்குடன் வேதாந்தத்தின் கோட்பாடுகளை வீட்டுக்கு வீடு பிரச்சாரம் செய்தனர். அதிலும் முக்கியமாக, பஞ்சாப் மன்னனான ரஞ்சத் சிங் அரசாண்ட காலத்தில் தியாகநெறிக்கு ஏற்பட்ட எழுச்சியால் வேதாந்தத் தத்துவத்தின் சிறந்த உபதேசங்கள் மிகமிகத் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களுக்கும் கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. தன் ராட்டையின் சக்கரங்கள்கூட 'ஸோஹம், ஸோஹம்'[2] என்றே சொல்கிறது என்று, உண்மையான பெருமையுடன் ஒரு பஞ்சாபி குடியானவப் பெண் பாடுகிறாள். துறவி உடை உடுத்திய மேத்தர் வகுப்புத் தியாகிகள் ரிஷிகேசக் காடுகளில் வேதாந்தம் படிப்பதை நான் பார்த்திருக்கிறேன். உயர் வகுப்பினர் பலர் அவர்களிடம் மகிழ்ச்சியுடன் பாடம் கற்க இசைவார்கள். ஏன் கூடாது? 'அந்த்யாதபி பரம் தர்மம்—

1. கைவல்ய உபநிடதம், 1.3
2. நானே அது, அதாவது நானே பிரம்மம்.

தாழ்ந்த குலத்தில் பிறந்தவனிடமிருந்தும்கூட மேலான ஞானத்தைப் பெற முடியும்.'[1]

இவ்வாறு வடமேற்குப் பகுதியும் பஞ்சாப் பகுதியும் மதக் கல்வியில் வங்காளம், பம்பாய், சென்னை பகுதிகளைவிடப் பெரும் அளவுக்கு முன்னேறியிருக்கிறது. எப்போதும் பயணம் செய்து கொண்டிருக்கின்ற பல்வேறு சம்பிரதாயங்களைச் சேர்ந்த தியாகிகளான தசநாமிகள்,[2] வைராகிகள், பந்திகள் என்று எல்லா துறவியரும் வீடுதோறும் மதத்தை வழங்குகிறார்கள். அதற்காக அவர்கள் பெறுவது ஒரு சப்பாத்தித் துண்டு மட்டுமே. அவர்களுள் பலரும் எவ்வளவு பெருந்தன்மை உடையவர்களாக, சுயநலம் அற்றவர்களாக இருக்கிறார்கள்! கச்சு பந்திகளைச் (எந்தத் தனி நெறியிலும் சேராதவர்கள்) சேர்ந்த ஒரு துறவி இருக்கிறார். அவர் ராஜபுதனம் முழுவதிலும் நூற்றுக்கணக்கான பள்ளிகளும் சத்திரங்களும் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்திருக்கிறார்; காடுகளில் மருத்துவ மனைகளை ஏற்படுத்தியிருக்கிறார்; இமயமலைகளின் குறுகிய பள்ளத்தாக்குகளின்மேல் பாலங்கள் கட்டியிருக்கிறார். இவர் தம் கைகளால் காசைத் தொடுவதில்லை. ஒரு கம்பளியைத் தவிர அவருக்குச் சொந்தமானது வேறு ஒன்றும் இல்லை, அதனால் அவருக்கு 'கம்பளிவாலா சுவாமி' என்னும் புனை பெயரே உண்டாயிற்று. வீடுவீடாகப் பிச்சையெடுத்தே உண்கிறார். முழு உணவையும்கூட ஒரே வீட்டிலிருந்து அவர் பெறுவதில்லை என்று கேள்விப்பட்டேன், ஏனெனில் அது தமது சுமையை ஒரே இல்லறத்தானின்மீது வைப்பதாகுமாம்! இவர் ஆயிரத்தில் ஒருவர். இவர்களைப் போன்ற நடமாடும் தெய்வங்கள், தேவ மனிதர்கள், இந்தியாவில் வாழ்ந்து, ஊடுருவ முடியாத கோட்டை மதில்களைப்போல் நமது புராதனமான சனாதன தர்மத்தைக் காப்பாற்றிவரும் வரையில், அது அழியும் என்று நினைக்கிறீர்களா?

இங்கு (அமெரிக்கா) பாதிரிகள் வருடத்திற்கு முப்பதினாயிரம், நாற்பதினாயிரம், ஐம்பதினாயிரம், ஏன், தொண்ணூறாயிரம் கூடச் சம்பளம் பெறுகிறார்கள்; வேலை நேரம் ஞாயிற்றுக்கிழமைகளில் இரண்டு மணிநேரச் சொற்பொழிவு மட்டுமே, அதுவும் வருடத்தில் ஆறுமாதங்களுக்குத்தான்.

---

1. *மனு நீதி*, 2. 238.
2. சங்கரர் தோற்றுவித்த பத்துத் துறவு நெறியினர்.

தங்கள் மதத்திற்காக அவர்கள் எவ்வளவு கோடிகோடியாகச் செலவு செய்கிறார்கள், பாருங்கள். ஆனால் 'கம்பளிவாலா' சுவாமிகள் போன்ற முற்றிலும் சுயநலமற்ற தெய்வீக புருஷர் களைச் சோம்பேறி நாடோடிகள் என்று விமர்சிக்க வங்க நாட்டு இளைஞர்கள் கற்பிக்கப்படுகிறார்கள். 'மத்பக்தானாம் ச யே **பக்**தாஸ்தே மே **பக்**தமா மதா:—என் பக்தர்களிடம் பக்தி பூண்டவர்களே பக்தர்களுள் சிறந்தவர்களாகக் கருதப்படு கிறார்கள்.'

ஓர் உதாரணம்: சிறிதும் படிப்பறிவற்ற ஒரு வைராகியை எடுத்துக் கொள்வோம். அவர்கூட ஒரு கிராமத்திற்குச் சென் றால் துளசிதாசரின் நூலிலிருந்தோ, சைதன்ய சரிதாமிருதத் திலிருந்தோ, தென்னிந்திய ஆழ்வார்களின் பாசுரங்களி லிருந்தோ தமக்குத் தெரிந்ததைக் கிராமவாசிகளுக்குப் போதிக்கத் தம்மால் இயன்றவரையில் முயற்சி செய்கிறார். அது கொஞ்சமாவது நன்மை செய்வதாகும் அல்லவா? இதற் காக அவருக்குக் கிடைப்பதென்னவோ ஒரு சப்பாத்தித் துண்டு அல்லது ஒரு முழம் துணி. என் சகோதரா, கருணை யின்றி அவர்களைக் குறை கூறுமுன், உன்னுடைய நாட்டின் ஏழைச் சகோதர மக்களுக்காக நீ எவ்வளவு உதவி செய்கிறாய் என்று நினைத்துப் பார். யாருடைய செலவில் நீ உன் கல்வி யறிவைப் பெறுகிறாயோ, யாரை வெறுத்து, கசக்கிப் பிழிந்து உன் இடத்தைக் காப்பாற்றிக் கொண்டு, 'பாபாஜிகளெல்லாம் சோம்பேறிகள்' என்று உனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கிறாயோ, அந்த ஏழை களுக்கு நீ என்ன செய்கிறாய்? யோசித்துப் பார்.

இந்து மதத்தின் ஒரு புதிய முன்னேற்றம் என்று தாங்கள் கருதுவதை வங்காளத்திலுள்ள உங்கள் சகோதரர்கள் குறை கூறுகிறார்கள். அவர்கள் சொல்லலாம். ஏனெனில் இந்து மதம் இப்போதுதான் வங்காளத்தினுள் ஊடுருவிக் கொண்டிருக் கிறது. அங்கே இதுவரை சாப்பிடுவது, குடிப்பது, திருமணம் போன்ற வட்டார வழக்குகளின் ஒரு மூட்டையே மதம் என்று கருதப்பட்டு வந்திருக்கிறது.

இந்தியா முழுவதிலும் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்கள் பரப்பிவரும் இந்து மதக் கருத்துக்கள் 'உண்மை சாஸ்திரங்' களை அடிப்படையாகக் கொண்டதா, இல்லையா என்ற பெரிய விஷயத்தைப் பற்றி விவாதிக்க இந்தக் குறுகிய கடிதத்தில் இடம் இல்லை. ஆனால் எங்களை விமர்சிப்பவர்களுக்காகச்

சில குறிப்புகளைத் தருகிறேன். எங்களுடைய நிலையைப் புரிந்து கொள்வதற்கு அவை அவர்களுக்கு உதவக்கூடும்.

முதலாவது, இந்து மதத்தைப் பற்றிய சரியான கருத்தை, காசிதாசர் அல்லது கிருத்திவாசருடைய நூல்களிலிருந்து பெற முடியும் என்று நான் ஒருபோதும் வாதம் செய்யவில்லை. அவர்களுடைய வார்த்தைகள் 'அமுதம் போன்றவை'தான், அவற்றைக் கேட்பவர்களும் 'புண்ணியவான்'களே. ஆனால் அதற்கு வேதங்களையும் தரிசனங்களையும் கற்று உண்மையாக அவற்றை அறிந்த பண்டிதர்களையும், மகா ஆச்சாரியர்களையும், இந்தியா முழுவதும் இருக்கும் அவர்களின் சீடர்களையும் அணுக வேண்டும்.

சகோதரர்களே, நீங்கள் கௌதம சூத்திரங்களிலிருந்து ஆரம்பியுங்கள், வாத்ஸ்யாயனரின் விளக்கவுரைகளின் துணையுடன் ஆப்தர்களைக் (தெய்வப் பேருணர்வு பெற்றவர்கள்) குறித்து கௌதமரின் கொள்கைகளைப் படியுங்கள். சபரர் முதலியவர்களின் விளக்கவுரைகளைப் படித்து, மீமாம்சகக் கருத்துக்களை அறியுங்கள். அவர்கள் அலௌகிக ப்ரத்யக்ஷம் (புலன்கடந்த அனுபூதி) பற்றி என்ன சொல்கிறார்கள், ஆப்தர்கள் என்பவர்கள் யார், எல்லோரும் ஆப்தர்கள் ஆக முடியுமா, முடியாதா, அப்படிப்பட்ட ஆப்தர்களின் வார்த்தைகளாக இருப்பதால்தான் வேதங்கள் பிரமாணமாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றனவா என்ற விஷயங்களை அறியுங்கள். மேலும், யஜுர் வேதத்திற்கு மஹீதரர் எழுதிய முன்னுரையைப் படிக்க உங்களுக்கு நேரம் இருக்குமானால், வேதங்கள் மனிதனுடைய அக வாழ்க்கையின் விதிகள், ஆகையால் அவை நிலையானவை போன்ற கருத்துக்கள் இன்னும் அதிகத் தெளிவாக அங்கே விளக்கப்பட்டிருப்பதைக் காண்பீர்கள்.

படைப்பு நிரந்தரமானது என்ற கோட்பாடு இந்து மதத்தில் மட்டுமல்ல, பௌத்த சமண மதங்களிலும் ஒரு முக்கிய இடத்தை வகிக்கிறது.

இந்தியாவிலுள்ள மதப் பிரிவுகளை எல்லாம் ஏறக்குறைய ஞானநெறி, பக்திநெறி என்ற இரண்டாகப் பிரித்துவிடலாம். சங்கரரின் பிரம்ம சூத்திர விரிவுரையை நீங்கள் படித்துப் பார்த்தால், முன்னுரையில் அவர் நிரபேக்ஷத்வம் (ஞானத்தின் எல்லாம் கடந்த தன்மை)பற்றி முழுமையாக ஆராய்ச்சி செய்திருப்பதைக் காண்பீர்கள். பிரம்ம ஞானமோ முக்தியோ கிரியைகள், மதம், ஜாதி, நிறம், கோட்பாடு ஆகிய எதையும் பொறுத்ததல்ல

என்பதே அதன் முடிவு. பூரண நன்னெறிப் பண்பாடான நான்கு அடிப்படை சாதனைகளைப்[1] பெற்றிருக்கின்ற யாரும் அதைப் பெற முடியும்.

பக்தர்களைப் பொறுத்தவரை, முக்தி பெற குலம், நாடு, பால்வேறுபாடு, ஏன் மனிதப்பிறவிகூடத் தேவையில்லை என்று வெளிப்படையாக அத்தாட்சி நூல்களே தெரிவிப்பதை வங்காள விமர்சகர்கள்கூட நன்றாக அறிவார்கள். வேண்டியதெல்லாம் பக்தி, பக்தி ஒன்றுதான்.

ஞானம், பக்தி இரண்டுமே கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டவை என்றுதான் எங்கும் போதிக்கப்படுகின்றன. அதன்படி, முக்திக்கு மதம், நாடு ஆகியவை தடை என்று எந்த அத்தாட்சி நூலும் கூறவில்லை. 'அந்தரா சாபி து தத்ருஷ்டே'[2] என்ற வியாச சூத்திரத்திற்கு சங்கரர், ராமானுஜர், மத்வர் ஆகியோரின் விவாதங்களைப் படியுங்கள்.

எல்லா உபநிடதங்களையும் படித்துப் பாருங்கள், சம்ஹிதைகளைப் படியுங்கள், முக்தியைப் பற்றி மற்ற மதங்கள் கூறுவதைப் போன்ற குறுகிய கருத்துக்களை எங்குமே நீங்கள் காண முடியாது. பிற மதங்களிடம் சகிப்புத் தன்மையோ நமது மதத்தில் எங்கும் உள்ளது; அத்வர்யு வேத சம்ஹிதைகளிலும் கூட, என் ஞாபகம் சரியாக இருந்தால், நாற்பதாம் அத்தியாயத்தில் மூன்று அல்லது நான்காம் பாடல் 'ந புத்திபேதம்

---

1. சாதன சதுஷ்டயம் (நான்கு அடிப்படை சாதனைகள்)—
   i. நித்யாநித்ய வஸ்து விவேகம்:
   நிலையான-நிலையற்றவற்றைப் பிரித்தறியும் பகுத்தறிவு
   ii. இஹாமுத்ர பலபோக விராகம்:
   இந்த உலகிலும் மறு உலகங்களிலும் சுகபோக நாட்டத்தில் விருப்பமின்மை.
   iii. சமாதிஷட்க ஸம்பத்தி:
   சமம் முதலான ஆறு குணங்கள்—
   1. சமம்-மன அமைதி; 2. தமம்-புலனடக்கம்; 3. உபரதி-மனம் புறப் பொருட்களை நாடாதிருத்தல்; 4. திதிக்ஷை-பொறுமை; 5. சிரத்தை-நம்பிக்கை; 6. ஸமாதானம்-புத்தி பிரம்மத்தில் நிலைத்திருத்தல்.
   —(பார்க்க: விவேக சூடாமணி, 19–27)
   iv. முமுக்ஷுத்வம்-மோட்சத்தில் நாட்டம்.

2. 'ஆனால் இடையிலுள்ளவர்களும் ஞானத்திற்கு அதிகாரிகளே. ஏனெனில் அது சுருதியில் காணப்படுகிறது.' (3. 4. 36) மாணவ நிலை (பிரம்மச்சரியம்), இல்லற வாழ்க்கை (கார்ஹஸ்த்யம்), பொறுப்புகளை விட்டு வாழ்தல் (வானபிரஸ்தம்) மற்றும் துறவு (சன்னியாசம்) என்று நான்கு ஆசிரமங்களை அதாவது வாழ்க்கைப் படிகளை இந்து மதம் போதிக்கிறது. எந்த ஆசிரமத்தையும் சேராதவராக இருந்தாலும், அப்படி இடைநிலையில் இருப்பவரும் பிரம்ம ஞானத்திற்குத் தகுதியானவரே. ஏனெனில் அத்தகையோரும் பிரம்ம ஞானிகளாக இருந்ததுபற்றி சுருதியில் கூறப்பட்டிருக்கிறது. பார்க்க: சாந்தோக்கிய உபநிடதம், 4. 1 & பிருஹதாரண்யக உபநிடதம், 3. 6 & 8.

ஜனயேதஜ்ஞானாம் கர்மஸங்கினாம்'[1] என்று ஆரம்பிக்கிறது. எல்லா இடங்களிலும் இது ஊடுருவியிருக்கிறது. இந்தியா வில் சமூக விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கின்ற யாராவது, அவன் தன் இஷ்டதெய்வத்தைத் தேர்ந்தெடுத்ததற்காகவோ, நாத்திகனாக இருந்ததற்காகவோ துன்புறுத்தப் பட்டிருக் கிறானா? சமூகம் தனது சட்டதிட்டங்களை மீறும் யாரையும் தண்டிக்கலாம்; ஆனால் யாரும், மிகத் தாழ்ந்தவன்கூட முக்திப் பாதையிலிருந்து விலக்கப்பட்டதில்லை. இந்த இரண்டையும் நீங்கள் ஒன்றோடொன்று குழப்பக் கூடாது. மலபாரில் ஒரு தாழ்ந்த குலத்தவன் உயர்குல மனிதன் செல்லும் அதே தெருவில் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை; ஆனால் அதே மனிதன் முகமதியனாகவோ கிறிஸ்தவனாகவோ ஆகட்டும், அந்தக் கணமே அவன் எங்கு வேண்டுமானாலும் போகலாம். இந்தச் சட்டம் பல நூற்றாண்டுகளாக ஓர் இந்து நாட்டில் இருக்கிறது. இது விசித்திரமாக இருக்கலாம், ஆனால் மிகவும் விபரீதமான சூழ்நிலைகளில்கூட மற்ற மதங்களிடம் சகிப்புத் தன்மையுடன் நடந்துகொள்வதையே இது காட்டுகிறது.

உலகிலுள்ள பிற மதங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் இந்து மதம் வித்தியாசப்படும் கருத்து ஒன்று உண்டென்றால், எந்த ஒரு கருத்தை விளக்குவதற்கு ரிஷிகள் சம்ஸ்கிருத மொழியின் அகராதியை ஆராய்ந்து அலுத்தனரோ, அது, இந்த வாழ்க்கையிலேயே மனிதன் கடவுளை அடைய வேண்டும் என்பதே. அத்வைத நூல்களோ 'இறைவனை அறிவது என் பது அவனாக மாறுவதே' என்றே மேலும் தர்க்கரீதியாகக் கூறுகின்றன.

இதன் முக்கியப் பயனாகக் கிடைப்பது தெய்வப் பேரு ணர்வு என்ற மிகப் பரந்ததும் சிறந்ததுமான கருத்தாகும். இது வேதகால ரிஷிகள் உறுதியாகச் சொல்லியதும் முழங்கியதும் மட்டுமல்ல; விதுரர், தர்மவியாதர் என்று பலரும் சொன்னது மட்டுமல்ல; சில காலத்திற்கு முன்பு தாதுபந்தி நெறியைச் சார்ந்த தியாகியாகிய நிச்சல தாசரும் துணிவாக தமது நூலாகிய விசார சாகரத்தில் இவ்வாறு பறைசாற்றுகிறார்: 'பிரம்மத்தை அறிபவன் பிரம்மமே ஆகிறான். அவனது வார்த்தைகள் வேதங்களே. அந்த வார்த்தைகள் சம்ஸ்கிருத மொழியிலோ,

---

1. 'செயலில் ஈடுபடுகின்ற பாமரர்களின் புத்தியை அறிவாளிகள் குழப்பக் கூடாது.' இந்தக் கருத்து கீதையிலும் (3.26) உள்ளது.

சாதாரண மக்கள் பேசும் மொழியிலோ கூறப்பட்டிருந்தாலும் அவை அஞ்ஞான இருளைப் போக்கும்.'

ஆகவே துவைதிகள் கூறுவதுபோல் பிரம்மத்தை அறிவது, கடவுளை உணர்வது, அல்லது அத்வைதிகள் கூறுவதுபோல் பிரம்மமாவது, இதுவே வேதங்களின் நோக்கமும் முடிவு மான போதனை. வேதங்களிலுள்ள மற்ற போதனைகள் எல் லாம், அந்த நிலையை அடைவதற்கு நாம் முன்னேறும் வழி யில் உள்ள பல்வேறு படிகள். பகவான் பாஷ்யகாரர் சங்கராச் சாரியருடைய மகத்தான பெருமை, வியாசரின் சூத்திரங்களுக்கு அவர் மிக அற்புதமான விளக்கவுரை எழுதியிருப்பதே ஆகும்.

அறுதிநிலையில் பிரம்மம் ஒன்றே உண்மை; சார்பு நிலையில், அதே பிரம்மத்தின் பல்வேறு வெளிப்பாடுகளை ஆதாரமாகக் கொண்டு இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் காணப்படுகின்ற எல்லா நெறிகளும் உண்மை; சில, பிறவற்றை விட மேலானவையாக இருக்கின்றன. ஒரு மனிதன் சூரியனை நோக்கிச் செல்வதாக வைத்துக் கொள்ளுங்கள். அவன் தனது யாத்திரையின் ஒவ்வொரு நிலையிலும் சூரியனை ஒவ்வொரு விதமாகக் காண்பான். உண்மையான சூரியனை அடையும்வரை, அதன் அளவு, காட்சி, ஒளி எல்லாம் ஒவ்வொரு நிமிடமும் புதிதுபுதிதாகக் காட்சி அளிக்கும். முதலில் சூரியனை ஒரு பெரிய பந்துபோல் கண்டான், பிறகு அது பெரியதாக ஆரம்பித்தது. இவன் கண்ட பந்துபோல் சிறியதாக என்றுமே சூரியன் இருந்ததில்லை; அல்லது யாத்திரையில் இவன் தொடர்ச்சியாகக் கண்ட பல சூரியன்களைப் போலவும் அது ஒருபோதும் இருக்கவில்லை. ஆனாலும் அவன் சூரியனைத் தான் எப்போதும் பார்த்தான், அதைத் தவிர வேறொன்றையும் பார்க்கவில்லை என்பது உண்மை அல்லவா? அதுபோல் இந்தப் பல்வேறு மதப் பிரிவுகளும் உண்மையானவை. 'ஏகம் ஏவாத் விதீயம்—இரண்டற்ற ஒன்றாக'[1] இருக்கின்ற சூரியனுக்கு அருகில் சிலவும், தூரத்தில் சிலவும் இருக்கின்றன.

உலகிலுள்ள மற்ற எல்லா மதங்களும் எல்லையற்ற, பெயரற்ற, என்றுமுள்ளதான வேத மதத்தில் அடங்கியுள்ளன. ஏனெனில் கடவுளைப் பற்றிய உண்மையான அறுதிக் கருத்துக் களை வேதங்கள் மட்டுமே கூறுகின்றன. கடவுளைப் பற்றிய மற்ற எல்லா கருத்துக்களும் எல்லைக்கு உட்பட்டவை,

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 2. 1.

வரையறுக்கப்பட்டவை. ஸர்வலோக ஹிதைஷிணீ—உலகனைத்திற்கும் நன்மை செய்வதான சுருதி, பக்தனின் கையை இதமாகப் பிடித்து, எல்லையற்ற பொருளை அடைவதற்கு அவனுக்குரிய பாதையில் ஒவ்வொரு படியாக இட்டுச் செல்கிறது. பிற மதங்கள் எல்லாமே இந்தப் படிகளில் ஒன்றை மட்டும்தான் விளக்குகின்றன; அதுவும் முற்போக்கற்றதும், எளிதில் புரியாத வகையிலுமே உள்ளன.

நூற்றுக்கணக்கான பிறவிகளில் நீ முயற்சி செய்யலாம், கற்பகோடி காலம் உன் மனத்தின் ஆழ்பகுதிகள் ஒவ்வொன்றையும் துருவி ஆராயலாம்; ஆனால் எல்லையற்ற ஆன்மீகச் சுரங்கமாகிய வேதங்களில் இல்லாத சிறந்த மதக் கருத்து எதையும் நீ காண முடியாது.

இந்துவின் உருவ வழிபாட்டைப் பற்றிக் கூறுகிறேன். முதலில் அவர்கள் எந்த முறைகளைப் பின்பற்றுகிறார்கள் என்பதை அறியுங்கள். எந்த இடத்தில் அவர்கள் உண்மையில் வழிபாடு செய்கிறார்கள்—கோயிலிலா, உருவத்திலா, அல்லது தங்கள் உடம்பு என்னும் கோயிலிலா என்பதை அறியுங்கள். முதலில் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ளுங்கள். உருவ வழிபாட்டைப் பழிப்பவர்களுள் நூற்றுக்குத் தொண்ணூறுக்கும் அதிகமானவர்களுக்கு அதுபற்றி எதுவும் தெரியாது. உருவ வழிபாட்டினர் என்ன செய்கிறார்கள் என்பது உண்மையில் உங்களுக்குத் தெரியுமானால் வேதாந்தக் கோட்பாட்டிற்கிணங்க அந்த வழிபாட்டின் கருத்தும் தானாக விளங்கிவிடும்.

இருந்தாலும் இவை எல்லாம் கட்டாயமானவை அல்ல. உங்கள் மனு தர்ம சாஸ்திரத்தைப் படித்துப் பாருங்கள்: வயது முதிர்ந்த ஒவ்வொருவனும் நான்காவது ஆசிரமத்தைக் கைக்கொள்ள வேண்டும் என்று அதில் கட்டளையிடப்பட்டிருக்கிறது. மேலும் அதைப் பின்பற்றினாலும் இல்லாவிட்டாலும், அவன் எல்லா கர்மங்களையும் விட்டுவிட வேண்டும், எல்லாவிதமான கர்மங்களும் 'ஜ்ஞானே பரிஸமாப்யதே—கடைசியில் ஞானத்தில் முடிவடைகின்றன'[1] என்று ஒவ்வோர் இடத்திலும் திரும்பத்திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது.

பார்க்கப்போனால், மற்ற நாடுகளில் உள்ள பெரிய மனிதர்கள் பலரைவிட, இந்துக் குடியானவன் அதிகமான மதக் கல்வி பெற்றிருக்கிறான்.

1. கீதை, 4. 33.

தத்துவம் மற்றும் மதத்திற்கான ஐரோப்பிய வார்த்தைகளை நான் என் சொற்பொழிவுகளில் பயன்படுத்துவதாக ஒரு நண்பர் குறை கூறினார். நான் சம்ஸ்கிருதச் சொற்களை மிகவும் மகிழ்ச்சியுடன் உபயோகித்திருப்பேன், அது எனக்கு எளிதாகவும் இருந்திருக்கும். ஏனெனில் மதக் கருத்துக்களை விளக்க சம்ஸ்கிருதம் ஒன்றே முழுமையான மொழியாகும். ஆனால் மேலை நாட்டு மக்கள் கூடியுள்ள சபையில் நான் பேசினேன் என்பதை அந்த நண்பர் மறந்துவிட்டார்! இந்துக்கள் தங்கள் சம்ஸ்கிருத நூல்களின் உட்பொருளை மறந்துவிட்டனர் என்றும், கிறிஸ்தவப் பாதிரிகள்தான் அவற்றைக் கண்டுபிடித்தனர் என்றும் இந்தியப் பாதிரி ஒருவர் தீர்மானமாகக் கூறிவிட்டார்! ஆனால் பாதிரிகள் நிறைந்திருந்த அந்தப் பெரிய கூட்டத்தில் சம்ஸ்கிருத மொழியில் ஒரு வரியையாவது புரிந்து கொள்ள முடிந்த ஒருவரைக்கூட நான் காண முடியவில்லை. இருந்தாலும் அவர்களுள் சிலர் வேதங்களையும், இந்து மதத்தின் அடிப்படைத் தெய்வீக நூல்களையும் குறைகூறி, பெரிய பெரிய கட்டுரைகளையெல்லாம் எழுதிப் படித்தார்கள்.

நான் எந்த மதத்தையும் எதிர்ப்பவன் அல்ல. அது போலவே இந்தியாவில் உள்ள கிறிஸ்தவப் பாதிரிகளுக்கு நான் விரோதமாக உள்ளேன் என்பதும் உண்மையல்ல. ஆனால் அவர்கள் அமெரிக்காவில் பணம் திரட்டும் சில வழிகளை நான் எதிர்க்கிறேன். இந்துத் தாய் ஒருத்தி, தன் குழந்தைகளைக் கங்கையில் உள்ள முதலைகளிடம் வீசி எறிவதாகச் சிறுவர்களின் பாட நூல்களில் படம் வரையப்பட்டிருக்கிறதே, அதற்கு என்ன பொருள்? தாய் கறுப்பு, ஆனால் குழந்தை வெள்ளை நிறமாகத் தீட்டப்பட்டிருக்கிறது; அதிக அனுதாபத்தை எழுப்புவதற்கும், அதிகப் பணத்தைப் பெறுவதற்குமான வழி அது. மனைவி இறந்து பேயாகி, தனது விரோதியை அழிக்க வேண்டுமென்று, கணவன் அவளை ஒரு கம்பத்தில் கட்டித் தன் கைகளாலேயே கொளுத்துவதாக வரையப்பட்டிருக்கிறதே, அதன் பொருள் என்ன? மாபெரும் தேர்கள் மக்களை நசுக்கிச் செல்வதாக வரையப்பட்டுள்ள படங்களின் பொருள் என்ன? இங்கு (அமெரிக்காவில்) குழந்தைகளுக்கான ஒரு நூல் சமீபத்தில் வெளியிடப்பட்டது. தான் கல்கத்தாவிற்குச் சென்றது பற்றி ஒருவர் அதில் கூறுகிறார்: கல்கத்தாவின் தெருக்களில் ஒரு தேர் மதவெறியர்களின் மீது ஏறி ஓடியதை அவர் கண்டாராம். இத்தகைய ஒருவர் மெம்பிஸ் என்ற இடத்தில் செய்த

சொற்பொழிவில், இந்தியாவில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் சிறு குழந்தைகளின் எலும்புகள் நிறைந்த குளம் ஒன்று இருப்பதாகச் சொன்னதை நானே கேட்டிருக்கிறேன்.

ஒவ்வொரு கிறிஸ்தவக் குழந்தையும் இந்துக்களை 'இழிந்தவர்கள்' 'வெறுக்கத்தக்கவர்கள்' என்றும், உலகிலே மிகவும் பயங்கரமான பேய்களென்றும் அழைக்கும்படி அவர்களுக்குப் பாடம் புகட்டுகிறார்களே, இந்த ஏசுவின் சீடர்களுக்கு இந்துக்கள் என்ன குற்றம் செய்துவிட்டார்கள்? கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களை வெறுக்க வேண்டும், அதிலும் முக்கியமாக இந்துக்களை வெறுக்க வேண்டும் என்பதும் ஞாயிற்றுக்கிழமைகளில் பள்ளிச் சிறுவர்களுக்குக் கற்பிக்கப்படும் பாடங்களுள் ஒரு பகுதியாக இடம் பெறுகிறது. ஏனெனில் அந்தக் குழந்தைப் பருவம் முதல் அவர்கள் ஒவ்வொரு காசையும் கிறிஸ்தவ மதப் பிரச்சார அமைப்புக்களுக்குக் கொடுக்க வேண்டுமே! உண்மைக்காக வேண்டாம், தங்கள் சொந்தக் குழந்தைகளின் நல்லொழுக்கத்திற்காகவாவது கிறிஸ்தவப் பாதிரிகள் இதைத் தடுக்கக் கூடாதா? இப்படிப்பட்ட குழந்தைகள் இரக்கமற்ற கொடியவர்களாக வளர்வதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? மீளா நரகத்தின் சித்திரவதைகளையும், அங்குக் கொழுந்துவிட்டெரியும் நெருப்பையும், கந்தகக் கற்களையும் பற்றி எவ்வளவு அதிகமாக ஒருவர் சித்தரிக்கிறாரோ, அந்த அளவுக்கு அவர் கிறிஸ்தவப் பழமைவாதிகளிடையே உயர்ந்த இடம் பெறுகிறார். அவர்களின் மத மறுமலர்ச்சிப் பிரச்சாரத்தைக் கேட்டுவிட்டு எனது நண்பரின் பணிப்பெண் ஒருத்தியைப் பைத்தியக்கார விடுதிக்கு அனுப்ப நேரிட்டது. நரகத்தின் நெருப்பும் அங்குள்ள கந்தகத்தின் சூடும் அவளுக்குப் பொறுக்க முடியாமல் போய்விட்டது!

இந்து மதத்திற்கு எதிராகச் சென்னையில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்களைப் பாருங்கள். கிறிஸ்தவ மதத்தை எதிர்த்து ஓர் இந்து அதுபோல் ஒரு வரி எழுதட்டும், பாதிரிகள் பழிக்குப்பழியாக நெருப்பைக் கக்கி விடுவார்கள்.

எனது நாட்டின் அருமை மக்களே! நான் இங்கு ஒரு வருடத்திற்கு மேலாக இருக்கிறேன். ஏறக்குறைய இங்குள்ள சமூகத்தின் மூலைமுடுக்குகள் எல்லாவற்றையும் பார்த்துவிட்டேன். அனைத்தையும் ஒப்பிட்டுப் பார்த்த பிறகு நான் உங்களுக்குச் சொல்வதெல்லாம் இதுதான்: பாதிரிகள் கூறுவதுபோல் நாம் பேய்களும் அல்ல, தங்களைப்பற்றி பெருமையடித்துக்

கொள்வது போல் அவர்கள் தேவர்களும் அல்ல. இந்துக்களின் ஒழுக்கமின்மை, குழந்தைகளைக் கொல்வது, திருமண முறையின் தீமைகள் இவற்றைப்பற்றி பாதிரிகள் எவ்வளவு குறைவாகப் பேசுகிறார்களோ, அவ்வளவு அவர்களுக்கு நல்லது.

சில நாடுகளின் உண்மை நிலையைப் படம் பிடித்துக் காட்டினால், பாதிரிகள் இந்து சமூகத்தைக் கற்பனையாகப் படம் பிடித்துக் காட்டியிருப்பது அவற்றின் முன் மங்கி மறைந்துவிடும். ஆனால் பணம் வாங்கிக்கொண்டு நிந்திப்பது என் குறிக்கோள் அல்ல. இந்து சமூகம் பூரணமானது என்று நான் ஒருபோதும் உரிமை கொண்டாடவில்லை. அதில் உள்ள குறைகளைப் பற்றியும், பல நூற்றாண்டு துரதிருஷ்டங்களின் காரணமாக அதில் வளர்ந்துள்ள தீமைகளைப் பற்றியும் என்னைவிட உணர்ந்தவர்கள் யாரும் இருக்கமுடியாது. வெளிநாட்டு நண்பர்களாகிய நீங்கள் அழிக்கும் நோக்கமில்லாமல் உண்மையான அனுதாபத்துடன், உதவிபுரிகின்ற எண்ணத்துடன் வருவீர்களானால், நீங்கள் வெற்றியடைய இறைவன் உதவட்டும். ஆனால் வீழ்த்தப்பட்டிருக்கும் ஓர் இனத்தினரின் தலையில் வசைமொழிகளை அள்ளிவீசி, உங்கள் நாட்டு மக்களின் ஒழுக்க நிலையின் உயர்வை ஆணித்தரமாக உறுதிப்படுத்துவது ஒன்றுதான் உங்கள் நோக்கமானால், நான் வெளிப்படையாகச் சொல்கிறேன்—கொஞ்சமாவது நியாய மனப்பான்மையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால்—ஒழுக்கம் நிறைந்த இனம் என்ற முறையில் பிறநாட்டு மக்கள் எல்லோரையும்விட இந்து மிகமிக உயர்ந்தவன் என்பது புலனாகும்.

இந்தியாவில் மதம் ஒருபோதும் கட்டுப்படுத்தப்படவில்லை. தனது இஷ்டதெய்வத்தையோ, நெறியையோ, குருவையோ தேர்ந்தெடுத்துக் கொண்டதற்காக யாரும் குற்றவாளியாக்கப் படவில்லை. வேறெங்கும் காண முடியாத அளவிற்கு இங்கே மதம் வளர்ந்தது. ஆனால் மதங்களில் இந்த எல்லையற்ற மாறுபாடுகளை அனுமதித்தபோது, மற்றோரிடத்தில் உறுதியான நிலை ஒன்று வேண்டியதாயிற்று. இந்தியாவில் அந்த நிலைக்குச் சமூகத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். அதன் விளைவாக, சமூகம் மரத்துப்போய் ஏறக்குறைய வளர்ச்சியற்றுப் போனது. வளர்ச்சிக்கு வேண்டுவது சுதந்திரமே அல்லவா!

ஆனால் மேலை நாடுகளில் மாறுபாடுகளை அடைவது சமூகம்; நிலையாக இருப்பது மதம். கீழ்ப்படிந்து இணங்கிப்

போதல் ஒரு கோட்பாடாயிற்று, இன்றும் ஐரோப்பிய மதத்தில் அது ஒரு கோட்பாடாகவே உள்ளது. புதிய இயக்கங்கள் தோன்றி, அவற்றிற்குச் சிறிதேனும் மேன்மை வர வேண்டுமானால், அது ரத்த ஆறின் வழியாகவே அதைச் சாதிக்க முடியும். அற்புதமான சமூக அமைப்பும், மிக மட்டமான உலகாயதக் கருத்துக்கள் நிறைந்த மதமும்தான் அதன் விளைவு.

இன்று மேலை நாடுகள் தங்கள் தேவைகளை உணர்ந்து விழிப்படைந்து கொண்டிருக்கின்றன; 'மனிதனின் உண்மை இயல்பும் உணர்வும்' என்பவை மேலை நாட்டின் முற்போக்கான மதவாதிகளின் முக்கியச் சொற்களாகிவிட்டன. சம்ஸ்கிருதத் தத்துவ மாணவனுக்கு அந்தச் சீர்திருத்தம் எந்தத் திசையிலிருந்து வருகிறது என்று தெரியும். ஆனால் அதிலிருந்து புத்துணர்ச்சி பிறக்குமானால், அந்த ஆற்றல் எங்கிருந்து வந்தாலும் அது பெரிய விஷயம் இல்லை.

அதேவேளையில், இந்தியாவில் புதிய சூழ்நிலைகள் சமூக அமைப்புக்களில் புதிய மாறுதலின் அவசியத்தை வலியுறுத்திக் கொண்டிருக்கின்றன. கடந்த எழுபத்தைந்து வருடங்களாக இந்தியா சீர்திருத்தச் சங்கங்களாலும் சீர்திருத்தவாதிகளாலும் நிறைந்து கொண்டிருக்கிறது. ஆனால் அந்தோ, ஒவ்வொன்றும் தோல்வியையே அடைந்திருக்கின்றன. அவர்களுக்கு ரகசியம் தெரியவில்லை, அறிய வேண்டிய பெரிய பாடத்தை அவர்கள் அறியவில்லை. சமூகத்தின் தீமைகளுக்குக் காரணம் மதமே என்று அவர்கள் அவசரமாக முடிவு கட்டிவிட்டார்கள். நண்பனின் நெற்றியில் அமர்ந்த கொசுவைக் கொல்வதற்காக நண்பனையும் சேர்த்துக் கொன்ற மனிதனின் கதை போன்றதே இது. ஆனால் அதிர்ஷ்டவசமாக, அவர்கள் இங்கே மோதியது அசைக்க முடியாத பாறைகளின்மீது, விளைவு? இருந்த இடம் தெரியாமல் நசுக்கப்பட்டுவிட்டார்கள். தவறான முயற்சிகளின் காரணமாகத் தங்கள் போராட்டத்தில் தோல்வியடைந்த அந்த உயர்ந்த, தன்னலமற்ற மாமனிதர்களுக்குப் பெருமை சேரட்டும். சீர்திருத்த எழுச்சியின் அந்த மின் அதிர்வுகள், தூங்கும் கும்பகர்ணனான நமது சமூகத்திற்கு அவசியமாகத்தான் இருந்தது. ஆனால் அந்தச் சீர்திருத்தங்கள் முற்றிலுமாக அழிவு முறையில் இருந்தன; ஆக்க முறையில் இல்லை. ஆகையால் அவை அழியவே செய்யும், அழிந்தும்விட்டன.

நாம் அவர்களை ஆசீர்வதிப்போம், அவர்களின் அனுபவத்தால் பயனடைவோம். எல்லாமே உள்ளிருந்துதான் பரிணமித்து வளர்ச்சியடைகிறது, ஏற்கனவே சுருங்கியதுதான் பிறகு விரிந்து பரிணமிக்கிறது என்ற பாடத்தை அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. விதை, தன்னைச் சுற்றியிருப்பவற்றுள் தேவையானவற்றை ஏற்றுக்கொள்கிறது, ஆனால் தன் இயற்கையின்படிதான் அது மரமாக வளர்கிறது என்பதை அவர்கள் அறியவில்லை. எல்லா இந்துக்களுமே, இந்து இனமே அடியோடு அழிந்துபோய் ஒரு புதிய இனம் நாட்டைத் தன் வசப்படுத்தும்வரை, கிழக்கு நாடுகளோ மேற்கு நாடுகளோ என்னதான் முயன்றாலும், இந்தியா தான் அழிந்துபோகும் வரையிலும் ஐரோப்பாவாக மாற முடியாது.

ஆனால் இந்தியத் தாய் இறந்துவிடுவாளா? ஒழுக்கம், உயர்வு, ஆன்மீகம் இவை எல்லாவற்றிற்கும் தாயகமாகத் திகழும் வயது முதிர்ந்த இந்த அன்னை, ரிஷிகளின் திருவடிகளைத் தாங்கிய இந்த நாடு, நடமாடும் தெய்வங்கள் வாழ்ந்து பொலியும் இந்த நாடு இறக்குமா? சகோதரா, ஏதென்சைச் சேர்ந்த ஞானியின்[1] விளக்கைப் பெற்று, உன் பின்னால் இந்தப் பரந்த உலகின், பட்டணங்கள், கிராமங்கள், சமவெளிகள், காடுகள் என்று எங்கு வேண்டுமானாலும் வருகிறேன். உன்னால் முடிந்தால், இவர்களைப் போன்ற மனிதர்களைப் பிற நாடுகளில் எனக்குக் காட்டு. பழங்களால் மரம் அறியப்படுகிறது என்று சரியாகத்தான் சொல்லியிருக்கிறார்கள். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாமரத்தின் கீழும் சென்று கீழே விழுந்திருக்கும் மாங்காய்களையும் பூச்சியரித்த பழங்களையும் கூடைகளில் பொறுக்கி வைத்து, ஒவ்வொரு பழத்தைப் பற்றியும் நூற்றுக்கணக்கான ஆராய்ச்சி நூல்களை எழுதித் தள்ளு. எனினும் ஒரு மாம்பழத்தைக்கூட நீ விளக்கியிருக்க மாட்டாய். நன்றாகப் பக்குவப்பட்டுப் பழுத்த, சாறு நிறைந்த, மிகவும் இனிப்பான ஒரு மாம்பழத்தை மரத்திலிருந்து பறித்துச் சாப்பிடு, அப்போது நீ மாம்பழத்தைப் பற்றிய முழு விபரத்தையும் அறிந்தவன் ஆவாய்.

இந்து மதம் என்றால் என்ன என்பதை இந்த மனித தெய்வங்கள் உணர்த்துகிறார்கள். ஆயிரம் வருடங்களின்

---

1. டயோஜனிஸ் (கி.மு 412-323). இவர் நட்டநடுப் பகலில் கையில் விளக்குடன் எதையோ தேடியவாறு செல்வாராம். கேட்டால், 'மனிதன் எங்கே என்று தேடுகிறேன்' என்பார்.

புயற்காற்றின் வேகத்தைத் தாங்கியும் மாறாத இளமையுடனும் குன்றாத பலத்துடனும் பல நூறாண்டுகளின் உயர்பண்பாட்டு டனும் கூடித் திகழ்கின்ற இந்து இனமாகிய மரத்தின் பண்பை யும், ஆற்றலையும், சாத்தியக்கூறுகளையும் இந்த மனிதத் தெய்வங்களே விளக்குகிறார்கள்.

இந்தியா அழியுமா? அப்படியானால் உலகிலிருந்து ஆன்மீகம் அழிந்துவிடும், ஒழுக்க நிறைவு அழிந்துவிடும், மதத்தின்மீது கொள்கின்ற இதயபூர்வமான இனிய அனுதாபம் அழிந்துவிடும், எல்லா உயர் லட்சியங்களும் அழிந்துவிடும். இவை இருந்த இடத்தில் காமமும் சுகபோகமும் ஆண் பெண் தெய்வங்களாக ஆட்சி செலுத்தும்; அங்கு பணமே புரோகித ராக இருக்கும்; புரட்டு, பலாத்காரம், போட்டி ஆகியவை வழிபாட்டு முறைகளாக இருக்கும்; மனித உயிர்தான் பலிப் பொருளாகும். ஆனால் அப்படிப்பட்ட காரியம் ஒருநாளும் நடக்காது. துன்பத்தைத் தாங்கிக்கொள்ளும் சக்தி, செயலாற்றும் சக்தியைவிட எல்லையற்ற மடங்கு பெரியது; வெறுப்பின் சக்தியைவிட அன்பின் சக்தி எல்லையற்ற மடங்கு ஆற்றல் மிக்கதாகும். இப்போது காணப்படும் இந்துமத மறுமலர்ச்சி தேச பக்தியின் தூண்டுதலால் ஏற்பட்டிருக்கிறது என்று எண்ணு பவர்கள் ஏமாறுபவர்களே.

முதலில் இந்த விசித்திரத்தை ஆராய்வோம்.

நவீன விஞ்ஞான ஆராய்ச்சியின் தீவிர ஆக்கிரமிப்பினால் மேலை நாட்டின் பழைமைவாத மதக் கோட்டைகள் எல்லாம் சிதைந்து மண்ணாகின்றன; நம்பிக்கைகள், சர்ச்சுகளின் பெரும் பான்மையான ஓட்டுக்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட பீங்கான் போன்ற நெறிமுறைகள் நவீன விஞ் ஞானத்தின் சம்மட்டியடிகளால் பொடியாகிச் சிதறுகின்றன; அலைபோல் எழுந்து பரவிக்கொண்டே இருக்கின்ற நவீனச் சிந்தனைகளுக்கு இடமளித்து எப்படி இணங்கிப்போவது என்று தெரியாமல் மேலைநாட்டு மதங்கள் திணறித் தவிக் கின்றன; அதிகமாகிக்கொண்டு போகின்ற நவீனச் சிந்தனை களின் நெருக்குதலால் மற்ற எல்லா மத நூல்களும் முடிந்த வரையில் இழுக்கப்பட்டு விளக்கம் செய்யப்பட்டு விட்டன, பெரும்பாலான நூல்கள் பழுதாகி உபயோகமற்ற பொருட் களைப் போடும் அறைகளில் ஒதுக்கப்பட்டுவிட்டன; மேலை நாட்டின் அறிவுஜீவிகளில் பெரும்பாலோர் சர்ச்சுடன் தங்கள் தொடர்பைத் துண்டித்துக்கொண்டு மனக்குழப்பம் என்னும்

கடலில் மிதந்து கொண்டிருக்கின்றனர். இந்த வேளையில், வேதங்கள் என்னும் ஒளியூற்றிலிருந்து தங்கள் வாழ்விற்கான நீரைப் பருகிக் கொண்டிருக்கின்ற இந்து மதமும் புத்த மதமும் மட்டும் மறுமலர்ச்சி அடைகின்றன. இது விசித்திரமாக இல்லையா?

அமைதி இழந்த மேலைநாட்டு நாத்திகனும் ஆஜ்ஞேய வாதியும், தான் நிலைபெறத் தக்க ஒரே இடம் பகவத் கீதை அல்லது தம்மபதம்[1] என்று கண்டுவிட்டான்.

நிலைமை திரும்பிவிட்டது. விரோதிகளின் கைகளால் மூட்டப்பட்ட தீயால் தன் வீடு எரிவதை சோகக் கண்ணீரின் இடையில் கண்ட இந்து, இப்பொழுது நவீனச் சிந்தனைகளான மின்விளக்கினால் புகை நீங்கியவுடன், தன் வீடு மட்டுமே சுய வலிமையுடன் நின்றுகொண்டிருப்பதைக் காண்கிறான். மற்றவை மறைந்துவிட்டன அல்லது இந்துவின் திட்டத்தை அனுசரித்து புது வீடுகளாகக் கட்டப்படுகின்றன. அவன் தனது கண்ணீரைத் துடைத்துவிட்டான்; 'ஊர்த்வமூலம் அத:சாகம் அச்வத்தம் ப்ராஹுரவ்யயம்'[2] போன்ற இந்த மரத்தின் வேரை வெட்ட வந்த கோடரி, மருத்துவரின் கருணைமிகு கத்தி என்பதை அறிந்துவிட்டான்.

தன் மதத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்கு வேத வாக்கியங் களைத் திருத்திப் பொருள் கூறவோ, அறிவை முறைதவறிப் பயன்படுத்த வேண்டியதோ இல்லை என்று அவன் தெரிந்து விட்டான். அவன் தனது சாஸ்திரங்களில் பலவீனமாக உள்ள வற்றை பலவீனம் என்று ஒப்புக்கொள்ளலாம். ஏனெனில், அருந்ததி தர்சன நியாயத்தின்படி,[3] பலவீனர்களுக்கு உதவி செய்யும் நோக்கத்துடன் பண்டைய ரிஷிகளால் ஏற்படுத்தப் பட்டவை அவை என்று அவன் கூறுவான். எங்கும் நிறைந்ததும், விரிவடைந்து கொண்டே இருப்பதும், ஜட உலகில் கண்டுபிடிக்கப்பட்ட அனைத்தையும் தனக்குள் இணைத்துக் கொள்ளக் கூடியதாகவும், அறியப்பட வேண்டியதாகவும்

---

1. பௌத்தர்களின் புனித நூல்களுள் ஒன்று.

2. மேலே வேரும், கீழே கிளைகளும் கொண்ட அழிவற்ற ஆலமரம். (கீதை, 15. 1)

3. தொலைவில் உள்ள ஒன்றை ஒருவருக்குக் காட்டும்போது, கண்களில் எளிதாகப் படுகின்ற சிலவற்றை முதலில் காட்டி, படிப்படியாக அந்தத் தொலைப் பொருளைக் காட்டுவது. சப்தரிஷி மண்டலத்திலுள்ள துணை நட்சத்திரமான அருந்ததி சிறியது. அதைக் காட்டுவதற்கு, முதலில் அருகிலுள்ள பெரிய நட்சத்திரங்களைக் காட்டி, படிப்படியாக அதனைக் காட்டுவது பற்றி இந்தப் பெயர் வழங்கப்படுகிறது.

உள்ள ஒரு மதத்தைக் கண்டுபிடித்த பண்டைய ரிஷிகளின் அருளால், தன் மத நூல்களைப் புதிய நோக்கில் ஏற்றுக் கொள்ளவும் புதிய நோக்கில் பார்க்கவும் இந்துவால் முடிகிறது. இந்தப் புதிய கண்டுபிடிப்புகள் குறுகிய, சிறியதான மதப் பிரிவுகளை அழித்துவிடும் என்று நம்பப்பட்டது. ஆனால் இவையெல்லாம் உள்ளுணர்வு மற்றும் உணர்வுகடந்த நிலையில் தனது முன்னோர்கள் யுகயுகங்களுக்கு முன்பு கண்டுபிடித்த உண்மைகளே, ஆனால் இப்போது அறிவு மற்றும் உணர்வு நிலையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்பதை அறிந்திருக்கிறான் இந்து.

எனவே இந்து எதையும் விடவேண்டியதில்லை, எதையும் தேடி எங்கேயும் அலைய வேண்டியதில்லை. பரம்பரையாகத் தனக்குத் கிடைத்திருக்கும் களஞ்சியத்திலிருந்து கொஞ்சம் எடுத்து அவன் தன் தேவைகளுக்கு உபயோகித்துக் கொண்டால் போதும். அதை அவன் செய்ய ஆரம்பித்துவிட்டான், செய்து கொண்டே போவான். இந்த மறுமலர்ச்சிக்குச் சரியான காரணம் இதுவே அல்லவா?

வங்க இளைஞர்களே! முக்கியமாக உங்களை நான் வேண்டுகிறேன். சகோதரர்களே, அன்னியர் இந்து சமூகத்தைப் பழிப்பதற்குக் காரணமான உண்மையான தீமைகளில் பெரும் பாலானவற்றிற்கு நாமே காரணம் என்பது நமக்குத் தெரியும். வெட்கம்! இந்தியாவிலுள்ள பிற மக்கள் தேவையற்ற பழிகளைச் சுமக்க நாம் காரணமாக இருந்திருக்கிறோம். ஆனால் இறைவனின் பேரருளால் இதுபற்றி நமக்கு நன்றாகத் தெரிந்து விட்டது. அவரது ஆசிகளுடன் நாம் நம்மைத் தூய்மையாக்கிக் கொள்வோம், அத்துடன் சனாதன தர்மம் கூறும் லட்சியங்களை இந்தியா முழுவதும் பரப்புவதற்கும் உதவுவோம்.

முதலில் அடிமையின் நெற்றியில் குறியிடுவதுபோல், நம் நெற்றியில் இயற்கையன்னை இட்டுள்ள குறியாகிய பொறாமை என்னும் களங்கத்தை அழிப்போம். யாரிடமும் பொறாமை கொள்ளாதீர்கள். நற்செயல் புரியும் ஒவ்வொருவருக்கும் கை கொடுத்து உதவத் தயாராக இருங்கள். மூன்று உலகங்களிலுமுள்ள ஒவ்வோர் உயிருக்கும் உங்கள் நல்லெண்ணங்களை அனுப்புங்கள்.

நமது மதத்தின் நடுநாயக உண்மையானதும், இந்துக்கள், பௌத்தர்கள், சமணர்கள் இவர்களின் பாரம்பரியப் பொதுச் சொத்தாகத் திகழ்வதுமான மனித ஆன்மா என்ற உண்மையில்

காலூன்றி நிற்போம். எந்த ஆன்மா அழிவற்றதாக, பிறப்பற்ற தாக, எங்கும் நிறைந்ததாக, நித்தியமானதாக இருக்கின்றதோ, எந்த ஆன்மாவின் பெருமைகளை வேதங்களும்கூட அறிவிக்க முடியவில்லையோ, எதன் மகிமைக்குமுன் சூரியர்களும் நட்சத்திரக் கூட்டங்களும் சேர்ந்த அண்டம் ஒரு துளிக்கு நிகரானதோ அந்த உண்மையில் நிலைபெறுவோம். ஒவ்வோர் ஆணும் பெண்ணும், இல்லையில்லை, மிக உயர்ந்த தேவர்களிலிருந்து நமது காலடியில் ஊர்ந்து செல்லும் புழு வரை அந்த உண்மைப் பொருளே, அது விரிந்தோ சுருங்கியோ இருக்கலாம், அவ்வளவுதான். வேறுபாடு உருவத்தில் இல்லை, அளவில் மட்டுமே.

ஆன்மாவின் எல்லையற்ற ஆற்றல் ஜடப்பொருளில் செயல் படும்போது பௌதீக வளர்ச்சி உண்டாகிறது; எண்ணத்தில் செயல்பட்டால் அறிவு வளர்ச்சி உண்டாகிறது; தன்னிடமே செயல்படும்போது மனிதன் தெய்வமாகிறான்.

முதலில் நாம் தெய்வங்கள் ஆவோம், பிறகு பிறர் தெய்வங் களாக உதவுவோம். 'ஆவதும் ஆக்குவதும்'—இது நமது லட்சிய மாக இருக்கட்டும். மனிதனைப் பாவி என்று சொல்லாதே, 'நீ தெய்வம்' என்று அவனிடம் சொல். பேய் என்ற ஒன்று இருந் தாலும், எப்போதும் கடவுளை நினைவில் வைத்துக் கொள்வது நமது கடமையே தவிர, பேயை ஞாபகம் வைத்துக் கொள்வதல்ல.

ஓர் அறை இருட்டாக இருந்தால், அதை அறிவதோ, 'இருட்டு, இருட்டு' என்று கூப்பாடு போடுவதோ போதாது; ஒளியைக் கொண்டு வருவதே தேவை. எதிர்மறையாக இருப் பவை, அழிவை உண்டாக்குபவை, வெறும் விமர்சனங்கள் இவை எல்லாம் ஒழிந்தே தீரும். நிச்சயமாகவும், உடன்பாடாக வும், ஆக்க முறையிலும் உள்ளவை என்றென்றும் அழிவற்ற தாக இருக்கும். 'நாம் இருக்கிறோம்', 'கடவுள் இருக்கிறார்', 'நாமே கடவுள்', 'சிவோஹம், சிவோஹம்' என்று கூறுவோம், தொடர்ந்து முன்னே செல்வோம். நாம் ஜடமல்ல, நாம் ஆன்மா.

பெயரும் உருவமும் உள்ளவை அனைத்தும் பெயரும் உருவமும் இல்லாதவையின் ஆதிக்கத்தில் இருக்கின்றன. சுருதிகள் உபதேசிக்கின்ற நிலைத்த உண்மை இதுவே. ஒளியைக் கொண்டு வா, இருள் தானே விலகும்; வேதாந்தச் சிங்கம் கர்ஜிக்கட்டும், நரிகள் வளைகளில் ஒளிந்துகொள்ளும். கருத்துக்களை எங்கும் பரப்புங்கள், அதன் பயன் தானாகவே உண்டாகும். நாம் ரசாயனப் பொருட்களை ஒன்றுசேர்ப்போம்,

படிகமாதல் தானாகவே நடக்கும். ஆன்ம சக்தியை எழுப்பு, அதை இந்தியாவின் ஒரு முனையிலிருந்து மறுமுனை வரையில் எங்கும் பரவச் செய், வேண்டியவை அனைத்தும் தானாக வந்து சேரும்.

உன்னுள் இருக்கும் தெய்வீகத்தை வெளிப்படுத்து, மற்றவை அதைச் சுற்றி இயைபாக ஒழுங்குபடுத்தப்படும். வேதங்களில் காணும் இந்திரன், விரோசனன் போன்றவர்களை நினைவுபடுத்திக்கொள். இருவருக்கும் அவர்களின் தெய்வீகம் பற்றி உபதேசிக்கப்பட்டது. அசுரனாகிய விரோசனன் தன் உடம்பையே கடவுளாக எண்ணினான். தேவனாக இருந்ததால் இந்திரன், ஆன்மாவே கடவுள் என்று புரிந்து கொண்டான். நீங்களெல்லாம் இந்திரனின் குழந்தைகள், தேவர்களின் வாரிசுகள். ஜடப்பொருள் உங்கள் கடவுளாக இருக்க முடியாது, உடம்பு உங்கள் கடவுளாக இருக்க முடியாது.

இந்தியா உயர்ச்சி பெறும்—உடல் பலத்தால் அல்ல, ஆன்மீக பலத்தால்; அழிவின் சின்னத்தால் அல்ல, அமைதியென்னும் கொடியால், அன்பென்னும் கொடியால், துறவியின் உடையால்; செல்வத்தின் சக்தியால் அல்ல, பிச்சையேந்தும் திருவோட்டின் ஆற்றலால். 'நான் பலவீனன்' என்று சொல்லாதே, ஆன்மா எல்லாம் வல்லது. ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடி பட்டவுடனேயே ஒருசில இளைஞர்களைப் பாருங்கள். அசாமிலிருந்து சிந்து வரை, இமயத்திலிருந்து குமரி வரை அவர்கள் அந்தச் செய்தியைப் பிரச்சாரம் செய்தனர்; பனி மூடிய இமயச் சிகரங்களில் இருபதினாயிரம் அடி உயரத்திற்கு மேல் நடந்து, மலையைத் தாண்டி, திபெத்தின் மர்மங்களை ஊடுருவிப் பார்த்து அறிந்தனர்; கந்தல் உடுத்திப் பிச்சை எடுத்தனர். அவர்கள் துன்புறுத்தப்பட்டார்கள், போலீஸ்காரர்களால் பின்தொடரப்பட்டார்கள், சிறையில் இடப்பட்டார்கள்; குற்றமற்றவர்கள் என்று தெரிந்த பின்னரே விடுவிக்கப்பட்டார்கள்.

இன்று அவர்கள் இருபது பேர் உள்ளனர், நாளையே அவர்களை இரண்டாயிரம் பேர்களாகச் செய்யுங்கள். வங்க இளைஞர்களே, உங்கள் நாட்டிற்கு இது மிகவும் தேவை. உலகிற்கும் இது தேவை. உங்கள் தெய்வீகத் தன்மையை உணருங்கள், பசி, தாகம், சூடு, குளிர் எல்லாவற்றையும் உங்களால் தாங்க முடியும். எல்லா வசதிகளும் நிறைந்த சுகபோக மாளிகைகளில் அமர்ந்துகொண்டு, மதம் என்ற பெயரில், பண்படாத ஏதோ

ஒன்றைப் பொழுதுபோக்காகப் போதிப்பது பிறநாடுகளுக்கு நல்லதாயிருக்கலாம். ஆனால் உண்மையை உணர்கின்ற இயல் புணர்ச்சி இந்தியாவிடம் இருக்கிறது, வேடங்களை அது உடனேயே உள்ளுணர்வால் கண்டுபிடித்து விடுகிறது.

தியாகம் செய்தேயாக வேண்டும். மகிமையுடனிரு. தியாகமின்றி எந்தப் பெரிய செயலையும் செய்ய முடியாது. இந்த உலகைப் படைக்கத் தன்னையே தியாகம் செய்தான் இறைவன். உங்கள் வசதிகள், இன்பங்கள், பெயர், புகழ், பதவி, ஏன், உங்கள் உயிரையே துச்சமெனத் தள்ளி, மனிதச் சங்கிலி களால் பாலம் ஒன்று அமையுங்கள். அதன்மூலம் கோடிக் கணக்கான மக்கள் வாழ்க்கை என்னும் கடலைக் கடப்பார்கள்.

நல்லவை அனைத்தின் ஆற்றல்களையும் திரட்டு. எந்தக் கொடியின்கீழ் நீ வருகிறாய் என்பதைப் பொருட்படுத்தாதே. உனது நிறம் என்ன—பச்சையா, நீலமா, சிவப்பா என்பதைப் பொருட்படுத்தாதே. எல்லா நிறங்களையும் ஒன்றுசேர்த்து பேரொளி வீசித் துலங்கும் வெண்ணிறத்தை உண்டாக்குங்கள். அதுவே அன்பின் நிறம். வேலை செய்வதே நமது கடமை, பலன்கள் தானாகவே ஏற்படும். நீ கடவுளாகும் வழியில் எந்தச் சமூக இயக்கம் குறுக்கிட்டாலும் ஆன்மீக சக்திக்கு முன் னால் அது விலகிப்போகும்.

நான் எதிர்காலத்தைப் பார்க்கவில்லை, பார்க்க விரும்ப வும் இல்லை. ஆனால் இதோ என் கண்முன் காணும் வாழ்க்கை யைப்போல் தெளிவாக ஒரு காட்சியை என் முன் காண்கிறேன் —நமது புராதன அன்னை மறுபடியும் விழித்து விட்டாள்; புத்திளமையுடன், என்றுமில்லா மகிமையுடன் அவளது அரியாசனத்தில் அமர்ந்திருக்கிறாள். சமாதான வாழ்த் தொலியுடன் அவளை உலகெங்கிலும் பிரகடனம் செய்யுங்கள்.

உழைப்பிலும் அன்பிலும் என்றும் உங்களுடன் இருக்கும்,

**—விவேகானந்த.**

## IV. நான்கு யோகங்கள்

முக்தியே நமது முக்கிய லட்சியம். நம்மை நாம் தனிப் பரம் பொருள் என்று உணரும்வரை நாம் அதனைப் பெற முடியாது. இந்த அனுபூதியை அடையப் பல நெறிகள் உள்ளன. இந்த நெறிகள் பொதுவாக 'யோகம்' (யோகம்=சேர்த்தல்: நம்மை நமது உண்மை நிலையில் சேர்த்தல்) என்று அழைக்கப்படுகின்றன. இவை பலவாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும், குறிப்பாக நான்கு நெறிகளாக இவற்றை வகுக்கலாம். இவை ஒவ்வொன்றும் நம்மை அந்தத் தனிப் பரம்பொருளின் அனுபூதி நிலைக்கு மறைமுகமாக அழைத்துச் செல்லும் வழிகள் மட்டுமே, எனவே மனிதர்களின் பல்வேறு இயல்புகளுக்கு ஏற்றவாறு அமைந்துள்ளன.

இங்கு ஒன்றை நினைவில்கொள்வது அவசியம்; சாதாரண மனிதன், தனது முயற்சியால் உண்மை மனிதனாகிய பரம் பொருள் ஆகிறான் என்பதல்ல. ஏனெனில் பரம்பொருளில் ஆகுதல் என்பது இல்லை. அது எப்போதும் சுதந்திரமாக, பரிபூரணமாக உள்ளது. ஆனால் அதன் இயல்பைத் தற்காலிகமாக மறைத்துள்ள அஞ்ஞானம் நீக்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு நெறியைக் குறிக்கிறது. யோக நெறிகள் ஒவ்வொன்றின் முழு நோக்கமும் இந்த அஞ்ஞானத்தை நீக்கி, ஆன்மா தனது சொந்த இயல்பை மீண்டும் பெறச் செய்வதே. இதற்குப் பயிற்சியும் வைராக்கியமும் முக்கியத் துணைகள். வைராக்கியம் என்பது வாழ்க்கையில் பற்றற்ற தன்மை. வாழ்க்கையில் நாம் வைத்திருக்கும் பற்றே, இன்ப நுகர்ச்சியில் நாம் கொள்ளும் விருப்பமே பந்தத் தொடரின் காரணம். பயிற்சி என்பது ஏதாவது ஒரு யோகத்தை இடைவிடாமல் பழகுவதே.

**கர்மயோகம்:** செயலின்மூலம் மனத்தைத் தூய்மையாக்குதலே கர்ம யோகம். நல்லதானாலும் கெட்டதானாலும்

---

சுவாமிஜி முதன்முறை அமெரிக்கா சென்றிருந்தபோது, மேலை நாட்டுச் சீடர் ஒருவர் கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக எழுதியது.

செய்த செயல் அதற்கேற்ப நல்ல அல்லது தீய பயனைத் தந்தே தீரும். செயல் என்ற காரணம் இருக்கும்வரை அதன் விளைவை எந்த ஆற்றலும் தடுக்க முடியாது. எனவே நற் செயல்களால் விளையும் நற்பலனிலும், தீய செயல்களால் விளையும் தீய பலனிலும் கட்டுண்டு, முக்தி பெறுவோம் என்ற நம்பிக்கையே இல்லாமல் மனிதன் முடிவற்ற பந்தத்தில் உழல்கிறான்.

ஆனால் செயல் என்பது உடலுக்கும் மனத்திற்கும் மட்டுமே; ஒருபோதும் ஆன்மாவிற்கு இல்லை. ஆனால் செயலால், ஆன்மாவை மறைக்கும் ஒரு திரையை உண்டாக்க முடியும். தீய செயலால் வரும் திரையே அஞ்ஞானம். நற்செயல் ஒழுக்கச் சக்திகளை வலிமைப்படுத்தி, பற்றற்ற தன்மையை உண்டாக்கு கிறது; தீய செயல்களை நோக்கிச் செல்லும் தன்மையை அழிக் கிறது; அதன்மூலம் மனத்தைத் தூய்மையாக்குகிறது.

ஒரு செயலை இன்ப நுகர்ச்சிக்காகச் செய்தால் அது அந்த இன்பத்தை மட்டும் தருகிறது; மனத்தை அது தூய்மைப் படுத்துவதில்லை. எனவே செயலின் பயனை அனுபவிக்கும் ஆசையின்றிச் செயல் புரிய வேண்டும். இவ்வுலகிலோ மறு உலகிலோ இன்பம் நுகரும் எல்லா ஆசைகளையும் எல்லா பயங்களையும் கர்மயோகி என்றென்றைக்குமாக விட்டுவிட வேண்டும். பயன் கருதாமல் செய்யப்படும் இந்தச் செயல்கள், எல்லா தளைகளுக்கும் வேரான தன்னலத்தை அழித்துவிடும்.

கர்மயோகியின் அடிப்படைக் கொள்கை 'நானல்ல, நீ' என்பதே. அவன் எவ்வளவுதான் தியாகம் செய்தாலும் அது அவனுக்குப் போதாமலே இருக்கிறது. ஆனால் இந்தத் தியாகங் களைச் சொர்க்கத்திற்குச் செல்லும் விருப்பமோ, பெயர்புகழ் நாட்டமோ, இவ்வுலகில் வேறெந்த நன்மையைத் தேடும் எண்ணமோ இல்லாமல் அவன் செய்கிறான்.

இந்தத் தன்னலமற்ற செயலின் விளக்கமும் நியாயமும் ஞானயோகத்தில்தான் கிடைக்கும். என்றாலும் மனிதனின் இயல்பான தெய்வீகத் தன்மை அவனை இந்தத் தியாகங்களைச் செய்ய வைக்கிறது. அவன் எந்தக் கொள்கையையும் கருத்தை யும் உடையவனாக இருந்தாலும் சரி, வேறெந்த நோக்கத்தையும் கொள்ளாமல் பிறரது நன்மைக்காக மட்டுமே தியாகங்களை நேசிக்கச் செய்கிறது.

பலருக்கு, பணத்தால் உண்டாகும் பந்தம் மிகப் பெரிய தாகும்; பொருளாசையை ஒட்டித் தொற்றிக் கொண்டுள்ள

அனைத்தையும் உடைத்தெறிவதற்குக் கர்மயோகம் அவர்களுக்கு முற்றிலும் இன்றியமையாதது.

**பக்தியோகம்:** பக்தி அல்லது வழிபாடு அல்லது ஏதேனும் ஒரு வழியில் அன்பு செய்வது மனிதனுக்கு மிக எளிய, மிக இனிய, மிகவும் இயல்பான நெறியாகும். இந்தப் பிரபஞ்சத்தின் இயல்பான நிலை கவர்ந்திழுத்தல். அதற்குப் பிறகு நிச்சயமாக நிகழ்வது, பிரிதல். மனித இதயத்தில் இயல்பாகவே உள்ள ஒருங்கிணைவதற்கான தூண்டுசக்தியே அன்பு. அது தன்னளவில் துயரத்திற்குக் காரணமான ஒன்றாயினும் தகுந்த விதத்தில் தகுந்த பொருளில் செலுத்தப்பட்டால் முக்தியைத் தர வல்லது.

பக்தியின் நோக்கம் இறைவன். அன்பு செய்பவரும் அன்பை ஏற்பவரும் இன்றி, அன்பு இருக்க முடியாது. நமது அன்பை ஏற்பவர் முதலில் அந்த அன்பிற்குப் பதிலாக நம் மீது அன்பைச் செலுத்துபவராயிருக்க வேண்டும். ஆதலால் அந்த அன்புக் கடவுள் ஒருவகையில் மனிதத் தன்மை உடையவராக இருக்க வேண்டும்; அன்புத் தெய்வமாக இருக்க வேண்டும். அத்தகைய ஒரு கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது இங்கே கேள்வி இல்லை. நெஞ்சில் அன்பு உடையவர்களுக்குப் பரம்பொருள் அன்புத் தெய்வமாக, உருவக் கடவுளாக வருகிறார் என்பது உண்மை.

இறைவனை நீதிபதியாகவோ, தண்டிப்பவராகவோ, பயத்துடன் பணியப்பட வேண்டிய ஒருவராகவோ வழிபடும் முறைகள் தாழ்ந்தவை. அவை வரவர விரிந்து உயர்ந்த முறைகளாகலாம். எனினும் அவை அன்பு என்னும் பெயருக்குத் தகுதி வாய்ந்தவை அல்ல.

இனி நாம் அன்பைப்பற்றிப் பார்ப்போம். அன்பை ஒரு முக்கோணமாக உருவகப்படுத்தலாம். இந்த முக்கோணத்தில் கீழுள்ள முதற்கோணம் பயமின்மை. பயம் இருக்கும்வரை அது அன்பு ஆகாது. அன்பு எல்லா பயங்களையும் ஓட்டிவிடும். குழந்தையைக் காப்பாற்றுவதற்காக ஒரு தாய் புலியையும் எதிர்த்து நிற்பாள். இரண்டாவது கோணம்: அன்பு ஒருபோதும் எதையும் எதிர்பாராதது, கெஞ்சாதது. மூன்றாவதாகிய உச்சிக்கோணம்: அன்பிற்காகவே அன்பு செய்வது. இங்கே அன்பை ஏற்பவரைப் பற்றிய எண்ணம்கூட மறைந்துவிடுகிறது. அன்பிற்காக அன்பு செய்ய அன்பே வழி. இது மிக உயர்ந்த தனித் தத்துவமாகும். பரம்பொருளும் இதுவும் ஒன்றே.

**ராஜயோகம்:** இந்த யோகம் மற்ற யோகங்கள் ஒவ்வொன்றுடனும் பொருந்துவதாகும். நம்பிக்கையுடனோ அதின்றியோ எவ்வகையிலாவது சாதனை செய்பவர்களுக் கெல்லாம் இது பொருந்தும். ஆன்மீகத் தேடலுக்கு உதவுகின்ற உண்மையான கருவி இதுவே. ஒவ்வொரு விஞ்ஞானத் திற்கென்றும் தனியான ஓர் ஆராய்ச்சி முறை இருப்பதுபோல் மதம் என்னும் விஞ்ஞானத்திற்கான ஆராய்ச்சி முறை இந்த ராஜ யோகம். சிறந்த இந்த விஞ்ஞானமும் பயில்பவரின் பல்வேறு இயல்புகளுக்கு ஏற்பப் பற்பல செயல்முறைகளை உடையது. இதன் முக்கியப் பகுதிகள் பிராணாயாமம், மன ஒருமைப்பாடு, தியானம் என்பவை. கடவுள் நம்பிக்கை உடையவர்களுக்கு 'ஓம்' அல்லது வேறு மந்திரங்களை குருவிடமிருந்து பெறுவது பெருந்துணையாக இருக்கும். 'ஓம்' என்பது அனைத்தினும் உயர்ந்தது; அதன் பொருள் பரம்பொருள் என்பதே. இந்த மந்திரங்களை ஜபிப்பதும் கூடவே அவற்றின் பொருளையும் தியானிப்பதே இங்கு முக்கியப் பயிற்சியாகும்.

**ஞானயோகம்:** இது மூன்று பகுதிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. முதலாவது, உண்மையைப் பற்றிக் கேட்பது (சிரவணம்). ஆன்மா ஒன்றே மெய்ப்பொருள், மற்றவை யாவும் மாயை (வியாவகாரிகம்) என்பதைக் கேட்டறிதல். இரண் டாவது, கேட்ட இந்த உண்மையை எல்லா கோணங்களிலிருந் தும் பகுத்து ஆராய்தல் (மனனம்). மூன்றாவது, ஆராய்ச்சிகளை முற்றிலும் நிறுத்திவிட்டு உண்மையை அனுபூதியில் அறிவது.

இந்த அனுபூதிக்கு நான்கு விஷயங்கள் வேண்டும். 1. இறைவனே உண்மை. மற்றவை யாவும் உண்மையற்றவை என்ற உறுதி. 2. சிற்றின்ப நுகர்ச்சியிலுள்ள ஆசையை முற்றிலும் விடுதல். 3. புலன்களையும் மனத்தையும் அடக்குதல். 4. முக்தி பெறத் தீவிர ஆசை என்பவை.

எப்போதும் இந்த உண்மையைத் தியானிப்பது, ஆன்மா விற்கு அதன் உண்மை இயல்பை நினைவூட்டுவது ஆகிய இரண்டுமே இந்த யோகத்தின் வழிகளாகும். இது அனைத் திலும் உயர்ந்த நெறி; அதேவேளையில் அனைத்தினும் கடின மானதுமாகும். பலருக்கு இது அறிவுக்கு எட்டலாம். ஆனால் அனுபூதியில் உணர்பவர் மிகச் சிலரே. ❦

# I. வகுப்புச் சொற்பொழிவுகள்

## அ. ஆரம்பநிலைப் பாடங்கள்

## 1. குணத்தின்மீது செயலின் விளைவு

செய்தல் என்று பொருள்படுவதான 'க்ரு' என்ற சம்ஸ்கிருத மூலத்திலிருந்து தோன்றியது கர்மம் என்ற சொல். எல்லா செயல்களுமே கர்மம்தான். செயல்களின் விளைவுகளையும் இந்தச் சொல் குறிக்கும். தத்துவம் சம்பந்தமாக வரும்போது இந்தச் சொல் சிலவேளைகளில் நமது முன்வினைகளின் விளைவுகளையும் குறிக்கும். ஆனால் கர்மயோகத்தில், கர்மம் என்ற சொல்லை 'செயல்' என்ற பொருளில் மட்டுமே பயன்படுத்துகிறோம்.

மனித சமுதாயத்தின் குறிக்கோள் அறிவு. கீழை நாட்டுத் தத்துவம் நம் முன் வைத்துள்ள ஒரே லட்சியமும் இதுவே. மனிதனின் லட்சியம் இன்பம் அல்ல, அறிவே. இன்பமும் போகமும் ஒரு முடிவுக்கு வந்தே தீரும். இந்த இன்பத்தை லட்சியமாக எண்ணுவது தவறு. தான் அடைய வேண்டிய லட்சியம் இன்பமே என்று மனிதன் முட்டாள்தனமாக நினைப்பதுதான் இன்று உலகில் காணப்படும் எல்லாவிதமான துன்பங்களுக்கும் காரணம். ஆனால் அவன் சென்று கொண் டிருப்பது இன்பத்தை நாடி அல்ல, அறிவைத் தேடியே. இன்ப மும், அதுபோல் துன்பமும் பெரிய ஆசிரியர்கள், நன்மையைப் போலவே தீமையிலிருந்தும் அவன் படிப்பினை பெறுகிறான். இவையெல்லாம் காலப்போக்கில் அவனுக்குத் தெரியவருகிறது. இன்பமும் துன்பமும் மனித மனத்தைக் கடந்து செல்லும் போது, அவை அதன்மீது பல்வேறு அனுபவங்களைப் பதித்துச் செல்கின்றன. இந்த மொத்தப் பதிவுகளின் விளைவே குணம் (Character) என்று அழைக்கப்படுகிறது.

எந்தவொரு மனிதனின் குணத்தை எடுத்துக்கொண்டாலும் உண்மையில் அது அவனது மனப்போக்குகள் அனைத்தின் மொத்தமே, மனப்பாங்கின் திரட்சியே தவிர வேறல்ல. எனவே குணத்தை உருவாக்குவதில் துன்பமும் இன்பமும் சரிசமமான பங்கு வகிக்கின்றன. குணத்தைச் செப்பனிடுவதிலும் நன்மை,

தீமை இரண்டிற்கும் சம இடம் உண்டு. சிலவேளைகளில் இன்பத்தைவிடத் துன்பமே சிறந்த ஆசிரியராக அமைகிறது. உலகம் தந்துள்ள உயர்ந்த மனிதர்களின் வாழ்வை ஆராய்ந்தோமானால், பெரும்பாலோரது வாழ்க்கையில் இன்பங்களைவிடத் துன்பங்களே, செல்வத்தைவிட வறுமையே அவர்களுக்குப் பாடமாக அமைந்துள்ளன; புகழ்மொழிகளைவிட ஏமாற்றங்களே, அடிகளே அவர்களது அக ஆற்றல்களை வெளியே கொண்டு வந்துள்ளன என்று நான் துணிந்து கூறுவேன்.

இந்த அறிவு என்பது மனிதனிடம் இயல்பாக இருக்கின்ற ஒன்று. எந்த அறிவும் மனிதனுக்கு வெளியேயிருந்து வருவதில்லை; அவை உள்ளேயே இருக்கின்றன. ஒரு மனிதன் 'அறிகிறான்' என்பதைச் சரியான மனஇயல் மொழியில் 'கண்டுபிடிக்கிறான்' அல்லது 'திரையை விலக்குகிறான்' என்று சொல்ல வேண்டும். அதுபோலவே ஒரு மனிதன் 'கற்கிறான்' என்பது உண்மையில், அவன் எல்லையற்ற அறிவுச் சுரங்கமாகிய தன் சொந்த ஆன்மாவை மூடியிருக்கும் திரையை விலக்கிக் கண்டுபிடிப்பதையே குறிக்கும். நியூட்டன் புவியீர்ப்பைக் கண்டுபிடித்தார் என்று கூறுகிறோம். அது ஒரு மூலையில் உட்கார்ந்து அவருக்காகக் காத்துக் கொண்டா இருந்தது? அது அவரது மனத்தில் இருந்தது; தருணம் வந்தது, அவர் கண்டுபிடித்தார்.

இதுவரை உலகம் பெற்றுள்ள எல்லா அறிவும் மனத்திலிருந்து வந்ததே. பிரபஞ்சத்தின் எல்லையற்ற நூற்களஞ்சியம் உங்கள் சொந்த மனத்திற்குள்ளேயே இருக்கிறது. புறவுலகம், நீங்கள் உங்கள் மனத்தை ஆராய்வதற்காக அமைந்த வெறும் ஒரு தூண்டுகோல், ஒரு வாய்ப்பு மட்டுமே. ஆனால் நீங்கள் ஆராயப்போகின்ற பொருளும் உங்கள் மனம்தான். மரத்திலிருந்து ஆப்பிள் வீழ்ந்தது நியூட்டனுக்கு ஒரு தூண்டுதலாக அமைந்தது. அவர் அதன்மூலம் தன் மனத்தை ஆராய்ந்தார்; ஏற்கனவே தன் மனத்திலிருந்த சிந்தனைத் தொடர்களை எல்லாம் முறைப்படுத்தித் திருத்தி அமைத்தபோது அவற்றிற்கு இடையே ஒரு புதிய தொடர்பைக் கண்டுபிடித்தார். அதை நாம் 'புவியீர்ப்பு விதி' என்று கூறுகிறோம். இந்த விதி ஆப்பிளிலோ பூமியின் மையத்திலோ இருக்கவில்லை.

லௌகீக அறிவோ ஆன்மீக அறிவோ எல்லாமே மனத்தில்தான் இருக்கிறது. பலரிடம் இவை கண்டுபிடிக்காமல் மூடப்பட்டிருக்கிறது. மூடியிருக்கின்ற திரைகள் மெல்லமெல்ல

நீக்கப்படும்போது நாம் 'கற்கிறோம்' என்று சொல்கிறோம். நாம் பெறுகின்ற அறிவின் அளவு, இந்தத் திரையை விலக்குகின்ற அளவைப் பொறுத்தே அமைகிறது. இந்தத் திரை யாரிடமிருந்து நீக்கப்பட்டிருக்கிறதோ, அவன் அதிகம் தெரிந்தவன். யாரிடம் இந்தத் திரை கனமாக இருக்கிறதோ, அவன் அறிவிலி. திரை முழுவதுமாக நீங்கப்பெற்றவன் எல்லாம் தெரிந்தவன் ஆகிறான். எல்லாம் அறிந்தவர்கள் இப்போதும் இருக்கிறார்கள், எதிர் காலத்திலும் இருப்பார்கள் என்றே நான் நம்புகிறேன். இனி வரும் யுகங்களில் லட்சக்கணக்கில் அவர்கள் தோன்றுவார்கள்.

சிக்கிமுக்கிக் கல்லில் நெருப்புபோல் மனத்தில் அறிவு இருக்கிறது. புறத்தூண்டுதல்தான் அதை வெளியே கொண்டு வருகின்ற உராய்வு. நம்மையே நாம் அமைதியாக ஆராய்ந்து பார்த்தோமானால் நமது கண்ணீர்கள், நமது புன்முறுவல்கள், நமது மகிழ்ச்சிகள், நமது கவலைகள், நமது அழுகைகள், நமது சிரிப்புகள், நமது சாபங்கள், நமது வாழ்த்துக்கள், நமது பாராட்டுக்கள், நமது ஏச்சுக்கள் என்று நமது எல்லா உணர்ச்சிகளும் செயல்களும் வெளியிலிருந்து தரப்பட்ட பல்வேறு தாக்குதல்களின்மூலம் நமக்குள்ளிருந்தே வெளியே கொண்டு வரப்பட்டன என்பதை அறியலாம். இந்தத் தாக்குதல்களை மொத்தமாகக் கர்மம் அல்லது செயல் என்று கூறுகிறோம். தூலநிலையாகட்டும், மனத்தளவில் ஆகட்டும், மனத்திற்குக் கொடுக்கின்ற அடிகள் ஒவ்வொன்றும், அங்கே ஏற்கனவே மறைந்திருக்கின்ற அதன் சொந்த ஆற்றலையும் அறிவையும் வெளிப்படுத்துகின்றன, அதாவது அவை கண்டுபிடிக்கப் படுகின்றன. இந்த ஒவ்வோர் அடியும் கர்மமே. இங்கு கர்மம் மிகப்பரந்த பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

இவ்வாறு நாம் எல்லோரும் எப்போதும் கர்மம் செய்து கொண்டிருக்கிறோம். நான் உங்களோடு பேசிக் கொண்டிருக் கிறேன், இது கர்மம். நீங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள், இதுவும் கர்மம். நாம் மூச்சுவிடுகிறோம், அதுவும் கர்மம். நாம் நடக்கிறோம், அதுவும் கர்மம். உடலின்மூலமாகவும் மனத்தின் மூலமாகவும் நாம் செய்கின்ற எல்லாம் கர்மமே. அவை ஒவ்வொன்றும் நம் மீது பதிவை விட்டுச் செல்கின்றன.

சிறிய செயல்கள் பலவற்றின் ஒட்டுமொத்தம்போல் தோன்றுகின்ற சில குறிப்பிட்ட செயல்கள் உள்ளன. கடற்கரை யில் நிற்பதாக வைத்துக்கொள்வோம். அலைகள் கரையில் மோதிச் சிதறுகின்றன; அதன் ஓசை எவ்வளவு பெரிதாக

இருக்கிறது! ஆனால் அந்த ஒரு பேரலை கோடிக்கணக்கான சின்னஞ்சிறு அலைகள் சேர்ந்து உருவானதே தவிர வேறல்ல. இது நமக்குத் தெரியும். இந்தச் சின்னஞ்சிறிய அலைகள் ஒவ்வொன்றும் ஓசை எழுப்புகின்றன. ஆனால் அவற்றை நாம் கேட்பதில்லை. அந்தச் சிற்றொலிகள் ஒன்றுசேர்ந்து ஒரு பேரொலியாக உருவெடுக்கும்போதுதான் நாம் அதைக் கேட்கிறோம். அதுபோல், இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் செயலே. சிலவகையான செயல்களை நாம் உணர்கிறோம்; அவை நமக்குத் தெளிவாகப் புரிகின்றன. அதேவேளையில் அவை பல சிறிய செயல்களின் ஒட்டுமொத்தமே.

நீங்கள் ஒருவரது உண்மையான குணத்தை அறிய விரும்பினால், அவரது மகத்தான காரியங்களைப் பார்த்து முடிவுக்கு வராதீர்கள். முட்டாள்கூட எப்போதாவது சிலநேரங்களில் மகத்தான மனிதனாக முடியும். ஒருவன் மிகமிகச் சாதாரணச் செயல்களைச் செய்யும்போது கவனியுங்கள். அவையே அவனது உண்மையான குணத்தைத் தெரிவிப்பவை. சில குறிப்பிட்ட நேரங்கள் மிகச் சாதாரண மனிதர்களைக்கூட ஒருவகையான மகத்தான நிலைக்கு உயர்த்திவிடும். எந்தச் சூழ்நிலையிலும் யாருடைய குணம் எப்போதும் உயர்ந்ததாகவே இருக்கிறதோ அவனே உண்மையில் சிறந்த மனிதன்.

குணத்தை உருவாக்குவதில் செயலின் பங்கு முக்கியமானதாகும். பிரபஞ்சத்தில் உள்ள எல்லா ஆற்றல்களையும் தன்னை நோக்கிக் கவர்ந்திழுத்து, தன்னுள்ளே அவற்றை ஒருங்கிணைத்து, மாபெரும் சக்தியாக வெளியே அனுப்புகின்ற ஒரு மையம்போல் இருக்கிறான் மனிதன். அந்த மையம்தான் உண்மை மனிதன், எல்லாம் வல்லவன், எல்லாம் அறிந்தவன். பிரபஞ்சம் முழுவதையும் அவன் தன்னை நோக்கிக் கவர்ந்திழுக்கிறான். நன்மை தீமை, இன்பம் துன்பம் எல்லாமே அவனை நோக்கி ஓடி வருகின்றன; அவனைச் சுற்றிச் சுழல்கின்றன. குணம் என்று அழைக்கப்படுகின்ற, தன் தனிப்போக்கை அவன் இவற்றிலிருந்து உருவாக்கிப் பேராறுபோல் வெளியில் பரவ விடுகிறான். தன்னிடம் எதையும் இழுத்துக் கொள்வதற்கான ஆற்றல் போலவே அதனை வெளியில் விடும் ஆற்றலும் அவனிடம் இருக்கிறது.

உலகில் நாம் காண்கின்ற எல்லா செயல்களும், சமுதாயத்தின் எல்லா இயக்கங்களும், நம்மைச் சுற்றி நடக்கும் வேலைகள் அத்தனையும் வெறும் எண்ணங்களின் வெளித்தோற்றமே;

மனித சங்கல்பத்தின் (Will) வெளிப்பாடுகளே. எந்திரங்கள், கருவிகள், நகரங்கள், கப்பல்கள், போர்க் கப்பல்கள் இவை யெல்லாமே மனிதனது சங்கல்பத்தின் வெளிப்பாடுகளே. இந்தச் சங்கல்பம் குணத்தால் அமைகிறது; குணமோ செயல்களால் உருவாக்கப்படுகிறது. செயல் எத்தகையதோ அத்தகையதே சங்கல்பத்தின் வெளிப்பாடும். உலகம் இதுவரை தோற்றுவித்துள்ள உறுதிவாய்ந்த சங்கல்பம் கொண்டவர்கள் எல்லோரும் மாபெரும் செயல்வீரர்களாகவே இருந்திருக் கிறார்கள். காலங்காலமாகத் தொடர்ந்து செய்துவந்த செயல்களின்மூலம் பெற்ற ஆற்றல் வாய்ந்த தங்கள் சங்கல்பத்தால் உலகையே மாற்றிஅமைக்க வல்ல மாபெரும் மனிதர்களாக இருந்தார்கள்அவர்கள்.

புத்தருக்கும் ஏசுவிற்கும் இருந்தது போன்ற மாபெரும் சங்கல்பம் ஒரே பிறவியில் கிடைத்து விடுவதில்லை. இவர்களின் தந்தையர் யார் என்பது நமக்குத் தெரியும். இந்தத் தந்தையர் மனித குலத்தின் நன்மைக்காக ஒரு வார்த்தையாவது பேசினார் களா என்பது சந்தேகமே! ஜோசப்பைப் போன்று லட்சக்கணக் கான தச்சர்கள் வந்துபோய் விட்டனர்; லட்சக்கணக்கானோர் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். புத்தரின் தந்தையைப் போன்ற எண்ணற்ற சிற்றரசர்கள் உலகம் முழுவதும் இருந் திருக்கின்றனர். பரம்பரையின் காரணமாக குணம் அமையும் என்றால், ஒருவேளை தன் சொந்த ஏவலர்கூட அடிபணியாத இந்தச் சிற்றரசரால், இன்று உலகில் பாதிக்கு மேற்பட்டவர் களால் கடவுளாக வழிபடப்படுகின்ற ஒரு மகனை எப்படி உருவாக்க முடிந்தது? இன்று லட்சக்கணக்கான மக்களால் வணங்கப்படுகின்ற ஏசுவுக்கும், சாதாரண தச்சரான அவரது தந்தை ஜோசப்பிற்கும் இடையேயுள்ள பெரும் வித்தியாசத்தை எப்படி விளக்குவீர்கள்? பரம்பரைக் கோட்பாட்டை வைத்துக் கொண்டு இவற்றையெல்லாம் விளக்க முடியாது.

புத்தரும் ஏசுவும் இந்த உலகின்மீது பரப்பிய மாபெரும் சங்கல்பம் எங்கிருந்து வந்தது? இத்தகைய மொத்த ஆற்றல் அவர்களுக்கு எங்கிருந்து கிடைத்தது? இந்த ஆற்றல் காலங் காலமாக அங்குதான் இருந்திருக்க வேண்டும். அது சிறுகச்சிறுக வளர்ந்து பிரம்மாண்டமான ஆற்றலாகி, ஒரு புத்தராக, ஓர் ஏசுவாக சமுதாயத்தின்மீது பாய்கிறது; இன்றும் பாய்ந்து பரவிக் கொண்டிருக்கிறது. இவையெல்லாமே கர்மத்தால், செயலால் தான் நிச்சயிக்கப்படுகின்றன.

உழைக்காமல் யாரும் எதுவும் பெற முடியாது. இது மாறாத நியதி. அப்படியில்லை என்று சில நேரங்களில் நாம் நினைக் கிறோம், ஆனால் காலப்போக்கில் இதைப் புரிந்து கொள்கிறோம். பணக்காரன் ஆவதற்காக ஒரு மனிதன் வாழ்நாள் முழுவதும் பாடுபடலாம். ஆயிரக்கணக்கானோரை ஏமாற்றலாம். ஆனால் கடைசியில், பணக்காரன் ஆவதற்கான தகுதி தனக்கு இல்லை என்பதை அவன் காண்கிறான். வாழ்க்கையே அவனுக்குத் துன்பமாகவும் தொந்தரவாகவும் ஆகிவிடுகிறது. இன்பத்திற்காக நாம் பொருட்களைச் சேர்த்துக்கொண்டே போகலாம். ஆனாலும் நாமே உழைத்துச் சம்பாதித்தவை மட்டும்தான் உண்மையில் நமக்குச் சொந்தமானவை. ஒரு முட்டாள், உலகத்திலுள்ள எல்லா நூல்களையும் வாங்கித் தனது நூல்நிலையத்தில் அடுக்கி வைக்கலாம். ஆனால் அவற்றுள் அவனது தகுதிக்கு ஏற்றவைகளை மட்டுமே அவனால் படிக்க முடியும். இந்தத் தகுதியைச் செயல்தான் உருவாக்கு கிறது.

நமது தகுதி என்ன, நம்மால் எதை ஏற்றுக்கொள்ள முடியும் என்பதை நமது செயல்தான் நிர்ணயிக்கிறது. நாம் இன்று இப்படி இருப்பதற்கு நாமே பொறுப்பு. இனி எப்படி இருக்க வேண்டும் என்று விரும்புகிறோமோ, அப்படி நம்மைச் செய்து கொள்வதற்கான ஆற்றலும் நம்மிடம் உள்ளது. இப்போதைய நமது நிலைக்கு முன்வினைப் பயன்களே காரணம் என்றால், எதிர்காலத்தில் நாம் எப்படி இருக்க வேண்டும் என்பது இப் போதைய நமது செயல்களுக்கு ஏற்பவே அமையும் என்பதும் உறுதி. எனவே செயல்புரிவது எப்படி என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

'எவ்வாறு வேலை செய்ய வேண்டும் என்று தெரிந்து கொள்வதால் என்ன பயன்? ஒவ்வொருவரும் இந்த உலகத்தில் ஏதாவது ஒரு வழியில் வேலைகள் செய்துகொண்டுதானே இருக்கிறார்கள்!' என்று கேட்கலாம். ஆனால் ஆற்றல்களை வீணடிப்பது என்று ஒன்று இருக்கிறது. சாதுரியமாகவும், ஒரு விஞ்ஞானம்போல் நுணுக்கமாகவும் செயல்புரிவதே கர்ம யோகம் என்று பகவத்கீதை கூறுகிறது. எப்படிச் செய்ய வேண்டும் என்று தெரிந்து செய்வதன்மூலம் ஒருவன் பெரிய பலன்களை அடைவான்.

அனைத்து செயல்களும் நம் மனத்துள் ஏற்கனவே இருக் கின்ற ஆற்றலை வெளியே கொண்டு வருவதற்கான, ஆன்மாவை

விழிப்புணர்த்துவதற்கான முயற்சிகள் மட்டுமே என்பதை நீங்கள் நினைவில்கொள்ள வேண்டும். ஆற்றல் மனிதனுள் இருக்கிறது. அதுபோலவே அறிவும் அவனுள்ளேயே இருக்கிறது. அவற்றை வெளியே கொண்டு வருவதற்காக, இந்த மாமனிதர்களை விழிப்புணர்த்துவதற்காகத் தரப்படும் அடி போன்றதே பல்வேறு செயல்கள்.

பல்வேறான பலன்களைக் கருதி மக்கள் செயல் புரிகிறார்கள். பலன் கருதாமல் செய்யப்படுகின்ற செயல்களே இல்லை. சிலர் புகழை விரும்புகிறார்கள், அவர்கள் புகழிற்காக வேலை செய்கிறார்கள். சிலர் பணத்தை விரும்புகிறார்கள், அவர்கள் பணத்திற்காக வேலை செய்கிறார்கள். சிலருக்கு அதிகாரம் வேண்டும், அவர்கள் அதற்காக வேலை செய்கிறார்கள். வேறு சிலர் சொர்க்கத்தை விரும்புகிறார்கள், அவர்கள் அதற்காக வேலை செய்கிறார்கள். சிலர் சீன நாட்டினரைப்போல், தாங்கள் இறந்தபிறகும் தங்கள் பெயர் நிலைத்து நிற்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். இறந்தபின் அல்லாமல் சீனாவில் யாரும் எந்தப் பட்டமும் பெறமுடியாது. எப்படிப் பார்த்தாலும் நாம் செய்வதைவிட அது நல்லதுதான். அங்கே ஒருவர் மிக நல்ல காரியம் ஏதாவது செய்தால் இறந்துபோன அவரது தந்தைக்கோ பாட்டனாருக்கோ ஒரு கௌரவப் பட்டம் வழங்குவார்கள். பலர் அதற்காகப் பாடுபடுவார்கள். முஸ்லீம் மதத்தின் ஒரு பிரிவினர், தாங்கள் இறந்த பிறகு தங்கள் சமாதி பெரிய மண்டபமாகக் கட்டப்பட வேண்டும் என்பதற்காக வாழ்நாள் முழுவதும் பாடுபடுவார்கள். குழந்தை பிறந்த உடனே அதற்கான சமாதியைக் கட்டிவிடுகின்ற ஒரு பிரிவினரைக்கூட எனக்குத் தெரியும். அவர்களைப் பொறுத்தவரை ஒரு மனிதன் செய்ய வேண்டிய மிகப் பெரிய செயல் சமாதி கட்டுவதுதான். சமாதி பெரியதாகவும் அழகாகவும் இருக்கின்ற அளவுக்கு அந்த மனிதன் சிறந்தவனாகக் கருதப்படுவான். மற்றும் சிலர் பிராயச்சித்தமாகச் செயல்புரிகிறார்கள்: எல்லாவிதமான பாவங்களையும் செய்வது, பிறகு ஒரு கோயிலைக் கட்டுவது, அல்லது புரோகிதர்களுக்கு லஞ்சம் கொடுத்து சொர்க்கத்திற்குப் போவதற்கான பயணச்சீட்டை அவர்களிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டியது. இப்படிச் செய்துவிட்டால் தங்கள் பாவங்கள் நீங்கிவிடும், தண்டனையே இல்லாமல் தப்பித்துக் கொள்ளலாம் என்பது இவர்களின் எண்ணம். இவ்வாறு பல்வேறு நோக்கங்களுக்காகச் செயல்புரிகிறார்கள்.

செயலுக்காகச் செயல்புரிய வேண்டும். உலகிற்கு உண்மையாகவே வளமை சேர்க்கின்ற சிலர் எல்லா நாடுகளிலும் இருக்கிறார்கள். அவர்கள் செயலுக்காகவே செயல் புரிகிறார்கள். பெயர், புகழ், ஏன், சொர்க்கத்தைப் பற்றிக்கூட அவர்கள் கவலைப்படுவதில்லை. நன்முயற்சி என்ற ஒரே காரணத்திற்காக அவர்கள் வேலைகளில் ஈடுபடுகிறார்கள்.

மற்றும் சிலர் இருக்கிறார்கள். இவர்கள் இன்னும் உயர்ந்த லட்சியங்களைக் கைக்கொண்டு ஏழைகளுக்கு உதவி செய்கிறார்கள், மனித சமுதாயத்திற்கு உதவுகிறார்கள். ஏனெனில் இவர்கள் நன்மை செய்வதிலும் அன்பு காட்டுவதிலும் நம்பிக்கை கொண்டவர்கள். பொதுவாக, பெயர்புகழுக்காகச் செய்யப்படும் செயல்கள் உடனடியாகப் பலனளிப்பதில்லை. அந்தப் பெயரும் புகழும் பெரும்பாலும் நாம் வாழ்க்கையையே கடந்துவிட்ட, நமது வயது முதிர்ந்த காலத்தில்தான் வருகிறது.

சுயநல நோக்கம் எதுவும் இல்லாமல் ஒருவன் வேலை செய்தால் அவனுக்குக் கிடைக்கும் பலன் எதுவுமே இல்லையா? இருக்கிறது. உண்மையில் மிகவுயர்ந்த பலனை அடைபவன் அவன்தான். சுயநலமின்றி வேலை செய்வதுதான் மிகுந்த பலனைத் தருவது, ஆனால் அவ்வாறு வேலை செய்வதற்கான பொறுமை மக்களிடம் இல்லை. பலன் கருதாமல் செயல்புரிவது உடல்நலத்திற்கும் மிகுந்த நன்மை செய்கிறது. அன்பு, உண்மை, சுயநலமின்மை இவையெல்லாம் ஒழுக்கம் பற்றிய வெறும் பேச்சுக்கள் அல்ல; அவை நம்மிடம் மிக உன்னதமான லட்சியத்தை உருவாக்குகின்றன. ஏனெனில் அவற்றிலிருந்துதான் அளவற்ற ஆற்றல் வெளிப்படுகிறது.

எவ்விதச் சுயநல ஆசையுமின்றி, எதிர்காலத்தைப்பற்றியோ சொர்க்கத்தையோ தண்டனையையோ அல்லது அத்தகைய வேறு எதையுமோ நினைக்காமல் ஐந்து நாட்களோ, ஐந்து நிமிடங்களோ ஒருவரால் வேலை செய்ய முடியுமானால், தர்மத்தில் நிலைத்த ஒருவராக ஆகக்கூடிய சக்தி அவரிடம் இருக்கிறது என்று பொருள். இப்படிச் செய்வது கடினம்தான் என்றாலும் இத்தகைய வேலையின் மதிப்பும், அது எத்தகைய நன்மையைக் கொண்டுவரும் என்பதும் நம் உள்மனத்திற்குத் தெரிந்தே இருக்கிறது. ஆற்றலின் வெளிப்பாடுகள் அனைத்திலும் இதுவே மிகப் பெரிய ஆற்றலாகும். இந்தத் தீவிர

சுயக்கட்டுப்பாடு, புறமுகமாகச் செய்யப்படுகின்ற எந்த வேலையையும்விட அதிகமான ஆற்றல் வெளிப்பாடாகும்.

நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட ஒரு வண்டி மலை ஒன்றிலிருந்து கட்டுப்பாடற்றுக் கீழே பாய்ந்து வரலாம், அல்லது பாய்ந்து செல்கின்ற அந்தக் குதிரைகளை வண்டிக் காரன் கட்டுப்படுத்தலாம். இந்த இரண்டில் எதில் மிகப்பெரிய ஆற்றல் வெளிப்படும்? குதிரைகளைத் தன் போக்கில் ஓட விடு வதிலா, அல்லது அவற்றைக் கட்டுப்படுத்துவதிலா? பீரங் கியிலிருந்து புறப்படுகின்ற ஒரு குண்டு வான்வழியாகப் பாய்ந்து தொலைதூரம் சென்று கீழே விழுகிறது. மற்றொன்று அரு கிலுள்ள சுவரின்மீது மோதுகிறது; அப்படித் தடுக்கப்படும் போது பயங்கரமான வெப்பத்தைக் கக்குகிறது. சுயநல நோக்கத் துடன் வெளியே செல்கின்ற ஆற்றல்கள் யாவும் சிதறி வீணா கின்றன. அந்த ஆற்றல் உங்களிடம் திரும்பி வருவதற்கான வழியில்லை. ஆனால் அவற்றின் ஆற்றல் கட்டுப்படுத்தப்படு மானால், அது ஆற்றல் வளர வழிவகுக்கும். இந்தச் சுயக்கட்டுப் பாடு மகத்தான சங்கல்பத்தை உருவாக்குவதற்கு ஏதுவாகும்; ஏசுவையும் புத்தரையும் உருவாக்குகின்ற குணநலனைத் தரும்.

முட்டாள்கள் இந்த ரகசியத்தை அறிவதில்லை, ஆனால் மனிதகுலத்தை ஆள மட்டும் அவர்கள் விரும்புகிறார்கள். வேலைகளைச் செய்துவிட்டுக் காத்திருப்பானேயானால் முட் டாள்கூட உலகம் முழுவதையும் ஒருநாள் ஆளலாம். ஆள வேண்டும் என்னும் முட்டாள்தனமான எண்ணத்தை விட்டு விட்டுச் சில ஆண்டுகள் காத்திருக்கட்டும்; அந்த எண்ணம் அவனிடமிருந்து முற்றிலுமாக விலகி விடுமானால், அவன் ஒரு மகத்தான ஆற்றலாக மாறிவிடுவான். சில மிருகங்களால் சில அடி தூரத்திற்கு அப்பால் எதையும் பார்க்க முடியாது. அது போல் நம்மில் பெரும்பாலானோருக்கு சில ஆண்டுகளுக்குப் பிறகு என்ன நடக்கும் என்பதைப் பார்க்க முடிவதில்லை. ஒரு சிறிய வட்டம், அதுவே நமது உலகம். அதைக் கடந்து பார்க் கின்ற பொறுமை இல்லாமல் ஒழுக்கமற்றவர்களாகவும் தீயவர் களாகவும் மாறிவிடுகிறோம். இதுதான் நமது பலவீனம், வலிமை யற்ற நிலை.

மிகமிகச் சாதாரண வேலையைக்கூட இழிவாகக் கருதக் கூடாது. உயர்ந்த எதுவும் தெரியாதவன் சுயநலத்திற்காக வேலை செய்யட்டும், பெயர்புகழிற்காகச் செயல் புரியட்டும். ஆனால் ஒவ்வொருவரும் மேலான, இன்னும் மேலான லட்சியங்களைப்

புரிந்துகொள்ளவும் அவற்றை அடையவும் எப்போதும் முயற்சி செய்ய வேண்டும்.

செயல்புரிய மட்டுமே நமக்கு உரிமை உண்டு அதன் பலன்களில் அல்ல. பலன்களை அவற்றின் போக்கில் விட்டுவிடுங்கள். விளைவுகளைப்பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? ஒருவனுக்கு நீங்கள் உதவ விரும்பினால், அவன் உங்களிடம் எப்படி நடந்து கொள்வான் என்பதைப் பற்றியெல்லாம் நினைக்காதீர்கள். நீங்கள் மகத்தான ஒரு செயலை அல்லது நல்ல ஒரு செயலைச் செய்ய விரும்பினால் அதன் பலன் என்னவாக இருக்கும் என்பதை எண்ணி உங்களைக் குழப்பிக் கொள்ளாதீர்கள்.

செயல்புரிதல் என்ற இந்த லட்சியத்தில் கடினமான கேள்வி ஒன்று எழுகிறது. இடைவிடாது செயல்புரிதல் முக்கியம். நாம் எப்போதும் செயல்பட்டுக் கொண்டே இருக்க வேண்டும். வேலை செய்யாமல் ஒரு நிமிடம்கூட நம்மால் உயிர் வாழ முடியாது. அப்படியானால் ஓய்வு என்பது எங்கே? வாழ்க்கைப் போராட்டத்தின் ஒருபுறம் வேலை, நாம் இதில் சிக்கி வேக வேகமாகச் சுழன்று கொண்டிருக்கிறோம். மற்றொரு புறம் அமைதியான, அனைத்திலிருந்தும் விடுபட்ட துறவு; சுற்றியுள்ள எல்லாமே அமைதி மயம், ஓசைகள் என்று எதுவுமே இல்லையென்று சொல்லிவிடலாம், தன் விலங்குகள், மலர்கள், மலைகள் இவற்றோடு இயற்கை மட்டுமே உள்ளது. ஆனால் இந்த இரண்டு காட்சிகளுமே முழுமை பெற்றவை அல்ல. ஏகாந்தத்தில் பழக்கப்பட்ட ஒருவனை அலைச்சல்மயமான உலக வாழ்க்கையில் கொண்டு வந்தால் அப்படியே நசுங்கிப் போவான். கடலின் அடி ஆழங்களில் வாழும் மீன், மேற்பரப்பிற்குக் கொண்டு வரப்பட்டால், நீரின் அழுத்தத்தால் இதுவரை ஒன்றாக இருந்த அதன் உடல் உறுப்புகள், இப்பொழுது அந்த நீரின் அழுத்தம் இல்லாத காரணத்தால் சிதறுண்டு போகும். அதுபோல் அலைச்சலும் ஆரவாரமுமான வாழ்க்கைக்குப் பழகிவிட்ட ஒருவன் அமைதியான இடத்தில் நிம்மதியாக வாழ முடியுமா? அவன் மிகுந்த வேதனைக்கு உள்ளாகிறான், ஒருவேளை அவனது மனநிலைகூடப் பாதிக்கப்படலாம்.

ஆனால் ஆழ்ந்த அமைதியிலும் ஏகாந்தத்திலும் இடையீடற்ற செயல்களைக் காண்பவனும், இடையீடற்ற செயல்களிடையே பாலைவனத்தின் அமைதியையும் ஏகாந்தத்தையும் காண்பவனுமான ஒருவனே லட்சிய மனிதன். சுயக் கட்டுப்பாட்டின் ரகசியத்தை அவன் கற்றுவிட்டான். அவன்

தன்னைத்தானே கட்டுப்படுத்தி விட்டான். பெருநகரின் ஆரவாரமும் நடமாட்டமும் மிக்க தெருவின் வழியே போய்க்கொண்டிருந்தாலும், எந்த ஓசையும் உட்புகாத, ஒரு குகைக்குள் அமர்ந்து கொண்டிருப்பது போன்ற பேரமைதியில் அவனது மனம் ஆழ்ந்திருக்கும். அதன் ஊடே அவன் இடையீடற்ற செயலிலும் ஈடுபட்டிருப்பான். இதுதான் கர்மயோக லட்சியம். இதனை நீங்கள் அடைந்துவிட்டீர்கள் என்றால் கர்மத்தின் ரகசியத்தை உண்மையில் அறிந்து விட்டீர்கள்.

ஆனால் நாம் ஆரம்பத்திலிருந்து தொடங்க வேண்டும். நம்மிடம் வருகின்ற வேலைகளை அப்படியே ஏற்றுக்கொண்டு, நாள்தோறும் படிப்படியாக நம்மை மேன்மேலும் சுயநலமற்றவர்களாக மாற்றிக்கொண்டே வர வேண்டும். வேலை செய்ய வேண்டும், கூடவே, எந்த நோக்கம் நம்மை அந்த வேலையில் ஈடுபடத் தூண்டுகிறது என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். விதிவிலக்கின்றி நமது நோக்கங்கள் சுயநலம் நிறைந்ததாகவே இருப்பதை நாம் ஆரம்ப வருடங்களில் காண்போம். விடாப்பிடியான முயற்சியால் இந்தச் சுயநலம் சிறிதுசிறிதாக மறையும். இறுதியில் ஒருநாள் சுயநலம் சிறிதும் இல்லாமல் செயல் புரிகின்ற மனநிலையைப் பெற்றுவிடுவோம். வாழ்க்கைப் பாதைகளில் போராடியவாறே சென்று கொண்டிருக்கின்ற நாம் முழுக்கமுழுக்கச் சுயநலம் இல்லாதவர்களாகின்ற வேளை என்றாவது ஒருநாள் வரவே செய்யும் என்று நாம் அனைவரும் நம்புவோம். அதை நாம் அடைகின்ற அந்தக் கணமே நமது ஆற்றல்கள் எல்லாம் ஒருமுகப்படும், நமக்கே உரிய அறிவும் வெளிப்படும். ❑

## 2. கடமை என்பது என்ன?

கர்மயோகத்தைப்பற்றி ஆராயும்போது கடமை என்றால் என்ன என்பதுபற்றி அறிய வேண்டியது அவசியமாகும். நான் ஒன்றைச் செய்ய வேண்டும் என்றால், முதலில்அது என் கடமை என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்போது அதை என்னால் செய்ய முடியும். கடமை என்ற கருத்து வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு விதமாக உள்ளது. தன் நூலாகிய குரானில் என்ன எழுதப்பட்டிருக்கிறதோ அதுதான் தன் கடமை என்று முகமதியன் கூறுகிறான். வேதத்தில் என்ன சொல்லப் பட்டிருக்கிறதோ அதுதான் தன் கடமை என்று சொல்கிறான் இந்து. கிறிஸ்தவனோ பைபிளில் கூறப்பட்டதுதான் தன் கடமை என்கிறான். எனவே பல்வேறு வாழ்க்கை நிலைகளுக்கும், பல் வேறு வரலாற்று காலகட்டங்களுக்கும், பல்வேறு நாடுகளுக்கும் ஏற்ப கடமை என்ற கருத்தும் பல்வேறு விதமாக மாறுபடுவதை நாம் காண்கிறோம். உலகம்தழுவியதான சில நுண் கருத்துக் களை விளக்குகின்ற மற்ற சொற்களைப் போலவே 'கடமை' என்னும் சொல்லின் பொருளையும் முழுமையாக விளக்க முடி யாது. அதன் செயல்பாட்டு முறைகளையும் விளைவுகளையும் வைத்து ஓரளவுக்கு அதைப் புரிந்துகொள்ளலாம், அவ்வளவு தான்.

சில குறிப்பிட்ட காரியங்கள் நம் முன் நிகழும்போது இயல்பாகவோ அல்லது பழக்கத்தின் காரணமாகவோ ஒரு குறிப்பிட்ட வகையில் நடந்துகொள்ளும் உள்ளுந்தல் (Im-pulse) நம்மிடம் தோன்றுகிறது. இத்தகைய உள்ளுந்தல் எழுந் ததும் மனம் அந்தச் சூழ்நிலையைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறது. அந்தச் சூழ்நிலையில் இன்ன வகையில் நடந்து கொள்வது நல்லது என்று சிலவேளைகளில் நினைக்கிறது; வேறு சிலவேளைகளிலோ, அதே சூழ்நிலையில் அப்படி நடப் பது தவறு என்று நினைக்கிறது. எல்லா இடங்களிலும் கடமை யைப் பற்றியபொதுவான கருத்து என்னவென்றால் நல்லவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் மனச்சாட்சிக்கு ஏற்ப நடந்து கொள்கிறார்கள் என்பதே.

ஒரு செயலைக் கடமையாக்குவது எது? ஒரு கிறிஸ்தவன் தனக்கு முன் சிறிது மாட்டிறைச்சியைக் காண்கிறான்; ஒன்று அவன் அதைச் சாப்பிட்டுத் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும் அல்லது இன்னொருவனுக்குக் கொடுத்து, அவன் உயிரைக் காக்க வேண்டும். இரண்டையும் செய்யவில்லை என்றால், கடமையிலிருந்து தான் தவறியதாகவே கட்டாயமாக அவன் எண்ணுவான். ஆனால் ஓர் இந்து அதைச் சாப்பிடத் துணிந்தாலோ அல்லது மற்றோர் இந்துவிற்கு அதைக் கொடுத்தாலோ அவனும் தன் கடமையிலிருந்து வழுவிவிட்டதாகவே நினைப்பான். பயிற்சியும் படிப்பும் ஓர் இந்துவை அப்படி நினைக்கச் செய்கின்றன. கடந்த நூற்றாண்டில் இந்தியாவில் தக் (Thug) எனப்படும் பயங்கரமான ஒரு கொள்ளைக்கூட்டத்தினர் இருந்தனர். யாரை வேண்டுமானாலும் கொல்வதும், அவர்களுடைய பொருட்களைக் கொள்ளையடிப்பதும் தங்கள் கடமை என்று அவர்கள் எண்ணினர். எவ்வளவு அதிகம் பேரைக் கொல்கிறார்களோ, அந்த அளவிற்கு அவர்கள் தங்களைச் சிறந்தவர்களாகக் கருதினார்கள். சாதாரணமாக ஒருவன் தெருவில் சென்று மற்றொருவனைச் சுட்டுக் கொன்றுவிட்டால், தான் தவறு செய்துவிட்டதற்காக அவன் வருந்த வேண்டும், அதுதான் சரி. அதே மனிதன் போர்வீரனாகப் படையில் சேர்ந்து ஒருவனை அல்ல, இருபது பேரைக் கொன்றாலும் தன் கடமையைச் சிறப்பாகச் செய்ததாகவே நிச்சயமாக மகிழ்வான். எனவே செயலைக் கொண்டு கடமை வரையறுக்கப்படுவதில்லை.

அதனால் கடமை என்பதற்குப் புறச்சார்பான (Objective) விளக்கம் தருவது என்பது இயலாத ஒன்று. ஆனால் அகச்சார்பான (Subjective) விளக்கம் இருக்கிறது. எந்தச் செயல் நம்மைக் கடவுளை நோக்கிச் செலுத்துகின்றதோ அது நற்செயல், நமது கடமை. எது நம்மைக் கீழ் நிலைக்கு இழுத்துச் செல்கிறதோ அது தீயது; நமது கடமை அல்ல. அகச்சார்பான இந்தக் கோணத்தில் நாம் பார்த்தால் சில செயல்களில் நம்மை உயர்த்தவும் உன்னதமாக்குவதற்குமான போக்கு இருப்பதையும், மற்றும் சிலவற்றில் நம்மைச் சீரழித்து தீயவர்கள் ஆக்குகின்ற போக்கு இருப்பதையும் காணலாம். பல்வேறு நிலைகளிலும் சூழ்நிலைகளிலும் செயல்படுபவர்களான மனிதர்கள் அனைவரையும் பொறுத்தவரையில் இன்ன செயல் இன்ன போக்குக் கொண்டதாக இருக்கும் என்று ஆணித்தரமாக ஒருபோதும்

வரையறுக்க முடியாது. ஆனால் எல்லா காலங்களிலும் எல்லா நெறியினருக்கும் எல்லா நாட்டினருக்குமான கடமையென்று மனிதகுலம் முழுவதுமே ஒருமனதாக ஏற்றுக்கொண்ட கருத்து ஒன்று உள்ளது. ஒரு சம்ஸ்கிருத சுலோகம், அதை இப்படிச் சுருக்கமாகக் கூறுகிறது: 'எந்த உயிரையும் துன்புறுத்தக் கூடாது. எந்த உயிருக்கும் துன்பம் தராமல் இருப்பது புண்ணியம். எதையும் துன்புறுத்துவது பாவம்.'[1]

பிறப்பையும் வாழ்க்கை நிலையையும் அடிப்படையாகக் கொண்ட கடமைகளைப்பற்றி பகவத்கீதை பல இடங்களில் கூறுகிறது. பிறப்பும், வாழ்க்கையும், சமுதாயத்தில் ஒருவன் பெறுகின்ற இடமுமே அவனது வாழ்க்கையின் பல்வேறு செயல்பாடுகளின் மீது அவன் கொள்கின்ற மனநிலையையும் தார்மீக நிலையையும் பெருமளவிற்கு நிர்ணயிக்கின்றன. எனவே நாம் எந்தச் சமூகத்தில் பிறந்துள்ளோமோ, அந்தச் சமுதாயத்தின் லட்சியங்களுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஏற்ப நம்மை உயர்த்தவும் உன்னதப்படுத்தவும் உதவுகின்ற செயலே நமது கடமை ஆகிறது.

ஆனால் லட்சியங்களும் பழக்க வழக்கங்களும் எல்லா சமூகங்களிலும் எல்லா நாடுகளிலும் ஒரேபோல் இருப்பதில்லை என்பதை நாம் கட்டாயம் நினைவில்கொள்ள வேண்டும். இதனை அறியாததுதான் நாடுகளுக்கு இடையேயுள்ள வெறுப்புணர்ச்சிக்கு முக்கியக் காரணம். தன் நாட்டின் நடைமுறையை ஒட்டி, தான் என்ன செய்தாலும் அவையே செய்யத்தக்கவற்றுள் சிறந்தவை, அதைக் கடைப்பிடிக்காதவர்கள் தீயவர்கள் என்று அமெரிக்கன் கருதுகிறான். இந்துவோ தன் பழக்க வழக்கங்கள் மட்டுமே சரியானவை, உலகத்திலேயே உயர்ந்தவை, அவற்றை ஏற்றுக் கொள்ளாதவர்கள் கொடியவர்கள் என்று நினைக்கிறான். இது நாம் எல்லோருமே செய்யக்கூடிய சர்வ சாதாரணமான தவறு. இது தீங்கு விளைவிப்பது. உலகத்தில் தரும சிந்தனைக் குறைவிற்கு இதுதான் பாதிக் காரணம்.

நான் இந்த நாட்டிற்கு வந்து சிகாகோ பொருட்காட்சி சாலையைச் சுற்றிப் பார்த்தபடியே போய்க் கொண்டிருந்த போது, பின்புறமிருந்து ஒருவன் என் தலைப்பாகையைப்

1. ஒப்பிடுக:
அஷ்டாதச புராணேஷு வ்யாஸஸ்ய வசனத்வயம் |
பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம் ||

பிடித்து இழுத்தான். நான் திரும்பிப் பார்த்தேன். அவன் நன்றாக உடை உடுத்தி, நல்ல மனிதன் போலவே இருந்தான். அவனிடம் பேசத் தொடங்கினேன். எனக்கு ஆங்கிலம் தெரியும் என்று கண்டபோது அவன் குறுகிப் போனான். மற்றொருமுறை அதே பொருட்காட்சிச் சாலையில் வேறொருவன் என்னைப் பிடித்துத் தள்ளினான். 'ஏன் இப்படிச் செய்கிறாய்?' என்று நான் கேட்டேன். நான் கேட்டவுடனே அவனும் வெட்கிப்போய் சற்று தடுமாற்றத்துடன், 'ஏன் நீ இப்படி விசித்திரமாக உடை உடுத்தி இருக்கிறாய்?' என்று மன்னிப்புக் கேட்கும் தொனியில் கேட்டான். இவர்களின் கனிவெல்லாம் சொந்த மொழி, சொந்த உடை என்ற எல்லைக்குள் நின்றுவிடுகின்றன. வல்லரசுகள் சாதாரண நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு இத் தகைய எண்ணமே முக்கியக் காரணம். இந்த எண்ணம் அவர் களிடம் மனிதாபிமானத்தையே வற்றச் செய்துவிடுகிறது. தன்னைப்போல் நான் ஏன் உடை உடுத்தவில்லை என்று கேட்டுவிட்டு, என் உடை காரணமாக என்னைக் கேவலப்படுத்த முயன்றானே ஒருவன், அவன் ஒரு நல்ல மனிதனாக, நல்ல தந்தையாக, நல்ல குடிமகனாக இருக்கலாம். ஆனால் மாறுபட்ட உடையில் ஒருவனைக் கண்டதும் அவனது இயல்பிலுள்ள கனிவு மறைந்து விடுகிறது.

புதியவர்கள் எல்லா நாடுகளிலுமே ஏமாற்றப் படுகின்றனர். ஏனென்றால் அங்கே தங்களை எப்படிப் பாதுகாத்துக் கொள்வது என்பது அவர்களுக்குத் தெரியாது. இப்படித்தான் அவர்கள் தாங்கள் கண்ட நாடுகளைப் பற்றி யெல்லாம் தவறான கருத்துக்களைத் தங்கள் நாட்டிற்கு எடுத்துச் செல்கிறார்கள். மாலுமிகளும் படைவீரர்களும் வியாபாரிகளும் தங்கள் நாடுகளில் கனவில்கூட நடந்துகொள்ள முடியாத அசாதாரணமான விதங்களில் எல்லாம் வெளிநாடுகளில் நடந்து கொள்கிறார்கள். அதனால்தான் சீனர்கள், ஐரோப்பியர் களையும் அமெரிக்கர்களையும் 'அன்னியப் பேய்கள்' என்று கூறுகிறார்கள் போலும். ஆனால் அவர்களே மேலை நாடுகளின் இந்த நல்ல, கனிவுமிக்க பக்கத்தைக் கண்டிருந்தால் இத்தகைய முடிவிற்கு வந்திருக்க மாட்டார்கள்.

இதனை நாம் முக்கியமாக நினைவில்கொள்ள வேண்டும்: மற்றவர்களின் கடமைகளை எப்போதும் அவர்களின் கண் கொண்டே பார்க்க வேண்டும். பிறருடைய பழக்கவழக்கங் களை ஒருபோதும் நமது சொந்த அளவுகோலால் மதிப்பிடக்

கூடாது. நான் உலகின் அளவுகோலாக இருக்க முடியாது. நான்தான் உலகை அனுசரித்துப் போக வேண்டுமே தவிர, உலகம் என்னை அனுசரித்துப் போகாது. இவ்வாறு சுற்றுச் சூழ்நிலை நமது கடமைகளின் இயல்பை மாற்றுவதைக் காண் கிறோம். எனவே குறிப்பிட்ட வேளைகளில் நமக்கென்று அமைந்த கடமைகளை அந்தந்த வேளைகளில் செய்வதே இந்த உலகில் நாம் செய்யத் தக்கவற்றுள் மிகச் சிறந்தது. பிறவியால் நமக்கு அமைந்த கடமையைச் செய்வோம். அதை முடித்தபின் நமது வாழ்வு மற்றும் சமுதாயத்தில் நமது நிலைகளின் காரணமாக நமக்கு ஏற்படுகின்ற கடமைகளைச் செய்வோம்.

மனித இயல்பில் பெரிய அபாயம் ஒன்று உள்ளது—அவன் ஒருபோதும் சுய ஆராய்ச்சி செய்வது கிடையாது. சிம் மாசனத்தில் அமர்ந்து ஆளத் தகுந்த அரசனாகவே அவன் தன்னைக் கருதிக் கொள்கிறான். அத்தகையவனாகவே அவன் இருந்தாலும், தனது நிலைக்கு உரிய கடமைகளை முதலில் செய்து முடித்துக் காட்ட வேண்டும். மேலான கடமைகள் அதன்பிறகு அவனுக்கு வந்து சேரும். உலகில் நாம் நேர்மையாக வேலை செய்யத் தொடங்கினாலே போதும், இயற்கை நமக்குத் தேவைப்படுகின்ற அடிஉதைகளைக் கொடுத்து நமது நிலை எதுவென்பதை நாம் அறியுமாறு செய்துவிடும். தனக்குத் தகுதி யில்லாத ஓர் இடத்தில் யாரும் நெடுங்காலம் சுகமாக இருக்க முடியாது. இயற்கையின் இத்தகைய வேலைமுறைக்கு எதிராக முணுமுணுப்பதில் பயனில்லை. எனவே கீழான வேலையைச் செய்பவன் தாழ்ந்தவனில்லை. கடமைகளை வைத்து யாரை யும் எடைபோடக் கூடாது; அவன் அவற்றை எந்த விதத்தில், எத்தகைய உணர்வுடன் செய்கிறான் என்பதைக் கொண்டே எல்லோரையும் மதிப்பிட வேண்டும்.

கடமைபற்றிய இந்தக் கருத்துக்கூட மாறுவதையும், எந்த விதமான சுயநல நோக்கமும் இல்லாதபோதுதான் மகத்தான செயல்களைச் செய்ய முடியும் என்பதையும் போகப்போகக் காணலாம். ஆனால் கடமையுணர்வுடன் செயல்புரிவதன் மூலமே எந்தக் கடமையுணர்வும் இன்றிச் செயல்புரிகின்ற நிலை உண்டாகும். இந்த நிலையில் செயல் என்பது வழிபாடாக, இல்லை, அதைவிட மேம்பட்டதாகிவிடும். அப்போதுதான் செயலுக்காகச் செயல்புரிய முடியும்.

நன்னெறி என்பதற்காக நாம் செய்தாலும் அன்புணர்வால் செய்தாலும், கடமை என்பதன் அடிப்படைத் தத்துவமும் மற்ற

எல்லா யோகங்களைப் போன்றதே. நம்மில் ஜீவபாவனையைக் குறைத்து அதன்மூலம் உண்மையான மேலான ஆன்மாவைப் பிரகாசிக்கச் செய்வதே, வாழ்க்கையின் கீழ்நிலைகளில் மனிதனின் ஆற்றல் விரயமாவதைத் தடுத்து, அதன்மூலம் ஆன்மா தன்னைத் தானே உயர்நிலைகளில் வெளிப்படச் செய்வதே அதன் நோக்கம். தொடர்ந்து கீழான ஆசைகளை மறுப்பதாலேயே இதனை நாம் சாதிக்க முடியும். கடமைக்கு இது மிகவும் தேவையாகும். அறிந்தோ அறியாமலோ சமுதாய அமைப்புக்கள் எல்லாமே இவ்வாறு செயல், அனுபவம் என்ற இரண்டின் வழியாகவும் விரிவடைந்து வந்ததே. சுயநலத்தைக் குறைப்பதன்மூலம் மனிதனின் உண்மை இயல்பு எல்லையற்று விரிவதற்கு நாம் வழிவகுக்கிறோம்.

கடமை அவ்வளவு இனிமையான ஒன்றல்ல; அன்பு என்னும் எண்ணெய் இடாமல் அதன் சக்கரங்கள் எளிதாகச் சுழலாது; மாறாக, தொடர்ந்து உராய்ந்த வண்ணமே இருக்கும். அன்பு இல்லாவிடில் பெற்றோர் குழந்தைகளுக்கும், குழந்தைகள் பெற்றோருக்கும், கணவன் மனைவிக்கும், மனைவி கணவனுக்கும் தங்கள் கடமையை எவ்வாறு செய்ய இயலும்? நமது வாழ்வில் தினமும் சிறுசிறு பூசல்களாகிய உராய்வுகளைச் சந்திக்கவில்லையா? அன்பின் வழியாக மட்டுமே கடமை இனிமையானதாக இருக்க முடியும். இனி, சுதந்திர நிலையில் மட்டுமே அன்பு பிரகாசிக்க முடியும். புலன்களுக்கும் மனித வாழ்வில் தினமும் சந்தித்தே தீர வேண்டியதான கோபங்களுக்கும் பொறாமைகளுக்கும் இன்னும் எத்தனையோ அற்பத்தனங்களுக்கும் அடிமையாவதுதான் சுதந்திரமா? நாம் வாழ்வில் சந்திக்கின்ற இத்தகைய சிறு நெருடல்களுக்கு நடுவில் பொறுமையுடன் அவற்றைச் சகித்துக் கொள்வதே சுதந்திரத்தின் மிகவுயர்ந்த வெளிப்பாடாக இருக்க முடியும். எரிச்சல் மற்றும் பொறாமைக்கு எளிதில் வசப்படுகின்ற இயல்புடையவர்களாகிய பெண்கள் எளிதில் கணவனைக் குறைகூறி விடுகிறார்கள். அதுதான் தங்கள் சுதந்திரம் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் தாங்கள் அடிமைகளாக இருப்பதையே அதன்மூலம் நிரூபிப்பதை அவர்கள் அறியவில்லை. மனைவியிடம் குற்றம் காண்கின்ற கணவர்களின் விஷயமும் இதுதான்.

கற்பு என்பதே ஆண், பெண் இருபாலாரிடமும் இருக்க வேண்டிய முதல் நன்னெறியாகும். ஒரு மனிதன் எவ்வளவு

தான் வழிதவறியவனாக இருந்தாலும் மென்மையும் அன்பும் நிறைந்த கற்புமிக்க மனைவியால் திருந்தாத மனிதன் அபூர்வமே. உலகம் அந்த அளவிற்கு இன்னும் கெட்டுவிடவில்லை. மிருகத் தனமான கணவர்களைப் பற்றியும் ஆண்களின் ஒழுக்க மின்மையைப் பற்றியும் உலகமெங்கும் நாம் கேள்விப்படு கிறோம். ஆனால் ஆண்களுக்குச் சம அளவில் கொடுமையும் ஒழுக்கமின்மையும் நிறைந்த பெண்கள் இல்லையா? எல்லா பெண்களும், அவர்கள் எப்போதும் நிலைநாட்ட விரும்பு வதுபோல், நல்லவர்களாகவும் தூயவர்களாகவும் இருப்பார் களேயானால், இந்த உலகத்தில் ஒழுக்கம் கெட்ட ஆண் ஒரு வன்கூட இருக்க மாட்டான் என்று நான் உறுதியாக நம்பு கிறேன். தூய்மையாலும் கற்பாலும் வெற்றிகொள்ள முடியாத எந்த மிருகத்தனம் உள்ளது? கணவனைத் தவிர பிற ஆடவர் கள் எல்லோரையும் தன் குழந்தையாகக் கருதி, அவர்களுடன் தாயின் நிலையிலேயே பழகுகின்ற, நற்பண்புமிக்க, கற்பு நிறைந்த ஒரு பெண்ணின் முன்னால் வருகின்ற எந்த மனிதனும் அவன் எவ்வளவுதான் கொடியவனாக இருந்தாலும் புனிதத்தின் சூழலை உணராமல் இருக்க முடியாது. அந்தப் பெண்ணி னுடைய தூய்மையின் ஆற்றல் அவ்வளவு உயர்ந்ததாக இருக்கும்! அதுபோலவே ஒவ்வோர் ஆணும் தன் மனைவியைத் தவிர மற்ற பெண்களைத் தாயாகவோ, மகளாகவோ, சகோதரி யாகவோ நினைக்க வேண்டும். மதபோதகனாக விரும்புகின்ற ஒவ்வொருவரும் பெண்களைத் தாயாகக் கருதி, அவர்களிடம் அந்த நிலையிலேயே பழக வேண்டும்.

உலகில் தாயின் இடம் மிகவும் உயர்ந்தது. அந்த ஓர் இடத்தில்தான் மிகவுயர்ந்த சுயலமின்மையைக் கற்கவும் செயல் முறைப்படுத்தவும் முடியும். தாயன்பைவிட மேலான அன்பு ஒன்று இருக்க முடியுமானால் அது இறையன்பு மட்டுமே. மற்ற எல்லாமே தாழ்ந்தவைதான். முதலில் பிள்ளைகளைப்பற்றி நினைப்பதும், அதன்பிறகே தன்னைப்பற்றி நினைப்பதும் ஒரு தாயின் கடமையாகிறது. அப்படியில்லாமல் எந்தப் பெற் றோராவது தங்களையே முதலில் நினைப்பார்களானால் அந்தப் பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் அமைகின்ற உறவு பறவை களுக்கும் அதன் குஞ்சுகளுக்கும் இடையிலுள்ள, அதாவது, சிறகு முளைத்ததும் பெற்றோரை மறந்து விடுகின்ற உறவாகவே அமையும். பெண்களையெல்லாம் இறைவனுடைய தாய்மை யின் பிரதிநிதிகளாக நினைக்கும் ஆண்மகன் உண்மையில்

பேறு பெற்றவன். ஆண்களையெல்லாம் இறைவனின் தந்தைக் குணத்தின் பிரதிநிதிகளாகக் காணும் பெண் உண்மையில் பேறுபெற்றவள். பெற்றோர்களை பூமியில் தெய்வ வடிவங்களாகக் காணும் பிள்ளைகள் பேறுபெற்றவர்கள்.

நாம் உயர்வதற்குரிய ஒரே வழி நம் முன் இருக்கும் கடமைகளைச் செய்வதாகும். அப்படிச் செய்வதன்மூலம் வலிமையைப் பெருக்கிக்கொண்டே சென்று, இறுதியில் உயர்நிலையை அடைந்து விடலாம்.

ஓர் இளம் துறவி காட்டிற்குச் சென்றார். அங்கு தியானம், வழிபாடு, யோகப் பயிற்சி முதலியவற்றில் நெடுங்காலம் ஈடுபட்டிருந்தார். பல ஆண்டுகளின் கடினமான தவம் மற்றும் பயிற்சிகளுக்குப் பிறகு, ஒருநாள் அவர் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். அப்போது அவரது தலைமீது சில சருகுகள் வீழ்ந்தன. அவர் நிமிர்ந்து பார்த்தார். அங்கே உயர்ந்த மரக்கிளை ஒன்றில் ஒரு காகமும் கொக்கும் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. அவருக்கு வந்ததே கோபம். உடனே ஆத்திரத்துடன், 'என்ன! எவ்வளவு துணிவிருந்தால் என் தலைமீது சருகுகளை உதிர்ப்பீர்கள்' என்று கூறியபடியே அந்தப் பறவைகளைக் கோபத்துடன் பார்த்தார். யோகி அல்லவா! அவரது தலையிலிருந்து ஒரு நெருப்பு மின்னல்போல் மேலெழுந்து சென்று, அந்தப் பறவைகளைச் சாம்பலாக்கிவிட்டது. அவருக்கு மகிழ்ச்சி தாளவில்லை. பார்வையாலேயே பறவைகளை எரிக்கும் தமது ஆற்றலைக் கண்டு, தலைகால் புரியாத மகிழ்ச்சி கொண்டார்.

சிறிதுநேரத்திற்குப் பிறகு அந்தத் துறவி வழக்கம்போல், உணவிற்காக அருகிலுள்ள ஊருக்குச் சென்றார். அங்கு ஒரு வீட்டின் முன் நின்று, 'அம்மா, பிச்சை இடுங்கள்' என்று கேட்டார். 'மகனே கொஞ்சம் இரு' என்று வீட்டிற்குள்ளிருந்து ஒரு குரல் வந்தது. இதைக் கேட்ட அந்தத் துறவி தனக்குள், 'பேதைப் பெண்ணே, என்னைக் காக்க வைப்பதற்கு உனக்கு என்ன தைரியம்! என் சக்தியை நீ அறியவில்லை' என்று நினைத்தார். இப்படி அவர் நினைத்ததுமே உள்ளிருந்து, 'மகனே, உன்னைப்பற்றி அவ்வளவு பெரிதாக நினைத்துக் கொள்ளாதே. இங்கே இருப்பது காக்கையும் அல்ல, கொக்கும் அல்ல' என்று குரல் வந்தது. துறவி திகைத்துவிட்டார். எப்படியானாலும் அவர் காத்திருக்கத்தான் வேண்டியிருந்தது. கடைசியாக அந்தப் பெண் வெளியில் வந்தாள். துறவி அவளது கால்களில் வீழ்ந்து, 'தாயே, நீங்கள் எப்படி அறிந்தீர்கள்? என்று கேட்டார். அதற்கு

அவள், 'மகனே, எனக்கு உன்னைப்போல் யோகமோ தவமோ எதுவும் தெரியாது. அன்றாடம் என் கடமைகளைச் செய்து கொண்டிருக்கின்ற ஒரு சாதாரணப் பெண் நான். என் கணவர் நோயுற்றிருக்கிறார். நான் அவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தேன். அதனால்தான் உன்னைக் காக்க வைக்க வேண்டியதாயிற்று. கடமைகளை வாழ்நாள் முழுவதும் மனப் பூர்வமாகச் செய்துவருகிறேன். திருமணத்திற்கு முன் பெற் றோருக்கு என் கடமையைச் செய்தேன். இப்போது திருமணம் முடிந்துவிட்டது. எனவே கணவருக்கு என் கடமைகளைச் செய்து வருகிறேன். நான் செய்யும் யோகம் எல்லாம் இதுதான். என் கடமைகளைச் செய்துவந்ததாலே என் ஞானக்கண் திறந்து விட்டது. அதன்மூலம்தான் நான் உன் எண்ணங்களைப் புரிந்து கொள்ள முடிந்தது, காட்டில் நடந்ததையும் தெரிந்து கொண் டேன். இதற்கு மேலும் உயர்ந்த ஏதாவதை அறிந்துகொள்ள விரும்பினால், இன்ன நகரத்திலுள்ள சந்தைக்குச் செல். அங்கே ஒரு வியாதனை[1] நீ சந்திப்பாய். பயனுள்ள பலவற்றை அவன் உனக்குப் போதிப்பான்' என்றாள்.

முதலில் அந்தத் துறவி, 'நகரத்தில் ஒரு வியாதனிடம் போவதா?' என்றுதான் நினைத்தார். ஆனால் சற்றுமுன் நடந்த நிகழ்ச்சியால் அவரது ஆணவம் சற்று விலகியிருந்தது. எனவே நகரத்திற்குச் சென்றார். சந்தையைத் தேடிக் கண்டுபிடித்து அங்கே சென்றார். அங்கே கொழுத்த பருமனான வியாதன் ஒருவன் பெரிய கத்தியால் இறைச்சியை வெட்டியபடியே, விலை பேசுவதும் விற்பதுமாக இருந்தான். 'அடக் கடவுளே! இந்த மனிதனிடமிருந்தா நான் உயர்ந்த விஷயத்தைக் கற்கப் போகிறேன். இவனைப் பார்த்தால் அசுரனின் அவதாரம்போல் தோன்றுகிறதே' என்று அதிர்ந்தார் துறவி. இதற்கிடையில் வியாதன் துறவியைக் கவனித்துவிட்டு, 'ஓ சுவாமி, அந்தப் பெண்மணி உங்களை இங்கே அனுப்பினார்களா? சிறிது அமர்ந் திருங்கள், என் வியாபாரத்தை முடித்துவிட்டு வருகிறேன்' என் றான். 'இங்கே என்ன நடக்கப் போகிறதோ' என்று எண்ணிய வாறே அமர்ந்திருந்தார் துறவி.

நெடுநேரம் கழிந்தது. வேலை முடிந்தது. வியாதன் பணத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு துறவியிடம் வந்து, 'வாருங்கள் வீட்டிற்குப் போகலாம்' என்றான். வீட்டை

1. வேட்டுவ குலத்தினர்.

அடைந்ததும் துறவி அமர்வதற்காக இருக்கை ஒன்றை அளித்து, 'இங்கேயே இருங்கள், வந்துவிடுகிறேன்' என்று கூறிவிட்டு உள்ளே சென்றான். பின்னர், வயது முதிர்ந்த தன் தந்தையையும் தாயையும் குளிப்பாட்டி, உணவூட்டி, அவர்கள் மனம் மகிழும் படி பலவகையான சேவைகளைச் செய்தான். பிறகு துறவியிடம் வந்து, 'ஐயா, என்னிடம் வந்துள்ளீர்கள். நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டான். துறவி அவனிடம் ஆன்மாவைப் பற்றியும் கடவுளைப் பற்றியும் சில கேள்விகளைக் கேட்டார். வியாதன் அதற்கு ஒரு பெரிய விளக்கமே தந்தான். அந்த விளக்கம் வியாத கீதை என்ற பெயரில் மகாபாரதத்தில் உள்ளது. வேதாந்தத்தின் மிகவுயர்ந்த தத்துவ விளக்கங்களுள் ஒன்று இந்த கீதை.

வியாதன் தன் விளக்கத்தை முடித்தபோது துறவி திகைத்து விட்டார். பின்னர் வியாதனைப் பார்த்து, 'நீங்கள் ஏன் வியாதனாக இருக்கிறீர்கள்? உங்கள் ஞானத்திற்கு இந்தத் தொழில் இழிந்ததும் கேவலமானதும் ஆயிற்றே' என்று கேட்டார். இதைக் கேட்ட வியாதன் துறவியை நோக்கி, 'மகனே, கடமைகளுள் எதுவும் இழிந்ததோ கேவலமானதோ இல்லை. என்னுடைய பிறப்பு, கசாப்புத் தொழில் செய்யும் இந்தச் சூழ்நிலையில் என்னை வைத்திருக்கிறது. இளம் வயதில் பரம்பரைத் தொழிலாக இதனை நான் கற்றுக் கொண்டேன். எனக்குப் பற்றேதும் இல்லை. ஓர் இல்லறத்தானாக என் கடமைகளைச் செய்ய முயற்சிக்கிறேன். என் பெற்றோரை மகிழ்விப்பதற்கான சேவைகள் அனைத்தையும் செய்கிறேன். உங்கள் யோகம் எனக்குத் தெரியாது, நான் துறவியாகவில்லை. வீட்டைத் துறந்து காட்டிற்குப் போகவில்லை. என்னிடம் நீங்கள் பார்ப்பவை கேட்டவை எல்லாம், எனது நிலைக்கு உரிய கடமைகளைப் பற்றின்றிச் செய்ததால் கிடைத்ததாகும்' என்றான்.

இந்தியாவில் ஒரு மகான் இருக்கிறார். அவர் மிகப் பெரிய யோகி. நான் கண்ட மகான்களுள் விந்தையானவர், விசித்திரமானவர். அவர் யாருக்கும் எதுவும் உபதேசிப்பதில்லை. அவரிடம் எதைக் கேட்டாலும் பதில் சொல்ல மாட்டார். குருநிலையை வகிப்பது தன் தகுதிக்கு மீறிய விஷயம் என்று அவர் எண்ணினார். அவரால் அது முடியாது. ஆனால் ஒரு கேள்வி கேட்டபின் சில நாட்கள் காத்திருந்தால், நாம் அவரோடு சாதாரணமாகப் பேசிக் கொண்டிருக்கும்போது நமது கேள்வி

பற்றிய விஷயத்தை அவரே எழுப்பி, ஆச்சரியப்படத் தக்கவகை யில் அதற்கான விளக்கம் தருவார். அவர் ஒருமுறை கர்மத்தின் ரகசியத்தை என்னிடம் இவ்வாறு கூறினார்: 'முடிவையும் வழியையும் ஒன்றாக்கு'. நீங்கள் எந்த வேலையைச் செய்தாலும் அந்த வேலைக்கு அப்பாலுள்ள எதைப் பற்றியும் சிந்திக்காதீர் கள். அந்த வேலையை ஒரு வழிபாடாக, மிகவுயர்ந்த வழி பாடாக, அந்த நேரத்திற்கு உங்கள் வாழ்க்கை முழுவதையும் அதில் செலுத்திச் செய்யுங்கள். மேற்சொன்ன கதையில் வந்த பெண்ணும் வியாதனும் ஆர்வத்துடனும் இதயபூர்வமாகவும் தங்கள் கடமைகளைச் செய்தார்கள். அதன் பலனாக அவர்கள் ஞானம் பெற்றார்கள். வாழ்க்கையில் எந்த நிலையிலுள்ள கடமைகளைச் செய்தாலும், பலனில் பற்றில்லாமல் செய்தால் அது நம்மை ஆன்ம அனுபூதி என்னும் நிலைக்கு நிச்சயம் அழைத்துச் செல்லும் என்பதையே இது காட்டுகிறது.

பலன் கருதி வேலை செய்பவன்தான் தனக்கென்று வாய்த்த கடமையைப்பற்றிக் குறைபட்டுக் கொள்வான். ஆனால் பல னில் பற்றில்லாதவர்களுக்கு எல்லா வேலைகளுமே ஒரேபோல் நல்லவைதாம்; சுயநலத்தையும் புலனின்ப நாட்டத்தையும் அழித்து ஆன்ம சுதந்திரம் பெறுவதற்குத் தகுந்த கருவிகள்தாம்.

நாம் எல்லோருமே நம்மைப்பற்றி மிகப் பெரிதாக எண்ணிக் கொள்கிறோம். நமது விருப்பத்தைவிட, தகுதிக்கு ஏற்பவே நமக்குக் கடமைகள் வந்து சேர்கின்றன. போட்டி பொறாமையை எழுப்புகிறது, இரக்கத்தை அழித்துவிடுகிறது. முணுமுணுப்பவர்களுக்கு எல்லா கடமைகளுமே வெறுப் பானவைதான், எதுவுமே அவர்களுக்குத் திருப்தி தராது. அவர்களின் வாழ்க்கையே தோல்விதான். நமக்கென வாய்க் கின்ற கடமைகளை எப்போதும் தயாரான முழுமனத்துடன் செய்து கொண்டே போவோம். அப்போது நிச்சயம் ஒளியைக் காண்போம். ❑

## 3. நாம் உதவி செய்வது நமக்கே, உலகிற்கு அல்ல!

கடமைகளைச் சரிவரச் செய்வது ஆன்மீக முன்னேற்றத்திற்கு எப்படி உதவுகிறது என்பதைக் காண்பதற்கு முன், கர்மம் என்பதற்கு இந்தியாவில் வழங்கப்படுகின்ற மற்றொரு கருத்தையும் சுருக்கமாக நான் உங்கள் முன் வைக்க விரும்புகிறேன். ஒவ்வொரு மதத்திலும் தத்துவம், புராணம், சடங்கு என்று மூன்று பகுதிகள் உள்ளன. எந்த மதத்திற்கும் தத்துவமே சாரமாக அமைந்துள்ளது. இந்தத் தத்துவத்தை ஏறக்குறைய கற்பனைப் பாத்திரங்களான மாமனிதர்களின் வாழ்க்கை, கதைகள், உவமைகள் போன்ற அற்புதமான விஷயங்கள்மூலம் விளக்கி விவரிப்பது புராணம். சடங்கு என்பது தத்துவக் கருத்துக்களுக்கு, எல்லோரும் புரிந்துகொள்ளும் வண்ணம் தெளிவான வடிவம் கொடுப்பது. உண்மையில் தத்துவத்தின் உருத்தோற்றமே சடங்கு.

இந்தச் சடங்குதான் கர்மம். இவை ஒவ்வொரு மதத்திற்கும் இன்றியமையாதவை. ஏனென்றால் ஆன்மீகத்தில் மிகவும் முன்னேறாமல் நுட்பமான ஆன்மீக உண்மைகளைப் புரிந்துகொள்ள முடியாது. எதையும் புரிந்துகொள்ள முடியும் என்று நினைப்பது சுலபம். ஆனால் நடைமுறை அனுபவத்திலோ நுட்பமான கருத்துக்களைப் புரிந்துகொள்வது அவ்வளவு சுலபமானது அல்ல என்பதுதான் உண்மை. எனவே சின்னங்கள் (Symbols) சிறந்த உதவியாக அமைந்துள்ளன. அவற்றின்மூலம் எதையும் தெளிவுபடுத்துகின்ற முறையை நாம் ஒதுக்கிவிட முடியாது. மிகப் பழங்காலத்திலிருந்தே எல்லாவித மதங்களும் சின்னங்களைப் பயன்படுத்தி வருகின்றன.

ஒருவகையில் சின்னங்களின்மூலம்தான் நாம் சிந்திக்கவே முடியும். சொற்கள் என்பவை சிந்தனையின் சின்னங்களே தவிர வேறல்ல. இன்னொரு வகையில், பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொன்றையும் ஒரு சின்னமாக நாம் கொள்ளலாம். இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே ஒரு சின்னம், அதன் பின்னாலுள்ள

சாரம் இறைவன். இத்தகைய சின்னங்களின் உருவாக்கம் மனிதனின் வெறும் கண்டுபிடிப்பல்ல. ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்த சிலர் ஒன்றாக அமர்ந்து தங்கள் மனத்துள் சிந்தித்து வெளிக்கொண்டு வந்தவையல்ல இவை. மதச் சின்னங்கள் இயல்பாகத் தோன்றி வளர்ந்தவை. இல்லையென்றால் ஏறக்குறைய எல்லோரின் மனத்திலும், குறிப்பிட்ட கருத்துக்கள் குறிப்பிட்ட சின்னங்களோடு மட்டுமே தொடர்பு உடையவையாக எப்படி இருக்கும்? சில சின்னங்கள் உலகம் முழுவதிலுமே வழக்கத்தில் இருக்கின்றன.

கிறிஸ்தவ மதத்துடனான தொடர்பிற்குப் பின்னர்தான் சிலுவை ஒரு சின்னமாக முதலில் கொள்ளப்பட்டது என்று உங்களுள் பலரும் நினைக்கலாம். ஆனால் உண்மையில் கிறிஸ்தவ மதம் தோன்றுவதற்கு முன்னால், மோசஸ் தோன்றுவதற்கு முன்னால், வேதங்களும் தோன்றுவதற்கு முன்னால், வரலாற்றுக் குறிப்புகள் தொடங்குவதற்கு முன்னால் சிலுவைச்சின்னம் இருந்தது. அஸ்டெக்(Aztecs) மற்றும் பினீசியர்களிடையே இந்தச் சின்னத்தை நாம் காண முடியும். ஒவ்வோர் இனத்தினரும் சிலுவைச் சின்னம் வைத்திருந்ததாகவே தோன்றுகிறது. சிலுவையில் அறையப்பட்ட ரட்சகர், அதாவது, சிலுவையில் அறையப்பட்ட ஒரு மனிதர்—இந்தச் சின்னமும் எல்லா நாடுகளிலும் அறியப்பட்ட ஒன்றாகவே தோன்றுகிறது.

இதுபோலவே, வட்டம் உலகம் முழுவதிலுமே ஒரு மகத்தான சின்னமாக இருந்துவருகிறது. எல்லாவற்றையும்விட உலகம் முழுவதும் அறியப்பட்ட மற்றொரு சின்னம் ஸ்வஸ்திகம். பௌத்தர்களே இதை உலகம் முழுவதும் தங்களுடன் கொண்டுசென்று பரப்பினார்கள் என்ற கருத்து ஒருகாலத்தில் இருந்தது. ஆனால் புத்த மதத்திற்கு முன்பே பல நாடுகளில் இதனைப் பயன்படுத்தியிருப்பது இப்போது தெரியவந்துள்ளது. பழங்கால பாபிலோனிலும் எகிப்திலும் இந்தச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இதிலிருந்து என்ன தெரிகிறது? இந்தச் சின்னங்கள் மனிதனின் கற்பனையில் ஒரு குறிப்பிட்ட முறையில் உதித்தவையாக இருக்க முடியாது. நிச்சயமாக ஏதோ காரணம் இருந்திருக்க வேண்டும், அந்தச் சின்னங்களுக்கும் மனித மனத்திற்கும் ஏதோ இயல்பான தொடர்பு இருந்திருக்க வேண்டும்.


ஸ்வஸ்திகம்

மொழிகூட மனிதனின் கற்பனையில் ஒரு குறிப்பிட்ட முறையில் தோன்றியதல்ல; சில வார்த்தைகள்மூலம் சில

எண்ணங்களை உணர்த்த வேண்டும் என்று சிலர் கலந்து தீர்மானித்ததன் விளைவாகவும் தோன்றியதல்ல. எந்த எண்ணமும் அது குறிக்கின்ற சொல் இல்லாமலோ, எந்தச் சொல்லும் அது உணர்த்துகின்ற எண்ணம் இல்லாமலோ இருந்ததில்லை. எண்ணமும் சொல்லும் இயல்பாகவே பிரிக்க முடியாதவை. கருத்துக்களைக் குறிக்கின்றவை ஒலிச் சின்னங்களாகவோ நிறச் சின்னங்களாகவோ இருக்கலாம். செவிடனும் ஊமையும் ஒலிச் சின்னங்களைத் தவிர மற்றொன்றின்மூலமே சிந்தித்தாக வேண்டும்.

மனத்தில் எழும் ஒவ்வோர் எண்ணத்திற்கும் அதற்கேயான ஓர் உருவம் உண்டு. இது சம்ஸ்கிருதத் தத்துவங்களில் 'நாம-ரூபம்', அதாவது, பெயர்-உருவம் என்று கூறப்படுகிறது. கற்பனையால் ஒரு மொழியை உண்டாக்க முடியாது; அது போலவே சின்னங்களின் முறையையும் உருவாக்க முடியாது. உலக மதங்களில், சடங்கிற்காக அமைந்த சின்னங்கள் அனைத்திலும் மனித சமுதாயத்தின் சிந்தனை வெளிப்பாட்டை நாம் காண்கிறோம். சடங்குகள், கோயில்கள் மற்றும் அதுபோன்ற சம்பிரதாயங்கள் எதுவும் தேவையில்லை என்று சொல்லி விடுவது எளிது. இன்றைய சிறுபிள்ளைகூட இதைச் சொல்கிறது. ஆனால் கோயிலுக்குச் சென்று வழிபடுபவர்கள் மற்றவர்களிலிருந்து பல வகையிலும் வேறுபட்டிருப்பதை எல்லோரும் எளிதாக அறிந்துகொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட மதத்தின் கோயில்கள், சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்கள் போன்ற தூல வடிவங்கள் எல்லாம் அந்த மதத்தின் குறிப்பிட்ட சில கருத்துக்களைக் குறித்து நிற்கின்றன. இந்தத் தூல வடிவங்களுடன் அந்தக் குறிப்பிட்ட மதத்தினர் தொடர்பு கொள்ளும்போது, அவை எதைக் குறித்து நிற்கின்றனவோ அந்தக் கருத்துக்களை, எண்ணங்களை அவர்களின் மனத்தில் கொண்டுவருகின்ற தன்மை படைத்தவையாக இருக்கின்றன. எனவே சடங்குகளையும் சின்னங்களையும் தவிர்ப்பது அறிவுடைமை ஆகாது. அவற்றைத் தெரிந்து கொள்வதும் பின்பற்றுவதும் இயல்பாகவே கர்மயோகத்தின் ஒரு பகுதியாகிறது.

இந்தச் செயல்விஞ்ஞானத்தின் அதாவது கர்மயோகத்தின் அம்சங்கள் இன்னும் பல உள்ளன. அவற்றுள் ஒன்று, எண்ணத்திற்கும் வாக்கிற்கும் இடையிலுள்ள தொடர்பையும், வாக்கின் சக்தியால் நாம் சாதிக்கக்கூடியது என்ன என்பதையும் அறிந்து கொள்வதாகும். வாக்கின் சக்தியை ஒவ்வொரு மதமும்

அங்கீகரித்துள்ளது. சில மதங்கள் படைப்பே வாக்கிலிருந்து தான் தோன்றியதாகக் கூறுமளவிற்கு அதனை ஏற்றுக் கொண்டுள்ளன. இறைவனுடைய சிந்தனையின் புற அம்சம்தான் வாக்கு. படைப்பிற்குமுன் கடவுள் சிந்தித்தார், சங்கல்பித்தார். எனவே படைப்பு வாக்கிலிருந்து தோன்றியது.

மனஅழுத்தமும் பரபரப்பும் நிறைந்த இன்றைய நமது உலகாயத வாழ்வால் நமது நரம்புகள் மென்மையை உணரும் தன்மையை இழந்து கடினமாகிவிட்டன. வயதானவர்களாக ஆகுந்தோறும், உலகால் பந்தாடப்படுந்தோறும் கடினமானவர் களாகி விடுகிறோம். அதன் காரணமாக நம்மைச்சுற்றி தெள்ளத் தெளிவாக, நிரந்தரமாக நடைபெறுபவற்றைக் கவனிக் காமல் போகின்ற நிலைக்கு நாம் வந்துவிடுகிறோம். எனினும் சிலவேளைகளில் மனிதத்துவம் தன் இயல்பை நிலைநாட்டு கிறது. அப்போது இந்த அன்றாட நிகழ்ச்சிகளுள் சிலவற்றைப் பற்றிச் சிந்திக்கவும் வியந்து நிற்கவும் செய்கிறோம். இவ்வாறு வியந்து நிற்பதுதான் ஆன்மீக ஒளி பெறுவதற்கான முதற்படி யாகும்.

வாக்கின் தத்துவரீதியான, மத சம்பந்தமான உயர்ந்த மதிப்பைத் தவிர ஒலிச் சின்னங்கள் மனித வாழ்க்கை நாடகத்தில் முக்கிய இடம் வகிப்பதை நாம் காணலாம். நான் உங்களோடு பேசிக் கொண்டிருக்கிறேன். உங்களை நான் தொடவில்லை. நான் பேசுவதால் காற்றில் ஏற்படுகின்ற அதிர்வுகள் உங்கள் காதுகளில் நுழைந்து, நரம்புகளைத் தொட்டு உங்கள் மனத்தில் விளைவுகளை ஏற்படுத்துகின்றன. உங்களால் இதைத் தடுக்க முடியாது. இதைவிட வியப்பிற்குரியது என்ன இருக்க முடியும்? ஒருவன் மற்றவனை முட்டாள் என்று அழைக்கிறான். விளைவு? இவன் எழுந்து முஷ்டியை மடக்கிக்கொண்டு, அவன் மூக்கில் ஓங்கி ஒரு குத்து விடுகிறான். வாக்கின் சக்தியைப் பாருங்கள்! ஒருத்தி துன்பத்தால் அழுது கொண்டிருக்கிறாள், இன்னொருத்தி அங்கு வருகிறாள், அவளிடம் மென்மையான சில வார்த்தைகள் பேசுகிறாள், உடனே இவளது வளைந் திருந்த உடம்பு நிமிர்ந்து நேராகிறது, முகத்தில் புன்னகை அரும்ப ஆரம்பிக்கிறது. வாக்கின் ஆற்றலை எண்ணிப் பாருங்கள்! உயர்ந்த தத்துவங்களிலும் அதுபோலவே அன்றாட வாழ்விலும் அவை ஒரு மாபெரும் சக்தியாக விளங்குகின்றன. நாம் சிந்தித்துப் பார்க்காமல், ஆராய்ந்து பார்க்காமல் இரவும் பகலும் இந்த ஆற்றலைக் கையாண்டு கொண்டிருக்கிறோம்.

இந்தச் சக்தியின் இயல்பைத் தெரிந்துகொள்வதும், அதைச் சிறப்பாகப் பயன்படுத்துவதும்கூட கர்மயோகத்தின் ஒரு பகுதியாகும்.

மற்றவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை என்பதன் பொருள், பிறருக்கு நாம் உதவ வேண்டும், உலகிற்கு நன்மை செய்ய வேண்டும் என்பதே. நாம் எதற்காக உலகிற்கு நன்மை செய்ய வேண்டும்? மேலோட்டமாகப் பார்த்தால் உலகத்திற்கு உதவுவதற்காக, ஆனால் உண்மையில் நமக்கே உதவுவதற்காக. நாம் எப்போதும் உலகத்திற்கு உதவ முயன்றுகொண்டே இருக்க வேண்டும். அது ஒன்றே நமது மிகவுயர்ந்த குறிக்கோளாக இருக்க வேண்டும். நாம் சற்று ஆழ்ந்து சிந்தித்தோமானால், உலகிற்கு நம் உதவி சிறிதுகூடத் தேவையில்லை என்பதைக் காணலாம். நீங்களோ நானோ வந்து உதவி செய்வோம் என்பதற்காக இந்த உலகம் படைக்கப்படவில்லை. 'அழகிய இந்த உலகம் மிகவும் நல்லது. ஏனெனில் நாம் பிறருக்கு உதவி செய்வதற்கான நேரத்தையும் வாய்ப்பையும் இது தருகிறது' என்று ஒரு சொற்பொழிவில் படித்தேன். கேட்கும்போது உணர்ச்சிகரமாகத்தான் இருக்கிறது. ஆனால் உலகத்திற்கு நம் உதவி தேவைப்படுகிறது என்று சொல்வது தெய்வ நிந்தனை ஆகாதா? உலகில் துயரம் மிகுந்திருப்பதை நாம் மறுப்பதற்கில்லை. நாம் சென்று பிறருக்கு உதவி செய்வதே செய்யத்தக்கவற்றுள் சிறந்தது. எனினும் பிறருக்கு உதவுவது என்பது நமக்கே நாம் உதவிக் கொள்வதுதான் என்பதை இறுதியில் உணர்வோம்.

நான் சிறுவனாக இருந்தபோது வெள்ளை எலிகளை வளர்த்து வந்தேன். அவற்றை ஒரு சிறிய கூண்டில் வைத்திருந்தேன். அந்தக் கூண்டினுள் ஒரே அச்சில் சுழல்கின்ற சிறுசிறு சக்கரங்கள் இருந்தன. எலிகள் அந்தச் சக்கரங்களைக் கடப்பதற்காக அதில் ஏறினால் உடனே அவை சுழலத் தொடங்கும். இதனால், எலிகள் நின்ற இடத்திலேயே நிற்குமே தவிர, அவை முன்னால் செல்ல முடியாது. உலகமும் நாம் அதற்கு உதவுவதும் இதே கதைதான். உலகிற்கு உதவுவதால் கிடைக்கின்ற ஒரே உதவி, நாம் பெறுகின்ற நன்னெறிப் பயிற்சிதான்.

இந்த உலகம் நல்லதும் இல்லை, கெட்டதும் இல்லை. ஒவ்வொரு மனிதனும் தனக்கென்று ஓர் உலகை உருவாக்கிக் கொள்கிறான். பார்வையற்றவன் உலகத்தைப்பற்றிச் சிந்திப்பானானால், அது மென்மை அல்லது கடினமானதாகவோ குளிர்ச்சி அல்லது சூடானதாகவோ இருக்கும். நாமும் மகிழ்ச்சி

அல்லது வேதனையின் சேர்க்கை மட்டுமே; இதை நாம் நம் வாழ்வில் நூற்றுக்கணக்கான முறை பார்த்திருக்கிறோம். பொதுவாக இளைஞர்கள் இன்பநோக்குடனும் (Optimistic) முதியவர்கள் துன்பநோக்குடனும் (Pessimistic) உள்ளனர். இளைஞர்களுக்கு, வாழ்க்கை முன்னால் உள்ளது. வயதானவர்களோ தங்கள் காலம் கடந்துவிட்டதென்று குறைபட்டுக் கொள்கிறார்கள்; நிறைவேற்ற முடியாத நூற்றுக்கணக்கான ஆசைகள் அவர்களது மனத்தில் முட்டி மோதுகின்றன. ஆனால் இரு சாராரும் முட்டாள்களே. மனத்தின் எத்தகைய நிலையோடு வாழ்க்கையைப் பார்க்கிறோமோ, அதற்கு ஏற்ப அது நல்லதாகவோ கெட்டதாகவோ தோன்றுகிறது. தன்னளவில் அது நல்லதும் இல்லை, கெட்டதும் இல்லை. நெருப்பு தன்னளவில் நல்லதோ தீயதோ இல்லை. அது நமக்கு இதமான வெதுவெதுப்பு தரும்போது, 'ஆ, எவ்வளவு அருமையான நெருப்பு!' என்கிறோம்; விரலைச் சுட்டுவிட்டால் அதையே குறை கூறுகிறோம். எனினும் நெருப்பு தன்னளவில் நல்லதோ கெட்டதோ இல்லை. அதை நாம் எப்படிப் பயன்படுத்துகிறோமோ அதற்கு ஏற்ற உணர்ச்சியை அது நம்முள் எழுப்புகிறது. உலகமும் அவ்வாறே. அது பூரணமானது. பூரணமானது என்றால், தன் குறிக்கோளைப் பூரணமாக நிறைவேற்றுவதற்கான அனைத்தையும் கொண்டது என்பதே. நாம் இல்லையென்றாலும் அது அழகாக இயங்கிக் கொண்டுதான் இருக்கும் என்பதை உறுதியாக நம்பலாம். அதற்கு உதவி செய்ய வேண்டுமே என்று நினைத்து, நாம் நம் தலையைப் புண்ணாக்கிக் கொள்ள வேண்டியதில்லை.

என்றாலும் நாம் நல்லதையே செய்ய வேண்டும். பிறருக்கு உதவுவது என்பது ஒரு பேறு என்ற எண்ணம் நமக்கு எப்போதும் இருக்குமானால், நன்மை செய்வதற்கான ஆசை மிகவும் ஆற்றல் வாய்ந்த தூண்டுசக்தியாகிவிடும். ஐந்து காசுகளைக் கையில் எடுத்துக்கொண்டு, உயரமான மேடையில் நின்று கொண்டு, 'பிச்சைக்காரா, இதோ' என்று கூறாதீர்கள். அவன் இருந்ததால் தானே அவனுக்குத் தானம் செய்து, அதன்மூலம் உங்களுக்கு நீங்களே உதவ முடிந்தது என்று அவனிடம் நன்றியுடன் இருங்கள். பெற்றுக் கொள்பவனல்ல, கொடுப்பவனே பேறு பெற்றவன். உங்கள் தானத்திறத்தையும் இரக்கத்தையும் இந்த உலகத்தில் செயல்படுத்தி, அதன்மூலம் நீங்கள் தூய்மையும் நிறைநிலையும் அடைவதற்கு ஒரு வாய்ப்பு கிடைத்ததற்காக நன்றி உடையவர்களாக இருங்கள். எல்லா நற்செயல்களுமே

நம்மைத் தூய்மையை நோக்கி, நிறைநிலையை நோக்கியே இட்டுச் செல்கின்றன.

மிஞ்சிப்போனால் அப்படி என்ன பெரிதாகச் சாதித்து விட முடியும்? ஒரு மருத்துவமனையைக் கட்டுவீர்கள், சாலைகள் போடுவீர்கள், அற நிலையங்களை ஏற்படுத்துவீர்கள், அவ்வளவுதானே! ஒரு பெரிய அறக்கட்டளையை ஏற்படுத்தி இரண்டு மூன்று லட்ச ரூபாய் சேர்க்கலாம்; முதல் லட்சத்தில் மருத்துவமனை கட்டலாம், இரண்டாவது லட்சத்தைக் குடி, விருந்து என்று கேளிக்கைகளில் செலவிடலாம்; மூன்றாவது லட்சத்தில் பாதியை இதை நடத்துபவர்கள் திருடிக்கொண்டு போகும்படியும், மீதி இறுதியாக ஏழைகளுக்குப் போய்ச் சேரும்படியும் செய்வீர்கள்! இவற்றால் ஆவதென்ன? இப்படி நீங்கள் கட்டுகின்ற கட்டிடங்களைப் புயல் ஒன்று ஐந்து நிமிடத்தில் தரைமட்டமாக்கிவிடும். அதற்குப் பிறகு என்ன செய்வது? குமுறி எழுகின்ற ஓர் எரிமலை, நாம் அமைத்த எல்லா சாலைகளையும் மருத்துவமனைகளையும் நகரங்களையும் கட்டிடங்களையும் அடித்துச் சென்றுவிடும். எனவே உலகிற்கு நன்மை செய்வது என்றெல்லாம் முட்டாள்தனமாகப் பேசுவதை விட்டுவிடுவோம். உங்களுடையவோ என்னுடையவோ உதவிக்காக அது காத்துக்கொண்டிருக்கவில்லை. என்றாலும் நாம் வேலை செய்ய வேண்டும், எப்போதும் நல்லது செய்துகொண்டே இருக்க வேண்டும். ஏனெனில் அது நமக்கு ஓர் ஆசீர்வாதம். நாம் நிறைநிலை அடைய இது ஒன்றே வழி.

நாம் இதுவரை உதவி செய்துள்ள எந்தப் பிச்சைக்காரனும் நம்மிடம் ஒரு சல்லிக்காசுக்கும் கடமைப்பட்டவனல்ல. எல்லா வழிகளிலும் நாம்தான் அவனிடம் நன்றிக்கடன் பட்டிருக்கிறோம். ஏனெனில் நமது தான சிந்தையைத் தன்மீது செயல்படுத்த அவன் நம்மை அனுமதித்திருக்கிறான். நாம் உலகத்திற்கு நன்மை செய்துவிட்டோம் அல்லது செய்ய முடியும் அல்லது இன்னாருக்கெல்லாம் நாம் உதவி செய்வோம் என்றெல்லாம் நினைப்பது முற்றிலும் தவறு. அது முட்டாள்தனமான எண்ணம். முட்டாள்தனமான எண்ணங்கள் துன்பத்தைத்தான் கொண்டுவரும். நாம் யாரோ ஒருவருக்கு உதவி செய்ததாக எண்ணி, அவன் நமக்கு நன்றிபாராட்ட வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். அவன் அப்படிச் செய்யாவிட்டால் நமது மனம் வேதனைப்படுகிறது. நாம் செய்பவற்றிற்கு ஏன் பிரதி பலனை எதிர்பார்க்க வேண்டும்? நீ உதவி செய்தவனிடம்

நன்றி கொள், அவனைக் கடவுளாக எண்ணிக்கொள். சகோதரர்களுக்கு உதவி செய்வதன்மூலம் இறைவனை வழிபட அனுமதிக்கப்பட்டது ஒரு பெரும்பேறு அல்லவா? நாம் உண்மையிலேயே பற்றற்றவர்களாக இருப்போமானால், இந்த வீண் எதிர்பார்ப்புக்களிலிருந்து வருகின்ற வேதனையிலிருந்து தப்பித்துக் கொள்வோம். எப்போதும் உற்சாகத்துடன் நற்செயல்களைச் செய்தபடி இருப்போம். பற்றற்றுச் செய்யும் செயலினால் ஒருபோதும் துன்பமோ துயரமோ வருவதில்லை. இந்த உலகம் சுகதுக்கங்களின் சேர்க்கையாக என்றென்றும் இவ்வாறே போய்க் கொண்டிருக்கும்.

ஓர் ஏழை இருந்தான். அவனுக்குப் பண ஆசை வந்தது. எப்படியாவது ஒரு பூதத்தை வசமாக்கி விட்டால் பணத்தையும் தான் விரும்பும் எதையும் கொண்டுவருமாறு செய்யலாம் என்று அவன் கேள்விப்பட்டான். எனவே பூதத்தை வசமாக்கத் துடித்தான். பூதத்தைப் பிடித்துத் தருபவரைத் தேடி அலையலானான். கடைசியாக, சக்தி வாய்ந்த முனிவர் ஒருவரிடம் போய்ச் சேர்ந்து, அவரது உதவியை நாடினான். 'பூதத்தை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறாய்?' என்று கேட்டார் அந்த முனிவர். அதற்கு அவன், 'முனிவரே, எனக்காக வேலை செய்வதற்குத் தான் பூதம் வேண்டும். தயவுசெய்து அதைப் பிடிப்பது எப்படி என்று எனக்குச் சொல்லிக் கொடுங்கள்' என்று வேண்டினான். அதற்கு அந்த முனிவர், 'வீணாகக் குழம்பாமல் வீட்டிற்குப் போ' என்று அறிவுரை கூறி அனுப்பினார்.

ஆனால் மறுநாள் அவன் மீண்டும் அந்த முனிவரிடம் சென்று, 'எனக்கு ஒரு பூதத்தைக் கொடுங்கள்! எனக்குக் கண்டிப்பாகப் பூதம் வேண்டும்' என்று கேட்டபடியே இருந்தான். வெறுப்புற்ற முனிவர், 'இதோ இந்த மந்திரத்தைப் பெற்றுக் கொள். இதனை நீ சொன்னால் பூதம் வரும், நீ சொல்கின்ற வேலைகளையெல்லாம் செய்யும். ஆனால் ஒரு விஷயத்தில் நீ எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பூதங்கள் பயங்கரமானவை. அதற்கு நீ எப்போதும் வேலை கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டும். தவறினாயோ அது உன் உயிரை வாங்கி விடும்' என்றார். 'அது ஒன்றும் சிரமம் அல்ல; அதன் ஆயுட் காலம் முழுவதும் வேலை கொடுக்க என்னால் முடியும்' என்று கூறிப் புறப்பட்டான் அவன்.

அங்கிருந்து நேராக ஒரு காட்டிற்குச் சென்ற அவன் அங்கு அமர்ந்து, முனிவர் கொடுத்த மந்திரத்தை ஜபிக்க

ஆரம்பித்தான். நெடுநேரத்திற்குப் பிறகு ஒரு பெரிய பூதம் அவன் முன் தோன்றி, 'நான் ஒரு பூதம். உன் மந்திர சக்திக்குக் கட்டுப்பட்டுள்ளேன். ஆனால் நீ எப்போதும் எனக்கு வேலை தந்துகொண்டே இருக்க வேண்டும். தவறினால் அடுத்த கணம் உன்னையே கொன்றுவிடுவேன்' என்று கூறியது. உடனே அந்த மனிதன், 'எனக்கு ஓர் அரண்மனை கட்டு' என்றான். 'தயார், அரண்மனை கட்டியாகிவிட்டது' என்றது பூதம். 'பணம் கொண்டு வா' என்றான். 'இதோ நீ விரும்பிய பணம்' என்று பணத்தைக் கொடுத்தது பூதம். 'இந்தக் காட்டை அழித்து, இங்கே ஒரு நகரத்தை உருவாக்கு' என்றான். அடுத்த கணமே 'தயார்' என்றது பூதம். காடு அழிந்து நகரம் உருவாகியது. 'இனி என்ன?' என்று கேட்டது பூதம். இனிமேல் இந்தப் பூதத்திற்குக் கொடுக்க எந்த வேலையும் இல்லையே, எதைக் கொடுத்தாலும் ஒரு கணத்தில் செய்துவிடுகிறதே என்று எண்ணிய அவனைப் பயம் பிடித்துக் கொண்டது. அதற்குள் அந்தப் பூதம், 'வேலை கொடுக்கிறாயா? இல்லை உன்னை விழுங்கட்டுமா?' என்று உறுமியது. அந்த அப்பாவியால் அதற்கு எந்த வேலையும் கொடுக்க முடியவில்லை. அஞ்சி நடுங்கிய அவன் ஒரே ஓட்டமாக முனிவரிடம் ஓடினான்.

முனிவரிடம் சென்று, 'சுவாமி, என்னைக் காப்பாற்றுங்கள்' என்று கதறினான். 'நடந்தது என்ன?' என்று அவர் கேட்டதும், 'அந்தப் பூதத்திற்குக் கொடுக்க எந்த வேலையும் இல்லை. நான் எதைச் சொன்னாலும் அது கண நேரத்தில் முடித்துவிடுகிறது. வேலை கொடுக்காவிட்டால் என்னையே தின்றுவிடப் போவதாக இப்போது பயமுறுத்துகிறது' என்று பதிலளித்தான். அதற்குள் பூதம் அங்கேயே வந்து, 'உன்னைத் தின்னப் போகிறேன்' என்று கூச்சல் போட்டவாறே அவனைப் பிடிக்க எத்தனித்தது. அந்த மனிதன் நடுநடுங்கி, தன்னைக் காப்பாற்றுமாறு முனிவரிடம் கெஞ்சினான். முனிவர் அவனிடம், 'பயப்படாதே. நீ தப்ப நான் ஒரு வழி கூறுகிறேன். சுருண்ட வாலுடன் அதோ ஒரு நாய் நிற்கிறதே, பார்த்தாயா, வாளை உருவி அதன் வாலை வெட்டு. அதை அந்தப் பூதத்திடம் கொடுத்து நேராக்கும்படிச் சொல்' என்றார். அவனும் அவ்வாறே வெட்டி, பூதத்திடம் கொடுத்து, 'இதை நேராக்கு' என்றான். பூதம் சுருண்ட நாய்வாலைக் கையில் பிடித்துக்கொண்டு, நிதானமாகவும் எச்சரிக்கையாகவும் நிமிர்த்தியது. ஆனால், விட்ட மறுகணமே அந்த வால் சுருண்டுகொண்டது. மறுபடியும்

சிரமப்பட்டு நிமிர்த்தியது. விட்டதும் உடனே சுருண்டு கொண்டது. மறுபடியும் மிகுந்த சிரமத்துடன் நிதானமாக நிமிர்த்தியது. விட்டால் பழைய கதைதான். இப்படியே நாட் கணக்கில் முயன்ற பூதம் இறுதியில் களைத்துவிட்டது. அதன் பிறகு அது அந்த மனிதனைப் பார்த்து, 'என் வாழ்நாளில் இப்படி ஒரு சங்கடத்தில் மாட்டியதில்லை. முதிர்ந்த திறமை வாய்ந்த ஒரு பூதம் நான். இதுவரை நான் இப்படி ஒரு துன்பத் திற்கு ஆளாகியதில்லை. நாம் ஓர் ஒப்பந்தம் செய்து கொள் வோம். நீ என்னை விட்டுவிடு. நான் உனக்குக் கொடுத்த அனைத்தையும் அதற்குப் பதிலாக வைத்துக் கொள். நான் உனக்குத் துன்பமும் தர மாட்டேன்' என்றது. அந்த மனிதன் மகிழ்ச்சியோடு பூதத்தின் உடன்பாட்டை ஏற்றுக்கொண்டான்.

இந்த உலகமும் நாயின் சுருண்ட வால்போல்தான் இருக் கிறது. அதை நிமிர்த்துவதற்காக மனிதர்கள் காலங்காலமாக முயன்று வருகிறார்கள். ஆனால் விட்டவுடனே அது சுருண்டு கொள்கிறது. சுருண்டு கொள்ளாமல் வேறென்ன செய்யும்? பற்றில்லாமல் செயல்புரிவது எப்படி என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் மனிதன் கொள்கை வெறியன் ஆக மாட்டான். இந்த உலகம் நாயின் சுருண்ட வால் போன்றது, அது ஒருபோதும் நேராகாது என்று தெரிந்து கொண்டால், நாம் கொள்கைவெறியர்களாக மாற மாட்டோம். கொள்கைவெறி மட்டும் இல்லாதிருந்தால் உலகம் இப்போது இருப்பதைவிட எவ்வளவோ மேன்மையுற்றிருக்கும். கொள்கை வெறி மனித இனத்தை முன்னேற்றும் என்று எண்ணுவது தவறு. உண்மையில் இந்தக் கொள்கைவெறி மக்களிடையே வெறுப்பையும் கோபத்தையும் தூண்டி, ஒருவரோடு ஒருவர் சண்டையிடச் செய்து, இரக்கமில்லாதவர்களாக மாற்றி, அவர்களை அவர்கள் இருந்த நிலையிலிருந்து தாழ்த்தவே செய்யும்.

நாம் என்ன செய்கிறோமோ, நம்மிடம் எது இருக்கிறதோ அதுதான் உலகிலேயே சிறந்தது; நாம் செய்யாதது, நம்மிடம் இல்லாதது, அது மதிப்பே இல்லாதது—இதுதான் நமது எண் ணம். எனவே உங்களிடம் கொள்கைவெறி தலைதூக்கும் போதெல்லாம், சுருண்ட நாய்வாலை நிமிர்த்தும் இந்த உதார ணத்தை நினைவுகூருங்கள். உலகத்தை நினைத்து, இரவெல்லாம் தூக்கம் கெட்டு நீங்கள் அவதிப்படத் தேவையில்லை. நீங்கள் இல்லாமலே அது இயங்கிக்கொண்டுதான் இருக்கும்.

கொள்கைவெறியைத் தவிர்த்தால் மட்டுமே உங்களால் திறமையுடன் செயல்பட முடியும். சமமான மனமும், அமைதியும், ஆராய்ந்து தெளியும் குணமும், குளிர்ந்த சிந்தனையும், மிகுந்த கருணையும், அன்பும் உடையவன்தான் உலகிற்கு நன்மை செய்கிறான்; அதன்மூலம் தனக்கும் நல்லது செய்து கொள்கிறான். கொள்கைவெறி பிடித்தவன் முட்டாள்; அவனிடம் இரக்கம் இல்லை. அவனால் உலகத்தையும் செம்மைப்படுத்த முடியாது, தானும் தூய்மையோ நிறைநிலையோ அடைய முடியாது.

இன்றைய சொற்பொழிவின் முக்கியக் கருத்துக்களை இப்போது நினைவுகூர்வோம். முதல் கருத்து: நாம் எல்லோரும்தான் உலகிற்குக் கடன்பட்டிருக்கிறோமே தவிர, உலகம் எந்த வகையிலும் நமக்குக் கடன்பட்டிருக்கவில்லை. உலகத்திற்கு நாம் ஏதாவது நன்மை செய்ய முடிந்தால் அது பெரும்பேறு. உலகிற்கு உதவி செய்வதன்மூலம் உண்மையில் நமக்கு நாமே உதவி செய்து கொள்கிறோம்.

இரண்டாவது கருத்து: இந்த உலகில் கடவுள் ஒருவர் இருக்கிறார். இந்த உலகம் தட்டுத் தடுமாறிக்கொண்டு, உங்களிடமோ என்னிடமோ உதவி தேடி நிற்கிறது என்பது உண்மையல்ல. கடவுள் எப்போதும் இருக்கிறார். அவர் மரணமற்றவர்; எந்த நேரமும் செயல் புரிபவர்; விழித்துக் கொண்டிருப்பவர். அண்ட சராசரங்கள் அனைத்தும் உறங்கும்போதும் அவர் உறங்குவதில்லை. அவர் இடைவிடாமல் செயல்புரிந்து கொண்டே இருக்கிறார்; உலகில் உண்டாகின்ற எல்லா மாற்றங்களும் எல்லா வெளிப்பாடுகளும் அவருடையதே.

மூன்றாவதாக, நாம் யாரையும் வெறுக்கக் கூடாது. இந்த உலகம் நன்மை மற்றும் தீமை இவைகளின் கலப்பாகவே தொடர்ந்து இருக்கும். பலவீனர்களிடம் இரக்கம் கொள்வதும், தவறு செய்பவர்களிடம்கூட அன்பு செலுத்துவதும் நமது கடமை. இந்த உலகம் ஒரு பரந்த நன்னெறிக் கூடம். மேலும் மேலும் ஆன்மீக வலிமை பெறுவதற்காக அதில் நாம் அனைவரும் பயிற்சி செய்ய வேண்டும்.

நான்காவதாக, எந்த வகையான கொள்கைவெறியர்களாகவும் நாம் இருக்கக் கூடாது. ஏனெனில் கொள்கைவெறி என்பது அன்பிற்கு முற்றிலும் எதிரானது. கொள்கைவெறியர்கள், 'நாங்கள் பாவிகளை வெறுப்பதில்லை. பாவங்களையே வெறுக்கிறோம்' என்று தேனொழுக வாய்ஜம்பம் அடிப்பதை நாம்

கேட்கிறோம். ஆனால் பாவிகளையும் பாவங்களையும் உண்மை யிலேயே பிரித்து வேறுபடுத்திக் காண்கின்ற ஒரு மனிதன் இருப்பானானால் அவனது முகத்தைக் காண உலகத்தின் எந்த மூலைக்கும் நான் போகத் தயாராக இருக்கிறேன். அப்படிப் பேசுவது எளிது. பொருளையும் அதன் குணத்தையும் தனித் தனியாகப் பிரித்துக் காண நம்மால் முடியுமானால், நாம் நிறைமனிதர்களாகிவிடுவோம். ஆனால் அது எளிதான காரியமல்ல.

மேலும், நாம் எந்த அளவிற்கு அமைதியானவர்களோ, நமது நரம்புகள் எந்த அளவிற்குப் பதற்றமின்றி இருக்கின் றனவோ, அந்த அளவிற்கு நாம் அதிகமாக அன்பு செலுத்து வோம். நமது வேலையும் சிறந்ததாக இருக்கும். ❑

# 4. கர்மயோகத்தின் லட்சியம்

வெவ்வேறு பாதைகள்மூலம் நாம் ஒரே குறிக்கோளை அடைய முடியும் என்பது வேதாந்த மதத்தின் மகத்தான கருத்தாகும். இந்தப் பாதைகளை நான் பொதுவாக கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்று நான்காகப் பிரித்திருக்கிறேன். ஆனால் இந்தப் பிரிவுகள் துல்லியமாகக் கோடிட்டுப் பிரிக்கப்படாதவை. ஒவ்வொன்றும் முற்றிலும் தனியானவை அல்ல, ஒன்றோடொன்று கலந்தவை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இந்தக் கலப்பில் எந்த அடையாளம் முக்கியமாகத் தென்படுகிறதோ, அதை வைத்து அந்தப் பிரிவை அழைக்கிறோம். கர்மத்தைத் தவிர வேறெதுவும் செய்ய முடியாதவர்கள், பக்தியுடன் வழிபடுவதைத் தவிர வேறெதையும் செய்ய முடியாதவர்கள், வெறும் ஞானத்தைத் தவிர வேறெதுவும் அற்றவர்கள் என்று தனித்தனியாக யாரையும் நீங்கள் காண முடியாது. எத்தகைய மனப்போக்கு, எந்த அடையாளம் ஒருவரிடம் சிறந்து விளங்குகிறதோ, அதற்கு ஏற்ப இந்தப் பிரிவுகள் வகுக்கப்பட்டுள்ளன. கடைசியில் இந்த நான்கு பாதைகளும் சேர்ந்து ஒன்றாகிவிடுவதை நாம் கண்டோம். எல்லா மதங்களும், எல்லா செயல்முறைகளும், எல்லா வழிபாட்டு முறைகளும் ஒரே லட்சியத்தை நோக்கியே நம்மை அழைத்துச் செல்கின்றன.

அந்த லட்சியம் எது என்பதைக் காட்ட நான் முயன்றுள்ளேன். நான் புரிந்துகொண்டபடி, அந்த லட்சியம் முக்திதான், சுதந்திரம்தான். நம்மைச் சுற்றி நாம் காண்கின்ற ஒவ்வொன்றும், அணுவிலிருந்து மனிதர் வரையில், உயிரற்ற ஜடப் பொருளணுவிலிருந்து உலகின் மிகச் சிறந்த உணர்வுப் பொருளான மானிட ஆன்மாவரையில் எல்லாமே சுதந்திரத்திற்காகவே போராடிக் கொண்டிருக்கின்றன. சொல்லப்போனால் பிரபஞ்சம் முழுவதுமே சுதந்திரத்திற்கான இந்தப் போராட்டத்தின் விளைவுதான். எந்தக் கூட்டுப்பொருளை எடுத்துக் கொண்டாலும் அதன் ஒவ்வோர் அணுவும் தன் சொந்த வழியில் செல்லவே, பிற அணுக்களிலிருந்து பறந்து விலகவே

முயல்கின்றன. அவை அவ்வாறு விலகிச் செல்லாமல் மற்ற அணுக்கள் அவற்றைப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. பூமி சூரியனிலிருந்து பறந்தோட முயல்கிறது, சந்திரன் பூமியிலிருந்து விலகிச் செல்லத் துடிக்கிறது. ஒவ்வொரு பொருளும் எல்லையற்று அகன்று வியாபிக்கின்ற தன்மை உடையதாக உள்ளது.

இந்தப் பிரபஞ்சத்தில் நாம் காணும் அனைத்தின் அடிப் படையும் சுதந்திரத்திற்கான ஒரு போராட்டமே. இந்த இயல் பின் உந்துவேகத்தால்தான் மகான் பிரார்த்திக்கிறார்; திருடன் கொள்ளையடிக்கிறான். செயலின் பாதை சரியான திசையில் இல்லை என்றால், அதை நாம் தீமை என்கிறோம். இதே உந்து வேகம் சரியான உயர்ந்த வழியில் வெளிப்படுமானால் அதை நன்மை என்று கூறுகிறோம். ஆனால் இரண்டிலும் உந்து வேகம் ஒன்றுதான்; அது சுதந்திரத்திற்கான போராட்டம். தான் கட்டுண்ட நிலையில் இருப்பதை அறிந்து மகான் வேதனை கொள்கிறார். அதிலிருந்து விடுபட விரும்புகிறார், அதற்காக இறைவனை வணங்குகிறார். குறிப்பிட்ட சில பொருட்கள் தன் னிடம் இல்லையென்பதால் வேதனை கொள்கிறான் திருடன். அந்தத் தேவையைப் பூர்த்தி செய்து, அதிலிருந்து விடுபட விரும்புகிறான், அதனால் திருடுகிறான். எனவே உணர்வுள்ள தாகட்டும் உணர்வற்றதாகட்டும், இயற்கை அனைத்திற்கும் ஒரே லட்சியம் சுதந்திரம்தான். அறிந்தோ அறியாமலோ ஒவ் வொன்றும் அந்தச் சுதந்திரத்திற்காகவே போராடிக் கொண் டிருக்கின்றன. ஆனால் ஒரு மகான் தேடுகின்ற சுதந்திரம், திருடன் தேடுகின்ற சுதந்திரத்திலிருந்து முற்றிலும் வேறு பட்டது. மகான் நாடுகின்ற சுதந்திரம் அவரை எல்லையற்ற இன்பத்திற்கு, விவரிக்க முடியாத ஆனந்தத்திற்கு அழைத்துச் செல்கிறது. திருடன் நேசிக்கின்ற ஒன்றோ அவனது ஆன்மாவை மேலும்மேலும் பல்வேறு சங்கிலிகளால் கட்டிச் சிறையிடுகிறது.

சுதந்திரத்திற்கான இந்தப் போராட்டத்தின் வெளிப் பாட்டை ஒவ்வொரு மதத்திலும் காண முடியும். எல்லா நன் னெறிகளுக்கும் சுயநலமின்மைக்கும், அதாவது சிறிய உடம்பே தாங்கள் என்று மனிதர்கள் எண்ணுவதிலிருந்து விடுபடுவதற் கும் அதுதான் அடிப்படையாக உள்ளது. நல்லது செய்கிறான் என்றால், பிறருக்கு உதவுகிறான் என்றால் 'நான்', 'எனது' என்னும் குறுகிய வட்டத்திற்குள் அவனால் அடங்கிக் கிடக்க முடியவில்லை என்பதே பொருள். இந்தச் சுயநலத்தை எவ்வளவு

விடலாம் என்பதற்கான எல்லைகள் எதுவும் இல்லை. முழுமை யான சுயநலமின்மையே லட்சியம் என்றுதான் மிகச் சிறந்த நன்னெறிக் கோட்பாடுகள் எல்லாமே போதிக்கின்றன. இந்த முழுமையான சுயநலமின்மையை ஒருவன் அடைந்தால் அவன் என்ன ஆவான்? அவன் அதன்பிறகு ஒரு சிறியவனாக, திரு. இன்னார் ஆக இருக்க மாட்டான்; எல்லையற்ற விரிவைப் பெற்றுவிடுவான். முன்பு அவனுக்கிருந்த சிறியதான தனி மனிதத்துவம் என்றென்றைக்குமாக அவனிடமிருந்து போய் விடும். அவன் எல்லைபற்றவனாகி விடுவான்.

இந்த எல்லையற்ற விரிவுதான் எல்லா மதங்களுடைய வும் ஒழுக்கங்களுடையவும் தத்துவங்களுடையவும் போதனை யின் லட்சியமாகும். மனிதனைச் சிறிய உடம்பிற்குள் மட்டுமே காண்பவர்கள் (Personalist) இந்தக் கருத்தைத் தத்துவரீதியாக விளக்குவதைக் கேட்டாலே அஞ்சி நடுங்குவார்கள். ஆனால் நன்னெறிபற்றி உபதேசிக்கும்போது அவர்களும் இதே கருத்தைத்தான் சொல்கிறார்கள்; அவர்களும், மனிதனின் சுயநல மின்மைக்கு ஓர் எல்லையை ஏற்படுத்துவதில்லை. மனிதனை இந்தச் சிறிய உடம்பிற்குள் மட்டுமே காண்பவர்களுள் ஒருவன் தங்கள் பாதைமூலம் முழுமையான சுயநலமின்மையை அடைந்துவிட்டான் என்று வைத்துக் கொள்வோம். அவனை வேறு பாதைகள்மூலம்அதேநிலையைஅடைந்தவர்களிட மிருந்து எப்படி வேறுபடுத்திக் காண்பது? அவன் இந்தப் பிர பஞ்சத்துடன் ஒன்றாகிவிட்டான். அப்படி ஆவதுதான் எல் லோருடைய குறிக்கோளாகும். ஆனால் இந்த அப்பாவிக்குத் தன் ஆராய்ச்சியறிவை அதன் சரியான முடிவுவரை தொடர்ந்து செல்வதற்கான தைரியமில்லை. இதுதான் வேற்றுமை.

தன்னலமற்ற செயலின்மூலம் மனித வாழ்வின் லட்சியமான அந்தச் சுதந்திரத்தை அடைவதுதான் கர்மயோகம். தன்னலச் செயல் ஒவ்வொன்றும் நாம் லட்சியத்தை அடைவதிலிருந்து நம்மை விலக்குகிறது, சுயநலமற்ற செயல் ஒவ்வொன்றும் நம்மை அந்த லட்சியத்தை நோக்கி இட்டுச் செல்கிறது. அதனால்தான் ஒழுக்கம் என்பதற்குக் கொடுக்க முடிந்த ஒரே விளக்கம் இது தான். 'சுயநலமாக உள்ளது தீயொழுக்கம், சுயநலமின்மையாக உள்ளது நல்லொழுக்கம்'.

ஆனால் விளக்கங்களுக்கு வரும்போது விஷயம் அவ்வளவு சுலபமாகத் தெரியவில்லை. உதாரணமாக, நான் முன்பே சொல்லியதுபோல் சூழ்நிலை முக்கியப் பங்கு வகிக்கிறது.

ஒரே செயல் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் சுயநலமற்றதாக இருக்கும், மற்றொரு சூழ்நிலையில் சுயநலமுடையதாகி விடும். எனவே நாம் ஒரு பொதுக்கருத்தை மட்டுமே கூற முடியும்; விளக்கங்களைப் பொறுத்தவரையில் அந்தச் செயல் நிகழ்கின்ற காலம், இடம், சூழ்நிலை இவற்றைக் கருத்தில் கொண்டு முடிவு செய்வதற்கு விட்டுவிட வேண்டும். ஒரு நாட்டில் ஒருவிதமான நடத்தை நன்னெறியாகக் கருதப்படும். மற்றொரு நாட்டில், அதே நடத்தை தீயொழுக்கமாகக் கொள்ளப்படும். ஏனென்றால் சூழ்நிலை வேறுபடுகிறது.

இயற்கை முழுவதன் லட்சியமும் சுதந்திரம்தான், முழுமையான சுயநலமின்மையின்மூலம் மட்டுமே சுதந்திர நிலையை அடைய முடியும். சுயநலமற்ற ஒவ்வோர் எண்ணமும் வாக்கும் செயலும் மனிதனை லட்சியத்தை நோக்கி அழைத்துச் செல்கிறது. எனவே அவை நன்னெறி என்று அழைக்கப்படுகின்றன. இந்த விளக்கம் ஒவ்வொரு மதத்திற்கும் நீதிநெறிக் கோட்பாட்டிற்கும் பொருந்துவதை நீங்கள் காணலாம்.

சில பிரிவுகளில் நீதிநெறி என்பது பரம்பொருளிடமிருந்து, கடவுளிடமிருந்து வந்ததாகக் கூறப்படுகிறது. 'ஒருவன் ஏன் இதைச் செய்ய வேண்டும், ஏன் அதைச் செய்யக் கூடாது?' என்று கேட்டால், 'அது இறைவனின் ஆணை' என்று பதிலளிக்கிறார்கள். எதிலிருந்து வந்ததாக இருந்தாலும், அவர்களின் நீதிநெறிக் கோட்பாட்டிற்கும், 'சிறிய-நான் (self) என்ற உங்கள் தனித்துவத்தை எண்ணாதீர்கள், அதனை விட்டுவிடுங்கள்' என்பதுதான் மையக்கருத்தாக இருக்கிறது. இத்தகைய உன்னதமான நீதிநெறிக் கருத்து இருந்தாலும் தங்கள் தனித்துவத்தை விட வேண்டும் என்று நினைக்கும்போது சிலர் அஞ்சி நடுங்குகிறார்கள். முழுக்கமுழுக்கச் சுயநலமற்ற, தனக்கென்று எதையும் நினைக்காத, தனக்கென்று எதையும் செய்யாத, தனக்கென்று எதையும் பேசாத ஒருவனைப்பற்றி எண்ணிப் பார்த்து, அவனது 'நான்' எங்கே இருக்கிறது என்று சொல்லும்படி, இந்தச் சிறிய-நான் என்பதைப் பற்றிக்கொண்டிருக்கும் ஒருவனிடம் கூறுங்கள். சுயநலம் அழிந்தவனின் தனித்துவம் எங்கே இருக்கிறது என்று அவன் சொல்லட்டும். தனக்கென்று நினைத்தும், செயல்பட்டும், பேசியும் இருக்கும்வரைதான் ஒருவனுக்கு 'நான்' என்ற எண்ணம் இருக்கும். பிறரை, அண்ட சராசரங்களை, எல்லாவற்றையும் மட்டுமே உணரும்போது அவனது 'நான்' அது எங்கே இருக்கிறது? அது ஒரேயடியாக மறைந்துவிட்டது.

எனவே கர்மயோகம் என்பது, சுயநலமின்மை மற்றும் நற்செயல்களைச் செய்வதன்மூலம் சுதந்திரம் பெற வைக்கின்ற ஒரு நீதிநெறிக் கோட்பாடாகும், ஒரு நெறியாகும். கர்மயோகி எந்தவிதமான கோட்பாட்டையும் நம்ப வேண்டும் என்ற அவசியமில்லை. அவனுக்குக் கடவுளிடம்கூட நம்பிக்கை வேண்டும் என்பதில்லை, ஆன்மா எது என்பதுபற்றிக் கவலைப் பட வேண்டியதில்லை, தத்துவங்களைப்பற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை. சுயநலமின்மையை உணர வேண்டும் என்ற சிறப்பான சொந்த லட்சியம் அவனுக்கு உள்ளது. அதை அவன் தன் சொந்த வழியில் நிறைவேற்றிக் கொள்ளவும் வேண்டும். வாழ்வின் ஒவ்வொரு கணத்திலும் இந்த உண்மை அவன் முன் பிரகாசித்துக்கொண்டே இருக்க வேண்டும். ஏனெனில் ஞானி தன் அறிவின்மூலமாகவும் அக விழிப்புணர்வின்மூலமாக வும், பக்தன் தன் அன்பின்மூலமாகவும் தீர்வு காண்கின்ற அதே பிரச்சினையை ஒரு கர்மயோகி எந்தவிதமான கொள்கை மற்றும் கோட்பாட்டின் துணையின்றி, வெறும் செயலின்மூலம் மட்டுமே தீர்வு காண வேண்டியவனாக இருக்கிறான்.

இப்போது அடுத்த கேள்வி வருகிறது. செயல் என்பது என்ன? உலகத்திற்கு நன்மை செய்வது என்பது என்ன? நம்மால் உலகிற்கு நன்மை செய்ய முடியுமா? சரியாகச் சொல்வதானால் உலகிற்கு உதவி செய்ய முடியாது; சாதாரண நிலையிலிருந்து சொல்வதானால் உதவி செய்ய முடியும். நிரந்தரமான நன்மையை நாம் உலகிற்குச் செய்ய முடியாது. அப்படிச் செய்ய முடியு மானால் உலகம் இப்போதுள்ள நிலையில் இருந்திருக்காது. நாம் ஒரு மனிதனின் பசியை ஐந்து நிமிடங்களுக்குத் தீர்த்து வைக்கலாம். ஆனால் அவனுக்கு மறுபடியும் பசி எடுக்கவே செய்யும். ஒருவனுக்கு நாம் எவ்வளவு இன்பங்களை அள்ளி வழங்கினாலும், அவையெல்லாம் கண நேரத்திற்கே நிலைக்கும். திரும்பத்திரும்ப வருகின்ற இந்த சுகதுக்கம் எனப்படுகின்ற காய்ச்சலை நிரந்தரமாகக் குணப்படுத்த யாராலும் முடியாது. அழியாத இன்பம் என்ற ஏதாவது ஒன்றை உலகத்திற்குக் கொடுக்க முடியுமா? கடலில் ஏதாவது ஓரிடத்தில் வெற்றிடத்தை ஏற்படுத்தாமல் அலைகள் எழ முடியாது. மனிதனின் தேவை களையும் ஆசைகளையும் கருத்திற்கொண்டு பார்த்தால், இந்த உலகத்தில் இருக்கின்ற நல்ல பொருட்களின் ஒட்டுமொத்தம் எப்போதும் ஒரே அளவில்தான் இருக்கிறது. அதைக் குறைக் கவோ கூட்டவோ முடியாது. இன்று நாம் அறிந்துள்ள

மனித இனத்தின் வரலாற்றை எடுத்துக் கொள்ளுங்கள். இதே துன்பங்களையும் இன்பங்களையும், இதே சுகங்களையும் துக்கங்களையும், இதே உயர்வு தாழ்வுகளையும் எப்போதும் நாம் காணவில்லையா? அன்றும் இன்றும் சிலர் பணக்காரர்களாகவும் சிலர் ஏழைகளாகவும், சிலர் உயர்ந்தவர்களாகவும் சிலர் தாழ்ந்தவர்களாகவும், சிலர் ஆரோக்கியமாகவும் சிலர் நோயாளிகளாகவும்தானே இருக்கிறார்கள்! இந்த வேற்றுமைகள் பழங்காலத்தில் எகிப்தியரிடமும் கிரேக்கர்களிடமும் ரோமானியரிடமும் இருந்தது போலவே இன்று அமெரிக்கரிடம் உள்ளன. வரலாற்றைப் பொறுத்தவரையில் இவை என்றும் ஒரேபோல்தான் இருக்கின்றன.

சுகதுக்கங்களின் இந்த நீக்க முடியாத வேற்றுமைகளின் கூடவே அவற்றை நீக்குவதற்கான போராட்டமும் தொடர்ந்து நடைபெற்று வருவதை நாம் காண்கிறோம். பிறரது வாழ்க்கைப் பாதையைச் சமன்படுத்திச் சீராக்குவதற்காகக் கடினமாகப் பாடுபடுகின்ற ஆயிரமாயிரம் ஆண்களையும் பெண்களையும் வரலாற்றின் ஒவ்வொரு காலகட்டமும் தந்துள்ளது. ஆனால் அவர்கள் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றார்கள்? பந்தைஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அடித்து விளையாட மட்டுமே நம்மால் முடியும். உடம்புநிலையில் வேதனைகளை விலக்கினால் அது மனத்தின் நிலையில் செல்கிறது. தாந்தே காட்டும் நரகத்தைப் போலுள்ளது இது.[1] அங்கே கருமிகளுக்கு தங்கக்கட்டி ஒன்றைக் கொடுக்கிறார்கள். அவர்கள் அதை உருட்டி உருட்டி ஒரு மலையுச்சிக்கு எடுத்துச் செல்ல வேண்டும். ஆனால் அவர்கள் சிறிதுதூரம் மேலே கொண்டு சென்றதும் அது உருண்டு கீழே வந்துவிடும். பொற்காலம்[2] பற்றிய நமது பேச்சுக்கள் எல்லாம் சிறுவர்கதைபோல் கேட்க மிகவும் சுவையாக உள்ளன; அதற்குமேல் அவற்றிற்கு மதிப்பில்லை. பொற்காலம்பற்றிக் கனவு காண்கின்ற எல்லா நாடுகளுமே, அந்தக் காலம் வரும்போது அதன் மேன்மையான அம்சம் எல்லாம் பிறரைவிடத் தங்களுக்கு வர வேண்டும் என்று நினைக்கிறார்கள். இதுதான் பொற்காலத்தைப்பற்றிய அற்புதமான சுயநலமற்ற கருத்தாம்!

---

1. தாந்தே (Dante) ஓர் இத்தாலியக் கவிஞர் (கி.பி.1265-1329). இவரது புகழ் பெற்ற காவியமான Divine commedia-வில் Inferno என்ற பகுதியில் நரகத்தைப் பற்றிய வர்ணனை வருகிறது.

2. Millennium; துன்பம் எதுவுமின்றி எங்கும் இன்பம் மட்டுமே நிலவுவதாகக் கருதப்படுகின்ற ஒரு காலம்.

நம்மால் இந்த உலகத்தின் மகிழ்ச்சியை அதிகரிக்க முடியாது, அதுபோலவே வேதனையையும் அதிகப்படுத்த முடியாது. இந்த உலகத்தில் காணப்படுகின்ற இன்பதுன்பங்களின் மொத்த அளவு எப்போதும் ஒருபோலவே இருக்கும். நாம் செய்வதெல்லாம் இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கத்திற்கும், அந்தப் பக்கத்திலிருந்து இந்தப் பக்கத்திற்கும் அதைத் தள்ளுவது தான். ஆனால் அது எப்போதும் ஒரே அளவாகத்தான் இருக்கிறது, ஏனெனில் அப்படி இருப்பது அதன் இயல்பு. ஏற்றமும் இறக்கமும், எழுச்சியும் வீழ்ச்சியும் உலகத்தின் இயல்பு. அப்படியில்லை என்று கருதுவது, சாவே இல்லாமல் வாழ்வோம் என்று கூறுவதைப் போன்றது. சாவே இல்லாத வாழ்வு என்பது சிறிதும் பொருளற்றது. ஏனெனில் வாழ்வு என்றால் அதில் சாவு என்பதும் அடங்கியே உள்ளது. அதுபோலவே இன்பம் என்றால் அதில் துன்பமும் அடங்கியே உள்ளது.

விளக்கு எரியும்போது அழிந்துகொண்டே இருக்கிறது, அதுதான் அதனுடைய வாழ்க்கை. நீங்கள் வாழ்வை விரும்பினால், அதற்காக ஒவ்வொரு கணமும் செத்துக்கொண்டே இருக்க வேண்டும். வெவ்வேறு கோணங்களில் பார்க்கப்பட்ட ஒரே பொருளின் வெவ்வேறு தோற்றங்களே வாழ்வும் சாவும். ஒரே அலையின் வீழ்ச்சியும் எழுச்சியுமே அவை, இரண்டும் சேர்ந்து ஒரு முழுமையாகின்றன. ஒருவன் 'வீழ்கின்ற' பக்கத்தைப் பார்த்துவிட்டு துன்பநோக்கு உடையவனாகிறான்; மற்றொருவன் 'எழுகின்ற' பக்கத்தைப் பார்த்துவிட்டு இன்பநோக்கு உடையவனாகிறான். சிறுவன் பள்ளி செல்கிறான். தாயும் தந்தையும் அவனுக்கு வேண்டியதையெல்லாம் கவனித்துக் கொள்கிறார்கள், அவனுக்கு எல்லாமே ஆனந்தமயமாக இருக்கின்றன. அவனுடைய தேவைகளும் சொற்பமே. அவன் எல்லாவற்றையும் இன்பமயமாகக் காண்கிறான். வயதானவனோ பல்வேறான தன் அனுபவங்களின் காரணமாக, பரபரப்பின்றி இருக்கிறான். அவனது உற்சாகம் பெருமளவு தணிந்துவிடுகிறது. அதுபோலவே, நாற்புறமும் அழிவின் சின்னங்களே காணப்படுகின்ற பழைய நாடுகள், புதிய நாடுகளைவிட உணர்ச்சி குன்றிக் காணப்படுவது இயல்புதான். இந்தியாவில், 'ஆயிரம் ஆண்டுக்கு நாடு, ஆயிரம் ஆண்டுக்குக் காடு' என்ற ஒரு பழமொழி உள்ளது. இவ்வாறு நாடு காடாவதும் காடு நாடாவதும் எங்குமே நடந்து கொண்டுதான் இருக்கிறது; பார்க்கின்ற பக்கத்தைப் பொறுத்து மக்களை இன்பநோக்கு

அல்லது துன்பநோக்குக் கொண்டவர்களாக ஆக்கத்தான் செய்கிறது.

அடுத்து, நாம் எடுத்துக்கொள்வது சமத்துவக் கருத்து. இந்தப் பொற்காலக் கருத்துக்கள் மனிதர்களை வேலையில் ஈடுபடுத்துவதற்குச் சிறந்த தூண்டுசக்திகளாக விளங்கி வருகின்றன. கடவுள் இந்த உலகை ஆள்வதற்கு வரப் போகிறார், அதன்பின் எந்தவித வேற்றுமைகளும் இருக்காது என்று இந்தக் கருத்தைப் பல மதங்களும் தங்கள் ஓர் அம்சமாகப் பிரச்சாரம் செய்கின்றன. இந்தக் கோட்பாட்டைப் பிரச்சாரம் செய்பவர்கள் வெறும் கொள்கைவெறியர்கள். ஆனால் மனிதர்களுள் மிக நேர்மையானவர்களும் இந்த வெறியர்கள்தான். இந்தக் கொள்கைவெறியின் வெறும் கவர்ச்சியின் அடிப்படையில்தான் கிறிஸ்தவ மதம் பிரச்சாரம் செய்யப்பட்டது. இந்தக் கவர்ச்சி தான் கிரேக்க மற்றும் ரோமானிய அடிமைகளை அந்த மதத்தின் பால் ஈர்த்தது. பொற்காலத்தை உருவாக்கப்போகின்ற இந்த மதத்தின்கீழ் இனிமேல் அடிமைத்தனமே இருக்காது, உண்பதற்கும் உடுப்பதற்கும் அளவில்லாமல் கிடைக்கும் என்று அவர்கள் நம்பினார்கள். அதனால் கிறிஸ்தவ மதத்தில் கூட்டம்கூட்டமாகச் சேர்ந்தார்கள். இந்தக் கருத்தை முதலில் பிரச்சாரம் செய்தவர்கள் கொள்கைவெறி பிடித்த அறிவிலிகள் என்பதில் சந்தேகமே இல்லை; ஆனால் அவர்கள் மிகவும் நேர்மையானவர்கள்.

நவீன காலத்தில், இந்தப் பொற்கால லட்சியம் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற உருவில் எல்லாம் வருகிறது. இதுவும் கொள்கைவெறிதான். உண்மையான சமத்துவம் என்பது இந்த உலகத்தில் எந்தக் காலத்திலும் இல்லாததும், ஒரு போதும் இருக்க முடியாததும் ஆகும். இங்கே நாம் எல்லோரும் எப்படிச் சமமாக இருக்க முடியும்? இருக்க முடியாத இந்தச் சமத்துவத்தின் பொருள் அழிவு என்பதே. இந்த உலகத்தை இப்போதைய நிலையில் வைத்திருப்பது எது?சமநிலையிலிருந்து வழுவியதுதான். பிரபஞ்ச சிருஷ்டிக்கு முந்தைய பிரளய நிலையில் முழுமையான சமநிலை இருந்தது. அதன்பிறகு இந்தப் பிரபஞ்சத்திற்கு உருவம் கொடுத்த ஆற்றல்கள் எவ்வாறு தோன்றின? போராட்டத்தால், போட்டியால், சண்டையால் தான். ஜடப்பொருளின் அணுக்களைச் சமநிலையில் வைத்தால், படைப்புச் செயல் ஏதாவது நடைபெறுமா? முடியாது என்று விஞ்ஞானம் கூறுவது நமக்குத் தெரியும். தண்ணீரின்

மேற்பரப்பில் ஒரு சிறு சலனத்தை ஏற்படுத்துங்கள், தண்ணீரின் ஒவ்வொரு துளியும் ஒன்றுடன் ஒன்று முட்டிமோதியவாறு மீண்டும் பழைய அமைதியான நிலைக்குத் திரும்ப முயல்வதைக் காணலாம். இதுபோலவே நாம் பிரபஞ்சம் என்று அழைக்கின்ற இந்த எல்லாமே, அதிலுள்ள பொருட்கள் எல்லாமே முழுமை யான சமநிலையைத் திரும்ப அடைவதற்காகப் போராடிக் கொண்டிருக்கின்றன. அதை அடைந்துவிட்டால் மறுபடியும் ஒரு சலனம் எழுகிறது. உடனே ஜடப்பொருளணுக்கள் சேர் கின்றன, படைப்புச் செயல் நடைபெறுகிறது. சமநிலையின்மை தான் படைப்பின் உண்மையான அடிப்படை. அதேவேளையில், சமநிலையைக் குலைக்கின்ற சக்திகள் படைப்பிற்கு எவ்வளவு முக்கியமோ, சமநிலையை அடையப் போராடுகின்ற சக்திகளும் அதே அளவு முக்கியமானதாகும்.

முழுமையான சமத்துவம், அதாவது எல்லா நிலைகளிலும் போராடிக் கொண்டிருக்கின்ற எல்லா சக்திகளும் முழுமையான சமநிலை அடைவது என்பது இந்த உலகில் ஒருபோதும் ஏற் பட முடியாததாகும். அத்தகைய நிலையை அடையுமுன்னர் இந்த உலகம் எந்த உயிரும் வாழத் தகுதியற்ற இடமாகிவிடும்; யாருமே இங்கு இருக்க மாட்டார்கள். எனவே இந்தப் பொற் காலம், முழுமையான சமத்துவம் என்பதெல்லாம் நடை முறைக்கு ஒத்துவராத கருத்துக்கள் என்பது மட்டுமல்ல, அவற்றை நடைமுறையில் கொண்டு வர முயற்சி செய்தோமா னால், நிச்சயமாக இந்த உலகின் அழிவுநாளுக்கே அது நம்மை அழைத்துச் செல்லும்.

மனிதர்களுக்கிடையே வேறுபாடுகளை உண்டாக்குவது எது? பெருமளவிற்கு அறிவுத்திறன்தான். நாம் எல்லோரும் ஒரே அறிவுத் திறத்துடன் பிறந்திருக்கிறோம் என்று பைத்தியக் காரனைத் தவிர வேறு யாரும் இன்று சொல்ல மாட்டார்கள். வேறுபட்ட ஆற்றல்களுடன்தான் நாம் இந்த உலகிற்கு வரு கிறோம். சிலர் மாமனிதர்களாகவும் சிலர் சாதாரண மனிதர் களாகவும்தான் பிறக்கிறோம். பிறக்குமுன்பே தீர்மானிக்கப் பட்டுவிட்ட இந்த நிலையிலிருந்து விடுபட வழியே இல்லை.

செவ்விந்தியர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த அமெரிக்காவில் வாழ்ந்து வருகிறார்கள். அப்போதுதான் உங்கள் முன்னோர் சிலர் இங்கு வந்தார்கள். இந்த நாட்டில் அவர்கள் எத்தனை மாற்றங்களை ஏற்படுத்தி விட்டார்கள்! எல்லோருமே சமம் என்றால், ஏன் அந்தச் செவ்விந்தியர்கள்

இங்கே எந்த முன்னேற்றத்தையும் கொண்டு வரவில்லை? நகரங்களை உண்டாக்கவில்லை? உங்கள் முன்னோர் வேறுபட்ட அறிவுத்திறத்துடனும், பூர்வ சம்ஸ்காரங்களுடனும் இங்கே வந்தார்கள். அவை செயல்பட்டு இவ்வாறெல்லாம் வெளிப்பட்டது. முழுக்கமுழுக்க வேற்றுமையே இல்லாத நிலை என்பது மரணமே. எதுவரை இந்த உலகம் இருக்குமோ, அதுவரையில் இந்த வேற்றுமைகளும் இருக்கும்; இருந்தேயாக வேண்டும். படைப்பின் ஒரு கல்பம், ஒரு சுழற்சி முடியும்போது மட்டுமே முழுமையான சமத்துவம் நிலவுகின்ற பொற்காலம் வரமுடியும். அதற்கு முன்னால் சமத்துவம் என்பது இருக்க முடியாது. என்றாலும் இந்தப் பொற்காலத்தை அடைவதற்கான ஆர்வம் ஒரு மகத்தான தூண்டுசக்தியாகச் செயல்படுகிறது. படைப்பு நடப்பதற்குச் சமமின்மை தேவையாவதுபோல், அதைச் சமப்படுத்துவதற்கான முயற்சியும் அவசியம். முக்திபெற்று இறைவனிடம் திரும்பச் செல்வதற்கான போராட்டம் இல்லையென்றால் படைப்பும் உண்டாகாது. இந்த இரண்டு சக்திகளுக்கு இடையே உள்ள வேற்றுமைதான், மனிதர்கள் செயல்படுவதற்கான நோக்கங்களின் இயல்பைத் தீர்மானிக்கிறது. செயல் புரிவதற்கான இந்த நோக்கங்கள் எப்போதும் இருந்து கொண்டே இருக்கின்றன; அவற்றுள் சில பந்தத்திற்கு இட்டுச் செல்வனவாகவும் மற்றுள்ளவை முக்திக்கு அழைத்துச் செல்வனவாகவும் உள்ளன.

சக்கரத்திற்குள் சக்கரங்களாக உள்ள இந்த உலகம் ஒரு பயங்கர எந்திரம். நாம் அதில் கையை வைத்து மாட்டிக்கொண்டோமானால் நம் கதை முடிந்தது. குறிப்பிட்டதொரு கடமையைச் செய்து முடித்ததும் ஓய்வாக இருக்கலாம் என்றுதான் நாம் ஒவ்வொருவரும் நினைக்கிறோம். ஆனால் அந்தக் கடமையில் ஒரு பகுதியைச் செய்து முடிக்கும் முன்பே மற்றொரு கடமை தயாராகக் காத்திருக்கிறது. உலகமாகிய இந்த மகத்தான சிக்கலான எந்திரத்தால் நாம் அனைவரும் இழுத்துச் செல்லப்படுகிறோம். இதிலிருந்து மீள இரண்டே வழிகள்தான் உள்ளன. ஒன்று, அந்த எந்திரத்தைப்பற்றிய கவலைகளை எல்லாம் விட்டுவிட்டு, அதனை அதன் போக்கில் போகவிட்டுவிலகி நிற்பது, அதாவது ஆசைகளை விடுவது. சொல்வதற்கு இது மிகவும் எளிது. ஆனால் செயலுக்கு வரும்போது பெரும்பாலும் முடியவே முடியாதது. கோடியில் ஒருவரால்கூட இது முடியுமா என்பது எனக்குச் சந்தேகமே. மற்ற வழி, சம்சாரத்தில் மூழ்கி,

செயலின் ரகசியத்தை அறிந்து கொள்வது. இதுதான் கர்ம யோகத்தின் வழி. உலக எந்திரத்தின் சக்கரங்களிலிருந்து விலகி ஓடாதீர்கள்! அதனுள்ளேயே நின்று செயலின் ரகசியத்தை அறிந்து கொள்ளுங்கள்! உள்ளிருந்தபடியே சரியான முறையில் வேலை செய்தால் வெளியேறவும் முடியும். வெளியேறுவதற்கான வழியும் இந்த எந்திரத்தின் வழியாகத்தான் உள்ளது.

செயல் என்றால் என்ன என்பதைக் கண்டோம். இயற்கையின் அஸ்திவாரத்தின் ஒரு பகுதியே செயல். அது எப்போதும் நடந்துகொண்டேதான் இருக்கும். இறைவனை நம்புபவர்கள் இதை இன்னும் நன்றாகப் புரிந்து கொள்வார்கள். நமது உதவியை எதிர்பார்க்கின்ற அளவிற்கு அவர் திறமையற்றவர் அல்ல என்பது அவர்களுக்குத் தெரியும். இந்தப் பிரபஞ்சம் எப்போதும் நடந்து கொண்டிருந்தாலும், நமது லட்சியம் சுதந்திரம், நமது லட்சியம் சுயநலமின்மை. கர்மயோகத்தின்படி, செயல் புரிவதன்மூலமாக அந்த லட்சியத்தை அடைய வேண்டும். இந்த உலகை முற்றிலும் இன்பமயமாக்குவது போன்ற கருத்துக்கள் எல்லாம் கொள்கைவெறியர்களுக்கான தூண்டுசக்திகள் என்ற அளவில் நல்லவையாக இருக்கலாம். ஆனால் கொள்கை வெறி நன்மையைப்போல் தீமையையும் கொண்டு வருகிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டும். சுதந்திரம் பெறுவதற்கான நமது இயல்பான ஆர்வத்தைத் தவிர, செயல்புரிவதற்கு வேறு தூண்டு சக்தி எதற்கு என்று கேட்கிறான் கர்மயோகி. சாதாரண லட்சியங்களைக் கடந்தவர்களாக இருங்கள். ‘செயல் புரியவே உங்களுக்கு உரிமை இருக்கிறது. ஆனால் அதன் பலன்களைப் பெறுவதற்கு உரிமை இல்லை.’[1] இதைப் புரிந்துகொள்வதற்கும் செயல்முறைப் படுத்துவதற்குமான பயிற்சி பெற மனிதனால் முடியும் என்று கர்மயோகி கூறுகிறான். நன்மை செய்வது என்பது ஒருவனில் ஒரு பகுதியாகிவிட்டால் அவன் வெளியிலிருந்து எந்தத் தூண்டுசக்தியையும் தேட மாட்டான். நாம் நன்மை செய்வோம், ஏனென்றால் நன்மை செய்வது நல்லது. சொர்க்கத்திற்குப் போவதற்காக நற்செயல் செய்தாலும் அதுவும் அவனைப் பந்தப்படுத்திக் கீழே வீழ்த்திவிடுகிறது என்கிறான் கர்மயோகி. எந்தச் செயலானாலும், அதில் சிறிதேனும் சுயநலம் கலந்திருக்குமானால் அது நமக்குச்

---

1. கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன ।
—கீதை, 2. 47.

சுதந்திரத்தைத் தருவதற்குப் பதிலாக நமது கால்களில் மற்றொரு சங்கிலியைக் கட்டிப் பிணைக்கிறது.

எனவே கர்ம பலன்களை எல்லாம் விட்டுவிடுங்கள், அதில் பற்றுக் கொள்ளாதீர்கள், இது ஒன்றே வழி. நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள்—இந்த உலகம் நாமல்ல, நாமும் இந்த உலகமல்ல. உண்மையில் நாம் உடம்பு அல்ல. உண்மையில் நாம் வேலை செய்வதே இல்லை. நிரந்தரமான ஓய்விலும் அமைதியிலும் திளைத்திருக்கின்ற ஆன்மாவே நாம். நாம் ஏன் நம்மை எதனோடும் பந்தப்படுத்திக் கொள்ள வேண்டும்? நாம் சிறிதும் பற்றில்லாதவர்களாக இருக்க வேண்டும் என்று சொல்வது மிகவும் நல்லது. ஆனால் அதைச் சாதிப்பது எப்படி? சுயநல நோக்கம் சிறிதும் இல்லாமல் செய்யப்படுகின்ற ஒவ்வொரு நல்ல காரியமும் புதிய சங்கிலியைப் பிணைப்பதற்குப் பதிலாக ஏற்கனவே நம்மைப் பிணைத்திருக்கின்ற ஒவ்வொரு சங்கிலிகளையும் உடைக்கிறது. எந்தவொரு பிரதிபலனையும் கருதாமல் நாம் இந்த உலகத்தினுள் அனுப்புகின்ற ஒவ்வொரு நல்ல சிந்தனையும், அங்கே சேமித்து வைக்கப்பட்டு, நம்மைக் கட்டியிருக்கின்ற ஒவ்வொரு சங்கிலியை உடைத்து, நம்மை மேன்மேலும் தூயவர்களாக்கி, இறுதியில் மனிதருள் புனிதர்களாக ஆக்குகிறது.

இவையெல்லாம் பித்துக்குளித்தனமாக, ஏதோ தத்துவமயமாக, நடைமுறைக்குச் சாத்தியமாகாத, கொள்கையளவில் மட்டுமே இருக்கக் கூடியவையாகத் தோன்றலாம். பகவத் கீதையின் இந்தக் கருத்திற்கு எதிரான பல வாதங்களையும் நான் படித்திருக்கிறேன். பலன் கருதாமல் பணி செய்ய முடியாது என்றே பலரும் சொல்கிறார்கள். கொள்கைவெறியால் தூண்டப்பட்டுச் செயல்படுவதைத் தவிர, பலன் கருதாப் பணி என்ற ஒன்றை அவர்கள் கண்டதே இல்லை. அதனால்தான் இப்படிச் சொல்கிறார்கள்.

கர்மயோகத்தை உண்மையிலேயே தமது அன்றாட வாழ்வில் கடைப்பிடித்த ஒரு மனிதரைப்பற்றி மட்டும் கூறி இதனை நிறைவு செய்கிறேன். அவர் புத்தர். கர்மயோகத்தை முழுமையாக நடைமுறையில் கொண்டு வந்த யாராவது இருப்பார்களானால் அது அவர் மட்டுமே. அவரைத் தவிர உலகின் எல்லா மகான்களுக்கும் அவர்கள் சுயநலமில்லாமல் செயல்படுவதற்கு புறத் தூண்டுசக்திகள் இருந்தன. புத்தரைத் தவிர உலகின் அனைத்து மகான்களையும் இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம்.

ஒரு பிரிவினர் தாங்கள் இறைவனின் அவதாரங்கள் என்றும் மற்றொரு பிரிவினர் தங்களை இறைவனின் தூதர்கள் என்றும் கருதினர். அவர்கள் உபயோகித்த மொழி எவ்வளவுதான் ஆன்மீகமாக இருந்தாலும், இரு பிரிவினருமே தாங்கள் செயல் படுவதற்கான தூண்டுசக்தியை வெளியிலிருந்தே பெற்றார்கள். வெளியிலிருந்து பிரதிபலனையும் எதிர்பார்த்தார்கள். ஆனால், 'கடவுளைப்பற்றிய பல்வேறான உங்கள் கொள்கைகளைப்பற்றி எனக்குக் கவலையில்லை. ஆன்மாவைப்பற்றிய நுட்பமான கோட்பாடுகளையெல்லாம் விவாதித்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்? நன்மை செய், நல்லவனாக இரு! அது உனக்குச் சுதந்திரத்தைத் தரும். சத்தியம் என்பது எதுவாக இருந்தாலும் அந்தச் சத்தியத்திடம் உன்னை அழைத்துச் செல்லும்' என்று கூறிய ஒரே மகான் புத்தர்தான்.

முற்றிலும் எந்தவிதச் சுயநல நோக்கமும் இல்லாமல் வாழ்ந்தவர் புத்தர். அவரைவிட அதிகமாகச் செயல் புரிந்தவர் தான் யார்? எல்லோரையும்விட இவ்வளவு உயரத்தில் திளைத்த ஒருவரை உலக வரலாற்றில் எனக்குக் காட்டுங்கள். இத்தகைய ஆழ்ந்த தத்துவ ஞானமும் இவ்வளவு பரந்த இதயமும் கொண்ட ஒரே ஒருவரை மட்டுமே மனிதகுலம் இதுவரை தோற்றுவித் துள்ளது. இந்த மகத்தான தத்துவ ஞானி மிகவுயர்ந்த தத்து வத்தை உபதேசித்தார், அதேவேளையில் மிகச் சாதாரணமான விலங்குகளிடமும் ஆழ்ந்த இரக்கம் உடையவராக இருந்தார். அவர் தனக்காக எந்தத் தனி உரிமையையும் கோரவில்லை. அவர்தான் முழுக்கமுழுக்க எந்தவிதமான தூண்டுதல்களும் இல்லாமல் செயல்பட்ட லட்சியக் கர்மயோகி. இதுவரை பிறந்த வர்களுள் மாமனிதர் என்று அவரை மனித வரலாறு காட்டு கிறது. ஒப்புவமை இல்லாத அளவிற்குக் கனிவும் அறிவும் அவரிடம் சங்கமித்திருந்தது. இத்தகைய சங்கமத்தை இதுவரை பூமி கண்டதில்லை. இதுவரை வெளிப்பட்டவற்றுள் மகோன் னதமான ஆன்ம சக்தியின் நிலைக்களன் அவர். உலகம் முதன் முதலாகக் கண்ட மாபெரும் சீர்திருத்தவாதி அவர். 'சாஸ் திரங்கள் கூறுகின்றன என்பதற்காக ஒன்றை நம்பாதீர்கள். உங்கள் தேசியப் பாரம்பரியம் என்பதற்காக நம்பாதீர்கள்! சிறு வயதிலிருந்தே உங்களுக்கு உபதேசிக்கப்பட்டது என்பதற் காக நம்பாதீர்கள்! உங்கள் அறிவால் ஆராய்ந்து பாருங்கள்! பகுத்து உணர்ந்துகொண்ட பிறகு, அது எல்லோருக்கும் நன்மை தரும் என்று கண்டால் அதனை நம்புங்கள், வாழ்வில் அதைச்

செயல்படுத்துங்கள். மற்றவர்களும் அதைப் பின்பற்ற உதவுங்கள்' என்று முதன்முதலாகத் துணிவுடன் முழங்கியவர் அவர்.

பணமோ, புகழோ வேறு எந்தப் பிரதிபலனையுமோ எதிர்பார்க்காமல் யார் வேலை செய்கிறார்களோ, அவர்களே சிறப்பாக வேலை செய்ய முடியும். அப்படிச் செயல்புரிய முடியும்போது அவன் புத்தராகிறான். உலகத்தையே மாற்றி விடக்கூடிய அளவு வேலை செய்வதற்கான ஆற்றல் அவனிட மிருந்து பொங்கி எழுகிறது. கர்மயோகத்தின் மிகவுயர்ந்த லட்சியத்தின் பிரதிநிதியாக அவன் விளங்குகிறான். ❑

## ஆ. உயர்நிலைப் பாடங்கள்

# 1. அவரவர் நிலையில் அவரவர் பெரியவரே!

பிரகிருதி அல்லது இயற்கை மூன்று சக்திகளால் ஆக்கப்பட்டிருப்பதாக சாங்கியத் தத்துவம் கூறுகிறது. இவை சம்ஸ்கிருதத்தில் சத்வம், ரஜஸ், தமஸ் என்று அழைக்கப்படுகின்றன. தூல உலகில் இவை முறையே சமநிலை, செயல்நிலை, மந்தநிலை என்ற நிலைகளில் வெளிப்படுவதாக நாம் கொள்ளலாம். இருள் அல்லது செயலற்றிருப்பது தமஸின் அடையாளம். ஈர்ப்பு மற்றும் விலக்கு சக்திகளாக வெளிப்பட்டுச் செயல்புரிவது ரஜஸ். இந்த இரண்டின் சமநிலையே சத்வம்.

ஒவ்வொரு மனிதனிடமும் இந்த மூன்று சக்திகளும் உள்ளன. சிலவேளைகளில் தமஸ் தலைதூக்கி நிற்கும். அப்போது நாம் சோம்பேறிகளாக இருப்போம், நம்மால் எந்த வேலையும் செய்ய முடியாது; ஏதோ சில கருத்துக்களைப் பிடித்துக்கொண்டோ, வெறும் சோம்பேறித்தனம் காரணமாகவோ கட்டுண்டிருப்போம். மற்ற நேரங்களில் செயல்நிலை ஓங்குகிறது. சிலவேளைகளில் இரண்டையும் சமன்படுத்துகின்ற அமைதி நிலவுகிறது. வெவ்வேறு மனிதர்களில் பொதுவாக இந்த மூன்று சக்திகளுள் ஏதாவது ஒன்று மேலிட்டு நிற்கும். ஒருவன் செயலற்று, மந்தமாக சோம்பேறியாக இருக்கிறான். இன்னொருவனிடம் செயல், ஆற்றல், சக்தி வெளிப்பாடு இவை மிகுந்திருக்கிறது. இன்னும் சிலரோ செயல், செயலின்மை என்ற இரண்டுமே சமன்படுவதால் விளைகின்ற இனிமையும் அமைதியும் மென்மையும் நிறைந்தவர்களாகக் காணப்படுவார்கள். மிருகங்கள், மரங்கள், மனிதர்கள் என்று படைப்பு முழுவதிலுமே இந்த வெவ்வேறு சக்திகளின் அதிகமான அல்லது குறைந்த வெளிப்பாட்டை நாம் காணலாம். கர்மயோகத்தில் இந்த மூன்று குணங்களையும் சிறப்பாக விளக்க வேண்டியுள்ளது. அவை என்ன, அவற்றை எப்படி உபயோகிப்பது என்பதைக் கற்பித்து, நாம் இன்னும் சிறப்பாகச் செயல் புரிவதற்குக் கர்மயோகம் உதவுகிறது.

மனித சமுதாயம் என்பது பல படிகளுடன் கூடிய ஓர் அமைப்பாக உள்ளது. நன்னெறியைப்பற்றி நம் எல்லோருக்கும் தெரியும். கடமை என்றால் என்ன என்பதும் நாம் அறிந்ததே. அதேவேளையில் நன்னெறி என்பதன் பொருள் நாட்டிற்குநாடு பெரிதும் மாறுபட்டிருப்பதையும் நாம் காண்கிறோம். ஒரு நாட்டில் நன்னெறியாகப் போற்றப்படுவது இன்னொரு நாட்டில் மிகவும் இழிந்த செயலாகத் தூற்றப்படுகிறது. உதாரணமாக, சில நாடுகளில் சகோதரர்களின் பிள்ளைகள் தங்களுக்குள் திருமணம் செய்து கொள்வார்கள்; மற்றொரு நாட்டிலோ இது முற்றிலும் முறைகேடாகக் கருதப்படுகிறது. சில நாடுகளில் சகோதரனின் மனைவியைத் திருமணம் செய்து கொள்ளலாம், இன்னொரு நாட்டில் இது தவறென்று கருதப்படும். ஒரு நாட்டில் மக்கள் ஒருமுறைதான் திருமணம் செய்து கொள்ளலாம், இன்னொரு நாட்டில் பலமுறை திருமணம் அனுமதிக்கப்படுகிறது. இவ்வாறு, நன்னெறி என்று கூறப்படுபவை அனைத்திலுமே அளவுகோல் பெரிதும் வேறுபடுகிறது என்றாலும், ஒழுக்கம் என்பதற்கு உலகம்தழுவியதான அளவுகோல் ஒன்று இருந்தேயாக வேண்டும் என்று நாம் எண்ணுகிறோம்.

கடமையின் விஷயமும் இதுதான். அதுபற்றிய கருத்தும் நாட்டிற்கு நாடு வெகுவாக வேறுபடுகிறது. ஒரு நாட்டில் ஒருவன் சில காரியங்களைச் செய்யவில்லையென்றால் கடமை தவறியவனாகக் குறைகூறப்படுவான். அதே செயல்களை அவன் வேறொரு நாட்டில் செய்தாலோ அவன் தவறாக நடந்து கொண்டதாகக் குறைகூறப்படுகிறான். எனினும் கடமைபற்றிய உலகம்தழுவிய ஏதாவது கருத்து இருக்க வேண்டும் என்று நாம் எண்ணுகிறோம். இதுபோலவே சமுதாயத்தில் ஒரு குறிப்பிட்ட பிரிவினர் சிலவற்றைத் தங்கள் கடமையாகக் கருதுகிறார்கள். அதே நேரத்தில் மற்றொரு பிரிவினர் அது முழுக்கமுழுக்கத் தவறு என்று கருதுகிறார்கள்; அத்தகைய செயல்களைச் செய்ய நேருமானால் துடித்துவிடுகிறார்கள்.

இரு வழிகள் நமக்குத் தென்படுகின்றன—ஒன்று அறிவிலிகளின் வழி; உண்மையை அடைய ஒரே வழிதான் உள்ளது, மற்றவை அனைத்தும் தவறு என்று அது கூறுகிறது. மற்றொன்று சான்றோரின் வழி; நமது மன அமைப்பிற்கும் நாம் வாழ்கின்ற நிலைக்கும் ஏற்பக் கடமையும் ஒழுக்கமும் மாறலாம் என்று அவர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். நாம் முக்கியமாக அறிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் கடமை

என்பதிலும் ஒழுக்கம் என்பதிலும் படிகள் இருக்கின்றன; வாழ்க்கையின் ஒரு நிலையில், சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் கடமையாக இருப்பது மற்றொன்றில் அவ்வாறு இருக்காது, இருக்கவும் முடியாது என்பதுதான்.

இதற்கு ஓர் உதாரணம் கூறுவோம். எல்லா ஆச்சாரியர்களுமே 'தீமையை எதிர்க்காதீர்கள்', அஹிம்சையே மிக உயர்ந்த ஒழுக்க லட்சியம் என்று உபதேசித்து இருக்கிறார்கள். இந்த உபதேசத்தை நம்மில் சிலர் அப்படியே கடைப்பிடிக்க முயல்வோமானால் சமுதாய அமைப்பே இடிந்து தூள் தூளாகிவிடும். அயோக்கியர்கள் நம் சொத்துக்களையும் வாழ்க்கையையும் பறித்துக்கொண்டு தங்கள் விருப்பப்படி நம்மை ஆட்டி வைப்பார்கள்; இது நமக்குத் தெரியும். இத்தகைய அஹிம்சை சமுதாயத்தில் ஒரேயொரு நாள் கடைப்பிடிக்கப் பட்டாலும்கூட பெரும் நாசமே விளைவாக இருக்கும். ஆனாலும் 'தீமையை எதிர்க்காதீர்கள்' என்ற அந்த உபதேசத்தின் உண்மையை உள்ளுணர்வின் மூலமாக நம் இதய ஆழங்களில் உணரவே செய்கிறோம். இது மிகவுயர்ந்த லட்சியமாக நமக்குத் தோன்றுகிறது. என்றாலும் இந்தக் கோட்பாட்டை உபதேசிப்பது என்பது மனித குலத்தின் பெரும் பகுதியை நிந்திப்பதற்கே சமமாகும். அது மட்டுமல்ல, தாங்கள் எப்போதும் தவறையே செய்கிறோம் என்ற எண்ணத்தை அது மனிதர்களிடம் உண்டாக்கிவிடும். அவர்கள் எந்த வேலையைச் செய்தாலும் அவர்களின் மனசாட்சியில் சந்தேகங்கள் எழுந்தவண்ணமே இருக்கும். இது அவர்களைப் பலவீனப்படுத்துகிறது. இவ்வாறு தொடர்ந்து தங்களை மறுப்பது, மற்ற பலவீனங்கள் உண்டாக்கும் தீமையை விட அதிகத் தீமையைத் தரும். எந்த மனிதன் தன்னைத்தானே வெறுக்கத் தொடங்கிவிட்டானோ, அவனுக்கு அழிவின் வாசல் எப்போதோ திறந்துவிட்டது. இது ஒரு நாட்டிற்கும் பொருந்தும். நமது முதற்கடமை நம்மை நாம் வெறுக்காமல் இருப்பது தான். ஏனெனில் நாம் முன்னேற வேண்டுமானால் முதலில் நமக்கு நம்மிடம் நம்பிக்கை வேண்டும்; பிறகு கடவுளிடம் நம்பிக்கை வேண்டும். தன்னிடம் நம்பிக்கை இல்லாதவன், கடவுளிடமும் ஒருபோதும் நம்பிக்கை வைக்க முடியாது.

எனவே நமக்கு எஞ்சியுள்ள வழி, இந்த ஒழுக்கம், கடமை பற்றிய கருத்துக்கள் எல்லாம் சூழ்நிலைக்கு ஏற்ப மாறுபடும் என்பதை ஏற்றுக் கொள்வதுதான். தீமையை எதிர்ப்பது என்பது எல்லா வேளைகளிலும் தவறாக முடியாது, அது தன்னளவில்

தவறானதல்ல. அது மட்டுமல்ல, சில சூழ்நிலைகளில் தீமையை எதிர்க்க வேண்டியது ஒருவனது கடமையாகவும் அமையக் கூடும். பகவத்கீதையைப் படிக்கும்போது, மேலை நாட்டின ராகிய உங்களுள் பலருக்கு அதன் இரண்டாம் அத்தியாயம் திகைப்பை அளிக்கலாம். எதிரணியில் நண்பர்களையும் உறவினர்களையும் காண்கின்ற அர்ஜுனன் போரிட மறுக் கிறான், எதிர்க்க மறுத்துவிடுகிறான். அஹிம்சையே அன்பின் மிகவுயர்ந்த லட்சியம் என்று அதற்கு அவன் காரணம் காட்டு கிறான். அவனை ஸ்ரீகிருஷ்ணர் 'கபடதாரி' என்றும் 'கோழை' என்றும் அழைக்கிறார். எந்த விஷயத்திலும் இரண்டு கோடி களும், அதாவது இரண்டு எல்லைகளும் ஒன்றுபோலவே தோன்றும் என்பது நாம் அனைவரும் நினைவில்கொள்ள வேண்டிய ஒரு பெரிய பாடமாகும். இருக்கின்ற எல்லையும் (Extreme Positive) இல்லாத எல்லையும் (Extreme Negative) எப் போதும் ஒன்றுபோலவே உள்ளது. அதிர்வுகள் மிகக் குறைவாக இருந்தாலும் நம்மால் ஒளியைக் காண முடியாது, மிக விரை வாக, அதிகமாக இருந்தாலும் நம்மால் அதைக் காண முடியாது. அதுபோல்தான் ஒலியும். மிகமிகத் தாழ்வான சுரத்தில் இருந் தால் ஒலியைக் கேட்க முடியாது, மிக அதிகமாக இருந்தாலும் கேட்க முடியாது.

எதிர்ப்பதற்கும் எதிர்க்காதிருப்பதற்கும் இடையிலுள்ள வித்தியாசமும் இதுபோன்றதே. ஒருவன் தனது பலவீனத்தால், சோம்பலால், இயலாமையால், எதிர்க்காமல் இருக்கிறான்; எதிர்க்கக் கூடாது என்பதற்காக அல்ல. இன்னொருவன், தான் நினைத்தால் யாரும் தடுக்க முடியாத அளவிற்குத் தன்னால் எதிர்க்க முடியும் என்பது தெரிந்தவன். இருந்தாலும் அவன் பகைவர்களை அடிக்கவில்லை; மாறாக, வாழ்த்துகிறான். பல வீனம் காரணமாக எதிர்க்காமல் இருந்தவன் பாவம் செய்தவன் ஆகிறான், அதனால் அஹிம்சை அல்லது எதிர்க்காமலிருப்பதன் விளைவாக வருகின்ற எந்தப் பலனையும் அவன் அடைய முடியாது. மற்றவனின் விஷயத்திலோ, அவன் எதிர்த்திருப் பானானால் அவனும் பாவம் செய்தவனாகிறான். புத்தர் தமது சிம்மாசனத்தைத் துறந்தார், தமது பதவியைத் துறந்தார். அது உண்மையான துறவு! ஆனால் துறப்பதற்கு எதுவும் இல்லாத பிச்சைக்காரன் ஒருவனிடம் துறவு என்ற பேச்சே எழ முடியாது.

அஹிம்சை, லட்சியம், அன்பு முதலியவற்றைப்பற்றிப் பேசும்போது உண்மையில் நாம் எதைக் குறிப்பிடுகிறோம்

என்பதில் கவனமாக இருக்க வேண்டும். எதிர்ப்பதற்கான வலிமை நம்மிடம் இருக்கிறதா இல்லையா என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். ஆற்றல் இருந்தும் அதைப் பயன் படுத்துவதில்லை என்ற உறுதியுடன் எதிர்க்காதிருந்தோமானால் அது மகத்தான அன்பின் விளைவாக எழுந்த செயல். நம்மால் எதிர்க்கவே முடியாத நிலையில் இருந்துகொண்டு, மேலான அன்பின் காரணமாகத்தான் அப்படி எதிர்க்காமல் இருக் கிறோம் என்று எண்ணி, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வது அஹிம்சைக்கு முற்றிலும் எதிரான ஒன்று. தனக்கு எதிராகப் பெரிய படையைப் பார்த்த அர்ஜுனன் கோழையாகிவிட் டான். அந்த 'அன்பு' காரணமாக நாட்டிற்கும் அரசனுக்கும் தான் ஆற்ற வேண்டிய கடமையை மறந்தான். அதனால்தான் ஸ்ரீகிருஷ்ணர் அவனைக் கபடன் என்று கூறினார்—'நீ புத்தி சாலி போல் பேசுகிறாய். உன் நடத்தையோ உன் கோழைத் தனத்தைக் காட்டிக் கொடுத்துவிடுகிறது. எனவே எழுந்து நில். போரிடு.'

இதுதான் கர்மயோகத்தின் மையக் கருத்து. அஹிம்சையே மிகவுயர்ந்த லட்சியம், அப்படி எதிர்க்காமல் இருப்பது நடை முறைவாழ்வில் மாபெரும் சக்தியின் வெளிப்பாடு; தீமையை எதிர்ப்பது என்பது அஹிம்சை என்னும் ஒரு மாபெரும் சக்தி வெளிப்பாட்டை அடைவதற்கான பாதையில் ஒரு படி—இந்த உண்மையை அறிபவனே கர்மயோகி. இந்த உயர்ந்த லட்சியத்தை அடையும் வரையில் தீமையை எதிர்ப்பதே ஒருவனின் கடமை. அவன் செயலில் ஈடுபடட்டும், அவன் போராடட்டும், முடிந்த அளவு ஆற்றலுடன் எதிர்க்கட்டும். அப்போது மட்டுமே, எதிர்க்கின்ற ஆற்றலைப் பெற்ற பிறகு மட்டுமே அஹிம்சை ஒரு நற்பண்பாக அமைய முடியும்.

நான் ஒருமுறை என் நாட்டில் ஒருவனைச் சந்தித்தேன். அவனை ஏற்கனவே எனக்குத் தெரியும். அவன் ஒரு முட்டாள், மந்தபுத்திக்காரனும்கூட. அவனுக்கு எதுவுமே தெரியாது. தெரிந்து கொள்ளும் ஆர்வமும் அவனிடம் கிடையாது. ஒரு மிருகம்போல் வாழ்ந்து வந்தான். அவன் என்னிடம் வந்து, 'கடவுளை அறிவது எப்படி? முக்தி பெறுவது எப்படி?' என்று கேட்டான். நான் அவனிடம், 'உனக்குப் பொய் சொல்லத் தெரியுமா?' என்று கேட்டேன். 'தெரியாது' என்றான் அவன். உடனே நான், 'அப்படியானால் அதைத் தெரிந்து கொள். ஒரு மிருகம்போல், கட்டைபோல் இருப்பதைவிடப் பொய்

சொல்வது எவ்வளவோ சிறந்தது. உறைந்து போனதுபோல் இருக்கிறாய் நீ. எல்லா செயல்களுக்கும் அப்பாற்பட்ட அமைதி யான சமநிலையை நீ இதுவரை அடையவில்லை. ஒரு கெட் டதைக்கூடச் செய்ய முடியாத அளவிற்கு நீ மந்தபுத்தி உடைய வனாக இருக்கிறாய்!' என்றேன். அவனுடையது சற்று அதிகப் படியான உதாரணம். கேலியாகத்தான் நான் அவனிடம் இதைச் சொன்னேன். நான் சொன்னதன் பொருள் என்னவென்றால், செயல்நிலையைக் கடந்து பூரண அமைதியை அடைய வேண்டுமானால் ஒருவன் ஆர்வத்துடன் செயலில் ஈடுபட வேண்டும்.

செயலற்றிருப்பதை எல்லா வகையிலும் தவிர்க்க வேண்டும். செயல்நிலை என்றாலே எதிர்த்தல் என்பதுதான் எப்போதும் பொருள். மனம் மற்றும் உடல் சம்பந்தமான எல்லா தீமை களையும் எதிர்த்துப் போரிடு. எதிர்ப்பதில் வெற்றி பெற்ற பின்னரே அமைதி வரும். 'யாரையும் வெறுக்காதே, தீமையை எதிர்க்காதே' என்றெல்லாம் சொல்வது மிகவும் எளிது. ஆனால் பொதுவாக அதைப் பின்பற்றினால் எப்படியிருக்கும் என்பது நமக்குத் தெரிந்ததே. சமுதாயத்தின் கண்கள் நம்மீது இருக்கும் போது நாம் பெரிய அஹிம்சாவாதி போல் நடிக்கலாம். ஆனால் அந்த நேரம் முழுவதும் நமது இதயம் அரித்துக் கொண் டிருக்கும். அஹிம்சையின் விளைவாக வருகின்ற அமைதியை ஒருசிறிதுகூட நாம் அனுபவிக்கவில்லை. இதைவிட எதிர்ப்பது நல்லதென நமக்குத் தோன்றுகிறது. நீ பணம் சேர்க்க ஆசைப் படுகிறாய். அதேவேளையில் பணத்தைக் குறிக்கோளாக உடையவனை உலகம் முழுவதும் கொடியவன் என்று நினைக்கிறது என்பதை அறிந்தால் பணத்தைச் சேர்ப்பதற்கான போராட்டத்திலும் ஒருவேளை இறங்கத் துணிய மாட்டாய். ஆனால் உன் மனமோ பணம் பணம் என்றே இரவும் பகலும் அலைந்து கொண்டிருக்கும். இது கபடத்தனம்! இதனால் எந்தப் பலனும் இல்லை. உலகத்தில் குதித்துப் போராடு, பட வேண்டிய வேதனைகளையெல்லாம் படு! இன்பங்களையெல்லாம் அனு பவி! அதன்பிறகே துறவு வரும், அதன்பிறகே அமைதி வரும். எனவே பதவி, ஆசை, அதுஇது என்று எல்லா ஆசைகளையும் பூர்த்தி செய்துகொள்! அவை எல்லாம் மிகமிகச் சாதாரண மானவை என்பதை நீ புரிந்துகொள்ளும் காலம் அதன்பின்னர் வரும். இப்படி இந்த ஆசைகளையெல்லாம் நிறைவேற்றிக் கொள்ளாதவரையில், செயல்புரிகின்ற நிலையைக் கடக்காத

வரையில் அமைதிநிலையை, சாந்தநிலையை, சரணாகதி நிலையை அடைய முடியாது.

அமைதி, துறவு போன்ற கருத்துக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உபதேசிக்கப்பட்டு வந்துள்ளன. குழந்தைப் பருவத்திலிருந்தே எல்லோரும் அதைக் கேட்டிருக்கிறார்கள். ஆனால் உண்மையில் அந்த நிலையை அடைந்துள்ளவர்கள் மிகச் சிலரே. நான் உலகில் பாதிக்குமேல் பயணம் செய்திருக் கிறேன். இத்தகைய அமைதியையும் எதிர்க்காத நிலையையும் அடைந்துள்ள இருபது பேரையாவது பார்த்திருப்பேனா என்பது சந்தேகம்தான்.

ஒவ்வொரு மனிதனும் தனக்குரிய சொந்த லட்சியத்தை எடுத்துக் கொண்டு அதை அடையப் பாடுபட வேண்டும். அடைய முடியும் என்ற நம்பிக்கையே இல்லாத, பிறருடைய லட்சியங்களை எடுத்துக் கொள்வதைவிட இது முன்னேற் றத்திற்கு நிச்சயமான வழியாகும். உதாரணமாக, ஒரு குழந்தை யிடம் இருபது மைல் நடந்து போகச் சொல்வதாக வைத்துக் கொள்வோம். ஒன்று, அந்தக் குழந்தை பிணமாகும். ஏதோ ஆயிரத்தில் ஒன்று தவழ்ந்து, ஊர்ந்து, களைத்துப்போய், அரைப் பிணமாகச் சென்றுசேரும். உலகத்தில் பொதுவாக நாம் செய்ய முயல்வதும் இது போன்றதுதான்.

எந்தச் சமுதாயத்தை எடுத்துக் கொண்டாலும் அதிலுள்ள ஆண் பெண் அனைவரும் ஒரேபோன்ற மனமும், திறமையும், செயல்புரியும் ஆற்றலும் பெற்றவர்களாக இருக்க மாட்டார் கள். அவர்களுக்கு வெவ்வேறு லட்சியங்கள் வேண்டும். எந்த லட்சியத்தையும் கேலி செய்ய நமக்கு உரிமை கிடையாது. தன் லட்சியத்தை அடைய ஒவ்வொருவரும் இயன்றவரையில் முயல வேண்டும். உனது அளவுகோலால் என்னை முடிவு செய்வதும், என் அளவுகோலால் உன்னைப்பற்றித் தீர்மானிப்பதும் சரி யானதல்ல. சவுக்கு மரத்தை ஆப்பிள் மரத்தின் தகுதியை வைத்து மதிப்பிடக் கூடாது. அதுபோலவே ஆப்பிள் மரத்தையும் சவுக்கு மரத்தின் தகுதியை வைத்து மதிப்பிடக் கூடாது. ஆப்பிள் மரத்தை மதிப்பிட வேண்டுமானால் ஆப்பிள் மரத்திற்குள்ள தகுதியை வைத்தும் சவுக்கு மரத்தை அதன் தகுதியின் பேரிலும் தான் மதிப்பிட வேண்டும்.

வேறுபாடுகளுக்கிடையே ஒருமை என்பதுதான் படைப் பின் திட்டம். மனிதர்களுக்கிடையே எவ்வளவுதான் வேறு பாடுகள் இருந்தாலும், அனைவருக்கும் பின்னால் ஒருமை

உள்ளது. பலதரப்பட்ட மனிதர்களும் பல்வேறு இனங்களும் படைப்பில் இயல்பாக அமைகின்ற வேறுபாடுகளே. எனவே எல்லோரையும் ஒரே அளவுகோலால் அளக்கவோ எல்லோருக்கும் ஒரே லட்சியத்தை வைக்கவோ கூடாது. அப்படிச் செய்வது, இயல்பிற்கு மாறுபட்ட வாழ்க்கைப் போராட்டத்தை உருவாக்குவதாகும். அதன்விளைவாக மனிதன் தன்னைத்தானே வெறுக்கத் தொடங்குகிறான். அறநெறியிலும் நற்செயல் புரிவதிலிருந்தும் தடுக்கப்படுகிறான். ஒவ்வொருவரும் உன்னதமான தங்கள் சொந்த லட்சியத்தை அடைவதற்காக நடத்தும் போராட்டத்தில் அவர்களை ஊக்கப்படுத்துவதும், அதே வேளையில் முடிந்தவரையில் அந்த லட்சியம் சத்தியத்தை ஒட்டியிருக்கும்படி அமைத்துத் தருவதுமே நமது கடமை. மிகப்பழங்காலத்திலிருந்தே இந்த உண்மையை இந்துமத நீதி நெறிக் கோட்பாடு ஏற்றுக் கொண்டுள்ளது.

இந்துமத சாஸ்திரங்களும் நீதிநூல்களும் இல்லறத்தார், துறவியர், பிரம்மச்சாரிகள் என்று வெவ்வேறு நிலையில் இருப்பவர்களுக்கு வெவ்வேறு நியதிகளைக் கூறுகின்றன. மனித குலம் முழுவதற்கும் பொதுவான கடமைகளைத் தவிர ஒவ்வொரு மனிதனுக்கும் சில தனிக் கடமைகளும் இருப்பதாக இந்துமத சாஸ்திரங்கள் கூறுகின்றன. இந்து, தன் வாழ்க்கையை ஒரு மாணவனாகத் தொடங்குகிறான். பின்னர் திருமணம் செய்துகொண்டு இல்லறத்தானாகிறான். வயதான காலத்தில் குடும்பக் கடமைகளிலிருந்து விடுபடுகிறான். இறுதியில் குடும்ப வாழ்வைத் துறந்து துறவியாகிறான். வாழ்வின் இந்த ஒவ்வொரு நிலைக்கும் தனிக்கடமைகள் வரையறுக்கப் பட்டுள்ளன.

இந்த வாழ்க்கை நிலைகள் எதுவும் தன்னளவில் உயர்ந்தவையும் அல்ல, தாழ்ந்தவையும் அல்ல. திருமணம் செய்து கொண்டவனின் வாழ்க்கை, திருமணம் செய்துகொள்ளாமல் மதப் பணிகளில் ஈடுபட்டுள்ள பிரம்மச்சாரியின் வாழ்வைப் போல் மிகச் சிறந்ததுதான். தெருவில் செல்லும் தோட்டியும் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கின்ற அரசனைப் போன்றே உயர்ந்தவனும் உன்னதமானவனும்தான். சிம்மாசனத்திலிருந்து மன்னனை அகற்றி, தோட்டியின் வேலையைச் செய்யச் சொல்லிப் பாருங்கள். அதுபோலவே தோட்டியைச் சிம்மாசனத்தில் அமர்த்தி ஆளச் சொல்லுங்கள். எனவே சம்சார வாழ்வில் இருப்பவனைவிட, அதைத் துறந்து வாழ்பவன்

உயர்ந்தவன் என்று கூறுவது முட்டாள்தனம். வாழ்க்கையில் இருந்துகொண்டே இறைவனை வழிபடுவது, உலகத்தைத் துறந்து அதன் துன்பங்களிலிருந்து விடுபட்டு வாழ்கின்ற சுலபமான வாழ்க்கையைவிட மிகவும் கடினமானது.

வாழ்க்கையின் நான்கு நிலைகள், பிற்காலத்தில் இல்லறத் தான், துறவி என்று இரண்டாகக் குறைக்கப்பட்டன. இல்லறத் தான் திருமணம் செய்து கொள்கிறான், நாட்டின் குடிமகனாக இருந்தபடியே கடமைகளைச் செய்கிறான். துறவி தன் ஆற்றல் முழுவதையும் பிரச்சாரம், வழிபாடு என்று மத வாழ்க்கையில் செலவிடுகிறான். இதனைப்பற்றிக் கூறுகின்ற மஹா நிர்வாண தந்திரம் என்ற நூலிலிருந்து நான் சில பகுதிகளை இப்போது படிக்கிறேன். குடும்பத்தில் வாழ்ந்துகொண்டு எல்லா கடமை களையும் சிறப்பாகச் செய்வது எவ்வளவு கடினமானது என் பதை இதிலிருந்து நீங்கள் புரிந்துகொள்ளலாம்:

'இல்லறத்தான் இறைபக்தி கொண்டவனாக இருக்க வேண்டும். இறை ஞானமே அவனது லட்சியமாக இருக்க வேண்டும். அதேவேளையில் அவன் இடையீடின்றிச் செயல் புரிய வேண்டும், தன் கடமைகள் அனைத்தையும் செய்ய வேண்டும். செயல்கள் அனைத்தின் பலனையும் அவன் இறை வனுக்கு அர்ப்பணிக்க வேண்டும்.' (8. 23)

வேலை செய்துவிட்டு, அதன் பலனைப் பொருட்படுத் தாமல் இருப்பது; ஒருவனுக்கு உதவி செய்தபின் அவன் நன்றி யுடன் இருக்க வேண்டும் என்று எண்ணாமல் இருப்பது; ஒரு வேலையைச் செய்துவிட்டு அதனால் பெயரோ புகழோ வருமா, எதுவுமே கிடைக்காமல் போகுமா என்பதுபற்றிச் சிறிதும் சிந்திக்காமல் இருப்பது— இவை மிகவும் கடினமான காரியங் கள். உலகமே புகழும் என்றால், வடிகட்டின கோழைகூட வீரனாக மாறிவிடுவான். சமுதாயம் ஏற்றுக்கொள்ளுமானால், அது தன்மீது புகழ்க் கொடியை ஏற்றுகிறது என்றால் கடைந் தெடுத்த முட்டாள்கூட வீரதீரச் செயல்களைச் செய்துவிடு வான். ஆனால் பிறர் ஆமோதிப்பதை எதிர்பார்க்காமல் தொடர்ந்து நன்மை செய்வது என்பதுதான் உண்மையிலேயே ஒருவன் செய்ய முடிந்த தியாகங்களுள் தலைசிறந்தது.

'இல்லறத்தானின் முதற்கடமை வாழ்க்கைக்கான பொருள் ஈட்டுவது. ஆனால் பொய் சொல்லியோ ஏமாற்றியோ கொள்ளையடித்தோ அவன் அதைச் செய்யாமல் இருப்பதில் கவனமாக இருக்க வேண்டும். தன் வாழ்க்கை இறைவனுக்கும்,

ஏழைஎளியவர்களுக்கும் சேவை செய்வதற்காக அமைந்துள்ளது என்பதை அவன் மறக்கக் கூடாது.' (8. 24)

'தாயும் தந்தையும் கண்கண்ட தெய்வங்கள் என்பதை உணர்ந்து இல்லறத்தார் எப்போதும் எல்லா வழிகளிலும் அவர்களை மகிழ்ச்சியுறச் செய்ய வேண்டும். தாயும் தந்தையும் மகிழ்ச்சி அடைந்தால் இறைவனும் மகிழ்ச்சி அடைகிறார். பெற்றோரிடம் கடின வார்த்தைகள் பேசாத பிள்ளை உண்மை யிலேயே சிறந்தவன்.' (8. 25, 26)

'பெற்றோரின் முன்னர் ஒருவன் கேலியோ கிண்டலோ செய்யக் கூடாது, படபடப்பாக நடந்துகொள்ளக் கூடாது, கோபத்தையோ ஆத்திரத்தையோ காட்டக் கூடாது. தாய் தந்தையரின் முன் பணிந்து வணங்க வேண்டும், அவர்களின் முன்னால் எழுந்து நிற்க வேண்டும், அவர்கள் கூறும்வரை உட்காரக் கூடாது.' (8. 30, 31)

'தாய், தந்தை, குழந்தைகள், மனைவி மற்றும் ஏழைகளுக்கு உணவும் உடையும் வழங்காமல் இல்லறத்தான் தான் மட்டும் ஏற்றுக்கொள்வானானால் அவன் பாவம் செய்தவனாவான். இந்த உடல் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவர்கள் தாயும் தந்தையும். அவர்களுக்கு நன்மை செய்வதற்காக ஓராயிரம் துன்பங்களையும் ஒருவன் ஏற்றுக்கொள்ள வேண்டும்.' (8. 33, 34, 36, 37)

இதுபோலவே ஒருவன் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உள்ளன.

'மனைவியைத் திட்டக் கூடாது. அவளைத் தன் தாயைப் போன்றே போற்றிக் காக்க வேண்டும். கடுமையான துன்பங் களிலும் பிரச்சினைகளிலும்கூட அவன் மனைவியிடம் கோபம் காட்டக் கூடாது.' (8. 39)

'மனைவியைத் தவிர வேறு பெண்ணை ஒருவன் நினைப் பானானால், மனத்தாலேனும் அவளைத் தீண்டுவானானால் அவன் இருள் சூழ்ந்த கொடிய நரகத்தை அடைவான்.' (8. 40)

'பெண்களுக்கு முன்னால் ஒருவன் முறையற்ற பேச்சுக் களைப் பேசக் கூடாது. தன்னைப்பற்றிப் பெருமையடித்துக் கொள்ளக் கூடாது. ''நான் இதைச் செய்தேன்'', ''அதைச் செய்தேன்'' என்றெல்லாம் சொல்லக் கூடாது.' (8. 41)

'இல்லறத்தான் தன் மனைவியைப் பணம், ஆடைகள், அன்பு, நம்பிக்கை, இனிய மொழிகள் இவற்றால் எப்போதும் மகிழ்விக்க வேண்டும். அவளைத் தொந்தரவு செய்கின்ற

எதையும் செய்யக் கூடாது. கற்பு நிறைந்த மனைவியின் அன்பைப் பெறுவதில் வெற்றி பெற்றவன் தன் கடமையில் வெற்றி பெற்றுவிட்டான், அவனுக்கு எல்லாவித நற்குணங்களும் வந்துசேர்கின்றன.' (8. 42, 44)

கீழ்க்கண்டவை ஒருவன் குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளாகும்—

'நான்காம் வயதுவரை ஒருவன் தன் மகனை அன்போடு போற்றி வளர்க்க வேண்டும். பதினாறு வயதுவரை கல்விபுகட்ட வேண்டும். இருபது வயதில் அவனை எங்காவது ஒரு வேலையில் அமர்த்த வேண்டும். அதன்பிறகு அவனைத் தனக்குச் சமமாகவும் அன்போடும் நடத்த வேண்டும். மகளையும் இதுபோலவே அன்போடு வளர்க்க வேண்டும். மிகுந்த கவனத்துடன் அவளைக் கல்வி கற்கச் செய்ய வேண்டும். அவளைத் திருமணம் செய்து கொடுக்கும்போது அவளுக்கு நகைகளும் சொத்துக்களும் தர வேண்டும்.' (8. 45–47)

'பிறகு சகோதர சகோதரிகள், அவர்கள் ஏழையாக இருந்தால் அவர்களுடைய பிள்ளைகள், பிற உறவினர், நண்பர், வேலைக்காரர் என்று இவர்களிடமும் அவனுக்குக் கடமைகள் உள்ளன. அதன்பிறகு அவன் வாழும் கிராமத்தில் உள்ள மக்கள், ஏழைகள் மற்றும் அவனிடம் உதவிக்கென்று வருபவர்கள் இவர்களுக்கு அவன் செய்ய வேண்டிய கடமைகள் உள்ளன. வசதியிருந்தும் ஒருவன் உறவினருக்கும் ஏழைகளுக்கும் ஒன்றும் கொடுக்காமல் போனால், அவன் மனிதன் அல்ல, மிருகம் என்றே கொள்ள வேண்டும்.' (8. 48–50)

'உணவு, உடை, உடம்பைப் பராமரிப்பது, முடியை அலங்கரிப்பது இவற்றில் அளவுக்கு அதிகமான பற்றைத் தவிர்க்க வேண்டும். இல்லறத்தான் இதயத்தில் தூயவனாகவும் உடம்பைச் சுத்தமாக வைத்திருப்பவனாகவும், சுறுசுறுப்பு நிறைந்தவனாகவும், வேலை செய்ய எந்த நேரத்திலும் தயாரானவனாகவும் இருக்க வேண்டும்.' (8. 51, 52)

'இல்லறத்தான் பகைவர்களுக்கு அச்சம் தருபவனாக இருக்க வேண்டும்.' (8. 53)

அவர்களை எதிர்க்க வேண்டும். அது இல்லறத்தானின் கடமை. ஒரு மூலையில் அமர்ந்து மூக்கைச் சிந்தியபடி அஹிம்சை என்று முட்டாள்தனமாகப் பேசிக் கொண்டிருக்கக் கூடாது. பகைவர்களிடம் தன் வீரத்தைக் காட்டவில்லையென்றால், அவன் கடமை தவறியவனாகிறான். நண்பர்களிடமும்

உறவினர்களிடமும் அவன் ஆட்டுக்குட்டிபோல் அடங்கி நடக்க வேண்டும்.

'இல்லறத்தான் தீயவர்களுக்கு மரியாதை தரக் கூடாது. அது அவனது கடமை.' (8. 53)

ஏனென்றால் தீயவர்களுக்கு மரியாதை செய்தால் அவன் தீமையை வளர்க்கிறான்.

'அதுபோலவே போற்றுதலுக்கு உரியவர்களையும் நல்லவர்களையும் மதிக்காதிருப்பதும் பெரிய குற்றமாகும்.' (8. 53)

'நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் அவன் அவசரப்படக் கூடாது. நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக முறைதவறி எல்லா இடங்களிலும் செல்லக் கூடாது. நண்பராக்கிக் கொள்ள விரும்புபவர்களின் செயல்களையும், அவர்கள் பிறருடன் பழகும் விதத்தையும் கவனிக்க வேண்டும். அதை ஆராய வேண்டும். அதன்பிறகே நண்பர்களாக்கிக் கொள்ள வேண்டும்.' (8. 54)

'மூன்று விஷயங்களை அவன் பேசக் கூடாது: தன் புகழைப் பொது இடத்தில் பேசக் கூடாது. தன் பெயரையோ திறமை யையோ தானே பரப்பக் கூடாது. செல்வத்தைப் பற்றியோ, தன்னிடம் தனிமையில் பிறர் சொன்னதையோ சொல்லக் கூடாது.' (8. 56)

தான் ஏழை என்றோ பணக்காரன் என்றோ எதுவும் அவன் பேசுவது நல்லதல்ல. அவன் தன் செல்வத்தைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்ளக் கூடாது. இந்த விஷயங்களைத் தன்னோடு வைத்துக்கொள்ள வேண்டும். இது உலக வழக்கு மட்டுமல்ல, அவனது கடமையும் ஆகும். இவற்றையெல்லாம் அவன் கடைப்பிடிக்கவில்லை என்றால் அவன் நன்னெறியில் செல்லாதவன் என்று கருத வேண்டும்.

இல்லறத்தான் சமுதாயம் முழுவதன் ஆதாரமாகவும் தாங்கும் தூணாகவும் இருக்கிறான். சமுதாயத்தில் முக்கியமாகச் சம்பாதிப்பவன் அவனே. ஏழைகள், பலவீனர்கள், குழந்தைகள், வேலை செய்யாத பெண்கள் ஆகிய எல்லோரும் அவனைச் சார்ந்தே வாழ்கிறார்கள். எனவே அவன் செய்தேயாக வேண்டிய கடமைகள் உள்ளன. இந்தக் கடமைகள், அவற்றைத் திறம்படச் செய்கின்ற வலிமையை அவனுக்குத் தருபவையாக அமைய வேண்டும்; தனது லட்சியத்திற்குப் பொருந்தாத, கீழான செயல் களைச் செய்கிறோம் என்ற உணர்வை அவனுக்குத் தருபவை யாக அமையக் கூடாது.

'பலவீனம் காரணமாக அவன் எதையாவது செய்து விட்டாலோ, ஏதேனும் குற்றம் செய்துவிட்டாலோ அதை எல்லோரிடமும் சொல்லக் கூடாது. அவன் ஈடுபட்டிருக்கின்ற ஒரு முயற்சி தோல்வியையே தழுவும் என்று கண்டால் அதையும் பிறரிடம் அவன் சொல்லக் கூடாது.' (8. 57)

'இப்படித் தன்னை வெளிப்படுத்திக் கொள்வது தேவையில்லாதது மட்டுமல்ல. அது அவனது உறுதியைப் பாதித்து, அவனது சொந்தக் கடமைகளையும் ஆற்ற முடியாமல் செய்துவிடும். அதேவேளையில் இவற்றை அடைய அவன் கடினமாகப் பாடுபட வேண்டும்—முதலில் அறிவு, இரண்டாவது செல்வம்.' (8. 58)

இது அவனது கடமை. கடமையைச் செய்யாதவன் மனிதனே அல்ல. செல்வம் சேர்ப்பதற்காகப் பாடுபட்டு உழைக்காத இல்லறத்தான் நன்னெறியைப் பின்பற்றாதவன். அவன் உத்வேகம் இல்லாதவனாகவும் சோம்பல் வாழ்க்கையில் திருப்தி அடைபவனாகவும் இருப்பவன், நன்னெறியில் செல்லாதவன். ஏனென்றால் அவனை நம்பி நூற்றுக்கணக்கானோர் உள்ளனர். அவன் செல்வந்தனானால், நூற்றுக்கணக்கானோர் உதவி பெறுவார்கள்.

செல்வம் சேர்க்க வேண்டும் என்ற துடிப்போடு ஒரு நூறு பேராவது இந்த நகரத்தில் இல்லையென்றால், அவர்கள் பணம் சேர்க்கவில்லையென்றால், இந்த நாகரீகமும், இந்த அன்ன சத்திரங்களும் மாளிகைகளும் இங்கே இருந்திருக்குமா? எனவே பணம் சேர்ப்பது தவறல்ல. ஏனென்றால் அந்தப் பணம் பகிர்ந்தளிக்கவே பயன்படுகிறது. வாழ்க்கை மற்றும் சமுதாயத்தின் மையமாக இல்லறத்தான் இருக்கிறான். எனவே நல்வழியில் செல்வம் சேர்ப்பதும் செலவிடுவதும் அவனுக்கு ஒரு வழிபாடாகிறது. நல்ல காரியங்களுக்காக நல்ல வழிகளில் பணம் சம்பாதிப்பதற்காக உழைக்கின்ற இல்லறத்தான் செய்வதும், குகையில் அமர்ந்து முக்திக்காகப் பிரார்த்தனை செய்கின்ற தபஸ்விகள் செய்வதும் விஷயத்தில் ஒன்றுதான். இறைவனிடமும் அவனது படைப்பின்மீதும் உண்டாகின்ற, பக்தியால் உந்தப்பட்ட, ஒரே நற்பண்பின் இரண்டு பக்கங்களான சரணாகதி, தியாகம் என்பவற்றையே நாம் காண்கிறோம்.

'நற்பெயர் பெற அவன் எல்லா வழிகளிலும் பாடுபட வேண்டும். சூதாடுவதையும் தீயோர் சேர்க்கையையும்

விடவேண்டும். பொய் பேசக் கூடாது. பிறருடைய துன்பத்திற்கு எந்த விதத்திலும் காரணமாகக் கூடாது.' (8. 58)

'பல நேரங்களில் மனிதர்கள் தங்களால் இயலாத ஒன்றில் ஈடுபட்டு விடுகிறார்கள். எனவே அதைச் செய்து முடிப்பதற்காக மற்றவர்களை ஏமாற்ற நேர்கிறது. அத்துடன் எல்லா விஷயங்களிலும் காலத்தின் பங்கைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஒரு காலத்தில் தோல்வியாக இருந்தது மற்றொரு வேளையில் பெரிய வெற்றியாக மாறிவிடக்கூடும்.' (8. 59)

'இல்லறத்தான் உண்மையே பேச வேண்டும். அதையும் மென்மையாகவும், பிறர் விரும்புகின்ற வகையிலும், அவர்களுக்கு நன்மை செய்கின்ற விதத்திலும் பேச வேண்டும். பிறருடைய விஷயங்களைப்பற்றி அவன் பேசக் கூடாது.' (8. 62)

'குளங்கள் வெட்டுதல், சாலை ஓரங்களில் மரங்கள் நடுதல், மக்களுக்கும் விலங்குகளுக்கும் சத்திரங்கள் கட்டுதல், சாலைகளும் பாலங்களும் அமைத்தல் போன்ற பணிகளைச் செய்யும் இல்லறத்தான், பரம யோகிகள் செல்லும் குறிக்கோளை நோக்கிப் பயணம் செய்கிறான்.' (8. 63)

இல்லறத்தார்களின் இந்தக் கடமைகள் கர்மயோகக் கோட்பாட்டின் ஒரு பகுதியாகும். அந்த நூலின் பிற்பகுதியில், 'சொந்த நாட்டிற்காகவோ, மதத்திற்காகவோ, போரிட்டு மரணம் அடைபவன் தியானத்தின்மூலம் ஒரு யோகி செல்கின்ற அதே இடத்திற்குச் செல்கிறான்.' (8. 67) என்று கூறப்பட்டுள்ளது. ஒருவனுக்குக் கடமையாக அமைவது மற்றொருவனுக்கும் அவ்வாறே அமைய வேண்டும் என்பதில்லை என்பது இதன்மூலம் காட்டப்படுகிறது. அதேவேளையில் ஒரு கடமை மனிதனைத் தாழச் செய்கிறது என்றோ, மற்றொன்று உயர்வைத் தரும் என்றோ அந்த நூல் கூறவில்லை. ஒவ்வொரு கடமைக்கும் தனக்கென்று ஓர் இடம் உள்ளது. எந்தச் சூழ்நிலையில் நாம் வைக்கப்பட்டிருக்கிறோமோ, அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப அமைந்துள்ள கடமைகளை நாம் செய்ய வேண்டும்.

இவற்றிலிருந்து ஒரு கருத்து தெளிவாகிறது. அது, எல்லா பலவீனங்களையும் ஒதுக்கித் தள்ள வேண்டும் என்பதாகும். எங்களுடைய தத்துவம், மதம், செயல் என்று எல்லாவற்றின் உபதேசங்களிலும் நான் விரும்புகின்ற ஒரு சிறந்த கருத்து இது. நீங்கள் வேதங்களைப் படித்தீர்களானால் 'பயமின்மை' என்னும் வார்த்தை திரும்பத்திரும்பக் கூறப்படுவதைக் காணலாம். எதற்கும் பயப்படாதீர்கள். பயம் பலவீனத்தின்

அடையாளம். உலகத்தின் கேலியையோ அவமதிப்பையோ பொருட்படுத்தாமல் ஒருவன் தன் கடமைகளைச் செய்து கொண்டே போக வேண்டும்.

இறைவனை வழிபடுவதற்காக உலகத்தைத் துறந்து செல்கின்ற ஒருவன், உலகத்தில் வாழ்ந்து உலகின் நன்மைக்காகச் செயல் புரிந்துகொண்டிருப்போர் எல்லாம் இறைவனை வழிபடாதவர்கள் என்று நினைக்கக் கூடாது. அதுபோலவே குடும்பத்தில் மனைவிமக்களோடு வாழும் இல்லறத்தான், உலகைத் துறந்து வாழும் துறவியரைப் பயனற்ற நாடோடிகள் என்று கருதக் கூடாது. அவரவர் இடத்தில் ஒவ்வொருவரும் பெரியவரே. இந்தக் கருத்தை ஒரு கதைமூலம் விளக்குகிறேன்.

ஓர் அரசன் தன் நாட்டிற்கு வருகின்ற துறவிகளை எல்லாம், 'உயர்ந்தவன் யார்?—உலகைத் துறந்து துறவியானவனா? உலகில் வாழ்ந்து தன் கடமைகளைச் செய்து வாழும் இல்லறத்தானா?' என்று கேட்பது வழக்கம். அறிவாளிகள் பலர் அந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாண முன்வந்தார்கள். சிலர், 'துறவிகளே சிறந்தவர்கள்' என்றனர். அரசன் அவர்களின் கூற்றை நிரூபிக்கச் சொன்னான். அவர்களால் முடியாமல் போகவே அவர்களைத் திருமணம் செய்துகொண்டு இல்லறத்தில் ஈடுபடுமாறு கட்டளையிட்டான். வேறு சிலர் வந்து, 'தன் கடமைகளைச் செய்து வாழும் இல்லறத்தானே சிறந்தவன்' என்று கூறினர். அதையும் அரசன் நிரூபிக்கச் சொன்னான். அவர்கள் நிரூபிக்காதபோது அவர்களையும் இல்லறத்தார்களாக வாழும்படிக் கட்டளையிட்டான்.

கடைசியாக ஒருநாள் இளந்துறவி ஒருவர் அரசனிடம் வந்தார். அவரிடமும் அரசன் தன் கேள்வியைக் கேட்டான். அதற்கு அந்தத் துறவி, 'மன்னா! அவரவர் நிலையில் இருக்கும்போது இருசாராரும் சம அளவில் உயர்ந்தவர்களே' என்றார். அரசன், 'அதை நிரூபியுங்கள்' என்றான். அதற்கு அந்த இளம் துறவி, 'நான் அதை நிரூபிக்கிறேன். ஆனால் நீங்கள் என்னுடன் வந்து, நான் வாழ்வதுபோல் சில நாட்கள் வாழ வேண்டும். அப்போது நான் கூறியதை நிரூபிக்க வசதியாக இருக்கும்' என்றார். அரசன் அதனை ஏற்றுக்கொண்டு துறவியுடன் புறப்பட்டான். இருவரும் அந்த நாட்டையும் மேலும் பல நாடுகளையும் கடந்து ஒரு பெரிய நாட்டை அடைந்தார்கள். அப்போது அந்த நாட்டின் தலைநகரில் ஒரு பெரிய விழா நடந்து கொண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் வாத்திய இசையும் பாட்டும்

ஆரவாரமும் கேட்டது . தண்டோரா போடுபவனின் குரலும் இடையில் ஒலித்தது. கண்ணைப் பறிக்கும் ஆடைகளோடு மக்கள் கூடியிருந்தனர். அவர்கள் முன்னால் அவன் உரத்த குரலில் அறிவித்துக் கொண்டிருந்தான். அது என்ன என்பதைத் தெரிந்துகொள்வதற்காக மன்னனும் துறவியும் அங்கே சென்றனர். அந்த நாட்டு மன்னனின் மகளுடைய சுயம்வரம் நடைபெறப் போகிறது என்பதையே அவன் அங்கே அறிவித்துக் கொண்டிருந்தான்.

சுயம்வரத்தில் அரசகுமாரிகள் தங்கள் கணவனைத் தேர்ந்தெடுப்பது இந்தியாவில் பண்டைய வழக்கமாக இருந்தது. தனக்குக் கணவனாக வரப்போகின்றவன் இப்படியிருக்க வேண்டும் என்று ஒவ்வோர் அரச குமாரியும் சில எண்ணங்களைக் கொண்டிருந்தாள். சிலருக்கு ஈடற்ற அழகன் வேண்டும், சிலருக்கு அறிவில் சிறந்தவன் வேண்டும், சிலருக்குப் பெரிய செல்வந்தன் வேண்டும். அண்டை அயல்நாடுகளின் ராஜகுமாரர்கள் எல்லாம் நன்றாக அலங்கரித்துக் கொண்டு சுயம்வரத்திற்கு வருவார்கள். சிலவேளைகளில் அவர்கள் தங்களுடன் ஓர் அறிவிப்பாளனையும் அழைத்து வருவார்கள். அவன் அந்த ராஜகுமாரனின் அருமைபெருமைகளை எல்லாம் எடுத்துக் கூறி, அந்த இளவரசி அவனை மணந்துகொண்டால் என்னென்ன நன்மை உண்டாகும் என்பதை அறிவிப்பான். ராஜகுமாரி, அலங்கரிக்கப்பட்ட ஒரு பல்லக்கில் அமர்ந்தபடி ஒவ்வொரு ராஜகுமாரனிடமும் வந்து அவனைப்பற்றிய விவரங்களை எல்லாம் கேட்பாள். திருப்தி அடையாவிட்டால், 'முன்னே செல்லுங்கள்' என்று பல்லக்கு சுமப்பவர்களிடம் கூறுவாள். நிராகரிக்கப்பட்ட ராஜகுமாரர்களைப் பின்னர் பார்ப்பதே இல்லை. தனக்குப் பிடித்தவனைக் கண்டுகொண்டால் உடனே அவன் கழுத்தில் ஒரு மலர் மாலையை அணிவிப்பாள். அவன் அவளை மணப்பான்.

நமது துறவியும் மன்னனும் சென்ற அந்த நாட்டின் இளவரசிக்கும் இந்தச் சுயம்வர விழாதான் நடந்துகொண்டிருந்தது. அவள் உலகிலேயே பேரழகு வாய்ந்தவளாக இருந்தாள். அவளை மணந்து கொள்பவன் அவளுடைய தந்தைக்குப் பிறகு அந்த நாட்டின் அரசன் ஆவான். அவள் பேரழகன் ஒருவனை மணக்க விரும்பினாள். இதற்கு முன்பும் எத்தனையோ சுயம்வரங்கள் நடந்தன. அவளுக்கு யாரையும் பிடிக்கவில்லை; அவளால் யாரையும் தேர்ந்தெடுக்க முடியவில்லை. இந்தச்

சுயம்வரம், முன்பு நடந்த எல்லாவற்றையும்விட மிகச் சிறந்ததாக இருந்தது. முன்பைவிட அதிகமானோர் கலந்து கொண்டிருந் தனர். ராஜகுமாரி பல்லக்கில் அமர்ந்து ஒவ்வொருவராகப் பார்த்தாள். ஆனால் எல்லோரையுமே ஒதுக்கிவிட்டாள். இந்த முறையும் சுயம்வரம் தோல்விதானோ என்று எல்லோரும் கவலைப்பட்டனர்.

அப்போது அந்த மண்டபத்திற்குள் இளந்துறவி ஒருவர் நுழைந்தார். கம்பீரமும் அழகும் நிறைந்த அவர் அங்கே வந்தது, சூரியனே வானத்தை விட்டுப் பூமியில் வந்ததுபோல் இருந்தது. அந்த மண்டபத்தின் ஒரு மூலையில் நின்றுகொண்டு அங்கே என்ன நடக்கிறது என்று அவர் கவனித்துக் கொண்டிருந்தார். அங்கே வந்த இளவரசி அவரது அழகில் தன்னைப் பறி கொடுத்து, கையிலிருந்த மாலையை அவரது கழுத்தில் சூட் டினாள். இதனைச் சற்றும் எதிர்பார்க்காத அந்தத் துறவி அதிர்ச்சியுற்றவராக, 'என்ன முட்டாள்தனம் இது? நான் ஒரு துறவி, எனக்கென்ன திருமணம்!' என்று கூறி மாலையைக் கழற்றிக் கீழே எறிந்தார். இதைக் கண்ட அந்த நாட்டு அரசர், இந்தத் துறவி ஏழையாக இருப்பதால் இளவரசியை மணந்து கொள்ள பயப்படுகிறான் என்று நினைத்து, 'என் மகளை மணந்து கொண்டதும் இந்த நாட்டில் பாதி உனக்குச் சொந்த மாகும். நான் இறந்தபிறகு முழு நாடும் உனக்கே' என்று கூறி, அந்த மாலையை எடுத்து மறுபடியும் அந்தத் துறவியின் கழுத் தில் போட்டான். துறவியோ மீண்டும் மாலையைக் கழற்றி வீசியெறிந்து, 'மடத்தனம்! திருமணம் செய்துகொள்ள நான் விரும்பவில்லை' என்று கூறிவிட்டுச் சட்டென்று அந்த மண்ட பத்திலிருந்து வெளியேறினார். இதற்குள் இளவரசி அந்தத் துறவியிடம் அளவற்ற காதல் கொண்டுவிட்டாள்; 'ஒன்று நான் அவரை மணந்துகொள்ள வேண்டும் அல்லது உயிரை விட வேண்டும்' என்று கூறியபடியே அவரைத் திரும்ப அழைத்து வருவதற்காக அவர் பின்னாலேயே சென்றாள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த நம் துறவி, தான் அழைத்து வந்த அரசனைப் பார்த்து, 'மன்னா, நாம் அந்த இருவரையும் தொடர்ந்து செல்வோம்' என்று கூறினார். பின்னர் இருவரும், இளவரசி தங்களைப் பார்த்து விடாதபடி, அவர்களைத் தொடர்ந்து சென்றனர்.

இளவரசியை மணக்க மறுத்த இளந்துறவி நகரத்தை விட்டுப் பல மைல் தொலைவு நடந்து போய்விட்டார். ஒரு

காட்டின் அருகே வந்ததும் அதற்குள் நுழைந்தார். தொடர்ந்து வந்த இளவரசியும் காட்டிற்குள் நுழைந்தாள். நமது துறவியும் அரசனும் பின்தொடர்ந்தனர். அந்த இளந்துறவிக்குக் காடும் குறுகிய பாதைகளும் அத்துப்படியாக இருந்தது. சட்டென்று அவற்றுள் ஏதோ ஒருவழியில் நுழைந்து மறைந்துவிட்டார். இளவரசியால் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. காடு முழுவதும் அலைந்து திரிந்தும் அவரைக் கண்டுபிடிக்க முடியாமல், வெளியேறவும் வழியறியாமல், ஒரு மரத்தின் அடியில் அமர்ந்து அழ ஆரம்பித்தாள். அப்போது நமது துறவியும் அரசனும் அவளிடம் சென்று, 'அழாதே, நீ வெளியே செல்ல நாங்கள் வழி காட்டுகிறோம். இப்போது மிகவும் இருட்டி விட்டதால் வழி காண்பது சிரமம். இதோ பெரிய மரம் ஒன்று உள்ளது. இதனடியில் இன்றிரவு தங்கலாம். காலையில் உனக்கு வழி காட்டுகிறோம்' என்றனர்.

அந்த மரத்தில் ஒரு குருவியும் அதன் மனைவியும் மூன்று குஞ்சுகளும் ஒரு கூட்டில் வாழ்ந்து வந்தன. அந்தச் சின்னஞ்சிறு குருவி மரத்திற்குக் கீழே வந்து தங்கியுள்ள மூவரையும் பார்த்துத் தன் மனைவியிடம், 'என் அன்பே, இப்போது என்ன செய்வது? நம் வீட்டில் சில விருந்தினர் வந்துள்ளனர். இது குளிர்காலம் வேறு. நெருப்புக்கூட இல்லையே' என்று கவலையுடன் கூறியது. பின்னர் எங்கோ பறந்து சென்று, எரிந்து கொண்டிருக்கும் ஒரு சுள்ளியைக் கொண்டுவந்து, அந்த மூன்று பேருக்கும் முன்னால் போட்டது. அவர்கள் மேலும் சில சுள்ளிகளைச் சேர்த்துத் தீயை வளர்த்துக் குளிர்காய்ந்தார்கள்.

அப்போதும் குருவிக்கு மனநிறைவு ஏற்படவில்லை. மீண்டும் அது தன் மனைவியைப் பார்த்து, 'அன்பே! இப்போது என்ன செய்வது? அவர்கள் பசியோடு இருக்கிறார்கள். அவர்களுக்கு நம்மால் எதுவும் கொடுக்க முடியவில்லையே. நாமோ இல்லறத்தினர். வீடு தேடி வருபவர்களின் பசியைத் தீர்ப்பது நமது கடமை. அதற்காக என்னால் முடிந்ததை நான் செய்தாக வேண்டும். என் உடம்பை அவர்களுக்கு உணவாகத் தருகிறேன்' என்று கூறியபடி அவர்கள் வளர்த்திருந்த நெருப்பில் பாய்ந்து மாண்டது. மரத்தடியிலிருந்த மூவரும் அந்த குருவி நெருப்பில் வீழ்வதைப் பார்த்தார்கள், தடுக்கவும் முயன்றார்கள். ஆனால் குருவி மிக வேகமாக நெருப்பில் வீழ்ந்துவிட்டது.

அந்தக் குருவியின் மனைவி தன் கணவனின் செயலைப் பார்த்தது. பின்னர், 'இங்கோ மூன்று பேர் இருக்கிறார்கள்.

ஒரு சிறிய பறவையின் உடல் எப்படி அவர்களது பசியைத் தீர்க்கும்? அது போதாது. கணவரின் முயற்சி வீணாகாமல் காப்பது மனைவியான என் கடமை. அவர்களுக்கு என் உடலும் கிடைக்கட்டும்' என்று கூறித் தானும் தீயில் வீழ்ந்தது.

நடந்தவை அனைத்தையும் மூன்று குஞ்சுகளும் கண்டன. தங்கள் விருந்தினர்களுக்குப் போதுமான உணவு இல்லாததைக் கண்ட அவை, 'நம் பெற்றோர் தங்களால் முடிந்ததைச் செய்தார்கள். அப்படியும் உணவு போதவில்லை. பெற்றோரின் பணியைத் தொடர்வது நம் கடமை. நமது உடலும் போகட்டும்' என்று பேசியபடியே மூன்றும் அந்த நெருப்பிற்குள் வேகமாக வீழ்ந்து இறந்தன.

நடந்ததைக் கண்டு திகைத்த அந்த மூவருக்கும் அந்தக் குருவிகளின் உடலைத் தீண்டவும் மனம் வரவில்லை. உணவு எதுவும் இன்றியே அவர்கள் இரவைக் கழித்தனர். பொழுது விடிந்ததும், துறவியும் அரசனும் இளவரசி வெளியேற வழி காட்டினர். அவள் தன் தந்தையிடம் திரும்பினாள்.

பின்னர் நமது துறவி அரசனிடம், 'மன்னா, தான் இருக்கும் இடத்தில் ஒவ்வொருவரும் உயர்ந்தவர்கள் என்பதைக் கண்டு கொண்டாய் அல்லவா? நீ இல்லறத்தானாக வாழ விரும்பினால் இந்தப் பறவைகளைப்போல் எந்த வினாடியும் பிறருக்காக உன்னைத் தியாகம் செய்வதற்குத் தயாராக வாழ வேண்டும். உலகைத் துறந்து வாழ விரும்பினால், மிக அழகான பெண்ணையும் பேரரசையும் துரும்பென உதறிச் சென்ற அந்த இளந்துறவியைப்போல் இரு. இல்லறத்தானாக விரும்பினால் உன் வாழ்வை மற்றவர்களின் நன்மைக்காக ஒரு பலியாக அர்ப்பித்து விடு. துறவு வாழ்வைத் தேர்ந்தெடுத்தால் அழகையோ பணத்தையோ பதவியையோ ஏறெடுத்தும் பார்க்காதே. அவரவர் நிலையில் அவரவர் பெரியவரே. ஆனால் ஒருவரின் கடமை மற்றவரின் கடமை ஆகாது' என்றார். ❑

## 2. செயல்புரிவதன் ரகசியம்

பிறருடைய பௌதீகத் தேவைகளை நிறைவேற்றி, அவர்களுக்கு உதவுவது உண்மையிலேயே பெரிய விஷயம்தான். ஆனால் அந்தத் தேவை எவ்வளவு பெரியது, அந்த உதவி எவ்வளவு காலம் நீடித்து நிற்கும் என்பதைப் பொறுத்தே அந்த உதவியின் சிறப்பு அமைகிறது. ஒருவனது தேவைகளை ஒரு மணி நேரத்திற்குப் பூர்த்தி செய்வது அவனுக்கு ஓர் உதவிதான். ஒருவருடத்திற்குப் பூர்த்தி செய்தோமானால் அது அதைவிடப் பெரிய உதவி. அவனது தேவைகளை என்றென்றைக்குமாக நாம் பூர்த்தி செய்ய முடியுமானால் அதுவே அவனுக்குச் செய்யக்கூடிய மகத்தான உதவி.

ஆன்மீக ஞானம் ஒன்றினாலேயே நமது துன்பங்களை என்றென்றைக்குமாக ஒழிக்க முடியும். மற்ற எல்லா அறிவும் நமது தேவைகளை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கே நீக்கும். தேவைகளை எழுப்புகின்ற மூலகாரணத்தை ஆன்ம ஞானத்தால் மட்டுமே முற்றிலுமாக வேரறுக்க முடியும். எனவே ஒருவனுக்கு அளிக்க முடிந்த உதவிகள் அனைத்திலும் ஆன்மீக உதவியே தலைசிறந்தது. ஆன்மீக ஞானத்தைத் தருபவனே மனித குலத்திற்கு மிகச் சிறந்த நன்மை செய்பவன். அவ்வாறு மனிதனுக்கு ஆன்மீக உதவி செய்துள்ளவர்களையே மிகுந்த ஆற்றல் வாய்ந்தவர்களாக எந்தக் காலத்திலும் நாம் காண்கிறோம். ஏனெனில் வாழ்வின் நமது செயல்பாடுகள் அனைத்திற்கும் உண்மையான அடிப்படை ஆன்மீகமே. ஆன்மீக வலிமையும் ஆன்ம நிறைவும் உடைய ஒருவன் விரும்புவானானால் எல்லா துறைகளிலும் பேராற்றல் பெற்றவனாக விளங்க முடியும். ஆன்மீக வலிமை இல்லாமல் ஒருவனால் தன் பௌதீகத் தேவைகளைக்கூடச் சிறந்த முறையில் நிறைவேற்றிக் கொள்ள முடியாது.

ஆன்மீக உதவிக்கு அடுத்து வருவது அறிவு வளர்ச்சிக்கான உதவி. உணவு மற்றும் உடைகள் அளிப்பதைவிட வித்யாதானம் அல்லது அறிவு தானம் எவ்வளவோ மேலானது. ஒருவனது

உயிரைக் காப்பதைவிட அது சிறந்தது. ஏனென்றால் மனிதனின் உண்மையான உயிர்நாடி, உண்மையான வாழ்க்கை, அறிவில் மட்டுமே அமைந்துள்ளது. அறியாமை என்பது மரணம், அறிவு தான் வாழ்வு. அறியாமையிலும் துன்பத்திலும் தட்டுத்தடுமாறிக் கொண்டிருக்கின்ற வாழ்க்கை பயனற்றது.

அடுத்து இயல்பாக வருவது ஒருவனது உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற உதவி.

எனவே பிறருக்கு உதவி செய்வதைப்பற்றி நினைக்கும் போது, நாம் அளிக்க முடிந்தவை பௌதீகத் தேவைகளைத் தீர்க்கும் உதவிகள் மட்டுமே என்று தவறாக எண்ணிவிடக் கூடாது. பௌதீகத் தேவைகளைத் தீர்க்கும் உதவி, உதவிகளில் எல்லாம் கடைசியானது மட்டுமல்ல, சிறியதும் ஆகும். அது ஒருவனுடைய தேவையை நிரந்தரமாகத் தீர்ப்பதில்லை. பசியால் நான் படும் துன்பம் சாப்பிட்டால் தீர்ந்துவிடும். ஆனால் பசி மீண்டும் வருகிறது. இனிமேல் தேவைகள் எதுவும் இல்லை என்ற அளவிற்கு நான் திருப்தியுறும்போது தான் என் துன்பம் தீர முடியும். அப்போது பசி என்னை வாட்ட முடியாது, எந்தக் கவலையும் துயரமும் என்னைப் பாதிக்க முடியாது. எனவே ஆன்ம சக்தியை அளிக்கவல்ல உதவியே முதன்மையானது. அறிவை அளிப்பது அடுத்தது. உடலுதவி கடைசியானது.

பௌதீகத் தேவைகளை மட்டும் பூர்த்தி செய்வதால் உலகத்தின் துன்பங்களை எல்லாம் தீர்த்துவிட முடியாது. மனிதனின் இயல்பு மாறும் வரையில் இந்த பௌதீகத் தேவைகள் தோன்றிக் கொண்டேதான் இருக்கும்; துன்பங்களும் அவனை வருத்திக் கொண்டுதான் இருக்கும். எத்தனை பௌதீக உதவிகளாலும் அதனை முழுவதுமாகத் தீர்க்க முடியாது. இந்தப் பிரச்சினைக்கு ஒரே தீர்வு மனிதர்களைத் தூயவர்கள் ஆக்குவதுதான். நாம் காணும் எல்லா தீமைகளுக்கும் எல்லா துன்பங்களுக்கும் மூல காரணம் அறியாமையே. மனிதன் ஒளி பெறட்டும், தூயவனாகட்டும், ஆன்மீக வலிமை பெறட்டும், கல்வி பெறட்டும், அதன்பிறகு மட்டுமே உலகின் துன்பங்கள் தீரும், அதற்கு முன்பு அல்ல, நாட்டிலுள்ள ஒவ்வொரு வீட்டையும் தர்ம சாலையாக மாற்றலாம், நாடு முழுவதையும் ஆஸ்பத்திரிகளால் நிரப்பலாம். ஆனால் மனிதனின் குணம் மாறும் வரையில் அவனுடைய துன்பம் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

'இடையீடின்றி நாம் செயல்புரிய வேண்டும்' என்று பகவத்கீதை மீண்டும்மீண்டும் கூறுவதை[1] நாம் படிக்கிறோம். இயல்பாகவே எல்லா செயல்களும் நன்மை தீமைகளின் கலவை யாகவே உள்ளன. யாருக்கோ எங்கோ சிறிதாவது நன்மை தராத ஒரு செயலை நாம் செய்ய முடியாது. அதுபோலவே எங்காவது யாருக்காவது சிறிது துன்பம் தராத செயலையும் செய்ய முடியாது. எல்லா செயல்களும் நன்மை தீமைகளின் கலவையே. என்றாலும் இடைவிடாமல் செயல்புரியவே நாம் கட்டளையிடப் பட்டிருக்கிறோம்.

நன்மை, தீமை இரண்டும் அவற்றிற்குரிய பலன்களைக் கொடுக்கின்றன; அவற்றிற்குரிய கர்மத்தை உண்டாக்குகின்றன. நற்செயல் நம்முள் நல்ல விளைவுகளை ஏற்படுத்துகிறது, தீய செயல் தீய விளைவுகளை ஏற்படுத்துகிறது. ஆனால் நல்லவை, கெட்டவை இரண்டுமே ஆன்மாவைப் பந்தத்தில் பிணைக் கின்றன. செயல்கள் இவ்வாறு நம்மைப் பந்தத்தில் பிணைக்கா திருக்க கீதை வழி காட்டுகிறது: 'நாம் செய்கின்ற செயலில் பற்றுக் கொள்ளாதிருந்தால் அது ஆன்மாவைப் பிணைக்காது.'[2]

'பற்றற்று'ச் செயல்புரிவது என்றால் என்ன என்பதை இப் போது தெரிந்துகொள்ள முயல்வோம். இடைவிடாது செயல் புரிய வேண்டும், ஆனால் அதில் பற்று வைக்கக் கூடாது என் பது கீதையின் மையக் கருத்து. இதைப் புரிந்துகொள்ள சம்ஸ் காரம் என்பதுபற்றி நமக்குச் சிறிது தெரிய வேண்டும். சம்ஸ் காரம் என்பதை ஓரளவிற்கு 'இயல்பான மனப்பாங்கு' (Inherent Tendency) என்று மொழிபெயர்க்கலாம். மனத்தை ஒரு குளத்திற்கு ஒப்பிடலாம். அதில் எழுகின்ற அலை மற்றும் சிற்றலை ஒவ்வொன்றும் அடங்கும்போது முற்றிலுமாக அழிந்துவிடுவதில்லை. மீண்டும் அந்த அலை திரும்பி வருவதற்கான அறிகுறியோடு கூடிய அடையாளத்தை விட்டுச் செல்கிறது. இவ்வாறு அலை மீண்டும் எழுவதற்கான சாத்தியக்கூறுடன் கூடிய அடையாளமே சம்ஸ்காரம். நாம்

---

1. ஒப்பிடுக:
ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் |
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னிரிவாவ்ருதா: ||
—கீதை, 18. 48.

2. ஒப்பிடுக:
அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ: |
நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம் ஸந்யாஸேனாதி கச்சதி ||
—கீதை, 18. 49.

செய்கின்ற ஒவ்வொரு செயலும், நம் உடம்பின் ஒவ்வோர் அசைவும், நாம் எண்ணுகின்ற ஒவ்வோர் எண்ணமும் சித்தத்தில் ஒரு பதிவை விட்டுச் செல்கிறது. இந்தப் பதிவுகள் மேற்பரப்பில் தென்படாதிருக்கலாம். ஆனாலும் ஆழ்மனத்தில் நாம் அறியாமலே செயல்புரியும் அளவு வலிமை படைத்தவை அவை. ஒவ்வொரு கணமும் நாம் என்னவாக இருக்கிறோம் என்பதை மனத்திலுள்ள இந்தப் பதிவுகளின் மொத்தமே உருவாக்குகிறது. இப்போது இந்தக் கணத்தில் நான் என்னவாக இருக்கிறேனோ அது என்னுடைய கடந்தகால சம்ஸ்காரங்களுடைய மொத்தத்தின் விளைவாகும். இதுதான் உண்மையில் குணம் என்று அழைக்கப்படுகிறது. ஒரு மனிதனுடைய குணத்தை இந்த சம்ஸ்காரங்களின் மொத்தமே நிர்ணயிக்கிறது. நல்ல சம்ஸ்காரங்கள் மேலோங்கியிருந்தால் குணம் நல்லதாக அமைகிறது. தீயவை மேலோங்கியிருந்தால் குணம் தீயதாக அமைகிறது. ஒரு மனிதன் தொடர்ந்து தீய வார்த்தைகளைக் கேட்டு, தீய எண்ணங்களையே எண்ணி, தீய செயல்களையே செய்து கொண்டிருந்தால் அவனது மனம் தீய சம்ஸ்காரங்களால் நிறைகிறது. அவை அவனது சிந்தனையையும் செயலையும் அவன் அறியாமலே ஆட்டிப்படைக்கின்றன.

உண்மையில் இந்தத் தீய சம்ஸ்காரங்கள் தொடர்ந்து செயல்பட்ட வண்ணமே இருக்கின்றன. அவற்றின் விளைவு தீமையாகத்தான் இருக்கும்; அதன் காரணத்தால் அந்த மனிதன் தீயவனாக இருக்கிறான். அவனால் இதைத் தவிர்க்க முடியாது. இந்தச் சம்ஸ்காரங்கள் மொத்தமும் தீய செயல்களைச் செய்வதற்கான ஆற்றல் மிக்கதொரு தூண்டுசக்தியை அவனுள் உருவாக்கும். தன் சம்ஸ்காரங்களின் கையில் மனிதன் எந்திரம் போலாகி விடுகிறான். அவை அவனைத் தீமை செய்யும்படிக் கட்டாயப் படுத்துகின்றன.

அதுபோலவே ஒருவன் நல்ல நினைவுகளையே நினைத்து, நற்செயல்களையே செய்தால் சம்ஸ்காரங்களின் மொத்தமும் நல்லதாக இருக்கும். இவை அவனது நினைப்பும் முயற்சியும் இல்லாமலேயே, அவனை நற்செயல்களில் தூண்டுகின்றன. நல்லது செய்வதிலிருந்து தடுக்க முடியாத மனப்பாங்கு உண்டாகும் அளவிற்கு ஒருவன் மிக அதிகமாக நல்லவற்றைச் செய்வானானால், மிக அதிகமாக நல்லவற்றையே நினைப்பானானால், தன்னையும் மீறி அவன் தீமை செய்ய முயன்றாலும், அவனது மனப்பாங்குகளின் மொத்தமும் சேர்ந்து அவனைத்

தீமை செய்ய விடாமல் தடுத்துவிடும். அவன் முழுக்கமுழுக்க நல்ல மனப்பாங்குகளின் ஆதிக்கத்தில் இருக்கிறான். அந்த நிலையில் ஒரு மனிதனின் நற்பண்பு நிலைபெற்றுவிட்டது என்று கூறலாம்.

ஆமை தலையையும் கால்களையும் தன் ஓட்டிற்குள் இழுத்துக் கொண்டால், நீங்கள் அதைக் கண்டதுண்டமாக வெட்டிச் சிதைத்தாலும் அது வெளியே வராது. அதுபோல், தன் சங்கல்பங்களையும் புலன்களையும் கட்டுப்படுத்திய மனிதனின் இயல்பு மாறாமல் நிலை பெற்றுவிடும். அவன் அக ஆற்றல்களைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கிறான். அவனது சங்கல்பமின்றி அவற்றை வெளிப்படுத்த எதனாலும் முடியாது. நல்ல எண்ணங்களைத் தொடர்ந்து நினைப்பதால் மனத்தின் மேற்பரப்பில் நல்ல சம்ஸ்காரங்களே சஞ்சரிக்கின்றன. அதனால் நல்லது செய்வதற்கான மனப்பாங்கு வலிமை பெறுகிறது. அதன் விளைவாக நாம் புலன்களைக் கட்டுப்படுத்தலாம் என்று உணர்கிறோம். இவ்வாறுதான் குணம் நிலைபெற முடியும். அதன்பிறகு மட்டுமே ஒருவன் உண்மையை அடைகிறான். அத்தகையவன் என்றென்றைக்கும் பத்திரமாக இருப்பான். அவனால் எந்தத் தீமையும் செய்ய முடியாது. நீங்கள் அவனை எந்தச் சூழ்நிலையில் வைத்தாலும் அவனுக்கு அபாயம் இல்லை.

இப்படி நல்ல மனப்பாங்கினைப் பெற்றிருப்பதைவிட உயர்ந்த நிலை ஒன்று உள்ளது. அது முக்தியில் நாட்டம். எல்லா யோகங்களின் லட்சியமும் ஆன்ம சுதந்திரமே என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். எல்லா யோகங்களும் வேறுபாடின்றி இந்த லட்சியத்திற்கு நம்மை அழைத்துச் செல்கின்றன. புத்தர் பெருமளவிற்கு தியானத்தின் மூலமும், ஏசு பிரார்த்தனையின் மூலமும் அடைந்த அதே நிலையை ஒருவன் செயலின்மூலமாகவே அடைய முடியும். புத்தர் செயல்திறன் மிக்க ஞானி. ஏசு ஒரு பக்தர். ஆனால் இருவரும் ஒரே லட்சியத்தையே அடைந்தனர்.

இங்கே ஒரு பிரச்சினை எழுகிறது. முக்தி என்றால் முழு சுதந்திரம்—தீமைத் தளையிலிருந்தும், அதுபோலவே நன்மைத் தளையிலிருந்தும் சுதந்திரம் பெறுவது. இரும்புச் சங்கிலியைப் போலவே தங்கச் சங்கிலியும் தளைதான். என் கையில் முள் ஒன்று குத்தியிருக்கிறது, அதை எடுப்பதற்கு இன்னொரு முள்ளைப் பயன்படுத்துகிறேன். எடுத்து முடிந்ததும் இரண்டையுமே எறிந்துவிடுகிறேன். இரண்டாவது முள்ளை நான் வைத்திருக்க

வேண்டிய தேவையில்லை; ஏனெனில் இரண்டும் முட்களே. அதுபோல் தீய இயல்புகள் நல்ல இயல்புகளால் சமன்படுத்தப் பட வேண்டும். நல்ல சம்ஸ்காரங்களின் புதிய அலைகளைப் பாய்ச்சி தீய சம்ஸ்காரங்களை ஏறக்குறைய அவை மறைகின்ற வரையில், ஒடுங்குகின்ற வரையில், மனத்தின் ஒரு மூலையில் கட்டுப்படுத்தப்படுகின்ற வரையில் நீக்க வேண்டும்; அதன்பிறகு நல்ல இயல்புகளையும் வெற்றி கொள்ள வேண்டும். இவ்வாறு 'பற்று' 'பற்றின்மை' ஆகிறது. செயல்புரி, ஆனால் அந்தச் செயலோ எண்ணமோ மனத்தில் ஆழ்ந்த பதிவை உண்டாக் காமல் பார்த்துக்கொள். அலைகள் வந்துபோகட்டும். உடம் பிலிருந்தும் மூளையிலிருந்தும் பெரிய பெரிய செயல்கள் புறப் படட்டும். ஆனால் அவை மனத்தில் ஆழ்ந்த பதிவு எதையும் உண்டாக்க அனுமதிக்காதீர்கள்.

இதைச் செய்வது எப்படி? நாம் பற்றுக்கொள்கின்ற எந்தச் செயலின் பதிவும் நிலைத்துவிடுவதைக் காண்கிறோம். ஒரு நாளில் நான் நூறு பேரைச் சந்தித்திருக்கலாம். நான் நேசிக்கின்ற ஒருவரையும் அவர்களுள் சந்திக்கிறேன். இரவு நான் படுக்கைக் குச் செல்லும்போது பகலில் பார்த்த முகங்களையெல்லாம் நினைவிற்குக் கொண்டு வர முயல்கிறேன். அப்போது அந்த ஒரே முகம், ஒருவேளை நான் ஒரு நிமிடம் மட்டுமே பார்த்திருந் தாலும் நான் நேசிக்கின்ற அந்த முகம் மட்டுமே என் மனக்கண் முன் வருகிறது; மற்ற எல்லா முகங்களும் மறைந்துவிடுகின்றன. இதன் காரணம் என்ன? அந்தக் குறிப்பிட்ட நபரிடம் நான் கொண்டுள்ள பற்றுதான் மற்ற முகங்களைவிட அந்த முகத்தின் ஆழ்ந்த பதிவை என் மனத்தில் ஏற்படுத்தியிருக்கிறது. உடலிய லின்படி எல்லா முகங்கள் ஏற்படுத்திய பதிவுகளும் ஒரேபோன்ற வைதான். நான் பார்த்த எல்லா முகங்களின் உருவங்களும் என் விழித்திரையில் ஒரேபோல்தான் விழுந்தது, மூளையும் ஒரே போல்தான் அவற்றைக் கிரகித்தது. ஆனால் மனத்தில் ஏற்பட்ட விளைவு ஒன்றுபோலில்லை. நான் பார்த்தவற்றுள் பெரும் பாலானவை ஒருவேளை முற்றிலும் புதிய முகங்களாக இருக்க லாம். அவர்களைப்பற்றி இதற்கு முன் நான் நினைத்துக்கூட இருக்க மாட்டேன். ஆனால் நான் ஒருகணம் மட்டுமே பார்க்க முடிந்த அந்த ஒரு முகத்திற்கு மட்டும் அதனுடன் தொடர் புடைய சமப் பதிவுகள் என்னுள்ளே இருந்தன. ஒருவேளை அந்த முகத்தைப் பல ஆண்டுகளாகவே நான் என் மனத்தில் பார்த்து வந்திருக்கலாம். அவரைப்பற்றிய நூற்றுக்கணக்கான

விஷயங்கள் எனக்குத் தெரிந்திருக்கலாம். இப்போது நான் கண்ட ஒருகணத் தோற்றம் என்னுள் உறங்கிக் கொண்டிருந்த அவரைப்பற்றிய ஆயிரமாயிரம் நினைவுகளை எழுப்பிவிட்டன. மற்ற முகங்களைவிட அவரது முகம் தொடர்பான இந்த சம்ஸ்காரம் ஒருவேளை நூற்றுக்கணக்கான முறை உண்டாகியிருப்பதால் மனத்தில் ஆழ்ந்த விளைவை ஏற்படுத்திவிட்டது.

எனவே 'பற்றற்றிரு'; செயல்கள் நடைபெறட்டும். மூளை மையங்கள் செயல்படட்டும். இடைவிடாமல் செயலில் ஈடுபடு. ஆனால் ஓர் அலைகூட மனத்தை வெல்ல அனுமதிக்காதே. அன்னியன்போல், ஒரு யாத்திரீகன்போல் இந்த உலகத்தில் வேலை செய். இடைவிடாமல் வேலை செய். ஆனால் உன்னைப் பந்தப்படுத்திக் கொள்ளாதே. பந்தம் என்பது பயங்கரமானது. இந்த உலகம் நமது நிலையான இருப்பிடம் அல்ல. நாம் கடந்து செல்கின்ற பல தளங்களுள் இதுவும் ஒன்று, அவ்வளவுதான். 'இயற்கை அனைத்தும் ஆன்மாவிற்கே தவிர, ஆன்மா இயற்கைக்காக அல்ல'[1] என்னும் மகத்தான சாங்கியக் கூற்றை நினைவில்கொள். இயற்கை இருப்பதன் ஒரே காரணம் ஆன்மா பண்படுவது மட்டுமே. இயற்கையின் இருப்பிற்கு வேறு எந்தப் பொருளும் இல்லை. ஆன்மா ஞானம் பெற வேண்டும், அதன் மூலமாக முக்தி பெற வேண்டும். அதற்காகவே இயற்கை இருக்கிறது. இது எப்போதும் நம் நினைவில் இருக்குமானால் நாம் நம்மை இயற்கையுடன் பிணைத்துக் கொள்ள மாட்டோம். இந்த உலகம் நாம் படிப்பதற்கான புத்தகம். வேண்டிய ஞானத்தை நாம் பெற்றுக்கொண்ட பிறகு, அந்தப் புத்தகத்தால் நமக்கு எந்தப் பயனும் இல்லை என்பதை அறிந்து கொள்வோம்.

ஆனால் இந்த உலகம்தான் நாம் என்றே நாம் எண்ணுகிறோம். உலகிற்காகத்தான் ஆன்மா, உடலுக்காகத்தான் உயிர் என்று எண்ணத் தலைப்படுகிறோம். பொதுவாகச் சொல்வார்களே அதுபோல் 'மனிதன் உண்பதற்காகவே வாழ்கிறான், வாழ்வதற்காக உண்பதில்லை' என்றே நாம் நினைக்கிறோம். இந்தத் தவறைத் தொடர்ந்து செய்துகொண்டிருக்கிறோம்.

---

1. இத்யேஷ ப்ரக்ருதி க்ருதோ மஹதாதி விசேஷ பூத பர்யந்த: |
ப்ரதிபுருஷ விமோக்ஷார்த்தம் ஸ்வார்த்த இவ பரார்த்த ஆரம்ப: ||
—சாங்கிய காரிகை, 56.

—இவ்வாறு மஹத் தத்துவம் முதல் மகாபூதங்கள் வரை எல்லாம் இயற்கையின் படைப்பே. இந்த முயற்சிகளெல்லாம் இயற்கை தனக்காகச்செய்வதுபோல் இருந்தாலும் இவை ஆன்மாவின் முக்திக்காகவே செய்யப் படுகின்றன.

உலகத்தையே நாம் என்று கருதி, அதில் பற்றுக் கொள்கிறோம். இந்தப் பற்று மனத்தில் ஆழ்ந்த பதிவை உண்டாக்குகிறது. இது நம்மைக் கட்டுப்படுத்தி சுதந்திரமாகச் செயல் புரிய விடாமல் அடிமைகள்போல் வேலை செய்ய வைக்கிறது.

எஜமானனைப்போல் வேலை செய்ய வேண்டும், அடிமையைப் போல் அல்ல என்பதே இந்த உபதேசத்தின் சுருக்கம். இடைவிடாமல் வேலை செய். ஆனால் அடிமையைப்போல் வேலை செய்யாதே. மனிதர்கள் எப்படி வேலை செய்கிறார்கள் என்பதை நீ பார்த்ததில்லையா? முற்றிலும் ஓய்ந்திருக்க யாராலும் முடிவதில்லை. நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் அடிமைகளைப்போல் வேலை செய்கிறார்கள். பலன் துன்பம் தான். இவையெல்லாம் சுயநலம் சார்ந்த வேலை. சுதந்திரத்தின் மூலமாகச் செயல்புரி, அன்பின் வழியாக வேலை செய்!

'அன்பு' என்ற வார்த்தையின் பொருளைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். சுதந்திரம் இல்லாதவரையில் அன்பு தோன்றுவதில்லை. அடிமையிடம் உண்மையான அன்பு இருக்க முடியாது. நீங்கள் ஓர் அடிமையை விலைக்கு வாங்கி, சங்கிலியில் கட்டி, உங்களுக்காக வேலை செய்யச் சொல்லுங்கள்; அவன் மாடுபோல் வேலை செய்வான். ஆனால் அவனிடம் அன்பு இருக்காது. நாமும் உலகப் பொருட்களுக்காக அடிமைபோல் வேலை செய்தோமானால், நம்மிடம் அன்பு இருக்க முடியாது; நாம் செய்யும் வேலையும் உண்மையான வேலையாகாது. உறவினர்களுக்காகவும் நண்பர்களுக்காகவும் செய்யப்படுகின்ற வேலைகளும் சரி, நமக்காகவே செய்யப்படுகின்ற வேலையும் சரி, இது உண்மையே. சுயநலத்துடன் செய்யும் வேலை அடிமை வேலை. இதோ ஒரு சோதனை: அன்பின் மூலமாகச் செய்யப் படும் ஒவ்வொரு செயலும் ஆனந்தத்தைக் கொண்டு வரும். அமைதியையும் ஆசிகளையும் விளைவாகக் கொண்டு வராத அன்புச் செயல்கள் எதுவுமே இல்லை. உண்மை இருப்பு, உண்மை அறிவு, உண்மை அன்பு மூன்றும் ஒன்றோடு ஒன்று நிரந்தரமாக இணைந்தவை. இந்த மூன்றும் ஒன்றிலேயே உள்ளன. எங்கே இதில் ஒன்று உள்ளதோ அங்கு மற்றவை இருந்தே தீரும். இவை இரண்டற்ற ஒன்றேயான ஸத்-சித்-ஆனந்தப் பொருளின் மூன்று நிலைகள். அந்த ஒரு பொருளே நடைமுறைநிலைக்கு வரும்போது, இருப்பு அல்லது ஸத் என்பதை நாம் உலகமாகக் காண்கிறோம்; அறிவு அல்லது சித், உலகப் பொருட்களைப் பற்றிய அறிவாக மாறுகிறது; ஆனந்தம்,

மனித இதயம் அறிந்த உண்மையன்பு அனைத்திற்கும் அடித் தளமாக அமைகிறது. எனவே உண்மையன்பு என்பது காட்டுபவ ரிடமோ காட்டப்படுபவரிடமோ வேதனையை உண்டாக்கும் வண்ணம் ஒருபோதும் செயல்படாது.

ஒருவன் ஒருத்தியைக் காதலிக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவள் முழுக்கமுழுக்கத் தனக்கே சொந்தமாக இருக்க வேண்டுமென்று அவன் நினைக்கிறான். அவளுடைய நடத்தை ஒவ்வொன்றையும் சந்தேகத்துடன் கண்காணிக்கிறான். அவள் அவனது அருகிலேயே அமர வேண்டும், அவனது அருகிலேயே நிற்க வேண்டும், உண்பதும் போவதும் வருவதும் எல்லாமே அவனுடைய கட்டளைப்படியே நடக்க வேண்டும் என்று விரும்புகிறான். அவளது அடிமையாகிவிட்ட அவன், அவளும் தன் அடிமையாக வேண்டும் என்று ஆசைப்படு கிறான். இது அன்பு அல்ல, இது அடிமைகளின் பக்குவப் படாத ஒருவிதப் பற்று; அன்புபோல் தன்னைக் காட்டிக்கொள் கிறது, அவ்வளவுதான். இது அன்பு அல்ல, ஏனெனில் இது துன்பத்தைத் தருகிறது. இவன் விரும்பியதை அந்தப் பெண் செய்யாவிட்டால் அது இவனை வேதனைக்கு உள்ளாக்கு கிறது. அன்பிற்கு ஒருபோதும் வேதனை தரும் எதிர்விளைவு இருக்காது. அன்பு ஆனந்தத்தை மட்டுமே எதிர்விளைவாகத் தருகிறது. ஆனந்தத்தைத் தராத அன்பு அன்பல்ல. அது வேறு ஏதோவொன்றைத் தவறாக அன்பென்று நினைப்பதாகும். வேதனை, பொறாமை, சுயநல உணர்ச்சிகள் போன்ற எதிர் விளைவுகள் உண்டாகாவண்ணம் உங்கள் கணவன், மனைவி, மக்கள், உலகம், பிரபஞ்சம் அனைத்தையும் நேசிப்பதில் நீங்கள் வெற்றி பெற்றீர்களானால் பற்றின்றி இருக்கத் தகுந்த நிலையில் இருக்கிறீர்கள்.

'அர்ஜுனா, என்னைப் பார்! நான் செயல்புரிவதை ஒரு கணம் நிறுத்தினாலும் இந்தப் பிரபஞ்சம் அழிந்துபோகும். செயல்புரிந்து நான் அடைவதற்கு எதுவும் இல்லை. நானே இறைவன். பின் நான் ஏன் வேலை செய்ய வேண்டும்? ஏனெனில் நான் உலகை நேசிக்கிறேன்'[1] என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். இறைவன்

---

1. ஒப்பிடுக: கீதை—
உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
—3. 24.
ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன ।
நான வாப்த மவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥
—3. 22.

பற்றின்றி இருக்கிறார். ஏனென்றால் அவர் அன்பு செய்கிறார். உண்மையன்பு நம்மைப் பற்றற்றவர்கள் ஆக்குகிறது. எங்கெல்லாம் பற்று இருக்கிறதோ, உலகப் பொருட்களைப் பற்றிப் பிடித்துக்கொள்ளும் ஆசை இருக்கிறதோ, அங்கே இருப்பதெல்லாம் வெறும் ஜடப் பொருளணுக்களின் இரண்டு தொகுதிகளுக்கிடையே உள்ள பௌதிகக் கவர்ச்சியே; இரண்டு உடம்புகளை நெருக்கமாக, மிக நெருக்கமாக எப்போதும் ஈர்த்துக்கொண்டிருக்கின்ற ஏதோ ஒன்று அது. போதிய அளவு அந்த இரண்டு உடம்புகளும் நெருங்க முடியாவிட்டால் வேதனை விளைகிறது. உண்மையன்பு ஒருபோதும் பௌதிகக் கவர்ச்சியைச் சார்ந்திருப்பதில்லை. அத்தகைய அன்பு கொண்டவர்கள் ஆயிரம் மைல்கள் இடைவெளியில் இருக்கலாம். ஆனால் அவர்களது அன்பு ஒருபோலவே இருக்கும். அது அழிவதில்லை, எந்த வேதனையான எதிர்விளைவையும் உண்டாக்குவதில்லை.

இத்தகைய பற்றின்மை ஏறக்குறைய வாழ்நாள் முழுவதும் பாடுபட்டு அடையக்கூடிய ஒன்று. இந்த நிலையை அடையும் போது அன்பின் லட்சியத்தை அடைந்து விடுகிறோம்; சுதந்திரர்களாகி விடுகிறோம்; இயற்கையின் கட்டுக்கள் நம்மிடமிருந்து விலகிவிடுகின்றன; உலகம் உண்மையாக எப்படி இருக்கிறதோ அப்படியே நாம் காண்போம். அதன்பின் இயற்கை நம்மை எந்தச் சங்கிலியாலும் கட்டுவதில்லை. நாம் முழுக்க முழுக்கச் சுதந்திரர்களாகிவிடுவோம்; செயல்களின் பலன்களைப் பொருட்படுத்த மாட்டோம். அந்தப் பலன்கள் என்ன என்பதைப்பற்றி யாருக்குக் கவலை!

நீ உன் குழந்தைகளுக்குத் தருபவற்றிற்கு எதையாவது திருப்பிக் கேட்பாயா? உன் குழந்தைகளுக்காக உழைப்பது உனது கடமை, அதோடு விஷயம் முடிந்துவிடுகிறது. ஒரு குறிப்பிட்ட நபருக்கோ, நகருக்கோ, நாட்டிற்கோ நீங்கள் எதையாவது செய்யும்போதும் இதே மனநிலையைக் கைக்கொள்ளுங்கள்; அதாவது, எதையும் பிரதியாக எதிர்பார்க்காமல் உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் செய்வதுபோலவே செய்யுங்கள். பிரதிபலனைப்பற்றி எந்த எண்ணமும் இல்லாமல், செய்கின்ற அனைத்தையும் உலகவேள்வியில் ஓர் ஆஹுதியாகச் சமர்ப்பிக்கின்ற நிலையில் உங்களால் எப்போதும் இருக்க முடியுமானால், நீங்கள் செய்கின்ற வேலை உங்களைப் பற்றுக்கொள்ளச் செய்யாது. பிரதியாக எதையாவது எதிர்பார்க்கும்போதுதான் பற்று வருகிறது. அடிமைகளைப்போல் வேலை செய்தால் சுயநலமும்

பற்றுமே உண்டாகிறது. மனத்தின் எஜமானர்களாகச் செயல் புரிந்தாலோ பற்றின்மையால் வரும் ஆனந்தம் விளைகிறது.

நியாயம், நீதி என்றெல்லாம் அடிக்கடிப் பேசுகிறோம். ஆனால் உலகிலோ நியாயம் நீதியெல்லாம் வெறும் சிறு பிள்ளைப் பேச்சாகவே உள்ளது. மனிதனின் நடத்தையை வழி நடத்துகின்ற இரண்டு விஷயங்கள் உள்ளன: ஒன்று, அதிகாரம்; மற்றொன்று, கருணை. அதிகாரம் செலுத்துவது என்பது உண்மையில் சுயநலத்தின் செயல்பாடு. உலகில் உள்ள ஆண் பெண் அனைவருமே தங்கள் அதிகாரத்தையும் சலுகையையும் பயன்படுத்தி முடிந்த அளவு லாபம் தேடவே முயல்கின்றனர். கருணை என்பதே சொர்க்கம்தான். நல்லவர்களாக இருக்க வேண்டுமென்றால் நாம் கருணை நிறைந்தவர்கள் ஆக வேண்டும். நீதியும் உரிமையும்கூட கருணையையே அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். நாம் செய்யும் செயல்களுக்குப் பலனை எதிர்பார்ப்பது நமது ஆன்மீக முன்னேற்றத்தைத் தடுக்கிறது; அது மட்டுமல்ல, இறுதியில் அது துன்பத்தையே கொண்டுவருகிறது.

கருணை, சுயநலம் கலவாத தானம் போன்ற லட்சியங்களை வாழ்வில் செயல்முறைப்படுத்த மற்றொரு வழி உள்ளது. நாம் சகுணக் கடவுளை நம்புபவர்களாக இருந்தால் செயலை 'வழிபாடாக'ச் செய்வதே அந்த வழி. இங்கே, நாம் செய்கின்ற செயல்களின் பலன் அனைத்தையும் இறைவனிடம் சமர்ப்பித்து விடுகிறோம். இதன்மூலம் அவரை வழிபடுகிறோம். எனவே நாம் செய்வதற்குப் பிரதியாக மக்களிடமிருந்தோ உலகிடமிருந்தோ எதையும் எதிர்பார்க்க நமக்கு உரிமையில்லாமல் போகிறது. இறைவன் இடையீடின்றிச் செயல்புரிந்தும் பற்று என்பது அவரிடம் ஒருபோதும் இல்லை. தாமரை இலையைத் தண்ணீர் நனைக்க முடியாது. அதுபோலவே, சுயநலம் அற்றவனை, அவனுக்குப் பலன்களில் நாட்டத்தை ஏற்படுத்தி, அவனைப் பிணைக்க கர்மத்தால் முடியாது. சுயநலமும் பற்றும் இல்லாதவன் நெருக்கம் மிக்கதும் பாவமே உருவானதுமான நகரத்தின் நடுவே வாழ்ந்தாலும், பாவம் அவனை நெருங்காது.

முழுமையான தன்னல மறுப்பைக் கீழ்வரும் கதை விவரிக்கிறது: குருக்ஷேத்திரப் போருக்குப் பிறகு, பாண்டவ சகோதரர்கள் ஐவரும் பெரிய யாகம் ஒன்றை நடத்தினார்கள். அதில் ஏழைகளுக்கு மிகுந்த அளவில் தானம் அளிக்கப்பட்டது. எல்லோரும் அந்த யாகத்தின் சிறப்பையும் பெருமையையும்

கண்டு வியந்து, அத்தகைய ஒரு யாகத்தை இதுவரை உலகம் கண்டதில்லை என்று பாராட்டினர். யாகம் நிறைவுற்ற பின்னர் அங்கே ஒரு கீரிப்பிள்ளை வந்தது. அதன் உடம்பில் ஒரு பகுதி பொன்னாகவும் மற்ற பகுதி சாம்பல் நிறத்திலும் இருந்தது. உள்ளே நுழைந்த அது யாக மண்டபத்தில் விழுந்து புரண்டது. பின்னர் எல்லோரையும் பார்த்து, 'நீங்கள் எல்லோரும் பொய்யர் கள், இது யாகமே அல்ல' என்று கூறியது. கேட்டவர்கள் திகைத்தார்கள். 'என்ன! இது யாகம் அல்ல என்றா சொல்கிறாய்? எவ்வளவு பொன்னும் பொருளும் ஏழைகளுக்கு அள்ளிக் கொடுக்கப்பட்டது என்பது உனக்குத் தெரியுமா! எல்லோரும் செல்வந்தர்களாகி மகிழ்ச்சியில் திளைக்கின்றனரே! இதுவரை மனிதன் செய்தவற்றுள் மிக அற்புதமான யாகம் இது' என்றனர்.

அதற்குக் கீரிப்பிள்ளை கூறியது: 'முன்பொரு முறை சிறிய கிராமம் ஒன்றில் பிராமணர் ஒருவர், தன் மனைவி, மகன் மற்றும் மருமகளோடு வாழ்ந்து வந்தார். அவர்கள் மிகவும் ஏழைகள். பிறருக்குப் படிப்பும் சாஸ்திரமும் சொல்லித் தந்து, அதனால் கிடைக்கும் மிகக் குறைந்த பொருளைக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள். ஒருமுறை அந்த நாட்டில் மூன்று வருடங் களுக்குப் பஞ்சம் ஏற்பட்டது. முன்பு எப்போதையும்விட அந்தப் பிராமணக் குடும்பம் மிகுந்த துன்பத்திற்கு உள்ளாகியது. பல நாட்கள் பட்டினியில் கழிந்தன. அதிர்ஷ்டவசமாக ஒருநாள் காலையில் அந்தப் பிராமணருக்கு பார்லி மாவு கிடைத்தது. அதைப் பக்குவம் செய்து பங்கிட்டு நால்வரும் உண்ணத் தயாராயினர். அந்த வேளையில் அவர்களின் வீட்டுக் கதவு தட்டப்பட்டது. பிராமணர் கதவைத் திறந்தார். எதிரே விருந் தினர் ஒருவர் நின்று கொண்டிருந்தார்.

'இந்தியாவில், விருந்தினர் என்பவர் வழிபாட்டிற்கு உரிய வர். அந்த வேளைக்கு அவர் தெய்வமே; அந்த நிலையில் அவர் போற்றப்பட வேண்டும். எனவே அந்த ஏழைப் பிராமணர் விருந்தாளியை அன்போடு வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார். பின்பு தன் பங்கு உணவை அந்த விருந்தாளிக்குக் கொடுத்துச் சாப்பிடும்படி உபசரித்தார். வந்தவரோ கணநேரத் தில் மாவு முழுவதையும் சாப்பிட்டுவிட்டு, ''ஐயோ நீங்கள் என்னைக் கொல்கிறீர்களே! பத்து நாட்களாக நான் பட்டினி கிடக்கிறேன். இந்தச் சொற்ப உணவு என் பசியைத் தூண்டி அல்லவா விட்டுவிட்டது'' என்று கதறினார். உடனே அந்தப் பிராமணரின் மனைவி கணவரிடம், ''என் பங்கை அவருக்குக்

கொடுங்கள்' என்று கூறினாள். பிராமணரோ, 'வேண்டாம்'' என்றார். அதற்கு அவள், ''வந்திருப்பவர் ஏழை. வீட்டிற்கு வந்த விருந்தினரின் பசியைப் போக்கி உபசரிப்பது இல்லறத்தார்களாகிய நமது கடமை. அவருக்குத் தர உங்களிடம் ஒன்றும் இல்லாதபோது, என்னிடம் இருப்பதைக் கொடுக்க வேண்டியது மனைவியாகிய என் கடமை'' என்று கூறித் தன் பங்கை அந்த விருந்தாளிக்குக் கொடுத்தாள். அதை உண்ட பிறகும் விருந்தாளியின் பசி தீரவில்லை. அவர் துடித்தார். இதைப் பார்த்த அந்தப் பிராமணரின் மகன், ''தந்தையின் பாரத்தைச் சுமப்பதில் உதவ வேண்டியது மகனின் கடமை. இதோ என் பங்கு உணவையும் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று தன் பங்கை அந்த விருந்தாளியிடம் கொடுத்தான். அப்படியும் விருந்தாளியின் பசி அடங்கவில்லை. அவர் மிகுந்த வேதனைப்பட்டார். இதைக் கண்ட அந்த மகனுடைய மனைவி தன் பங்கையும் கொடுத்தாள். அதை உண்டபின் அவரது பசி தீர்ந்தது. அவர்களை வாழ்த்தி விடைபெற்றார் அந்த விருந்தாளி. ஆனால் வீட்டிலுள்ள நால்வரும் பசியின் கொடுமையால் அன்றிரவே இறந்து போனார்கள்.

'அந்த மாவில் கொஞ்சம் அங்கே தரையில் சிந்தியிருந்தது. நான் அந்த மாவின்மீது புரண்டபோது என் பாதி உடம்பு பொன்னாகியது. அதை நீங்கள் இதோ பார்க்கிறீர்கள். அது போன்ற யாகம் எங்காவது நடைபெறுகிறதா என்று அன்றிலிருந்து நான் உலகம் முழுவதும் தேடுகிறேன். ஆனால் எங்கேயும் காண முடியவில்லை. என் மீதி உடல் பொன்னாகவும் இல்லை. அதனால்தான் இது யாகமே இல்லை என்கிறேன்.'

தானம் பற்றிய இந்தக் கருத்து இப்போது இந்தியாவிலிருந்து மறைந்துகொண்டிருக்கிறது. மாமனிதர்கள் குறைந்து வருகிறார்கள். நான் முதன்முதலில் ஆங்கிலம் கற்றுக்கொண்டபோது கடமையுணர்வு கொண்ட ஒரு சிறுவனைப்பற்றிய ஆங்கிலக் கதையொன்று படித்தேன். தான் வேலை செய்து பெற்றுவந்த கூலியில் சிறு தொகையைத் தன் தாய்க்குக் கொடுத்தான் அவன். இதைப் புகழ்ந்து நான்கைந்து பக்கங்கள் எழுதியிருந்தார்கள். அது என்ன பிரமாதமோ! இந்துச் சிறுவன் ஒருவனுக்கு இந்தக் கதையின் நீதி புரியவே புரியாது. தனக்காகவே ஒவ்வொருவனும் என்ற மேலை நாட்டுக் கருத்தை அறிந்த பின்னரே இப்போது அந்தக் கதை எனக்குப் புரிகிறது. சிலரோ அனைத்தையும் தாங்களே எடுத்துக்கொண்டு, தாய், தந்தை, மனைவி, மக்களைக்கூடத் தவிக்கும்படி விட்டுவிடுகிறார்கள்.

இல்லறத்தானின் லட்சியம் ஒருபோதும் ஓரிடத்திலும் இதுவாக இருக்கக் கூடாது.

இப்போது கர்மயோகம் என்பது எது என்று உங்களுக்குப் புரிந்திருக்கும். சாகின்ற நிலையிலும்கூட கேள்வி எதுவும் கேட்காமல் ஒருவருக்கு உதவி செய்வதுதான் கர்மயோகம். கோடி முறை நீங்கள் ஏமாற்றப்பட்டாலும் அதைப்பற்றி எந்தக் கேள்வியும் கேட்காதீர்கள், நீங்கள் செய்வதைப்பற்றிப் பெரிதாகவும் நினைக்காதீர்கள். ஏழைகளுக்குச் செய்யும் உதவிபற்றிப் பெருமையடித்துக் கொள்ளாதீர்கள்; அவர்கள் உங்களிடம் நன்றி பாராட்ட வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். மாறாக, நீங்கள் உதவி செய்வதற்கான வாய்ப்பைத் தந்ததற்காக அவர்களுக்கு நன்றி செலுத்துங்கள். ஒரு லட்சிய இல்லறத்தானாக இருப்பது, ஒரு லட்சியத் துறவியாக இருப்பதைவிடக் கடினம் என்பது இதிலிருந்து உங்களுக்குத் தெரிந்திருக்கும். உண்மையான கர்மயோகம், உண்மையான துறவு வாழ்வைவிடக் கடினமானதில்லை என்றாலும், நிச்சயமாக, துறவு வாழ்விற்கு ஈடான கடுமை நிறைந்ததே. ❑

# 3. பற்றின்மையே பூரணமான தன்னல மறுப்பு

நம்மிடமிருந்து புறப்படுகின்ற ஒவ்வொரு செயலும் நம்மிடமே எதிர்ச்செயலாகத் திரும்பி வருவதுபோல், நம் செயல்கள் பிற ரிடமும், பிறரது செயல்கள் நம்மிடமும் செயல்படுகின்றன. தீமை செய்கின்ற ஒருவன் மேலும்மேலும் தீயவனாகிறான். அவனே நல்லது செய்யத் தொடங்கும்போது, மேலும்மேலும் வலிமையடைந்து, எப்போதும் நல்லது செய்யக் கற்றுக் கொள் கிறான். இந்த உண்மையை நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஒரு செயல் ஏற்படுத்தும் தாக்கத்தின் இத்தகைய தீவிரத்தை, நமது செயல்கள் பரஸ்பரம் ஒவ்வொருவர்மீதும் விளைவுகளையும் எதிர்விளைவுகளையும் உண்டாக்குகின்றன என்ற உண்மையின் மூலம் அல்லாமல், வேறு எதன்மூலமாகவும் விளக்க முடியாது.

பௌதீக விஞ்ஞானத்திலிருந்து இதற்கு ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். நான் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்யும்போது, என் மனம் குறிப்பிட்ட ஓர் அதிர்வுநிலையில் இருக்கிறது. இந்த அதிர்வுநிலையில் இருக்கின்ற மற்றெல்லா மனங்களும் என் மனத்தால் பாதிக்கப்படலாம். ஓர் அறையில் பல்வேறு இசைக்கருவிகள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவை அனைத்தின் தந்திக்கம்பிகளும் ஒரேபோல் சுருதி சேர்க்கப்பட்டுள்ளன. இப்போது ஒரு கருவியின் தந்தியை மீட் டினால், மற்ற கருவிகளும் அதே சுரத்தைத் தரும் விதத்தில் அதிரத் தொடங்குவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அது போலவே ஒரு குறிப்பிட்ட அதிர்வுநிலையிலுள்ள எல்லா மனங்களும், அதே நிலையிலுள்ள எண்ணத்தால் சம அளவில் பாதிக்கப்படுகின்றன. ஆனால் தூரம் மற்றும் வேறு பல காரணங்களைப்பொறுத்து இந்தப் பாதிப்பின் தாக்கம் மனத் திற்கு மனம் மாறுபடுகிறது. என்றாலும் பாதிப்பிற்கு உள்ளாகும் நிலையிலேயே அந்த மனம் எப்போதும் இருக்கிறது. உதாரண மாக, நான் ஒரு தீமை செய்கிறேன். அப்போது என் மனம்

குறிப்பிட்ட ஓர் அதிர்வுநிலையில் இருக்கிறது. அப்போது பிரபஞ்சத்தில் அதே அதிர்வுநிலையில் இருக்கும் எல்லா மனங்களும் அந்த அதிர்வால் பாதிக்கப்படலாம். அதுபோலவே நான் நல்ல காரியம் செய்யும்போது, என் மனம் வேறோர் அதிர்வுநிலையில் இருக்கும்; அப்போது அதே அதிர்வுநிலையில் இருக்கும் எல்லா மனங்களும் அதனால் பாதிக்கப்படலாம். இப்படி ஒரு மனத்தின்மீது மற்றொரு மனத்திற்குள்ள ஆற்றல், ஓரளவிற்கு அந்த அதிர்வு கூடியும் குறைந்தும் இருப்பதற்கு ஏற்பவே இருக்கும்.

இந்த உதாரணத்தைத் தொடர்வோம். ஒளியின் அலைகள் ஒரு குறிப்பிட்ட இலக்கை அடையுமுன் லட்சோபலட்சம் ஆண்டுகள் பயணம் செய்யலாம். அதுபோலவே எண்ண அலைகளும் தங்களுக்கு ஏற்றவிதத்தில் அதிர்கின்ற ஒரு பொருளைச் சென்றடைய நூற்றுக்கணக்கான ஆண்டுகள் பயணம் செய்ய நேரலாம். எனவே இந்த வானவெளி அத்தகைய நல்ல மற்றும் தீய அலைகளால் நிரம்பி இருப்பதற்கான எல்லா வாய்ப்புகளும் உள்ளன. ஒவ்வொரு மூளையிலிருந்தும் வெளிக் கிளம்புகின்ற ஒவ்வோர் எண்ணமும் அதை ஏற்றுக்கொள்வதற்குப் பொருத்தமான பொருளை அடையும்வரையில் அதிர்ந்து கொண்டேயிருக்கின்றன என்று சொல்லலாம். அவற்றை ஏற்றுக் கொள்வதற்குத் தகுதியாக இருக்கின்ற மனம் உடனடியாக ஏற்றுக் கொள்கிறது. ஒருவன் தீய செயல்களைச் செய்யும்போது அவன் தன் மனத்தை ஒரு குறிப்பிட்ட அதிர்வு நிலைக்குக் கொண்டு வருகிறான். அப்போது, அதே அதிர்வுநிலையில் வானவெளியில் மிதந்து கொண்டிருப்பதாகச் சொல்லப்படுகின்ற எண்ண அலைகள் எல்லாம் அவனது மனத்தில் நுழைய முயல்கின்றன. இதனால்தான் பொதுவாக, தீமை செய்பவன் மேலும்மேலும் தீமை செய்துகொண்டே இருக்கிறான்; அவனது செயல் தீவிரமாகிறது. நன்மை செய்பவனின் விஷயமும் இதுதான். அவன் வானவெளியில் உள்ள நல்ல அலைகளுக்காகத் தன்னைத்திறந்து வைக்கிறான். அவனது நற்செயல்களும் உறுதி பெறுகின்றன.

எனவே நாம் தீமை செய்யும்போது இரண்டு வகையான அபாயங்களை விளைவிக்கிறோம். முதலில் நம்மைச் சுற்றியுள்ள தீய ஆதிக்கங்கள் நம்மீது செயல்பட நாமே இடம் கொடுக்கிறோம். இரண்டாவதாக மற்றவர்களைப் பாதிக்கின்ற—அது ஒருவேளை நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகு பாதிக்கலாம்—தீமையைச் செய்யும்போது நாம் நம்முடன் சேர்த்துப்

பிறரையும் துன்புறுத்துகிறோம். மனிதனிலுள்ள மற்ற எல்லா சக்திகளையும் போலவே நன்மை தீமை ஆகிய சக்திகளும் புறத்திலிருந்தே வலிமையைப் பெறுகின்றன.

கர்மயோகத்தின்படி, ஒருமுறை செய்த செயல் பலனை அளிக்கும்வரையில் அதை அழிக்க முடியாது. அது பலனளிப்பதை உலகத்தில் உள்ள எந்த ஆற்றலாலும் தடுக்க முடியாது. நான் ஒரு தீமை செய்தால் அதற்காக நான் துன்பப்பட்டேயாக வேண்டும். அதைத் தடுக்கவோ அழிக்கவோ இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள எந்த ஆற்றலாலும் முடியாது. அதுபோலவே நான் ஒரு நல்ல செயல் செய்தால் அது நற்பலன்களைத் தருவதைத் தடுக்கின்ற ஆற்றலும் இந்தப் பிரபஞ்சத்தில் இல்லை. காரணம், காரியத்தைக் கொண்டு வந்தே தீரும். எதுவும் அதை அழிக்கவோ தடுக்கவோ முடியாது.

கர்மயோகத்தைப்பற்றிய நுணுக்கமானதும் ஆழமானதுமான முடிவு ஒன்று இப்போது வருகிறது. நல்லதும் தீயதும் ஆகிய நமது இரண்டு செயல்களும் பரஸ்பரம் பின்னிப் பிணைந்துள்ளன. இது முற்றிலும் நல்ல செயல், இது முற்றிலும் தீய செயல் என்று நாம் வரையறுக்க முடியாது. ஒரேநேரத்தில் நல்ல மற்றும் தீய விளைவுகளைத் தராத எந்தச் செயலுமே கிடையாது.

இந்த உதாரணத்தை எடுத்துக் கொள்வோம், நான் உங்களோடு பேசிக் கொண்டிருக்கிறேன். நான் நல்லது செய்வதாக உங்களுள் சிலர் நினைக்கலாம். அதேவேளையில் வான்வெளியில் உள்ள ஆயிரக்கணக்கான நுண்ணுயிரிகளை நான் சாகடித்துக் கொண்டிருக்கலாம். இவ்வாறு ஏதோ சிலவற்றிற்குத் தீமையும் செய்துகொண்டிருக்கிறேன். நமக்கு மிக அருகிலுள்ளவர்களுக்கு, நமக்கு வேண்டியவர்களுக்கு நன்மை பயக்கும்போது அதை நற்செயல் என்கிறோம். உதாரணமாக நான் பேசிக் கொண்டிருப்பதை நல்லது என்று நீங்கள் கூறலாம், ஆனால் நுண்ணுயிரிகள் அவ்வாறு நினைக்காது. நுண்ணுயிரிகளை நீங்கள் பார்க்கவில்லை, ஆனால் உங்களை நீங்கள் பார்க்கிறீர்கள். என் பேச்சு உங்களைப் பாதிப்பது உங்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது. அது அந்த நுண்ணுயிரிகளை எப்படிப் பாதிக்கிறது என்பது அவ்வளவு தெளிவாகத் தெரியவில்லை. எனவே நமது தீய செயல்களை ஆராய்ந்தால், அவற்றால் எங்காவது ஓரிடத்தில் நன்மை விளைந்திருப்பதைக் காணலாம். யார் நல்ல செயலிலும் தீய அம்சம் உண்டென்றும், தீய

செயலிலும் நல்ல அம்சம் உண்டென்றும் காண்கிறானோ, அவனே செயலின் ரகசியத்தை அறிந்தவன்.

இதிலிருந்து தெரிவது என்ன? தூய்மை என்றால் அஹிம்சை என்றும் தூய்மையற்றது என்றால் ஹிம்சை என்றும் பொருள் கொள்வதானால், நாம் எவ்வளவுதான் முயன்றாலும், அந்த அர்த்தத்தில், முழுக்கமுழுக்கத் தூய்மையானதோ முழுக்க முழுக்கத் தூய்மையற்றதோ ஆன ஒரு செயல் இருக்க முடியாது என்பதுதான். நாம் பிறரைத் துன்புறுத்தாமல் மூச்சுவிடவோ உயிர்வாழவோ முடியாது. நாம் உண்கின்ற ஒவ்வொரு பிடி உணவும் மற்றொன்றின் வாயிலிருந்து பறித்தெடுக்கப்பட்டதே. நமது வாழ்வே மற்ற உயிர்களின் வாழ்வைப் பின்னுக்குத்தள்ளிய படிதான் சென்றுகொண்டிருக்கிறது. அது மனிதனாக இருக்கலாம், மிருகமாக இருக்கலாம் அல்லது நுண்ணுயிரிகளாக இருக்கலாம், ஏதாவது ஒன்றை நாம் ஒதுக்கித் தள்ளியேயாக வேண்டியிருக்கிறது. இதுதான் நிலைமை. எனவே செயல் புரிவதன்மூலம் நிறைநிலையை அடைய முடியாது என்பது இதிலிருந்து தெளிவாகிறது. நாம் எல்லையற்ற காலம்வரை ஓயாமல் செயல்கள் புரியலாம். ஆனால் சிக்கலான இந்தப் பொறியிலிருந்து தப்பிக்க வழி எதுவுமே இல்லை. நீங்கள் மேலும் மேலும் செயல் புரிந்துகொண்டே போகலாம். ஆனால் அதன் பலன்களிலுள்ள நன்மை மற்றும் தீமையின் தவிர்க்க முடியாத இந்தச் சேர்க்கைக்கு ஒரு முடிவே இருக்காது.

இரண்டாவதாக நாம் ஆலோசிக்க வேண்டியது செயலின் குறிக்கோள் என்ன என்பதே. உலகம் நிறைநிலையை அடைகின்ற காலம் ஒன்று வரும்; அப்போது நோயோ, மரணமோ, துன்பமோ, தீமையோ இருக்காது என்று ஒவ்வொரு நாட்டிலும் பெரும்பாலான மக்கள் நம்புவதைக் காண்கிறோம். எண்ணம் நல்லதுதான், பாமர மக்களுக்கு உத்வேகத்தைத் தரவும் அவர்களை உயர்த்தவும் ஒரு மிகச் சிறந்த தூண்டுசக்தி இது. ஆனால் சற்று சிந்தித்துப் பார்த்தால், இது நடக்க முடியாத ஒன்று என்பது பிரத்தியட்சமாகத் தெரியும். நன்மையும் தீமையும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களாக இருக்க, அது எப்படி நடக்க முடியும்? தீமை இல்லாத நன்மை எப்படி இருக்க முடியும்? நிறைநிலை என்பதற்கு என்ன பொருள்? நிறைவாழ்வு என்பது முன்னுக்குப்பின் முரணான ஒன்று. வாழ்வு என்பதே நமக்கும் வெளியே இருக்கின்ற அனைத்திற்கும் தொடர்ந்து நடக்கின்ற போராட்டம்தான். உண்மையில் ஒவ்வொரு கணமும்

நாம் புற இயற்கையோடு போராடிக் கொண்டிருக்கிறோம். நாம் தோற்றால் நமது வாழ்க்கை முடிந்தாக வேண்டும். உதாரணத்திற்கு எடுத்துக்கொண்டோமானால் வாழ்க்கை என்பது உணவிற்காகவும் காற்றிற்காகவும் தொடர்ந்த போராட்டமாக உள்ளது. உணவோ காற்றோ கிடைக்காவிட்டால் நாம் இறந்து போகிறோம். வாழ்க்கை என்பது தடையற்றுப் பாய்கின்ற நீரோட்டமல்ல; பலவற்றுடைய சங்கமத்தின் விளைவு அது. உள்ளே உள்ள ஏதோ ஒன்றிற்கும் புறவுலகிற்கும் நிகழ்கின்ற இந்தச் சிக்கலான போராட்டத்தைத்தான் நாம் வாழ்க்கை என்று அழைக்கிறோம். எனவே இந்தப் போராட்டம் ஓயும் போது வாழ்க்கையும் முடிந்து விடுகிறது என்பது சந்தேகத்திற்கு இடமின்றித் தெளிவு. இந்தப் போராட்டத்தின் முடிவே லட்சிய இன்பம் என்பதன் பொருள். போராட்டம் முடிவடைந்தால் வாழ்க்கையும் முடிகிறது. ஏனென்றால் வாழ்க்கை முடிவடைந்தால் மட்டுமே இந்தப் போராட்டம் முடிவடையும்.

உலகிற்கு உதவுவதன்மூலம் நமக்கேதான் நாம் உதவி செய்துகொள்கிறோம் என்பதை முன்பே கண்டோம். பிறருக்காகச் செய்யப்படும் வேலையின் முக்கிய விளைவு நம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்வதுதான். பிறருக்கு நன்மை செய்வதற்காகச் செய்கின்ற இடைவிடாத முயற்சியின்மூலம் நாம் நம்மையே மறக்க முயல்கிறோம். நம்மை மறப்பது என்பது வாழ்வில் நாம் கற்றாக வேண்டிய மிகப் பெரிய பாடமாகும். சுயநலத்தால் சுகம் கிடைக்கும் என்று மனிதன் முட்டாள்தனமாக நினைக்கிறான். ஆனால் பலகாலப் போராட்டத்திற்குப் பிறகு, தன்னலத்தை ஒழிப்பதில்தான் உண்மையான மகிழ்ச்சி இருக்கிறது, தன்னைத் தவிர வேறு யாராலும் தனக்குச் சுகம் தர முடியாது என்பதை அறிந்துகொள்கிறான்.

அறச் செயல்கள் ஒவ்வொன்றும், கருணை நிறைந்த எண்ணம் ஒவ்வொன்றும், உதவியாகச் செய்யப்படுகின்ற ஒவ்வொரு செயலும், ஒவ்வொரு நற்செயலும் நம்மைப்பற்றிப் பெரிதாக எண்ணும் நமது அகந்தையை அழித்து, நம்மை மிகத் தாழ்ந்தவர்களாகவும், மிகமிகச் சாதாரணமானவர்களாகவும் நினைக்கும் படிச் செய்கின்றன. எனவே இவையனைத்தும் நல்லவையே. ஞானம், பக்தி, கர்மம் முதலிய எல்லாமே ஓரிடத்தில் சங்கமிக்கின்றன. என்றென்றைக்கும் முழுமையாகத் தன்னை மறுப்பதே மிகவுயர்ந்த லட்சியம். அங்கே 'நான்' இல்லை. எல்லாம்

'நீயே'. மனிதன் அறிந்தாலும் அறியாவிட்டாலும் கர்மயோகம் அவனை அந்த நிலைக்கு அழைத்துச் செல்கிறது.

நிர்க்குணக் கடவுள்கருத்தைக் கேட்டாலே மதப் பிரச்சாரகன் நடுங்கலாம். அவன் சகுணக் கடவுள்கருத்தை வற்புறுத்துவான். அதன்மூலம் தனது சொந்த இயல்பையும் தனித்துவத்தையும் நிலைநிறுத்த விரும்புகிறான் அவன். இந்த இரு வார்த்தைகளுக்கும் அவன் என்ன பொருள் கொள்கிறானோ, அது வேறு விஷயம். ஆனால் அவனுடைய நீதிநெறிக் கருத்துக்கள் உண்மையிலேயே நல்லதாக இருக்குமானால் அது மிகவுயர்ந்த தன்னல மறுப்பை அடிப்படையாகக் கொள்ளாமல் இருக்க முடியாது. தன்னல மறுப்பே எல்லா ஒழுக்கத்திற்கும் அடிப்படை. மனிதர்கள், மிருகங்கள், தேவர்கள் என்று யாரை எடுத்துக்கொண்டாலும் சரி, எல்லோருடைய நீதிநெறி அமைப்புக்களுக்கும் ஒரே அடிப்படைக் கருத்து, ஒரே அடிப்படைக் கோட்பாடு தன்னல மறுப்பே.

உலகத்தில் பலவகையான மனிதர்களை நாம் காணலாம். முதலில் தெய்வ-மனிதர்கள். இவர்களின் தன்னல மறுப்பு பரிபூரணமானது. தங்கள் உயிரைக் கொடுத்தும் பிறருக்கு நன்மைகளை மட்டுமே செய்பவர்கள் இவர்கள். இவர்களே மனிதர்களுள் உயர்ந்தவர்கள். இத்தகையோர் ஒரு நாட்டில் நூறுபேர் இருந்தாலும் போதும், அந்த நாடு எதற்கும் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் துரதிர்ஷ்டவசமாக இவர்கள் மிகச் சொற்பமாகவே உள்ளார்கள். அடுத்து, தங்களுக்குத் துன்பம் நேராதவரையில் பிறருக்கு நன்மை செய்கின்ற நல்லோர் உள்ளனர். மூன்றாவது ஒரு வகையினர் உள்ளனர். அவர்கள் தங்களுக்கு நன்மை செய்து கொள்வார்கள்; பிறருக்குத் தீங்கு செய்வார்கள். இவர்களை அடுத்து, பெயரிட்டு அழைக்கத்தகாத நான்காவது வகையான மனிதர்கள் இருப்பதாக சம்ஸ்கிருதக் கவிஞர் ஒருவர் கூறுகிறார்.[1] இவர்கள் தீமை செய்ய வேண்டும் என்னும் ஒரே காரணத்திற்காகப் பிறருக்குத் தீங்கிழைப்பார்கள். வாழ்க்கையின் ஒரு முனையில் நன்மைக்காகவே நன்மை செய்கின்ற மிக மேலான நல்லோர் இருப்பதுபோல், மறுமுனையில்

---

1. ஏதே ஸத்புருஷா: பரார்த்த கடகா: ஸ்வார்த்தான் பரித்யஜ்ய யே
ஸாமான்யாஸ்து பரார்த்தமுத்யமப்ருத: ஸ்வார்த்தா விரோதேன யே।
யேऽமீ மானுஷ ராக்ஷஸா: பரதனம் ஸ்வார்த்தாய நிக்னந்தி யே
யே து க்னந்தி நிரர்த்தகம் பர தனம் தே கே ந ஜானீமஹே ॥
—பர்த்ருஹரி, நீதி சதகம், 65.

தீமைக்காக மட்டுமே தீமை செய்வோர் உள்ளனர். தீமை செய் வதால் இவர்களுக்கு எந்த நன்மையும் கிடைப்பதில்லை. ஆனாலும் தீமை செய்வது இவர்களின் இயல்பு.

சம்ஸ்கிருதத்தில் இரண்டு சொற்கள் உள்ளன. ஒன்று பிரவிருத்தி, அதாவது நோக்கிச் செல்லுதல்; மற்றொன்று நிவிருத்தி, விலகிச் செல்லுதல். பிரவிருத்தியையே சம்சாரம் என்றும், 'நான், எனது' என்றும் கூறுகிறோம். சொத்து, பணம், அதிகாரம், பேர், புகழ் இவற்றால் 'நான்' என்னும் எண் ணத்தை எப்போதும் அதிகரிக்கச் செய்வதும், பற்றிப்பிடித்துக் கொள்கின்ற இயல்புடையதுமான எல்லா செயல்களும் இந்தப் பிரவிருத்தி என்ற சொல்லில் அடங்கியுள்ளன. எல்லாவற்றை யும் 'நான்' என்ற மையத்திற்கு இழுத்துச் சேர்ப்பது அதன் இயல்பு. மனிதனின் இயல்பான தன்மையான இதுவே பிர விருத்தி. எல்லா இடங்களிலிருந்தும் எல்லாவற்றையும் அள்ளிக் கொண்டுவந்து, ஒரு மையத்தைச் சுற்றி, மனிதனின் இனிமை யான, சொந்த நான்-உணர்வைச் சுற்றிக் குவித்து வைப்பது பிரவிருத்தி. இந்த இயல்பு மறையத் தொடங்கும்போது, நிவிருத்தி தொடங்கும்போது, 'விலகிச் செல்லுதல்' தொடங்கும் போதுதான் ஒழுக்கமும் மதமும் ஆரம்பிக்கின்றன. பிரவிருத்தி, நிவிருத்தி இரண்டுமே செயல் சம்பந்தப்பட்டவை. முன்னது தீய செயல், பின்னது நற்செயல். இந்த நிவிருத்தியே ஒழுக்கம், மதம் எல்லாவற்றின் அடிப்படை ஆதாரம். நிவிருத்தியின் நிறைவே முழுத் தன்னல மறுப்பு, உடல் உயிர் அனைத்தையும் பிறருக்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்கின்ற நிலை. இந்த நிலையை அடைந்தால் ஒருவன் கர்மயோகத்தின் நிறை நிலையை அடைந்துவிட்டான். இது நற்செயல்களின் விளை வாகக் கிடைக்கின்ற மிக உயர்ந்த பலனாகும்.

ஒருவன் எந்தத் தத்துவங்களையும் படிக்காதவனாக இருந் தாலும், எந்தக் கடவுளிடமும் முன்போ இப்போதோ நம்பிக்கை இல்லாதவனாக இருந்தாலும், வாழ்நாளில் ஒருமுறைகூடப் பிரார்த்தனை செய்யாதவனாக இருந்தாலும், வெறும் நற்செயல் களின் ஆற்றல் அவனை மற்றவர்களுக்காகத் தன் உயிரையும் மற்ற அனைத்தையும் தியாகம் செய்யும் நிலைக்குக் கொண்டு வந்துவிடுமானால், அவன், ஒரு பக்தன் பிரார்த்தனை மூல மாகவும், தத்துவஞானி தன் ஞானத்தின்மூலமாகவும் அடை கின்ற அதே இடத்திற்குச் சென்று சேர்வான். தத்துவஞானி, கர்மயோகி, பக்தன் அனைவரும் ஒரே இடத்திற்கு வந்து

சேர்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது. அந்த இடம் தன்னல மறுப்பு. மக்கள் பின்பற்றும் தத்துவங்களும் மதமும் எவ்வளவுதான் வேறுபட்டதாக இருந்தாலும் பிறருக்காகத் தன்னையே தியாகம் செய்யத் தயாராக இருப்பவனின் முன் மனிதகுலம் மரியாதையோடும் பக்தியோடும் நிற்கும்.

இங்கு மதம், இனம், கோட்பாடு பற்றிய கேள்வியே எழுவதில்லை. அத்தகைய பரிபூரண ஆத்மதியாகபூர்வமான செயல்களைக் காணும்போது, மதக் கருத்துக்களை எதிர்ப்பவர்கள்கூட அவற்றைப் போற்றியே தீர வேண்டும் என்று உணர்கிறார்கள். புத்தர் கடவுளைப் போதிக்கவில்லை, ஏன், ஆத்ம தியாகத்தைத் தவிர எதையும் போதிக்கவில்லை. ஆனால் எட்வின் ஆர்னால்ட் எழுதிய 'ஆசிய ஜோதி'யைப் (Light of Asia) படிக்கின்றவன், மதவெறி பிடித்த கிறிஸ்தவனாக இருந்தால்கூட பயபக்தியோடு அவரைப் பணிவதை நீங்கள் பார்த்தது இல்லையா?

மதவெறியன் அறியாத ஒன்று என்னவென்றால், தனது லட்சியம் எதுவோ, அதுவே, தன்னிலிருந்து வேறுபட்ட கருத்தைக் கொண்டிருப்பவர்களுடைய லட்சியமும் என்பதுதான். பக்தன் எப்போதும் தன் மனத்தில் இறை நினைவை வைத்துக் கொண்டிருப்பதன்மூலமும், எப்போதும் நல்லவைகளால் சூழப்பட்டிருப்பதன்மூலமும் இறுதியாக அதே நிலைக்கு வருகிறான்; 'உன் திருவுளம் நிறைவேறட்டும்' என்று கூறுகிறான். தனக்கென்று அவன் எதையும் வைத்துக் கொள்வதில்லை. இது தன்னல மறுப்பு. தத்துவஞானி ஞானத்தின்மூலம், தான் என்று தோன்றுவது ஒரு மாயை என்பதைக் கண்டு அதை எளிதில் விட்டுவிடுகிறான். இதுவும் தன்னல மறுப்பே. எனவே கர்மம், பக்தி, ஞானம் எல்லாம் இங்கே சந்திக்கின்றன. கடவுள் என்பது உலகம் அல்ல என்று பண்டைய ஆச்சாரியர்கள் போதித்ததன் பொருள் இதுதான். உலகம் என்ற ஒன்று இருக்கிறது, கடவுள் என்ற ஒருவர் இருக்கிறார். இந்த வேறுபாடு முற்றிலும் உண்மையானது. உலகம் என்று அவர்கள் குறிப்பிடுவது சுயநலத்தையே. சுயநலமின்மையே கடவுள். ஒருவன் பொன் மாளிகையில் சிம்மாசனத்தில் அமர்பவனாக வாழ்ந்தும் சுயநலம் சிறிதும் அற்றவனாக இருக்கலாம்; அவன் கடவுளில் வாழ்கிறான். மற்றொருவன் கந்தையணிந்து குடிசையில் வாழலாம், தனக்கென்று உலகில் எதுவுமே இல்லாமல் இருக்கலாம். ஆனால் அவன் சுயநலமுள்ளவனாக இருந்தால் அவன்தான் இந்த உலகத்தோடு மிக அழுத்தமாக ஒட்டிக்கொண்டிருக்கிறான்.

நமது முக்கியக் கருத்துக்களுள் ஒன்றிற்கு இப்போது மீண்டும் வருவோம். தீமை கலவாத நன்மையும், நன்மை கலவாத தீமையும் நம்மால் செய்ய முடியாது என்று கூறினோம். இதை அறிந்துகொண்டு, நாம் எப்படிச் செயல்புரிய முடியும்? எனவே சில பிரிவுகள், திகைக்க வைக்கின்ற வகையில், சம்சாரத்திலிருந்து விடுபடுவதற்குச் சிறிதுசிறிதாகத் தற்கொலை செய்துகொள்வதான ஒரு முட்டாள்தனமான வழியைக் கூறுகின்றன. ஏனென்றால் அவன் வாழ்ந்தால் பரிதாபத்திற்குரிய சிறு மிருகங்களையும், செடிகொடிகளையும் கொல்ல வேண்டியிருக்கிறது; ஒன்றில்லாவிட்டாலும் ஒன்றுக்குத் துன்பம் செய்ய வேண்டியிருக்கிறது. எனவே இவர்களைப் பொறுத்தவரை சம்சாரத்திலிருந்து வெளியேற ஒரே வழி, இறந்து போவதுதான். இந்தக் கொள்கையைச் சமணர்கள் தங்கள் மிகவுயர்ந்த லட்சியமாகப் பிரச்சாரம் செய்தார்கள். இது தர்க்கபூர்வமானதாகத்தான் தோன்றுகிறது.

ஆனால் உண்மையான வழியை கீதைதான் கூறுகிறது. அதுதான் பற்றின்மைக் கொள்கை; வாழ்க்கைச் செயல்களில் ஈடுபட்டிருக்கும்போது எதிலும் பற்று வைக்காதிருப்பது. நீ உலகத்தில் இருந்தாலும், அதிலிருந்து முற்றிலும் வேறானவன் என்பதை நினைவில்கொள். எதைச் செய்தாலும் உனக்காகச் செய்யாதே. அப்படி உனக்காகச் செய்யும் செயல் நீ சுமப்பதற்கான விளைவுகளைக் கொண்டு வந்தே தீரும். நீ செய்வது நற்செயலாக இருந்தால் நல்ல விளைவுகளையும் தீய செயலாக இருந்தால் தீய விளைவுகளையும் ஏற்றுக்கொண்டேயாக வேண்டும். ஆனால் நல்லதோ கெட்டதோ எந்தச் செயலையும் உனக்காகச் செய்யவில்லை என்றால், அது உன்மீது எந்த விளைவையும் ஏற்படுத்த முடியாது. இந்தக் கருத்தைத் தெளிவாக உள்ளடக்கிய வாக்கியம் ஒன்று நம் சாஸ்திரத்தில் இருக்கிறது: 'தனக்காகச் செய்யவில்லை என்பதை முற்றிலும் உணர்ந்தவன் பிரபஞ்சம் முழுவதையும் கொன்றாலும் (தான் கொல்லப்பட்டாலும்) அவன் கொன்றவனோ கொல்லப்பட்டவனோ ஆகான்.'[1]

அதனால்தான் கர்மயோகம், உலகத்தைத் துறக்காதே, உலகத்திலேயே வாழ்; அது தரும் அனுபவங்களை உன்னால் முடிந்த அளவு ஏற்றுக்கொள்; ஆனால் அது உனது இன்பத்திற்காக என்றால், அவற்றை ஒருபோதும் செய்யாதே என்று

---

1. யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகான் ந ஹந்தி ந ஹன்யதே ॥

—கீதை, 18. 17.

கற்பிக்கிறது. அனுபவிப்பது லட்சியமாக இருக்கக் கூடாது. முதலில் சிறிய-நான் என்பதைக் கொன்றுவிடு. பின்னர் உலகம் முழுவதையும் நீயாக ஏற்றுக்கொள். முற்காலக் கிறிஸ்தவர்கள் சொல்வதுபோல், 'பழைய மனிதன் சாக வேண்டும்.' பழைய மனிதன் என்று அவர்கள் குறிப்பிடுவது, இந்த உலகம் நமது சுகத்திற்காகப் படைக்கப்பட்டிருக்கிறது என்னும் சுயநலக் கருத்தையே. முட்டாள் பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு, 'ஓ தேவனே! சூரியனை எனக்காகப் படைத்தாய். சந்திரனையும் எனக்காகத்தான் படைத்தாய்' என்று கூறிப் பிரார்த்திக்கக் கற்றுத் தருகிறார்கள். குழந்தைகளுக்கு இவற்றை எல்லாம் படைத்துத் தருவதைத் தவிர கடவுளுக்கு வேறு எந்த வேலையும் இல்லாததுபோல் இருக்கிறது இவர்களின் கூற்று. குழந்தைகளுக்கு இத்தகைய முட்டாள்தனங்களைச் சொல்லித் தராதீர்கள்.

இன்னொரு விதமான முட்டாள்கள் உள்ளனர். நாம் கொன்று தின்பதற்காகவே மிருகங்கள் படைக்கப்பட்டதாகவும், அனுபவிப்பதற்காகத்தான் இந்த உலகம் படைக்கப்பட்டுள்ளதாகவும் அவர்கள் போதிக்கிறார்கள். இவையெல்லாமே முட்டாள்தனம். 'மனிதன் எனக்காகவே படைக்கப்பட்டுள்ளான்' என்று ஒரு புலி நினைக்கலாம்; 'ஓ பகவானே! இந்த மனிதர்கள்தான் எவ்வளவு கொடியவர்கள்! தானாக வந்து எனக்கு இரையாகாமல் உன் சட்டத்தை மீறிக் கொண்டிருக்கிறார்களே' என்று பகவானிடம் பிரார்த்தனைகூடச் செய்யலாம். உலகம் நமக்காகப் படைக்கப்பட்டிருக்குமானால் நாமும் உலகத்திற்காகவே படைக்கப்பட்டிருக்கிறோம். நமது சுகத்திற்காகவே உலகம் படைக்கப்பட்டிருக்கிறது என்று கருதுவது, நம்மை முன்னேற விடாமல் தடுக்கின்ற கொடிய எண்ணமாகும். இந்த உலகம் நமக்காக இல்லை. லட்சக்கணக்கானோர் ஆண்டுதோறும் இந்த உலகத்திலிருந்து மறைந்துகொண்டிருக்கிறார்கள். உலகம் அதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை; லட்சக்கணக்கானோர் அந்த இடத்தில் நிரப்பப்பட்டுவிடுகிறார்கள். இந்த உலகம் நமக்காக எவ்வளவு அமைந்திருக்கிறதோ நாமும் உலகிற்காக அவ்வளவு அமைந்திருக்கிறோம்.

எனவே நாம் உரிய முறையில் செயல்புரிய வேண்டுமென்றால், பற்று வைப்பதை முதலில் விட வேண்டும், இரண்டாவது, இந்த உலகின் குழப்பத்தில் கலந்துகொள்ளாமல் சாட்சியாக இருந்து வேலை செய்துகொண்டே போக வேண்டும். 'உங்கள்

குழந்தைகளை ஒரு தாதியின் மனப்பான்மையோடு பாருங்கள்' என்பார் என் குருதேவர். அவள் உங்கள் குழந்தையைத் தன் குழந்தை போலவே கைகளில் எடுத்துக் கொஞ்சுவாள், விளையாடுவாள், சீராட்டுவாள். அவளை வேலையைவிட்டு நிறுத்தி விட்டால் தன் மூட்டைமுடிச்சுகளை எடுத்துக்கொண்டு புறப்பட்டு விடுவாள். பற்றாக இருந்த அனைத்தும் அவளுக்கு மறந்து போய்விடும். உங்கள் குழந்தையை விட்டுவிட்டு, இன்னொரு குழந்தையைச் சீராட்டுவதில் அவளுக்குச் சிறிதும் வருத்தம் ஏற்படுவதில்லை. இத்தகைய மனப்பான்மைதான், உங்களுடையது என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கும் அனைத்திடமும் உங்களுக்கு இருக்க வேண்டும்.

உங்களுக்குக் கடவுள்மீது நம்பிக்கை இருக்குமானால், இந்த உலகத்தில் உங்களுடையது என்று கருதுகின்ற எல்லாமே உண்மையில் அவருடையது என்று நம்புங்கள். மிகப் பெரிய பலவீனங்கள், சிலவேளைகளில் மிகப் பெரிய நன்மையாகவும் சிலவேளைகளில் மிகப் பெரிய வலிமையாகவும் வேடம் தரித்து வருகின்றன. நம்மை எதிர்பார்த்துச் சிலர் வாழ்கிறார்கள், நாம் ஒருவருக்கு நன்மை செய்ய முடியும் என்று எண்ணுவது பலவீனம். இதுவே நம்முடைய பற்றுக்கள் அனைத்திற்கும் பிறப்பிடம். இந்தப் பற்றின்மூலமே நமது துன்பங்கள் எல்லாம் வருகின்றன. இந்தப் பிரபஞ்சத்தில் ஒருவர்கூட நம்மை எதிர்பார்த்து வாழவில்லை என்பதை மனத்திற்கு எடுத்துக் கூற வேண்டும். ஒரு பிச்சைக்காரன்கூட நம் தானத்தை எதிர்பார்த்து வாழவில்லை. ஒரு ஜீவன்கூட நம் கருணையை எதிர்பார்த்துக் காத்திருக்கவில்லை. நம் உதவியை எதிர்பார்த்து ஓர் உயிர் கூட வாழவில்லை. அனைவருக்கும் இயற்கையே உதவி செய்கிறது. நம்மைப்போல் லட்சக்கணக்கான மனிதர்கள் இல்லாவிட்டாலும் இயற்கை உதவிக்கொண்டுதான் இருக்கும். உங்களுக்காகவும் எனக்காகவும் இயற்கையின் போக்கு நிற்காது.

பிறருக்கு உதவுவது என்பது நம்மை நாம் பண்படுத்திக் கொள்வதற்காக நமக்குத் தரப்படுகின்ற மிகப் பெரும் பேறு என்பதை முன்பே கூறினேன். வாழ்க்கையில் ஒவ்வொருவரும் கற்றுக்கொள்ள வேண்டிய மிகப் பெரிய பாடம் இது. இதை முழுமையாக அறிந்துகொண்டால் நாம் துயருறவே மாட்டோம்; சமுதாயத்தில் எங்கும் எவரோடும் சேர்ந்து வாழலாம், அதனால் தீங்கு நேராது. மனைவி, கணவன், வேலைக்காரர்

பட்டாளம், அரசாள நாடுகள் என்று நீ பெற்றிருக்கலாம்; ஆனால் இந்த உலகம் உனக்காக அல்ல, நீ இருந்தேதானாக வேண்டும் என்ற தேவையும் உலகிற்கு இல்லை என்ற கருத்தின் அடிப்படையில் நீ செயல்படுவாயானால் இவற்றால் உனக்கு எந்தத் துன்பமும் வராது.

இந்த ஆண்டில் உங்கள் நண்பர்கள் சிலர் இறந்திருக்கலாம். அவர்கள் திரும்பி வருவதற்காக உலகம் சுற்றாமல் அப்படியே நின்று காத்துக்கொண்டா இருக்கிறது? அதன் செயல்பாட்டுப் பிரவாகம்தான் நின்றுவிட்டதா? இல்லையே! அது போய்க் கொண்டுதான் இருக்கிறது. எனவே நீங்கள் இந்த உலகத்திற்குச் செய்ய வேண்டிய ஏதோ உள்ளது என்ற எண்ணத்தை உங்கள் மனத்திலிருந்து உடனே விலக்கிவிடுங்கள். உலகிற்கு உங்கள் எந்த உதவியும் தேவையில்லை. இந்த உலகத்திற்கு உதவுவதற் காகத்தான், தான் பிறந்திருப்பதாக எந்த மனிதனாவது நினைத் தால் அது வெறும் முட்டாள்தனம்; அது கர்வம், நற்குணம் என்ற போர்வையில் தோன்றும் சுயநலம்.

உலகம் உங்களையோ வேறு யாரையுமோ சார்ந்திருக்க வில்லை என்னும் கருத்தை ஏற்றுச் செயல்படும்படி உங்கள் மனத்தையும் நரம்புகளையும் பயிற்றுவித்துவிட்டீர்களானால், எந்தச் செயலில் இருந்தும் வேதனை வடிவில் வருகின்ற எதிர்விளைவு உண்டாகாது. நீங்கள் ஒரு மனிதனுக்கு ஏதாவது ஒன்றைக் கொடுத்து, அதற்குப் பிரதியாக எதையுமே, நன்றியைக் கூட, எதிர்பார்க்காமல் இருந்தீர்களானால் அவன் நன்றி மறந்தாலும் உங்களுக்குத் துன்பம் வராது. ஏனெனில் நீங்கள் எதையும் எதிர்பார்க்கவில்லை, பிரதிபலனாக எதையும் பெறும் உரிமை உங்களுக்கு உண்டென்று ஒருபோதும் நீங்கள் எண்ண வில்லை. அவன் எதைப் பெறுவதற்குத் தகுதி இருந்ததோ அதையே கொடுத்தீர்கள். அவனது வினைப்பயன் அதை அவனுக்குப் பெற்றுத் தந்தது, உங்கள் வினைப்பயன், உங்களை, அவனிடம் அதைச் சேர்ப்பவர்கள் ஆக்கியது. அப்படியிருக்க, எதையோ கொடுத்துவிட்டதாக நீங்கள் ஏன் பெருமை கொள்ள வேண்டும். பணம், மற்ற பொருட்கள் போன்றவற்றைக் கொண்டுசெல்லும் சுமைதூக்கி மட்டுமே நீங்கள். உலகம் தன் வினைப்பயன் மூலமே அவற்றைப் பெறுவதற்குத் தகுதியுடைய தாக இருக்கிறது. இதில் நீங்கள் எப்படிப் பெருமை கொள்ள முடியும்? நீங்கள் உலகிற்குக் கொடுப்பதில் பெரிதாகச் சொல்லிக் கொள்ள எதுவுமில்லை.

பற்றற்ற மனப்பான்மையை நீங்கள் பெற்றுவிட்டால், உங்களுக்கு நன்மையோ தீமையோ எதுவும் இல்லை. நன்மை தீமை என்ற வேறுபாட்டை உருவாக்குவதே சுயநலம்தான். இது புரிந்துகொள்ளச் சற்றுக் கடினமானது. ஆனால் நீங்களே அனுமதிக்காமல் பிரபஞ்சத்திலுள்ள எதற்கும் உங்கள்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான ஆற்றல் இல்லை என்பதைக் காலப்போக்கில் நீங்கள் புரிந்துகொள்ளவே போகிறீர்கள். ஆன்மா ஒரு முட்டாளாகி, தன் சுதந்திரத்தை இழக்காதவரை எந்த ஆற்றலும் மனித ஆன்மாவை எதுவும் செய்ய முடியாது. பற்றின்மை என்பதன்மூலம் உலகின் மற்ற எதுவும் உங்கள்மீது ஆதிக்கம் செலுத்துவதைத் தடுக்கவும் தவிர்க்கவும் செய்கிறீர்கள். நீங்கள் அனுமதிக்காதவரையில் உங்கள்மீது ஆதிக்கம் செலுத்துகின்ற உரிமை எதற்குமே கிடையாது என்று சொல்லிக் கொண்டிருப்பது எளிது. ஆனால் தன்மீது எதையும் ஆதிக்கம் செலுத்தவிடாத மனிதனின் உண்மை அடையாளம் என்ன? புறவுலகம் அவன்மீது செயல்படுவதன் காரணமாக சுகமோ துக்கமோ அடையாத அவனது அடையாளம் என்ன? நல்லதோ, கெட்டதோ அவன் மனத்தில் எந்த மாறுபாட்டையும் ஏற்படுத்தாது; எந்தச் சூழ்நிலையிலும் அவன் சமமாக இருப்பான்—இதுதான் அடையாளம்.

இந்தியாவில் வியாசர் என்னும் மகரிஷி ஒருவர் இருந்தார். இவரே வேதாந்த சூத்திரங்களை இயற்றியவராகக் கருதப்படுகிறார். சிறந்த மகான் அவர். அவரது தந்தை நிறைநிலையை அடைய முயன்றார். முடியவில்லை. அதுபோலவே அவரது பாட்டனும் முப்பாட்டனும்கூட முயன்று தோற்றுப் போனார்கள். வியாசரால்கூட முற்றிலுமாக அந்த நிலையை அடைய முடியவில்லை. ஆனால் அவரது மகன் சுகர் நிறைநிலை எய்தியவராகப் பிறந்தார். வியாசர் தன் மகனுக்கு ஞானத்தைப் போதித்தார். தாமே தத்துவ உபதேசம் செய்த பிறகு சுகரை ஜனகரின் அரசவைக்கு அனுப்பினார். ஜனகர் ஒரு மாமன்னர்; ஜனக விதேகர் என்று அழைக்கப்பட்டவர். விதேகர் என்றால் 'உடம்பில்லாதவர்' என்று பொருள். மன்னராக இருந்தாலும், தாம் உடம்பு என்பதை மறந்துவிட்டிருந்தார் அவர். தாம் ஓர் ஆன்மா என்ற உணர்வுதான் அவரிடம் எப்போதும் இருந்தது. அவரிடம் கற்றுக் கொள்வதற்காகவே சுகர் அனுப்பப்பட்டிருந்தார்.

பிரம்மஞானத்தைக் கற்பதற்காக சுகர் தம்மிடம் வரப் போவதை ஜனகர் அறிந்தார். எனவே முன்னேற்பாடாக அவர்

சில காரியங்களைச் செய்தார். சுகர் அரண்மனை வாசலுக்கு வந்தபோது காவலர்கள் அவரைக் கண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. பிறகு ஓர் ஆசனம் மட்டும் அளித்தனர். மூன்று பகலும் இரவும் அவர் அப்படியே அமர்ந்திருந்தார். ஒருவரும் அவருடன் பேசவில்லை. 'நீ யார்? எதற்காக வந்தாய்?' என்றுகூட ஒருவரும் கேட்கவில்லை. சுகரோ மகரிஷியான வியாசரின் மகன். வியாசரோ நாடு முழுவதாலும் போற்றிப் பாராட்டப்படுபவர். சுகரும் மிகுந்த மரியாதைக்குரிய ஒருவர். ஆனால் மிகச் சாதாரணமான கீழ்நிலைக் காவலர்கூட அங்கே அவரைப் பொருட்படுத்தவில்லை.

பின்னர் ஒரு நாள்மந்திரிகளும் உயர்பதவியில் உள்ள அனைவரும் திடீரென்று சுகரிடம் வந்து அவரைச் சிறப்பாக வரவேற்று மிகுந்த மரியாதையுடன் அரண்மனைக்குள் அழைத்துச் சென்றனர். அழகிய அறைகளைக் காட்டினர். வாசனைத் திரவியங்கள் கலந்த நீரில் குளிப்பாட்டினர். அற்புத மான ஆடைகளை அணிவித்தனர். எட்டு நாட்கள் இப்படி மிகச் சிறந்த ஆடம்பரத்தில் அவரை வைத்தனர். ஆனால் தமக் களிக்கப்பட்ட இத்தகைய மாறுபட்ட உபசரிப்புகளினால் சுகரின் ஆழ்ந்த கம்பீரம் கலந்த அமைதி தவழும் முகத்தில் ஒருசிறு மாற்றம்கூடத் தென்படவில்லை. வாசலில் காத்திருந்த போதும், இப்போது இந்த ஆடம்பரத்திலும் அவர் ஒரு போலவே இருந்தார்.

பிறகு அவர் மன்னரின் முன்னிலையில் அழைத்துவரப் பட்டார். அரசர் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தார். அங்கே இசையும், நடனமும், வேறு பல கேளிக்கைகளும் நடந்துகொண் டிருந்தன. மன்னர், சுகரிடம் ஒரு கிண்ணத்தில் விளிம்பைத் தொடும் அளவு பாலை ஊற்றிக் கொடுத்து, அதில் ஒரு துளி கூடச் சிந்தாமல் அந்தச் சபையை ஏழுமுறை சுற்றி வருமாறு கூறினார். பாலனாகிய சுகர் அந்தக் கிண்ணத்தைக் கையில் எடுத்துக்கொண்டு இசையும் இனிய முகங்களும் அலைமோதும் அந்தச் சபையை வலம்வரத் தொடங்கினார். மன்னர் விரும்பி யது போலவே ஏழுமுறை சுற்றி வந்தார். ஒரு துளி பால்கூடச் சிந்தவில்லை. அவரே அனுமதிக்காமல் உலகின் எதுவும் அவரது மனத்தைப் பாதிக்க முடியாது. கிண்ணத்தை அவர் ஜனகரிடம் கொடுத்தார். அப்போது ஜனகர் அவரிடம், 'உன் தந்தை உனக்கு என்ன கற்றுக் கொடுத்தாரோ, நீயாக எவற்றைக் கற்றுக்கொண்டிருக்கிறாயோ அவற்றை மீண்டும் சொல்லிக்

கொடுக்கத்தான் என்னால் முடியும். நீ உண்மையை அறிந்து விட்டாய், வீடு செல்' என்றார்.

இவ்வாறு தனக்குத்தானே கட்டுப்பாடு உள்ளவன்மீது வெளியிலுள்ள எதுவும் ஆதிக்கம் செலுத்த முடியாது. அவனிட மிருந்து அடிமைத்தனம் விடைபெற்றுவிடுகிறது. அவனது மனம் சுதந்திரமாகிவிட்டது. அத்தகையவன் மட்டுமே இந்த உலகில் நன்றாக வாழ்வதற்குத் தகுதி உடையவன்.

மனிதர்கள் பொதுவாக உலகத்தைப்பற்றி இரண்டு கருத் துக்களைக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். சிலர் துன்ப நோக்குக் கொண்டவர்கள்; 'இந்த உலகம் எவ்வளவு கொடூர மானது! எத்தனை கொடியது!' என்று அவர்கள் கூறுகிறார்கள். மற்றும் சிலர் இன்பநோக்குக் கொண்டவர்கள்; அவர்கள், 'உலகம் எவ்வளவு அழகானது! எத்தனை அற்புதமானது!' என்கிறார்கள். மனத்தைக் கட்டுப்படுத்தாதவர்களுக்கு இந்த உலகம் முழுக்கமுழுக்கத் தீமை நிறைந்ததாக அல்லது நன்மை, தீமை இரண்டும் சேர்ந்ததாகவாவதுதான் காட்சியளிக்கும். நாம் நம் மனத்திற்கு எஜமானர் ஆகும்போது இதே உலகம் இன்பமயமாகிவிடுகிறது. அதன்பின் நன்மை தீமை என்ற நிலையில் எதுவும் நம்மைப் பாதிக்காது; எல்லாமே அவற்றிற் குரிய சரியான இடத்தில், எப்போதுமே இயைபாக இருப்பதை நாம் உணர்வோம். உலகம் ஒரு நரகம் என்று தொடங்குபவர் களும் சுயக் கட்டுப்பாட்டுப் பயிற்சியில் வெற்றி பெற்றுவிடுவார் களானால் உலகமே சொர்க்கம் என்றே முடிப்பதைக் காணலாம். நாம் உண்மையான கர்மயோகிகளாக இருந்து, அத்தகைய நிலையை அடைவதற்காக நம்மைப் பயிற்றுவித்துக் கொள்ள விரும்பினால் நாம் எங்கே தொடங்கினாலும், பூரணமான தன்னல மறுப்பில்தான் சென்று சேர்வோம். ஆன்மாபோல் தோன்றுகின்ற சிறிய-நான் என்பது அழிந்ததுமே, முன்பு தீமை நிறைந்ததாகக் காட்சியளித்த உலகம் சொர்க்கமாகத் தெரியும்; சீரும் சிறப்பும் நிறைந்ததாகத் தெரியும்; உலகின் சூழலே ஆனந்தம் நிறைந்ததாக இருக்கும். அப்போது உலகில் உள்ள ஒவ்வொரு மனித முகமும் நல்லதாகவே தெரியும். இதுதான் கர்மயோகத்தின் லட்சியமும் நிறைவும் ஆகும். அன்றாட வாழ் வில் அதன் பெருமையும் இதுதான்.

நமது பல்வேறு யோகங்கள் ஒன்றுக்கொன்று முரணா னவை அல்ல. எல்லாம் ஒரே குறிக்கோளை நோக்கியே நம்மை அழைத்துச் சென்று நிறைநிலை எய்த வைக்கின்றன. எந்த

யோகத்தை எடுத்துக்கொண்டாலும் சரி, தீவிரமாகப் பயிற்சி செய்ய வேண்டும். பயிற்சி செய்வதில்தான் ரகசியமே இருக்கிறது. முதலில் கேட்க வேண்டும், பிறகு சிந்திக்க வேண்டும், அதன் பிறகு பயிற்சி செய்ய வேண்டும். எல்லா யோகங்களுக்கும் இது தான் வழி. முதலில் அவற்றைக் கேட்டு, அது என்ன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். தொடர்ந்து கேட்கும்போதும் சிந்திக்கும்போதும் புரியாத பல விஷயங்கள் புரியும்.

எடுத்தஎடுப்பிலேயே எல்லாவற்றையும் புரிந்துகொள்வது கடினம். சொல்லப்போனால் எல்லாவற்றிற்கும் விளக்கம் உங்களிடமே உள்ளது. உண்மையில் இதுவரை யாரும் யாராலும் கற்பிக்கப்பட்டதில்லை. ஒவ்வொருவரும் தன்னைத்தானே கற்பித்துக்கொள்ள வேண்டும். அக ஆசிரியர் விழிப்புற்றுச் செயல்படவும், விஷயங்களைப் புரிந்து கொள்வதற்குமான ஒரு தூண்டுதலை மட்டுமே புற ஆசிரியர் செய்கிறார். அதன் பின்னர் விஷயங்களை உணர்ந்துகொள்ளும் நமது சொந்த ஆற்றலாலும் சிந்திக்கும் திறனாலும் எல்லாம் மேலும்மேலும் தெளிவாகிறது; அவற்றை நாம் நம்முள்ளேயே உணரவும் செய்கிறோம். இந்த உணர்வு திடமான சங்கல்பசக்தியாக வளரவும் செய்கிறது. முதலில் உணர வேண்டும். அந்த உணர்ச்சி சங்கல்பமாகிறது. அந்தச் சங்கல்பத்திலிருந்து செயல்புரிவதற்கான மாபெரும் ஆற்றல் பிறக்கிறது. அது உங்கள் நாடி நரம்புகளிலும் தசைகளிலும் பாய்ந்து பரவுகிறது. உங்கள் உடம்பின் ஒவ்வோர் அணுவும் சுயநலம் கலவாத கர்மயோகம் செய்வதற்குரிய ஒரு கருவியாக மாறும்வரை, நீங்கள் விரும்பிய பூரணமான தன்னல மறுப்பும் முழுமையான சுயநலமின்மையும் அடையப்படும் வரை அந்த ஆற்றல் பாய்ந்துகொண்டிருக்கிறது.

இந்த நிலை எந்தக் கொள்கையையோ கோட்பாட்டையோ நம்பிக்கையையோ சார்ந்திருப்பதல்ல. நீங்கள் கிறிஸ்தவரோ, யூதரோ, யூதர்கள் அல்லாத இனத்தைச் சேர்ந்தவரோ அது பெரிய விஷயமல்ல. நீங்கள் சுயநலமற்றவர்களா, அதுதான் கேள்வி. நீங்கள் சுயநலமில்லாதவர் என்றால் ஒரு மத நூலைக் கூடப் படிக்காமலே, ஒரு சர்ச்சுக்குள்ளோ கோயிலுக்குள்ளோ நுழையாமலே நிறைநிலை அடைய முடியும். நமது யோகங்கள் ஒவ்வொன்றும் மற்ற யோகங்களின் உதவியில்லாமலே ஒருவனை நிறைநிலைக்குக் கொண்டு செல்லும் ஆற்றல் பெற்றவை. ஏனெனில் எல்லா யோகங்களுமே ஒரே லட்சியத்தைக் கொண்டவை. கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் ஆகிய

ஒவ்வொரு யோகமும் பிற யோகங்களைச் சாராமல் நேரடியாக மோட்சத்திற்கு இட்டுச் செல்கின்ற வழிகள் ஆகும். 'கர்மமும், ஞானமும் வேறானவை என்று முட்டாள்கள் மட்டுமே கூறுவார்கள். அறிவாளிகள் அப்படிச் சொல்ல மாட்டார்கள்'.[1] அவை வேறானவைபோல் தோன்றினாலும் இறுதியில் நிறைநிலை என்னும் ஒரே குறிக்கோளுக்குத்தான் இட்டுச் செல்கின்றன என்பது அவர்களுக்குத் தெரியும். ❑

1. ஸாங்க்ய யோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।

—கீதை, 5.4

# 4. முக்தி

கர்மம் என்னும் சொல், செயல் என்ற பொருளைத் தருவதோடு, மனஇயலின்படி, காரணகாரியத் தொடர்பு (Causation) என்னும் பொருளையும் குறிக்கும் என்பதை முன்பே கண்டோம். ஒரு விளைவை ஏற்படுத்துகின்ற எந்தச் செயலும் எந்த வேலையும் எந்த எண்ணமும் கர்மம்தான். எனவே கர்ம நியதி என்பது காரணகாரிய நியதி என்று பொருள்படுகிறது; அதாவது காரணத்தைத் தொடர்ந்து காரியம் வந்தே தீரும் என்றாகிறது. எங்கெல்லாம் ஒரு காரணம் இருக்கிறதோ அங்கெல்லாம் ஒரு விளைவு உண்டாகியே தீரும். இதைத் தடுக்க முடியாது. நம் தத்துவத்தின்படி இந்தக் கர்ம நியதி பிரபஞ்சம் முழுவதற்குமே பொருந்துவதாகும். நாம் பார்க்கின்ற, உணர்கின்ற, செய்கின்ற அனைத்தும், பிரபஞ்சத்தில் எங்கு நடக்கும் எந்தச் செயலா யினும் அவை ஒருவகையில் கடந்தகாலச் செயல்களின் விளைவு களாகவும், வேறுவகையில், எதிர்காலத்தில் விளைவை உண் டாக்குவதற்கான காரணங்களாகவும் அமைகின்றன.

இப்போது, நியதி என்னும் சொல்லின் பொருளையும் இதனுடன் அறிவது அவசியமாகிறது. திரும்பத்திரும்ப நடை பெறுவதற்கான ஒரு நிகழ்ச்சித் தொடரின் இயல்பே நியதி. ஒரு நிகழ்ச்சியைத் தொடர்ந்து இன்னொரு நிகழ்ச்சி நடப்பதையோ, ஒரு நிகழ்ச்சி மற்றொரு நிகழ்ச்சியுடன் ஒரே நேரத்தில் நடப் பதையோ காணும்போது, இவ்வாறு ஒன்றைத் தொடர்ந்து இன்னொன்று நடப்பதும், ஒரேநேரத்தில் நிகழ்பவையும் அவ் வாறே மீண்டும் நடைபெறும் என்று எதிர்பார்க்கிறோம். நமது பண்டைய தர்க்க ஆசிரியர்களும் நியாயத் தத்துவ அறிஞர்களும் இந்த நியதியை வியாப்தி என்று அழைத்தனர். நியதி பற்றிய நமது கருத்துக்கள் எல்லாம் தொடர்பிலேயே (Association) நிலைபெற்றுள்ளது. சில நிகழ்ச்சித் தொடர்கள் நம் மனத் திலுள்ள சில விஷயங்களுடன் பிரிக்க முடியாத ஒருவகையில் தொடர்பு கொண்டுவிடுகின்றன. அதனால் நாம் எப்போது எந்த ஒன்றை அனுபவித்தாலும் உடனடியாக அவையெல்லாம்,

ஏற்கனவே நமது மனத்திலுள்ள கருத்துக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கப்படுகின்றன. மனஇயலின்படி, சித்தத்தில் எழும் எந்த எண்ணமும் எந்த அலையும், அதுபோன்ற பல அலைகளை ஏற்படுத்தவே செய்யும். தொடர்பு என்பதன் மனஇயல் கருத்து இதுதான். இந்த மகத்தான, எங்கும் நிறைந்த தொடர்புக் கொள்கையின் ஒரு பகுதியே இந்தக் காரணகாரிய நியதி. தொடர்பின் இந்த எங்கும் நிறைந்த தன்மைதான் வியாப்தி என்று சம்ஸ்கிருதத்தில் அழைக்கப்படுகிறது.

நியதிக் கருத்து அக உலகிற்கு எவ்வாறு அமைந்துள்ளதோ, அதுபோல்தான் புறவுலகிற்கும் அமைகிறது. அதாவது ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியைத் தொடர்ந்து இன்னொரு குறிப் பிட்ட நிகழ்ச்சி வரும். இது தொடர்ச்சியாக மீண்டும்மீண்டும் நடைபெறும் என்று நாம் எதிர்பார்க்கிறோம். உண்மையில் சொல்லப்போனால் நியதி என்பது இயற்கையில் இல்லை. நடைமுறையில், புவியீர்ப்பு நியதி பூமியில் இருக்கிறது என்றோ, எந்த நியதியாவது இயற்கையில் எங்காவது புறப்பொருளில் இருக்கிறது என்றோ கூறுவது தவறு.

நிகழ்ச்சித் தொடர்களை மனம் புரிந்துகொள்கின்ற ஒரு வழியே, ஒரு முறையே நியதி. நியதி என்ற கருத்து மனத்தில் தான் உள்ளது. சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன் றாகவோ அல்லது ஒன்றோடு ஒன்று இணைந்தோ நடப்பதை யும், அவை அவ்வாறே திரும்பத்திரும்ப நடைபெறும் என்ற உறுதியை நம்மிடம் உண்டாக்குவதையும், அந்த நிகழ்ச்சித் தொடர்கள் நடைபெறுகின்ற விதத்தை நமது மனம் முழுமை யாகப் புரிந்து கொள்ளச் செய்வதையும்தான் நாம் நியதி என்கிறோம்.

நியதி என்றால் அது உலகம்தழுவியது என்று நாம் கூறிய தன் பொருள் என்ன என்பதே அடுத்ததாக ஆராய வேண்டியது. சம்ஸ்கிருத மனஇயல் வல்லுனர்கள் தேச-கால-நிமித்தம் என்றும், ஐரோப்பிய மனஇயல் வல்லுனர்கள் இடம்-காலம் காரணகாரியம் (Space-Time-Causation) என்றும் கூறுபவற்றால் எல்லைப்படுத்தப்பட்ட இருப்பின் (ஸத், Existence) அந்தப் பகுதியே நமது பிரபஞ்சம். எல்லையற்ற இருப்பில் தேச-கால-நிமித்தம் சேர்ந்த ஓர் அச்சில் வார்க்கப்பட்ட ஒரு பகுதி மட்டுமே இந்தப் பிரபஞ்சம். எனவே நியதி என்பது எல்லைப் படுத்தப்பட்ட இந்தப் பிரபஞ்சத்தில் மட்டுமே செல்லு படியாகும் என்பது சொல்லாமலே விளங்கும். இந்தப்

பிரபஞ்சத்திற்கு அப்பால் நியதி என்ற ஒன்று இருக்க முடியாது. நாம் பிரபஞ்சம் என்று சொல்லும்போது, இருப்பில் நமது மனத்தால் எல்லைப்படுத்தப்பட்ட பகுதியை மட்டுமே குறிப்பிடுகிறோம்; நம்மால் பார்க்கவும் கேட்கவும் உணரவும் தொடவும் நினைக்கவும் கற்பனை செய்யவும் முடிந்த, புலன்களால் உணரக்கூடிய பிரபஞ்சத்தை மட்டுமே குறிப்பிடுகிறோம். இது மட்டுமே நியதிக்குள் அடங்க முடியும். இதற்கு அப்பாலுள்ள இருப்பை நியதியால் கட்டுப்படுத்த முடியாது. ஏனெனில் காரணகாரிய நியதி நமது மனத்திற்கு அப்பால் செல்ல முடியாது. புலன்களுக்கு அப்பாலுள்ள பகுதியில் பொருட்கள் மனத்துடன் தொடர்பு கொள்வது என்பது இருக்க முடியாது; எண்ணங்களின் தொடர்பின்றி காரணகாரியம் இருக்க முடியாது. எனவே நமது மனத்திற்கும் நமது புலன்களுக்கும் அப்பாற்பட்ட எதுவும் காரணகாரிய நியதியால் கட்டுப்படாது. 'ஸத்' அல்லது இருப்பு என்பது பெயர் மற்றும் வடிவம் என்ற அச்சில் வார்க்கப்பட்டால் மட்டுமே அது காரணகாரிய நியதிக்கு உட்படுகிறது, நியதியின் கீழ் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஏனென்றால் நியதிகள் அனைத்தின் சாரமும் காரணகாரியத்திலேயே உள்ளது. எனவே சுதந்திர சங்கல்பம் (Free Will) என்ற ஒன்று இருக்கவே முடியாது என்பது எடுத்தஎடுப்பிலேயே புரிகிறது.

சுதந்திர சங்கல்பம் என்ற சொற்களே முன்னுக்குப்பின் முரணானவை. ஏனெனில் சங்கல்பம் என்பது நமது அறிவிற்கு உட்பட்டது, நாம் அறிகின்ற எல்லாமே நமது பிரபஞ்சத்திற்குள் இருப்பவை, பிரபஞ்சத்தினுள் உள்ள அனைத்தும் தேச-கால-நிமித்த நியதிகளால் உருவாக்கப்பட்டவை. நாம் அறிந்த எல்லாமே, நம்மால் அறியக்கூடிய எல்லாமே காரணகாரியத்திற்கு உட்பட்டது, சுதந்திரமாக இருக்க முடியாது. அதன்மீது மற்ற காரணங்கள் செயல்படுகின்றன, அதுவே பின்னர் பிற காரியங்களுக்குக் காரணமாக அமையவும் செய்கிறது. ஆனால் சங்கல்பமாக மாறியிருப்பது எதுவோ, முன்பு சங்கல்பமாக இல்லாமல் பின்னால் தேச-கால-நிமித்த எல்லைகளால் வார்க்கப்பட்டு மனிதனின் சங்கல்பமாக மாறியது எதுவோ அது சுதந்திரமானது. இந்தச் சங்கல்பம் தேச-கால-நிமித்த எல்லைகளுக்கு வெளியே போகும்போது அது மீண்டும் சுதந்திரம் பெறவும் செய்கிறது. அது சுதந்திரத்திலிருந்து வருகிறது, இந்தத்

தளைகளுக்குள் கட்டுப்படுகிறது, பிறகு இவற்றிலிருந்து விடுபட்டு மறுபடியும் சுதந்திரமாகிறது.

இந்தப் பிரபஞ்சம் யாரிலிருந்து வந்தது, யாரில் நிலை பெறுகிறது, யாரிடம் செல்கிறது என்னும் கேள்விகள் எழுப்பப் படுகின்றன. அது சுதந்திரத்திலிருந்து வருகிறது, தளையில் நிலைபெறுகிறது, மறுபடியும் சுதந்திரத்திற்குள் செல்கிறது என்று பதில் கூறப்படுகிறது. எனவே மனிதன் என்பவன் எல்லை யற்ற பரம்பொருளின் சுய வெளிப்பாடே தவிர வேறல்ல என்று சொல்லும்போது, அந்த எல்லையற்ற பொருளின் மிகச் சிறிய அம்சம் மட்டுமே மனிதன் என்பதையே நாம் குறிப்பிடுகிறோம். நாம் காண்கின்ற நமது இந்த உடலும் மனமும் அந்த முழுமை யின் ஓர் அம்சம் மட்டுமே, அந்த எல்லையற்ற பொருளின் ஒரே ஒரு துகள் மட்டுமே. இந்தப் பிரபஞ்சம் முழுவதும் சேர்ந்தால் கூட அந்த எல்லையற்ற பொருளின் ஒரு சிறு அணுவளவு மட்டுமே ஆகிறது. நமது நியதிகளும் கட்டுப்பாடுகளும், நமது இன்பங்களும் துன்பங்களும், நமது மகிழ்ச்சியும் எதிர்பார்ப்பு களும் எல்லாமே இந்தச் சிறிய பிரபஞ்சத்திற்கு உள்ளேதான். நமது முன்னேற்றமும் பின்வாங்கலும் எல்லாமே அதன் சிறிய எல்லைக்குள் மட்டுமே.

நமது மனத்தின் படைப்பான இந்தப் பிரபஞ்சம் தொடர்ந்து நிலைத்திருக்கும் என்று எதிர்பார்ப்பதும் சொர்க்கத் திற்குப் போக விரும்புவதும் எல்லாம் எவ்வளவு சிறுபிள்ளைத் தனமானவை பாருங்கள்! இவ்வளவிற்கும் அந்தச் சொர்க்கம் என்பது நாம் அறிந்த இந்த உலகத்தின் ஒரு நகலாக மட்டுமே இருக்க முடியும். எல்லையற்ற இருப்பு முழுவதையும், எல்லைக்கு உட்பட்ட, கட்டுப்பட்ட, நாம் அறிந்த இருப்புடன் ஒத்துப் போகச்செய்ய முயல்வது, நடக்க முடியாததும் சிறுபிள்ளைத் தனமானதுமான ஆசை என்பது புரிகிறது அல்லவா! தான் இப்போது அனுபவிக்கின்ற அதே பொருட்கள் மீண்டும் மீண்டும் தனக்குக் கிடைக்க வேண்டும் என்று ஒருவன் கூறும் போது, அல்லது நான் சிலவேளைகளில் சொல்வதுபோல், சொகுசான மதம் வேண்டும் என்று கேட்கும்போது, தான் இப்போது இருக்கின்ற நிலையைவிட உயர்ந்த எதையும் சிந்திக்க முடியாத அளவுக்கு அவன் தாழ்ந்துவிட்டான் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். தான் இப்போது இருக்கின்ற சின்னஞ் சிறு சூழ்நிலையுடன் அவன் தன்னை ஒன்றுபடுத்திவிட்டான். அவன் வேறு எதுவும் அல்ல. தனது எல்லையற்ற இயல்பை

அவன் மறந்துவிட்டான். அவனுடைய நினைப்பெல்லாம் அந்த நேரத்திற்கு அவனிடம் இருக்கின்ற இன்ப துன்பங்களிலும் பொறாமைகளிலும் கட்டுண்டுவிட்டன. எல்லைக்கு உட்பட்ட இதையே எல்லையற்றதென்று அவன் நினைக்கிறான். நினைப்பது மட்டும் அல்ல, இந்த முட்டாள் தனத்தைத் தன்னிடமிருந்து விலகவும் விடமாட்டான். பௌத்தர்கள் 'தன்ஹா' என்றும் 'திஸ்ஸா' என்றும் கூறுகின்ற திருஷ்ணையை, அதாவது வாழ்வின்மீதுள்ள மோகத்தை அவன் நிர்க்கதியான நிலையில் பற்றிப்பிடித்துக் கொண்டிருக்கிறான். நாம் அறிந்துள்ள இந்தச் சிறிய பிரபஞ்சத்திற்கு அப்பால் லட்சோபலட்சம் உயிர்வகைகளும் மகிழ்ச்சிகளும் நியதிகளும்வளர்ச்சிகளும் காரணகாரியங்களும் இருக்கலாம். இவ்வளவானாலும், அவையெல்லாம் சேர்ந்தாலும், அது நமது எல்லையற்ற இருப்பின் ஓர் அம்சம் மட்டுமே. பூரண சமநிலையை அதாவது கிறிஸ்தவர்கள் கூறுகின்ற 'அறிவுநிலை அனைத்தையும் கடந்த அமைதிநிலையை' இந்தப் பிரபஞ்சத்தினுள் பெற முடியாது; இங்கு மட்டுமல்ல, சொர்க்கத்தில், நம் மனமும் எண்ணங்களும் செல்லக்கூடிய, புலன்கள் உணரக்கூடிய, கற்பனை செய்து பார்க்கக்கூடிய எந்த இடத்திலும் பெற முடியாது. இத்தகைய எந்த இடமும் நமக்கு அந்த முக்தியைத் தர முடியாது. ஏனென்றால், அந்த எல்லா இடங்களுமே நமது தேச-கால-நிமித்தங்களால் எல்லைப்படுத்தப்பட்ட பிரபஞ்சத்திற்குள்ளேயே உள்ளன.

நமது பூமியைவிட மிகவும் சூட்சுமமான உலகங்கள் இருக்கலாம். அங்கே இன்ப அனுபவங்கள் இன்னும் நுட்பமாக இருக்கலாம். ஆனால் அந்த உலகங்களும் பிரபஞ்சத்திற்குள் தான் இருக்க வேண்டும். எனவே அவையும் நியதிக்குள் கட்டுப்பட்டவையே. நாம் இவைகளுக்கு அப்பால் போக வேண்டும். இந்தச் சிறிய பிரபஞ்சம் முடிகின்ற இடத்தில்தான் உண்மையான மதவுணர்வு தொடங்குகிறது. இந்தச் சிறுசிறு இன்பங்களும், துன்பங்களும், பொருட்களைப்பற்றிய அறிவும் அங்கே முற்றுப் பெறுகிறது; உண்மை தொடங்குகிறது. வாழ்வின் மீதுள்ள மோகத்தை விடும்வரை, கட்டுப்பட்ட இந்த நிலையற்ற நிலைமையின்மீது வைத்துள்ள தீவிரமான பற்றை விடும்வரை, அப்பால் இருக்கின்ற எல்லையற்ற முக்திநிலையின் ஒருகணக் காட்சியைக்கூடப் பெறுவோம் என்ற நம்பிக்கை கிடையாது. மனித சமுதாயத்தின் மகோன்னதமான எல்லா முயற்சிகளுடையவும் லட்சியமான அந்த முக்திநிலையைப் பெறுவதற்கு ஒரே

வழிதான் உள்ளது: இந்தச் சிறிய வாழ்வை விடவேண்டும், இந்தச் சிறிய பிரபஞ்சத்தை விடவேண்டும், இந்தப் பூமியை விடவேண்டும், சொர்க்கத்தை விடவேண்டும், உடம்பை விட வேண்டும், மனத்தை விடவேண்டும், எல்லைக்கு உட்பட்ட, கட்டுப்பட்ட அனைத்தையும் விடவேண்டும். இதுதான் வழி, இது அறிவுபூர்வமானதுதான். புலன்களாலும் மனத்தாலும் உணரப்படுகின்ற இந்தச் சிறிய பிரபஞ்சத்தின்மீது நமக்குள்ள பற்றை விட்டோமானால் அந்தக் கணமே நாம் முக்தி பெறு வோம். தளையிலிருந்து விடுபடுவதற்கான ஒரே வழி, நியதியின் எல்லைகளுக்கு அப்பால் போவதுதான், காரண காரியங்களுக்கு அப்பால் போவதுதான்.

ஆனால் உலகின்மீதுள்ள மோகத்தை விடுவது என்பது அவ்வளவு சுலபமல்ல. ஏதோ மிகச் சிலரே அந்த நிலையை அடைந்திருக்கின்றனர். அதற்கு இரண்டு வழிகளை நமது சாஸ்தி ரங்கள் கூறுகின்றன. ஒன்று 'நேதி, நேதி' (இதுவல்ல, இதுவல்ல), மற்றொன்று 'இதி,' (இது). முன்னையது எதிர்மறை வழி, பின்னையது உடன்பாட்டு வழி.

மிகவும் கடினமானது எதிர்மறை வழி. மிகவுயர்ந்த அசாதாரணமான மனமும் மாபெரும் சங்கல்பமும் கொண்ட வெகுசிலருக்கே இது சாத்தியமாகும். அவர்கள் எழுந்து நின்று, 'எனக்கு இது தேவையில்லை' என்று சொன்னால் போதும், மனமும் உடம்பும் அவர்களின் சங்கல்பத்திற்குப் பணிந்து நடக்கும். அவர்கள் வெற்றியுடன் வெளிவருவார்கள். ஆனால் அத்தகையோர் அபூர்வமே.

உலகில் பெரும்பாலான மக்கள் உடன்பாட்டு வழியையே தேர்ந்தெடுக்கின்றனர். இந்த வழி லௌகீக வாழ்வை ஏற்றுக் கொள்கிறது. இதில், தளைகளை உடைப்பதற்கு அந்தத் தளை களே பயன்படுத்தப்படுகின்றன. இதுவும் ஒருவகையான விட்டு விடுதல்தான், ஆனால் அது நிதானமாகவும் படிப்படியாகவும் செய்யப்படுகிறது. பொருட்களை அறிந்து, அவற்றை அனுப வித்து, அதன்மூலம் அனுபவங்களைப் பெறும்போது பொருட் களின் இயல்பு தெரியவருகிறது. இறுதியில் மனம் அவற்றை விட்டுவிட்டுப் பற்றற்ற நிலையை அடைகிறது.

முதல் வழியில் ஆராய்ச்சியின்மூலம் பற்றற்ற நிலை அடையப்படுகிறது. இரண்டாவது வழியில் செயல்புரிவதன் மூலமாகவும் அனுபவத்தின்மூலமாகவும் அடையப்படுகிறது. முதல் வழி, ஞானயோகம்; இங்கு எல்லா செயல்களும் மறுக்கப்

படுகின்றன. இரண்டாவது வழி கர்மயோகம்; செயல்புரிவதிலிருந்து ஓர் ஓய்வே இதில் இல்லை. பிரபஞ்சத்தில் உள்ள அனைவருமே செயல் புரிந்தாக வேண்டும். யார் ஆன்மாவிலேயே முழுத்திருப்தி காண்கிறார்களோ, யாருடைய ஆசைகள் ஆன்மாவைத் தவிர வேறெதையும் நாடாதோ, யாருடைய மனம் ஆன்மாவைத் தவிர வேறு எங்கும் செல்வதில்லையோ, யாருக்கு ஆன்மாவே எல்லாமாக இருக்கிறதோ அவர்கள் செயல்புரிய வேண்டியதில்லை. மற்ற எல்லோரும் வேலை செய்தேயாக வேண்டும்.

தானாகப் பாய்ந்து செல்கின்ற நீரோட்டம் ஓரிடத்தில் சுழலை உண்டாக்குகிறது. சிறிதுநேரம் அந்தச் சுழலில் இருந்துவிட்டு, வெளிப்பட்டு மீண்டும் சுதந்திரமாக, தடையின்றித் தன்போக்கில் செல்கிறது. ஒவ்வொரு மனித வாழ்வும் அந்த நீரோட்டம் போன்றது; தேச-கால-நிமித்தமாகிய சுழ்லில் சிக்கி 'என் தந்தை, என் சகோதரன், என் பெயர், என் புகழ்' என்றெல்லாம் கதறியவாறே அதில் சிறிதுநேரம் சுழல்கிறது. இறுதியில் அதைவிட்டு வெளியே வந்து, தனது பழைய சுதந்திர நிலையைப் பெறுகிறது. உலகம் முழுவதும் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. நாம் இதை அறிகிறோமோ இல்லையோ, உணர்கிறோமோ இல்லையோ நாம் எல்லோரும் இந்த உலகமாகிய கனவிலிருந்து விடுபடவே வேலை செய்து கொண்டிருக்கிறோம். உலகில் மனிதன் பெறுகின்ற அனுபவமெல்லாம், அவனை இந்தச் சுழலிலிருந்து விடுபட வல்லவன் ஆக்குவதற்கே.

கர்மயோகம் என்பது என்ன? செயல்புரிவது எப்படி என்னும் ரகசியம்பற்றிய அறிவே கர்மயோகம். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் செயல் புரிந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். எதற்காக? முக்தி பெறுவதற்காக; சுதந்திரம் பெறுவதற்காக. அணுவிலிருந்து மிகவுயர்ந்த உயிர்வரை, எல்லாமே அந்த ஒரே லட்சியத்திற்காக மன சுதந்திரத்திற்காக, உடல் சுதந்திரத்திற்காக, ஆன்ம சுதந்திரத்திற்காகத்தான் பாடுபட்டுக் கொண்டிருக்கின்றன. அனைத்தும் சுதந்திரத்திற்காகவே, தளையிலிருந்து விடுபட்டுப் போகவே எப்போதும் முயற்சி செய்கின்றன. சூரியன், சந்திரன், பூமி, கிரகங்கள் என்று எல்லாமே கட்டிலிருந்து விடுபட்டுப் பறந்து போகவே முயன்று கொண்டிருக்கின்றன. மையத்தை நோக்கியும் (Centripetal Force), மையத்திலிருந்து விலகியும் (Centrifugal Force) செயல்படுகின்ற இரண்டு இயற்கைச் சக்திகளும் பிரபஞ்சத்தின் அடையாளங்களாக

உள்ளன. உலகில் அடியும் உதையும் ஏற்று, துன்பங்களைச் சகித்து நெடுங்காலம் கழிந்த பின்னர், பொருட்களின் உண்மையை அறிவதற்குப் பதிலாக, கர்மயோகத்திலிருந்து செயலின் ரகசியத்தையும் செயல் புரிய வேண்டிய முறையையும் செயலின் ஒருங்கிணைக்கும் ஆற்றலையும் தெரிந்துகொள் கிறோம்.

எப்படிப் பயன்படுத்துவது என்பது தெரியாவிட்டால், மிகப் பெரிய சக்தி வீணாக நேரலாம். கர்மயோகம் செயலை ஒரு விஞ்ஞானமாக மாற்றுகிறது. அதன்மூலம் இந்த உலகின் செயல்பாடுகள் அனைத்தையும் எப்படிப் பயன்படுத்துவது என்பதை நாம் அறிந்துகொள்கிறோம். வேலை என்பது தவிர்க்க முடியாதது, அப்படித்தான் இருக்கவும் செய்யும். ஆனால் மிக உயர்ந்த நோக்கத்திற்காக நாம் வேலை செய்வோம். இந்த உலகம் நமக்கு ஓர் ஐந்து நிமிடகாலத் தங்குமிடம் மட்டுமே, நாம் கடந்துபோக வேண்டிய பாதை மட்டுமே; சுதந்திரம் என்பது இதற்குள் இல்லை, இதைக் கடந்தால்தான் கிடைக்கும் என்பதையெல்லாம் கர்மயோகம் நமக்கு உணர்த்துகிறது. உலகத்தின் தளைகளிலிருந்து விடுபடுவதற்கான வழியைக் கண்டு பிடிப்பதற்காக நாம் நிதானமாகவும் உறுதியாகவும் செல்ல வேண்டும். நான் முன்பு சொல்லியதுபோல் சராசரிக்கும் மேற் பட்ட சில மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நினைத்த உடனே, பாம்பு தன் தோலை உரித்துவிடுவதுபோல், தங்க ளிடமிருந்து உலகத்தைப் பிரித்து, அதை விட்டுவிட்டு அப்பால் நின்றுகொண்டு உலகத்தைப் பார்க்கிறார்கள். அத்தகைய அசாதாரண மனிதர்கள் இருக்கிறார்கள், அதில் சந்தேகம் இல்லை. ஆனால் மற்றவர்கள் செயலின் வழியாக நிதானமாகத் தான் செல்ல வேண்டும். செயல்புரிகின்ற முறையையும், அதன் ரகசியத்தையும், மிகுந்த பலன் கிடைக்கும் வகையில் அதைச் செய்யும் முறையையும் காட்டுகிறது கர்மயோகம்.

கர்மயோகம் என்ன சொல்கிறது? 'இடையீடின்றி வேலை செய். ஆனால் அதில் எந்தப் பற்றும் வைக்காதே'. உங்களை எதனோடும் இணைத்துக் கொள்ளாதீர்கள். மனத்தைச் சுதந்திர மாக வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் காண்கின்ற துன்பங்கள், துயரங்கள் எல்லாம் இந்த உலகம் இயங்குவதற்குத் தேவையான சூழ்நிலைகளே. வறுமையும் சரி, வளமும் மகிழ்ச்சியும் சரி, கண நேரத்திற்கே. அவை நமது உண்மை இயல்பைச் சேர்ந்தவை அல்ல. இன்பதுன்பங்களையும், புலனுகர்ச்சிப் பொருட்கள்

அனைத்தையும், கற்பனையையும் கடந்ததே நமது இயல்பு. என்றாலும் நாம் எப்போதும் வேலை செய்துகொண்டே இருக்க வேண்டும்.

'பற்றினால்தான் துன்பம் வருகிறதே தவிர, செயலால் அல்ல.' நாம் செய்கின்ற செயலோடு நம்மைப் பிணைத்துக் கொண்ட அந்தக் கணமே துன்பத்தை உணரத் தொடங்கு கிறோம். இணைத்துக்கொள்ளாமல் வேலை செய்வோமானால் துன்பத்தை உணர மாட்டோம். இன்னொருவனுக்குச் சொந்த மான அழகிய ஓவியம் ஒன்று எரிந்துபோனால், அதற்காக ஒருவன் வருத்தப்பட மாட்டான். ஆனால் அவனுடைய ஓவியம் எரிந்து போனால் அவன் எவ்வளவு வேதனைப்படுகிறான்! ஏன்? இரண்டுமே அழகிய ஓவியங்கள்; ஒரே ஓவியத்தின் பிரதி களாகக்கூட அவை இருக்கலாம். ஆனால் அவற்றுள் ஒன்று எரியும்போது மட்டும் அவன் மிகவும் துன்பப்பட்டான். காரணம் ஓர் ஓவியத்தோடு அவன் தன்னை இணைத்துக்கொண் டான், மற்றொன்றோடு இணைத்துக் கொள்ளவில்லை.

இந்த 'நான்', 'எனது' என்பவைதான் எல்லா துன்பங் களுக்கும் காரணம். எனது என்ற எண்ணம் வந்தவுடனே சுயநலமும் வருகிறது. சுயநலம் துன்பத்தைக் கொண்டுவருகிறது. சுயநலத்துடன் செய்யும் ஒவ்வொரு செயலும், சுயநலத்துடன் நினைக்கும் ஒவ்வொரு நினைப்பும், நம்மை ஏதாவது ஒன்றுடன் பற்றுக்கொள்ளச் செய்கிறது. உடனே நாம் அடிமையாக்கப் படுகிறோம். சித்தத்தில் எழுகின்ற 'நான்', 'எனது' என்னும் ஒவ்வோர் அலையும், நம்மைச் சுற்றி உடனடியாகச் சங்கிலியைப் பிணைக்கிறது; நம்மை அடிமைகளாக்கிவிடுகிறது. 'நான்', 'எனது' என்று அதிகமாகச் சொல்லும் அளவு அடிமைத்தளை பலமாகிறது; துன்பங்களும் அதிகரிக்கின்றன. எனவே உலகத் தில் உள்ள எல்லா ஓவியங்களின் அழகையும் அனுபவியுங்கள். ஆனால் எந்த ஓவியத்தோடும் உங்களை இணைத்துக் கொள் ளாதீர்கள் என்று கர்மயோகம் சொல்கிறது. 'எனது' என்று ஒருபோதும் சொல்லாதீர்கள். ஒரு பொருளை 'எனது' என்று சொல்லிவிட்டால் உடனடியாகத் துன்பம் வந்து சேர்ந்து விடும். மனத்தில்கூட 'என் குழந்தை' என்று சொல்லாதீர்கள். குழந்தையை வைத்துக் கொள்ளுங்கள், ஆனால் 'எனது' என்று மட்டும் சொல்லாதீர்கள், சொன்னால் துன்பம்தான். 'என் வீடு' என்று கூறாதீர்கள், 'எனது உடம்பு' என்று சொல்லாதீர் கள். பிரச்சினையே அதில்தான். இந்த உடம்பு உங்களுடையதும்

அல்ல, என்னுடையதும் அல்ல, வேறு யாருடையதும் அல்ல. அவை இயற்கையின் நியதிப்படி வந்துபோகின்றன. நாம் சுதந்திரர்கள், சாட்சியாக நிற்பவர்கள். இந்த உடம்பு ஒரு படத்தைவிட, ஒரு சுவரைவிட, அதிக சுதந்திரம் உள்ளது அல்ல. அப்படி இருக்கும்போது, அதனோடு நாம் ஏன் நம்மைப் பிணைத்துக்கொள்ள வேண்டும்? ஒருவன் ஓவியம் வரைந்தால் அவன் வரைந்துவிட்டுப்போகிறான். 'அது எனக்கு வேண்டும்' என்னும் சுயநலக் கைகளை நீட்டாதீர்கள். சுயநலம் தலை தூக்கினால் துன்பமும் தொடங்கிவிடும்.

எனவே கர்மயோகம், சுயநலம் தலைதூக்குகின்ற போக்கையே முதலில் ஒழிக்க வேண்டும் என்று கூறுகிறது. அதைத் தடுப்பதற்கான ஆற்றல் உங்களிடம் இருக்குமானால் அதை உடனே தடுத்துவிடுங்கள். சுயநலப் பாதைகளில் மனம் செல்ல அதற்கு மேலும் அனுமதிக்காதீர்கள். அதன்பிறகு உலகத்தில் சென்று முடிந்த அளவு வேலை செய்யலாம், எல்லோருடனும் பழகலாம், விரும்பிய இடங்களுக்குப் போகலாம். உங்களை எந்தத் தீமையும் அணுகாது. தாமரையிலை தண்ணீரில் இருக்கிறது. ஆனால் தண்ணீரால் அதை நனைக்கவோ, அதன்மீது ஒட்டிக்கொள்ளவோ முடியாது. அதுபோலவே உலகில் நீங்களும் இருப்பீர்கள். இதுதான் வைராக்கியம், ஆசையின்மை, பற்றின்மை என்று அழைக்கப்படுகிறது.

பற்றின்மை இன்றி எந்தவிதமான யோகமும் கிடையாது என்று முன்பே கூறினேன் என்று நினைக்கிறேன். எல்லா யோகங்களுக்கும் பற்றின்மையே அடிப்படை. இல்லறத்தையும், அழகிய ஆடை அணிகளையும், நல்ல உணவு உண்பதையும் விட்டுவிட்டு, பாலைவனத்தில் வாழும் ஒருவன் தீவிரப் பற்று உடையவனாக இருக்கலாம். அவனது ஒரே உடைமையான உடம்பே அவனுக்கு இப்போது எல்லாமாக ஆகிவிட்டிருக்கலாம். அவனுக்கு வாழ்க்கை என்பது இப்போது அந்த உடம்பைக் காப்பாற்றுவதற்கான போராட்டமாகவே இருக்கும். பற்றின்மை என்றால், உடம்பிற்காக நாம் எதுவும் செய்யக் கூடாது என்பதல்ல பொருள். அது மனத்தைப் பொறுத்தது. பிணைக்கின்ற சங்கிலியாகிய 'நான்', 'எனது' என்பவை மனத்திலேயே உள்ளது. நாம் எங்கிருந்தாலும் என்ன செய்தாலும் நமது உடம்பின் மீதோ புலன்களின் மீதோ இந்தச் சங்கிலியால் நம்மைப் பிணைத்துக் கொள்ளாவிட்டால் நாம்

பற்றற்றவர்கள். ஒருவன் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கலாம், ஆனால் சிறிதுகூடப் பற்றில்லாதவனாக இருக்கலாம். மற்றொருவன் கந்தை உடுத்திருக்கலாம், ஆனால் தீவிரப் பற்றுடையவனாக இருக்கலாம். முதலில் இந்தப் பற்றற்ற நிலையை அடைய வேண்டும், பின்னர் இடையீடின்றிச் செயல் புரிய வேண்டும். பற்றுகளை விடுவது மிகவும் கடினம்தான் என்றாலும், நாம் அவற்றை நீக்குவதில் உதவுகின்ற வழியைக் கர்மயோகம் கூறுகிறது.

எல்லாவிதமான பற்றுகளையும் நீக்குவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒரு வழி இறை நம்பிக்கை இல்லாத, புறத்திலிருந்து வருகின்ற எந்த உதவியையும் நம்பாதவர்களுக்கு உரியது. தங்களுக்குரிய வழிமுறைகளைத் தேடிக்கொள்ளும் பொறுப்பு அவர்களுடையதே. தங்கள் சொந்த சங்கல்பங்கள், மன ஆற்றல்கள், விவேகம் இவற்றைத் துணையாகக் கொண்டு 'நான் பற்றில்லாமல் இருப்பேன்' என்னும் உறுதியுடன் இவர்கள் செயலில் ஈடுபட வேண்டும்.

இறை நம்பிக்கை உள்ளவர்களுக்கு மற்றொரு வழி இருக்கிறது. இது முன்னதைவிடக் கொஞ்சம் எளிய வழி. இவர்கள் தங்கள் செயலின் பலனை இறைவனுக்கு அர்ப்பணித்து விடுகிறார்கள். இவர்கள் செயல்புரிகிறார்கள், ஆனால் பலனில் பற்று வைக்க மாட்டார்கள். இவர்கள் காண்பதும் கேட்பதும் உண்பதும் எல்லாம் இறைவனுக்காகவே. நாம் எத்தகைய நற்செயல்களைச் செய்தாலும் புகழுக்கோ பலனுக்கோ உரிமை கொண்டாடாமல் இருப்போம். அவை இறைவனுடையவை; பலன்களை அவரிடமே அர்ப்பித்துவிடுவோம். எஜமானனான இறைவனின் ஏவலர் மட்டுமே நாம் என்றும், செயல்புரிவதற்கான ஒவ்வொரு தூண்டுதலும் ஒவ்வொரு கணமும் அவரிடமிருந்தே வருகிறது என்றும் எண்ணி ஒதுங்கி நிற்போம். நீங்கள் வழிபடுகின்ற எல்லாவற்றையும், உணர்கின்ற அனைத்தையும், செய்கின்ற அனைத்தையும் அவரிடமே அர்ப்பித்துவிட்டு ஓய்வெடுங்கள். நாம் அமைதியில் நிலைத்திருப்போம், நமக்குள் பூரண அமைதி நிலவட்டும். பின்னர் நமது உடம்பு, மனம் மற்றும் அனைத்தையும் இறைவன் என்னும் வேள்வித் தீயில் ஆஹுதியாக சமர்ப்பிப்போம். வேள்வியில் நெய்யைச் சொரிவதற்குப் பதிலாக, உங்கள் சிறிய-நான் என்பதைச் சொரிந்து இரவும்பகலும் இந்த மாபெரும் வேள்வியைச் செய்யுங்கள். 'இறைவா! இந்த உலகத்தில் செல்வத்தைத் தேடியதில்

நான் கண்ட ஒரே செல்வம் நீயே. நான் என்னை உன்னிடம் ஆஹுதியாக அளிக்கிறேன். அன்பு செய்ய ஒருவரைத் தேடியதில் நான் கண்ட ஒரே அன்பன் நீயே. நான் என்னை உன்னிடம் ஆஹுதியாக அளிக்கிறேன்.' இரவும் பகலும் நாம் இதைத் திரும்பத்திரும்பச் சொல்வோம். 'எனக்கு எதுவும் வேண்டாம். அது நல்லதோ, கெட்டதோ, இரண்டும் இல்லாததோ, எப்படியும் இருக்கட்டும் எனக்குக் கவலை இல்லை. எல்லாவற்றையும் உன்னிடமே அர்ப்பணிக்கிறேன்' என்று சொல்லுங்கள்.

ஆன்மாபோல் தோன்றுகின்ற நமது சிறிய-நான் என்பதை இரவும் பகலும் துறப்போம். அப்படித் துறப்பது நமது இயல்பாக மாறும்வரையில், அது நமது ரத்தத்தில், நரம்புகளில், மூளையில் கலந்து நமது உடம்பு முழுவதும் அந்த லட்சியத்தை ஒவ்வொரு கணமும் ஏற்றுக் கொள்ளும்வரையில் முயன்று கொண்டே இருப்போம். அதன்பிறகு போர்க்களத்தில் புகுந்து, பீரங்கிகளின் முழக்கத்திற்கு நடுவில், போரின் அமளி துமளியின் இடையில் சென்றாலும் நீங்கள் சுதந்திரமாக அமைதி மயமாக இருக்க முடியும்.

கடமை என்ற கருத்து சற்று தாழ்ந்த படியிலுள்ளது என்று கர்மயோகம் கூறுகிறது. ஆனாலும் நாம் நமது கடமையைச் செய்துதான் ஆக வேண்டும். விசித்திரமான இந்தக் கடமை உணர்வு சிலவேளைகளில் பெரிய துயரங்களுக்கெல்லாம் காரணமாக அமைந்துவிடுகிறது. கடமை என்பது நமக்கு நோயாகி விடுகிறது, நம்மை இழுத்துக்கொண்டே போகிறது. நம்மைப் பிடித்துக்கொண்டு, நம் வாழ்க்கை முழுவதையும் துயரமாக மாற்றுகிறது. அது மனித வாழ்வில் ஒரு சாபக்கேடு. கடமையும் கடமையுணர்வும் கோடைகாலத்தின் நண்பகல் சூரியன்போல் மனித சமுதாயத்தின் அந்தராத்மாவையே தகிக்கிறது. கடமைகளுக்கு அடிமையாகிவிட்ட பரிதாபத்திற்குரிய அடிமைகளைப் பாருங்கள்! கடமை அவர்களைப் பிரார்த்தனை செய்யவோ குளிக்கவோகூட விடுவதில்லை. அவர்களின்மீது எப்போதும் அது அமர்ந்திருக்கிறது. வெளியில் சென்று வேலை செய்கிறார்கள். அங்கும் அவர்கள்மீது கடமைதான்! வீட்டிற்கு வருகிறார்கள், வீட்டிலும் மறுநாள் செய்யவேண்டிய வேலைகளைப்பற்றிய எண்ணத்தில் மூழ்குகிறார்கள். கடமை அவர்களின்மீது உள்ளது. இது அடிமை வாழ்க்கை. ஒரு குதிரை ஓடிஓடிக் களைத்து நடுவீதியில் வீழ்ந்து சாவதுபோல்

இறுதியில் சாகிறார்கள். கடமையைப்பற்றி மக்கள் இவ்வாறு தான் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

உண்மையான ஒரே கடமை பற்றற்றிருப்பதும், சுதந்திரமாகச் செயல் புரிவதும், செயல்கள் அனைத்தையும் கடவுளிடம் அர்ப்பணித்து விடுவதும்தான். நமது கடமைகள் எல்லாமே அவருடையது. இங்கு வேலை செய்யக் கட்டளையிடப்பட்டிருக்கின்ற நாம் பேறு பெற்றவர்கள். நமக்கு அனுமதிக்கப்பட்டுள்ள காலம்வரை வேலை செய்கிறோம். அதை நாம் நன்றாகச் செய்கிறோமா, மோசமாகச் செய்கிறோமா, யாருக்குத் தெரியும்? நன்றாகவே செய்தாலும் அதன் பலன் நமக்கு வேண்டாம், மோசமாகச் செய்தாலும் அதன் பலனைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். அமைதியாக இருங்கள், சுதந்திரமாக இருங்கள், வேலைகளைச் செய்யுங்கள். இத்தகைய சுதந்திரத்தை அடைவது மிகவும் கடினமானதுதான்.

அடிமைத்தனத்தைக் கடமையென்று சொல்வதும், மாமிசப் பிண்டத்திற்கு மாமிசப் பிண்டத்தின்மீது இருக்கும் தீவிரப் பற்றிற்குக் கடமையென்று விளக்கம் தருவதும் எவ்வளவு எளிதானவை! பணம் முதலான பொருட்களிடம் பற்றுக் கொண்டு அவற்றை அடைவதற்காக உலகக் களத்தில் இறங்கிப் போராடுகிறார்கள். 'இதை ஏன் செய்கிறீர்கள்?' என்று கேட்டுப் பாருங்கள். 'இது எனது கடமை' என்பார்கள். பணத்தின்மீதும் லாபத்தின்மீதும் இருக்கின்ற முட்டாள்தனமான பேராசையைச் சில பூக்களால் மறைக்க முயற்சிக்கிறார்கள்.

கடைசியில், கடமை என்பதுதான் என்ன? அது உண்மையில் நமது உடலின், நமது பற்றின் தூண்டுதல் மட்டுமே. ஒரு பற்று நிலைத்துவிட்டால் அதைக் கடமை என்கிறோம். உதாரணமாக, திருமணம் என்பது இல்லாத நாடுகளில் கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயான கடமைகள் எதுவும் இல்லை. திருமணம் என்று வந்தவுடனே பற்றின் காரணமாக இருவரும் சேர்ந்து வசித்தார்கள். இப்படிச் சேர்ந்து வசிப்பது என்பது பல தலைமுறைகளுக்குப் பிறகு ஒரு நிலையான வழக்கமாகியது. அப்படி நிலைபெற்றதும் அது ஒரு கடமையாக மாறிவிட்டது. அதை நாள்பட்டுபோன தீராத ஒருவகைவியாதி என்று சொல்லலாம். அது கடுமையாகும்போது வியாதி என்கிறோம். தீர்க்க முடியாத அளவு போய்விட்டால் இயற்கை என்கிறோம். அது ஒரு நோய்தான். அதுபோல் பற்று என்பது விலக்க முடியாத அளவு தீவிரமாகும்போது நாம் அதனைச் சற்று

அந்தஸ்துடைய, கடமை என்ற பெயரைக் கொண்டு அபிஷேகம் செய்கிறோம்; அதன்மீது மலர் தூவுகிறோம், அதற்காகப் பேரிகைகளை முழக்குகிறோம், மந்திரங்களை உச்சரிக்கிறோம். அதன்பிறகோ கடமை என்ற அந்தப் பெயரால் உலகம் முழுவதும் ஒன்றுடன் ஒன்று அடித்துக் கொள்கிறது. ஒருவன் மற்றொருவனை முழுக்கமுழுக்கக் கொள்ளையடிக்கிறான். மிருகத்தனத்தைக் கட்டுப்படுத்தும் அளவிற்குக் கடமை நல்லதுதான். வேறு எந்த லட்சியமும் இல்லாத மிகத் தாழ்ந்த மனிதர்களுக்குக் கடமை என்பது கொஞ்சம் நன்மையளிப்பதாக இருக்கும்.

ஆனால் கர்மயோகியாக விரும்புபவர்கள் கடமை என்னும் நினைப்பையே தூக்கி எறிந்துவிட வேண்டும். உங்களுக்கும் எனக்கும் எந்தக் கடமையும் இல்லை. உலகிற்குக் கொடுப்பதற்காக உங்களிடம் உள்ளவற்றை எல்லாம் தாராளமாகக் கொடுங்கள், ஆனால் கடமை என்பதற்காகக் கொடுக்காதீர்கள். அத்தகைய நினைப்பையே மனத்தில் கொள்ளாதீர்கள். கட்டாயத்திற்கு ஆளாகாதீர்கள். கட்டாயத்திற்கு ஏன் ஆளாக வேண்டும்? கட்டாயத்தின்பேரில் நீங்கள் செய்கின்ற அனைத்தும் பற்றையே வளர்க்கும்.

கடமை என்ற ஒன்றே உங்களுக்கு எதற்கு? அனைத்தையும் ஆண்டவனிடம் அர்ப்பணித்து விடுங்கள். கடமை என்னும் நெருப்பு தகிக்கின்ற அனல் கக்கும் எரிஉலையில் உள்ள நீங்கள் இந்த அமுதைக் குவளைகளில் ஏந்திக் குடியுங்கள்! மகிழ்ச்சியாக இருங்கள்! நாம் அனைவருமே அவரது திருவுளக் கருத்தை நிறைவேற்றுகிறோம், அவ்வளவுதான். அதில் வரும் பரிசிலோ தண்டனையிலோ நமக்கு எந்தத் தொடர்பும் இல்லை. பரிசைப் பெற விரும்பினால் தண்டனையும் பெற்றேயாக வேண்டும். தண்டனை வேண்டாமென்றால் அதற்கு ஒரேவழி பரிசையும் உதறிவிடுவதுதான். துயரத்திலிருந்து விடுபடுவதற்கான ஒரே வழி, மகிழ்ச்சிபற்றிய நினைப்பையும் விட்டுவிடுவதுதான். ஏனென்றால் இந்த இரண்டும் ஒன்றோடொன்று இணைந்தவை. ஒருபக்கம் மகிழ்ச்சி, மறுபக்கம் துன்பம். ஒருபக்கம் வாழ்க்கை இருக்கிறது, மறு பக்கம் மரணம் உள்ளது. மரணத்திற்கு அப்பால் செல்வதற்கு ஒரே ஒரு வழி, வாழ்க்கைமீதுள்ள மோகத்தை விடுவதுதான். வாழ்வும் சாவும் ஒரே விஷயம்தான், ஆனால் இரண்டு கோணங்களிலிருந்து பார்க்கப்படுகின்றன, அவ்வளவுதான். எனவே துன்பமற்ற இன்பம், மரணமற்ற வாழ்க்கை

போன்ற கருத்துக்கள் எல்லாம் பள்ளிச் சிறுவர்களுக்கும் குழந்தைகளுக்கும் மிகவும் நல்லது. ஆனால் அறிவு ஜீவியோ இவை முன்னுக்குப்பின் முரணானவை என்றே காண்கிறான்; கண்டு, இரண்டையும் விட்டுவிடுகிறான்.

நீங்கள் செய்கின்ற எதற்கும் பாராட்டுகளையோ பரிசு களையோ எதிர்பார்க்காதீர்கள். ஒரு நல்ல காரியத்தைச் செய் தால் உடனே அதற்கான வெகுமதியை எதிர்பார்க்கத் தொடங்கி விடுகிறோம். ஏதாவது ஒரு தர்ம காரியத்திற்காகப் பணம் கொடுத்த உடனே நம்முடைய பெயர் பத்திரிகையில் பளிச்சிட வேண்டும் என்று விரும்புகிறோம். இத்தகைய ஆசைகளின் விளைவாகத் துன்பங்கள் வந்தே தீரும். உலகின் மாமனிதர்கள், யாருக்கும் தெரியாமலே வாழ்ந்து மறைந்து விட்டார்கள். உலகம் சிறிதும் அறியாத இந்த மாமனிதர்களுடன் ஒப்பிடும் போது, நாம் அறிந்த புத்தர்களும் ஏசுநாதர்களும் இரண்டாவது படியிலேயே நிற்கிறார்கள். உலகம் அறியாத இத்தகைய மாமனிதர்கள் ஒவ்வொரு நாட்டிலும் நூற்றுக்கணக்கில் வாழ்ந்து ஆரவாரமின்றிச் செயல் புரிந்திருக்கிறார்கள், யாரும் அறியாமலே அவர்கள் வாழ்கிறார்கள்! யாரும் அறியாமலே மறையவும் செய்கிறார்கள். உரிய காலத்தில் அவர்களுடைய சிந்தனைகள் புத்தர்களின்மூலமும் ஏசுநாதர்களின் வாயிலாக வும் வெளிப்படுகின்றன. இந்த புத்தர்களையும் ஏசுநாதர்களை யுமே நாம் அறிகிறோம். தங்கள் ஞானத்திற்காக எந்தவித மான பெயரையும் புகழையும் மாமனிதர்கள் நாடுவதில்லை. தங்கள் சிந்தனைகளை மட்டும் உலகத்திற்காக அவர்கள் விட்டுச் செல்கிறார்கள்; அவைகளைத் தங்களுடையது என்று உரிமை பாராட்டுவதோ அல்லது தங்கள் பெயரில் அவைகளை ஒரு தத்துவமாக, ஒரு நெறியாக நிலைநிறுத்துவதோ இல்லை. அத்தகைய விஷயங்களிலிருந்து அவர்களுடைய இயல்பே பின்வாங்கிவிடுகிறது. அவர்கள் தூய சாத்வீகர்கள். அவர்க ளிடம் ஆரவாரத்திற்கு இடமில்லை. அவர்கள் அன்பில் உருகிப் போகிறார்கள். இந்தியாவின் குகையொன்றில் அத்தகைய யோகி ஒருவரை நான் பார்த்தேன். நான் கண்ட மிகவும் ஆச்சரியப்படத் தக்கவர்களுள் அவர் ஒருவர். அவரிடமுள்ள மனிதன் முற்றிலு மாக மறைந்து விட்டானோ என்று சொல்லும் அளவிற்கு தனது தனித்துவத்தை இழந்துவிட்டவர் அவர். அவரிடம் எஞ்சியிருந்ததெல்லாம், எல்லாம் அறிகின்ற தெய்வீக உணர்வு மட்டுமே. ஒரு மிருகம் அவரது ஒரு கையைக் கடித்தால் அது

தெய்வ சங்கல்பம் என்று கூறி மற்ற கையையும் நீட்டத் தயாராக இருப்பவர் அவர். அவரிடம் வருகின்ற எல்லாமே, அவரைப் பொறுத்தவரை, கடவுளிடமிருந்து வருபவை. அவர் மனிதர்கள் முன் தம்மைக் காட்டிக் கொள்வதில்லை. என்றாலும், அன்பு மற்றும் உண்மையான, இனிமையான கருத்துக்களுடைய இருப்பிடம் அவர்.

அடுத்து வருபவர்கள் ரஜஸ் அதிகமாக உள்ளவர்கள். செயல்திறனும் எதற்கும் முன்நிற்கின்ற இயல்பும் படைத்தவர்கள். இவர்கள் நிறைமனிதர்களின் கருத்துக்களை எடுத்துக் கொண்டு, அவற்றை உலகத்தில் பரப்புபவர்கள். மிகவும் உயர் நிலை மனிதர்கள், உண்மையான உன்னதமான சிந்தனைகளை அமைதியாகச் சேர்த்து வைக்கிறார்கள். மற்றவர்கள் அதாவது புத்தர்களும் ஏசுநாதர்களும் ஒவ்வோர் இடமாகச் சென்று அவற்றைப் பரப்பவும் அதற்காகப் பாடுபடவும் செய்கிறார்கள். கௌதம புத்தர் அடிக்கடி, தாம் இருபத்தைந்தாவது புத்தர் என்று கூறிக்கொள்வதை அவரது வரலாற்றில் பார்க்கிறோம். இன்று வரலாற்றிற்குத் தெரிந்த புத்தர், தமக்கு முன்பு வாழ்ந்த அந்த இருபத்து நான்குபேர் அமைத்த சிந்தனை அடிப்படைகளின்மீதுதான் தமது கட்டிடத்தை எழுப்பியிருக்க வேண்டும். எனினும் அவர்களைப்பற்றி வரலாறு எதுவுமே அறியவில்லை. மாமனிதர்கள் ஆரவாரமின்றி, அமைதியாக, பிறர் அறியாதவர்களாக வாழ்கிறார்கள். அவர்கள்தான் உண்மையிலேயே சிந்தனையின் ஆற்றலை அறிந்தவர்கள். தாங்கள் ஒரு குகைக்குள் நுழைந்து கதவை அடைத்துக்கொண்டு, ஐந்தே ஐந்து கருத்துக்களைச் சிந்தித்துவிட்டு, அங்கேயே இறந்துவிட்டாலும்கூட, தங்களுடைய அந்த ஐந்து சிந்தனைகளும் காலங்காலமாக வாழும் என்பது அவர்களுக்கு சர்வநிச்சயமாக இருந்தது. உண்மைதான். அத்தகைய சிந்தனைகள் மலைகளை ஊடுருவி, கடல்களைக் கடந்து, உலகில் நுழைந்து பரவும் வல்லமை பெற்றவை. அவை மனித இதயங்களில், மூளைகளில் ஆழமாகப் புகுந்து, அன்றாட வாழ்க்கையில் அவற்றிற்குச்செயல் முறை விளக்கம் தரவல்ல ஆண்களையும் பெண்களையும் கிளர்ந்தெழச் செய்யும்.

இத்தகைய சாத்வீக மனிதர்கள் செயல்களில் ஈடுபடவோ, போரிடவோ, பிரச்சாரம் செய்யவோ, சாதாரணமாகச் சொல்லப்படுகிறதே அதுபோல் உலகிற்கு நன்மை செய்யவோ முடியாத அளவிற்கு இறைவனிடம் மிக நெருக்கமாக

இருக்கிறார்கள். எவ்வளவுதான் சிறந்தவர்களாக இருந்தாலும் செயல்வீரர்களிடம் சிறிது அறியாமை இருக்கவே செய்கிறது. நமது இயல்பில் ஒரு சிறிதேனும் மலினம் இருந்தால் மட்டுமே நம்மால் செயல்புரிய முடியும். சாதாரணமாக, சுயநலமும் பற்றும் தூண்டினால் மட்டுமே செயல்புரிய முடியும். அது செயலின் இயல்பு. ஒரு சின்னஞ்சிறு குருவி கீழே விழுவதைக்கூடக் கவனிப்பவரான, இடையீடின்றிச் செயல்புரிபவரான பகவானின் முன்னிலையில், மனிதன் தனது வேலைக்கு ஏதாவது முக்கியத்துவம் கொடுக்க எப்படி இயலும்? மிகச் சிறு உயிர்களைக்கூட அவர் காப்பாற்றுவதை அறிகின்ற நாம் அப்படி முக்கியத்துவம் கொடுப்பது தெய்வநிந்தனை ஆகாதா! நாம் செய்ய வேண்டியதெல்லாம் அவரது திருமுன்னர் பயபக்தியோடு நின்று, 'உமது திருவுளம்போல் நடக்கட்டும்' என்று கூறுவதுதான்.

மிக உயர்ந்தவர்களால் செயல்புரிய முடிவதில்லை. ஏனென்றால் அவர்களிடம் பற்று என்பது இல்லை. யாருடைய ஆன்மா பரமாத்மாவில் நிலைத்துவிட்டதோ, யாருடைய ஆசைகள் ஆன்மாவில் ஒடுங்கி நிற்கிறதோ, யார் எப்போதும் ஆன்மாவில் மூழ்கியிருக்கிறார்களோ அவர்களுக்குச் செயல் என்பதே இல்லை. அத்தகையோர் உண்மையிலேயே மனித குலத்தின் மகோன்னதமான மனிதர்கள். அவர்களைத் தவிர மற்ற எல்லோரும் வேலை செய்தேயாக வேண்டும். அப்படி வேலை செய்யும்போது, இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள ஒரு பொருளுக்குக்கூட நம்மால் உதவி செய்ய முடியும் என்று நினைக்கக் கூடாது. நம்மால் உதவவும் முடியாது. உலகமாகிய இந்த விளையாட்டரங்கில் நாம் நமக்கே உதவி செய்துகொள்கிறோம். செயல் புரிவதற்குரிய சரியான மனநிலை இதுவே. இவ்வாறு நாம் வேலை செய்தால், வேலை செய்வதற்குக் கிடைத்த இந்த வாய்ப்பு நமக்கு அளிக்கப்பட்டுள்ள ஒரு பெரும் பேறு என்பதை எப்போதும் நினைவு கொள்வோமானால், நாம் எதிலும் பற்றுக்கொள்ள மாட்டோம்.

உலகில் நாமே பெரிய மனிதர்கள் என்று நீங்களும் நானும் இன்னும் நம்மைப் போன்ற லட்சக்கணக்கானோரும் நினைக்கிறோம். ஆனால் நாம் அத்தனைபேரும் சாகப் போகிறோம்; ஐந்து நிமிடத்தில் உலகம் நம்மை மறந்துவிடப் போகிறது. ஆனால் இறைவனோ என்றென்றும் இருப்பவர். 'எல்லாம் வல்ல அந்த இறைவன் திருவுளம் கொள்ளவில்லை

என்றால், ஒரே ஒரு கணம்கூட யாரால் வாழ முடியும்? யாரால் சுவாசிக்க முடியும்?'[1] எப்போதும் செயல்பட்டுக் கொண்டிருக்கும் தலைவர் அவர். எல்லா ஆற்றலும் அவருடையது, எல்லாம் அவரது அதிகாரத்தின் கீழ் உள்ளது. அவரது கட்டளையால்தான் காற்று வீசுகிறது, சூரியன் ஒளிர்கிறது, உயிர்கள் வாழ்கின்றன, மரணம் பூமியின்மீது நடைபோடுகிறது.[2] எல்லாவற்றிலுமுள்ள எல்லாமும் அவரே. அவரே எல்லாம், எல்லாவற்றிலும் அவரே. நம்மால் அவரை வழிபடத்தான் முடியும். செயல்களின் பலனையெல்லாம் விட்டுவிடுங்கள்! நன்மைக்காகவே நன்மை செய்யுங்கள்! அப்போதுதான் முழுமையான பற்றின்மை வரும்! இதயத்தின் தளைகள் அப்போதுதான் உடையும். பூரண சுதந்திரத்தை அப்போதுதான் நாம் அனுபவிப்போம். இந்தச் சுதந்திரம்தான் கர்மயோகத்தின் லட்சியம்! ❑

---

1. கோ ஹ்யேவான்யாத் க: ப்ராண்யாத் யதேஷ ஆகாச ஆனந்தோ ந ஸ்யாத்?
—தைத்திரீய உபநிடதம், 2.7.

2. பீஷாஸ்மாத் வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய: ।
பீஷாஸ்மாதக்னிச்சேந்த்ரச்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம இதி ॥
—தைத்திரீய உபநிடதம், 2.8.1.

## II. சொற்பொழிவு

# செயலும் அதன் ரகசியமும்

லாஸ் ஏஞ்ஜல்ஸ், கலிபோர்னியா, 4 ஜனவரி 1900

செயலின் பலனில் செலுத்தும் அதே அளவு கவனத்தை அந்தச் செயலைச் செய்கின்ற முறையிலும் செலுத்த வேண்டும் என்பது என் வாழ்க்கையில் நான் கற்ற மிக உயர்ந்த பாடங்களுள் ஒன்றாகும். இதனை நான் ஒரு பெரியவரிடமிருந்து கற்றேன். அவரது சொந்த வாழ்வே இந்த உன்னதமான கருத்தைச் செயலளவில் எடுத்துக்காட்டுவதாக அமைந்திருந்தது. அந்த ஒரு கருத்திலிருந்து பல பெரிய பாடங்களை நான் எப்போதும் கற்றுவருகிறேன். பலனைப்போல் பாதையிலும் அதே அளவு கவனம் செலுத்த வேண்டும் என்னும் அந்தக் கருத்தில்தான் வெற்றியின் முழு ரகசியமும் அமைந்துள்ளது என்றே எனக்குத் தோன்றுகிறது.

வாழ்க்கையில் நம்மிடம் பெரிய குறை ஒன்று உள்ளது. குறிக்கோளே நம்மை மிகவும் கவர்வதாக உள்ளது, லட்சியமே மிகவும் வசீகரிப்பதாக உள்ளது, நம்மை அப்படியே சுண்டி இழுப்பதாக உள்ளது. எனவே நமது மனத்தின் அடிவானத்தில் அது மிகப் பெரியதாகத் தோன்றுகிறது. அதன் பரிமாணத்தின் காரணமாக, அதை அடைவதற்கான வழிமுறைகளை நாம் பெரிதாக எண்ணாமல் விட்டுவிடுகிறோம்.

தோல்வி வரும்போதெல்லாம், அதனை ஆராய்ந்து பார்த்தால் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சதவீதம் செயல்களிலும் நாம் வழிமுறைகளில் கவனத்தைச் செலுத்தியிருக்க மாட்டோம், அதுதான் தோல்விக்குக் காரணமாக இருந்தது என்பது தெரியவரும். பாதையை முற்றுப்பெறச் செய்வதிலும் பலப்படுத்துவதிலும் ஒழுங்காகக் கவனம் செலுத்துவதே நாம் செய்ய வேண்டியது. பாதை சரியாக இருந்தால், பயன் வந்தேயாக வேண்டும். காரணமே காரியத்தை உண்டாக்குகிறது என்பதை நாம் மறந்துவிடுகிறோம். காரியம் தானாகவே வந்துவிட முடியாது. காரணங்கள் சரியாக, ஒழுங்காக, ஆற்றல்மிக்க

வையாக இல்லாமல் காரியம் உண்டாகாது. லட்சியத்தைத் தேர்ந்தெடுத்து, அதை அடைவதற்கான வழியையும் தீர் மானித்துவிட்டால், கிட்டத்தட்ட நாம் லட்சியத்தை பொருட் படுத்த வேண்டியதில்லை. ஏனெனில் வழிமுறை சரியாக, பூரண மாக இருக்கும் என்றால், லட்சியம் அங்கே இருக்கும் என்பது உறுதி. காரணம் உள்ள போது, காரியத்தைப்பற்றிப் பிரச்சினை இல்லை; காரியம் வந்தே தீரும். காரணத்தை நாம் கவனித்துக் கொண்டால், காரியம் தன்னைத் தானே கவனித்துக்கொள்ளும். லட்சியத்தை அடைதல் காரியம், அடையும் வழி காரணம். ஆதலால் வழிமுறையில் கவனத்துடன் இருப்பதே வாழ்வின் மேலான ரகசியம்.

இதையே நாம் கீதையிலும் காண்கிறோம், கற்றுக் கொள் கிறோம். அதாவது, நமது முழு ஆற்றலுடன் இடைவிடாமல் செயல்புரிய வேண்டும்; நாம் செய்யும் செயல் எதுவாயினும் நமது முழு மனத்தையும் அதில் செலுத்த வேண்டும்; அதே வேளையில் அதில் பற்றுக்கொள்ளவும் கூடாது. அதாவது, செயல்புரிவதிலிருந்து வேறு எதன் காரணமாகவும் நமது மனம் விலகிச் செல்ல இடம் கொடுக்கக் கூடாது. அதேவேளையில் நாம் விரும்பினால் செயலை விட்டுவிடும் திறமையும் பெற்றிருக்க வேண்டும்.

நமது சொந்த வாழ்வுகளையே ஆராய்ந்து பார்த்தால், நம் துயரத்திற்கான மிக முக்கியக் காரணம் இதுவே என்பதைக் காண்போம். நாம் ஏதாவது ஒன்றை மேற்கொள்வோம். அதில் நம் முழுச் சக்தியையும் செலுத்துவோம். ஒருவேளை அது தோல்வியடையலாம். ஆனாலும் நம்மால் அதைக் கைவிட முடிவதில்லை. அது நமது நெஞ்சைப் புண்ணாக்குகிறது. இனி மேலும் அதைப் பற்றிக்கொண்டிருப்பதால் நமக்குத் துயரமே விளையும் என்பது நமக்குத் தெரியும். ஆனாலும் அதிலிருந்து விலக நம்மால் முடிவதில்லை. வண்டு தேனுண்ண வந்தது, ஆனால் அதன் கால்கள் அதில் ஒட்டிக்கொண்டன; அதை விட்டு வண்டால் வெளியேற முடியவில்லை. இந்த நிலைமை யில் நாம் இருப்பதை மீண்டும்மீண்டும் காண்கிறோம். இதுவே வாழ்வின் முழு ரகசியம்.

நாம் ஏன் இங்கிருக்கிறோம்? நாம் தேனைக் குடிக்க இங்கே வந்தோம். ஆனால் நம் கைகளும் கால்களும் அதில் ஒட்டிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். நாம் பிடிக்க வந்தோம், ஆனால் பிடிபட்டுவிட்டோம். நாம் அனுபவிக்க வந்தோம்,

ஆனால் அனுபவிக்கப்படுகிறோம். நாம் ஆள வந்தோம், ஆனால் ஆளப்படுகிறோம். நாம் வேலை செய்ய வந்தோம், ஆனால் வேலை வாங்கப்படுகிறோம். இவ்வாறுதான் நடந்துகொண்டிருக்கிறது. இது நம் வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் புகுந்திருக்கிறது. பிற மனங்கள் நம்மை வேலை வாங்குகின்றன; நாமும் பிற மனங்களை வேலை வாங்க எப்போதும் பாடுபடுகிறோம். வாழ்க்கையின் இன்பங்களை அனுபவிக்க விழைகிறோம். ஆனால் அவை நம் உயிரையே உறிஞ்சிவிடுகின்றன. இயற்கையிலிருந்து ஒவ்வொன்றையும் பெற நாம் விரும்புகிறோம். ஆனால் இயற்கை நம்மிடமிருந்து ஒவ்வொன்றையும் பறித்துக்கொண்டு, நம்மை வெறுமையாக்கி ஒருபக்கமாக எறிந்துவிடுவதை நாளடைவில் காண்கிறோம்.

இது மட்டும் இல்லாதிருந்தால், வாழ்க்கை இன்பமயமாக இருந்திருக்கும். பரவாயில்லை, போகட்டும்! தோல்விகளும் வெற்றிகளும், துன்பங்களும் இன்பங்களும் மற்ற அனைத்தும் இருந்தாலும் நாம் சிக்கிக்கொள்ளாமல் மட்டும் இருப்போமானால் வாழ்க்கை இன்பத்திற்குமேல் இன்பமாகவே தொடரும்.

துயரத்திற்கு ஒரே காரணம் இதுவே—நாம் பற்றுக்கு ஆளாகிறோம்; சிக்கிக்கொள்கிறோம். இதனாலேயே கீதை, 'இடைவிடாது வேலை செய், வேலை செய்; ஆனால் பற்று வைக்காதே! சிக்கிக்கொள்ளாதே!' என்கிறது. எவ்வளவு விருப்பம் உள்ளதானாலும், அதற்காக உன் மனம் எவ்வளவுதான் ஏங்கினாலும், அதை விட்டுவிட்டால் நீ அடையும் சோகம் எவ்வளவுதான் பெரியதானாலும் ஒவ்வொன்றிலிருந்தும் உன்னைப் பிரித்துக்கொள்வதற்கான திறமையை உன்னிடம் வைத்துக்கொள்ள வேண்டும். விரும்பும்போது அதனைவிட்டு நீங்கும் ஆற்றல் உனக்கிருக்க வேண்டும். இந்த உலகில் ஆகட்டும், வேறு எந்த உலகிலும் ஆகட்டும், அதில் பலவீனர்களுக்கு இடமில்லை. பலவீனம் அடிமைத்தனத்திற்கே இட்டுச் செல்கிறது. உடல் மற்றும் மன சம்பந்தமான எல்லா வகை துயரங்களும் பலவீனத்தாலேயே விளைகின்றன. பலவீனமே மரணம். நம்மைச் சுற்றி லட்சக்கணக்கான நுண்ணுயிர்கள் உள்ளன. ஆனால் உடல் அவற்றை உள்ளே அனுமதிக்க ஆயத்தமாக, பலவீனமாக இல்லாமல் அவை நமக்குத் துன்பம் தர முடியாது. துன்பந்தரும் நுண்ணுயிர்கள் நம்மைச் சுற்றிக் கோடிக்கணக்காக மிதந்துகொண்டிருந்தாலும் என்ன? பொருட்படுத்த வேண்டாம். மனம் பலவீனம் அடைந்தாலன்றி, அவை நம்மை அணுகத்

துணியாது; நம்மைப் பற்றிக்கொள்ளும் திறன் அவற்றிற்கு இருக்காது. இதுவே பேருண்மை. பலமே வாழ்வு, பலவீனமே மரணம். பலமே இன்பம். பலமே என்றென்றும் மரணமிலாப் பெருவாழ்வு. பலவீனமே ஓயாத சோர்வும் துயரமும். பலவீனமே மரணம்.

நம் இன்பங்கள் அனைத்திற்கும் மூலகாரணம் பற்றே. நண்பர்கள், உறவினர்கள் என்று பலரிடமும் நாம் பற்று வைக்கிறோம்; நமது அறிவு மற்றும் ஆன்மீகச் செயல்களில் பற்று வைக்கிறோம். புறப் பொருட்களிலிருந்து இன்பம் பெறுவதற்காக அவற்றில் பற்று வைக்கிறோம். இந்தப் பற்றைத் தவிர வேறு எதுதான் துயரத்தைக் கொண்டு வருகிறது? பேரின்பம் பெற வேண்டுமானால் நாம் எதிலும் ஒட்டாதிருக்க வேண்டும். நினைத்தபோது பற்றற்று நிற்கும் திறமை நம்மிடம் இருக்குமானால் எந்தத் துயரமும் இருக்காது. ஒரு பொருளின்மீது முழு ஆற்றலோடு பற்று வைக்கும் திறமையுடன், வேண்டும்போது அதிலிருந்து தன்னை முழுவதுமாக விலக்கிக் கொள்வதற்கான திறன் உடையவனே இயற்கையிலிருந்து மிகச் சிறந்ததைப் பெற முடியும். பற்றும் திறமை, விட்டுவிலகும் திறமையின் அளவுக்கு இருக்க வேண்டும். இங்கேதான் பிரச்சினை.

ஒருபோதும் எதனாலும் கவரப்படாத மனிதர்கள் உள்ளனர். அவர்களால் ஒருபோதும் அன்பு செய்யவும் முடியாது. அவர்கள் கடின நெஞ்சுடையவர்கள்; அவர்களுடையது ஈரமற்ற இதயம். அவர்கள் வாழ்க்கைத் துயரங்களில் பெரும் பகுதியிலிருந்து தப்பித்துக்கொள்வார்கள். சுவர் ஒருபோதும் துயருறுவதில்லை, ஒருபோதும் அன்பு செய்வதில்லை, ஒருபோதும் புண்படுத்துவதுமில்லை. ஆனால் அது வெறும் சுவர்தான். ஒரு சுவராக இருப்பதைவிட, பற்றுக்கு உட்பட்டுச் சிக்கிக்கொள்வது நிச்சயமாக மேல். ஆதலால் ஒருபோதும் அன்பு செய்யாமல், இளகாத கல்நெஞ்சுடையவனாகி, வாழ்க்கைத் துயரங்களில் பெரும்பகுதியிலிருந்து விடுபடுபவன் அதன் இன்பங்களிலிருந்தும் விடுபடவே செய்கிறான். நமக்கு அது தேவையில்லை. அது பலவீனம், அது மரணம். ஒருபோதும் பலவீனத்தை உணராத, ஒருபோதும் துயரப்படாத உயிர் விழிப்படையாத ஒன்றே. அது உணர்ச்சியற்ற நிலை. அது நமக்கு வேண்டுவதில்லை.

அதேவேளையில், அன்பின் மாபெரும் சக்தியாகிய இது, பற்றின் பேராற்றலாகிய இது, முழு உயிரையும் ஒரே பொருளில்

செலுத்தி, நம்மை மறந்து பிறருக்காக நம்மை அழித்துக் கொள்வதுபோல் தோன்றுகின்ற இந்தச் சக்தி தெய்வங்களின் சக்தியே. நமக்கு வேண்டியது இந்தச் சக்தி மட்டுமல்ல; தெய்வங் களைவிட உயர்ந்த நிலையை அடைய நாம் விரும்புகிறோம். நிறைமனிதனால் தன் முழு உயிரையும் செலுத்தி ஒன்றிடம் அன்புகொள்ள முடியும். ஆனாலும் அவன் பற்றற்றிருப்பான். இது எப்படி? இங்கே இன்னோர் ரகசியத்தை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

பிச்சைக்காரன் ஒருபோதும் இன்பம் காண்பதில்லை. அவனுக்குக் கிடைப்பது ஒருசிறிது கூழே. அதுவும் இரக்கத் துடனும் இகழ்ச்சியுடனுமே தரப்படுகிறது; அவன் இழிந்தவன் என்ற எண்ணமாவது கண்டிப்பாக இருந்தே தீரும். தான் பெறு வதை ஒரு நாளும் அவன் உண்மையாக அனுபவிப்பதில்லை.

நாம் அனைவரும் பிச்சைக்காரர்களே. நாம் எதைச் செய் தாலும் பிரதிபலனை எதிர்பார்க்கிறோம். நாம் அனைவரும் வியாபாரிகள். வாழ்க்கையில் நாம் வியாபாரிகள், தர்மத்தில் நாம் வியாபாரிகள், மதத்தில் நாம் வியாபாரிகள். அந்தோ! அன்பிலும் நாம் வியாபாரிகளே.

நீ வியாபாரம் செய்ய வந்திருக்கிறாயானால், அது கொடுக்க லும் வாங்கலும் பற்றியதானால், விற்பதும் வாங்குவதும்தான் உனது ஒரே எண்ணமானால் வியாபார விதிகளைப் பின்பற்று. வியாபாரத்தில் நல்ல காலம் உண்டு, கெட்ட காலமும் உண்டு; விலை உயர்வதும் தாழ்வதும் உண்டு. எப்போது வேண்டு மானாலும் நஷ்டங்கள் வரும். கண்ணாடியில் உன் முகத்தைப் பார்ப்பது போன்றது அது. அங்கு உன் முகமே பிரதிபலிக்கப் படுகிறது. நீ முகத்தைக் கோணலாக்கிக் கொண்டால் கண்ணாடியிலும் கோணல் தெரியும், நீ சிரித்தால் அங்கும் சிரிப்பு. இதுதான் வாங்கலும் விற்றலும், கொடுப்பதும் கொள்வதும்.

நாம் சிக்கிக்கொள்கிறோம். எப்படி? கொடுப்பதால் அல்ல; கொடுத்ததற்காக எதையோ எதிர்பார்ப்பதால். நமது அன்பிற்குப் பிரதியாக துயரத்தைப் பெறுகிறோம். ஏன்? அன்பு செய்ததால் அல்ல, பிரதியாக அன்பை எதிர்பார்த்ததால் தான். தேவை தீர்ந்த இடத்தில் துயரம் இல்லை. ஆசை, தேவை இவையே எல்லா துயரங்களுக்கும் தந்தை. ஆசைகள், வெற்றி தோல்வி நியதிகளுக்குக் கட்டுப்பட்டவை. ஆசைகள் துயரத்தை விளைவித்தே தீரும்.

உண்மையான வெற்றியின், உண்மையான ஆனந்தத்தின் மாபெரும் ரகசியம் இதுவே: பிரதிபலனை எதிர்பாராதவன், முற்றிலும் தன்னலமற்றவன்—அவனே எல்லாவற்றிலும் சிறந்த வெற்றியடைவான். இது ஒரு முரண்பாடாகத் தோன்றுகிறது. சுயநலமற்றவன் ஒவ்வொருவனும் வாழ்க்கையில் ஏமாற்றப்படு கிறான், மனம் புண்படுகிறான் என்பது நமக்குத் தெரியாதா? மேலோட்டமாக இதற்கு ஆம் என்பதே விடை. 'ஏசு தன்னலம் அற்றவர்; எனினும் சிலுவையில் அறையப்பட்டார்.' உண்மை தான். ஆனால் அவரது சுயநலமின்மையே ஒரு பெரும் வெற்றிக் கும் காரணமாயிற்று என்பதையும் நாம் அறிவோமே! லட்சக் கணக்கானோரின் வாழ்வில் உண்மை வெற்றி என்னும் ஆசி களை அள்ளிக் குவித்தது அந்தச் சுயநலமின்மையே அல்லவா?

எதையும் வேண்டாதீர்கள். பிரதியாக எதையும் விரும் பாதீர்கள். நீங்கள் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து விடுங்கள்; அது உங்களுக்கே திரும்பிவரும். ஆனால் அதைப் பற்றி இப்போது நினைக்க வேண்டாம். அது ஆயிரம் மடங் காகத் திரும்பிவரும். கவனத்தை அதன்மீது செலுத்தக் கூடாது. கொடுக்கும் திறன் உடையவர்களாக இருங்கள், கொடுங்கள், அத்துடன் அது முடியட்டும். முழு வாழ்க்கையுமே கொடுத் தல்மயம், நீங்கள் கொடுக்கும்படி இயற்கை வற்புறுத்தும் என் பதை கற்றுக் கொள்ளுங்கள். ஆதலால் முழுமனத்துடன் கொடுங்கள். இன்றோ நாளையோ நீங்கள் அனைத்தையும் விடத்தான் வேண்டும். சேமிப்பதற்காக நீங்கள் வாழ்க்கையில் புகுந்தீர்கள், கைகளை இறுக மூடிக்கொண்டே எடுக்க விரும்புகிறீர்கள். ஆனால் இயற்கை உங்கள் தொண்டையைக் கையால் அழுத்தி, உங்கள் கைகளை விரியச் செய்கிறது. விரும் பினாலும், விரும்பாவிட்டாலும் நீங்கள் கொடுத்தேயாக வேண்டும். 'நான் கொடுக்க மாட்டேன்' என்று நீங்கள் சொல் லும் அந்தக் கணமே அடி விழுகிறது; நீங்கள் காயம் அடை கிறீர்கள். காலப்போக்கில் எல்லாவற்றையும் விட்டுவிடும் படி, கட்டாயப்படுத்தப் பெறாத மனிதன் யாரும் இல்லை. இந்த விதியை எதிர்த்துப் போராடும் அளவிற்கு ஒருவன் துய ருறுகிறான். நாம் கொடுக்கத் துணியாததால்தான், இயற்கை யின் இந்த மேலான தேவைக்கு இணங்காததால்தான் துயரப் படுகிறோம். காடு அழிகிறது, ஆனால் அதற்குப் பதிலாக சூடு கிடைக்கிறது. கதிரவன் கடலிலிருந்து நீரை முகந்துகொள்வது, அதனை மழையாகத் திரும்ப அளிப்பதற்கே. கொள்வதற்கும்

கொடுப்பதற்கும் ஆனதோர் எந்திரம் மட்டுமே நீங்கள். கொள்வது கொடுப்பதற்கே.

எனவே பிரதிபலனாக எதையும் வேண்டாதீர்கள். ஆனால் கொடுக்கும் அளவு பெருகப்பெருக வருவதும் அதிகமாகும். இந்த அறையிலிருந்து காற்றை வெளியேற்றும் அளவு விரைவாகுந்தோறும் வெளியே உள்ள காற்றால் நிரப்பப்படும். ஒரு துவாரமும் விடாமல் எல்லா கதவுகளையும் மூடினால் உள்ளேயிருப்பது அப்படியே இருக்கும். ஆனால் வெளியேயுள்ளது ஒருபோதும் உள்ளே வராது. உள்ளேயிருப்பது தேங்கி நின்று, கெட்டுப்போய், நஞ்சு நிறைந்ததாகிவிடும். ஆறு ஓயாமல் கடலிற்குள் பாய்ந்துகொண்டே இருக்கிறது, ஓயாமல் மீண்டும் நிரம்பிக்கொண்டும் உள்ளது. கடலில் புகுவதைத் தடை செய்யாதீர்கள். அப்படிச் செய்கின்ற அந்தக் கணமே மரணம் உங்களைப் பற்றிக்கொள்கிறது.

பிச்சைக்காரனாக இருக்காதீர்கள். பற்றற்றிருங்கள். வாழ்வில் மிகக் கடினமான செயல் இது. வழியில் வரும் அபாயங்களைக் கணக்கிட உங்களால் முடியாது. அறிவின்மூலம் அந்தத் துன்பங்களைத் தெரிந்துகொண்டாலும் அவற்றை அனுபவிக்கும்வரை நீங்கள் உண்மையாக அவற்றை அறிவதில்லை. தொலைவிலிருந்து ஒரு பூங்காவைப் பார்க்கலாம். அதனால் பெறுவது என்ன? நாம் அதனுள் செல்லும்போதுதான் அதை நாம் உணர்கிறோம்; உண்மையாக அறிகிறோம். நமது முயற்சி ஒவ்வொன்றும் தோல்வி அடைந்தாலும், ரத்தம் கொப்பளிக்க நாம் கிழித்தெறியப்பட்டாலும், இவை அனைத்தின் நடுவிலும் நாம் மனம் தளராமல் இருக்க வேண்டும். இன்னல்கள் அத்தனைக்கும் நடுவிலும் நமது தெய்வத்தன்மையை மறக்காமல் இருக்க வேண்டும். செயலுக்கு எதிர்ச்செயல் செய்யுமாறு இயற்கை நம்மைத் தூண்டுகிறது; அடிக்குப் பதிலாக அடியையும், ஏமாற்றுதலுக்கு மாறாக ஏமாற்றுதலையும், பொய்க்குப் பதிலாகப் பொய்யையும் திரும்ப அளிக்குமாறும், முழு ஆற்றலுடன் எதிர்த்து அடிக்குமாறும் விரும்புகிறது. அப்போது எதிர்த்து அடிக்காமல் இருக்கவும், அடக்கத்தைக் கைக்கொள்ளவும், பற்றற்றிருக்கவும் மேலான தெய்வ சக்தி வேண்டியிருக்கிறது.

பற்றற்றிருக்க வேண்டும் என்னும் நமது தீர்மானத்தை ஒவ்வொரு நாளும் புதுப்பித்துக் கொள்கிறோம். கடந்து சென்ற காலத்தைத் திரும்பிப் பார்க்கிறோம். அங்கே நமது அன்பிற்கும்

பற்றிற்கும் பாத்திரமாக இருந்த பொருட்களைப் பார்க்கிறோம். எப்படி அவை ஒவ்வொன்றும் நம்மைத் துயரத்திற்கு உள்ளாக்கியது என்பதை உணர்கிறோம். நமது 'அன்பின்' காரணமாகத் துயரத்தின் எல்லைக்கே சென்று அழுந்திக் கிடந்தோம்! பிறருக்குக் கீழ் வெறும் அடிமைகளாக ஆனதை நாம் கண்டோம்! மேலும்மேலும் கீழ்நோக்கி இழுக்கப்பட்டோம்! 'இனி நானே எனக்கு எஜமான் ஆவேன். இனி என்னை நான் அடக்குவேன்' என்று தீர்மானத்தைப் புதுப்பித்துக் கொள்கிறோம். ஆனால் வேளை வரும்போது மீண்டும் பழங்கதைதான்! மறுபடியும் நாம் அகப்பட்டுக் கொள்கிறோம்; வெளியேற முடியாதவர்களாகிறோம். வலையில் சிக்கிய பறவை வெளிவர முயன்று கொண்டும் சிறகடித்துக்கொண்டும் உள்ளது. இதுதான் நமது வாழ்க்கை.

துன்பங்களை நான் அறிவேன். அவை ஏராளம். நம்முள் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் ஊக்கம் குன்றி, துணிவை இழந்து துன்பநோக்கு உடையவர்களாகிவிடுகிறோம். நேர்மையிலும், அன்பிலும், கம்பீரமாகவும் மேன்மையாகவும் உள்ள அனைத்திலும் நம்பிக்கை இழந்துவிடுகிறோம். ஆக, வாழ்வைப் புதிதாகத் தொடங்கும்போது மன்னிப்பவர்களாக, அன்புடையவர்களாக, எளிமையானவர்களாக, கள்ளம் கபடம் அற்றவர்களாக இருந்த மக்கள் வயது முதிரும்போது பொய்மையே பூண்ட போலிகளாகிவிடுவதைக் காண்கிறோம். அவர்களுடைய உள்ளங்கள் சிக்கல் நிறைந்தவை ஆகிவிடுகின்றன. பார்வைக்கு அவர்கள் மிகவும் அமைதியாக இருக்கலாம். அவர்கள் சீற்றம் கொள்வதில்லை. அவர்கள் ஒன்றும் பேசுவதில்லை. ஆனால் அவர்கள் சீற்றம்கொள்வதும் பேசுவதும் அவர்களுக்கு நல்லது. அவர்களுடைய நெஞ்சங்கள் இறந்து போய்விட்டன. அதனால்தான் அவர்கள் பேசுவதில்லை, அவர்கள் சபிப்பதில்லை, கோபம் கொள்வதில்லை; அவர்கள் கோபம்கொள்ள முடியுமானால் அது அவர்களுக்கு நல்லது, சபிக்க முடிந்தால் அது ஆயிரம் மடங்கு நல்லது. ஆனால் அது அவர்களால் முடியாது. அவர்களது நெஞ்சில் மரணம் உள்ளது; அதன் சில்லிடும் கைகள் அவர்களின் இதயத்தைப் பற்றிவிட்டது; சாபம் இடவோ, சுடுசொல் சொல்லவோ முடியாத அளவுக்கு அந்த இதயம் மரத்துவிட்டது.

இவற்றை எல்லாம் நாம் தவிர்க்க வேண்டும். ஆதலால்தான் மேலான தெய்வ சக்தி நமக்குத் தேவை என்று நான்

சொல்கிறேன். ஆதிமனித ஆற்றல் போதாது, மேலான தெய்வ சக்தி பெறுவதே ஒரே வழி. வெளியேற அது ஒன்றுதான் வழி. இந்தச் சிக்கல்கள் அனைத்தின் வழியாகவும், இந்தத் துயர மழைகள் வழியாகவும் அதன் துணையுடன் மட்டுமே நாம் துன்பமின்றிச் செல்ல முடியும். நாம் துண்டுதுண்டாக வெட்டப் படலாம், கிழித்தெறியப்படலாம். எனினும் நமது நெஞ்சம் எப்போதும் மேம்பட்டு விரிய வேண்டும்.

இது மிகவும் கடினமானது. ஆனால் தொடர்ந்த பயிற்சி யால் துன்பத்தை வெல்ல முடியும். எதுவானாலும் சரி, அதை ஏற்கும் முறையில் நம்மை நாம் அமைத்துக்கொள்ளாமல் நமக்கு எதுவும் நிகழாது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். உடல் ஏற்றதாக அமையாமல், அதற்கு நோய் வர முடியாது என்று சற்று முன்பு கூறினேன். நோய் என்பது நோய்க் கிருமி களை மட்டும் பொறுத்ததல்ல; அதற்கு முன்பே உடலில் நிலவு கின்ற ஒருவகை அனுகூல நிலையையும் பொறுத்ததாகும். நமது தகுதிக்கு ஏற்றதையே நாம் பெறுகிறோம். நமக்கு வர வேண்டிய துன்பங்கள் மட்டுமே வருகின்றன. ஆணவத்தை விட்டு இதைத் தெரிந்து கொள்வோம். நமக்கென்றில்லாத எந்த அடியும் ஒருபோதும் நம்மைச் சேராது. நமக்கு நாமே செய்து கொள்கின்ற துன்பத்தைத் தவிர வேறு எந்தத் துன்பமும் நம்மை அணுகாது. இதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். உங்களையே ஆராய்ந்து பாருங்கள். உங்களுக்கு வந்த துன்பங்கள் எல்லாமே நீங்கள் அதற்காக உங்களைத் தயார்ப் படுத்திக் கொண்டதால்தான் வந்தது என்பதை அறிந்துகொள் வீர்கள். ஒரு பாதியை நீங்கள் செய்தீர்கள், புற உலகம் மறுபாதி யைச் செய்தது இவ்வாறே துயரம் வந்தது.

இந்த ஆராய்ச்சியிலிருந்து ஒரு நம்பிக்கைக் கிரணமும் வருகிறது. 'என்னால் புறவுலகை அடக்க முடியாது. ஆனால் என்னுள், எனக்கு அருகில் இருக்கின்ற எனது சொந்த உலகம் என் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டது. தோல்விக்கு இரண்டும் தேவையானால், என் துயரத்திற்கு இரண்டும் காரணமானால் என் பக்கத்திலிருந்து நான் ஒத்துழைக்க மாட்டேன். அப்போது துயரம் எப்படி வரும்? உண்மையிலேயே என்னை நான் அடக்கினால், துயரம் ஒருபோதும் வராது' என்பதே அந்த நம்பிக்கை.

நமது குழந்தைப் பருவம்முதலே, காலமெல்லாம், நமக்கு வெளியேயுள்ள ஏதோ ஒன்றின்மீது பழி சுமத்தவே நாம்

முயன்றுவருகிறோம். நாம் எப்போதும் பிறரைத் திருத்தத் தான் கங்கணம் கட்டுகிறோமே தவிர, நம்மையே திருத்த முயல் வதில்லை. நமக்குத் துயரம் வந்தால், 'ஆ! இது என்ன பேய் உலகம்!' என்கிறோம்; பிறரைச் சபிக்கிறோம்; 'என்ன முட்டாள் பைத்தியங்கள்' என்கிறோம். நாம் உண்மையிலே அவ்வளவு நல்லவர்கள் என்றால் அத்தகைய பேயுலகில் நாம் ஏன் இருக்க வேண்டும்? இது பேய்களின் உலகம் என்றால் நாமும் பேய்களே. இல்லாவிடில் நாம் ஏன் இங்கே இருக்க வேண்டும்? 'ஆ! இந்த மனிதர்கள் எவ்வளவு சுயநலம் பிடித்தவர்கள்!' உண்மைதான். ஆனால் நாம் அவர்களைவிட நல்லவர்கள் என்றால் அவர்களது கூட்டத்தில் நாம் ஏன் இருக்க வேண்டும்? சற்றே சிந்தியுங்கள்.

நமது தகுதிக்கு ஏற்றதையே நாம் பெறுகிறோம். உலகம் கெட்டது, நாம் நல்லவர்கள் என்று சொன்னால் அது பொய். அப்படி ஒருபோதும் இருக்க முடியாது. அது நமக்கே நாம் சொல்லிக்கொள்ளும் ஒரு பெரும் பொய்.

கற்றுக்கொள்ள வேண்டிய முதற்பாடம் இதுவே. வெளி யிலுள்ள எதையும் சபிக்காமலும், வெளியிலுள்ள ஒருவர் மீதும் பழி சுமத்தாமலும் இருக்கத் தீர்மானியுங்கள். மனிதனாக இருங்கள். எழுந்து நில்லுங்கள். பழியை உங்கள்மீதே சுமத்திக் கொள்ளுங்கள். எப்போதும் அதுவே உண்மை என்பதை அப் போது காண்பீர்கள். உங்களையே வசப்படுத்திக் கொள்ளுங்கள்.

ஒருகணம் நமது மனிதத் தன்மையைப் பற்றியும், நமது தெய்வத் தன்மையைப் பற்றியும், நமக்கு எல்லாம் தெரியும் என்றும், நம்மால் எதையும் செய்ய முடியும் என்றும், நாம் குற்றமற்றவர்கள், களங்கமற்றவர்கள், உலகிலே தன்னலமின்மை யில் அனைவரையும் மிஞ்சியவர்கள் என்றும் அவ்வளவு பேசிக் கொள்கிறோம். மறுகணம், ஒரு சிறு கல் நம்மைப் புண்படுத்தி விடுகிறது; ஒரு சிறு மனிதனின் அற்பக் கோபம் நம் மனத்தைப் புண்ணாக்கிவிடுகிறது; தெருவில் போகும் எந்த முட்டாளும் 'இந்தத் தெய்வங்களை'த் துயருறச் செய்கிறான்—இது வெட்கக் கேடு அல்லவா? நாம் அத்தகைய தெய்வங்களானால் இவ் வாறு நடக்குமா? உலகமே பழி சுமக்க வேண்டும் என்பது உண் மையா? ஆன்மாக்கள் அனைத்துள்ளும் தூய்மை மிகுந்தவரும் பெருமை பொருந்தியவரும் ஆன கடவுளை நம் தந்திரங்களால் துயருறச் செய்ய முடியுமா? நீங்கள் அவ்வளவு தன்னலம் அற்ற வர்களானால் நீங்களும் இறைவனுக்குச் சமமானவர்களே. எந்த உலகம்தான் உங்களுக்குத் தீங்கு செய்ய முடியும்? ஏழாவது

நரகம் வழியாகக்கூட நீங்கள் சிறிதும் துன்பமின்றி, ஒருவரும் தடை செய்யாமல் செல்ல முடியும். ஆனால் முறையிடுவதும், புறவுலகின்மீது குற்றம் சுமத்த விரும்புவதுமாகிய உண்மை ஒன்றே நீங்கள் புறவுலகத்தை உணர்கிறீர்கள் என்பதைக் காட்டுகிறது. அவ்வாறு உணரும் உண்மையே, நீங்கள் உரிமை பாராட்டிக் கொள்கிறபடி நீங்கள் இல்லை என்பதைக் காட்டி விடுகிறது. துயரத்தை ஒன்றுக்குமேல் ஒன்றாகக் குவித்துக் கொண்டு போவதாலும், புறவுலகம் உங்களைப் புண்படுத்து வதாகப் பாவித்துக்கொள்வதாலும், 'ஆ! இது பேயின் உலகம்! இவன் எனக்குத் தீமை செய்கிறான்; அவன் என்னைத் துன்பப் படுத்துகிறான்' என்றெல்லாம் உரக்க முழங்குவதாலும், முன்பை விட அதிகமாகக் குற்றம் செய்கிறீர்கள். அது துயரத்துடன் பொய்யையும் சேர்ப்பதே ஆகும்.

நம்மை நாமே பாதுகாத்துக்கொள்ள வேண்டும். அவ்வளவு தான் நம்மால் செய்ய முடியும். பிறரைக் கவனிப்பதைச் சிறிது காலம் விட்டுவிட வேண்டும். வழியைப் பூரணமாக்குவோம்; லட்சியம் தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ளும். ஏனெனில் நம் வாழ்வு நல்லதாகவும் தூய்மையானதாகவும் இருந்தால்தான் உலகம் நல்லதாகவும் தூயதாகவும் இருக்க முடியும். அது ஒரு குறிக்கோள். நாமே வழி. ஆதலால் நம்மை நாம் தூய்மையாக்கிக் கொள்வோம்; நம்மை நாம் பூரணமாக்கிக் கொள்வோம்! ❑

## 3. சொற்பொழிவுக் குறிப்புகள்

### 1. செயலே வழிபாடு

13 டிசம்பர் 1895

மிகவும் மேலான மனிதன் செயல்புரிய முடியாது. ஏனெனில் அவனைக் கட்டுப்படுத்த எதுவும் இல்லை. அவனுக்குப் பற்றில்லை. அவனிடம் அறியாமை இல்லை. கப்பல் ஒன்று காந்த மலையின் அருகே செல்ல நேர்ந்ததாகவும், அதனால் கப்பலின் இரும்பாணிகள், தகடுகள் எல்லாம் கழன்றுவிட்ட தாகவும், கப்பலே சிதைந்து மூழ்கிவிட்டதாகவும் கூறுவார்கள். அறியாமை இருக்கும்வரை போராட்டமும் இருக்கும். நாம் எல்லோரும் உண்மையில் நாத்திகர்கள். கடவுள் உண்டு என்று உறுதியாக நம்புபவர்கள் செயல்புரிய முடியாது. நாமெல்லோரும் ஏறக்குறைய நாத்திகர்கள். நாம் கடவுளைக் கண்டதும் இல்லை; அவரை நம்புவதும் இல்லை. நம்மைப் பொறுத்த வரை அவர் க–ட–வு–ள் என்ற எழுத்தளவிலேயே நின்றுவிடு கிறார், அவ்வளவுதான். அவர் நம் அருகிலிருப்பதாகச் சில வேளைகளில் எண்ணுவோம்; அடுத்த கணமே இந்த உணர்ச்சி மாறி, கீழே விழுந்துவிடுவோம்.

உங்களுக்கு அவரது காட்சி கிடைக்கும்போது, அங்கே யார் யாருக்காகப் போராடுவது? இறைவனுக்கு உதவி செய் வதற்காகவா நாம் உழைக்கிறோம்? 'உலகச் சிற்பிக்கு நாம் கற்பிக்க வேண்டுமா?' என்று எங்கள் மொழியில் ஒரு பழமொழி உண்டு. ஒரு செயலும் அற்றவர்களே மிக உயர்ந்தவர்கள். உலகத்தைப்பற்றியும், கடவுளுக்கு உதவுவதற்காக நாம் இதைச் செய்ய வேண்டும் அதைச் செய்ய வேண்டும் என்றெல்லாமும் முட்டாள்தனமான பேச்சுக்கள் அடுத்தமுறை உங்கள் காதில் பட்டால், இப்போது நான் கூறியதை நினைத்துக்கொள்ளுங்கள். இத்தகைய எண்ணங்களை எண்ணாதீர்கள். அவை முற்றிலும் சுயநலமானவை. நீங்கள் செய்கின்ற எல்லா செயல்களும் உங்களிடம் இருந்தே எழுகின்றன; உங்கள் நன்மைக்காகவே செய்யப்படுகின்றன. கடவுள் எந்தக் குழியிலும் விழுந்து

கிடைக்கவில்லை; நீங்களும் நானும் ஏதோ மருத்துவமனை கட்டியும், அதுபோன்ற நற்பணிகள் செய்தும் அவரைக் கைதூக்கிவிட வேண்டியதில்லை.

நாம் செயல்புரிய அவர் நம்மை அனுமதித்திருக்கிறார். இந்த மாபெரும் பயிற்சிக்கூடத்தில் உங்கள் ஆற்றலைப் பயன்படுத்திப் பயிற்சி பெற அவர் உங்களை அனுமதிக்கிறார். இந்தப் பயிற்சி அவருக்கு உதவி செய்வதற்காக அல்ல, உங்கள் நன்மைக்காகவே. உங்கள் உதவி இல்லாததால் ஓர் எறும்புகூட இறக்க நேரும் என்று எண்ணுகிறீர்களா? இதைவிடக் கொடிய தெய்வ நிந்தை வேறொன்றும் இல்லை. உலகம் இயங்கிய வண்ணமே இருக்கிறது; நீங்கள் பெருங்கடலில் ஒரு சிறுதுளி மட்டுமே. அவரின்றி ஓர் இலை அசைவதில்லை, காற்று வீசுவதில்லை. அவருக்கு உதவுவதற்காக அல்லாமல் அவருக்காக உழைக்கும் பேறுபெற்ற நாம் புண்ணியசாலிகள்.

'உதவி' என்ற சொல்லை உங்கள் மனத்திலிருந்து விலக்கிவிடுங்கள். உங்களால் உதவி செய்ய முடியாது. உதவுவதாகச் சொல்வது தெய்வ நிந்தனை. நீங்கள் இருப்பதே அவரது விருப்பத்தால்தான். நீங்களா அவருக்கு உதவி செய்கிறீர்கள்? நீங்கள் அவரை வழிபடுகிறீர்கள். நாய்க்கு ஒருபிடி சோறு கொடுக்கும்போது, அந்த நாயை இறைவனாக எண்ணி வழிபடுகிறீர்கள். அவர் அந்த நாயில் இருக்கிறார். அவரே நாயாகவும் இருக்கிறார். அவர் எல்லாவற்றினுள்ளும் இருக்கிறார். அவரை வழிபட நாம் அனுமதிக்கப்பட்டுள்ளோம். பிரபஞ்சம் முழுவதையும் இந்தப் பயபக்தியுடன் அணுகுங்கள். அப்போது முற்றிலும் பற்றற்ற நிலை உங்களுக்கு வந்துவிடும். இதுவே உங்கள் கடமையாக வேண்டும். இதுவே செயல்புரியும் சரியான முறை. கர்மயோகம் அறிவுறுத்தும் ரகசியமும் இதுவே. ❑

## 2. எப்படிச் செயல் புரிவது?

13 டிசம்பர் 1895

தூல மற்றும் சூட்சுமப் பொருட்களிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதே லட்சியம். இது நிறைவேறிவிட்டால், தான் என்றும் தனியாகவே இருந்ததையும் தன்னை மகிழ்விக்க வேறு யாரும் தேவையில்லை என்பதையும் ஆன்மா உணர்ந்துகொள்ளும். நமக்கு மகிழ்ச்சி அளிப்பதற்கு வேறு யாரையாவது எதிர் பார்க்கும்வரை நாம் அடிமைகளே. தான் சுதந்திரமானது என் பதையும், தன்னைப் பூரணமாக்க வேறு எதுவும் தேவையில்லை என்பதையும், இயற்கையின் உதவி தனக்கு அவசியமில்லை என்பதையும் என்று புருஷன் அறிகிறதோ, அன்றே முக்தி அல்லது கைவல்யம் பெற்றுவிடுகிறது.

மனிதர்கள் பணத்தைத் தேடி அதன் பின்னால் ஓடுகிறார் கள், அதற்காகச் சக மனிதர்களை வஞ்சிப்பதற்கும் அவர்கள் தயங்குவதில்லை. இவர்கள் மட்டும் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளட்டும். சில ஆண்டுகளில், அவர்கள் விரும்பினால் பெரும் செல்வத்தைச் சம்பாதிக்கும் அளவிற்கு அவர்களது ஒழுக்கம் பெரிதும் முன்னேறிவிடும். அந்த நிலையில் அவர்கள் தங்கள் சங்கல்பத்தால் உலகையே அடக்கியாள இயலும். ஆனால் அதைச் செய்யாமல் நாம் முட்டாள்களாக இருக் கிறோம்.

ஒருவன் தன் தவறுகளை உலகறியப் பேசுவதால் என்ன பயன்? அதனால் அந்தத் தவறுகளைப் போக்கிவிட முடியாது. வினைப்பயனை அனுபவித்தே தீர வேண்டும். ஒவ்வொருவரும் முயன்று, இன்னும் நன்றாகச் செய்ய முயல வேண்டும். வலிமையும் ஆற்றலும் மிக்கவர்களிடம்தான் உலகம் இரக்கம் காட்டுகிறது.

மக்கள் சமூகத்துக்கும் இயற்கைக்கும் ஓர் அர்ப்பணமாக சுதந்திர சங்கல்பத்துடன் செய்யப்பட்ட சேவைகள் மட்டுமே செய்பவனை எந்த வகையிலும் கட்டுப்படுத்தாதவை.

எந்தவகைக் கடமையையும் அலட்சியமாக நினைக்கக் கூடாது. கீழான வேலை செய்கின்ற ஒருவன், அதன்

காரணமாக மட்டுமே உயர்ந்த வேலை செய்கின்ற ஒருவனை விடத் தாழ்ந்தவன் ஆகிவிட மாட்டான். ஒருவன் செய்கின்ற செயலின் தன்மையை வைத்து அவனை மதிப்பிடக் கூடாது; அந்தச் செயல்களை அவன் எப்படிச் செய்கிறான் என்பதைக் கொண்டே அதைத் தீர்மானிக்க வேண்டும். செய்கின்ற முறையும் திறமையுமே ஒருவனைக் கணக்கிடும் அளவுகோலாகும். தொழிலைப் பொறுத்தவரை, நாள்தோறும் பயனற்றவற்றைப் பேசுகின்ற பேராசிரியரைவிட, உறுதியும் அழகும் வாய்ந்த ஒரு செருப்பை மிகக் குறைந்த நேரத்தில் உருவாக்குகின்ற தொழிலாளி எவ்வளவோ உயர்ந்தவன்.

கடமை ஒவ்வொன்றும் புனிதமானது. அதை பக்தியுடன் செய்வது மிக உயர்ந்த தெய்வ வழிபாடு. மாயையில் சிக்கி, அஞ்ஞானத்தில் மூழ்கிக் கிடக்கின்ற பத்த ஆன்மாக்கள், அதாவது கட்டுப்பட்ட உயிர்கள் ஞான ஒளியும் விடுதலையும் பெற இத்தகைய செயல்கள் கட்டாயமாகப் பேருதவி புரியும்.

நம் கைக்கு எட்டிய, நம்மால் இயன்ற கடமைகளை நன்றாகச் செய்வதால் நம்மை நாம் அதிக வலிமையுடையவர்களாக ஆக்குகிறோம். இந்த வலிமையை இவ்வாறே வளர்த்தால், பெருமை மிக்க இந்த வாழ்க்கையிலும் சமூகத்திலும் எல்லோராலும் விரும்பத்தக்க நிலையை, பெறுதற்கரிய நிலையைப் படிப்படியாக அடையலாம்.

இயற்கையின் நீதி எப்போதும் உறுதியானதாகவும் விட்டுக் கொடுக்காததாகவுமே இருக்கிறது.

மிகவும் செயல்முறைப் போக்குக்கொண்ட யாரும் வாழ்க்கை நல்லது என்றோ, கெட்டது என்றோ கூற மாட்டான்.

வாழ்க்கையில் வெற்றி பெற்ற மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் பின்னணியில் எங்கேயோ அளவற்ற ஒருமையுணர்வும் அளவற்ற நேர்மையும் இருந்தே தீரும். ஒருவனது சிறந்த வெற்றிக்கு இவையே காரணம். அவன் ஒருவேளை தன்னலத்தை முற்றிலும் துறந்தவனாக இல்லாமல் போகலாம், ஆனால் அதை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறான். அவன் முற்றிலும் சுயநலமற்றவனாக இருந்திருந்தால், அவனது வெற்றி புத்தரது வெற்றியையும் ஏசுநாதரின் வெற்றியையும்போல் மிகச் சிறந்ததாக விளங்கியிருக்கும். எங்கேயும் சுயநலமின்மையின் அளவைப் பொறுத்தே வெற்றியின் அளவும் உள்ளது.

மனித குலத்தின் மாபெரும் தலைவர்கள், உயர்நிலையில் செயல் புரிபவர்கள்; மேடைச் சொற்பொழிவாளர்கள் அல்ல.

தூய்மை, தூய்மையின்மை என்பவற்றிற்குத் தீமை செய் யாமை, தீமை செய்வது என்று பொருள்கொள்கின்ற பட்சத்தில், நாம் எவ்வளவுதான் முயன்றாலும் முற்றிலும் தூய்மையான ஒரு செயலையோ, முற்றிலும் தூய்மையற்ற ஒரு செயலையோ காண முடியாது. பிறருக்குத் தீங்கு செய்யாமல் நாம் வாழவோ மூச்சுவிடவோ முடியாது. நாம் உண்ணும் ஒவ்வொரு பிடிச் சோறும் வேறோர் வாயிலிருந்து கவரப் பெற்றதே. நாம் வாழ் வதற்கு வேறு சிலர் அழிய வேண்டியிருக்கிறது—அப்படி அழி பவை மனிதனாகவோ, மிருகமாகவோ, தாவர இனமாகவோ இருக்கலாம்; எங்கோ ஏதோ ஒன்று அழிந்தேயாக வேண்டும். எனவே செயலின்மூலம் நிறைநிலை அடைவது என்பது ஒரு நாளும் இயலாத ஒன்று என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். காலத்தின் முடிவுவரையில் நாம் உழைக்கலாம்; ஆனால் சிக்கலான இந்தப் பொறியிலிருந்து வெளியே வர முடி யாது. நாம் வேலை செய்துகொண்டே இருக்கலாம். ஆனால் அதற்கு முடிவு மட்டும் காண இயலாது.

சுதந்திர உணர்வுடனும் அன்புடனும் உழைக்கின்ற ஒருவன் பலனைப்பற்றிக் கவலைப்படவே மாட்டான். அடிமையோ சவுக்கடி வேண்டுகிறான்; சேவகன் கூலி கேட்கிறான். வாழ்க்கை முழுவதிலும் இப்படித்தான் நிகழ்கிறது.

பொதுவாழ்வை எடுத்துக்கொள்ளுங்கள். சொற்பொழி வாற்றும் ஒருவன் கைதட்டலை வேண்டுகிறான்; சிறிது கூச்சலையும் குழப்பத்தையும் விரும்புகிறான். அவனை ஒரு மூலையில் உட்கார வைத்தால் அது அவனைக் கொல்வதற்கு ஒப்பாகிவிடும். அவனுக்கு இவை தேவையாக உள்ளன. இது அடிமைத்தனம். இத்தகைய நிலையில் வேலைக்கு ஏதோ ஒரு பலனை விரும்புவது அவர்களின் இயல்பாகிவிடுகிறது.

அடுத்ததாக, தொழில் செய்து உயிர்வாழ்பவன். இவனுக்குச் சம்பளம் வேண்டும்; 'நான் உழைப்பைக் கொடுக்கிறேன், நீ சம்பளத்தைக் கொடு' என்னும் பேரம் இது.

'வேலைக்காகவே நான் வேலை செய்கிறேன்' என்று சொல்வது சுலபம். செயல்முறையில் இதைப்போல் கடின மானது வேறொன்றும் இல்லை. வேலைக்காகவே வேலை செய்யும் ஒருவன் இருப்பானானால் அவனது முகத்தைக் காண இருபது மைல் தூரம் முழங்காலில் ஊர்ந்து செல்லவும் நான் தயாராக இருக்கிறேன். அப்படிச் சொல்பவனிடமும் ஏதோ ஒரு நோக்கம் ஒளிந்திருக்கவே செய்யும். அது பண ஆசையாக

இருக்கலாம், பதவி ஆசையாக இருக்கலாம், அல்லது வேறு வகை லாபமாக இருக்கலாம். ஆனால் எங்கோ, எப்படியோ இந்தச் செயலுக்குத் தூண்டுசக்தி ஒன்று இருந்தே தீரும். 'நீ எனக்கு நண்பன், நான் உனக்காக உன்னுடன் உழைக்க விரும்பு கிறேன்'—இதுவரை சரிதான்; ஒவ்வொரு நொடியும் எனது நேர்மையை வற்புறுத்தலாம், ஆனால் ஒன்று: 'நீ எல்லா அம்சங் களிலும் என்னுடன் ஒத்துப்போக வேண்டும். இல்லையேல், நான் உன் நலத்தில் அக்கறை கொள்ள மாட்டேன்; உனக்காக உழைக்கவும் மாட்டேன்.' இப்படி, பலனுக்காகச் செய்யும் வேலை துன்பத்தைத்தான் கொண்டுவரும். நமது மனத்தை வென்ற நிலையில் செய்யும் செயல் மட்டுமே பற்றற்ற நிலையை யும் பேரானந்தத்தையும் தரும்.

'பிரபஞ்சம் முழுவதையும் மதிப்பிடுவதற்கான அளவு கோல் நான் அல்ல' என்பது நாம் கற்றுக்கொள்ள வேண்டிய முதற்பாடமாகும். ஒவ்வொருவரையும் அவரவரின் எண்ணங் களுக்கு ஏற்ப மதிப்பிட வேண்டும். ஒவ்வொரு மனித இனத் தையும் அதனதன் அளவுகளுக்கும் லட்சியங்களுக்கும் ஏற்றபடி தான் மதிப்பிட வேண்டும். ஒரு நாட்டின் பழக்க வழக்கங்களை, அதன் சூழ்நிலையையும் லட்சியங்களையும் அடிப்படையாகக் கொண்டே மதிப்பிட வேண்டும். அமெரிக்கர்கள் வாழும் சூழ் நிலைக்கு ஏற்றபடி அவர்களின் பழக்க வழக்கங்கள் அமைந் திருக்கிறது. இந்தியர்களின் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அவர்களது பழக்க வழக்கங்கள் அமைந்துள்ளன.

நாம் ஒவ்வொருவரும் எந்த நிலைக்குத் தகுதி உள்ளவர் களோ அந்த நிலையில்தான் இருப்பதைக் காண்கிறோம். ஒவ் வொரு பந்தும் அதற்குப் பொருத்தமான குழியிலேயே போய்த் தங்குகிறது. ஒருவனுக்கு இன்னொருவனைவிடச் சிறந்த தகுதி இருக்குமானால் அதை உலகம் கண்டுபிடித்துவிடும். பிரபஞ்சத் தில் நடந்துவருகின்ற ஒழுங்குமுறை காரணமாக இந்த அதிகத் தகுதி வெளிப்பட்டே தீரும். எனவே முணுமுணுப்பதால் பலன் ஒன்றும் இல்லை. கயவனான ஒருவன் பணக்காரனாக இருக்க லாம். ஆனால் அவனைப் பணக்காரன் ஆக்கிய சில தகுதிகள் அவனிடம் இருக்கவே வேண்டும். அந்தத் தகுதிகள் வேறுயாரிட மாவது இருந்தால் அவனும் பணக்காரன் ஆகவே செய்வான். சண்டையிடுவதாலோ குறை கூறுவதாலோ ஏதாவது பயன் உண்டா? இவற்றால் நம் நிலைமை சீர்படப் போவதில்லை. விதியின் காரணமாகத் தனக்குக் கிடைத்துள்ள சிறிய

ஒன்றிற்காக முணுமுணுப்பவன் எதற்குமே முணுமுணுக்கத் தான் செய்வான். எப்போதும் எதற்கெடுத்தாலும் குறை கூறிக் கொண்டு அவனது வாழ்க்கை துன்பமயமாகவே இருக்கும். அவன் தொடும் ஒவ்வொன்றும் தோல்வியிலேயே முடியும். யார் தன் பங்கிற்கு வந்த கடமையைத் தயங்காமல் முனைந்து செய்கிறானோ, அவனுக்கு நிச்சயம் ஞான ஒளி உண்டாகும். சிறந்த கடமைகள் தாமாகவே அவனைத் தேடி வரும். ❑

# 3. பலன்கருதாப் பணி

20-3-1898 அன்று ராமகிருஷ்ண மிஷனின் நாற்பத்திரண்டாவது கூட்டத்தில் பேசியது

கீதை முதன்முதலாக உபதேசிக்கப்பட்ட காலத்தில் இரு பிரிவினருக்கு இடையில் பெரிய கருத்துவேற்றுமை நிலவியது. வேத விதிப்படி யாகம், உயிர்ப் பலி, இன்னும் இவை போன்ற கர்மங்கள்தான் மதம் என்பது ஒரு பிரிவினரின் கூற்று. எண்ணற்ற குதிரைகளையும் மற்ற விலங்குகளையும் கொல்வதை மதம் என்பதே தவறு என்பது மற்றவர்களின் வாதம். இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவர்களுள் பெரும்பாலோர் துறவிகளும் ஞான நெறியைப் பின்பற்றுபவர்களும் ஆவர். எல்லா செயல்களையும் விட்டுவிட்டு, ஆன்மஞானம் பெறுவதே மோட்சத்திற்கு வழி என்பது இவர்களது கருத்து.

பலன்கருதாப் பணி என்ற சீரிய தத்துவத்தை வழங்கி கீதாச்சாரியர் இந்த இரு முரண்பட்ட வாதங்களுக்கும் முடிவு கட்டிவிட்டார்.

பகவத்கீதை மகாபாரதக் காலத்தைச் சேர்ந்தது அல்ல, பின்னர் இணைக்கப்பட்டது என்று பலர் கருதுகின்றனர். இது சரியல்ல. கீதையின் விசேஷ உபதேசங்களை மகாபாரதத்தின் ஒவ்வொரு பகுதியிலும் நாம் காணலாம். கீதை மகாபாரதத்தின் ஒரு பகுதியல்ல என்று விலக்க வேண்டுமானால், கீதோபதேசத்தையே அடிப்படையாகக் கொண்ட மகாபாரதத்தின் பல பகுதிகளை நீக்க நேரிடும்.

பலன்கருதாப் பணி என்பதன் பொருள் என்ன? இன்பமோ துன்பமோ தங்கள் மனத்தைத் தொடாத வண்ணம் வேலை செய்வதுதான் பலன் கருதாமல் பணி செய்வது என்று இன்று பலரும் கருதுகின்றனர். இதுவே உண்மைப் பொருளானால், மிருகங்கள் பலன்கருதாப் பணி செய்வதாகக் கூறலாம். சில பிராணிகள் தங்கள் குட்டிகளையே விழுங்கிவிடுகின்றன; இப்படிச் செய்யும்போது அவை சிறிதும் வேதனைப்படுவதே இல்லை. கொள்ளையர் பிறர் பொருளைக் கொள்ளையடிக்கிறார்கள். கொள்ளையிடும்போது நேரும் இன்ப துன்பங்களை

அவர்கள் லட்சியம் செய்வதில்லை என்றால் அவர்களும் பலன் கருதாப் பணி செய்கிறார்கள் என்று சொல்லலாமா? இதன் பொருள் இதுவானால், சற்றும் இரக்கமே இல்லாத கல்நெஞ்சம் படைத்த கயவர்களும், கொடிய குற்றவாளிகளும் பலன்கருதாமல் செயல் புரிபவர்கள் என்று கூறலாம். இன்ப துன்பம் சுவருக்கில்லை, கல்லுக்கில்லை. இவை பலன்கருதாப் பணி செய்பவை என்று கூறலாமா? முடியாது. இந்தப் பொருளில் கொள்ளப்பட்டால் இந்தக் கருத்து தீயோர் கையில் சிக்கிய ஒரு கொடிய ஆயுதமாகிவிடும். பலன் கருதாமல் செயல் புரிவதாகச் சொல்லியபடியே இவர்கள் தீய செயல்கள் செய்து கொண்டே இருப்பார்கள்; இதுவே இந்தக் கருத்தின் பொருளானால், கீதை பயங்கரமான ஒரு தத்துவத்தைப் போதித்துள்ளது என்றுதான் சொல்ல வேண்டும். எனவே இதன் பொருள் அது அல்ல என்பது நிச்சயம். மேலும் கீதோபதேசத்துடன் நெருங்கிய தொடர்புள்ளவர்களின் வாழ்க்கையை நாம் ஆராய்ந்து பார்த்தால், அவர்கள் வேறுவகையில் வாழ்ந்திருப்பதைக் காண்போம். பீஷ்மரையும் துரோணரையும் அர்ஜுனன் போரில் கொன்றான். எனினும் அவன் சுயநலத்தையும் ஆசைகளையும் கோடிமுறை தியாகம் செய்திருக்கிறான்.

கீதை கர்மயோகத்தை உபதேசிக்கிறது. யோகத்துடன் அதாவது ஒன்றுபட்ட உள்ளத்துடன் நாம் செயல்புரிய வேண்டும். மனம் குவிந்து செய்கின்ற இத்தகைய பணியில் கீழான நான்-உணர்வு தோன்றாது. யோகத்துடன் அதாவது மனஒருமையுடன் வேலை செய்யும்போது, 'நான் இதைச் செய்கிறேன்; அதைச் செய்கிறேன்' என்ற உணர்வே இருக்காது. மேலை நாட்டினருக்கு இது புரிவதில்லை. நான்-உணர்வே இல்லை என்றால், நான்-உணர்வே போய்விட்டால், ஒருவன் எப்படி வேலை செய்ய முடியும் என்று அவர்கள் கேட்கிறார்கள். ஆனால் தன்னை முற்றிலுமாக மறந்து, மன ஒருமையுடன் வேலை செய்யும்போதுதான் அளவற்ற மடங்கு சிறப்பாக ஒருவன் வேலை செய்கிறான். ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையில் இதனை உணர்ந்திருக்கலாம். உண்ட உணவைச் செரிப்பது போன்ற சில வேலைகளை நாம் அறியாமலே ஆழ்மனத்தால் செய்கிறாம். பல வேலைகளை நாம் அறிந்து செய்கிறோம். வேறு சில வேலைகளை நான்-உணர்வற்ற சமாதி போன்ற மனம் ஒடுங்கிய நிலையில் செய்கிறோம். ஓவியன் ஒருவன் நான்-உணர்வு அற்ற நிலையில் ஓவியத்தில் ஆழ்ந்து, அதைத்

தீட்டினால், அவனால் அற்புத ஓவியங்களைப் படைக்க முடியும். நல்ல சமையற்காரன் சமையல் செய்யும்போது வேலையிலேயே குறியாக இருக்கிறான். சமையலுக்குரிய சாமான்களைத் தவிர மற்றவற்றை எல்லாம் அந்த நேரத்தில் மறந்தேவிடுகிறான். தங்களுக்குப் பழக்கமான ஒரே செயலை மட்டுமே இவர்களால் இப்படிச் செய்ய முடியும். எல்லா செயல்களையுமே இது போன்ற நிலையில் செய்ய வேண்டும் என்பதே கீதையின் உபதேசம். யோகத்தினால் இறைவனுடன் ஒன்றுபட்ட ஒருவன் எல்லா செயல்களையும் ஒன்றுபட்ட உள்ளத்துடன், அதாவது, யோகத்தில் ஒன்றிச் செய்கிறான்; சுய லாபம் எதையும் அவன் எதிர்பார்ப்பதில்லை. இத்தகைய செயலால் உலகத்திற்கு நன்மையே விளையும்; தீமை எதுவும் விளையாது. இவர்கள் தங்களுக்கென்று எதையுமே செய்துகொள்வதில்லை.

ஒவ்வொரு செயலின் பலனிலும் நன்மையும் தீமையும் கலந்தே இருக்கின்றன. தீமையே சிறிதும் கலவாத நற்செயல் எதுவும் இல்லை. தீயைச் சுற்றிப் புகையிருப்பதுபோல் செயலைச் சுற்றித் தீமையும் இருந்தே தீரும். எனவே மிக அதிக நன்மையும் மிகக் குறைந்த தீமையும் விளைகின்ற செயல்களில் நாம் ஈடுபட வேண்டும். அர்ஜுனன் பீஷ்மரையும் துரோணரையும் கொன்றான். இதைச் செய்யாவிட்டால் அவன் துரியோதனனை வென்றிருக்க முடியாது, நல்ல சக்தி தாழ்ந்து தீய சக்தி ஓங்கியிருக்கும். இதனால் நாடு முழுவதற்குமே பேராபத்து ஏற்பட்டிருக்கும்; கொடுங்கோலர்களிடம் ஆட்சி சிக்கியிருக்கும்; மக்கள் பெரும் துன்பங்களுக்கு உள்ளாக நேர்ந்திருக்கும். அதுபோலவே, கொடுங்கோலர்களாகிய கம்சன், ஜராசந்தன் முதலியவர்களைக் கிருஷ்ணர் கொன்றார். ஆனால் அவற்றுள் ஒன்றுகூட அவருக்காகச் செய்யப்படவில்லை; ஒவ்வொரு செயலும் பிறர் நன்மைக்காகவே செய்யப்பட்டது. விளக்கு வெளிச்சத்தில் கீதை படிக்கிறோம். அதேவேளையில் பல விட்டில்பூச்சிகளும் விளக்கில் விழுந்து மடிகின்றன. எனவே எந்த நற்செயலுடனும் சிறிது தீமை கலந்தே இருப்பதைக் காண்கிறோம்.

இவ்வாறு கீழான நான்-உணர்வின்றி வேலை செய்பவர்களைப் பாவம் பற்றுவதில்லை. ஏனெனில் அவர்கள் உலக நன்மைக்காக உழைக்கிறார்கள். பலன்கருதாத பணியால், பற்றற்ற பணியால் பேரானந்தமும் முக்தியும் கிடைக்கிறது. கர்மயோகத்தின் இந்த ரகசியத்தையே கண்ணபிரான் கீதைமூலம் போதிக்கிறார். ❑

## 4. தன்னலமற்ற செயலே உண்மைத் துறவு

இந்த உலகம் கோழைகளுக்காக அல்ல. தப்பியோட முயலாதே. வெற்றியையோ தோல்வியையோ எதிர்பார்க்காதே. முழுமையான தன்னலமற்ற சங்கல்பத்துடன் உன்னை இணைத்துக்கொண்டு வேலையில் ஈடுபடு. வெற்றி பெறவே தோன்றியுள்ள மனம் தன்னைத் திடசங்கல்பத்துடன் இணைத்துக் கொண்டு முனைந்து முன்னேறுகிறது என்பதை உணர்ந்து கொள். வேலை செய்ய உனக்கு உரிமை இருக்கிறது. ஆனால் பலனை எதிர்பார்க்கும் அளவுக்குக் கீழ்மை அடையாதே. ஓயாமல் உழை. ஆனால் அந்த வேலைக்கு அப்பால் இருக்கும் ஒன்றைப் பார்க்கக் கற்றுக்கொள். நல்ல செயல்கள்கூட ஒரு மனிதனைப் பந்தத்தில் பிணைத்துவிடும். ஆகையால் நற்செயல்களிலோ, பெயர்புகழ் தேடும் விருப்பத்திலோ உன்னைப் பந்தப்படுத்திக் கொள்ளாதே. இந்த ரகசியத்தை அறிந்தவர் பிறப்பு இறப்புச் சுழலைத் தாண்டி, மரணமிலா நிலையை அடைகின்றனர்.

சாதாரணத் துறவி உலகத்தைத் துறந்து வெளியே சென்று கடவுளைப்பற்றி நினைக்கிறான். உண்மைத் துறவி உலகத்திலேயே வாழ்கிறான்; ஆனால் உலகால் கட்டுப்படுத்தப் படாதவனாக இருக்கிறான். தங்களை மறுத்துக் காடு சென்றும், நிறைவுறாத ஆசைகளை எண்ணியெண்ணி இன்பமடைபவர்கள் உண்மைத் துறவிகள் அல்ல. வாழ்க்கைப் போரின் மத்தியில் வாழ். குகையில் வாழும்போதும், தூங்கும்போதும் யாரும் அமைதியாக இருக்க முடியும். செயல்வெறி என்னும் சுழலில் நின்று, மையத்தைச் சென்று சேர். மையத்தை அடைந்து விட்டால், உலகில் உன்னை எதுவும் அசைக்க முடியாது. ❑

# 5. கொள்கைவெறி

13 டிசம்பர் 1895

வெறியர்களில் பலவகையினர் உள்ளனர். சிலர் குடி வெறியர்கள், சிலர் சிகரெட் வெறியர்கள். மனிதன் சிகரெட் பிடிப்பதை விட்டுவிட்டால் உலகின் பொற்காலமே வந்துவிடும் என்று நினைப்பவர்களும் உள்ளனர்—இந்த வெறியர்கள் பொதுவாகப் பெண்களே.

ஒருமுறை இந்த வகுப்பிற்கு ஓர் இளம்பெண் வந்திருந்தாள். சிகாகோவில் வீடு கட்டி, அங்கே தொழிலாளர்களுக்கு இசையும் உடற்பயிற்சியும் கற்பிக்கும் பல பெண்களுள் அவளும் ஒருத்தி. ஒருநாள் அவள் உலகத்தில் நிலவும் தீமைகளைப் பற்றிப் பேசிக்கொண்டே வரும்போது, அவற்றிற்குப் பரிகாரம் தனக்குத் தெரியும் என்று சொன்னாள், 'உனக்கு எப்படித் தெரியும்?' என்று நான் கேட்டேன். 'ஹல் ஹவுஸ் உங்களுக்குத் தெரியுமா?' என்று அவள் என்னைக் கேட்டாள். உடல் காரணமாக ஏற்படும் எல்லா தீமைகளையும் அகற்றும் இடம் இந்த ஹல் ஹவுஸ் என்பது அவள் கருத்து. இந்த எண்ணம் அவளது மனத்தில் வேரூன்றி வளர்ந்திருந்தது. அவளுக்காக நான் வருந்துகிறேன். இந்தியாவில் ஒருவகை வெறியர்கள் உள்ளனர். கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்துகொண்டால் போதும், எல்லா தீமைகளும் நீங்கிவிடும் என்பது இவர்களின் கருத்து. இதுதான் வெறி.

செயல் புரிவதற்கு இந்த வெறி ஒரு முக்கியமான தேவை என்றே சிறுவனாக இருந்தபோது நான் எண்ணியிருந்தேன். இப்போது வயது ஏறஏற, அது சரியல்ல என்பதை உணர்கிறேன்.

பிறருடைய பெட்டியையோ பையையோ திருடுவது ஒரு திருடிக்குத் தவறாகத் தோன்றாது. அவள் ஒருவேளை சிகரெட் பிடிக்காதவளாக இருக்கலாம், சிகரெட் வெறி அவளைப் பிடித்துக் கொள்கிறது; சிகரெட் பிடிப்பவனை அவள் கடுமையாக வெறுக்கிறாள். பிறரை ஏமாற்றுவதே தொழிலாகக் கொண்ட ஒருவன் இருக்கிறான். சிறிதும்

நம்ப முடியாதவன் அவன். எந்தப் பெண்ணுக்கும் அவனிடம் பாதுகாப்பில்லை. இந்தக் கயவன் ஒருவேளை குடிக்காதவனாக இருக்கலாம். எனவே சாராயம் குடிப்பவன் நல்லவனே அல்ல என்று அவன் நினைக்கிறான். தான் செய்கின்ற ஏமாற்றுதல் முதலிய எதுவும் அவனுக்குத் தீமைகளாகத் தோன்றுவதில்லை. இந்த மனப்பான்மை மனிதனுக்கு இயல்பான சுயநலத்தினால் தான் ஏற்படுகிறது. இது ஒருதலைப்பட்சமானது.

ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். இந்தப் பிரபஞ்சத்தை ஆள்வதற்கு இறைவன் ஒருவன் இருக்கிறார். அந்த ஆட்சி உரிமையை அவர் நமக்குத் தானம் செய்துவிடவில்லை. அவரே இந்தப் பிரபஞ்சத்தைக் காத்து வருபவர். இந்தச் சாராய வெறியர்கள், சிகரெட் வெறியர்கள், பலவகைத் திருமண வெறியர்கள் என்று எல்லா வெறியர்களையும் மீறி இந்தப் பிரபஞ்சம் நடந்துகொண்டே இருக்கும். இந்த வெறியர்கள் எல்லாருமே இறந்துவிட்டாலும் இந்தப் பிரபஞ்சம் இயங்கிக் கொண்டு தான் இருக்கும்.

உங்கள் சரித்திரம் உங்களுக்கு நினைவில்லையா? உங்கள் முன்னோர் 'மே ஃப்ளவர்' (May Flower) என்ற கப்பலில் இங்கே வந்ததும், தங்களைப் 'ப்யூரிட்டன்' (Puritans) என்று அவர்கள் சொல்லிக்கொண்டதும் உங்களுக்கு நினைவில்லையா? அவர்கள் தங்கள் சமூகத்தைப் பொறுத்தவரை குற்றமற்றவர்கள்; நல்லவர்கள். ஆனால் பிற மதத்தினரைத் துன்புறுத்தத் தொடங்கியபோது அவர்களது நற்குணம் மாறிவிட்டது. மனித வரலாறு முழுவதிலுமே இதே நிகழ்ச்சிதான். இவ்வாறு துன்புறுத்தலுக்கு அஞ்சி ஓடுபவர்களும், வாய்ப்பு கிடைத்தவுடன் தாங்களும் அவ்வாறே துன்புறுத்தத் தொடங்குகிறார்கள்.

வெறியர்களுள் நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்குக் கல்லீரல் நோயோ, ஜீரணக் கோளாறோ, வேறுவகை நோயோ இருக்க வேண்டும். காலப்போக்கில் இந்த வெறியும் ஒரு நோயே என்று மருத்துவர்கள் கண்டுபிடித்துவிடுவார்கள். இந்த வெறியைப் பெரும் அளவில் கண்டுவிட்டேன். இதனிடமிருந்து இறைவன் என்னைக் காக்கட்டும்!

எந்த வகையான வெறியானாலும் சரி, வெறியின் அடிப்படையில் தோன்றுகின்ற சீர்திருத்தங்களை விலக்குவதே அறிவுடைமை. இது நான் அனுபவத்தில் கண்ட உண்மை. உலகம் மெதுவாகச் சென்று கொண்டிருக்கிறது. இப்படியே போகட்டும். அவசரம் ஏன்? நன்றாகத் தூங்குங்கள். நரம்புகளை நல்ல

நிலையில் வைத்துக்கொள்ளுங்கள்! தகுந்த உணவை உண்ணுங்கள், உலகிடம் அனுதாபத்துடன் நடந்துகொள்ளுங்கள்.

வெறியர்கள் வெறுப்பையே வளர்க்கிறார்கள். சிறிது குடிக்கும் வெறியர்கள் மொடாக் குடியர்களாகிவிட்ட ஏழைகளிடம் அன்பு காட்டுவார்கள் என்று கருதுகிறீர்களா? வெறியனின் வெறிக்குக் காரணம் அவன் ஏதோ ஒரு பயனை எதிர்பார்ப்பதுதான். அதில் வெற்றி பெற்றதும் கிடைத்ததைச் சுருட்டப் பார்க்கிறான். வெறியர்களின் கூட்டத்திலிருந்து விலகிய பின்னரே உண்மை அன்பும் பரிவும் காட்டுவது எப்படி என்பதை அறிவீர்கள். உங்களிடம் அன்பும் பரிவும் வளர்கின்ற அளவிற்கு பரிதாபத்திற்குரிய இந்தக் குடிகாரர்களை வெறுக்கும் எண்ணம் குறையும்; அவர்களிடம் இரக்கம் காட்டத் தோன்றும். குடிகாரனிடம் இரக்கம் காட்டவும், அவனும் உங்களைப்போன்ற ஒரு மனிதனே என்று எண்ணவும் அப்பொழுதுதான் உங்களால் முடியும். அவனைக் கீழே இழுத்த சூழ்நிலைகளை அறிய நீங்கள் முயல்வீர்கள். 'நாம் ஒருவேளை அவனது சூழ்நிலையில் இருந்திருந்தால் தற்கொலையே செய்து கொண்டிருப்போம்' என்றுகூட உங்களுக்குத் தோன்றலாம்.

பெரிய குடிகாரன் ஒருவனுடைய மனைவி என் நினைவிற்கு வருகிறாள். கணவனைப்பற்றி அவள் என்னிடம் குறை கூறினாள். அதற்கு நான் அவளிடம், 'அம்மா, உன்னைப்போல் இரண்டு கோடி மனைவிகள் இருந்தால் போதும், உலகில் கணவர்கள் அனைவருமே குடிகாரர்கள் ஆகிவிடுவார்கள்' என்றேன். குடிகாரர்களில் பெரும்பாலோர் மனைவிகளால் அந்த நிலைக்கு விரட்டப் பட்டவர்களே என்று நான் உறுதியாக நம்புகிறேன். என் வேலை உள்ளதை உள்ளவாறு கூறுவதே தவிர யாரையும் புகழ்வதல்ல. 'சகித்துக்கொள்', 'பொறுமையாக இரு' போன்ற கருத்துக்களையெல்லாம் மனத்திலிருந்து என்றென்றைக்குமாகத் துடைத்துவிட்ட, சுதந்திரம் பற்றிய தவறான எண்ணங்களால் ஆண்கள் தங்கள் காலடியில் கிடக்க வேண்டுமென்று எண்ணுகின்ற, தாங்கள் விரும்பாத ஒன்றை ஆண்கள் கூறிவிட்டால் அவர்கள்மீது எரிந்து விழுகின்ற, கட்டுக்கடங்காத இந்தப் பெண்கள் உலகின் சாபக்கேடாக ஆகி வருகிறார்கள். உலகத்திலுள்ள ஆண்களுள் பாதிப்பேர் இவர்களின் செயலால் மனமுடைந்து தற்கொலை செய்து கொள்ளாதது விந்தையே. இந்த முறையில் உலகம் நடக்கக் கூடாது. இந்தப் பெண்கள் நினைப்பதுபோல் வாழ்க்கை

அவ்வளவு எளியது அல்ல; அது பொருள் நிறைந்த ஒரு பெரிய விஷயம்.

மனிதனுக்கு நம்பிக்கை மட்டும் போதாது; அது அறிவில் வேரூன்றியிருக்கவும் வேண்டும். காணும் எல்லாவற்றையும் ஒருவன் நம்ப வேண்டும் என்று சொல்வது அவனைப் பைத்தியமாக்கிவிடும். ஒருமுறை எனக்கு ஒரு புத்தகம் வந்தது. அதில் உள்ள எல்லாவற்றையும் நம்ப வேண்டும் என்று கூறியது அந்தப் புத்தகம்! 'ஆன்மா என்ற ஒன்று இல்லை; ஆனால் சொர்க்கத்தில் தேவர்களும் தேவதைகளும் இருக்கிறார்கள்; மக்கள் ஒவ்வொருவர் தலையிலிருந்தும் நூல் போன்ற ஓர் ஒளிக் கிரணம் சொர்க்கத்திற்குச் செல்கிறது' என்றெல்லாம் அந்தப் புத்தகத்தில் காணப்பட்டது. அதன் ஆசிரியைக்கு இந்த விஷயங்கள் எல்லாம் எப்படித் தெரிந்ததோ என்னவோ? தெய்வீகப் பேருணர்வால் அவளது மனத்திற்கு இவையெல்லாம் விளங்கினவாம்! நானும் அவற்றை நம்ப வேண்டும் என்பது அவளது விருப்பம். நான் அதை நம்ப மறுத்தேன். உடனே அவள், 'நீ கெட்டவன். உனக்கு நல்ல கதியே இல்லை' என்று சொன்னாள். இதுதான் வெறி. ❑

# I. வகுப்புச் சொற்பொழிவுகள்

## அ. ஆரம்பநிலைப் பாடங்கள்

### 1. சாதனைகள்

பக்தியோகத்திற்கான மிகச் சிறந்த விளக்கம் பிரகலாதன் கூறிய இதுவாகத்தான் இருக்கும்: 'நிலையற்ற இந்த உலகப் பொருட்கள்மீது விவேகம் அற்றவர்கள் கொண்டுள்ள அளவற்ற பற்றினை, உன்மீது நீங்காமல் நான் வைக்கத் திருவருள் புரிவாயாக!'[1]

உயர்ந்த எதுவும் இருப்பதை அறியாத மக்கள் புலனின்பப் பொருட்கள்மீதும், செல்வம், உடை, மனைவி, மக்கள், நண்பர்கள், உடைமைகள் இவற்றின்மீதும் தீவிரமான பற்று வைத்திருப்பதை நாம் காண்கிறோம். இவற்றிடம்தான் அவர்களுக்கு எவ்வளவு பற்று! எனவேதான் மேற்கூறிய விளக்கத்தில் அந்த பக்தர், 'அந்த அளவற்ற பற்றினை, தீவிரப் பிடிப்பை உன்னிடம் கொள்வேன்' என்கிறார். இந்தப் பற்று இறைவனிடம் செலுத்தப்படும்போது பக்தி ஆகிறது.

பக்தி எதையும் அழிப்பதில்லை. நமக்கு அளிக்கப்பட்டுள்ள திறமைகள் எதுவும் வீணாக அமைந்தவை அல்ல; இவற்றின் வழியே முக்தி பெறுவதுதான் இயற்கையான நெறி என்று பக்தி கற்றுத் தருகிறது.

பக்தி நமது உணர்ச்சிகள் எதையும் அழிப்பதில்லை; அது இயற்கைக்கு எதிராகச் செல்வதில்லை; ஆனால் அந்த அதே உணர்ச்சிகளை, மனப்போக்குகளை மாற்றி, அவற்றிற்கு உயர்ந்ததும் வலிமை மிக்கதுமான ஒரு பாதையைக் காட்டுகிறது. புலனின்பப் பொருட்களில் நாம் எவ்வளவு இயல்பாகப் பற்று வைக்கிறோம்! அவ்வாறு ஆசை கொள்ளாமல் இருக்க நம்மால் முடியாது; அந்த அளவிற்கு அவை நமக்கு உண்மையாக உள்ளன. பொதுவாக, உயர்ந்த விஷயங்களை எல்லாம் உண்மையானவை என்று நாம் கருதுவதில்லை. புலன்களுக்கு

---

1. யா ப்ரீதிரவிவேகானாம் விஷயேஷ்வனபாயினீ ।
த்வாமனுஸ்மரத: ஸா மே ஹ்ருதயான்மாப ஸர்ப்பது ॥
—விஷ்ணுபுராணம், 1. 20. 19.

அப்பாற்பட்ட, புலனுலகைக் கடந்த உண்மையை ஒருவன் உணர்ந்துவிட்டானானால் அதன்பிறகும் அவனிடம் தீவிரப் பற்று இருக்கலாம். அதன் போக்கை மாற்றி, புலன்கடந்த பொருளாகிய இறைவன்மீது செலுத்த வேண்டும்—இதுதான் கருத்து. முதலில் புலனின்பப் பொருட்களில் வைக்கப்பட்ட பற்று, இறைவன்மீது வைக்கப்படும்போது அது பக்தி என்று அழைக்கப்படுகிறது.

ஸ்ரீராமானுஜரின் கருத்துப்படி ஆழ்ந்த பக்தியைப் பெறுவதற்கான சாதனைகள் இவை—

முதலில் விவேகம்—பகுத்தறிவு. குறிப்பாக மேலைநாட்டினருக்கு இது வினோதமாகத் தோன்றலாம். ஸ்ரீராமானுஜரின் கருத்துப்படி விவேகம் என்றால் 'உணவைப் பகுத்தறிவது.' உடலுக்கும் மனத்திற்கும் தேவையான சக்திகள் அனைத்தும் உணவில் அடங்கியுள்ளன. நான் உட்கொண்ட உணவு, என் உடலில் பல இடங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டு, கிரகிக்கப்பட்டு, என் உடலிற்குப் புதிய வளர்ச்சியைக் கொடுத்துள்ளது. என் உடலும் மனமும் நான் உட்கொள்ளும் உணவிலிருந்து அடிப்படையில் வேறுபட்டதல்ல. எப்படி இந்தத் தூல உலகில் நாம் காணும் சக்தியும் ஜடப்பொருளும் நமது மனமாகவும் உடலாகவும் ஆகியுள்ளனவோ, அதுபோல் உடலுக்கும், மனத்திற்கும், உணவுக்கும் இடையே உள்ள அடிப்படை வேற்றுமையெல்லாம் வெறும் தோற்றத்தில் மட்டும்தான்.

ஆகவே உணவின் தூல மூலக்கூறுகளிலிருந்து நமது எண்ணக் கருவியையும், இந்த மூலக்கூறுகளில் தங்கியுள்ள நுண் ஆற்றல்களிலிருந்து எண்ணங்களையும் நாம் உற்பத்தி செய்கிறோம். அதனால் நம் எண்ணங்களும், எண்ணக் கருவியும் நாம் உண்ணும் உணவிற்கு ஏற்பவே உருவாகின்றன என்பது தெளிவு.

குறிப்பிட்ட சிலவகை உணவுகள் மனத்தில் குறிப்பிட்ட மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. இதை நாம் அன்றாடம் காண்கிறோம். சிலவகை உணவுகள் உடலில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றன; நாளடைவில் மனத்தையும் பெருமளவிற்குப் பாதிக்கின்றன. இதை அறிந்துகொள்வது மிகவும் இன்றியமையாதது. நமது துன்பங்களில் கணிசமான அளவு, நாம் உண்ணும் உணவின் காரணமாகவே வருகின்றன.

செரிப்பதற்குக் கடினமான உணவை வயிறு புடைக்க உண்டபிறகு மனத்தைக் கட்டுப்படுத்துவது சிரமமான செயல்

என்பது நீங்கள் அறிந்ததுதான்; மனம் தொடர்ந்து ஓடிக் கொண்டே இருக்கும். உணர்ச்சிகளைத் தூண்டுகிற சிலவகை உணவுகள் உள்ளன. இவற்றை உண்டால் உங்கள் மனத்தை அடக்கவே இயலாமல் போய்விடும். அளவுக்கதிகமாக ஒயினையோ வேறு ஏதாவது போதைப் பொருட்களையோ அருந்தியவன் மனத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் போவதைக் காண்கிறான். அவனது கட்டுக்கு அடங்காமல் மனம் ஓடுகிறது.

ஸ்ரீராமானுஜரின் கூற்றுப்படி உணவிலிருந்து மூன்று விஷயங்களை நாம் தவிர்க்க வேண்டும். முதலில் ஜாதி தோஷம் அதாவது உணவுப் பொருளின் இயற்கைத் தன்மை அல்லது அதன் வகை. அதை நாம் கவனிக்க வேண்டும். உணர்ச்சியைத் தூண்டக்கூடிய உணவுகளைத் தவிர்க்க வேண்டும். உதாரணத்திற்கு இறைச்சியைச் சொல்லலாம். இயற்கையாகவே அது அசுத்தமானது. எனவே அதை உண்ணக் கூடாது. இன்னோர் உயிரைக் கொன்றுதான் இறைச்சியைப் பெறுகிறோம். உண்கின்ற அந்த ஒரு கணத்திற்கு நமக்கு இன்பம் கிடைக்கிறது. நமது இந்தக் கணநேர இன்பத்திற்காக, ஒரு பிராணி தன் உயிரையே விடவேண்டியுள்ளது. அது மட்டுமல்ல, இதன் காரணமாக மற்றவர்களையும் நாம் தீயவழியில் செலுத்த நேர்கிறது. இறைச்சி உண்ணும் ஒவ்வொருவனும், அந்த மிருகங்களைத் தானே கொல்ல வேண்டும் என்றிருந்தால் எவ்வளவோ பரவாயில்லை. ஆனால் அப்படிச் செய்யாமல், இதற்கென்றே ஒரு கூட்டத்தினரைச் சமுதாயம் உருவாக்குகிறது. பின்னர் அந்தச் செயலுக்காக அவர்களை வெறுக்கவும் செய்கிறது. இந்த நாட்டின் சட்டம் என்ன என்று எனக்குத் தெரியாது. ஆனால் இங்கிலாந்தில் கசாப்புக் கடைக்காரன் யாரும் நீதிமன்றத்தில் ஜூரியாக (Jury) ஒருக் காலும் அமர முடியாது. காரணம் இயல்பாகவே அவன் கொடிய உள்ளம் படைத்தவனாகக் கருதப்படுவதுதான்.

அவனை இப்படிக் கொடியவனாக மாற்றியது யார்? சமுதாயம்தான். நாம் மாட்டிறைச்சி, ஆட்டிறைச்சி என்று மாமிசம் உண்ணாமல் இருந்திருந்தால் அவர்கள் கசாப்புக் காரர்களாக ஆகி இருக்க மாட்டார்கள். கடின உழைப்பாளிகள் இறைச்சி உண்ணலாம்; பக்தர்களாக விரும்புபவர்களுக்கு அது உணவு அல்ல. நீங்கள் பக்தர்களாக விரும்பினால் இறைச்சியை மட்டுமின்றி, உணர்ச்சியைத் தூண்டக்கூடிய வெங்காயம், பூண்டு போன்ற உணவுகளையும், துர்நாற்றமடிக்கின்ற

உணவுப் பொருட்களையும் தவிர்க்க வேண்டும். நாள்பட்ட உணவு, அழுகிப்போன உணவுப் பண்டங்கள், காய்ந்துபோன, சாறுவற்றிய பழங்கள், ஊசிப்போன உணவுப் பொருட்கள் முதலானவற்றை விலக்க வேண்டும்.

உணவின் அடுத்த தோஷம் ஆச்ரய தோஷம். இது மேலை நாட்டினருக்கு மேலும் அதிகச் சிக்கல் கொண்டதாகத் தோன்றும். உணவு யாரிடமிருந்து பெறப்படுகிறது என்பது பற்றிய விஷயம் இது. இந்துக்களுக்கே உரிய ஒரு கொள்கை இது. ஒவ்வொரு மனிதனையும் ஒருவித ஒளி (Aura) சூழ்ந்து நிற்கிறது. அவன் எதைத் தொட்டாலும், அவனது இயல்பின் ஒரு கூறு, அதாவது அவனுடைய குணம் அந்தப் பொருளில் பதிகிறது என்பது இதன் கருத்து. ஒவ்வொரு மனிதனிடமிருந்தும், அவனது குணம் ஒரு பௌதீக சக்திபோல் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது. அவன் எதைத் தொட்டாலும் அது அவனது குணத்தால் பாதிக்கப்படுகிறது. ஆகவே சமைக்கும்போது உணவை யார் தொடுகிறார்கள் என்பதில் நாம் சற்று கவனமாக இருக்க வேண்டும். தீயவனோ ஒழுக்கமற்றவனோ அதைத் தொடக் கூடாது. பக்தனாக விரும்புபவன் தீயவர்களுடன் அமர்ந்து உண்ணக் கூடாது. ஏனெனில் அந்த உணவுமூலம் அவர்களுடைய தீய பண்புகள் இவனுக்கும் வந்து சேரும்.

அடுத்து வருவது நிமித்த தோஷம். இதைப் புரிந்து கொள்வது மிக எளிது. உணவில் அழுக்கு, தூசி போன்றவை இருக்கக் கூடாது. கடையிலிருந்து வாங்கி வந்த உணவுப் பொருளைக் கழுவாமல் அப்படியே மேஜைமீது வைக்கக் கூடாது. காரணம், ஊரில் உள்ள தூசுதும்புகள் அவ்வளவும் அதில் படிந்திருக்கும். அவற்றில் எச்சில் படாமலும் நாம் கவனமாக இருக்க வேண்டும். உதடுகளைத் தொடுவதும் பின்னர் அந்தக் கையாலேயே பிற பொருட்களைத் தொடுவதும் நான் பார்த்ததிலேயே மிகவும் அருவருக்கத்தக்க பழக்கம். சுத்தம் செய்வதற்கு ஏராளமான நீரை இறைவன் தந்திருக்கும்போது, எச்சில்படுத்தியவற்றை அப்படியே ஏன் உபயோகப்படுத்த வேண்டும்? சளிச்சவ்வு (Musculour membrane) உடலின் மிக மென்மையான பகுதியாகும். உமிழ்நீர் போன்றவற்றின் மூலம் ஒருவரது குணம் மற்றவருக்கு மிக எளிதாகப் பரவுகிறது. எனவே எச்சில் படுத்துவது குற்றம் மட்டுமல்ல; ஆபத்தும்கூட. பிறர் உண்டு எஞ்சியதையும் நாம் உண்ணக் கூடாது. உதாரணமாக, ஒருவன் கடித்துத் தின்ற ஆப்பிள் பழத்தின் மீதியை

இன்னொருவன் தின்னக் கொடுப்பது. இந்தத் தோஷங்கள் தவிர்க்கப்படும்போது உணவு தூயதாகிறது. 'தூய உணவு தூய மனத்தையும், தூய மனம் இடையீடற்ற இறைநினைவையும் தோற்றுவிக்கின்றன.'[1]

மற்றோர் உரையாசிரியர் ஸ்ரீசங்கரர் இதுபற்றி விளக்கி யுள்ளதைப் பார்ப்போம். அவர் வேறொரு கண்ணோட்டத் தில் இதைப் பார்க்கிறார். உணவைக் குறிக்கும் சம்ஸ்கிருதச் சொல்லான ஆஹாரம் என்பது, 'சேகரித்தல்' என்னும் பொரு ளைத் தருகின்ற வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியது. ஆகவே ஆஹாரம் என்ற சொல், சேகரிக்கப்பட்ட ஒரு பொருளைக் குறிக்கிறது. இதற்கு அவர் தரும் விளக்கம் என்ன? உணவு தூய தானால் மனமும் தூயதாகிறது. நாம் புலன்களுக்கு அடிமை யாகாமல் இருக்க வேண்டுமானால், சில விஷயங்களை நாம் தவிர்க்க வேண்டும் என்பதுதான் இதன் கருத்து.

பற்று என்பதை முதலில் எடுத்துக் கொள்வோம். இறை வனைத் தவிர வேறு எதிலும் மிகுந்த பற்று வைக்கக் கூடாது. எல்லாவற்றையும் பார், எல்லாவற்றையும் செய், எல்லாவற்றை யும் அறிந்துகொள், ஆனால் பற்று வைக்காதே. அளவற்ற பற்று வந்தால் மனிதன் நிதானத்தை இழக்கிறான்; எஜமானனாக இல்லாமல் அடிமை ஆகிறான். ஒரு பெண் ஆணிடம் மிகத் தீவிரமாகப் பற்று வைக்கும்போது, அவனுக்கு அடிமையாகி றாள். அல்லது அவன் அவளுக்கு அடிமையாகிறான். அடிமை யாக இருப்பதில் எந்தப் பலனும் இல்லை. ஒரு மனிதனுக்கு அடிமையாவதைவிட மேலான எவ்வளவோ விஷயங்கள் உலகில் உள்ளன. எல்லோரிடமும் அன்பு காட்டு, எல்லோருக் கும் நன்மை செய். ஆனால் அடிமையாகாதே.

முதலாவதாக, பற்று நம்மை மனித நிலையிலிருந்து தாழ்த்துகிறது. இரண்டாவது, தன்னலம் மிகுந்தவர்களாக ஆக்குகிறது. இந்த வீழ்ச்சியின் காரணமாக, நாம் நேசிப்பவர் களுக்கு நன்மை செய்வதற்காக மற்றவர்களுக்குத் தீங்கு செய்ய வும் தலைப்படுகிறோம். இந்த உலகில் இழைக்கப்பட்ட பெரும் பான்மையான கொடுமைகளும் உண்மையில் சிலர் ஒருசிலரிடம் கொண்ட பற்றுக் காரணமாகச் செய்யப்பட்டவையே. இத் தகைய பற்று எல்லா வகையிலும் தவிர்க்கப்பட வேண்டும்.

---

1. ஆஹார சுத்தௌ ஸத்வசுத்தி: ஸத்வ சுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி: |
—சாந்தோக்கிய உபநிடதம், 7. 26. 2.

நற்செயல்களில் பற்று வைக்கலாம். அனைவரையும் நேசிக்க வேண்டும்.

இனி பொறாமை என்பதைப்பற்றிப் பார்ப்போம். புலனின்பப் பொருட்களுக்காக நாம் பொறாமை கொள்ளக் கூடாது. எல்லா தீமைகளுக்கும் அடிப்படைக் காரணமாக இருப்பது பொறாமை. இதை வெற்றிகொள்வதும் எளிதல்ல.

அடுத்தது மனமயக்கம் (Delusion). நாம் எப்போதும் ஒன்றை மற்றொன்றாக எண்ணியே செயல்படுகிறோம். அதன் விளைவாக நமக்கு நாமே துன்பத்தை வரவழைத்துக் கொள்கிறோம். தீயதை நல்லதாக எண்ணுகிறோம். நரம்பு களுக்குக் கணநேரம் கிளர்ச்சி ஊட்டக்கூடியதை மிக நல்ல தாகக் கருதி, அதில் ஆழ்ந்து மூழ்குகிறோம். விளைவாக நாம் பெறுவது அடி. ஆனால் தவறை உணரும்போது காலம் கடந்து விடுகிறது. ஒவ்வொரு நாளும் இப்படி ஏதாவதொரு தவறைச் செய்கிறோம். சிலவேளைகளில் வாழ்நாள் முழுவதும் இவ்வாறே தொடர்கிறோம். பொருட்களிடம் அளவுகடந்த பற்று வைக் காமல் பொறாமையோ மனமயக்கமோ இல்லாமல் புலன்கள் செயல்படுமானால், அத்தகைய செயல்தான் 'தூய உணவு' என்று சங்கரர் பொருள் கொள்கிறார். உணவு தூயதாக இருக்கு மானால் மனம் பற்றின்றி, பொறாமையின்றி, மனமயக்கமின்றிப் பொருட்களுடன் தொடர்புகொள்ள முடியும். அப்போது மனமும் தூய்மை அடைகிறது. இதன் காரணமாக இடைவிடாத இறைநினைவு மனத்தில் எழுகிறது.

சங்கரரின் விளக்கம் மிகச் சிறந்ததாகத் தோன்றுவது இயல்பே. ஆனால் அத்துடன் ராமானுஜரின் விளக்கத்தையும் ஏற்க வேண்டும் என்று நான் கூறுகிறேன். உணவில் கவனம் செலுத்தும்போது மற்றவை தாமாகவே அமைகின்றன. மனம் எஜமானன் என்பது உண்மைதான். ஆனால் புலன்களுக்கு அடிமைப்படாதவர்கள் மிகச் சிலரே. நாம் அனைவரும் ஜடப் பொருளுக்குக் கட்டுப்பட்டவர்கள். இந்தக் கட்டுண்ட நிலை நீடிக்கும்வரை நாம் தூலப் பொருட்களின் உதவியை நாடத்தான் வேண்டும். போதிய வலிமை பெற்றபின் நமக்குப் பிடித்த எதையும் உண்ணலாம்.

ஆகவே உண்பதையும் பருகுவதையும் பொறுத்த மட்டில் நாம் ஸ்ரீராமானுஜரைப் பின்பற்ற வேண்டும். அதே வேளையில் மனத்திற்கு அளிக்கப்படும் உணவைப் பற்றியும் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். நம் உடலுக்கான

உணவைப்பற்றி எச்சரிக்கையுடன் இருப்பது மிக எளிது. அதே நேரத்தில் மனத்தின் செயல்பாடும் கூடவே நடக்க வேண்டும். அப்போது நமது ஆன்மீக வலிமை மெல்லமெல்ல வலுப் பெறும். அதன் விளைவாக நமக்கு உடல்மீதுள்ள பற்றுக் குறையும். பிறகு எந்த உணவும் நம்மைப் பாதிக்காத ஒரு காலம் வரும்.

மிக உயர்ந்த லட்சியத்தைத் தாவிப் பிடிக்கவே ஒவ் வொருவரும் விரும்புகின்றனர். இது ஒரு பேராபத்தாகும். ஆனால் தாவிக் குதிப்பது, லட்சியத்தை அடையும் வழியல் லவே! தாவிக் குதித்தால் கீழே விழுந்து கால்களை உடைத்துக் கொள்வதுதான் மிஞ்சும். நாம் கட்டுண்டு கிடக்கிறோம், சங்கிலி களை மெதுவாகத்தான் உடைக்க வேண்டும். இதுதான் விவேகம், ‘உணவைப் பகுத்தறிவது’.

அடுத்தது விமோகம், அதாவது சுதந்திரம். கடவுளை நேசிக்க விரும்புபவன் தீவிர ஆசைகளைவிட வேண்டும். கடவுளைத் தவிர வேறு எதற்கும் ஆசைப்படாதே. உயர் உலகை அடைவதற்கு உதவி செய்யும்வரை இந்த உலகம் நல்லதுதான். உயர் பொருட்களை அடைய உதவும்வரை புலன் நுகர்ச்சிப் பொருட்களும் நல்லவையே. இந்த உலகம் ஓர் இலக்கிற்கு இட்டுச் செல்கின்ற பாதையே தவிர, அதுவே இலக்கு அல்ல என்பதை நாம் எப்போதும் மறந்துவிடுகிறோம். இதுவே நம் முடிவிடமானால், நாம் உடலுடன் இந்த உலகிலேயே அமரர்களாக விளங்க வேண்டும், நாம் சாகக் கூடாது. ஆனால் ஒவ்வொரு கணமும் நம்மைச் சுற்றி மக்கள் இறப்பதைக் காண் கிறோம். இருந்தும் முட்டாள்தனமாக நாம் மட்டும் சாக மாட்டோம் என்று நினைக்கிறோம். உறுதியான இந்த முடிவு காரணமாக இந்த வாழ்க்கைதான் லட்சியம் என்று நினைக்கத் தொடங்குகிறோம்.

நம்மில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேரின் விஷயம் இப்படித்தான். இந்த எண்ணத்தை உடனே விட்டு விட வேண்டும். நம்மைப் பரிபூரணமாக்க உதவுகின்ற ஒரு கருவியாக இருக்கும் வரையில் இந்த உலகம் நல்லதே; அப்படி இல்லாமல் போகின்ற அந்தக் கணமே அது தீயது, முழுக்க முழுக்கத் தீயது. நாம் முன்னேற உதவும்வரை மனைவி, மக்கள், கணவன், பணம், செல்வம், கல்வி எல்லாம் நல்லனவே. முன் னேற்றம் தடைப்பட்டால் அவை அனைத்தும் தீயவை. நாம் கடவுளை நோக்கி முன்னேற மனைவி உதவி செய்தால் அவள்

நல்ல மனைவி. கணவன் விஷயமும், குழந்தை விஷயமும் அவ்வாறேதான். பணமும் பிறருக்கு நன்மை செய்ய உதவினால் அதற்கு ஏதோ மதிப்பு உள்ளது. இல்லாவிடில் அது வெறும் தீமைக் குவியல் மட்டுமே. அதை எவ்வளவு சீக்கிரம் உதறித் தள்ளுகிறோமோ, அவ்வளவுக்கு நல்லது.

அடுத்து வருவது அப்யாசம், அதாவது பயிற்சி. மனம் எப்பொழுதும் ஆண்டவனையே நாட வேண்டும். வேறு எதுவும் மனத்திற்குள் புக உரிமையில்லை. வெகுகடினமான காரியம் என்றாலும் மனம் எப்போதும் இறைவனையே நினைக்க வேண்டும். இடைவிடாத பயிற்சியினால் இதைச் செய்ய முடியும். நமது இன்றைய நிலை பழைய பயிற்சியினால் ஏற் பட்டது. இப்போதைய பயிற்சி எதிர்காலத்தில் நாம் எப்படி இருக்கப் போகிறோம் என்பதைத் தீர்மானிக்கும். ஆகவே வேறு விதமான பயிற்சியைக் கைக்கொள்ளுங்கள். வாழ்க்கையை ஒரு பாதை வழியாகக் கொண்டு சென்றது நம்மை இந்த நிலைக்குக் கொண்டு வந்துள்ளது. ஆகவே வேறு வழியாகத் திருப்பி, இயன்ற அளவு விரைவாக இதிலிருந்து வெளியேறுங்கள். புலன்களை நினைத்து நினைத்து, இந்தக் கணநேர வாழ்வு நிலைக்கு வந்துள்ளோம்—ஒரு கணம் அழுவது, மறுகணம் மகிழ்வது, ஒவ்வொருவருடையவும் ஒவ்வொன்றினுடையவும் தயவை எதிர்பார்த்து வாழ்வது, ஒவ்வொரு சொல்லுக்கும் அடிமையாவது, ஒருநேர உணவுக்குக்கூட அடிமையாவது. இது அவமானத்திற்குரிய விஷயம். இதில் நம்மை நாம் ஆன்மாக்கள் என்று வேறு சொல்லிக் கொள்கிறோம். இது வெறும் பேச்சே தவிர, இதற்கு எந்தப் பொருளும் இல்லை. நாம் உலகின் அடிமைகள். புலன்களை நாடிச் செல்வதால்தான் நம்மை நாம் இந்தக் கீழ்நிலைக்கு ஆளாக்கிக் கொண்டுள்ளோம்.

ஆகவே வேறு வழியில் செல்லுங்கள். கடவுளை நினை யுங்கள். உடல் இன்பத்தையோ மன இன்பத்தையோ எதையும் நினைக்காமல் மனம் இறைவனை மட்டுமே நினைக்கட்டும். வேறு எதையாவது நினைக்க முயன்றால், அவற்றை விட்டுவிட்டு இறைவனை மட்டும் நினைக்கும் வண்ணம் அதற்கு நல்ல அடி கொடுங்கள். ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொரு பாத்திரத் திற்கு ஊற்றப்படுகின்ற எண்ணெய் இடைவிடாது ஒரே தாரை யாக வழிவதுபோல், தூரத்திலிருந்து வருகின்ற மணி ஓசை காதில் தொடர்ந்து ஒலிப்பதுபோல் மனமும் இடையீடற்று தொடர்ந்து இறைவனை நினைக்க வேண்டும்.

மனத்திற்குப் பயிற்சி அளிப்பது மட்டும் போதாது; புலன்களுக்கும் பயிற்சி அளிக்க வேண்டும். பயனற்ற விஷயங்களைக் கேட்பதை விட்டு, இறைவனைப்பற்றிய விஷயங்களைக் கேட்க வேண்டும். முட்டாள்தனமான வார்த்தைகளைப் பேசுவதை விட்டு, இறைவனைப்பற்றிப் பேச வேண்டும். உபயோகமற்ற புத்தகங்களைப் படிப்பதை விட்டு, இறைவனைப்பற்றிக் கூறும் நல்ல புத்தகங்களைப் படிக்க வேண்டும்.

இறைவனைத் தொடர்ந்து ஞாபகம் வைத்துக்கொள்ளும் பயிற்சிக்கு மிகச் சிறந்த வகையில் உதவியாக இருப்பது இசை என்று சொல்லலாம். சிறந்த பக்தி ஆச்சாரியரான நாரதரிடம் பகவான் சொன்னார்: 'நான் விண்ணுலகில் வசிக்கவில்லை; யோகிகளின் இதயத்திலும் இல்லை. என் பக்தர்கள் எங்கே என் புகழ் பாடுகிறார்களோ அங்குதான் இருக்கிறேன்.'[1] மனித உள்ளத்தின்மீது இசைக்கு அவ்வளவு ஆதிக்கம் இருக்கிறது! ஒரு நொடியில் அது மனத்தை ஒருமுகப்படுத்திவிடுகிறது. தங்கள் மனத்தை ஒரு நொடிகூட அலைபாயாமல் வைக்க முடியாத மந்த புத்தியுள்ள, அறிவற்ற, இழிந்த, மிருக இயல்பு உடைய மனிதர்கள்கூட இனிய இசையைக் கேட்டால் உடனே மயங்கிவிடுகிறார்கள். சிங்கம், நாய், பூனை, பாம்பு போன்ற மிருகங்கள்கூட இசையைக் கேட்டு மயங்குகின்றன.

அடுத்தது கிரியை, செயல்; அதாவது மற்றவர்களுக்கு நன்மை செய்தல். சுயநலம் படைத்தவனுக்குக் கடவுள் ஞாபகம் வராது. நாம் நம்மை மறந்து பிறருக்கு நன்மை செய்யும் அளவிற்கு நமது இதயம் பரிசுத்தமாகும்; எம்பெருமான் அங்கு எழுந்தருள்வார்.

நம் சாஸ்திரங்கள் ஐந்து யஜ்ஞங்களை அதாவது ஐந்து வழிபாடுகளைப்பற்றிக் கூறுகின்றன.

முதலாவது படிப்பு (ரிஷி யஜ்ஞம்). புனிதமான விஷயங்களைத் தினமும் படிக்க வேண்டும். இரண்டாவது வழிபாடு (தேவ யஜ்ஞம்). கடவுளையோ தேவதைகளையோ, மகான்களையோ வழிபடுவது. மூன்றாவது நம் மூதாதையர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை (பித்ரு யஜ்ஞம்). நான்காவது மனிதர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை (ந்ரு யஜ்ஞம்). ஏழைகளுக்கோ தேவைப்படுபவர்களுக்கோ வீடு கட்டித்தராமல் தான் மட்டும் ஒரு வீட்டில் வசிக்க மனிதனுக்கு உரிமையில்லை.

---

1. நாஹம் திஷ்ட்டாமி வைகுண்டே யோகினாம் ஹ்ருதயே ச।
மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்ட்டாமி நாரத ॥

இல்லறத்தானின் வீடு எல்லோருக்கும், அதாவது ஏழை களுக்கும் துன்பப்படுபவர்களுக்கும் திறந்திருக்க வேண்டும். அப்போதுதான் அவன் உண்மையான இல்லறத்தானாக இருக்க முடியும். உலகில் தானும் தன் மனைவியும் இருவர் மட்டுமே வாழ்கிறோம் என்ற எண்ணத்துடன் தங்கள் மகிழ்ச்சிக்காக மட்டுமே வீட்டைக் கட்டிக் கொள்பவன் ஒருநாளும் பக்தனாக மாட்டான். அது மிகப்பெரிய தன்னலச் செயல். தனக்கு மட்டு மாகச் சமையல் செய்ய யாருக்கும் உரிமையில்லை. மற்றவர் களுக்குக் கொடுத்தது போக எஞ்சியதையே ஒருவன் உண்ண வேண்டும். மாம்பழம் போன்ற பருவகாலப் பழங்கள் முதன் முதலாகக் கடைகளுக்கு விற்பனைக்கு வந்ததும், சாதாரணமாக மக்கள் முதலில் கொஞ்சம் வாங்கி ஏழைகளுக்குக் கொடுத்து விட்டுப் பிறகே தங்களுக்காக வாங்குவது இந்தியாவில் பழக்கம். இந்த நாட்டிலும் பின்பற்றுவதற்கான ஒரு நல்ல பழக்கம் அது. இந்தப் பழக்கம் ஒருவனைப் பிறருக்காக வாழச் செய்கிறது. அத்துடன், அவனது மனைவிமக்களையும் அதே பழக்கத்திற்குக் கொண்டு வருகிறது. மரங்களில் முதலில் பழுக்கும் பழங் களை ஆண்டவனுக்குச் சமர்ப்பிப்பது பழங்கால ஹீப்ருக் களின் வழக்கம். எதிலும் முதல் பகுதி ஏழைகளுக்குக் கொடுக்கப் பட வேண்டும்; எஞ்சியதைப் பெறத்தான் நமக்கு உரிமையுண்டு. ஏழைகள் இறைவனின் பிரதிநிதிகள், துன்பப்படுகின்ற ஒவ்வொருவனும் இறைவனின் பிரதிநிதி. பிறருக்குக் கொடுக்கா மல் தானே உண்டு மகிழ்பவன் பாவம் செய்தவனாகிறான்.

ஐந்தாவது, மிருகங்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை (பூத யஜ்ஞம்). மனிதனுக்காகவே எல்லா மிருகங்களும் படைக் கப்பட்டுள்ளன, அவற்றை அவன் கொல்லலாம், எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று கூறு வது காட்டுமிராண்டித்தனமானது. அது சாத்தானின் வேதமே தவிர, ஆண்டவனின் கருத்து அல்ல. அவற்றின் உடலின் ஒரு பாகத்தில் நரம்புகள் அசைகிறதா, இல்லையா என்று அறிவதற் காக வெட்டிப் பார்ப்பது எத்தனை கொடூரமானது! சற்று எண்ணிப் பாருங்கள்! எங்களை ஆளும் அன்னிய அரசு இவற்றை எவ்வளவுதான் ஆதரித்தாலும் இந்துக்கள் இவற் றிற்குச் சம்மதிக்கவில்லை என்பதில் நான் மிகவும் மகிழ்கிறேன். நாம் உண்ணும் உணவின் ஒரு பகுதி மிருகங்களுக்கும் சொந்த மானது. அவற்றிற்குத் தினந்தோறும் உணவு தர வேண்டும். நொண்டி அல்லது குருடாக உள்ள குதிரை, பசு, நாய், பூனை

போன்ற மிருகங்களுக்கு இந்த நாட்டின் ஒவ்வொரு நகரத்திலும் மருத்துவமனைகள் இருக்க வேண்டும். அவற்றிற்கு உணவளித் துக் காப்பாற்ற வேண்டும்.

இதற்கு அடுத்தபடியாக கல்யாணம் அதாவது தூய்மை. இதில் பல விஷயங்கள் அடங்கியுள்ளன.

முதலாவதாக ஸத்யம்—உண்மை. உண்மையானவனிடம் தான் உண்மையின் உருவான இறைவன் வருகிறார். எண்ணம், சொல், செயல் இவை அனைத்திலும் உண்மையாக இருக்க வேண்டும்.

அடுத்தது ஆர்ஜவம் அதாவது நேர்மை. இந்தச் சொல் லுக்கு, இதயத்தில் எளிமையாக இருப்பது என்று பொருள். அதாவது உள்ளத்தில் சூதுவாதின்றி இருப்பது; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாமல் இருப்பது. சிறிது கடுமையாக இருக்க நேரிட்டாலும் தவறில்லை, நேர்மை வழியில் செல் லுங்கள்; கோணலான வழியில் போக வேண்டாம்.

அடுத்து வருவது தயை—இரக்கம், கருணை; பின்னர் அஹிம்சை—எண்ணம், சொல், செயல் இவற்றால் யாருக்கும் தீங்கு செய்யாமல் இருப்பது.

அடுத்து வருவது தானம் அதாவது கொடை. கொடையை விடச் சிறந்த பண்பு வேறில்லை. யார் கைநீட்டி வாங்கு கிறானோ, தனக்கென்றே பெற்றுக் கொள்கிறானோ அவன் மனிதருள் கடைப்பட்டவன். யாருடைய கை வெளியில் நீண்டு பிறருக்குக் கொடுக்கிறதோ, அவன் எல்லோரிலும் உயர்ந்தவன். கொடுப்பதற்கென்றுதான் கை படைக்கப்பட்டது. நீ பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை, உன் உணவைக் கடைசிக் கவளம் வரை பிறருக்குக் கொடு. பிறருக்குக் கொடுப்பதால் நீ பட்டினி கிடந்து இறந்தால் உனக்கு உடனே முக்தி கிடைக்கும். அந்தக் கணமே நீ பரிபூரணன் ஆவாய், கடவுள் ஆவாய்.

குழந்தைகுட்டிகள் புடைசூழ உள்ளவர்கள் ஏற்கனவே கட்டுண்டவர்கள். அவர்களால் யாருக்கும் ஒன்றும் கொடுக்க முடியாது. குழந்தைகள்மூலம் கிடைக்கும் இன்பத்தை அனு பவிக்க விரும்புகிறார்கள் அவர்கள். அதற்கான விலையை அவர்கள் கொடுத்துத்தான் ஆக வேண்டும். உலகில் குழந்தை களுக்கா பஞ்சம்? 'எனக்கென்று ஒரு குழந்தை வேண்டும்' என்று சொல்வது முழுக்கமுழுக்கத் தன்னலம்.[1]

1. கல்யாணம், அதாவது தூய்மை என்ற பகுதியில் அனபித்யம் என்பதையும் சேர்க்கிறார் ராமானுஜர். பிறர் பொருளை விரும்பாதிருப்பது, ஆகாயக்

அடுத்தது அனவஸாதம்—சோர்வற்று இருத்தல், அதாவது உற்சாகமாக இருத்தல். சோர்ந்துபோய் இருப்பது வேறு எதுவாகவும் இருக்கலாம்; அது ஒருபோதும் ஆன்மீகம் ஆகாது.

பிரார்த்தனைமூலம் இறைவனை நெருங்குவதைவிட, உற்சாகத்தாலும் புன்முறுவலாலும் இன்னும் அதிகமாக நெருங்கிச் செல்ல முடியும். சோர்ந்திருக்கும் சோம்பல் மனத்தால் எப்படி அன்பு காட்ட இயலும்? அவர்கள் அன்பைப்பற்றிப் பேசினால் அது பொய்யே தவிர வேறில்லை. அவர்கள் மற்றவர்களைப் புண்படுத்தவே விரும்புகிறார்கள். கொள்கைவெறியர்களை நினைத்துப் பாருங்கள். அவர்கள் தங்கள் முகங்களை எவ்வளவு முடியுமோ, அவ்வளவு சோகமாக வைத்துக் கொள்கிறார்கள். சொல்லிலும் செயலிலும் மற்றவர்களுடன் சண்டையிடுவதுதான் அவர்களின் மதம். அவர்கள் எப்படி இருந்தார்கள் என்று வரலாற்றில் பாருங்கள். இப்பொழுது அவர்களை அவ்வாறே அவர்கள் விருப்பப்படி நடக்க அனுமதித்தால் என்ன செய்வார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்! அதன் மூலமாகத் தங்களுக்கு அதிகாரம் கிடைக்குமென்றால் அவர்கள் நாளையே உலகம் முழுவதையும் ரத்த வெள்ளத்தில் ஆழ்த்துவார்கள். ஏனெனில் அத்தகைய இருளடைந்த நிலையே அவர்களுடைய கடவுள். அத்தகைய பயங்கர இருளை வணங்குவதாலும், தங்கள் முகங்களைச் சோகமாக வைத்துக்கொள்வதாலும் அவர்களுடைய நெஞ்சங்களில் அன்பின் சுவடே இல்லாமல் போய்விடுகிறது. யார்மீதும் அவர்கள் இரக்கம் காட்டுவதில்லை. ஆகவே எப்போதும் சோகமாக இருப்பவன் ஒருநாளும் இறைவனை அணுக மாட்டான். 'என் சோகம் சொல்லி மாளாது' என்று சொல்வது ஆன்மீகம் ஆகாது, அது வெறும் காட்டுமிராண்டித்தனம். ஒவ்வொருவனுக்கும் சுமக்க அவனது சொந்தச் சுமை உள்ளது. நீங்கள் சோகமாக இருந்தால், மகிழ்ச்சியாக இருக்க முயலுங்கள். உங்கள் துக்கத்தை வெற்றிகொள்ள முயலுங்கள்.

பலவீனர்களால் ஆண்டவனை அடைய முடியாது. ஒருபோதும் பலவீனர்களாக இருக்காதீர்கள். வலிமை படைத்தவர்களாக இருக்க வேண்டும். உங்களுள் அளவற்ற பலம்

---

கோட்டை கட்டாதிருப்பது, பிறர் செய்த தீமையை எண்ணியெண்ணி உழலாதிருப்பது—இதுவே அனபித்யம்.

இருக்கிறது. இல்லாவிடில் எப்படி எதனையும் வெற்றிகொள்ள முடியும்? எப்படிக் கடவுளை நெருங்க முடியும்?

அதேசமயம் அளவுக்கு மீறிய களிப்பையும் (உத்தர்ஷம்) தவிர்க்க வேண்டும். மிதமிஞ்சிய அந்த நிலையில் இருக்கும் மனத்தில் அமைதி தோன்ற முடியாது; அது சஞ்சல நிலையிலேயே இருக்கும். மிதமிஞ்சிய களிப்பை எப்போதும் தொடர்ந்துவருவது துன்பம். கண்ணீர்த் துளிகளும் சிரிப் பொலியும் மாறிமாறி வருபவை. மக்கள் பெரும்பாலும் மனத்தின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்கு ஓடு கின்றனர். மனம் மகிழ்ச்சியுடன் உற்சாகத்துடன் விளங்கட்டும். அதேவேளையில் அமைதியாக இருக்கட்டும். மிதமிஞ்சிய நிலை யில் களிக்கும்படி ஒருபோதும் மனத்தை விட்டுவிடாதீர்கள். ஏனெனில் ஒவ்வொரு மிதமிஞ்சிய நிலைக்கும் ஓர் எதிர்நிலை உண்டு.

ராமானுஜரின் கருத்துப்படி இவைதான் பக்திநெறிக் கான சாதனைகள். ❦

## 2. முதற்படிகள்

இறைவனிடம் கொள்ளும் ஆழ்ந்த அன்புதான் பக்தி என்று பக்தி ஆச்சாரியர்கள் பக்தியை விளக்குகின்றனர். எதற்காக ஒருவன் கடவுளை நேசிக்க வேண்டும் என்ற கேள்விக்குப் பதில் கண்டுபிடித்தாக வேண்டும். இதை நாம் அறிந்துகொள்ளாத வரையில், இந்த விஷயத்தைப்பற்றி எதுவுமே புரிந்துகொள்ள முடியாது. ஒன்றுக்கொன்று முற்றிலும் மாறுபட்ட இரண்டு லட்சியங்கள் வாழ்க்கையில் உள்ளன. எந்த நாட்டைச் சேர்ந்த வர்களாயினும், எந்த !மதத்தைப் பின்பற்றுபவர்கள் ஆனாலும் எல்லோரும் அறிந்த ஓர் உண்மை, மனிதன் உடல் மட்டுமல்ல, ஆன்மாவும்கூட என்பதாகும். ஆனால் மானிட வாழ்க்கையின் குறிக்கோள் என்ன என்பதில் பல்வேறு கருத்துவேறுபாடுகள் உள்ளன.

மேலை நாட்டினர் பொதுவாக மனிதனின் உடல் விஷயங்களில் அதிக அக்கறை காட்டினர். இந்தியாவின் பக்தி ஆச்சாரியர்கள் அவனது ஆன்மாவிற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். இந்த வேறுபாடு கீழ்த்திசைக்கும் மேல்திசைக்கும் இயல்பாக அமைந்துள்ளதுபோல் தோன்றுகிறது. அன்றாடப் பேச்சு வார்த்தைகளிலும் இதையே நாம் காண்கிறோம். இங்கிலாந்தில் மரணத்தைக் குறிப்பிடும்போது, அவன் உயிரைத் துறக்கிறான் என்று சொல்கிறார்கள். இந்தியாவிலோ, அவன் உடலைத் துறக்கிறான் என்று குறிப்பிடுகின்றனர். மனிதன் என்பவன் உடல், அதில் ஆன்மா உள்ளது என்பது முதல் கருத்து. மனிதன் ஆன்மா, அந்த ஆன்மாவிற்கு உடல் உண்டு என்பது இரண்டாவது கருத்து.

இதிலிருந்து சிக்கலான பிரச்சினைகள் பல எழுகின்றன. மனிதன் ஓர் உடல், அதில் உயிர் உள்ளது என்ற கொள்கையினர் உடலுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றனர். மனிதன் ஏன் வாழ்கிறான் என்று அவர்களைக் கேட்டால், உடைமைகள், சொத்து, உறவு முதலியவற்றால் இன்பம் பெறுவதற்கே என்று அவர்கள் பதில் சொல்வார்கள்.

இதைவிட மேலானது ஒன்று உள்ளது என்பதைச் சொன்னாலும் மனிதன் புரிந்துகொள்ள மாட்டான். அதனை அவனால் கனவுகூடக் காண முடியாது. இந்த இன்ப நுகர்ச்சியின் தொடர்ச்சியே எதிர்கால வாழ்க்கை என்பதுதான் அவனது கருத்து. அந்த இன்பங்களை அனுபவித்தவாறு எப்போதும் இங்கேயே தொடர்ந்து இருக்க முடியவில்லை, உலகை விட்டுப் பிரிய வேண்டியிருக்கிறதே என்று அவன் மிகவும் வருந்துகிறான். எனவே எப்படியாவது இதே இன்பம் தொடர்ந்து கிடைக்கக் கூடிய ஓரிடத்திற்கு தான் போகக்கூடுமென்று கருதுகிறான். அங்கு இதே இன்பங்கள், இதே புலன்நுகர்ச்சிகள் இன்னும் அதிகமாக உயர்ந்த அளவில் தனக்குக் கிடைக்கும் என்று நம்புகிறான். இந்த இலக்கை அடையக் கடவுள்தான் வழி. எனவே அவரை வழிபட விரும்புகிறான். அவனுடைய வாழ்க்கையின் லட்சியம் புலனின்பம்தான். இந்த இன்பங்களை நீண்டகாலக் குத்தகைக்குத் தருபவர் இறைவன் என்று நம்புவதால் அவரை வழிபடுகிறான்.

ஆனால் வாழ்க்கையின் லட்சியம் இறைவன். அவருக்கு அப்பாற்பட்டது வேறு ஒன்றுமில்லை. இப்பொழுது அனுபவிக்கும் புலனின்பங்கள், எதிர்காலத்தில் மேலான ஒன்றைப் பெறுவோம் என்ற நோக்குடன் தற்காலிகமாக அனுபவித்துக் கொண்டிருப்பவையே—இதுவே இந்தியர்களின் கருத்து. அது மட்டுமல்ல; இந்தப் புலனின்பங்களே எல்லாம் என்று எண்ணினால், அது மிகவும் பயங்கரமானது, அழிவிற்கே வழிவகுப்பது ஆகும். புலனின்ப நாட்டம் குறையும் அளவிற்கு மனிதனின் வாழ்க்கைத் தரம் உயர்கிறது என்பதை நாம் அன்றாட வாழ்க்கையில் காண்கிறோம். ஒரு நாய் உண்ணும்போது கவனியுங்கள், அது உணவில் மகிழ்ச்சியடைவதுபோல் எந்த மனிதனும் அடைவதில்லை. இன்பத்தோடும் இடையிடையே உறுமிக்கொண்டும் தின்னும் பன்றியைப் பாருங்கள். அவ்வளவு திருப்தியோடு உண்கிற எந்த மனிதனும் இவ்வுலகில் பிறக்கவில்லை. தாழ்ந்த நிலையிலுள்ள மிருகங்களுடைய கேட்கும் ஆற்றலையும், காணும் ஆற்றலையும் நினைத்துப் பாருங்கள். அவற்றின் புலன் ஆற்றல்கள் மிகச் சிறப்பாக வளர்ந்துள்ளன. அவற்றின் புலனின்பம் வரம்பு கடந்தது. இன்பத்தினாலும் மகிழ்ச்சியினாலும் அவை பித்தேறியவை ஆகிவிடுகின்றன. மனிதன் தாழ்ந்த நிலையில் இருக்கும் அளவிற்கு புலனின்பத்தில் இன்பம் காண்கிறான். மேலே உயரஉயர, பகுத்தறிவும் அன்பும் அவனது

வாழ்க்கையின் குறிக்கோளாகின்றன. இவற்றின் வளர்ச்சிக்கு ஏற்ப அவனது புலனின்ப நாட்டம் குறைகிறது.

இதை ஓர் உதாரணம் கூறி விளக்குகிறேன். ஒருவனுக்குக் குறிப்பிட்ட அளவு சக்தி கொடுக்கப்பட்டுள்ளது என்று வைத்துக் கொள்வோம். அதை அவன் உடல், உள்ளம், ஆன்மா இவற்றிற்காகச் செலவு செய்யலாம். இவற்றுள் ஏதாவது ஒன்றிற்கு எவ்வளவு சக்தியைச் செலவிடுவானோ, அந்த அளவிற்குக் குறைவாக மற்றவற்றிற்குச் செலவிட வேண்டிவரும். அப்படித் தானே! அறிவற்ற காட்டுமிராண்டி மக்களுக்கு நாகரீக மக்களை விடப் புலனின்ப நாட்டத்திற்கான ஆற்றல்கள் மிக நுட்ப மானவை. ஒரு சமுதாயம் நாகரீகம் அடைய அடைய, அதன் மக்களுடைய நரம்பு அமைப்புகள் நுட்பமாகின்றன. அதே வேளையில் அவர்கள் உடல்ரீதியாகப் பலவீனம் அடை கிறார்கள் என்பதை வரலாற்றிலிருந்து நாம் அறிகிறோம். ஒரு காட்டுமிராண்டி இனத்திற்கு நாகரீகம் அளித்துப் பாருங்கள், அப்போது இந்த உண்மையைக் காண்பீர்கள். இன்னொரு காட்டுமிராண்டி இனம் தோன்றி, நாகரீகம் பெற்ற இந்த இனத்தை வெற்றி கொண்டுவிடும். காட்டுமிராண்டிகளே ஏறக் குறைய எப்போதும் வெற்றி பெறுகிறார்கள்.

எனவே எந்நேரமும் புலனின்பத்தையே நாடினால் நாம் மிருகநிலைக்கு இழிந்துவிடுவோம். புலனின்பங்களை இன்னும் அதிகமாக, இன்னும் தீவிரமாக அனுபவிக்கத்தக்க ஓரிடத்திற்குப் போக வேண்டுமென்று ஒருவன் கேட்கும்போது, தான் உண்மை யில் என்ன கேட்கிறோம் என்பது புரியாமல் அவன் கேட் கிறான். மிருகநிலைக்குச் சென்றால்தான் அதைப் பெற முடியும் என்பதை அவன் உணர்வதில்லை. தான் அசுத்தமான பொருளை உண்பதாக ஒருபோதும் பன்றி நினைப்பதில்லை. பன்றிக்கு அதுதான் சொர்க்கம். மிகப் பெரிய தேவதை வந்தால்கூடப் பன்றி ஏறெடுத்தும் பார்க்காது. அதன் வாழ்க்கையே உண்பதில் தான் உள்ளது.

புலனின்பம் நிறைந்த ஒரு சொர்க்கத்தை விரும்பும் மனிதனின் நிலைமையும் இத்தகையதே. அவர்கள் பன்றிகள் போல் சிற்றின்பச் சேற்றில் புரண்டுகொண்டு அதற்கு அப்பால் எதையும் பார்க்க முடியாத நிலையில் உள்ளனர். அவர்களுக்கு வேண்டுவதெல்லாம் புலனின்பம்தான். அதை இழந்தால் அவர் களுக்குச் சொர்க்கத்தையே இழந்தது போல்தான். பக்தன் என்ற வார்த்தை உண்மையில் எதைச் சுட்டி நிற்கிறதோ,

அத்தகைய மேலான பக்தர்கள் ஆக இவர்களால் ஒருபோதும் முடியாது. இவர்களால் ஆண்டவனிடம் ஒருபோதும் உண்மை யான அன்பு வைக்க முடியாது. ஆனால் சிறிது காலம் இந்தக் கீழான லட்சியத்தைப் பின்பற்றி வரும்போது நாளடைவில் மாற்றம் ஏற்படவே செய்யும். தனக்குத் தெரியாத உயர்ந்த ஒன்று உள்ளது என்பதை ஒவ்வொருவனும் உணரவே செய் வான். வாழ்க்கையின்மீதும், புலனின்பப் பொருட்களின்மீதும் அவனுக்குள்ள பற்று படிப்படியாக மறையும்.

நான் சிறுவனாக இருந்தபோது பள்ளியில் ஒருநாள் மிட்டாயோ அல்லது வேறு எதற்காகவோ என் பள்ளித் தோழன் ஒருவனோடு சண்டையிட நேர்ந்தது. அவன் நல்ல பலசாலி. என் கையிலிருந்ததைப் பிடுங்கிக் கொண்டான். அப் போது எனக்கிருந்த உணர்ச்சி இன்னும் நினைவில் இருக்கிறது. 'உலகிலேயே மிகக் கொடியவன் இவன்தான்' என்று நினைத் தேன் நான். நானும் போதிய அளவு பலசாலியானதும் அவனைத் தண்டிக்க வேண்டும் என்று முடிவுசெய்து கொண்டேன். அவன் செய்த குற்றத்திற்கு ஈடாக என்ன தண்டனை கொடுப்பது என்று என்னால் முடிவுசெய்ய முடியாத அளவிற்கு அவனது குற்றம் அன்று எனக்குப் பெரிதாகப் பட்டது. பிறகு நாங்கள் இருவருமே வளர்ந்து பெரியவர்கள் ஆனோம். இப்போது நெருங்கிய நண்பர்களாக இருக்கிறோம்.

ஆகவே உண்பது, உறங்குவது, இன்னும் இவைபோன்ற புலனின்பங்கள்தான் எல்லாம் என்று கருதுகின்ற வெறும் குழந்தைகளே உலகம் முழுவதும் உள்ளனர். அந்தப் புலனின் பங்களில் சிறு துளியை இழக்க நேர்ந்தால்கூட, அது அவர் களுக்குப் பொறுக்க முடியாததாக இருக்கிறது. அவர்கள் தின் பண்டங்கள்பற்றியே கனவு கண்டு கொண்டிருப்பார்கள். எதிர் கால வாழ்க்கை என்றால் அவர்களைப் பொறுத்தவரை அது தின்பண்டங்கள் ஏராளம் கிடைக்கின்ற ஓர் இடம், அவ்வளவு தான். வேட்டையாடுவதற்குப் போதிய வாய்ப்புள்ள இடத்தில் தான் தனது எதிர்கால வாழ்வு தொடர வேண்டும் என்று நம்புகின்ற செவ்விந்தியனை நினைத்துப் பாருங்கள். தங்கள் சொர்க்கம் எப்படி இருக்க வேண்டும் என்று நம் ஒவ்வொரு வருக்கும் ஒரு கருத்து உண்டு. ஆனால் நாளடைவில் நாம் வளர்ச்சியடைந்து, உயர்ந்த விஷயங்களைக் காணும்போது, இவை எல்லாவற்றிற்கும் அப்பால் உள்ளவற்றின் கணநேரக் காட்சிகளைக் காண்கிறோம்.

ஆனால் மறுவுலக வாழ்வு அதுஇது என்று எதையும் நம்ப மாட்டோம் என்று தற்காலத்தில் செய்கிறார்களே, அது போல் எதிர்கால வாழ்க்கையைப்பற்றிய நம் கருத்துக்களை உதறித் தள்ள வேண்டாம். அது அழிவு. இவ்வாறு எல்லா வற்றையும் அழிக்கும் ஆஜ்ஞேயவாதி தவறான வழியில் செல்கிறான். பக்தன் இன்னும் உயர்ந்தவற்றைக் காண்கிறான். ஆஜ்ஞேயவாதிக்குச் சொர்க்கம் என்று ஒன்றில்லை. அதனால் அவன் அங்கே போக விரும்புவதில்லை. ஆனால் பகவானின் பிள்ளையான பக்தனுக்கோ அது குழந்தை—விளையாட்டு என்பது புரிந்துவிட்டதால் அவன் சொர்க்கத்திற்கு செல்ல விரும்புவதில்லை. அவனுக்கு வேண்டுவதெல்லாம் இறைவன் ஒருவனே.

இறைவனைவிட உயர்ந்த லட்சியம் வேறு என்ன இருக்க முடியும்? அவனே மனிதனின் மிக உயர்ந்த லட்சியம். அவனைப் பாருங்கள்; அவனிலேயே இன்பம் காணுங்கள். இதைவிட உயர்ந்த ஒன்றை நாம் ஒருபோதும் கற்பனை செய்துகூடப் பார்க்க இயலாது. ஏனெனில் அவன் பரிபூரணமானவன். அன்பைவிடச் சிறந்த இன்பத்தை நாம் நினைத்துப் பார்க்க முடியாது. ஆனால் இந்த 'அன்பு' என்பதற்குப் பல அர்த்தங்கள் உள்ளன. அது உலகில் காணப்படும் சாதாரண தன்னலப் பற்று அல்ல. தன்னலப் பற்றை அன்பு என்று கூறுவது அபத்தம். நம் மனைவிமக்கள்மீது நாம் காட்டும் அன்பு மிருகநிலையில் உள்ளது. முற்றிலும் தன்னலம் கருதாத அன்பே அன்பு. அத்தகைய அன்பு கடவுளின் அன்பே. அதை அடைவது மிகவும் கடினம்.

குழந்தை, தாய், தந்தை என்று பலரை நேசிக்கிறோம். அதாவது அன்பின் இத்தகைய பலவகையான நிலைகளை நாம் கடந்து சென்று கொண்டிருக்கிறோம். அன்பு காட்ட நாம் படிப்படியாகப் பயின்று கொண்டிருக்கிறோம். ஆனால் பெரும்பாலும் இதிலிருந்து நாம் எந்தப் படிப்பினையையும் பெறுவதில்லை. ஏதாவது ஒருவரிடமோ அல்லது ஒரு நிலையிலோ கட்டுண்டுவிடுகிறோம். சிலர் இந்த வலையிலிருந்து விடுபடுகிறார்கள். மனிதன் எப்போதும் மனைவி, செல்வம், புகழ் இவற்றின் பின்னால் ஓடிக் கொண்டிருக்கிறான். சில வேளைகளில் அவன் தலையில் பலத்த அடி விழுகிறது. அப்போது இந்த உலகம் உண்மையில் என்ன என்பதை உணர்கிறான். இறைவனைத் தவிர வேறு எதையும் யாராலும் உண்மையில் நேசிக்க இயலாது; மானிட அன்பு எவ்வித சாரமும் அற்றது,

வெறுமையானது என்பதை மனிதன் உணர்கிறான். மனிதனால் நேசிக்க இயலாது, எல்லாம் பேச்சுடன் சரி. மனைவி தன் கணவனை நேசிப்பதாகக் கூறி அவனை அணைத்து முத்தமிடு கிறாள். ஆனால் அவன் இறந்தால் முதலில் அவள் நினைப்பது அவனது வங்கிக்கணக்கு எவ்வளவு, மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பது பற்றித்தான். கணவன் மனைவியை நேசிக் கிறான். ஆனால் அவள் உடல்நலம் குறைந்து அழகு குன் றினாலோ, விகாரமடைந்தாலோ, ஒரு தவறு செய்தாலோ அவ்வளவுதான், அவளை ஒதுக்கத் தொடங்கிவிடுவான். உலகில் நாம் காணும் அன்பு அனைத்தும் வெறும் வெளிவேஷமே, வெறுமையே.

எல்லைக்கு உட்பட்ட ஒன்று அன்பு செய்ய முடியாது. எல்லைக்கு உட்பட்ட ஒன்றின்மீது அன்பு காட்டவும் முடியாது. மனிதனால் விரும்பப்படும் பொருட்கள் கணந்தோறும் அழிந்து கொண்டிருக்கின்றன; அவன் வளரவளர அவனது மனமும் மாறிக்கொண்டே இருக்கிறது. அப்படியிருக்கும்போது நிலை யான அன்பை இந்த உலகில் எதிர்பார்க்க முடியுமா? இறைவன் மீதுள்ள அன்பைத் தவிர வேறு எந்த அன்பும் நிலையாக இருக்க முடியாது. எனவே பலவகைப்பட்ட இந்த அன்புகள் எதற்காக? இவை யாவும் வெறும் படிகள் மட்டுமே. நமக்குப் பின்னால் ஒரு சக்தி இருந்துகொண்டு, அன்பு என்ற ஒன்றை நோக்கி நம்மை உந்தித் தள்ளிக்கொண்டு செல்கிறது. உண்மைப் பொருளை எங்கே தேடுவது என்பது நமக்குத் தெரியாது. ஆனால் நமது இந்த அன்பு அதைத் தேடிச் செல்வதற்காக நம்மை முன்னோக்கிச் செல்லத் தூண்டுகிறது. நாம் திரும்பத் திரும்ப நமது தவறை உணர்கிறோம். ஏதோ ஒன்றைப் பற்று கிறோம், அது நமது பிடியிலிருந்து நழுவிவிடுகிறது. உடனே இன்னொன்றைப் பற்றுகிறோம். இவ்வாறு முன்னேறிச் செல் கிறோம். இறுதியில் வருகிறது ஒளி. நம்மை நேசிக்கும் ஒரே ஒருவரான ஆண்டவனிடம் நாம் வருகிறோம். அவனது அன்பு ஒருபோதும் மாறாதது. எப்போதும் நம்மை அரவணைக்கத் தயாராக இருப்பது.

நான் உங்களைத் துன்புறுத்தினால் எவ்வளவு காலம் என்னை நீங்கள் பொறுத்துக் கொள்வீர்கள்? யாரிடம் கோபம், வெறுப்பு, பொறாமை எதுவும் இல்லையோ, யார் எப்போதும் சமநிலையில் இருப்பாரோ, யாருக்குப் பிறப்பு இறப்பு இல் லையோ அவரால் மட்டுமே அது முடியும். அப்படிப்பட்டவர்

ஆண்டவனைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? ஆனால் இறைவனை அடையும் வழி மிக நீண்டது; மிகக் கடினமானது. ஏதோ ஒருசிலரே அவனை அடைகிறார்கள்.

நாம் தட்டுத்தடுமாறும் வெறும் குழந்தைகள். இந்த அன்புநெறியை கோடிக்கணக்கானோர் வியாபாரச் சரக்காகக் கருதுகிறார்கள். எல்லோரும் இதைப்பற்றிப் பேசுகின்றனர், ஆனால் ஒருசிலரே அடைகின்றனர். ஒரு நூற்றாண்டில் ஏதோ ஒருசிலரே அந்த இறையன்பைப் பெறுகின்றனர். அவர்கள் வாயிலாக நாடு முழுவதும் ஆசிபெற்றுப் புனிதம் அடைகிறது. எப்படிச் சூரியன் உதித்ததும் இருள் அகல்கிறதோ, அதுபோல் அவதார புருஷர் ஒருவர் தோன்றும்போது, நாடே பேறு பெற்றுப் புனிதம் அடைகிறது. உலகம் முழுவதிலும் ஒரு நூற்றாண்டில் ஏதோ ஒருசிலரே இப்படிப் பிறக்கின்றனர். ஆனால் அந்த அன்பைப் பெற நாம் எல்லோரும் முயல்வோம். யார் கண்டார்கள்! ஒருவேளை இந்தப் பூரணமான அன்பை அடுத்தது பெறப்போவது நீங்களாகவோ அல்லது நானாகவோ இருக்கலாம். எனவே நாம் முயல்வோம்.

மனைவி கணவனை நேசிக்கிறாள் என்று சொல்கிறோம். தன் உயிர் முழுவதுமே அவனிடம்தான் ஆழ்ந்து கிடக்கிறது என்று அவள் நினைக்கிறாள். ஒரு குழந்தை பிறக்கிறது. அவளது அன்பின் பாதியோ, அதிகமோ குழந்தையிடம் செல்கிறது. கணவனிடம் முன்பு இருந்ததுபோல் தனக்கு அன்பு இல்லாததை அவளே உணர்வாள். அதேபோல்தான் தந்தையும். முன்பை விட ஆழ்ந்த அன்பைச் செலுத்த ஓரிடம் கிடைத்தால் பழைய அன்பு மெதுவாக மறையத் தொடங்குகிறது. நீங்கள் சிறுவர்களாக இருந்தபோது தாய்தந்தையர் அல்லது பள்ளித் தோழர்கள் சிலரை இவர்கள்தான் வாழ்க்கையில் மிகவும் நெருக்கமானவர்கள் என்று நினைத்தீர்கள். அதற்குப் பிறகு கணவனோ மனைவியோ ஆகும் நிலை வருகிறது. உடனே பழைய உணர்ச்சிகள் பறக்கின்றன, புதிய அன்பு உணர்ச்சிகள் தீவிரம் அடைகின்றன. ஒரு விண்மீன் தோன்றுகிறது, பிறகு இன்னும் பெரிய ஒன்று தோன்றுகிறது, அதன்பிறகு அதை விடப் பெரியது ஒன்று தோன்றுகிறது. இறுதியில் சூரியன் தோன்றியதும் சிறு ஒளிகள் அனைத்தும் மறைகின்றன. அந்தச் சூரியனே கடவுள். விண்மீன்களே சிறிய அன்புகள். அந்த இறையொளி மனிதன்மீது படும்போது, ஒருவன், எமர்சன் கூறுவதுபோல் 'இறைப்பித்தன்' (God–intoxicated man)

ஆகிறான், இறுதியில் கடவுளாக மாறுகிறான். அந்த அன்புக் கடலில் எல்லாம் கரைந்துவிடுகின்றன. சாதாரண அன்பு என்பது வெறும் மிருகக் கவர்ச்சிதான்; இல்லையேல் அதில் ஏன் ஆண்–பெண் வேறுபாடு இருக்க வேண்டும்? ஒருவன் ஓர் உருவத்தின் திருமுன்னர் மண்டியிட்டுத் தொழுதால், அது கொடுமையான உருவ வழிபாடாம்! மனைவி அல்லது கணவன் முன்னால் முழங்காலிட்டால் அது சிறந்தது, போற்றத்தக்கது, அதில் எவ்விதத் தவறும் இல்லையாம்!

இந்தச் சிறுசிறு ஆசைகளை நாம் கடந்தாக வேண்டும். முதலில் நம்மை நாம் தயாராக்கிக் கொள்ள வேண்டும். நாம் வாழ்க்கையை எப்படிப் பார்க்கிறோமோ, அதைப் பொறுத்தே அன்பைப்பற்றிய நமது கருத்தும் அமையும். இந்த உலக வாழ்க்கையையே நமது நோக்கமாகவும் முடிவாகவும் கொண்டால், அது மிருகத்தனமானது, தரம் தாழ்ந்தது. அந்த எண்ணத்துடன் வாழ்க்கையைத் தொடங்குபவன் தன்னைத்தானே சீரழித்துக் கொள்கிறான். அதிலிருந்து அவனால் உயரே செல்ல முடியாது. எல்லாவற்றிற்கும் பின்னால் நிற்கும் ஒளியை அவனால் காண முடியாது. அவன் எப்போதும் புலன்களுக்கு அடிமையாகவே கிடப்பான், ஓரிரு கவள உணவிற்கு வேண்டிய பணத்திற்காக போராடிக் கொண்டிருப்பான். இத்தகைய வாழ்வு வாழ்வதைவிடச் சாவதே மேல். நீங்கள் உலகின் அடிமைகள்! புலன்களின் அடிமைகள்! உங்களை விழிப்புணர்த்துங்கள். இத்தகைய புலன்வாழ்வைவிட உயர்ந்த ஒன்று உள்ளது.

இந்த மனிதன், இந்த எல்லையற்ற ஆன்மா வெறும் கண், மூக்கு, காது என்று புலன்களுக்கு அடிமையாகக் கிடக்கத்தான் பிறந்தான் என்று நினைக்கிறீர்களா? எல்லையற்ற, எங்கும் நிறைந்த ஓர் ஆன்மா அனைத்திற்கும் பின்னால் உள்ளது. அது எதை வேண்டுமானாலும் செய்ய வல்லது; எல்லா பந்தங்களையும் அகற்ற வல்லது. அந்த ஆன்மாதான் நாம். அந்த ஆன்ம சக்தியை நாம் அன்பினால்தான் அடைகிறோம். இது தான் லட்சியம். இது நன்றாக நினைவில் இருக்கட்டும். நாளையே இதை நாம் அடைந்துவிட முடியாது; அடைந்து விட்டோம் என்று கற்பனை வேண்டுமானால் செய்து கொள்ளலாம். ஆனால் அது வெறும் கற்பனைதான், உண்மை வெகு தொலைவில் உள்ளது.

மனிதன் எந்த நிலையில் இருக்கிறானோ, அதனை ஏற்றுக் கொண்டு, முடியுமானால் அங்கிருந்து அவன் முன்னேற உதவ

வேண்டும். அவன் உலோகாயதத்தில் ஊன்றி நிற்கிறான். நீங்களும் நானும் எல்லோரும் உலோகாயதவாதிகளே. இறைவன், ஆன்மா என்றெல்லாம் நாம் பேசுவது நல்லதுதான். ஆனால் அவை சமுதாயத்தில் பயன்படுத்தப்படும் சில சொற்கள் மட்டுமே. கிளிப்பிள்ளைகள்போல் அவற்றைக் கேட்டுப் பேசுகிறோம். எனவே இப்போது நாம் உலோகாயதவாதிகளே என்பதை ஒப்புக்கொண்டு, தேவைப்படுமானால் ஜடப்பொருளின் துணையை ஏற்றுக்கொண்டு படிப்படியாகச் செல்வோம்; உண்மையான ஆன்மீகவாதிகளாகத் திகழும்வரை, நாம் ஆன்மா என்பதை உணரும்வரை, அந்த ஆன்மாவைப் புரிந்துகொள்ளும் வரை, எல்லையற்றது என்று கூறும் உலகம் என்பது உண்மையில் அதன் பின்னால் நிற்கும் அந்த ஆன்மாவின் தூலமான புறத் தோற்றம் மட்டுமே என்பதை உணரும்வரை முயன்றுகொண்டே செல்வோம்.

அதைத் தவிர வேறு சிலவும் தேவைப்படுகின்றன. ஏசுநாதரின் மலைப்பிரசங்கத்தில், பின்வருவதை நாம் படிக்கிறோம்: 'கேளுங்கள் தரப்படும்; தேடுங்கள் கிடைக்கும்; தட்டுங்கள் திறக்கப்படும்'. ஆனால் யார் தேடுகிறார்கள்? யார் விரும்புகிறார்கள்? அதுதான் பிரச்சினை. கடவுளை அறிந்துள்ளதாக நாம் எல்லோரும் சொல்கிறோம். கடவுள் இல்லை என்பதை நிரூபிக்க ஒருவன் ஒரு பெரிய நூல் எழுதுகிறான்; இருக்கிறார் என்பதை நிரூபிக்க இன்னொருவன் இன்னொரு நூல் எழுதுகிறான். தன் வாழ்க்கை முழுவதும் இறைவன் இருப்பதை நிரூபித்துக்கொண்டே இருக்க வேண்டுவது தன் கடமை என்று நினைக்கிறான் ஒருவன். இன்னொருவனோ அவர் இல்லை என்று நிரூபிப்பது தன் கடமையென எண்ணுகிறான். எனவே கடவுள் இல்லை என்று பிரச்சாரம் செய்து திரிகிறான் அவன். கடவுள் உண்டு என்றோ, இல்லை என்றோ நிரூபிக்க நூல்களை எழுதித் தள்ளுவதால் என்ன பயன்? கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதைப்பற்றிப் பெரும்பாலோர் கவலைப்படுவதே இல்லையே!

இங்குள்ள மக்களுள் பெரும்பாலோர் காலையில் எழுந்ததும் சிற்றுண்டி அருந்தச் செல்கின்றனர். அதை உண்ணவோ, உடை அணிந்துகொள்ளவோ கடவுள் வந்து உதவி செய்வதில்லை. பின்னர் வேலைக்குச் சென்று நாள்முழுவதும் உழைத்துப் பணம் சம்பாதிக்கிறான். அதை ஒரு வங்கியில் கட்டிவிட்டு வீடு திரும்புகிறான். இரவில் சாப்பிடுகிறான். பிறகு உறங்கச்

செல்கிறான். கடவுளைப்பற்றியே சிந்திக்காமல் ஒரு எந்திரம் போல் செயல்படுகிறான். அப்படி ஒருவர் தேவை என்றும் அவன் உணர்வதில்லை. பின்பு ஒருநாள் மரணம், 'வா' என்று அழைக்கின்றது. அப்போது, 'சிறிது காத்திரு. எனக்கு இன்னும் சிறிது காலம் தேவை; என் மகன் இன்னும் சற்று பெரியவனாகட்டும்' என்கிறான். ஆனால் மரணமோ, 'உடனே வா' என்று கூவுகிறது. இப்படியே எல்லாம் போய்க் கொண்டிருக்கின்றன. பாவம், மனிதனும் இப்படியே வாழ்கிறான். அவனுக்கு நாம் என்ன சொல்ல முடியும்? இறைவனே அனைத்திலும் மிக மேலானவன் என்று அறிந்து கொள்வதற்கான வாய்ப்பு கிடைக்கவில்லை. ஒருவேளை அவன் முற்பிறவியில் ஒரு பன்றியாக இருந்து இப்போது சற்று உயர்ந்து மனிதனாகப் பிறந்திருக்கக் கூடும்.

ஆனால் இத்தகையோர் மட்டுமே உலகில் இருக்கிறார்கள் என்றில்லை. சிறிது விழிப்புணர்வு பெற்ற சிலரும் இருக்கவே செய்கிறார்கள். துன்பம் வருகிறது, நாம் மிகவும் நேசிக்கின்ற ஒருவர் இறக்கிறார்; எதைப் பெறுவதற்காக நம் ஆற்றல் அனைத்தையும் செலவிட்டோமோ, எதற்காக உலகனைத்தையும் வஞ்சித்தோமோ உலகனைத்தையும் என்றல்ல, சொந்த சகோதரனைக்கூட வஞ்சிக்கத் துணிந்தோமோ, எத்தனையோ கொடிய இன்னல்களையும் அவருக்கு இழைக்கத் துணிந்தோமா அது திடீரென்று மறைந்துவிடுகிறது; நம்மீது பேரிடி விழுந்தது போலாகிறது. அப்போது நம் இதய ஆழத்திலிருந்து ஒரு குரல் எழுகிறது; 'இதற்குப் பின் என்ன?' என்று அது கேட்கிறது. எந்த மகனுக்காகத் தானும் பட்டினி கிடந்து, பிறரையும் ஏமாற்றி வந்தானோ, அந்த மகன் ஒருவேளை இறந்துவிடுகிறான். அந்தப் பேரிடியால் அவன் விழிப்புணர்வு பெறுகிறான். எந்த மனைவியை அடைய அவன் வெறிபிடித்த காளையைப்போல் எல்லோரிடமும் முட்டிமோதிப் போனானோ, யாருக்காகப் புது ஆடைகளும், நகைகளும் வாங்கப் பணம் சேர்த்து வைத்தானோ, அவள் ஒருநாள் திடீரென்று இறந்து போகிறாள். பிறகு என்ன? சிலவேளைகளில் மரணம் வருகிறது, அது எவ்வித அதிர்ச்சியையும் தராமலே போகிறது. ஆனால் மிகவும் அரிதாகவே அவ்வாறு நிகழ்கிறது.

நம் பொருள் கைவிட்டு நழுவும்போது, நம்முள் பெரும்பாலோர், 'இனி என்ன?' என்று பதறி ஓலமிடுகிறோம். நாம் புலன்களை எப்படிப் பற்றிக்கொள்கிறோம்! இதனால்தான்

துன்பப்படுகிறோம். ஆற்றில் மூழ்கும் ஒருவன், பிடித்துக் கொள்ள வேறு ஒன்றும் கிடைக்காதபோது ஒரு துரும்பைப் பற்றிக்கொண்டு தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயல்கிறான். சாதாரணமாக மனிதனும் இவ்வாறே தனக்கு எதிரில் முதலில் எது கிடைக்கிறதோ அதைப் பற்றிக்கொள்கிறான். அது காப் பாற்றாதபோது யாராவது தனக்கு உதவி புரிய வேண்டுமெனக் கெஞ்சுகிறான். எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்த பிறகு தான் உயர் விஷயங்களைப்பற்றி நினைக்கிறான்.

இந்த பக்திதான் ஆன்மீகம். ஆனால் இது பெரும்பான்மை யோருக்கு உரியது அல்ல. அது முடியாத காரியம். முழங் காலிடுவதும் எழுவதும் அமர்வதும் பெரும்பாலோருக்குத் தக்கனவாக இருக்கலாம். ஆனால் ஆன்மீகம் என்பது ஒரு சில ருக்கே. ஒவ்வொரு நாட்டிலும் ஏதோ ஒருசிலரே ஆன்மீக வாதிகளாக இருக்க முடியும்; பிறரால் முடியாது. அவர்கள் விழிப்புணர்வு பெறாதவர்களாக இருப்பதுதான் அதற்குக் காரணம். அதை அவர்கள் விரும்புவதும் இல்லை. முதலில் தேவையானது இறைநாட்டம். ஆனால் பொதுவாக நாம் கடவுளைத் தவிர மற்ற எல்லாவற்றையும் நாடுகிறோம். ஏனெ னில் நமது சாதாரணத் தேவைகளைப் புற உலகம்தான் நமக்குத் தந்துகொண்டிருக்கிறது. நமது தேவைகள் புற உலகைத் தாண்டிச் செல்லும்போதுதான் உள்ளேயிருந்து, அதாவது இறைவனிடமிருந்து நாம் உதவியை எதிர்பார்க்கிறோம். நமது தேவைகள் இந்தப் பிரபஞ்சத்தின் குறுகிய வட்டத்திற்குள் இருக்கும்வரையில் கடவுளின் தேவை நமக்கு இருப்பதில்லை. இந்த உலகில் உள்ளவற்றை அனுபவித்துச் சலிப்படைந்த பிறகுதான், இதனைக் கடந்த ஒன்றின் உதவியை எதிர்பார்க் கிறோம். தேவை இருந்தால்தான் உதவி கிடைக்கும். இந்த உலக மாகிய குழந்தை-விளையாட்டை எவ்வளவு விரைவில் முடி யுமோ அவ்வளவு விரைவாக முடித்துவிடு. அதன் பிறகுதான் இதற்கு அப்பால் இருக்கின்ற ஒன்றின் தேவை உனக்கு ஏற்படும். அதுதான் ஆன்மீகத்தின் முதற்படி.

வெறும் நாகரீகமான ஒருவகை மதம் தோன்றியுள்ளது. என் நண்பரின் விருந்தினர் அறையில் மற்ற பொருட்களுடன் ஜப்பானிய ஜாடி ஒன்றும் உள்ளது. அது நாகரீகமாக இருப்ப தால் பல ஆயிரம் டாலர்கள் மதிப்புள்ளதாக இருந்தாலும், நானும் அதுபோல் ஒன்று வாங்கியாக வேண்டும். அவ்வாறே வெறும் நாகரீகத்திற்காக மதத்தைப் பின்பற்றிக் கோயிலுக்குச்

செல்கிறேன். பக்தி இத்தகையோருக்கானது அல்ல. உண்மையான 'தேவை'யிலிருந்துதான் பக்தி பிறக்கிறது. எது இல்லாமல் நாம் உயிர் வாழ முடியாதோ, அதுதான் 'தேவை'. மூச்சு தேவை, உணவு தேவை, உடை தேவை. இவை இல்லாமல் உயிர்வாழ முடியாது. ஒருவன் ஒரு பெண்ணைக் காதலிக்கும் போதுகூட அவள் இல்லாமல் தன்னால் வாழ முடியாது என்று சிலவேளைகளில் நினைக்கிறான்—அது தவறு. கணவன் இறந்துவிட்டால், அவனில்லாமல் தான் வாழ இயலாது என்று மனைவி கருதுகிறாள்; ஆனால் அவள் வாழவே செய்கிறாள். இதுதான் 'தேவை' என்பதன் ரகசியம்; அது இல்லாமல் நாம் வாழ முடியாது, அது நமக்குக் கிடைக்க வேண்டும், அல்லது நாம் இறந்துவிடுவோம்.

உரிய காலம் வரும்போது கடவுளைப்பற்றியும் நாம் இப்படி நினைக்கிறோம். அதாவது இந்த உலகிற்கு அப்பாற்பட்ட ஒன்றை, ஜட சக்திகளுக்கு அப்பாற்பட்ட ஒன்றின் தேவையை நாம் உணர்கிறோம். அப்போதுதான் நாம் பக்தர்கள் ஆகிறோம். ஒரு நொடிப் பொழுதாயினும் சரி, மேகங்கள் மறைந்து பரம்பொருளைப்பற்றிய காட்சி கிடைக்கும்போது, அற்ப இன்பங்களெல்லாம் கடலின் சிறு துளியாகத் தோன்றும் போது, 'என்ன இந்த அற்ப வாழ்க்கை!' என்ற எண்ணம் பிறக்கிறது. அப்போதுதான் ஆன்மா வளர்கிறது; கடவுளின் தேவையை உணர்கிறது; அவனை அடைந்தே தீரவேண்டும் என்று துடிக்கிறது.

எனவே, 'நமக்கு வேண்டியது என்ன?' என்பதே முதற்படி. 'இறைவன் நமக்கு வேண்டுமா?' இந்தக் கேள்வியைத் தினமும் நமக்கு நாமே கேட்டுக் கொள்வோம். பிரபஞ்சத்திலுள்ள எல்லா நூல்களையும் நாம் படிக்கலாம். ஆனால் பேச்சுத் திறமையினாலோ, மதிநுட்பத்தினாலோ, பற்பல கலைகளைக் கற்பதாலோ இந்த அன்பு மலர்வதில்லை. இறைவனின் தேவையை உணர்பவர்களுக்கே இந்த அன்பு கிடைக்கும். இறைவன் அவர்களுக்கே காட்சி அளிக்கிறான்.

அன்பு, அன்பையே பிரதியாகத் தருகிறது. நீங்கள் என்னை வெறுக்கிறீர்கள், நான் உங்களை நேசிக்கத் தொடங்கினாலும் நீங்கள் என்னை வெறுக்கலாம். ஆனால் நான் தொடர்ந்து அன்பு செலுத்தினால், ஒரு மாதத்திலோ ஓராண்டிலோ கண்டிப்பாக நீங்கள் என்னிடம் அன்பு காட்டவே செய்வீர்கள். இது மனஇயல் கண்ட உண்மை. மறைந்த கணவனை அன்புமிக்க

மனைவி நேசிப்பதுபோல், நாம் இறைவனை நேசிக்க வேண்டும். அப்போது நாம் அவனைக் காண்போம். நூல்களும் சரி, பல்வேறு விஞ்ஞானங்களும் சரி நமக்கு எதையும் கற்பிக்காது. நூல்களைப் படித்தால் கிளிப்பிள்ளைகள் ஆவோம்; நூல்களைப் படிப்பதால் யாரும் அறிஞராவதில்லை. அன்பைப் பற்றிய ஒரு வார்த்தையின் பொருளை ஒருவன் அறிந்தால் போதும், அவன் அறிஞனாகிறான். எனவே அன்பைப் பெறும் ஆசையை முதலில் வளர்க்க வேண்டும்.

'கடவுள் நமக்குத் தேவையா?' இதனை நாள்தோறும் நம்மை நாம் கேட்டுக்கொள்வோம். மதத்தைப்பற்றிப் பேசும்போது, குறிப்பாக உயர்ந்த நிலையில் இருந்துகொண்டு மற்றவர்களுக்குக் கற்பிக்கும்போது, இந்தக் கேள்வியைக் கேட்போம். பல நேரங்களில் நமக்கு நாமே, 'கடவுள் எனக்குத் தேவை இல்லை, உணவுதான் தேவை' என்றுதான் உணர்கிறோம். சிறிது உணவு கிடைக்காவிட்டால் நான் பைத்தியமாகி விடுவேன். ஒரு வைரமாலை கிடைக்கவில்லை என்றால் பெண்களுள் பலருக்குப் பைத்தியம் பிடித்துவிடும். ஆனால் கடவுளை அடைவதற்கு அவர்கள் அதே அளவு ஆசை கொள்வதில்லை; உலகில் உள்ளதான ஒரே உண்மையை அவர்கள் உணர்வதில்லை. எங்கள் நாட்டில் ஒரு பழமொழி உண்டு— 'நான் வேடனாக இருந்தால், காண்டாமிருகத்தை வேட்டையாடுவேன். கொள்ளைக்காரனாக இருந்தால் அரசனின் பொக்கிஷத்தைக் கொள்ளையடிப்பேன். பிச்சைக்காரர்களிடம் களவாடுவதாலும், எறும்புகளை வேட்டையாடுவதாலும் என்ன பயன்?' எனவே அன்பு செலுத்த விரும்பினால் இறைவனிடம் அன்பு செலுத்துங்கள். இந்த உலகைப்பற்றி நமக்கென்ன கவலை?

நான் ஒளிவுமறைவின்றிப் பேசுபவன், ஆனால் எல்லோருக்கும் நன்மையை விரும்புபவன். உங்களுக்கு உண்மையை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். நான் உங்களைப் புகழ்ந்து பேச விரும்பவில்லை. அது என் வேலையும் அல்ல. நீங்கள் என் குழந்தை போன்றவர்கள். நான் உங்களுக்கு உண்மையைச் சொல்ல விரும்புகிறேன். இந்த உலகமே முழுப்பொய். உலகின் ஆச்சாரியர்கள் அனைவரும் இதை உணர்ந்துள்ளனர். கடவுளின் வழியாக அல்லாமல் இந்தப் பொய்யான உலகத்திலிருந்து தப்ப வேறு வழி இல்லை. அவரே நமது வாழ்க்கை லட்சியம். மாறாக இந்த உலகத்தை நமது லட்சியமாகக்

காட்டுகின்ற கருத்துக்கள் அழிவையே தருபவை. இந்த உலகத்திற்கும், இந்த உடலுக்கும் உரிய பயனுண்டு; அதாவது இறைவனை அடைய ஒரு சாதனம் என்கிற இரண்டாம் பட்சச் சிறப்பு உண்டு. ஆனால் உலகமே லட்சியமாகிவிடக் கூடாது. துரதிர்ஷ்டவசமாக, அடிக்கடி நாம் உலகை லட்சியமாகக் கொண்டு, கடவுளைச் சாதனமாகக் கொள்கிறோம். மக்கள் கோயிலுக்குச் சென்று 'இறைவா! எனக்கு இவற்றையெல்லாம் தருவாய்! எம்பெருமானே, என் நோயைத் தீர்ப்பாய்!' என்றெல்லாம் முறையிடுவதைக் காண்கிறோம். அவர்கள் ஆரோக்கியமான நல்ல உடலை விரும்புகின்றனர். அதைக் கொடுப்பதற்காக யாரோ ஒருவர் எங்கோ உட்கார்ந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டு, அவரிடம் சென்று பிரார்த்திக்கின்றனர். மதம் என்பதைப் பற்றி இத்தகைய கருத்தைக் கொண்டிருப்பதைவிட நாத்திகனாக இருப்பதே சிறந்தது.

நான் கூறியதுபோல் இந்த பக்திதான் மிக உயர்ந்த லட்சியம். பலகோடி ஆண்டுகளுக்குப் பிறகாவது நாம் இதை அடைவோமா, மாட்டோமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நமது மிக உயர்ந்த லட்சியமாக அதையே கொள்ள வேண்டும்; நமது புலன்களும் அந்த மிக உயர்ந்ததையே நாடும்படிச் செய்ய வேண்டும். அந்த அறுதி நிலையை அடைய முடியவில்லை என்றாலும் அதன் அருகிலாவது செல்ல வேண்டும். உலகின் வாயிலாகவும், புலன்கள்மூலமாகவும் படிப்படியாக நாம் இறைவனை அடையப் பாடுபட வேண்டும். ❋

## 3. குரு

ஒவ்வோர் ஆன்மாவும் பூரணத்துவத்தை எய்த வேண்டும் என்பது நியதி. ஒவ்வோர் உயிரும் கடைசியில் அந்த நிலையை அடைந்தே தீரும். முன்பு இருந்த நிலை அல்லது நினைத்த எண்ணங்களின் விளைவே நாம் இப்போது உள்ள நிலை. எதிர்காலத்தில் நாம் எப்படி இருப்போம் என்பது, இப்போது நாம் செய்யும் காரியங்களையும், எண்ணும் எண்ணங்களையும் பொறுத்தது. அதனால் நாம் வெளியிலிருந்து உதவி பெற முடியாது என்பதில்லை. ஆன்மாவின் சாத்தியக்கூறுகள் எப்போதும் புற உதவியினால் விரைவு பெறுகின்றன. எனவே புற உதவி பெரும்பாலோருக்கு ஏறக்குறைய கட்டாயமான தேவையாக இருக்கிறது. விரைவுபடுத்தும் தூண்டுதல்கள் வெளியிலிருந்து வருகின்றன. அவை நம்மிடம் மறைந்துள்ள ஆற்றல்களில் செயல்படுகின்றன. அதனால் வளர்ச்சி தொடங்குகிறது; ஆன்மீக வாழ்வு பிறக்கிறது. கடைசியில் மனிதன் புனிதம் அடைகிறான், பூரணத்துவம் எய்துகிறான்.

வெளியிலிருந்து வருகின்ற இந்த விரைவுபடுத்தும் தூண்டுதல் நூல்களிலிருந்து கிடைக்க முடியாது. ஓர் ஆன்மாவிற்கு மற்றோர் ஆன்மாவிலிருந்துதான் தூண்டுதல் கிடைக்கும்; மற்ற எதிலிருந்தும் அல்ல. வாழ்நாள் முழுவதும் நாம் நூல்களைப் படிக்கலாம், பேரறிஞர்களாகத் திகழலாம். ஆனால் நம்மிடம் ஆன்மீகம் என்பதே முளைவிடவில்லை என்பதைக் கடைசியில் காண்போம். ஒருவனுக்குக் கூர்மையான அறிவு வளர்ச்சி இருந்தால் அதே அளவு ஆன்மீக வளர்ச்சியும் இருக்கும் என்று ஒருபோதும் சொல்ல முடியாது. மாறாக, அறிவு வளரும்போது ஆன்ம வளர்ச்சி தடைப்படுவதையே நாம் காண்கிறோம்.

அறிவை வளர்த்துக் கொள்வதற்கு நாம் நூல்களிலிருந்து உதவி பெறலாம். ஆனால் ஆன்மீக வளர்ச்சிக்கு, நூல்களிலிருந்து அனேகமாக ஒன்றுமே பெற முடியாது. நூல்களைப் படிக்கும்போது, சிலவேளைகளில், நம் ஆன்மீக வளர்ச்சிக்கு ஏதோ உதவி கிடைப்பது போன்றதொரு மனமயக்கம்

ஏற்படுகிறது. ஆராய்ந்து பார்த்தால் நம் அறிவுக்கு உதவி கிடைத்ததே தவிர ஆன்மாவிற்கு அல்ல என்பது தெரியவரும். அதனால்தான் கிட்டத்தட்ட நாம் எல்லோருமே ஆன்மீக விஷயங்களைப்பற்றி வெகு அழகாகப் பேச முடிகிறது; நடைமுறை என்று வரும்போது, அதற்கு வேண்டிய தகுதி மிகவும் குறைந்தவர்களாக இருக்கிறோம். நமக்குத் தேவைப்படும் தூண்டுதலை நூல்கள் தர முடியாது என்பதுதான் இதற்குக் காரணம். ஆன்ம வளர்ச்சிக்கான அந்தத் தூண்டுதல் இன்னோர் ஆன்மாவிலிருந்துதான் வர வேண்டும். எந்த ஆன்மாவிலிருந்து இந்தத் தூண்டுதல் வருகிறதோ அவரே குரு, ஆசிரியர். எந்த ஆன்மா தூண்டப்படுகிறதோ, அவரே சீடன் அல்லது மாணவன்.

இவ்வாறு தூண்டுவதற்கு, முதலாவதாக, யார் தூண்டு கிறாரோ அவரிடம் அதற்கான சக்தி இருக்க வேண்டும். ஆற்ற லைத் தம்மிடமிருந்து மற்றொருவருக்குப் பாய்ச்சும் சக்தியை அவர் பெற்றிருக்க வேண்டும். இரண்டாவதாக, பெறுபவரும் அதைப் பெறுவதற்குத் தகுதியானவராக இருக்க வேண்டும். விதை உயிருள்ளதாக இருக்க வேண்டும், நிலமும் நன்கு உழப் பட்டுத் தயாராக இருக்க வேண்டும். இந்த இரண்டு நியதி களும் நிறைவேறும்போது, அற்புதமான ஆன்மீக வளர்ச்சி ஏற்படுகிறது.

'ஆன்மீகத்தைப்பற்றிப் பேசுபவர் அற்புதமானவராக இருக்க வேண்டும். கேட்பவரும் அப்படியே இருக்க வேண்டும்.'[1] இருவரும் சிறப்பான, அசாதாரணமானவர்களாக இருக்கும் போது மட்டுமே மிகச் சிறந்த ஆன்மீக வளர்ச்சி ஏற்படுகிறது. இல்லாவிட்டால் ஏற்படாது. இவர்களே உண்மையான குரு மார்கள், இவர்களே உண்மையான சீடர்கள். இவர்களோடு ஒப்பிடும்போது மற்றவர்கள் ஆன்மீகத்தோடு விளையாடு கிறார்கள்; தங்கள் அறிவாற்றலுக்கும் பயிற்சி கொடுக்கிறார்கள்; தங்கள் ஆர்வத்தைச் சிறிது தீர்த்துக் கொள்கிறார்கள்; ஆனால் உண்மையில், இன்னும் வெளி விளிம்பில் நின்றுகொண்டிருக் கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். இதற்குச் சிறிது பலன் உண்டு; எல்லாம் நாளடைவில் வந்து சேரும்.

வயல் தயாரானதும், விதை வந்து சேர்ந்தேயாக வேண்டும் என்பது இயற்கையின் அறியொணா நியதியாகும். அதுபோல்

---

1. ஆச்சர்யோ வக்தா குசலோऽஸ்ய லப்தா | —கட உபநிடதம், 1. 2. 7.

ஒருவனுக்கு ஆன்மீகம் தேவை என்று வரும்போது, அதற்கான ஆன்மீக ஆற்றலை அளிப்பவர் வந்தே தீரவேண்டும். 'தேடிக் கொண்டிருக்கும் பாவி, தேடிக் கொண்டிருக்கும் ரட்சகரைச் சந்திக்கிறான்.' ஆன்மீகத்தைத் தேடும் ஆன்மாவில் ஈர்ப்பு சக்தி முதிர்ந்து, நிறைந்திருக்கும்போது, அந்த ஈர்ப்பின் வசப்பட்டு, அருள்புரியும் சக்தி வந்தேயாக வேண்டும்.

ஆனால் வழியில் பேராபத்துக்கள் பல உள்ளன. சாதகன் தன் மனத்தில் தோன்றும் தற்காலிக உணர்ச்சிப்பெருக்கை உண்மையான ஆன்மீக தாகம் என்று தவறாக நினைப்பதற்கு வாய்ப்பு உண்டு. நம் வாழ்க்கையில் இப்படி நிகழ்வதைப் பல வேளைகளில் காண்கிறோம். நாம் நேசிக்கும் ஒருவர் இறந்து விடுகிறார்; அந்தக் கணம் ஓர் அடியை உணர்கிறோம், உலகமே நம் காலடியிலிருந்து நழுவுகிறது. உடனே ஏதோ உயர்ந்த ஒன்றை நாட நினைக்கிறோம், ஆன்மீக வாழ்வில் ஈடுபட விரும்புகிறோம். ஆனால் இந்த அலை சில நாட்களுக்குத்தான், பின்னர் மறைந்துவிடும்; நாம் முன்பு எங்கு இருந்தோமோ, அங்கேயே இருக்கக் காண்போம். இத்தகைய உணர்ச்சிவேகங் களை உண்மையான ஆன்மீக தாகம் என்று தவறாக எத் தனையோ முறை எண்ணிவிடுகிறோம். இத்தகைய தற்காலிக உணர்ச்சிவேகங்களை இப்படித் தவறாக எண்ணும்வரை உண்மையான, தொடர்ந்து நிற்பதான ஆன்மீக தாகம் ஏற் படாது. அதைத் தணிக்கின்ற குருவையும் நாம் காண முடியாது.

நாம் எவ்வளவோ விரும்பியும், நமக்கு உண்மை இன்னும் கிடைக்கவில்லை என்று நாம் அங்கலாய்த்துக் கொள்ளும் போது, நமது முதல் கடமை, நம்முடைய உள்ளத்தையே ஆராய்ந்து பார்த்து, உண்மையிலேயே நாம் உண்மையை விரும்புகிறோமா என்று கண்டுபிடிப்பதுதான். பெரும்பாலோர் விஷயத்தில், நாம் இன்னும் தகுதி பெறவில்லை, நாம் அதை விரும்பவில்லை, நமக்கு உண்மையான ஆன்மீக தாகம் இன்னும் ஏற்படவில்லை என்பதையே காண்போம்.

குரு விஷயத்தில் வேறு பிரச்சினைகளும் உள்ளன. எத் தனையோ பேர் தாங்கள் அறியாமையில் உழன்று கொண் டிருந்தும், செருக்கின் காரணமாக, தங்களுக்கு எல்லாம் தெரி யும் என்று நினைக்கிறார்கள். அத்துடன் நிற்பதில்லை. மற்றவர் களுக்கும் வழிகாட்ட விரும்புகிறார்கள். இறுதியில் குருடன் குருடனுக்கு வழிகாட்டுவதுபோல் இருவரும் குழியில் விழு கிறார்கள். இத்தகையோர் உலகில் ஏராளம், ஏராளம்.

குருவாக இருக்கவே எல்லோரும் விரும்புகிறார்கள். ஒவ்வொரு பிச்சைக்காரனும் கோடி ரூபாய் நன்கொடை கொடுக்க விரும்புகிறான். இவர்கள் எவ்வளவு ஏளனத்திற்கு உரியவர்களோ, அவ்வளவு ஏளனத்திற்கு உரியவர்களே இந்தக் குருமார்களும்.

அப்படியானால் உண்மையான குருவை எப்படி அறிவது? முதலாவதாக, சூரியனைக் காண விளக்கொளி தேவையில்லை. சூரியனைப் பார்க்க நாம் மெழுகுவர்த்தி ஏற்றுவதில்லை. சூரியன் உதயமாகும்போது அதை இயல்பாக நாம் உணர்ந்து கொள்கிறோம். அதுபோல் குரு என்பவர் வரும்போது, அவர் உண்மையானவர் என்பதை மனம் தானாக உணர்ந்து கொள்கிறது. உண்மை தன் சொந்த ஆதாரங்களின் மீதே நிற்கிறது. உண்மைக்கு வேறு சான்றுகள் தேவையில்லை. அது சுய ஒளி கொண்டது. அது நமது இயல்பின் அடியாழம் வரை ஊடுருவிச் செல்கிறது. பிரபஞ்சம் முழுவதும் எழுந்து நின்று, 'இது உண்மை' என்பதைப் பறை சாற்றுகிறது.

மிகப் பெரிய குருமார்கள் இவர்களே. சற்று தாழ்ந்த நிலையில் இருப்பவர்களிடமிருந்தும் நாம் உதவி பெறலாம். ஆனால் அவர்களின் நிலையைத் தீர்மானிப்பதற்கு வேண்டிய உள்ளுணர்வு நமக்குப் போதுமான அளவு இல்லாததால் அதனை முடிவு செய்யச் சில சோதனைகள் தேவைப்படுகின்றன. சீடனுக்கும் சரி, குருவிற்கும் சரி, சில தகுதிகள் இருக்க வேண்டும்.

சீடனிடம் இருக்க வேண்டிய தகுதிகள்: பரிசுத்தம், அறிவொளி பெறுவதற்கு உண்மையான தாகம், விடாமுயற்சி.

தூய்மையற்ற ஒருவன் ஆன்மீகவாதியாக இருக்க முடியாது. இது ஒரு முக்கியமான நியதி. எல்லா விஷயங்களிலும் தூய்மையாக இருப்பது என்பது மிகவும் இன்றியமையாதது.

அடுத்த தகுதி, அறிவொளி பெறுவதற்கு உண்மையான தாகம். ஆனால் அது யாருக்குத் தேவை? இதுதான் கேள்வி. நாம் வேண்டுவதை அடைகிறோம் என்பது மிகமிகப் பழமையான ஒரு நியதி. யாருக்குத் தேவையோ அவனுக்குக் கிடைக்கும். ஆன்மீகத்தை நாடுவது என்பது மிகக் கடினமான காரியம். பொதுவாக நாம் நினைப்பதுபோல் அவ்வளவு சுலபமானது அல்ல ஆன்மீகம். ஆன்மீகம் என்பது சொற்பொழிவுகளைக் கேட்பதிலோ, நூல்களைப் படிப்பதிலோ இல்லை என்பதை நாம் எப்போதும் மறந்துவிடுகிறோம். ஆன்மீகம் என்பது தொடர்ந்த போராட்டம். வெற்றி கிடைக்கும்வரை, நமது சொந்த இயல்பை நாம் பற்றும்வரை தொடர்ந்து போராடுவது.

அது ஒரு நாள், இரண்டு நாள் போராட்டமோ, பல வருடம் அல்லது பல பிறவிப் போராட்டமோ அல்ல. அது நூற்றுக் கணக்கான பிறவிகள்கூட நீடிக்கலாம். அதற்கு நீங்கள் தயாராக இருக்க வேண்டும். அது உடனேயும் கிடைக்கலாம்; நூற்றுக் கணக்கான பிறவிகளுக்குப் பிறகு கிடைக்காமலும் இருக்கலாம். இதற்கெல்லாம் தயாராக இருக்க வேண்டும். இத்தகைய மன உறுதியுடன் தொடங்கும் சீடன் வெற்றி காண்கிறான்.

குரு விஷயத்தில், அவர் சாஸ்திரங்களின் உட்கருத்தை அறிந்திருக்கிறாரா என்பதை முதலில் பார்க்க வேண்டும். பைபிள், வேதம், குரான் என்று உலகம் முழுவதும் எல்லோரும் படிக்கின்றனர். ஆனால் இவை வெறும் வார்த்தைகள் மட்டுமே; இலக்கணத் தொடர்கள், சொற்றொடர் இலக்கணங்கள், சொல் இலக்கணங்கள், தத்துவங்கள் மட்டுமே. அதாவது, மதத்தின் உலர்ந்த எலும்புகள் மட்டுமே. ஒரு நூல் எவ்வளவு காலத்திற்கு முன் எழுதப்பட்டது என்பதை ஒரு குரு கண்டுபிடிக்கலாம். ஆனால் வார்த்தைகள் என்பவை கருத்துக்களின் வெளித்தோற்றங்கள் மட்டுமே. வார்த்தைகளில் அதிகம் ஈடுபட்டு வார்த்தைகளின் வேகத்தில் மனத்தை ஓடவிடுபவர்கள், அவற்றின் பொருளை, உட்கருத்தை இழந்துவிடுகிறார்கள். ஆகவே குரு, சாஸ்திரங்களின் உட்கருத்தை அறிந்திருக்க வேண்டும்.

'வார்த்தைகளால் பின்னப்பட்ட வலை ஒரு பெரிய காடு போன்றது. அதில் மனித உள்ளம் சிக்கிக்கொண்டு, வெளியே வர முடியாமல் தவிக்கிறது. சொற்களைப் பலவிதமாகச் சேர்ப்பது, அழகிய மொழியைப் பலவிதங்களில் பேசுவது, சாஸ்திரங்களின் நடையைப் பலவிதங்களில் விளக்குவது—இவையெல்லாம் பண்டிதர்களின் மனமகிழ்ச்சிக்காக மட்டுமே. இவை நம்மைப் பூரணத்துவத்திற்கு அழைத்துச் செல்லாது.'[1] தங்களை அறிஞர்கள் எனக் கருதி உலகம் புகழட்டும் என்பதற்காக, அவர்கள் தங்கள் புலமையை இப்படியெல்லாம் வெளிக்காட்டுகிறார்கள். உண்மையான உலக குருமார்களுள் ஒருவர் கூட இப்படி சாஸ்திரங்களை விளக்கவும் முற்பட்டதில்லை; சிதைத்துத் திரித்துப் பொருள் கூறவும் இல்லை; 'இந்தச் சொல்லிற்கு இதுதான் பொருள். தத்துவ முறைப்படி இந்தச்

1. வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ர வ்யாக்யான கௌசலம் ।
வைதுஷ்யம் விதுஷாம் தத்வத் புக்தயே ந து முக்தயே ॥
—விவேக சூடாமணி, 60.

சொல்லுக்கும் அந்தச் சொல்லுக்கும் இதுதான் தொடர்பு' என்றெல்லாம் சொல்லவும் இல்லை.

உலகம் தந்துள்ள மாபெரும் குருமார்களைப் பாருங்கள். அவர்களுள் ஒருவர்கூட இப்படிச் செய்ததில்லை. ஆனாலும் அவர்கள் போதித்தார்கள். போதிப்பதற்கு எதுவும் இல்லாத மற்றவர்கள், ஒரு சொல்லை எடுத்துக்கொண்டு, 'அது எப்படித் தோன்றியது? அதை முதன்முதலில் பயன்படுத்தியவர்கள் யார்? அவர்கள் என்ன உண்டார்கள்? எப்படித் தூங்கினார்கள்?' என்பவை குறித்து, மூன்று பகுதிகள் கொண்ட ஒரு நூல் எழுதுவார்கள்.

எனது குருதேவர் ஒரு கதை சொல்வார்: சிலர் ஒரு மாந் தோப்பிற்குச் சென்றனர். அவர்களுள் பெரும்பாலோர் இலை களை எண்ணுவதிலும், அவற்றின் நிறத்தைக் கவனிப்பதிலும், கிளைகளின் அளவைக் கண்டுபிடிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டனர், குறிப்புகளும் எழுதிக் கொண்டனர். பிறகு அற்புத மானதொரு கலந்துரையாடலிலும் ஆழ்ந்தனர். ஆனால் புத்தி யுள்ள ஒருவர் மட்டும் தனியே அமர்ந்து, மாம்பழத்தைத் தின்றுகொண்டிருந்தார். இவர்களுள் யார் கெட்டிக்காரர்?

இலைகளையும் கிளைகளையும் எண்ணுவது, குறிப்புகள் எழுதுவது ஆகியவற்றை மற்றவர்களுக்கு விட்டுவிடுங்கள். இத் தகைய காரியங்களுக்கு மதிப்பு இருக்கவே செய்கிறது, ஆனால் ஆன்மீகத் துறையில் அதற்கு இடம் இல்லை. இத்தகைய காரியங்களால் மனிதன் ஆன்மீகத்தில் ஈடுபட முடியாது. இலை எண்ணுகின்ற இவர்களின் மத்தியில் ஓர் உறுதியான ஆன்மீக வாதியை நீங்கள் காணவே முடியாது.

ஆன்மீகம்தான் மனிதனின் மிக உயர்ந்த லட்சியம்; மிக உயர்ந்த பெருமை. மிக எளிதானதும் அதுவே. அதற்கு 'இலை எண்ணுதல்' தேவை இல்லை. நீங்கள் ஒரு கிறிஸ்தவனாக இருக்க விரும்பினால், 'ஏசு எங்கே பிறந்தார்? ஜெருசலேமிலா, பெத்லகேமிலா? அவர் தமது மலைப் பிரசங்கத்தை எந்தத் தேதியில் ஆற்றினார்?' என்றெல்லாம் தெரிந்துகொள்ள வேண் டிய அவசியமில்லை. மலைப் பிரசங்கத்தை நீங்கள் உணர வேண்டும், அதுதான் தேவை. அது என்று ஆற்றப்பட்டது என்பதைப்பற்றி இரண்டாயிரம் வார்த்தைகள் படிக்கத் தேவை யில்லை. இவை எல்லாம் பண்டிதர்களின் மனமகிழ்ச்சிக்காக! அது அவர்களிடம் இருந்துவிட்டுப் போகட்டும். நாம் அதற்கு ஒரு வாழ்த்துக் கூறிவிட்டு மாம்பழங்களைச் சுவைப்போம்!

குருவிடம் இருக்க வேண்டிய இரண்டாம் தகுதி, அவர் பாவமற்றவராக இருக்க வேண்டும் என்பதாகும். இங்கிலாந்தில் என் நண்பர் ஒருவர் ஒருமுறை என்னிடம், 'நாம் ஆசிரியரின் நடத்தையைக் கவனிக்க வேண்டுமா? அல்லது அவர் சொல்வதை மட்டும் ஆராய்ந்து அதை எடுத்துக்கொள்ள வேண்டுமா?' என்று கேட்டார். அப்படிக் கூடாது. எனக்கு ஒருவர் இயற்பியலையோ வேதியியலையோ அல்லது வேறு அறிவியலையோ கற்பிக்க விரும்பினால், அவருடைய ஒழுக்கம் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அவரால் இயற்பியலையோ, வேறு அறிவியலையோ கற்பிக்க முடியும். ஏனெனில் அறிவியலுக்குத் தேவையான அறிவு, மூளையைப் பற்றியது; மூளையின் நுட்பத்தைப் பற்றியது. சிறிதுகூட ஆன்ம வளர்ச்சி இல்லாமலும்கூட மிகச் சக்தி வாய்ந்த அறிவாற்றல் ஒருவனிடம் இருக்க முடியும்.

ஆனால் ஆன்மீக விஷயத்தில், தூய்மையற்ற ஒருவரிடம் ஆன்ம ஒளி இருப்பது ஆரம்பத்திலிருந்து முடிவுவரை முடியாத காரியம். அவர் எதைக் கற்பிக்க முடியும்? அவருக்கே ஒன்றும் தெரியாது. பரிசுத்தம்தான் ஆன்மீக உண்மை. 'இதயத் தூய்மை உடையவர்கள் பேறு பெற்றவர்கள்.' அவர்கள் இறைவனைத் தரிசிப்பார்கள். ஆன்மீகம் என்பதன் சாரம் முழுவதும் அந்த ஒரு வாக்கியத்தில் அடங்கியுள்ளது. இதை நீங்கள் அறிந்து கொண்டால், முன்பு சொல்லப்பட்ட எல்லாவற்றையும் அறிந்தவர் ஆவீர்கள்; இனி சொல்லப்போவது அத்தனையும் அறிந்தவர் ஆவீர்கள். நீங்கள் வேறு எங்கும் தேட வேண்டாம். அந்த ஒரு வாக்கியத்தில் உங்களுக்குத் தேவையான அத்தனையும் இருக்கிறது. மற்ற எல்லா சாஸ்திரங்களும் மறைந்து போனாலும் அந்த ஒரு வாக்கியமே உலகத்தைக் காப்பாற்றிவிட முடியும்.

உள்ளம் தூய்மை பெறாமல் இறைக்காட்சியோ, எல்லாம் கடந்த உண்மையின் காட்சியோ கிடைக்காது. அதனால்தான் குருவிடம் தூய்மை கட்டாயமாக இருக்க வேண்டும். முதலில் அவர் எத்தகையவர் என்று பார்க்க வேண்டும். பிறகுதான் அவர் என்ன சொல்கிறார் என்பதைக் கவனிக்க வேண்டும். சாதாரண ஆசிரியர்களின் விஷயத்தில் அப்படியல்ல. அங்கு, அவர்கள் எத்தகையவர்கள் என்பதைவிட அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதற்கே நாம் முக்கியத்துவம் கொடுக்கிறோம்.

ஆன்மீகத்தைப் போதிப்பவரான குரு விஷயத்தில், அவர் எப்படிப்பட்டவர், தூயவரா என்பதைத்தான் முதலில் கவனிக்க வேண்டும். அவர் தூயவராக இருந்தால் மட்டுமே அவரது

வார்த்தைகளுக்கு மதிப்பு ஏற்படும். ஆன்மீக ஆற்றலை வழங்கு பவர் அவர். அவரிடம் ஆன்மீக சக்தி இல்லாவிட்டால் அவர் எதை வழங்குவார்? உதாரணமாக, இங்கே இருக்கின்ற வெப்ப அடுப்பில் வெப்பம் இருந்தால்தான் அது வெப்ப அலைகளை வெளியிட முடியும்; இல்லாவிட்டால் முடியாது. அதேபோல் குருவின் சிந்தனை அதிர்வுகள்தான் சீடனின் மனத்திற்குப் பாய்ச்சப் படுகின்றன. அவை ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு இடம் மாறுகின்றனவே தவிர, நமது அறிவுச் சக்திகளைத் தூண்டுவதுடன் மட்டும் நின்றுவிடுபவை அல்ல. உண்மையானதும், உணரக்கூடியதுமான ஏதோ ஒன்று குருவிடமிருந்து சீடனை அடைய வேண்டும். ஆகவே முக்கியமான நிபந்தனை, குரு உண்மையானவராக, தூயவராக இருக்க வேண்டும் என்பதுதான்.

மூன்றாவது தகுதி அவரது நோக்கம். ஏதாவது ஓர் உள் நோக்கத்தோடு, அதாவது பெயருக்கும் புகழுக்குமாக அவர் போதிக்கிறாரா அல்லது அன்பிற்காக, உங்கள்மீது கொண் டுள்ள உண்மையான அன்பிற்காக அவர் போதிக்கிறாரா என்று கவனிக்க வேண்டும். குருவிடமிருந்து சீடனுக்கு ஆன்மீக சக்திகள் அனுப்பப்படும்போது அவற்றை அன்பின் மூலமாகத் தான் அனுப்ப இயலும். வேறு எதன்மூலமாகவும் அனுப்ப முடியாது. ஏதோ லாபம், புகழ் என்று எந்த உள்நோக்கத்திற் காகச் செய்தாலும், அனுப்பப்படும் சாதனத்தை அது உடனே அழித்துவிடும். ஆகவே எல்லாம் அன்பின் மூலமாகத்தான் செய்யப்பட வேண்டும்.

கடவுளை அறிந்தவர் மட்டுமே குருவாக இருக்க முடியும். குருவிடம் இந்தத் தகுதிகள் இருந்தால் உங்களுக்கு ஆபத் தில்லை; இல்லாவிட்டால் அவரிடம் கற்பது ஆபத்தானது. நல்லதை அவரால் கொடுக்க முடியாவிட்டால், சிலவேளை களில் அவரிடமிருந்து கெட்டது கிடைக்கும் ஆபத்துகூட இருக்கிறது. இந்த விஷயத்தில் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். யாரை வேண்டுமானாலும் குருவாக ஏற்றுக்கொள்ள இயலாது என்பது இதிலிருந்து தெரிகிறது.

'ஓடைகள் போதனை செய்கின்றன, கற்கள் போதனை செய்கின்றன'[1] என்றெல்லாம் சொல்வது கவிதைநயத்துடன்

---

1. And this our life exempt form public haunt
Finds tongues in trees, books in the running brooks,
Sermons in stones and good in everything. —*As You Like It*, Shakespeare.

விளங்கலாம். ஆனால் தன்னிடம் இம்மியளவாவது உண்மை இல்லாதவன் போதனை செய்ய முடியாது. ஓடைகள் யாருக்குப் போதிக்கின்றன? யாருடைய வாழ்க்கைத் தாமரை உண்மை யான குருவிடமிருந்து பெற்ற ஒளியால் மலர்ந்து விட்டதோ, அவருக்குத்தான் அவை போதனை செய்ய முடியும். இதயம் மலர்ந்துவிட்டால் ஓடைகளிலிருந்தும் போதனை பெறலாம்; கற்களிலிருந்தும் போதனை பெறலாம். அவற்றிலிருந்து ஆன் மீக போதனையும் பெறலாம். ஆனால் மலராத இதயம் அங்கே ஓடைகளையும், உருள்கின்ற கற்களையும்தான் பார்க்கும்.

பார்வையற்றவன் பொருட்காட்சி சாலைக்குப் போகலாம். அவனுக்கு அதனால் ஒரு பயனும் இல்லை. முதலில் அவனது கண்கள் திறக்கப்பட வேண்டும். அதற்குப் பிறகுதான் அவன் அங்குள்ளவற்றைப்பற்றித் தெரிந்துகொள்ள முடியும். ஆன்மீகத்தைப் பொறுத்தவரை கண்ணைத் திறப்பவர் குருவே. குரு விஷயத்தில் நம்முடைய உறவு, மூதாதையர்-சந்ததி என்கிற உறவுதான். குரு ஆன்மீக மூதாதையர், சீடன் ஆன்மீக சந்ததி. விடுதலை, சுதந்திரம் என்றெல்லாம் பேசுவது சரி; ஆனால் அடக்கம், பணிவு, மரியாதை, நம்பிக்கை இவை இல்லாமல் ஆன்மீகம் இல்லை. குருவுக்கும் சீடனுக்கும் இடையே இந்த உறவு இருக்கின்ற இடத்தில்தான் ஆன்மீகச் செம்மல்கள் மலர் கிறார்கள் என்பது குறிப்பிடப்பட வேண்டிய உண்மை. இந்தப் பண்புகளைத் தூக்கியெறிந்து விட்டவர்களுக்கு ஆன்மீகம் என்பது வெறும் பொழுதுபோக்கே.

குருவுக்கும் சீடனுக்கும் இடையே இத்தகைய உறவு இல் லாத நாடுகளிலும் சமுதாயங்களிலும், ஆன்மீகம் என்பது கிட்டத்தட்டப் புரிந்துகொள்ள முடியாத ஒன்றாகவே இருக் கிறது. இத்தகைய உணர்ச்சி இல்லாவிட்டால் ஆன்மீகம் வராது. முதலாவதாக, சக்தியைப் பாய்ச்சுவதற்கான குரு யாரும் இல்லை. இரண்டாவதாக, எல்லோரும் சுதந்திரமாக இருப்ப தால் யாருக்குப் பாய்ச்சுவது? யாரிடமிருந்து அவர்கள் கற்றுக் கொள்ள முடியும்? அப்படியே அவர்கள் கற்றுக்கொள்ள முன் வந்தாலும் அறிவை விலைக்கு வாங்கவே வருகிறார்கள். 'ஒரு டாலர் பெறுமானமுள்ள ஆன்மீகம் கொடுங்கள்' என்று கேட் கிறார்கள். 'இதற்கு ஒரு டாலர் செலவிடக் கூடாதா?' என்று நினைக்கிறார்கள். இவ்வாறு ஆன்மீகத்தை அடைய முடியாது.

ஒரு குருவினால் பாய்ச்சப்பட்டுச் சீடனுள் புகும் அறி வொளியை விட உயர்ந்ததும், புனிதமானதுமான வேறு ஒன்று

இருக்க முடியாது. ஒருவன் பூரண யோகியாகும்போது அது தானாகவே வந்து சேரும். அதை நூல்களிலிருந்து பெற முடியாது. உலகின் நான்கு மூலைகளுக்கும் சென்று உங்கள் தலையை முட்டிக்கொள்ளுங்கள். இமய மலைக்கோ, ஆல்ப்ஸ் மலைக்கோ, காகசஸ் மலைக்கோ, கோபி பாலைவனத்திற்கோ, சஹாரா பாலைவனத்திற்கோ, அல்லது கடலின் அடியாழத் திற்கோ சென்று தேடுங்கள். ஒரு குருவைக் கண்டுபிடிக்கும் வரையில் உங்களுக்கு அது கிடைக்காது. குருவைக் கண்டுபிடி யுங்கள், மகனின் நிலையிலிருந்து அவருக்குச் சேவை செய்யுங் கள்; அவருடைய ஆதிக்கம் உள்ளே செல்ல உங்கள் இதயத்தைத் திறவுங்கள்; அவரிடம் கடவுள் வெளிப்படுவதைக் காணுங்கள்.

குருவைக் கடவுளின் மிக உயர்ந்த வெளிப்பாடாகக் கொள்ள வேண்டும். நமது முழுக்கவனமும் அவர்மீது குவியும் போது, அவர் ஒரு மனிதன் என்ற நிலையிலிருந்து மறைந்து விடுகிறார்; அவரது உருவம் மறையும். அந்த இடத்தில் இறைவனே எஞ்சுவார். இத்தகைய மரியாதையோடும், அன் போடும் உண்மையை அணுகுபவர்களிடம் உண்மையே வடி வான இறைவன் அற்புதமான வார்த்தைகளைப் பேசுவார்; 'உன் கால்களிலிருந்து மிதியடிகளைக் கழற்றிவிடு, ஏனெனில் நீ நின்று கொண்டிருக்கும் இடம் புனிதமானது.'[1] அவரது திரு நாமம் ஓதப்படுகின்ற இடம் புனிதமானது. அப்படி இருக்க அந்தத் திருநாமத்தை ஜபித்து வாழ்பவர் எவ்வளவு உயர்ந்தவர்! ஆன்மீக உண்மைகளை அள்ளி வழங்குகின்ற அத்தகையோரை எவ்வளவு பயபக்தியுடன் நாம் அணுக வேண்டும்! இந்த உணர் வோடுதான் நாம் போதனை பெற வேண்டும். இத்தகைய குரு மார்கள் உலகில் மிகக் குறைவே. ஆனால் ஒருபோதும் இவர்கள் அடியோடு இல்லாமல் இருந்ததில்லை. இந்த மனித தெய்வங்கள் உலகில் இல்லாமல் போகின்ற அந்தக் கணமே உலகம் உலகமாக இல்லாமல் போய்விடும்; அது நரகமாக மாறிவிடும், மறைந்து விடும். மனித வாழ்வின் மிக அழகிய மலர்கள் இந்தக் குருமார் களே. உலகம் நடப்பது இவர்களால்தான். இவர்களது ஆற்ற லால்தான் சமுதாயத்தின் இணைப்புகள் சிதறாமல் பிணைந்து செயல்பட்டு வருகின்றன.

இவர்களைத் தவிர இன்னொரு வகை குருமார்கள் உள்ளனர். அவர்கள் உலகின் ஏசுநாதர் போன்றவர்கள். அவர்கள்

---

1. மோசஸிடம் கடவுள் கூறியதாக பைபிளில் வரும் பகுதி இது.

எல்லா குருமார்களுக்கும் குருவானவர்கள், ஆண்டவனே மனிதராக வந்தவர்கள், மிகவும் உயர்ந்தவர்கள். ஒரு ஸ்பரிசத்தாலேயே, ஒரு சங்கல்பத்தாலேயே அவர்களால் ஆன்மீகத்தை வழங்க முடியும். தாழ்ந்தவர்களும் மிகவும் இழிந்தவர்களும்கூட அதன் விளைவால் ஒரு நொடிப் பொழுதில் மகான்களாகி விடுகிறார்கள். அவர்கள் இப்படி எல்லாம் செய்ததுபற்றி நீங்கள் படித்ததில்லையா? சற்று முன்பு நான் விளக்கியது இத்தகைய குருமார்களைப்பற்றி அல்ல. இவர்கள் எல்லா குருமார்களுக்கும் குருவாக இருப்பவர்கள், இறைவனின் மிக மேலான வெளிப்பாடாக உள்ளவர்கள். இவர்களின்மூலமாக அல்லாமல் நாம் இறைவனைக் காண முடியாது. இவர்களை நாம் வழிபடாமல் இருக்க முடியாது. இவர்கள் மட்டுமே நமது வழிபாட்டிற்கு உரியவர்கள்.

இத்தகைய இறைமக்களிடம் அல்லாமல் யாருமே ஆண்டவனை நேரில் கண்டதில்லை. நம்மால் இறைவனைக் 'காண' இயலாது. காண முயலும்போது, அவரது உண்மையான உருவத்தைப் பயங்கரமாகத் திரித்து கேலிக்கூத்தாக்கி விடுகிறோம். இந்தியக் கதை ஒன்று உண்டு: பாமரன் ஒருவனிடம் சிவபெருமானின் திருவுருவத்தைச் செய்யும்படிக் கேட்டுக் கொண்டார்கள். அவனும் பல நாள் பாடுபட்டு முயன்றான். இறுதியில் அவன் முடித்தபோது அது ஒரு குரங்கின் உருவமாக இருந்தது. கடவுளை உருவப்படுத்த நாம் முயலும்போது அவரைத் திரித்து விடுகிறோம். நாம் மனிதராக இருக்கும்வரை அவரை மனிதரை விட உயர்ந்த ஒருவராக நம்மால் எண்ணிப் பார்க்க முடியாது. நம்முடைய மனித இயல்பை நாம் கடந்து செல்லும் ஒரு காலம் வரும். அப்போது அவர் எப்படி இருக்கிறாரோ அப்படி அவரை உணர இயலும். ஆனால் நாம் மனிதர்களாக இருக்கும் வரை அவரை மனித வடிவில்தான் வழிபட வேண்டும். நீங்கள் என்ன வேண்டுமானாலும் பேசலாம், என்னவிதமாக வேண்டுமானாலும் முயற்சி செய்யலாம். ஆனால் மனிதனாக அல்லாமல் வேறுவிதமாக அவரைப் பார்க்க முடியாது.

நாம் அறிவாற்றல் மிக்க சொற்பொழிவுகளை ஆற்றலாம், பெரிய பகுத்தறிவுவாதிகளாகி, கடவுளைப்பற்றிய கதைகளெல்லாம் பிதற்றல் என்று நிரூபிக்கலாம். ஆனால் நடைமுறைப் பொது அறிவில் நின்று பார்ப்போம். இந்த அதிஅற்புத அறிவாற்றலுக்குப் பின்னால் என்ன இருக்கிறது? பூஜ்யம், வெறுமை, பயனற்ற நுரை மட்டுமே.

இறை வழிபாட்டை எதிர்த்து யாராவது அறிவைப் பிழிந்து மாபெரும் சொற்பொழிவு ஆற்றுவதை அடுத்த முறை நீங்கள் கேட்க நேர்ந்தால் அவனை விடாதீர்கள்; 'கடவுளைப் பற்றி உன் கருத்து என்ன?' என்று கேளுங்கள். 'எல்லாம் வல்லவர், எங்கும் உள்ளவர், எங்கும் நிறைந்த அன்பு' என்றெல்லாம் அவன் பேசுகிறானே, அந்தச் சொற்களின் எழுத்துக் கூட்டலைத் தவிர, அவற்றின் பொருளைப்பற்றி அவனுக்கு என்ன தெரியும் என்று கேளுங்கள். அவனுக்கு ஒன்றும் தெரியாது; அவனால் ஒரு கருத்திற்கும் உருவம் கொடுக்க முடியாது. ஒரு புத்தகத்தையும் படித்தறியாத, தெருவில் செல்பவனைவிட அவன் எந்த விதத்திலும் மேலானவன் அல்ல. தெருவில் போகிறவன் அமைதியாகவாவது இருக்கிறான், உலகைக் குழப்பாமலாவது இருக்கிறான். இவனோ வாதப் பிரதிவாதங்கள் செய்து மற்றவர்களின் மனத்தைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறான். இவனும் கடவுளைக் கண்டதில்லை. ஆகவே இவனும் அவனும் ஒரே நிலையில்தான் இருக்கிறார்கள்.

மதம் என்பது இறையனுபூதி பெறுவதே. வெற்றுப் பேச்சிற்கும் அனுபூதிக்கும் உள்ள மிகத் தெளிவான வித்தியாசத்தை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். நீங்கள் உங்கள் ஆன்மாவில் உணர்வதுதான் அனுபூதி.

இனி, 'எங்கும் நிறைந்தவர்' என்பதற்கு என்ன பொருள்? ஆன்மாவைப் பற்றிய கருத்தே மனிதனுக்கு இல்லை. தன் முன்னால் உள்ள பொருட்களோடு இணைத்தே அதை அவன் நினைக்க வேண்டியிருக்கிறது. நீல வானத்தையோ, பரந்த வயல்களையோ, கடலையோ, அல்லது பெரிதாக உள்ள வேறு எதையோதான் அவன் நினைக்க வேண்டும். வேறு எப்படி அவனால் இறைவனை நினைக்க முடியும்? எனவே நீங்கள் என்ன செய்கிறீர்கள்? எங்கும் நிறைந்தவர் என்று சொல்கிறீர்கள், கடலைப்பற்றி நினைக்கிறீர்கள். கடவுள் கடலா என்ன? வாதங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடுவோம். நமக்கு நடைமுறைப் பொது அறிவுதான் வேண்டும். ஆனால் அதைப்போன்று அவ்வளவு அரிதாக உள்ளதும் வேறு எதுவும் கிடையாது. உலகமே வெற்றுப் பேச்சால்தான் நிறைந்துள்ளது.

நாம் இப்போது மனித உடலமைப்பில் கட்டுண்டிருக்கிறோம். எனவே நம்மால் கடவுளை மனிதனாகத்தான் பார்க்க முடியும். எருமைகள் இறைவனை வழிபட முடியுமானால் அவை அவரை ஒரு பெரிய எருமையாக நினைக்கும். ஒரு மீன்

கடவுளை வழிபட விரும்பினால், அது அவரை ஒரு பெரிய மீனாக எண்ணிக்கொள்ளும். மனிதன் ஆண்டவனை மனிதராகவே நினைக்க வேண்டும். இவை வெறும் கற்பனையல்ல. நீங்கள், நான், எருமை, மீன் எல்லாம் பல்வேறு பாத்திரங்கள். இவை அனைத்தும் கடலுக்குச் செல்கின்றன. தங்கள் அளவுக்கேற்றவாறு தங்களுள் நீரை நிறைத்துக் கொள்கின்றன. மனிதனில் மனிதனுக்கேற்றபடி, எருமையில் எருமைக்கேற்றபடி, மீனில் மீனுக்கேற்றபடி—ஒவ்வொரு பாத்திரத்திலும் தண்ணீர்தான் உள்ளது. அதேபோல்தான் எல்லோரிலும் உள்ள கடவுள் விஷயமும். மனிதன் அவரைப் பார்க்கும்போது மனிதனாகப் பார்க்கிறான். மிருகங்கள் அவரை மிருகமாகப் பார்க்கின்றன. எல்லோரும் தங்கள் எண்ணப்படியே பார்க்கின்றனர். அவரை இந்த ஒரு வழியில்தான் நீங்கள் பார்க்க முடியும். நீங்கள் அவரை மனிதராகவே வழிபட வேண்டும். ஏனெனில் வேறு வழி இல்லை.

இரண்டு வகையான மனிதர்கள் கடவுளை மனிதராக வழிபடுவதில்லை. ஆன்மீக வாசனையே அற்ற மனித மிருகங்கள் ஒரு வகையினர்; மானிட வாழ்விற்கு அப்பால் சென்று, மனத்தையும் உடலுணர்வையும் துறந்து, இயற்கையின் வரம்பைக் கடந்த பரமஹம்சர்கள் இரண்டாவது வகையினர். இயற்கை முழுவதுமே அவர்களது ஆன்மா ஆகிவிட்டது. அவர்களுக்கு மனமோ உடலுணர்வோ இல்லை. அவர்கள் ஒரு ஏசுவையோ புத்தரையோபோல், கடவுளைக் கடவுளாக வழிபட முடியும்! அவர்கள் அவரை மனிதராக வழிபடவில்லை. இதற்கு எதிர் கோடியில் இருப்பவன் மனித மிருகம்.

ஒன்றுக்கொன்று எதிர்கோடியில் இருப்பவை ஒரேபோல் தோன்றும் என்பது உங்களுக்குத் தெரியும். அறியாமையின் கோடியில் இருப்பவனும் அறிவின் கோடியில் இருப்பவனும் இவ்வாறுதான்—இருவருமே யாரையும் வழிபடுவதில்லை. வெறும் முட்டாள், கடவுளை வழிபடுவதில்லை. ஏனெனில் அதன் அவசியத்தை உணரும் அளவுக்கு அவன் வளர்ச்சி அடையவில்லை. மிக உயர்ந்த ஞானத்தைப் பெற்றவன் கடவுளை வழிபடுவதில்லை. அவன் அனுபூதி பெற்றுக் கடவுளோடு ஒன்றாகிவிட்டான். கடவுளே கடவுளை ஒருபோதும் வழிபடமாட்டார். இந்த இரு துருவ நிலைகளுக்கு இடையில் உள்ள யாராவது, தான் கடவுளை மனிதனாக வணங்கப் போவதில்லை என்று சொன்னால், அவன் விஷயத்தில் ஜாக்கிரதை

யாக இருங்கள். அவன் ஒரு விடலை. அவன் கூறும் மதம் நுனிப் புல் மேய்பவர்களுக்கு உரியது. அது வெறும் அறிவுப் பிதற்றல்.

எனவே இறைவனை மனிதனாக வழிபடுவது மிகவும் இன்றியமையாதது. எந்த இனங்களுக்குத் தாங்கள் வழிபடுவதற்கு அத்தகைய 'இறை மனிதர்' இருக்கிறாரோ, அவர்கள் பேறு பெற்றவர்கள். கிறிஸ்தவர்களுக்கு ஏசு என்னும் இறை மனிதர் இருக்கிறார். ஆகவே அவர்கள் அவரை இறுகப் பற்றிக் கொள்ள வேண்டும், ஒருபோதும் விட்டுவிடக் கூடாது. கடவுளைக் காண அதுதான் இயல்பான வழி—மனிதனில் கடவுளைக் காண்பது. கடவுளைப்பற்றிய நம் எல்லா கருத்துக்களும் அங்கே ஒருமுனைப்பட முடியும். ஆனால் கிறிஸ்தவர்களுடைய ஒரு பெரிய முட்டுக்கட்டை என்னவென்றால், ஏசுவைத் தவிர பிற இறைமனிதர்களை மதிக்காமல் இருப்பதே. ஏசு ஓர் அவதார புருஷர். அவரைப் போன்றவரே புத்தர். இன்னும் நூற்றுக்கணக்கானவர்கள் இருப்பார்கள். இறைவனை எங்குமே எல்லைப்படுத்தாதீர்கள். இறைவனுக்குச் செலுத்த வேண்டிய எல்லா மரியாதையையும் கிறிஸ்தவர்கள் ஏசுவிற்குச் செலுத்த வேண்டும். அவர்களால் முடியக்கூடிய ஒரே வழிபாடு அதுவே. இறைவனை வழிபட இயலாது. பிரபஞ்சம் முழுவதிலும் அவர் நிறைந்துள்ளார். அவர் மனிதனாக அவதரிக்கிறார்; அந்த அவதார புருஷரிடமே நாம் பிரார்த்திக்க முடியும். கிறிஸ்தவர்கள் 'ஏசுவின் பெயரால்' பிரார்த்திப்பது நல்லது. கடவுளிடம் பிரார்த்திப்பதை நிறுத்திவிட்டு, ஏசுவிடம் மட்டுமே பிரார்த்திப்பது இன்னும் நல்லது.

மனிதனது குறைபாடுகள் இறைவனுக்குத் தெரியும். எனவே 'அறம் தேய்ந்து மறம் எப்போது மேவிடுகிறதோ அப்போது மனித குலத்திற்கு உதவ நான் வருகிறேன்'[1] என்று கிருஷ்ணர் கூறுகிறார். 'எல்லாம் வல்ல, எங்கும் நிறைந்த நான், இந்தப் பிரபஞ்சத்திற்குக் கடவுளான நான் மனித உடல் தரித்து வந்திருக்கிறேன் என்பதை உணராத முட்டாள்கள், அது எப்படி முடியும் என்று என்னை ஏளனம் செய்கிறார்கள்.'[2] அவர்களது

---

1. யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத।
அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்॥

—கீதை, 4.7.

2. அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம்।
பரம் பாவம் அஜானந்தோ மம பூத மஹேச்வரம்॥

—கீதை, 9.11.

மனத்தை அஞ்ஞானக் கருமேகம் மறைத்திருக்கிறது. எனவே அவரில் அவர்களால் உலக நாயகனான இறைவனைக் காண முடியாது.

இறைவனின் இத்தகைய மாபெரும் அவதாரங்களை வழிபட்டாக வேண்டும். வழிபட்டாக வேண்டும் என்றல்ல, அவர்களை மட்டுமே வழிபட இயலும். அவர்கள் பிறந்த நாளும், உலகை விட்டுச் சென்ற நாளும் மிகவும் பயபக்தியோடு நினைக்க வேண்டிய நாட்கள். ஏசு எப்படிக் கடவுளை வழிபட வேண்டுமென்று விரும்பினாரோ, அப்படியே நான் அவரை வழிபடுவேன். அவர் பிறந்த அந்தப் புனித நாளில், விருந்து உண்பதைவிடப் பட்டினி கிடந்து பிரார்த்தனை செய்வதையே நான் விரும்புவேன். அவர்களைப்பற்றி அடிக்கடி நினைக்கும் போது அந்த மகா புருஷர்கள் நம் இதயத்தில் வெளிப்படு கிறார்கள்; அவர்களைப் போலவே நம்மையும் ஆக்குகிறார்கள். நமது இயல்பு முற்றிலுமாக மாறி நாமும் அவர்களைப்போல் ஆகிவிடுகிறோம்.

ஆனால் புத்தரையும் ஏசுவையும் காற்றில் மிதந்து திரியும் ஆவிகளோடு சேர்த்துவிடாதீர்கள். அது தெய்வ நிந்தனை. தங்கள் ரகசியக் கூட்டத்திற்கு (Seance) ஏசுவின் ஆவி நடனமாட வருகிறது என்று பிதற்றித் திரிகின்ற கூட்டத்தினரை நான் இந்த நாட்டில் கண்டேன். அவதார புருஷர்கள் அவ்வாறு வருவதில்லை. அவர்கள் ஒருவனைத் தொட்டால் போதும், அவனில் எத்தனையோ மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஏசு தொடும் போது, அவனது மனம் முழுவதும் மாறுகிறது. அவனும் அவ ரைப் போலவே மாறிவிடுவான். அவனது வாழ்க்கை ஆன்மீக மயமாகிவிடும். ஆன்மீகசக்தி, அவனது மயிர்க்கால்தோறும் வெளிவரும்.

ஏசு நோய்களைக் குணப்படுத்தியதிலும், அற்புதங் களைச் செய்வதிலும் வெளிப்பட்ட சக்தி எத்தகையது? அவை சாதாரணமான இழிந்த சக்திகள். அவற்றை அவரால் வெளிப் படுத்தாமல் இருக்க முடியவில்லை. ஏனெனில் அவர் இழிந்த மக்களோடு வாழ வேண்டியிருந்தது. இந்த அற்புதங்களை அவர் எங்கே நிகழ்த்தினார்? யூதர்களிடையே. யூதர்களோ அவரை ஏற்றுக் கொள்ளவில்லை. அது எங்கே நிகழவில்லை? ஐரோப்பாவில். தம்மை ஏற்காத யூதர்களிடையேதான் அவர் அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார்; ஏற்றுக்கொண்ட ஐரோப்பாவிற்கு மலைப் பிரசங்கத்தை அளித்தார்.

சிந்தனைசக்தி படைத்த மனிதன் உண்மையை ஏற்றுக் கொண்டான்; பயனற்றதை உதறித் தள்ளினான்.

ஏசுவின் பேராற்றல், அவர் அற்புதங்கள் நிகழ்த்தியதிலோ நோயாளிகளைக் குணப்படுத்தியதிலோ இல்லை. இவற்றை எந்த மடையனும் செய்யலாம். எந்த முட்டாளும் பிறரைக் குணப்படுத்த முடியும். பிசாசுகள் மற்றவர்களைக் குணப் படுத்த முடியும். பேய்பிடித்த கொடூரமான மனிதர்கள் பிரமிப் பூட்டுகின்ற அற்புதங்கள் நிகழ்த்துவதை நான் பார்த்திருக் கிறேன். அவர்கள் பூமியிலிருந்து பழங்களைக் கொண்டு வரு வார்கள். முட்டாள்களும் பேய்பிடித்தவர்களும் இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் மூன்றையும்பற்றிக் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். கொடிய வியாதிகளைக்கூட மடை யர்கள் தங்கள் ஒரு பார்வையினால், தங்கள் மனோ சக்தியால் குணப்படுத்துவதைக் கண்டிருக்கிறேன். இவையும் உண்மை யில் சக்திகள்தான். ஆனால் இவை பேய்களின் சக்திகள். முதலில் கூறியது, ஏசுவின் ஆன்மீக சக்தி. அது எல்லோரையும் அணைத் துச் செல்கின்ற பேரன்பின் சக்தி. அது எல்லாம் வல்ல சக்தி. அது எப்போதும் வாழும்; வாழ்ந்திருக்கிறது. அவர் அருளிய உண்மையும் என்றும் நிலைக்கும். அவர் ஒரே பார்வையில் குணப்படுத்தியவை மறந்து போகலாம். ஆனால் அவர் கூறிய, ‘இதயத் தூய்மை உடையவர்கள் பேறு பெற்றவர்கள்’ என்ற போதனை இன்றும் வாழ்கிறது. அது அழிவற்ற பேராற்றலின் இருப்பிடம். மனிதன் வாழும்வரை அது ஆற்றலை வழங்கிக் கொண்டேயிருக்கும். இறைவனின் திருநாமத்தை மனிதன் மறக்காததுவரை அது தொடர்ந்து விளங்கிக் கொண்டிருக்கும். ஏசுவிற்கு இருந்த சக்திகளும், அவர் பிறருக்குப் போதித்த ஆற்றல்மிக்க சொற்களும் இவையே. அவரது ஆற்றல் தூய்மை யின் ஆற்றல், நிலையான ஆற்றல். எனவே அவரை வழிபடும் போது, அவரிடம் பிரார்த்தனை செய்யும்போது, நாம் எதைத் தேடுகிறோம் என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அற்புதங்கள் செய்வதற்கான மூடசக்தியை நாம் தேடக் கூடாது. மனிதனுக்கு முக்தி அளிக்கின்ற, இயற்கைமீது ஆணை செலுத் தும் ஆற்றலை வழங்குகின்ற, அவனது அடிமைச் சின்னத்தை அகற்றி இறைக் காட்சியை நல்குகின்ற அந்த அற்புத ஆன்ம சக்தியையே நாம் நாட வேண்டும். ❋

## 4. சின்னங்களின் தேவை

பக்தி இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒன்று வைதீக பக்தி; அதாவது விதிமுறைக்கு உட்பட்டது, புறச்சடங்கு களுடன் கூடியது. மற்றொன்று முக்கிய பக்தி; அதாவது மிகச் சிறந்தது. பக்தி என்ற சொல், மிகவும் கீழ்நிலையிலிருந்து மிக உயர்ந்த நிலை வரையிலுமுள்ள எல்லா வழிபாட்டு நிலை களையும் தழுவி நிற்கிறது. உலகத்தில் எந்த நாட்டைச் சேர்ந்த தானாலும் சரி, எந்த மதத்தைச் சேர்ந்ததானாலும் சரி, எல்லா வழிபாடுகளும் அன்பினால் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் பெரும்பான்மையும் வெறும் சடங்குகள் மட்டுமே. இனி, சடங்குகள் அல்லாதவையும் பல உள்ளன; இவற்றை அன்பு நெறி என்று சொல்ல முடியாது. இவை கீழ்நிலையிலேயே உள்ளன. எனினும் இவை தேவையானவை. ஆன்மாவை முன் னேறச் செய்ய பக்தியின் இந்தப் புறப் பகுதி மிகவும் இன்றியமை யாதது. மிக உயர்ந்த நிலையை ஒரே தாவலில் அடைய முடியும் என்று எண்ணுபவன் பெரிய தவறு செய்கிறான். தான் ஒரே நாளில் முதிர்ந்து கிழவனாகப் போவதாக ஒரு குழந்தை நினைத் தால், அது தவறு.

ஆன்மீகம் என்பது நூல்களிலோ அறிவுத் திறனிலோ, வாதங்களிலோ இல்லை என்பதை மறக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன். வாதங்களும், கொள்கைகளும், கோட்பாடுகளும், நம்பிக்கைகளும், சாஸ்திரங்களும், சடங்குகளும் எல்லாம் ஆன்மீக வாழ்வில் உதவி செய்கின்றன, அவ்வளவுதான். ஆனால் ஆன்மீகம் என்பது அனுபூதி. கடவுள் ஒருவர் இருப்பதாக நாம் எல்லோரும் சொல்கிறோம். நீங்கள் அவரை நேரில் கண்டிருக் கிறீர்களா? இதுதான் கேள்வி. 'கடவுள் விண்ணில் இருக்கிறார்' என்று ஒருவன் சொல்கிறான். அவனிடம், 'நீ அவரைக் கண்டி ருக்கிறாயா?' என்று கேளுங்கள். அவன் 'கண்டிருக்கிறேன்' என்று சொன்னால் அவனைக் கேலி செய்து அவனை ஒரு பைத்தியம் என்று கூறுகிறீர்கள். பெரும்பாலோரைப் பொறுத்த வரை மதம் என்பது ஒருவகையான அறிவுக் கோட்பாடு,

ஒரு கொள்கை, அவ்வளவுதான். இத்தகைய மதத்தை நான் ஒரு போதும் பிரச்சாரம் செய்ததில்லை. அதை மதம் என்று நான் கூறவும் மாட்டேன். மதம் என்பது நமது அறிவுக்கு ஏற்ற சில விஷயங்களை ஏற்றுக்கொள்வதிலோ ஏற்காத விஷயங்களை விட்டுவிடுவதிலோ இல்லை. இத்தகைய மதத்தைப் பின்பற்று வதைவிட நாத்திகனாக இருப்பதே நல்லது.

ஆன்மா ஒன்று உண்டு என்று சொல்கிறீர்கள். அந்த ஆன்மாவை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? நமக்கெல்லாம் ஆன்மா இருந்தும் நாம் ஏன் அதைப் பார்த்ததில்லை? இந்தக் கேள்விக்கு விடை அளித்தாக வேண்டும்; ஆன்மாவைக் காண வழி கண்டாக வேண்டும். இல்லாவிட்டால் மதம் அதுஇது என்றெல்லாம் பேசுவது பயனற்றது. ஒரு மதம் உண்மையென் றால், அது ஆன்மாவையும் ஆண்டவனையும் உண்மையையும் நம் உள்ளத்தில் காட்ட வேண்டும். இந்தக் கொள்கை, அந்தக் கொள்கை என்று நானும் நீங்களும் ஊழிக்காலம்வரையில் வாதாடிக்கொண்டே இருக்கலாம். ஒரு முடிவிற்கும் வரவே மாட்டோம். காலங்காலமாக மக்கள் வாதிட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள். என்ன பயன்? அறிவு அங்கே போகவே முடி யாது. அறிவின் எல்லைக்கு அப்பால் நாம் போக வேண்டும். மதத்திற்கான நிரூபணம் நேரடி அனுபவம். இதோ இந்தச் சுவர் இருப்பதற்கான நிரூபணம் அதை நாம் நேரடியாகக் காண்பது தான். சுவர் இருக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி காலங் காலமாக வாதம் புரிந்தாலும், ஒரு முடிவிற்கும் வர முடியாது; நீங்கள் நேரடியாகப் பார்த்தால் போதும், எல்லா வாதங்களும் அடங்கிவிடும். உலகிலுள்ளோர் அனைவரும் சேர்ந்து, இந்தச் சுவர் இல்லையென்று உங்களிடம் சொன்னாலும் அதை நீங்கள் நம்ப மாட்டீர்கள். ஏனெனில் உலகிலுள்ள கொள்கைகள் கோட்பாடுகள் அனைத்தையும்விட மேலான சாட்சி உங்கள் கண்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

ஆன்மீக வாழ்வில் ஈடுபட விரும்பினால் முதலில் புத்தகங் களையெல்லாம் தூக்கி எறிந்துவிட வேண்டும். புத்தகங்களைக் குறைவாகப் படிக்கின்ற அளவிற்கு உங்களுக்கு நல்லது. ஒரு நேரத்தில் ஒன்றைச் செய்யுங்கள். மூளையைக் குழப்பிக் கொள் வதே தற்கால மேலை நாட்டினரின் போக்காக உள்ளது. ஜீரணிக்க முடியாத எத்தனையோ கருத்துக்கள் அவர்களின் மூளையில் முட்டிமோதிக் கொண்டு, தெளிவான ஒரு நிலைக்கு வருகின்ற வாய்ப்பைப் பெறாமல் குழம்பிக் கிடக்கின்றன.

பல நேரங்களில் அது ஒரு நோயாகவே ஆகிவிடுகிறது. இது ஒருபோதும் மதம் ஆகாது.

இன்னும் சிலருக்கு நரம்புகளில் ஒரு கிளர்ச்சி வேண்டியிருக்கிறது. அவர்களுக்குப் பேய்க் கதைகளைச் சொல்லுங்கள்; வடதுருவத்திலிருந்து அல்லது எங்கோ தொலை தூரத்திலிருந்து சிறகடித்துப் பறந்து வருபவர்களைப் பற்றியோ அல்லது வேறு வினோத உருவங்களில் வருபவர்களைப் பற்றியோ சொல்லுங்கள்; அந்த உருவங்கள் மறைந்திருந்து உங்களைக் கவனிக்கின்றனர் என்றெல்லாம் கூறி அவர்களை உடல் புல்லரிக்கச் செய்யுங்கள், அவர்கள் திருப்தியுடன் வீடு திரும்புவார்கள். ஆனால் இருபத்துநான்கு மணி நேரத்தில் அவர்களுக்குப் புதிய கிளர்ச்சி வேண்டும், அதற்குத் தயாராகி விடுவார்கள். இதைத்தான் சிலர் மதம் என்று கூறுகின்றனர். இது பைத்தியக்கார மருத்துவமனைக்குப் போவதற்கான வழியாக இருக்கலாமே தவிர ஒருபோதும் மதம் ஆகாது. இந்தப் பாதை வழியாக ஒரு நூறாண்டு காலம் நீங்கள் போவீர்களானால் இந்த நாட்டையே ஒரு பைத்தியக்கார விடுதியாக ஆக்கிவிடுவீர்கள்.

பலவீனர்களால் ஆண்டவனை அடைய முடியாது. இத்தகைய விறுவிறுப்பூட்டும் விஷயங்கள் எல்லாம் மனிதனைப் பலவீனன் ஆக்குகின்றன. கால் விரலால்கூட அவற்றைத் தீண்டாதீர்கள். அவை மக்களைப் பலவீனப்படுத்துகின்றன, மூளையைக் குழப்புகின்றன, மனத்தை வலிமையிழக்கச் செய்கின்றன, வாழ்க்கையை இழிநிலைக்குக் கொண்டு செல்கின்றன. தவிர்க்க முடியாத ஒரு பெரும் குழப்பம்தான் அவற்றின் விளைவாக இருக்கும். மதம் என்பது சொற்பொழிவிலோ, நூல்களிலோ, கொள்கைகளிலோ இல்லை, அனுபூதியில்தான் உள்ளது என்பதைக் கருத்தில்கொள்ள வேண்டும். வெறும் அறிவைப் பெறுவது அல்ல மதம், அனுபூதியே மதம். திருடக் கூடாது—இது எல்லோருக்கும் தெரியும். அதனால் என்ன? திருடாதவனே அதன் உண்மையை உணர்வான். 'பிறருக்குத் துன்பம் தரக் கூடாது'—அதனால் என்ன வந்துவிடும்? துன்பம் செய்யாதவனே இதன் உண்மையை அறிவான், அந்த அஸ்திவாரத்தின்மீது அவர்களே தங்கள் பண்புநலனை நிறுவியிருக்கிறார்கள்.

ஆகவே நாம் ஆன்மீக அனுபூதி பெற வேண்டும். நீண்ட காலம் பயில வேண்டிய சாதனை வாழ்க்கை முறை அது. மிக

உயர்ந்ததும் அற்புதமானதுமான ஒன்றைப்பற்றிக் கேள்விப் பட்டால் உடனே அதை அடைந்துவிட நினைக்கிறான் மனிதன். அதை அடைய எவ்வளவு பாடுபட வேண்டும் என்பதை அவன் ஒரு கணம்கூட நினைத்துப் பார்ப்பதில்லை. ஒரே தாவலில் அந்த இடத்தை அடைந்துவிட வேண்டும் என்றுதான் எல்லோரும் விரும்புகின்றனர். அது மிக உயர்ந்ததா, அது நமக்கு வேண்டும். அதை அடைய நமக்குச் சக்தி இருக்கிறதா என்பதைச் சிறிதும் சிந்திப்பதில்லை. விளைவு? நாம் ஆக்க பூர்வமாக எதுவுமே செய்வதில்லை. யாரையும் இடுக்கியால் பிடித்து அப்படியே ஆன்மீகத்தினுள் நுழைத்துவிட முடியாது; படிப்படியாக, மெள்ளமெள்ளத்தான் போக வேண்டும். எனவே மதத்தின் முதற்படி வைதீ பக்தி அதாவது தாழ்ந்த நிலை வழிபாடு.

இந்தத் தாழ்ந்தநிலை வழிபாடுகள் எவை? அவை எவை என்பதைக் கூறுவதற்கு முன் ஒரு கேள்வி. கடவுள் ஒருவர் இருக்கிறார், அவர் எங்கும் நிறைந்துள்ளார் என்று நீங்கள் எல்லோரும் சொல்கிறீர்களே, எங்கும் நிறைந்திருக்கிறார் என் பதைப் பற்றிய உங்கள் கருத்து என்ன? சற்று கண்களை மூடிக் கொண்டு சிந்தியுங்கள். அது என்ன என்பதை எனக்குக் கூறுங்கள். உங்கள் சிந்தனையில் விரிவதுதான் என்ன? ஏற் கனவே நீங்கள் கண்டுள்ள பரந்த கடல் அல்லது விரிந்த நீல வானம், அல்லது அகன்ற புல்வெளி அல்லது இவைபோன்ற வேறு ஏதோ ஒன்று, அப்படித்தானே? இதுதான் 'எங்கும் நிறைந்தவர்' என்பதற்கு நீங்கள் சொல்லும் பொருளானால் அது பயனற்றது. நீங்கள் அதன் பொருளை உணரவே இல்லை. இறைவனின் மற்ற குணங்கள்பற்றியும் அப்படியே. அவர் எல் லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர் என்று கூறும்போது பொதுவாக நாம் என்ன புரிந்துகொள்கிறோம்? எதுவும் இல்லை. மதம் என்பது அனுபூதி. இறைவனைப்பற்றிய உங்கள் கருத்தை நீங்கள் அனுபூதியில் அறியும்போதுதான் நீங்கள் இறைவனை வழிபடுபவர்கள் என்று கூறுவேன். அதை அடை யாதவரை, நீங்கள் அந்தச் சொற்களிலுள்ள எழுத்துக்களை எழுத்துக்கூட்டிப் படிக்கத் தெரிந்தவர்கள், அவ்வளவுதான்.

இந்த அனுபூதி நிலையை அடைய, நாம் கண்ணுக்குப் புலனாகின்றவை வாயிலாகச் செல்ல வேண்டும். குழந்தைகள் எண்ணிக்கையைக் கற்கும்போது முதலில் புறப் பொருட்களின் மூலம்தான் ஆரம்பிக்கிறது, பிறகு மனத்தாலேயே செய்யக்

கற்றுக் கொள்கிறது. ஒரு குழந்தையிடம் ஐந்து × இரண்டு = பத்து என்று கூறினால் அதற்கு எதுவும் புரியாது. ஆனால் பத்துப் பொருட்களைக் கொடுத்து, அது எப்படி என்பதைக் காட்டி விளக்கினால் புரிந்துகொள்ளும். இது நிதானமான, நீண்ட பாதை. இங்கே நாம் எல்லோரும் குழந்தைகளே. நாம் வயது முதிர்ந்தவர்களாக இருக்கலாம், உலகிலுள்ள எல்லா நூல்களையும் படித்திருக்கலாம்; ஆனால் ஆன்மீகத்துறையில் நாம் எல்லோரும் குழந்தைகளே. அனுபூதியின் இந்த ஆற்றல் தான் மதத்தைப் படைக்கிறது. கொள்கைகள், தத்துவங்கள், அறக்கோட்பாடுகள் எல்லாவற்றையும் எவ்வளவுதான் உங்கள் மூளைக்குள் திணித்திருந்தாலும் அவற்றால் பெரி தாகப் பலன் ஒன்றும் இல்லை. நீங்கள் யார், அனுபூதியில் என்ன உணர்ந்திருக்கிறீர்கள்?—இவைதான் பயனுள்ளவை, சாரமானவை. ஆனால் நாம் கொள்கைகளையும் கோட்பாடு களையும் அறிந்திருக்கிறோம், அனுபூதியில் எதையும் உணர வில்லை.

தூலமானவற்றில், அதாவது உருவங்கள், சொற்கள், பிரார்த்தனைகள், சடங்குகள் ஆகியவற்றில் தொடங்க வேண்டும். இவையும் ஆயிரக்கணக்கில் உள்ளன. ஒரே வழி எல்லோருக்கும் பயனுள்ளதாக இருக்க வேண்டும் என்பதில்லை. சிலருக்கு உருவங்களால் உதவி கிடைக்கும், சிலருக்குக் கிடைக் காது. ஒருசிலருக்குப் புற உருவம் தேவைப்படுகிறது, சிலருக்கு அது மனத்தளவில் போதுமானதாக இருக்கிறது. மனத்தில் வழிபடுபவன், 'நான் மேலானவன். ஏனெனில் அகத்தில் வழி படுவதுதான் சரியான முறை. அது புறத்தில் இருந்தால் உருவ வழிபாடு ஆகிவிடும். இதை நான் எதிர்ப்பேன்' என்கிறான். உருவம் சர்ச் வடிவிலோ கோயில் வடிவிலோ இருந்தால் அது புனிதமானது. அதுவே மனித உருவமாக இருந்தால் கோர மானது என்று நினைக்கிறான் அவன்.

இவ்வாறு, மனம் புற வழிபாட்டுப் பயிற்சி பெற பல்வேறு வழிகள் உள்ளன. இந்தப் புறப் பயிற்சிகளுக்குப் பிறகு படிப் படியாக மனம் தத்துவ விளக்கத்திற்கும் உண்மை அனுபூதிக் கும் வருகிறது. ஆனால் எல்லோருக்கும் ஒரே வழி பொருந் தாது. உங்களுக்கு உரியது ஒன்று, இன்னொருவனுக்கு மற் றொன்று—இப்படியாக அமைகிறது. எல்லாமே ஒரே முடிவிற்கு அழைத்துச் சென்றாலும் எல்லோருக்கும் ஒரே உருவம் பயன் தராது. இது நாம் செய்யும் இன்னொரு தவறு. எனது லட்சியம்

உங்களுக்குத் தகுந்ததாக இல்லை. அப்படியிருக்க அதை நான் ஏன் உங்கள்மீது திணிக்க வேண்டும்? எனது கோயில் அமைப்போ, தோத்திரங்கள் படிக்கும் முறையோ உங்களுக்குப் பொருந்தாதனவாக இருக்கும்போது நான் ஏன் அதை உங்கள் தலையில் கட்ட வேண்டும்? சற்றே உங்களைச் சுற்றிப் பாருங்கள்! தனது வழிபாடுதான் சரியானது, மற்றவர்களுடையது மிருகத் தனமானது, இந்த உலகில் தான் ஒருவனே இறைவனால் 'தேர்ந்தெடுக்கப்பட்டவன்' என்றுதான் ஒவ்வொரு முட்டாளும் கூறுகிறான். ஆனால் எல்லா வழிகளுமே நல்லவை, நமக்கு உதவுபவை.

மனித இயல்பில் பல வகை இருப்பதுபோல் மதத்திலும் பல்வேறு வழிகள் இருப்பது அவசியம். அதிகமான பாதைகள் இருக்கும் அளவிற்கு உலகத்திற்கு நல்லது. மதத்தில் இருபது வழிமுறைகள் இருந்தால் மிகவும் நல்லது, நானூறு இருந் தால் இன்னும் நல்லது. தேர்ந்தெடுப்பதற்கு அதிக வாய்ப்பு இருக்கும் அல்லவா? எனவே மதங்களும் மதக் கருத்துக்களும் அதிகரிப்பதில், ஏராளமாக இருப்பதில் நாம் மகிழ்ச்சியே அடைய வேண்டும். இதனால் ஒவ்வொருவரும் மதத்தைப் பின் பற்ற முடியும்; மனித குலம் அதிக நன்மை பெறும். ஆகவே மதங்கள் பெருகிக்கொண்டேபோய், ஒவ்வொருவருக்கும் மற்ற வர்களிலிருந்து மாறுபட்ட சொந்தத் தனி மதம்இருக்கும் அள விற்கு ஆக வேண்டும். அதற்கு இறைவன் திருவருள் புரிய வேண்டும். பக்தியோகத்தின் கருத்து இதுதான்.

எனது மதம் உங்களுக்கு ஏற்றதாக முடியாது; உங்கள் மதம் என்னுடையது ஆக முடியாது—இதுதான் பக்தியோகத் தின் அறுதிக் கருத்து. நோக்கமும் முடிவும் ஒன்றாக இருந் தாலும் ஒவ்வொருவரும் அவரவர் மனப்போக்கிற்கு ஏற்பத் தனித்தனிப் பாதையில்தான் செல்ல வேண்டும். இந்தப் பாதைகள் வெவ்வேறாக இருந்தாலும் எல்லாம் உண்மை யானவை. ஏனெனில் எல்லாம் ஒரே இலக்கை நோக்கிச் செல் பவை. ஒன்றுதான் உண்மை, மற்றவை உண்மை அல்ல என்று இருக்க முடியாது. தங்களுக்கு ஏற்ற பாதையைத் தேர்ந்தெடுப் பதைத்தான், பக்தி நூல்கள் இஷ்டம் என்று கூறுகிறது.

அடுத்தது சொற்கள். சொல்லின் ஆற்றல் பற்றிய விஷயம் எல்லோரும் அறிந்ததே. அவை எவ்வளவு அற்புதமானவை! வேதங்கள், பைபிள், குரான்—இந்தச் சாஸ்திரங்கள் எல்லாம் இத்தகைய சக்தி வாய்ந்த சொற்களால் நிறையப் பெற்றவை.

சில சொற்கள் மனித குலத்தின்மீது அற்புதமான ஆதிக்கம் செலுத்துகின்றன.

இனி, பல்வேறு சின்னங்கள் உள்ளன. அவை மனித மனத்தின்மீது பேராதிக்கம் செலுத்துகின்றன. மதச் சின்னங்கள் ஏனோதானோவென்று தற்செயலாக உருவாக்கப்பட்டவை அல்ல. அவை எண்ணங்களின் இயற்கையான வெளிப்பாடுகளாக இருப்பதை நாம் காண்கிறோம். சின்னங்களை ஆதாரமாகக் கொண்டுதான் நாம் சிந்திக்கிறோம். எல்லா சொற்களும் தங்கள் பின்னாலுள்ள எண்ணத்தின் சின்னங்களே. பல்வேறு மக்கள் பல்வேறு சின்னங்களை உபயோகிக்கின்றனர். அவற்றின் காரணம் அவர்களுக்குத் தெரிவதில்லை. அந்தக் காரணம் பின்னணியிலேயே உள்ளது. சின்னங்கள் எண்ணங்களோடு தொடர்புடையவை. எண்ணம் சின்னத்தைப் புறத்தே கொண்டு வருவதுபோல், சின்னங்கள் உள்ளே எண்ணங்களைத் தூண்டுகின்றன. எனவே பக்தியின் இந்தப் பகுதி சின்னங்கள், சொற்கள், பிரார்த்தனை ஆகியவைகளை விளக்குகிறது.

ஒவ்வொரு மதத்திலும் பிரார்த்தனைகள் உள்ளன. ஆனால் பணத்திற்காகவோ, உடல்நலத்திற்காகவோ பிரார்த்தனை செய்வது பக்தி அல்ல என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அது கர்மம் அல்லது புண்ணியச் செயல், அவ்வளவுதான். ஏதாவது பொருளுக்காகவோ, சொர்க்கத்திற்குச் செல்வது போன்றவற்றிற்காகவோ இறைவனை வேண்டுவது கர்மம் மட்டுமே. ஆண்டவனிடம் அன்பு செலுத்துபவன், பக்தனாக ஆக விரும்புபவன் இத்தகைய பிரார்த்தனைகளை விட்டுவிட வேண்டும். ஒளியுலகிற்குச் செல்ல விரும்புபவன் முதலில் இந்தக் கொடுக்கல்–வாங்கல் எண்ணத்தை, வியாபார மதத்தை மூட்டைகட்டி வைத்துவிட்டு, அந்த வாசலிற்குள் புக வேண்டும்.

நீ பிரார்த்திப்பது உனக்குக் கிடைக்காது என்பதல்ல; எல்லாம் உனக்குக் கிடைக்கும். ஆனால் அது பிச்சைக்காரனின் மதம். மிகவும் கீழானது, இழிவானது. 'கங்கைக் கரையில் வசித்துக்கொண்டு, தண்ணீருக்காகக் கிணறு வெட்டுபவன் முட்டாளே அல்லவா![1] வைரச் சுரங்கத்திற்குள் போய்க் கண்ணாடி மணிகளைப் பொறுக்குபவன் மூடன்தானே! என்ன பைத்தியக்காரத்தனம்! வைரச் சுரங்கமான ஆண்டவனிடம்,

---

1. உஷித்வா ஜாஹ்னவீதீரே கூபம் கனதி துர்மதி:।

கண்ணாடித் துண்டுகளான உணவையும் உடல்நலத்தையும் ஆடையையுமா கேட்பது? உடல் சிறிது காலத்தில் மறைந்து விடும். இந்த உடலின் நலத்திற்காகத் திரும்பத்திரும்பப் பிரார்த்திப்பதால் என்ன பயன்? உடல்நலத்திலும் பணத்திலும் என்ன இருக்கிறது? எவ்வளவுதான் செல்வம் படைத்தவனாக இருந்தாலும், சொத்தில் சிறிதளவைத்தான் அவன் தனக்குப் பயன்படுத்திக் கொள்ள இயலும். இந்த உலகத்தின் எல்லா பொருட்களையும் நாம் ஒருபோதும் அடைய முடியாது. அப்படி அவை கிடைக்காவிட்டால்தான் என்ன? அதற்காக ஏன் கவலைப்பட வேண்டும்? இந்த உடல் அழிந்துவிடும். இதையெல்லாம் யார் பொருட்படுத்துவது? நல்லவை வந்தால் வரட்டும், வரவேற்போம். போனால் போகட்டும், அப்படிப் போவதைப் பற்றியும் நாம் கவலைப்பட மாட்டோம். அவை வரும்போது அவற்றை வாழ்த்துவோம். போகும்போதும் அவற்றை வாழ்த்துவோம்.

நாம் இறைவனை உணரப் போகிறோம், மன்னாதி மன்னனை அணுக முயல்கிறோம். அங்கு நாம் பிச்சைக்கார உடையில் செல்ல இயலாது. அந்த உடையில் சென்றால் மன்னாதி மன்னராக வீற்றிருக்கும் அவர் முன் செல்ல நமக்கு அனுமதி கிடைக்குமா? கட்டாயமாகக் கிடைக்காது. நம்மை வெளியே துரத்திவிடுவார்கள். நம் கடவுள் சக்கரவர்த்திகளுக் கெல்லாம் சக்கரவர்த்தி. அவரிடம் பிச்சைக்கார வேடத்தில் செல்ல முடியாது. பிச்சைக்காரர்களுக்கு அங்கு அனுமதி கிடையாது. வியாபார நோக்கம் கொண்டவர்களுக்கும் அங்கே அனுமதி இல்லை. வாங்குவதும் விற்பதும் அங்கே கிடையவே கிடையாது. வாங்குபவர்களையும் விற்பவர்களை யும் ஏசுநாதர் கோயிலிலிருந்து துரத்தினார் என்று பைபிளில் நீங்கள் படிக்கிறீர்கள். அப்படியிருந்தும் சிலர், 'ஆண்டவனே! இதோ என் சிறு பிரார்த்தனை. பிரதியாக எனக்கு ஒரு புதிய ஆடையைத் தருவாய். எம்பெருமானே, என் தலைவலியைக் குணப்படுத்துவாய். நான் நாளைக்கு இரண்டு மணி நேரம் அதிகமாக வழிபடுகிறேன்' என்றெல்லாம் பிரார்த்திக்கின்றனர். உங்கள் மனத்தை ஒரு படி மேலே உயர்த்துங்கள். கடவுளிடம் இத்தகைய அற்ப விஷயங்களைக் கேட்கின்ற நிலையிலிருந்து உங்களை மேலே வைத்துக் கொள்ளுங்கள். இத்தகைய பிரார்த் தனைகளில் முழு சக்தியையும் ஒருவன் செலவழிப்பானானால் அவனுக்கும் மிருகத்திற்கும் என்ன வேறுபாடு?

பக்தனாக விரும்புபவன் சொர்க்கத்தை அடைவது போன்ற ஆசைகளையும் மற்ற எல்லா ஆசைகளையும் ஆரம்பத்திலேயே விட்டுவிட வேண்டும். சொர்க்கம் என்பது இங்குள்ள இடங்கள் போல்தான்; இன்னும் சற்று நன்றாக இருக்கலாம், அவ்வளவுதான். இங்கு நமக்குச் சில துன்பங்களும் சில இன்பங்களும் உள்ளன. அங்கே ஒருவேளை, துன்பம் குறைந்தும் இன்பம் கூடியும் இருக்கலாம். ஆனால் இங்கே இருப்பதைவிட அங்கே அதிக ஞான ஒளி கிடையாது. அங்கே நாம் நமது நற்செயல்களின் பலனை அனுபவிக்க மட்டுமே முடியும். கிறிஸ்தவக் கருத்துப்படி சொர்க்கம் என்பது இன்பம் மண்டிக் கிடக்கின்ற ஓர் இடம். அது கடவுளின் இடத்தை நிரப்ப முடியுமா என்ன?

இத்தகைய ஆசைகள் அனைத்தையும் எப்படி விலக்குவது என்பதுதான் கேள்வி. இந்த ஆசைகளே நம்மைத் துன்பத்தில் ஆழ்த்துகின்றன. நாம் ஆசைத்தளைகளுக்குக் கட்டுண்ட அடிமைகள்; ஆசைகளால் ஆட்டி வைக்கப்படுகின்ற பொம்மைகள்; ஆசைகளின் கைகளிலுள்ள வெறும் விளையாட்டுப் பொருட்கள். நம் உடலை ஏதாவது வீழ்த்திவிடுமோ என்று அதைத் தொடர்ந்து பாதுகாக்கிறோம்; அதன் காரணமாக எப்போதும் பயந்துகொண்டே வாழ்கிறோம். பயத்தின் காரணமாக மான் தினமும் ஏறக்குறைய அறுபது எழுபது மைல் ஓடுவதாக நான் படித்திருக்கிறேன். பல மைல்கள் ஓடும், பின்னர் எங்கேயாவது நின்று எதையாவது தின்னும். அந்த மானைவிட இழிந்த நிலையில் நாம் இருக்கிறோம் என்பதை உணர வேண்டும். மானுக்குச் சிறிதாவது ஓய்வு உண்டு. நமக்கு அதுகூடக் கிடையாது. மேய்வதற்குப் போதிய புல் கிடைத்தால், அது திருப்தி அடைந்துவிடுகிறது. ஆனால் நாமோ நாளுக்கு நாள் தேவைகளைப் பெருக்கிக்கொண்டே போகிறோம். தேவைகளை அதிகரித்துக் கொண்டே போவது நமக்கு ஒரு மோசமான பழக்கமாகவே ஆகிவிட்டது. நாம் இயற்கைக்கு மாறாக வாழ்கிறோம்; நிலைகுலைந்துவிட்டோம். எனவே இயற்கையான எதுவுமே நமக்குத் திருப்தி அளிப்பதில்லை. இயற்கைக்கு முரணான கிளர்ச்சி, இயற்கையோடு இயையாத உணவு, நீர், சூழ்நிலை, வாழ்வு என்று இயற்கையோடு இயைபின்றியே எப்போதும் நாம் ஓடிக் கொண்டிருக்கிறோம். காற்றை நாமே முதலில் நஞ்சாக்கி பிறகு அதைச் சுவாசிக்கிறோம். பயத்தை எடுத்துக்கொண்டால், நம் வாழ்க்கை பயங்களின்

தொகுப்பைத் தவிர வேறு என்ன? மானுக்குப் புலி, ஓநாய் போன்ற விலங்குகளிடமிருந்து ஏற்படும் பயம் ஒன்றுதான் உள்ளது. ஆனால் மனிதனோ பிரபஞ்சம் முழுவதையும் கண்டு பயப்படுகிறான்.

இதிலிருந்து எப்படி நம்மை விடுவித்துக்கொள்வது என்பதுதான் கேள்வி. பயன்நோக்குவாதிகள், 'கடவுள், மறு வுலகம் என்பது பற்றியெல்லாம் பேசாதீர்கள். அவற்றைப் பற்றி நமக்கு எதுவும் தெரியாது. நாம் உலகில் இன்பமாக வாழ் வோம்' என்று கூறுகின்றனர். அப்படி வாழ முடியுமானால் முதலில் அதைச் செய்பவன் நானாகத்தான் இருப்பேன். ஆனால் உலகம் அதற்கு நம்மை அனுமதிக்காது. நீங்கள் இயற்கையின் அடிமைகளாக இருக்கும்வரை உங்களால் எப்படி இன்பமாக வாழ முடியும்? எவ்வளவுக்கெவ்வளவு போராடு கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு சிக்கிக் கொள்கிறீர்கள். இத் தனை ஆண்டுகளுக்கு—எத்தனை என்று எனக்குத் தெரியாது —என்றெல்லாம் திட்டங்கள் வகுக்கிறீர்கள். ஆனால் இறுதியில் ஒவ்வொரு திட்டமும் தோல்வியடைந்து கொண்டே போகிறது.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு, பழைய உலகத்தில், மக்களின் தேவைகள் மிகச் சிலவாக இருந்தன. கூட்டல் விகிதத் தில் (Arithmetical Progression) அவர்களது அறிவு வளர்ந்த போது தேவைகள் பெருக்கல் விகிதத்தில் (Geometrical Progression) வளர்ந்தன. நாம் முக்தி பெற்றால், ஏன் குறைந்தபட்சம் சொர்க்கத்தை அடைந்தால்கூட நமது ஆசைகள் நிறைவேறி விடுமென நினைக்கிறோம். எனவே சொர்க்கத்திற்குப் போக விரும்புகிறோம். ஆ, என்ன ஒரு தணியாத வேட்கை! எப்போதும் ஏதாவது ஒன்று வேண்டும், வேண்டும்! ஏழையாக இருந்தால் பணம் வேண்டும். பணம் வந்துவிட்டால் சமுதாய அந்தஸ்து வேண்டும். அதுவும் வந்துவிட்டால் வேறு ஏதோ ஒன்று வேண்டும். அதற்குப் பிறகு இன்னும் ஏதாவது தேவைப்படு கிறது. இதற்கு முடிவு என்பதே கிடையாது.

இந்த வேட்கையை எப்படித் தணிப்பது? சொர்க்கத்திற்குச் சென்றால், அது நமக்குள்ள ஆசையை இன்னும் அதிகமாக்கவே செய்கிறது. ஏழை பணக்காரனானால், அது அவனது ஆசை களைத் தணிப்பதில்லை; மாறாக, தீயில் வெண்ணெய் இட்டால் அதன் பிரகாசமான சுடர் மேலும் கொழுந்து விட்டெரிவது போல் அவனது ஆசைகள் ஓங்கி வளர்கின்றன. சொர்க்கத் திற்குச் செல்வது என்பது பெரிய பணக்காரனாவது போன்றது

தான். அங்கே ஆசைகள் மேலும்மேலும் அதிகரிக்கின்றன. சொர்க்கத்தில் வாழும் தேவர்கள் மனிதர்களைப் போலவே ஒழுங்கீனச் செயல்களில் ஈடுபடுகிறார்கள் என்பதையே உலகின் பல்வேறு மத நூல்களிலும் படிக்கிறோம். அவர்கள் அங்கே எப்போதும் நல்லவர்களாகவே இருப்பார்கள் என்பதில்லை. சொர்க்கத்திற்குச் செல்ல வேண்டும் என்பது இன்ப நுகர்ச்சிக் காகவே அல்லவா? இதை விட்டுவிட வேண்டும். சொர்க்கத் திற்குப் போக நினைப்பது மிகச் சிறிய ஆசை, மிகவும் இழிவான ஆசை. 'நான் கோடீசுவரனாகி மக்கள்மீது ஆணை செலுத்து வேன்' என்று நினைப்பதைப் போன்றதே இது. இத்தகைய சொர்க்கங்கள் பல உள்ளன. ஆனால் அவற்றின்மூலம் ஆன் மீகம், அன்பு இவற்றின் வாசலின் உள்ளே புகும் உரிமை உங்களுக்குக் கிடைக்காது. ❋

## 5. பல்வேறு சின்னங்கள்

'பிரதீகம்', 'பிரதிமா' என்று இரண்டு சம்ஸ்கிருதச் சொற்கள் உள்ளன. பிரதீகம் என்றால் நோக்கி வருவது, நெருங்கி வருவது. எல்லா மதங்களிலுமே வழிபாட்டில் பல படிகளைப் பார்க்கிறீர்கள். இந்த நாட்டிலும் சிலர் மகான்களின் திருவுருவங்களை வழிபடுகிறார்கள். சிலர் குறிப்பிட்ட உருவங்களையும் சின்னங்களையும் வழிபடுகிறார்கள். வேறு சிலர் மனிதர்களைவிட உயர்ந்த ஆவிகளை வழிபடுகிறார்கள். ஆவிவழிபாட்டில் ஈடுபடுவோரின் எண்ணிக்கை வேகமாகப் பெருகி வருகிறது. அத்தகையோர் இங்கே சுமார் எண்பது லட்சம் பேர் இருப்பதாக நான் படித்தேன். இன்னும் சற்று உயர்ந்த நிலையில் உள்ள தேவதைகளையும் தெய்வங்களையும் வழிபடுபவர்களும் உண்டு.

பக்தியோகம் இந்தப் பல படித்தரங்களிலுள்ள வழிபாடுகள் எதையும் கண்டிக்கவில்லை. ஆனால் இவை எல்லாவற்றையும் பிரதீகம் என்ற பிரிவில் அடக்கிவிடுகிறது. இவையெல்லாம் பிரதீக வழிபாடு. இவர்கள் இறைவனை வழிபடவில்லை. ஆனால் இறைநிலைக்கு அருகில் உள்ளதான பிரதீகத்தை வழிபடுகிறார்கள். இவற்றின் வழியாக இறைவனை அடைய முயல்கிறார்கள்.

இந்தப் பிரதீக வழிபாடு நமக்கு முக்தி தந்து, நம்மைச் சுதந்திரர்கள் ஆக்காது. எந்தப் பொருட்களுக்காக அவற்றை வழிபடுகிறோமோ, அவற்றை மட்டுமே அது தர முடியும். எடுத்துக்காட்டாக, இறந்துபோன தன் முன்னோர்களையோ, நண்பர்களையோ ஒருவன் வழிபட்டால் ஒருவேளை சில சக்திகளோ, சில செய்திகளோ அவர்களிடமிருந்து கிடைக்கக்கூடும். வழிபடப்படுகின்ற அவர்களிடமிருந்து கிடைக்கும் அன்பளிப்பே வித்யை, அதாவது விசேஷ ஞானம். ஆனால் நமது மிக உயர்ந்த லட்சியமான முக்தி என்பது ஆண்டவனை வழிபடுவதன்மூலம் மட்டுமே கிடைக்க முடியும்.

வேதங்களை விளக்கும்போது சில கீழைநாட்டு அறிஞர்கள் சகுணக் கடவுளைக்கூட ஒரு பிரதீகமாகக் கருதுகிறார்கள்.

ஆனால் அப்படியல்ல. சகுணக் கடவுளைப் பிரதீகம் என்று கருத இடமுண்டு; ஆனால் பிரதீகம் என்பது சகுணக் கடவுளும் அல்ல, நிர்க்குணக் கடவுளும் அல்ல. அதை இறைவனாக வழிபட முடியாது. எனவே தெய்வங்கள், முன்னோர்கள், மகான்கள், ஆவிகள் என்று பல்வேறு பிரதீகங்களை வழிபடுவதால் முக்தி பெறலாம் என்று நினைத்தால் அது பெரும் தவறாகும். மிஞ்சிப் போனால் அவர்களுடைய உதவியால் சில சக்திகளைப் பெற லாம். ஆனால் இறைவனால்தான் முக்தி தர முடியும். முக்தி தர இயலாதவை என்பதற்காக அவற்றை நாம் கண்டிக்க வேண்டிய தில்லை. அந்த வழிபாடும் சில பலன்களைக் கொடுக்கவே செய்கிறது. இவற்றைவிட உயர்ந்த எதையும் அறிந்துகொள்ள இயலாத மனிதன் இந்தப் பிரதீக வழிபாட்டின்மூலம் சிறிது சக்தியைப் பெறலாம்; சிறிது மகிழ்ச்சியை எய்தலாம். ஆனால் நீண்டநாள் அனுபவித்த பிறகு, முக்தி பெறும் தகுதி அவனுக்கு வரும்போது, அவன் தானாகவே இந்தப் பிரதீகங்களை விட்டு விடுவான்.

இந்தப் பல்வேறு பிரதீகங்களுள் மிகவும் பரவலாக உள்ளது நண்பர்களின் ஆவிகளை வழிபடுவதே. நட்பு, மக்களின் இயல்பிலேயே வேரூன்றி உள்ளது. எனவே நண்பர்கள் இறந் தாலும் நாம் அவர்களை மீண்டும் காண விரும்புகிறோம். அவர்களுடைய தூல உருவங்களோடு நாம் ஒட்டிக்கொள் கிறோம். அவர்கள் உயிருடன் இருக்கும்போதே அவர்களின் உடல் தொடர்ந்து மாறிக்கொண்டிருந்தது என்பதை அறவே மறந்துவிடுகிறோம். அவர்கள் இறந்தபின் அவர்கள் ஒரே நிலையிலேயே இருப்பார்கள், அவர்களை அப்படியே பார்ப் போம் என்று நினைக்கிறோம். அது மட்டும் அல்ல, கயவனான ஒரு நண்பனோ மகனோ எனக்கு இருந்திருப்பான். அவன் இறந்துவிட்டானானால் அவனைப்போல் இந்த உலகத்திலே ஒரு மகானைப் பார்க்க முடியாதென்று எண்ணத் தலைப்படு கிறோம். என்னைப் பொறுத்தவரை அவன் ஒரு தெய்வமாகவே ஆகிவிடுகிறான். குழந்தை இறந்தால், இந்தியாவில் சிலர் அதை எரிக்காமல் புதைக்கிறார்கள். புதைத்த இடத்தில் ஒரு கோயிலை எழுப்புகிறார்கள். அந்தச் சிறிய குழந்தை அங்கே கடவுளாகிவிடுகிறது. மதத்தின் இத்தகைய ஓர் அம்சம் எல்லா நாடுகளிலும் மிகப் பரவலாக இருக்கிறது. இதுதான் எல்லா மதங்களுடையவும் ஆரம்பம் என்று கருதும் தத்துவ ஆசிரியர்களும் இல்லாமல் இல்லை. ஆனால் நிச்சயமாக

அவர்களால் இதை நிரூபிக்க முடியாது. பிரதீக வழிபாடு நமக்கு முக்தி தராது என்பதே நாம் இங்கு புரிந்துகொள்ள வேண்டியது.

இரண்டாவதாக, இது பேராபத்தை விளைவிக்கக் கூடியது. 'நெருங்கிவருகின்ற நிலையில் இருப்பவையான இந்தப் பிரதீகங்கள் நம்மை அடுத்த நிலைக்கு அழைத்துச் செல்கின்றன என்ற வரைக்கும் சரி. ஆனால் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் வாழ்நாள் முழுவதும் இந்தப் பிரதீகங்களையே பற்றிக்கொண்டு அந்த இடத்திலேயே நின்று விடுகிறார்கள். அதற்கான வாய்ப்புதான் அதிகம். ஒரு குறிப் பிட்ட மதக் கொள்கையில் பிறப்பது நல்லது, ஆனால் எந்த வளர்ச்சியும் இன்றி அதிலேயே இறப்பது மிகவும் மோசமானது. இன்னும் தெளிவாகச் சொல்வதானால், ஒரு குறிப்பிட்ட மதப் பிரிவில் பிறந்து, அதன்படி பயிற்சிகள் பெறுவது நல்லது; அது நம்மிடமுள்ள உயர் பண்புகளை வெளிப்படுத்துகிறது. ஆனால் நம்மில் பெரும்பாலோர் அதிலேயே வாழ்ந்து, அதிலேயே மடிந்தும் விடுகிறோம்; வெளியேறுவதோ வளர் வதோ இல்லை. இதுதான் பிரதீக வழிபாட்டால் விளையும் ஆபத்தாகும்.

இவையெல்லாம் ஒருவன் கடந்துசெல்ல வேண்டிய படிகள் என்று மனிதன் கூறுகிறான். ஆனால் வயது முதிர்ந்த பிறகும் அவன் இவற்றையே பற்றிக்கொண்டு நிற்பதைக் காண் கிறோம். இளைஞன் கோயிலுக்குச் செல்லவில்லையென்றால் அவனைக் கண்டிக்க வேண்டும். ஆனால் முதியவன் இன்னும் கோயிலுக்குச் சென்றுகொண்டிருந்தால் அவனும் கண்டிக் கப்பட வேண்டியவனே. அந்தக் குழந்தை—விளையாட்டில் இனி அவனுக்கு இடமில்லை. கோயில் அவனை ஓர் உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்க வேண்டும். இந்த முதிய வயதில், உருவ வழிபாடு, பிரதீக வழிபாடு போன்ற தொடக்கநிலை வழி பாடுகளால் அவனுக்கு ஆவது ஒன்றுமில்லை.

இனி, 'சாஸ்திர வழிபாடு'. இது உறுதியான, மிகவும் உறுதியானதோர் பிரதீக வழிபாடாகும். எந்த நாட்டை எடுத் துக் கொண்டாலும் சரி, சாஸ்திரங்கள் கடவுளின் இடத்தையே பிடித்துள்ளன. கடவுள் மனிதராக அவதாரம் செய்கிறார் என்று நம்புகின்ற சில பிரிவினர் என் நாட்டில் உள்ளனர். அந்த அவ தார புருஷர்கூட வேதங்களின்படி ஒழுக வேண்டும். அவரது உபதேசங்கள் வேதங்களின் கருத்தை ஒத்திருக்கவில்லை

என்றால் மக்கள் அவரை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இந்துக்கள் புத்தரை வழிபடுகின்றனர். ஆனால் அவர்களிடம், 'நீங்கள் புத்தரை வழிபடுகிறீர்கள். அவரது அறிவுரைகளை ஏன் பின்பற்றக் கூடாது?' என்று கேட்டால், 'அவருடைய அறிவுரைகள் வேதங்களை மறுக்கின்றன' என்று விடை அளிப்பார்கள். இதுதான் 'சாஸ்திர வழிபாடு'. சாஸ்திரங்களில் காணப்படும் எத்தனையோ பொய்களை ஏற்பார்கள். இந்தியாவில், எனது தனிப்பட்ட கருத்தென்று புதிதாக ஏதாவது ஒன்றைச் சொல்ல நான் விரும்பினால், அதை ஒருவரும் கேட்க மாட்டார்கள். ஆனால் வேதத்திலிருந்து ஏதாவது ஒரு பகுதியை எடுத்து, அதைப் பலவாறு திரித்து, அதில் உள்ள நல்ல விஷயங்களை அழித்து, அதற்குப் பொருத்தமே இல்லாத அர்த்தத்தைக் கற்பித்து, என் கருத்துக்களை வேதங்கள் சொல்லும் கருத்துக்கள் என்று கூறினால், எல்லாரும் முட்டாள் கள்போல் கூட்டமாக என்னைப் பின்தொடர்வார்கள்.

கேட்போரைப் பயமுறுத்தும் வகையில் சிலர் கிறிஸ்தவ மதத்தைப் போதிக்கின்றனர். அதைக் கேட்டு எளிய கிறிஸ் தவன் பயப்படுகிறான். ஆனால் 'ஏசு கிறிஸ்து இதைத்தான் கூறியுள்ளார்' என்று அவர்கள் சொன்னால்போதும், அவர் களை அப்படியே அந்த முட்டாள்கள் பின்பற்றுவார்கள். வேதங்களிலோ பைபிளிலோ இல்லாத புதிய எதையும் மக்கள் விரும்புவதில்லை. எல்லாமே நரம்புக் கிளர்ச்சிதான், சுண் டியிழுப்பதுதான். புதிய எதையாவது கண்டாலோ கேட்டாலோ திகைத்துப்போய் நிற்கிறீர்கள்— இது உடல் சம்பந்தப்பட்டது. எண்ணங்கள் விஷயத்திலோ இத்தகைய அதிர்ச்சிகள் இன் னும் அதிகம். மனம் வழக்கமாகச் சென்று கொண்டிருக்கும் பழைய தடத்திலேயே செல்கின்றது. அது ஒரு புதிய கருத்தை ஏற்றுக்கொள்வது மிகவும் கடினம். எனவே புதுக் கருத்தை அந்தப் பழைய தடத்தின் அருகில் வைக்க வேண்டியிருக்கிறது. அப்போது நாம் மெல்ல அதை ஏற்கிறோம். இது ஒரு நல்ல தந்திரம் எனினும் தீய ஒழுக்கமாகும்.

மிதவாதப் பிரசாரகர்கள் என்று நீங்கள் அழைக்கின்ற சீர்திருத்தவாதிகள் இன்று சமூகத்தில் நிலவவிடுகின்ற ஏராள மான முரண்பட்ட கருத்துக்களை எண்ணிப் பாருங்கள். கிறிஸ்தவ விஞ்ஞானிகளின் கண்களுக்கு ஏசு நாதர் ஒரு மருத்துவராகக் காட்சி அளிக்கிறார். ஆவி வழிபாட்டினர் அவரை ஒரு மனோசக்தி நிபுணராகக் காண்கிறார்கள்.

தியாசஃபிஸ்ட்கள் அவரை மகாத்மாவாகக் கருதுகிறார்கள். இவை யாவும் ஒரே புத்தகத்திலிருந்து வெளிவந்த முடிவுகள்.

'என் அன்பிற்குரியவனே, ஆரம்பத்தில் ஸத் (இருப்பு) மட்டுமே இருந்தது. ஆரம்பத்தில் வேறொன்றும் இருக்க வில்லை'[1] என்று வேதம் கூறுகிறது. இதில் உள்ள ஸத் என் பதற்குப் பல்வேறு பொருட்கள் சொல்லப்படுகின்றன. அணு வாதிகள் (Atomists) இந்தச் சொல்லுக்கு 'அணுக்கள்' என்று பொருள் கூறுகிறார்கள். அவற்றிலிருந்துதான் உலகம் உண் டாக்கப்பட்டது என்கிறார்கள். இயற்கைவாதிகள் (Naturalists) அதன் பொருள் 'இயற்கை' என்றும், இயற்கையிலிருந்தே எல்லாம் பிறந்தன என்றும் கூறுகிறார்கள். சூன்யவாதிகள் (Nihilists) இதற்குப் பொருள் 'சூன்யம்' அல்லது 'பூஜ்யம்' என்றும், சூன்யத்திலிருந்துதான் எல்லாம் வெளிப்பட்டன என்றும் சொல்கிறார்கள். ஆஸ்திகர்கள் அதற்குக் 'கடவுள்' என்று பொருள் கூறுகிறார்கள். அத்வைதிகள் இதன் பொருள் 'பரிபூரணமான இருப்பு' என்று கூறுகிறார்கள். ஆனால் எல் லோரும் வேதத்தின் அதே வரிகளைத்தான் தங்களுக்கு ஆதாரமாகக் கொள்கிறார்கள்.

இதுதான் 'சாஸ்திர வழிபாட்டிலுள்ள' குறைபாடு. ஆனால் இதில் ஒரு பெரிய நன்மையும் உள்ளது. இது நமக்கு வலிமையைத் தருகிறது. சாஸ்திரங்கள் உள்ள மதப்பிரிவுகளைத் தவிர மற்றவை எல்லாம் மறைந்துவிட்டன. அவற்றை எதுவும் அழிக்க முடியாதது போலுள்ளது.

பார்சிகளைப்பற்றி உங்களுள் சிலர் கேள்விப்பட்டிருப் பீர்கள். அவர்களே பழைய பாரசீகர்கள். ஒரு காலத்தில் அவர்கள் பத்துக் கோடி பேர் இருந்தனர். அவர்கள் அரேபியர் களிடம் தோல்வியுற்றார்கள். இப்போது அந்த நாட்டில் உள்ள நவீன பாரசீகர்கள் முகமதியர்களாக மாறிவிட்டார்கள். தங்களைக் கொடுமைப்படுத்தியவர்களிடமிருந்து ஒருசிலர் தப்பிப் பிழைத்தார்கள். தங்களுடன் அவர்கள் தங்கள் சாஸ் திரத்தையும் காத்தார்கள். அந்தச் சாஸ்திரம் அவர்களை இன்றும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது.

அதேபோல் யூதர்களை நினைத்துப் பாருங்கள். தங்கள் சாஸ்திரம் மட்டும் இல்லாவிட்டால் அவர்கள் இருந்த இடம்

---

1. ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம் ।
—சாந்தோக்கிய உபநிடதம், 6. 2. 1.

தெரியாமல் மறைந்து போயிருப்பார்கள். அந்தச் சாஸ்திரமான 'தால்மூத்' அவர்களின் சிறப்பையும் ஆற்றலையும் பாதுகாத்து வருகிறது; எவ்வளவோ அச்சுறுத்தும் இன்னல்கள் வந்த போதிலும், அது அவர்களை ஒன்றாக வைத்துள்ளது.

எளிய முறையில் அணுகத் தக்கவண்ணம், எல்லாவற்றையும் ஒரு சாஸ்திரம் சுலபமாகத் தெளிவாக்குகிறது. மற்ற பிரதீகங்களைவிட அது சுலபமானது, கையாள்வதற்கு எளியது. இதுதான் சாஸ்திரங்களின் பெரிய அனுகூலம். அதனை ஒரு பீடத்தின்மீது வையுங்கள். எல்லோரும் பார்ப்பார்கள். சிறந்த தாகையால் எல்லோரும் படிக்கவும் செய்வார்கள்.

என்னைப் பட்சபாதம் உடையவன் என்று நீங்கள் எண்ணினாலும் நான் ஒன்று சொல்லியே ஆக வேண்டும். என் கருத்துப்படி சாஸ்திரங்கள் நன்மையைவிடத் தீமையையே அதிகம் செய்திருக்கின்றன. தீய கோட்பாடுகளுக்கு அவை காரணமாக இருந்துள்ளன. பல்வேறு மதங்களும் பிரிவுகளும் சாஸ்திரங்களிலிருந்தே தோன்றின. கொடுமைகளுக்கும் மத வெறிக்கும் அவையே காரணமாக உள்ளன. இன்று எல்லா இடங்களிலும் பொய்யர்களை அவையே படைக்கின்றன. ஒவ்வொரு நாட்டிலும் உள்ள பொய்யர்களின் எண்ணிக்கையையும் பார்த்தால் திகைப்பாக இருக்கிறது.

அடுத்ததாக நாம் பார்க்க வேண்டியது பிரதிமை—உருவம். உலகம் முழுவதிலுமே உருவங்கள் ஏதாவதொரு விதத்தில் உபயோகப்படுத்தப்படவே செய்கின்றன. சிலர் மனித உருவையே பிரதிமையாகக் கொள்கிறார்கள். அதுதான் மிகவும் உயர்ந்த பிரதிமை. நான் ஒரு பிரதிமையை வழிபட விரும்பினால், ஒரு கட்டிடத்தையோ மிருகத்தையோ வேறு உருவத்தையோ வழிபடுவதைவிட, மனித உருவையே கொள்வேன். ஒரு பிரிவினர் ஒரு குறிப்பிட்ட விதமான உருவம்தான் சரியான பிரதிமை என்று கருதுகின்றனர். மற்ற பிரிவினர், அது சரியல்ல என்று நினைக்கின்றனர். கிறிஸ்தவர்களைப் பொறுத்தவரை கடவுள் புறா வடிவத்தில் வந்தால் அது சரி, ஆனால் இந்துக்கள் கூறுவதுபோல் அவர் பசு வடிவில் வந்தார் என்றால், அது பெரிய தவறு, அது மூடநம்பிக்கை. பிரதிமையை ஒரு பெட்டி வடிவில் செய்து, அதன்மீது இரண்டு தேவதூதர்களை அமரச் செய்து உள்ளே ஒரு புத்தகத்தையும் வைத்தால் அது யூதர்களுக்கு மிகவும் சரி. ஆனால் அதுவே ஓர் ஆண் அல்லது பெண்ணின் வடிவமாக இருந்தால், அது ஒரு கோரம்.

காபாவையும் அதிலுள்ள கறுப்புக் கல்லையும் மனத்தில் நினைத்து மேற்கு நோக்கித் தொழுவதுதான் சரியென முகமதியர்கள் எண்ணுகிறார்கள். ஆனால் சர்ச்சைப்போல் ஒரு வடிவத்தை மனத்தில் நினைத்தால் அது உருவ வழிபாடு, கீழானது என்று நினைக்கிறார்கள். இதுதான் உருவ வழிபாட்டில் உள்ள குறைபாடு. இவை எல்லாம் இன்றியமையாத படிகள். ஆனால் சாஸ்திரங்கள் விஷயத்தில் அவற்றைக் கண்மூடித்தனமாக நம்பாமல் இருக்கின்ற அளவிற்கு நல்லது.

நமக்கு நாமே என்ன உணர்ந்துள்ளோம் என்பதுதான் கேள்வி. ஏசுநாதரோ, புத்தரோ, மோசஸோ என்ன செய்தார்கள் என்பது நமக்குப் பயனற்றது. நமக்கு நாமே அதைச் செய்யும் வரை அவர்கள் செய்த எதுவும் நமக்கு எந்தப் பயனும் தரப் போவதில்லை. ஓர் அறையில் சென்று கதவை மூடிக்கொண்டு, மோசஸ் என்ன சாப்பிட்டார் என்பதை நினைத்துக் கொண்டிருந்தால் அது உங்கள் பசியைப் போக்காது. அதுபோலவே அவர் என்ன நினைத்தார் என்பதும் உங்களைக் காப்பாற்றாது. இந்த விஷயங்களில் என் கருத்துக்கள் முற்றிலும் சுதந்திரமானவை. புராதன ஆச்சார்யர்களுடன் எனது கருத்து ஒத்துப் போகும்போது நான் செய்வது சரியென்று சிலவேளைகளில் எனக்குத் தோன்றுகிறது. சிலவேளைகளில் அவர்கள் என்னோடு ஒத்துப்போகும்போது, அவர்கள் செய்வது சரியென்று தோன்றுகிறது. நமது சிந்தனை சுதந்திரமாக இருக்க வேண்டும் என்பதே எனது கருத்து.

இந்தப் புனித ஆச்சார்யர்களிடமிருந்து முற்றிலும் சுதந்திரமாக இருங்கள். அவர்களுக்கு எல்லா மரியாதையையும் அளியுங்கள். ஆனால் ஆன்மீகத்தைப் பொறுத்தவரை அதனை ஒரு தனிப்பட்ட தேடலாக எடுத்துக் கொள்ளுங்கள். அவர்கள் தங்கள் ஒளியைக் கண்டதுபோல் நானும் என் ஒளியைக் காண வேண்டும். அவர்கள் ஒளியைக் கண்டது எக்காரணம் கொண்டும் நமக்குத் திருப்தி அளிக்காது. நீங்கள் பைபிளைப் பின்பற்றுவது என்பது அல்ல, நீங்களே பைபிளாக ஆக வேண்டும். அது ஒரு பாதை விளக்கு, ஒரு வழிகாட்டி. ஒரு மைல்கல் என்ற நிலையில் அதற்குரிய மரியாதையைச் செலுத்த வேண்டும், அவ்வளவுதான். ஒரு சாஸ்திரம் என்பதற்குரிய மதிப்பு அவ்வளவே.

ஆனால் இந்தப் பிரதிமைகளும் மற்றவையும் கண்டிப்பாகத் தேவைப்படுகின்றன. மனத்தை ஒருமைப்படுத்த

வேண்டுமானாலும் சரி, ஓர் எண்ணத்தை வெளிப்படுத்த வேண்டுமானாலும் சரி, மனத்தில் உருவங்களை அமைக்க வேண்டியிருக்கிறது. உருவங்களை அமைக்காமல் உங்களால் எண்ணத்தை வெளிப்படுத்த முடியாது. பிரதிமைகள் தேவைப் படாத இரண்டு வகையான மக்கள் உள்ளார்கள்: ஆன்மீகத் தைப்பற்றிக் கவலைப்படாத மனித மிருகங்கள் ஒருவகை, இந்த நிலைகளை எல்லாம் கடந்த மகான்கள் இன்னொரு வகை. இந்த இரு எல்லைகளுக்குள் உள்ள எல்லோருக்கும் உள் ளேயோ, வெளியேயோ ஏதாவது ஒருவகை லட்சியம், ஒரு பிரதிமை தேவைப்படவே செய்கிறது; அது இறந்துபோன ஒரு மனிதனாக இருக்கலாம், அல்லது வாழ்ந்து கொண்டிருக்கும் ஆணாகவோ பெண்ணாகவோ இருக்கலாம். இதுதான் மனித வழிபாடு. இது உடலைத்தான் மையமாகக் கொண்டுள்ளது. ஆனாலும் இது இயல்பான ஒன்று.

சூட்சுமமான விஷயங்களையும் தூலமாக்க முயல்வது மனித இயல்பு. அப்படித் தூலமாக்கிக் காணாமல் நம்மால் இங்கு எப்படி வந்திருக்க முடியும்? நாம் எல்லோரும் தூல வடிவம் பெற்ற ஆன்மாக்கள். அதனால்தான் நாம் பூமியில் வந்திருக்கிறோம். தூலமாக்கும் தன்மைதான் நம்மை இங்கே கொண்டு வந்துள்ளது. அதாவது பிரதிமையை ஏற்கும் பண்பு தான் நம்மை உலகில் கொண்டு வந்துள்ளது; பிரதிமை வழி பாட்டின் உதவியுடனேயே நாம் உலகைக் கடந்து செல்வோம். 'முள்ளை முள்ளால் எடுப்பது' என்பார்களே, அது போன்றது இது. புலனுணர்வுப் பொருட்களை நாடிச் செல்வது, நம்மை மானிடன் ஆக்கியுள்ளது. இந்த நிலையில் மனித-உருவ வழி பாட்டை எவ்வளவுதான் எதிர்த்துப் பேசினாலும் அதை வழி படவே வேண்டியுள்ளது. 'நீ உருவ வழிபாட்டில் ஈடுபடக் கூடாது' என்று சொல்வது எளிது. ஆனால் இதைச் சொல்பவன் தான் அதில் மிகவும் ஆழ்ந்து ஈடுபட்டுள்ளவன். ஏதோவோர் ஆணிடமோ பெண்ணிடமோ அவன் மிகுந்த பற்று வைத்துள் ளான். அவர்கள் இறந்தாலும் அவனது பற்று விடுவதில்லை. அவர்களைப் பின்தொடர்ந்து செல்ல விரும்புகிறான். அதுதான் உருவ வழிபாடு, அதுதான் விதை, உருவ வழிபாட்டிற்கு மூல காரணம். காரணம் இருப்பதால் அது ஏதாவது ஒருவகையில் வெளிப்படவே செய்யும்.

ஒரு சாதாரண ஆணிடமோ பெண்ணிடமோ பற்று வைப் பதைவிட ஏசு, புத்தர் இவர்களின் உருவத்தில் பற்று வைப்பது

நல்லதுதானே. உருவத்தின் முன் முழங்கால் இடுவது மோசமானது என்று மேலைநாட்டில் கூறுகிறார்கள். அவர்களே ஒரு பெண்ணின் முன்னால் முழங்காலிட்டு, 'நீதான் என் உயிர்; நீதான் என் வாழ்வின் ஒளி; நீதான் என் கண்மணி; நீதான் என் உயிர்' என்று சொல்கிறார்கள். இது உருவ வழிபாட்டைவிட இழிவானது. 'எனது உயிர், எனது வாழ்க்கை'—இந்த உணர்ச்சிப் பெருக்கெல்லாம் ஐந்து நாளில் மறைந்துவிடும். இது ஐம்புலன்களின் மீதுள்ள வெறும் பற்று; மலர்களைக் கொண்டு மறைக்கப்பட்ட தன்னலப் பற்று. கவிஞர்கள் அதற்கு அழகான பெயர் வழங்குகிறார்கள்; அதன்மீது பன்னீர் தெளிக்கிறார்கள். ஆனால் இது தன்னலப் பற்றே தவிர வேறல்ல. புத்தர், மகாவீரர் இவர்களுடைய திருவுருவங்களுக்கு முன்னால் முழங்காலிட்டு, 'நீ என் உயிர்' என்று கூறுவது இதைவிடச் சிறந்தது அல்லவா? இப்படி நூறுமுறை செய்வதைத்தான் நான் விரும்புவேன்.

இன்னொரு வகையான பிரதீக வழிபாடு இருக்கிறது. இது மேலைநாடுகளில் ஏற்கப்படுவதில்லை. ஆனால் எங்கள் சாஸ்திரங்களில் சிறப்பாகக் குறிப்பிடப்படுகிறது: மனத்தையே கடவுளாக வழிபடுவதுதான் அது. இறைவனாக வழிபடப்படுகின்ற ஒவ்வொன்றும் ஒரு படி. அவை ஒவ்வொன்றின் மூலமும் நாம் அவரை நெருங்குகிறோம். அருந்ததி ஒரு சிறிய நட்சத்திரம். அதனைக் காட்ட வேண்டுமானால், முதலில் அதன் அருகிலுள்ள பெரிய நட்சத்திரம் ஒன்றைக் காட்டி, கவனத்தை ஈர்க்க வேண்டும். பிறகு இன்னும் சற்று சிறிய ஒன்றைக் காட்ட வேண்டும். இவ்வாறு படிப்படியாகச் சென்று கடைசியில் அருந்ததி நட்சத்திரத்தை அணுகுவோம். இப்படியே பலவிதப் பிரதீகங்களும் பிரதிமைகளும் நம்மை இறைவனை நோக்கி அழைத்துச் செல்கின்றன.

புத்தரையும் ஏசுவையும் வழிபடுவது பிரதீக வழிபாடுதான். அது இறைவழிபாட்டிற்கு அருகிலுள்ள நிலை. ஒரு புத்தரையோ ஒரு ஏசுவையோ வழிபடுவது மனிதனைக் காப்பாற்றாது. அவர்களைத் தாண்டி, ஏசுவாகவும் புத்தராகவும் அவதரித்த கடவுளை அவன் அடைய வேண்டும். ஏனெனில் கடவுள் மட்டுமே நமக்கு முக்தி தர முடியும். ஏசுநாதரும் புத்தரும் கடவுளாகவே கருதப்பட வேண்டும், அவர்கள் பிரதீகங்கள் அல்ல, கடவுளே என்று தத்துவ ஞானிகள் சிலர் கூறுகின்றனர். இந்தப் பிரதீகங்களை, அதாவது ஆண்டவனை அடையும் பல படிகளை ஏற்றுக்கொள்வதில், வழிபடுவதில் எவ்விதத் தீங்கும் இல்லை.

ஆனால் இந்தப் பிரதீகங்களை வழிபடும்போது இறைவனை வழிபடுவதாக நினைத்தால் அது தவறு. ஏசுவை வழிபடுவதால் உய்ய முடியும் என்று ஒருவன் நினைத்தால், அது முற்றி லும் தவறு. ஒருவன் ஓர் உருவத்தையோ, ஆவிகளையோ, அல்லது இறந்துபோன முன்னோர்களையோ வழிபட்டால் அவன் காப்பாற்றப்படுவான் என்று எண்ணினால், அதுவும் பிழையே. ஆனால் கடவுள் இதில் உள்ளார் என்ற கருத்துடன் எதையும் வழிபடலாம். உருவத்தை மறந்து அதில் கடவுளைக் காணுங்கள்.

கடவுள்மீது எந்த உருவத்தையும் புகுத்தக் கூடாது; ஆனால் நமக்குப் பிடித்த எதில் வேண்டுமானாலும் கடவுளைப் புகுத்தலாம். அதாவது நீங்கள் வழிபடும் உருவமாக அவரை எல்லைப்படுத்தாதீர்கள், நீங்கள் வழிபடுகின்ற அனைத்து உருவங்களையும் அவரால் நிறையுங்கள். அப்போது ஒரு பூனையில்கூட இறைவனை வழிபட முடியும். பூனையை மறந்து விட்டு, அதில் கடவுளைப் பிரதிஷ்டை செய்யுங்கள். நீங்கள் செய்வது சரியாகும். ஏனெனில் அவரிடமிருந்துதான் எல்லாம் வருகின்றன. அவர் எல்லாவற்றிலும் உள்ளார். ஓர் ஓவியத்தைக் கடவுளாக வழிபடலாம், ஆனால் கடவுளை ஓவியமாக வழி படக் கூடாது. கடவுள் ஓவியத்தில் உள்ளார் என்பது சரி, ஆனால் ஓவியமே கடவுள் என்பது தவறு. கடவுள் சிலையில் இருக்கிறார் என்பது மிகவும் சரி. அதில் ஆபத்தில்லை. இதுதான் உண்மையான வழிபாடு. ஆனால் சிலை—கடவுள் வெறும் பிரதீகம்தான்.

பக்தியில், அடுத்து நாம் பார்க்கப்போவது நாம சக்தி அதாவது திருப்பெயரின் ஆற்றல். பிரபஞ்சமே நாமரூபத்தால் தான் உருவாக்கப்பட்டுள்ளது. நாம் காண்பதெல்லாம் நாமம், ரூபம்—இவற்றின் சேர்க்கையாக இருக்கலாம்; அல்லது வெறும் நாமமாக மட்டும் இருந்து ரூபம் நமது மனத்தின் கற்பனையாக இருக்கலாம். எனவே நாமரூபமாக இல்லாத எதுவுமே உலகில் இல்லை. ஆண்டவனுக்கு உருவமோ வடிவமோ இல்லை என்று எல்லோரும் நம்புகிறோம். ஆனால் அவரைப்பற்றிச் 'சிந்திக்கத்' தொடங்கிய உடனே அவருக்கு நாமம், ரூபம் இரண்டையும் அளித்து விடுகிறோம்.

சித்தம் ஓர் அமைதியான குளம் போன்றது. எண்ணங்கள் சித்தத்தின்மீது எழும் அலைகளைப் போன்றவை. இந்த அலைகள் எழும் இயல்பான முறையே நாமரூபம். நாமமோ

ரூபமோ இல்லாமல் ஓர் அலையும் எழ முடியாது. என்றும் ஒரே சீராயுள்ள (Uniform) நிலை சிந்தனைக்கு அப்பாற்பட்டது. அது எண்ணமாக, ஜடமாக ஆகும்போது நாமமும் ரூபமும் பெற்றாக வேண்டும். அவற்றை நாம் பிரிக்க இயலாது.

கடவுள் இந்தப் பிரபஞ்சத்தை வாக்கிலிருந்து (Word) படைத்தார் என்று பல சாஸ்திரங்கள் கூறுகின்றன. சம்ஸ்கிருதத்தில் 'சப்த பிரம்மம்' என்பதுதான் கிறிஸ்தவர்கள் கூறுகின்ற 'வாக்கு'. இது பண்டைய இந்தியக் கொள்கை. இது இந்தியப் பிரச்சாரகர்களால் அலெக்சாண்டிரியாவுக்குக் கொண்டு செல்லப்பட்டு, அங்கு நிலைபெற்றுவிட்டது. அவ்வாறு வாக்கு, அவதாரம் போன்ற கருத்துக்கள் அங்கே நிலைத்துவிட்டன.

வாக்கிலிருந்தே இறைவன் எல்லாவற்றையும் படைத்தார் என்னும் கருத்திற்கு மிகுந்த ஆழமான பொருளுண்டு. இறைவன் உருவம் அற்றவர், எனவே இதுதான் படைப்பையோ உருவத்தையோ விளக்குவதற்கான மிகச் சிறந்த முறையாகும். படைப்பு என்பதற்கான சம்ஸ்கிருதச் சொல் சிருஷ்டி அதாவது வெளிப்படுத்துதல். 'சூன்யத்திலிருந்து இறைவன் எல்லாவற்றையும் படைத்தார்' என்று சொல்லும்போது, பெரிதாக என்ன புரிந்துவிடுகிறது? பிரபஞ்சம் இறைவனிலிருந்து வெளிப்படுத்தப்படுகிறது, அவரே பிரபஞ்சமாக மாறுகிறார், மீண்டும் அனைத்தும் அவரிடமே போய்ச் சேர்கின்றன. மீண்டும் அவை படைக்கப்படுகின்றன. அவரிடமே திரும்பிச் சேர்கின்றன. காலங்காலமாக இது தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டேயிருக்கும்.

மனத்தில் ஏதாவது தோன்ற வேண்டுமானால் நாமரூபம் இல்லாமல் அது முடியாது என்று கண்டோம். உங்கள் மனம் மிகவும் அமைதியாக, எண்ணங்களே அற்றதாக இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அதில் ஓர் எண்ணம் எழத் தொடங்கினால் அது நாமத்தையும் ரூபத்தையும் எடுத்துக் கொள்ளத்தானே செய்யும்? ஒவ்வோர் எண்ணத்திற்கும் ஒரு குறிப்பிட்ட நாமமும் ரூபமும் உள்ளது. அதேபோன்று படைப்பு, வெளிப்பாடு என்பதே எப்போதும் நாமத்தோடும் ரூபத்தோடும் என்றென்றைக்குமாக இணைந்துள்ளன. இவ்வாறு மனிதனால் கொள்ள முடிந்த ஒவ்வொரு கருத்தும் ஒரு குறிப்பிட்ட சொல்லை அதன் மற்றொரு பாகமாகக் கொண்டதாக இருப்பதைக் காண்கிறோம். உங்கள் எண்ணங்களிலிருந்து

உங்கள் உடல் எப்படித் தோன்றியதோ, உங்கள் கருத்து தூல வடிவம் பெற்று, வெளிப்படுத்தப்பட்டு எவ்வாறு உடலாகி யுள்ளதோ அவ்வாறே இந்தப் பிரபஞ்சமும் ஒரு மனத்தின் வெளிப்பாடு என்று கொள்வது இயல்பானது. மேலும் பிர பஞ்சம் முழுவதும் ஒரே அமைப்பைக் கொண்டிருக்குமானால் ஓர் அணு எப்படி அமைக்கப்பட்டுள்ளது என்று தெரிந்து கொண்டால், பிரபஞ்சம் முழுவதும் எப்படி அமைக்கப்பட் டுள்ளது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். நம்மில் உடல் என்பது தூலப் பகுதி, சிந்தனை என்பது சூட்சுமப் பகுதி. இரண்டும் ஒருபோதும் பிரியாதவை. உடல் இல்லாமல் போகும் போது சிந்தனையும் மறைந்துவிடும். ஒவ்வொரு நாளும் நீங்கள் இதை உணர்கிறீர்கள். மூளையின் அமைதி குலையும்போது சிந்தனையும் கலங்குகிறது. ஏனென்றால் இரண்டும் ஒன்றே—ஒன்று தூலம், மற்றது சூட்சுமம். ஜடம், மனம் என்று இரண்டு இல்லை.

உயர்ந்து ஓங்கி நிற்கின்ற வாயுத்தூண் ஒன்றை எடுத்துக் கொள்வோம். அதில் அடர்த்தி செறிந்த பாகமும் அடர்த்தி குறைந்த பாகமும் இருக்கிறது; உயரச் செல்லச்செல்ல அடர்த்தி குறைகிறது. அதுபோல்தான் நமது உடலும் தூலத் திலிருந்து நுட்பத்திற்குச் செல்கின்ற அடுக்குகளாக உள்ளது. நமது உடலை நகங்களுக்கு ஒப்பிடலாம். நகத்தை வெட்ட வெட்ட அது வளர்கிறது. அவ்வண்ணமே நம் நுண்ணிய எண்ணங்களிலிருந்து ஒன்றன்பின் ஒன்றாக உடல்கள் வந்து கொண்டே இருக்கின்றன. நுட்பமாக இருக்கும் அளவிற்கு ஒரு பொருள் நிலைத்து நிற்கிறது; தூலமாக இருக்கும் அளவிற்கு அது நிலையற்றதாக இருக்கிறது. ஆகவே 'எண்ணம்' என்று வெளிப்படும் ஒரு சக்தியின் தூலப் பகுதி ரூபம்; சூட்சுமப் பகுதி நாமம். ஆனால் எண்ணம், ரூபம், நாமம்—இந்த மூன்றும் ஒன்றே; ஒன்றே மூன்றும். ஒரே பொருளின் நுட்பமான, அடர்த்தி குறைந்த மற்றும் அடர்த்தி மிக்க மூன்று நிலைகளே அவை. எங்கே ஒன்று இருக்கிறதோ மற்றவையும் அங்கே இருக்கும். எங்கே நாமம் உள்ளதோ, அங்கே ரூபமும் எண்ண மும் இருக்கவே செய்யும்.

எனவே உடலின் அமைப்புப்படியே பிரபஞ்சமும் அமைக்கப்பட்டிருக்குமானால் அது ரூபம், நாமம், எண்ணம் ஆகிய மூன்றையும் பெற்றிருக்க வேண்டும். 'எண்ணம்' பிரபஞ்சத்தின் மிக நுட்பமான பாகம்; உண்மையான

தூண்டுசக்தி—அதுதான் கடவுள் என்று வழங்கப்படுகிறது. உடலின் பின்னால் இருக்கும் 'எண்ணம்'தான் ஆன்மா. பிரபஞ்சத்தின் பின்னால் உள்ள 'எண்ணம்' இறைவன். அதைத் தொடர்ந்து நாமம், இறுதியாக நாம் கண்டு உணரக்கூடிய ரூபம்.

உங்களுள் ஒருவரை எடுத்துக் கொள்வோம். நீங்கள் ஒரு மனிதர், பேரண்டத்தில் ஒரு சிற்றண்டம். உங்கள் உடலுக்கு குறிப்பிட்ட ஓர் உருவம் உள்ளது; திரு இன்னார், திருமதி இன்னார் என்ற நாமமும் உள்ளது. அதற்குப் பின்னால் ஓர் 'எண்ணம்' உள்ளது. அதுபோலவே எல்லையற்றுப் பெருகிய வகையில் இந்தப் பிரபஞ்சமும் அமைந்துள்ளது. அதற்குப் பின்னால் ஒரு நாமம் உள்ளது. அதுதான் 'வாக்கு'. அதிலிருந்து புற உலகங்கள் எல்லாம் தோன்றியுள்ளன. அதற்குப் பின்னால் பிரபஞ்ச எண்ணமாகிய கடவுள் இருக்கிறார். அவரையே மஹத் என்று சாங்கியர்கள் கூறுகிறார்கள். அதுதான் பிரபஞ்ச உணர்வு. அந்தப் பெயர் என்ன? ஏதாவதொரு பெயர் இருக்க வேண்டும். பிரபஞ்சம் ஒரே இயல்பானது. எந்தப் பொருளினால் இந்தப் பிரபஞ்சம் ஆக்கப்பட்டதோ, அந்தப் பொருளினாலேயே ஒவ்வோர் அணுவும் ஆக்கப்பட்டிருக்கிறதென்று சந்தேகத்திற்கு இடமின்றி தற்கால விஞ்ஞானம் காட்டியுள்ளது. ஒரு களிமண் கட்டியைப்பற்றித் தெரிந்தால், பிரபஞ்சமே தெரிந்ததாகும். இந்த அட்டவணை, அதன் எல்லா பரிமாணங்களுடனும் தெளிவாக உங்களுக்குத் தெரியுமானால், பிரபஞ்சமே உங்களுக்குத் தெரியும். பிரபஞ்சத்தின் மிகச் சிறப்பான பிரதிநிதியாக மனிதன் இருக்கிறான். அவன் சிற்றண்டம். அவன் தன்னளவில் ஒரு சிறிய பிரபஞ்சம். அவனில் ரூபமும், அதற்குப் பின்னால் நாமமும், அதற்குப் பின்னால் சிந்திக்கும் பொருளான எண்ணமும் உள்ளது.

இதே திட்டப்படிதான் பிரபஞ்சமும் அமைய வேண்டும். நாமம் என்று சொல்கிறோமே, அது எது என்பதுதான் கேள்வி. இந்துக்களின் கருத்துப்படி அது ஓம். பண்டைய எகிப்தியர்களும் அதை நம்பினார்கள். 'எதைத் தேடி ஒருவன் பிரம்மச்சரிய நெறியைக் கடைப்பிடிக்கிறானோ அதைச் சுருக்கமாகக் கூறுகிறேன். அது தான் ஓம்.'[1] 'ஓம். அதுதான் பிரம்மம்; அது

1. யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி, தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீமி ஓமித்யேதத் ।

—கடோபநிடதம், 1. 2. 15

புராதனமானது. இந்த ஓம் என்பதன் ரகசியத்தை அறிபவன் விரும்புகின்ற எல்லாவற்றையும் பெறுகிறான்.'[1]

பிரபஞ்சம் முழுவதற்கும் கடவுளுக்கும் நாமமாக ஓம் இருக்கிறது. புற உலகத்திற்கும் கடவுளுக்கும் இடையில் இது உள்ளது, இரண்டையும் குறிக்கிறது. ஆனால் நாம் பிர பஞ்சத்தைத் தொடு உணர்ச்சி, சுவை, நிறம் என்று ஐம்புலன் களுக்கு ஏற்றவாறு தனித்தனியாகவோ வேறு எத்தனையோ வழிகளிலோ எடுத்துக்கொள்ள முடியும். ஒவ்வொரு வழியிலும், இந்தப் பிரபஞ்சத்தைப் பல கோணங்களிலிருந்து நோக்கிப் பல கோடி பிரபஞ்சங்களை எழுப்பிவிடலாம். இந்தப் பிர பஞ்சங்கள் ஒவ்வொன்றும் தன்னளவில் பூரணமானவை. ஒவ் வொன்றிற்கும் ஒரு நாமமும் ஒரு ரூபமும் ஓர் எண்ணமும் உண்டு. இந்த எண்ணங்களே 'பிரதீகங்கள்', ஒவ்வொன்றிற் கும் ஒரு பெயருண்டு. புனிதமான பல நாமங்கள் பக்தியோகத் தில் வழங்கப்படுகின்றன. இந்தத் திருநாமங்களுக்கு ஏறக்குறைய எல்லையற்ற சக்தியுண்டு. இந்தத் திருநாமங்களை ஜபிப்ப தால் நாம் விரும்புகின்ற எதை வேண்டுமானாலும் பெறலாம்; பூரணத்தையும் அடையலாம்.

ஆனால் இரண்டு விஷயங்கள் இன்றியமையாதவை. 'குருவும் வியக்கத்தக்கவராக இருக்க வேண்டும் சீடனும் அப்படியே இருக்க வேண்டும்' என்று கடோபநிடதம் (1. 2. 7) கூறுகிறது. தகுந்த பரம்பரை வழியாக வந்த நாமத்தைப் பெற்ற ஒருவரிடமிருந்து நாம் அதைப் பெற வேண்டும். மிகப் பண்டைக் காலத்திலிருந்தே குரு-சீடன் என்ற முறையில் இந்த ஆன்மீகப் பெருவெள்ளம் பேராற்றலுடன் பாய்ந்து கொண்டே இருக்கிறது. இத்தகைய நாமம் யாரிடமிருந்து வருகிறதோ அவரே குரு. யார் இதைப் பெறுகிறாரோ அவர் சீடர். அந்தத் திருநாமத்தை உரிய முறையில் பெற்று ஜபித்து வந்தால் பக்தியோகத்தில் மிகுந்த முன்னேற்றம் அடையலாம். அந்தத் திருநாமத்தை ஜபிப்பதால் பக்தியின் மிக உயர்ந்த நிலையைக்கூட அடைய முடியும். 'உனக்குப் பல திருநாமங்கள் உண்டு. அந்தத் திருநாமங்களை நீயே அறிந்திருக்கிறாய். எல்லா திருநாமங்களும் உனதே. ஒவ்வொன்றிலும் உனது அளவற்ற சக்தி நிறைந்திருக்கிறது. இதனை ஜபிப்பதற்கு இடத்தையோ

---

1. ஏதத் த்வயேவாக்ஷரம் ப்ரஹ்ம ஏதத் த்வயேவாக்ஷரம் பரம் |
ஏதத் த்வயேவாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதிச்சதி தஸ்ய தத் ||
—கடோபநிடதம், 1. 2. 16

நேரத்தையோ பொருட்படுத்த வேண்டுவதில்லை. ஏனெனில் எல்லா நேரமும் எல்லா இடமும் புனிதமானவையே. எம்பெருமானே, நீ அடைவதற்கு எளியவன். அருளே வடிவானவன். எனினும் உன்னிடம் சிறிதேனும் அன்பு வைக்கும் பாக்கியம் பெறாத துரதிர்ஷ்டசாலியாக இருக்கிறேன் நான்.'[1] ❋

---

1. நாம்ணாமகாரி பஹு'தா நிஜ ஸர்வசக்தி-
ஸ்ததரார்ப்பிதா நியமித: ஸ்மரணே ந கால: ।
ஏதாத்ருசீதவக்ருபா பகவன் மமாபி
துர்தைவமீத்ருசமிஹாஜனி நானுராக: ॥
—சைதன்யர்

## 6. இஷ்டம்

நான் ஏற்கனவே குறிப்பிட்ட இஷ்டக் கோட்பாட்டை நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். இதைச் சரியாகப் புரிந்துகொள்வதன்மூலம் உலகின் பல்வேறு மதங்களையும் அறிந்துகொள்ள முடியும். விரும்பு, தேர்ந்தெடு என்று பொருள் படுகின்ற 'இஷ்' என்ற மூலச்சொல்லிலிருந்து தோன்றியது இஷ்டம் என்ற சொல். துன்பத்திலிருந்து நீங்கி விடுதலை பெறுவதுதான் எல்லா மதங்களின், எல்லா பிரிவுகளின், மனிதகுலத்தின் லட்சியம். எங்கெல்லாம் மதங்கள் உள்ளனவோ அங்கெல்லாம் இந்த லட்சியம் ஏதாவது ஒரு விதத்தில் செயல்பட்டுக் கொண்டிருப்பதைக் காணலாம். ஆனால் மதத்தின் கீழ்நிலைகளில் அது அவ்வளவு தெளிவாகப் புலனாவதில்லை. ஆனால் தெரிந்தாலும் சரி, தெரியாவிட்டாலும் சரி, நாம் ஒவ்வொருவரும் அந்த ஒரே லட்சியத்தை நோக்கித்தான் சென்று கொண்டிருக்கிறோம்.

நாம் துன்பத்திலிருந்து விடுபட விரும்புகிறோம்; தினந்தினம் படுகின்ற அவதிகளிலிருந்து விடுபட விரும்புகிறோம்; உடல், உள்ளம், ஆன்மா—இந்த மூன்றாலும் விடுதலை பெற முயல்கிறோம். உலகமே இந்த அடிப்படையில்தான் செயல்பட்டு வருகிறது. லட்சியம் ஒன்றுதான், ஆனால் அதை அடையும் வழிகள் பல. இந்த வழிகள், நமது இயல்பின் தனிப் பண்புகளைப் பொறுத்து அமைகின்றன. ஒருவர் உணர்ச்சிவசப் படுபவராக இருப்பார், இன்னொருவர் நுண்ணறிவு படைத்தவராக இருப்பார், அடுத்தவர் செயல்திறம் பெற்றவராக இருப்பார். இவ்வாறு பலவகை மக்கள் உள்ளனர்.

மேலும், ஒரே வகை இயல்பிலேயே பல பாகுபாடுகள் இருக்கலாம். உதாரணமாக நமது இப்போதைய தலைப்பாகிய பக்தி நெறியில் முக்கியப் பகுதியான அன்பு என்பதை எடுத்துக் கொள்வோம். ஒருவன் இயல்பாகவே தன் குழந்தையிடம் மிகுதியான அன்பைச் சொரிகிறான். மற்றொருவன் தன் மனைவிமீது ஆழ்ந்த அன்பு கொண்டிருக்கிறான். வேறொருவன் தாயிடமும்,

இன்னொருவன் தந்தையிடமும் மிகுந்த அன்பைச் செலுத்து கிறான். ஒருவன் நண்பனிடம் பாசம் வைக்கிறான். ஒருவனுக்கு நாட்டுப்பற்று மிகுதியாயிருக்கிறது. ஒருசிலர் மனித குலத்தை மிக ஆழமாக நேசிக்கின்றனர். மனித குலத்தை உண்மையிலேயே நேசிப்பவர்கள் மிகமிகச் சிலரே. ஆனால் அதுதான் தங்கள் வாழ்க்கையின் தூண்டுசக்தி, வாழ்க்கையின் இலக்கு என்பது போல்தான் ஒவ்வொருவரும் பேசுகின்றனர். ஒருசில மகான் களே இதனை அனுபவித்துள்ளனர். இத்தகைய உலகம்தழுவிய அன்பை மகான்கள் சிலரே உணர்கின்றனர். இத்தகைய அரு ளாளர்கள் இல்லாத காலம் என்று ஒன்று உலகில் ஒருபோதும் வராது என்று உறுதியாக நம்புவோம்!

ஒரே துறையில்கூட முடிவைக் காணப் பல வழிகள் இருப் பதை நாம் காண்கிறோம். கிறிஸ்தவர்கள் ஏசுவை நம்புகின்றனர்; ஆனால் அவர்கள் அவரைப்பற்றி எத்தனையெத்தனை வேறு பட்ட விளக்கங்களும் கருத்துக்களும் கொண்டிருக்கின்றனர் என்று எண்ணிப் பாருங்கள். ஒவ்வொரு பிரிவினரும் தத்தம் கோணங்களில் நின்றுகொண்டு வெவ்வேறு நிலைகளில் அவரைப் பார்க்கின்றனர். வணிகர்களை விரட்டியவராகவே ஏசுவைக் காண விரும்புகின்றனர் பிரெஸ்பிட்டேரியன் (Presbytarian) பிரிவினர்; அவர்களுக்கு அவர் ஒரு போராளி. குவேக்கர் (Quaker) பிரிவைச் சேர்ந்த ஒருவனைக் கேட்டால் அவன் ஒருவேளை, 'அவர் தம்முடைய பகைவர்களை மன்னித் தார்' என்பான். குவேக்கர்கள் அவரை அவ்வாறு பார்க்கின்றனர். இப்படியே பல கருத்துக்கள். கத்தோலிக்கன் ஒருவனிடம் ஏசுவின் வாழ்க்கையில் அவனுக்கு மிகவும் பிடித்தது எது என்று கேட்டால் ஒருவேளை அவன், 'அவர் பீட்டருக்குத் திறவுகோல் தந்த நிகழ்ச்சிதான்' என்று கூறுவான். எனவே ஒவ்வொரு பிரிவும், தங்கள் வழியிலேயே அவரைக் காண முடியும்.

ஒரே விஷயத்திற்குப் பல பிரிவுகளும் உட்பிரிவுகளும் இருக்கும் என்பது தெரியவருகிறது. அறிவற்றவர்கள் இந்தச் சிறு பிரிவுகளுள் ஏதேனும் ஒன்றைப் பற்றிக்கொண்டு, அதிலேயே கட்டுண்டுவிடுகிறார்கள். பிறர், தங்கள் அறிவுக்கு ஏற்றவாறு பிரபஞ்சத்திற்கு விளக்கம் தர வேறு யாருக்கும் உரிமையில்லையென்று மறுப்பதுடன் மட்டும் நின்றுவிடாமல், மற்றவர்கள் கூறுவது முற்றிலும் தவறென்றும், தாம் கூறுவது தான் சரியென்றும் துணிந்து சொல்கிறார்கள். எதிர்த்தால்

சண்டைக்கு வருகிறார்கள்; தாங்கள் நம்புவதை நம்பாதவர்களைக் கொல்வோம் என்று முகமதியர்களைப்போல் கூறுகிறார்கள். பல நாடுகளில், பல மதவெறியர்கள் முன்பும் இப்படிச் செய்துள்ளார்கள்; இப்பொழுதும் செய்து கொண்டிருக்கிறார்கள். இவர்கள், தாங்கள் நேர்மையானவர்கள் என்று கருதிக்கொண்டு மற்றவர்களைப் புறக்கணிக்கிறார்கள்.

பக்தியோகத்தில் நாம் மேற்கொள்ள வேண்டிய நிலை என்ன? மற்றவர்கள் செல்லும் வழிகள் தவறானவை என்று மதவெறியர்களைப் போல் நாம் சொல்லக் கூடாது. மாறாக, சொந்த நெறிகளைப் பின்பற்றுவோர் அனைவரும் சரியான பாதையிலேயே செல்கின்றனர் என்று கூற வேண்டும். எந்தப் பாதை உங்கள் இயல்பிற்கு முற்றிலும் உகந்ததாக உள்ளதோ அந்தப் பாதையே சரி. நாம் ஒவ்வொருவரும் முற்பிறவியின் விளைவாகத் தனிப்பட்ட இயல்போடு உலகில் பிறந்திருக்கிறோம். அதை முற்பிறவி அனுபவமென்று சொன்னாலும் சரி; அல்லது பரம்பரை வழியாக வந்தது என்று சொன்னாலும் சரி, நாம் அனைவரும் கடந்த காலத்தின் விளைவுகளே. இது சர்வ நிச்சயம். அந்த வினைகள் எந்த வழியாக வந்தாலும் சரி, அவற்றின் விளைவே நாம். எனவே கடந்த காலத்தைக் காரணமாகக் கொண்ட காரியம் அல்லது விளைவே நாம் ஒவ்வொருவரும் என்பது தெளிவு. அதற்கு ஏற்ப நம் ஒவ்வொருவருக்கும் ஒரு தனியியல்பு, ஒரு தனிப்போக்கு உள்ளது. ஆதலால் அவரவர்க்கு உரிய பாதையை அவரவரே கண்டுபிடித்துக் கொள்ள வேண்டும்.

நமக்கு இயற்கையாக அமைகின்ற இந்த வழி, இந்த முறை அல்லது இந்தப் பாதையே 'சொந்தப் பாதை'. இதுதான் இஷ்டம் பற்றிய கோட்பாடு. எது நமது வழியோ அதை நமது இஷ்டம் என்று கூறுகிறோம். எடுத்துக்காட்டாக, கடவுள் பிரபஞ்சத்தை ஆள்கின்ற எல்லாம்வல்ல ஆட்சியாளர் என்று ஒருவன் கருதுகிறான். அவனுடைய இயல்பு ஒருவேளை அத்தகையதாக இருக்கலாம். அவன் சற்று அதிகாரப்போக்குக் கொண்டவனாக, அனைவர்மீதும் ஆணைசெலுத்தும் குணம் உடையவனாக இருப்பான். எனவே கடவுளையும் அவ்வாறு கருதுகிறான். மற்றொருவன் கண்டிப்புமிக்க ஆசிரியனாக இருப்பான். அவன் இறைவனை, நடு நிலையில் நின்று நியாயமும் தண்டனையும் வழங்கும் நீதிபதியாகக் காண்பான். இவ்வாறு ஒவ்வொருவரும் அவரவர் இயல்பிற்கு ஏற்றவாறு இறைவனைக்

காண்கின்றனர். நமது இயல்பிற்கு ஏற்றவாறு நாம் எப்படிக் கடவுளைப் பார்க்கிறோமோ அதுவே நமது இஷ்டம். இப்படி அந்த நிலையில், அந்த நிலையில் மட்டுமே நாம் கடவுளைக் காணக்கூடிய நிலைக்கு நம்மை நாமே கொண்டு வந்துவிட்டோம். வேறு எந்த நிலையிலும் நாம் அவரைக் காண முடியாமல் போய்விட்டது.

ஒருவரது அறிவுரையைக் கேட்கிறீர்கள். அதுதான் மிகச் சிறந்தது என்றும், அதுவே உங்களுக்குச் சரியானது என்றும் எண்ணுகிறீர்கள். அடுத்த நாள் உங்கள் நண்பர் ஒருவரிடம் அந்த அறிவுரையைச் சென்று கேட்குமாறு கூறுகிறீர்கள். அவர் அதனைக் கேட்டுவிட்டு, தாம் அதுவரை கேட்டவற்றுள் சிறிதும் பயனற்றது அது என்று வெளியே வருகிறார். அவர்மீது தவறில்லை. அவருடன் வாதிப்பதிலும் பயனில்லை. அறிவுரை சரிதான். ஆனால் அது அவரது உள்ளத்திற்கு ஏற்றதாக இல்லை.

இதனை இன்னும் சற்று விவரித்தால், உண்மை உண்மைதான்; ஆனால் அது தவறாக இருக்கவும் வாய்ப்பு உண்டு. மேலாகப் பார்ப்பதற்கு இது ஒரு முரண்பாடாகத் தெரியலாம். ஆனால் ஒன்றை நாம் கருத்தில்கொள்ள வேண்டும். அறுதி உண்மை (Absolute Truth) ஒன்றே ஒன்றுதான்; ஆனால் எல்லா சார்பு உண்மைகளும் (Relative Truth) வேறுபடத்தான் செய்யும். உதாரணமாக இந்தப் பிரபஞ்சக் காட்சியை எடுத்துக் கொள்ளுங்கள். இந்தப் பிரபஞ்சம் ஒரு முழுமையான, பரிபூரணப் பொருள். இது மாற்ற முடியாதது; மாறாதது; எங்கும் ஒரே சீராகத் திகழ்வது. ஆனால் நீங்களும், நானும், மற்ற ஒவ்வொருவரும் அவரவர் பிரபஞ்சத்தையே பார்க்கிறோம்; கேட்கிறோம்.

சூரியனை எடுத்துக்கொள்ளுங்கள். சூரியன் ஒன்றுதான். ஆனால் நீங்களும் நானும் மற்ற நூற்றுக்கணக்கானோரும் பல்வேறு இடங்களிலிருந்து அதைப் பார்க்கும்போது வேறுபட்ட சூரியனையே பார்க்கிறோம். நாம் நிற்கின்ற இடத்தின் சிறு மாறுதல் சூரியனது காட்சியையே மாற்றிவிடும். வாயு மண்டலத்தில் ஏற்படும் மாறுதல் காட்சியை மாற்றும். எனவே சார்பு அறிவுகளில் உண்மை பலவாகத்தான் தோன்றும். ஆனால் அறுதி உண்மை ஒன்றே ஒன்றுதான்.

எனவே மதத்தைப் பற்றிய உங்கள் கருத்திற்கு ஏற்றவாறு ஒருவன் கூறவில்லை என்ற காரணத்திற்காக ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொள்ள வேண்டியதில்லை. முரணாக

இருப்பதுபோல் தோன்றினாலும், இருவர் கூறுவதும் உண்மை யாக இருக்கலாம். இதை நீங்கள் மறக்கக் கூடாது.

சூரியனின் ஒரே மையத்தை நோக்கி, கோடிக்கணக்கான ஆரங்கள் செல்கின்றன. மையத்திலிருந்து அவை எவ்வளவு விலகி இருக்குமோ அவ்வளவுக்கு இரண்டு ஆரங்களுக்கு இடையிலுள்ள தூரமும் அதிகமாக இருக்கும். மையத்தில் ஒன்றுசேரும்போது எல்லா வேறுபாடுகளும் மறைந்து விடு கின்றன. அப்படிப்பட்ட மையம் ஒன்று உள்ளது. அதுவே மனிதனின் அறுதி லட்சியம். இறைவனே அந்த மையம். நாமெல்லாம் ஆரங்கள். இந்த ஆரங்களுக்கு இடையேயுள்ள தூரங்களே நம் ஒவ்வொருவருக்கும் இயல்பாய் அமைந் துள்ள வரம்புகள். இந்த வரம்புகள் மூலமாக மட்டுமே நாம் இறைக்காட்சி பெற முடியும். இப்போது நாம் கட்டுப்பட்டுள்ள இந்தத் தளத்திலிருந்து பார்க்கும்போது நாம் ஒவ்வொருவரும் அறுதி உண்மையின் வெவ்வேறு கோணங்களைத்தான் பார்க்க முடியும். ஆனால் எல்லா கோணங்களும் உண்மை யானவை. அதற்காக நாம் அடித்துக்கொள்ள வேண்டிய தில்லை. வேறுபாடுகள் விலக ஒரே வழி, மையத்தை அடை வதுதான். போராடியோ, வாதம் செய்தோ நாம் நம் வேறு பாடுகளைக் களைந்து விடலாம் என்றால் அது நடக்காது. எந்த முடிவுக்கும் வராமல் ஆண்டாண்டு காலம் நாம் வாதிட்டுக் கொண்டிருக்க வேண்டியதுதான். வரலாறு இதனை நிரூபிக் கிறது. முன்னேறிச் சென்று மையத்தை அடைவது ஒன்றே தீர்வு. இதை எவ்வளவு விரைவாகச் செய்கிறோமோ, அவ்வளவு விரைவில் வேறுபாடுகள் மறையும்.

எனவே, மனிதன் தனக்குரிய மதத்தைத் தானே தேர்ந் தெடுத்துக் கொள்ள அனுமதிப்பதுதான் இஷ்டக் கோட்பாடு. தான் வழிபடுவதையே வழிபட வேண்டுமென்று பிறரை வற்புறுத்தக் கூடாது. படைகளினாலோ, வலிமையாலோ, வாதத் திறமையாலோ மக்களை ஒன்றாகத் திரட்டி ஒரே இடத்தில் மந்தைபோல் அடைத்து, ஒரே கடவுளை வழிபடச் செய்வதற் காக எடுக்கப்பட்ட எந்த முயற்சிகளும் வெற்றி பெறவில்லை; வெற்றி பெறவும் செய்யாது. அவ்வாறு செய்ய முடியாது என் பது மனித இயல்பிலேயே உள்ளது. அது மட்டுமல்ல; அவ்வாறு செய்வது அவர்களின் வளர்ச்சியையும் தடுத்துவிடக்கூடும். ஏதாவது ஒரு மதத்தைப் பின்பற்றப் போராடாத ஆணையோ பெண்ணையோ நாம் பார்க்க முடியாது. இவர்களுள் எத்தனை

பேர் திருப்தி அடைகின்றனர்? திருப்தி அடைந்தவர்களின் எண்ணிக்கை எவ்வளவு குறைவாக உள்ளது! எதையாவது அடைபவர்களின் எண்ணிக்கைதான் எவ்வளவு குறைவு! அது ஏன்? ஏனெனில் பெரும்பாலோர் அடைய முடியாத காரியங்களை எடுத்துக்கொண்டு அல்லாடுவதுதான். அவர்கள் இப்படிச் செய்வதற்குக் காரணம், பிறர் அவர்களை அடக்கி அவ்வாறு செய்யுமாறு செய்ததுதான்.

எடுத்துக்காட்டாக, ஒரு தந்தை தன் பிள்ளைக்குக் குழந்தைப் பருவத்திலேயே ஒரு சிறிய நூலைக் கையில் கொடுத்து கடவுள் இப்படி இருப்பார், இது இப்படி, அது அப்படி என்று கற்பிக்கிறார். இப்படி அந்தக் கருத்தை என் மனத்தில் புகுத்த அவருக்கு என்ன உரிமை உள்ளது? நான் எந்த முறையில் வளர வேண்டும் என்பதுபற்றி அவருக்கு என்ன தெரியும்? என்னுடைய மன அமைப்பின் வளர்ச்சிபற்றி அவருக்கு எதுவும் தெரியாது. இருந்தும் தன் கருத்துக்களை என் மனத்தில் திணிக்க விரும்புகிறார். விளைவு? என் வளர்ச்சி குன்றுகிறது. ஒரு செடிக்குப் பொருந்தாத மண்ணில் அதை வளரும்படிச் செய்ய உங்களால் முடியாது. ஒரு குழந்தை தனக்குத்தானே கற்பித்துக் கொள்கிறது. அதன் வழியிலேயே அது முன்னேற நீங்கள் உதவி செய்யலாம். ஆனால் நேரடியாக எதுவும் செய்வதற்கில்லை. தடைகளை நீங்கள் நீக்கலாம், ஆனால் அறிவுவளர்ச்சி அதன் இயல்பிற்கு ஏற்பவே உண்டாகிறது. இறுகிய நிலத்தைச் சற்று நெகிழ்த்துங்கள், செடியின் முளை எளிதாக வெளிவரும். பிற எதனாலும் அதற்குத் தீங்கு ஏற்படாமலிருக்க அதைச் சுற்றி வேலி போடுங்கள். பனிபோன்றவற்றிலிருந்து அதனைக் காக்க வழிசெய்யுங்கள். அத்துடன் உங்கள் வேலை முடிந்துவிட்டது. அதற்குமேல் நீங்கள் எதுவும் செய்ய முடியாது. மற்றவை அதன் சொந்த இயல்பிலிருந்தே வெளிப்பட வேண்டும்.

ஒரு குழந்தையின் கல்வியும் இந்த முறையில்தான் நடைபெற வேண்டும். குழந்தை, தானே கற்றுக் கொள்கிறது. நான் சொல்வதைக் கேட்க நீங்கள் வந்திருக்கிறீர்கள். உங்கள் வீட்டிற்குச் சென்ற பிறகு, உங்கள் மனத்தில் ஏற்கனவே இருப்பதுடன் இங்கே கேட்டதை ஒப்பிட்டுப் பாருங்கள். அதையேதான் நீங்களும் எண்ணியிருந்தது தெரியவரும். நீங்கள் நினைத்ததை நான் வெளியிட்டேன், அவ்வளவுதான். நான் உங்களுக்கு எதுவும் கற்றுக்கொடுக்க முடியாது. உங்களுக்கு

நீங்களே கற்பிக்க வேண்டும். ஆனால் அந்த எண்ணத்தை வெளியிடுவதற்கு நான் ஒருவேளை உதவக்கூடும்.

மதத்திலும் அப்படியே. இன்னும் சொல்லப்போனால் மதத்தைப் பொறுத்தவரை எனக்கு நானே குருவாக இருக்க வேண்டும். எல்லாவிதமான பொருளற்ற கருத்துக்களை என் மூளையில் புகுத்த என் தந்தைக்கு என்ன உரிமை இருக்கிறது? இவற்றை என் மனத்தில் புகுத்த ஆசிரியருக்கு என்ன உரிமை? இல்லை, சமுதாயத்திற்குத்தான் என்ன உரிமை? ஒருவேளை அவை நன்மை தரக் கூடியனவாகவே இருக்கலாம். ஆனால் அவை என் வழி இல்லாமல் போகலாமே! தவறான போதனை மூலம், களங்கமற்ற கோடிக்கணக்கான குழந்தைகளின் அக வளர்ச்சியையே கொன்றுவிட்ட பயங்கரக் கொடுமையை எண்ணிப் பாருங்கள். வியப்பூட்டும் வகையில் ஆன்மீக உண்மைகளாகப் பரிணமிக்கக்கூடிய எத்தனையோ அழகிய விஷயங்கள் இந்தக் குடும்ப மதம், சமுதாய மதம், தேசிய மதம் போன்ற கொடிய கொள்கைகளால் முளையிலேயே கிள்ளி எறியப்பட்டுவிட்டன! உங்கள் குழந்தைக் கால மதம், அல்லது தேசிய மதம்பற்றி உங்கள் மூளையில் இப்போது எவ்வளவு திரளான மூடநம்பிக்கை திணிக்கப்பட்டிருக்கிறது என்பதை எண்ணிப் பாருங்கள்! அது எவ்வளவு கொடுமை செய்துள்ளது அல்லது செய்யக்கூடும் என்பதையும் சிந்தியுங்கள்! தன்னால் எவ்வளவு தீமை செய்ய முடியும் என்பதை மனிதன் அறிய வில்லை. அவன் அறியாமல் இருப்பதும் நல்லதுதான். அறிந் தால் அவன் தற்கொலைதான் செய்துகொள்வான். ஒவ் வோர் எண்ணத்திற்கும் செயலுக்கும் பின்னணியில் எத்தகைய பேராற்றல் புதைந்துள்ளது என்பதை அவன் அறியவில்லை. 'தேவதூதர்கள் காலெடுத்து வைக்க அஞ்சுமிடத்தில், அறி விலிகள் விரைந்து செல்ல முந்துவார்கள்' என்ற பழமொழி முற்றிலும் உண்மை. இதை ஆரம்பத்திலிருந்தே நாம் நினை வில் கொள்ள வேண்டும். எப்படி? இஷ்டம் என்பதில் நம்பிக்கை வைப்பதன்மூலம்.

பல லட்சியங்கள் இருக்கின்றன. உங்கள் லட்சியம் எது வாக இருக்க வேண்டும் என்று சொல்லவோ, எந்த லட்சியத் தையாவது உங்கள்மீது திணிக்கவோ எனக்கு உரிமை இல்லை. எல்லா லட்சியங்களையும் உங்கள் முன் வைத்து, உங்கள் இயல்பிற்கு ஏற்ப எது உங்களுக்குப் பிடித்தது, எது உங்களுக்கு உகந்தது என்பதை நீங்களே தீர்மானித்துக் கொள்ளும்படி

விட்டுவிடுவதே என் கடமை. உங்களுக்கு மிகவும் ஏற்புடைய ஒன்றை எடுத்துக்கொண்டு, அதில் விடாமுயற்சியுடன் ஈடு படுங்கள். அதுதான் உங்களது இஷ்டம்; உங்களது சிறப்பான லட்சியம்.

எனவே எல்லோருக்குமான ஒரு மதம் ஒருபோதும் இருக்க முடியாது என்பது தெரிகிறது. மதம் என்பது அவரவர் சொந்த விஷயம். எனக்கென்று ஒரு சொந்தக் கருத்து இருக் கிறது. அதை நான் புனிதமாகவும் ரகசியமாகவும் போற்ற வேண்டும். ஏனென்றால் அது உங்களுடைய கருத்தாக இருக்க வேண்டியதில்லை என்பது எனக்குத் தெரியும். இரண்டாவ தாக, என் கருத்தை ஒவ்வொருவரிடமும் சொல்லி நான் ஏன் குழப்பத்தை உண்டாக்க வேண்டும்? மற்றவர்கள் என் னோடு சண்டையிடக்கூடும். நான் அவர்களிடம் சொல்லா விட்டால் சண்டையிட மாட்டார்கள். சொன்னால் எதிர்க்கத் தான் செய்வார்கள். எனவே அவற்றைப்பற்றிப் பேசுவதால் என்ன நன்மை? இஷ்டத்தை ரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டும். அது உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே உள்ள விஷயம்.

மதத்தின் கொள்கைகளை வெளிப்படையாக மக்களிடம் பரப்பலாம்; எல்லோரையும் பின்பற்றச் செய்யலாம். ஆனால் மதத்தின் உயர்ந்த பகுதியை அதாவது, ஆன்மீகத்தை அவ் வாறு செய்ய இயலாது. ஆன்மீகம் என்று சொன்ன ஐந்து நிமிடத்திற்குள் ஆன்மீக உணர்ச்சி பெற்று எழ என்னால் முடி யாது. வெறும் வேடிக்கையாலும் கேலிக்கூத்துகளாலும் என்ன பயன்? அது மதத்தைக் கேலி செய்வதாகும்; தெய்வ நிந்தனையுங்கூட. அதன் பலன்களையே இன்று நாம் சர்ச்சு களில் காண்கிறோம். இத்தகைய மதப்பயிற்சிகளை மக்கள் எப்படித் தாங்கிக் கொள்வார்கள்? இது படை வீரர்களின் படைத்தளப் பயிற்சியைப் போலுள்ளது. 'துப்பாக்கியைத் தோளின்மீது வையுங்கள். முழங்காலிடுங்கள்; புத்தகத்தைக் கையில் எடுங்கள்' என்று எல்லாம் ஒரேவகையாக ஏற்கனவே வகுக்கப்பட்டுவிட்டன. ஐந்து நிமிடம் பக்தி, ஐந்து நிமிடம் ஞானம், ஐந்து நிமிடம் பிரார்த்தனை என்று எல்லாம் முன் கூட்டியே கணக்கிடப்பட்டுவிட்டன. இவை பயனற்றவை. ஆரம்பத்திலேயே தவிர்க்கப்பட வேண்டியவை. இத்தகைய கேலிக்கூத்துகள் மதத்தையே விரட்டியடித்து விட்டன. இது இன்னும் சில நூற்றாண்டுகளுக்கு நீடித்தால், மதம் என்ற

ஒன்றே இல்லாமல் போய்விடும். உள்ளம் திருப்தி கொள்ளும் அளவிற்கு தத்துவங்களை, கொள்கைகளை, கோட்பாடுகளை சர்ச்சுகள் போதிக்கட்டும். ஆனால் மதத்தின் செயல்முறைப் பகுதியான வழிபாட்டில் ஈடுபடும்போது, ஏசுநாதர் கூறியது போல், 'உன் அறைக்குள் சென்று, உள்கதவைப் பூட்டி, அகத் திலிருக்கிற உன் பிதாவை நோக்கிப் பிரார்த்தனை செய்.'

இஷ்டம் என்ற கோட்பாடு இதுதான். பல்வேறுதரப் பட்ட மக்களுக்குச் செயல்முறை மதத்தைத் தரவும் அதன் மூலம் மதச் சண்டைகளைத் தவிர்க்கவும், ஆன்மீக வாழ்வில் உண்மையான முன்னேற்றத்தைக் காணவும் துணை செய்ய வேண்டும் என்றால், அதற்குரிய ஒரே வழி இதுதான். என் சொற்களுக்குத் தவறான பொருள்கொண்டு ரகசியக் குழுக் களை அமைக்க முயலாதீர்கள் என்று எச்சரிக்க விரும்புகிறேன். சாத்தான் என்று ஒருவன் இருந்தால் அவனை நான் இந்த ரகசியக் குழுவில்தான் எதிர்பார்ப்பேன். ரகசியக் குழுவின் தனிப் படைப்பு அவன். அதன் திட்டங்கள் வெறும் பேய்த் தனமானவை.

இஷ்டம் புனிதமானது, ஆனால் ரகசியமானது அல்ல. உங்கள் இஷ்டத்தைப்பற்றிப் பிறரிடம் நீங்கள் ஏன் பேசக் கூடாது, தெரியுமா? அது உங்களுடைய புனிதமான உடைமை என்பதால்தான். அது மற்றவர்களுக்கு உதவக்கூடும். ஆனால் அது பிறரைப் புண்படுத்தாது என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? ஒருவன் உருவக் கடவுளை வழிபட இயலாத இயல்புடையவனாக இருப்பான்; தன் ஆன்மாவையே உரு வமற்ற கடவுளாக வழிபடுவான். நான் அவனை உங்கள் முன் நிறுத்துகிறேன் என்று வைத்துக் கொள்வோம். அவன் உருவக் கடவுள் இல்லை என்றும், உங்களிடமும் என்னிடமும் உள்ள ஆன்மாவே கடவுள் என்றும் கூறினால், நீங்கள் திடுக்கிடுவீர்கள். அவனது கருத்து புனிதமானது, ஆனால் ரகசியமானது அல்ல.

எந்த ஒரு சிறந்த மதமும் ஆகட்டும், எந்தப் பெரிய ஆச் சாரியரும் ஆகட்டும், இறை உண்மைகளைப் போதிப்பதற்கு அவர்கள் ரகசியக் குழுக்களை ஏற்படுத்தியதாகத் தெரிய வில்லை. இந்தியாவில் இத்தகைய ரகசியக் குழுக்கள் இல்லை. இது மேலை நாட்டுக் கருத்து. அதை இந்தியாவின்மீது திணிக்க அவர்கள் விரும்புகின்றனர். இவற்றைப்பற்றி எங் களுக்கு எதுவும் தெரியாது. இந்தியாவில் ரகசியக் குழுக்கள் இருக்க வேண்டிய அவசியம்தான் என்ன? சர்ச்சுக்கு

மாறுபட்ட கொள்கைகளைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேச ஐரோப்பாவில் யாருக்கும் அனுமதி கிடையாது. எனவே தாங்கள் விரும்பிய வகையில் வழிபட அவர்கள் ஒளிந்து மலைகளுக்குச் சென்று ரகசியக் குழுக்கள் ஏற்படுத்த வேண்டிய நிலைமை உண்டாயிற்று. மதத்தைப்பற்றி வேறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்ததற்காக இந்தியாவில் யாரும் எப்போதும் துன்புறுத்தப்படவில்லை. ரகசிய குழுக்களைப் போன்ற கோரமானவற்றை ஒருவன் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. இவற்றால் எவ்வளவு தீமை ஏற்படுகிறது, எவ்வளவு எளிதில் இவை காமக் கழகங்களாகவோ, ஆவிக் கழகங்களாகவோ மாறி விடுகின்றன, எப்படி இதில் ஆண்களும் பெண்களும் சிக்கிக் கொள்கிறார்கள், எண்ணத்திலும் செய்கையிலும் அவர்களுடைய எதிர்கால வளர்ச்சி எவ்வளவு பாதிக்கப்படுகிறது என்பதையெல்லாம் நான் இந்த உலகில் நிறைய பார்த்திருக்கிறேன்.

நான் இப்படிப் பேசுவது உங்களில் சிலருக்கு மனக்கசப்பை உண்டாக்கலாம். ஆனால் நான் உண்மையைச் சொல்லியாக வேண்டும். எனது வாழ்நாள் முழுவதும் ஆண்களும் பெண்களுமாக ஓர் ஆறுபேர் மட்டுமே என்னைப் பின்பற்றக் கூடும். ஆனால் அவர்கள் தூயவர்களாக, நேர்மையானவர்களாக இருக்க வேண்டும். எனக்குக் கூட்டம் தேவையில்லை. கூட்டங்களால் என்ன சாதித்துவிட முடியும்? உலக வரலாற்றைப் படைத்தவர்கள் மிகச் சிலரே. அவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். மற்றவர்கள் வெறும் சந்தைக் கூட்டமே.

இத்தகைய ரகசியக் குழுக்களும் போலிக் கூட்டங்களும் மக்களைத் தூய்மையற்றவர்களாக, பலவீனர்களாக, குறுகிய மனப்பான்மை உடையவர்களாக ஆக்கிவிடுகின்றன. பலவீனர்களுக்கு மனத்திடம் இல்லை. அவர்களால் எந்தச் செயலையும் செய்ய முடியாது. எனவே இந்தக் குழுக்களோடு எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளாதீர்கள். இவை எல்லாம் அடக்கி வைக்கப்பட்ட காமத்தின் வெளிப்பாடு; மர்ம விஷயங்களைப் பற்றிய தவறான அன்பு. இவை உங்கள் உள்ளத்தில் முதல் முறை தலைதூக்கும்போதே, அதன்மீது ஓங்கி அடித்து ஒழித்துவிடுங்கள். களங்கத்தின் சாயல் இருந்தாலும்கூட மதவாதியாக இருக்க முடியாது. அழுகிச் சொட்டும் புண்களை ரோஜா மலர்களைக் கொண்டு மூட முயலாதீர்கள். ஆண்டவனை ஏமாற்றலாம் என்று நினைக்கிறீர்களா? யாராலும் அது

ஒருபோதும் முடியாது. நேர்மையான ஓர் ஆணையோ பெண்ணையோ எனக்குக் கொடுங்கள். ஆனால் இந்தப் பறக்கும் தேவதூதர்கள், ஆவிகள், பேய்கள் இவற்றிலிருந்து ஆண்டவன் என்னைக் காப்பாற்றட்டும். எந்நாளும் எல்லாரிடமும் ஒரே தன்மையராக, எல்லார்க்கும் உரியவர்களாக, இனியவர்களாக விளங்குங்கள்.

'இயல்புணர்ச்சி' (Instinct) என்று ஒன்று நம்மிடம் உள்ளது. அது மிருகங்களுக்கும் நமக்கும் பொதுவாக அமைந்தது. உடலின் ஓர் எந்திர கதி அது. அதைவிட ஓர் உயர்ந்த வழிகாட்டி நமக்கு உண்டு. அது நமது 'பகுத்தறிவு' (Reason). அது பல உண்மைகளைத் தொகுத்து ஒரு பொது விதியை நிறுவுகிறது. அதற்கும்மேல் ஓர் அறிவுச்சக்தி இயங்குகிறது; அதுதான் 'உள்ளுணர்வு' தெய்வப் பேருணர்வு (Inspiration). அது பகுத்து அறிவதில்லை. இமைப்பொழுதில், ஒரு மின்னல் வீச்சில், எல்லாவற்றையும் அது அறிந்துவிடுகிறது. அறிவின் மிகவுயர்ந்த நிலை அது. ஆனால் அதை இயல்புணர்ச்சியிலிருந்து பிரித்து அறிவது எப்படி? அது மிகவும் கடினம்தான். இப்போதெல்லாம் ஒவ்வொரு முட்டாளும் உங்களிடம் வந்து தனக்கு தெய்வப்பேருணர்வு ஏற்பட்டுவிட்டதாகச் சொல்கிறான். 'எனக்குத் தெய்வப் பேருணர்வு வந்துவிட்டது. எனவே எனக்கு ஒரு மேடை அமையுங்கள். என்னைச் சூழ்ந்து நில்லுங்கள், என்னை வழிபடுங்கள்' என்கிறான் அவன். தெய்வப் பேருணர்வையும் ஏமாற்று வேலையையும் எப்படிப் பிரித்து அறிவது? முதலில், தெய்வப் பேருணர்வு ஒருபோதும் பகுத்தறிவுக்கு முரண்பட்டதாக இருக்காது. முதுமைப் பருவம், குழந்தைப் பருவத்திற்கு முரண்பட்டதல்ல. குழந்தைதான் முதியவனாகப் பரிணமிக்கிறான். தெய்வப் பேருணர்வு என்று நாம் கூறுவது பகுத்தறிவின் பரிணாமமே. பகுத்தறிவின் வாயிலாகவே அதனை அடைய முடியும். தெய்வப் பேருணர்வு பகுத்தறிவுக்கு முரணாக இருக்கக் கூடாது. அப்படி இருக்குமானால் அதனை வீசி எறிந்துவிட வேண்டும். உங்கள் உடலின் இயல்புணர்ச்சி வசப்பட்ட இயக்கங்கள் பகுத்தறிவுக்கு எதிராக இருப்பதில்லை. சாலையைக் கடந்து செல்லும்போது வாகனங்களின் விபத்திலிருந்து தப்பிக்க எவ்வளவு இயல்பாக உங்கள் உடல் இயங்குகிறது! அவ்வாறு உங்கள் உடம்பைக் காத்துக் கொள்வது அசட்டுத்தனம் என்று உங்கள் மனம் சொல்கிறதா? இல்லை. உண்மையான தெய்வப் பேருணர்வு ஒருபோதும்

பகுத்தறிவுக்கு முரணாக இருக்காது. முரணாக இருக்குமானால் அது தெய்வப் பேருணர்வு அல்ல, அது வெறும் புளுகு மூட்டை.

இரண்டாவதாக, தெய்வப் பேருணர்வு என்பது எல்லோருடைய நன்மைக்காகவும் இருக்கும், பெயருக்காகவோ புகழுக்காகவோ சொந்த லாபத்திற்காகவோ இருக்காது. அது என்றென்றும் உலகின் நன்மைக்காகவே இருக்கும்; முற்றிலும் தன்னலமற்றதாக இருக்கும். இந்தச் சோதனைகள் பூர்த்தியானால் அதைத் தெய்வப் பேருணர்வு என்று கொள்ளலாம். இன்று உலகம் உள்ள நிலையில் இந்தத் தெய்வப் பேருணர்வு பெற்றவர்கள் கோடியில் ஒருவர்கூட இல்லை என்பதை நீங்கள் மனத்தில் கொள்ள வேண்டும். இப்போது அத்தகையோரது எண்ணிக்கை மிகக் குறைவு. எதிர்காலத்தில் அவர்கள் அதிகமாவார்கள் என்று நம்புகிறேன். ஏன், உங்களுள் ஒவ்வொருவருமே அத்தகையோராக மலர்வீர்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

இப்போது ஆன்மீகத்தை நாம் ஒரு பொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறோம். தெய்வப் பேருணர்வு வரும்போதுதான் நம்மிடம் ஆன்மீகம் ஆரம்பமாகும். செயின்ட் பால் கூறுவது போல் 'இப்போது மங்கலான கண்ணாடியின்மூலம் பார்க்கிறோம், ஆனால் அப்போது நேருக்குநேர் பார்ப்போம்'. இன்றைய உலகில் அத்தகைய நிலையை அடைந்தவர்கள் மிகக் குறைவானவர்களே. அதேவேளையில் 'நாங்கள் தெய்வப் பேருணர்வு பெற்றவர்கள்' என்று போலியாகச் சொல்லித் திரிபவர்கள் இவ்வாறு அதிகமாக இருந்ததும் வேறெந்தக் காலத்திலும் இல்லை. பெண்களுக்கு உள்ளுணர்வு சாத்தியக் கூறுகள் அதிகம் என்றும், ஆண்கள் பகுத்தறிவைக் கொண்டு மெதுவாகவே முன்னேறுகிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இந்த வெறும் பேச்சை நம்பாதீர்கள். தெய்வப் பேருணர்வு பெற்ற பெண்கள் எத்தனை பேர் உண்டோ, அத்தனை ஆண்களும் உள்ளனர். ஒருவேளை, பெண்கள்தான் நரம்புத் தளர்ச்சி போன்ற நோய்களுக்குப் பெரிதும் இலக்காகிறார்கள். ஏமாற்றுக்காரர்கள், செப்படி வித்தைக்காரர்கள் இவர்களின் கைப்பாவையாக இருப்பதைவிட நம்பிக்கையற்றவராக இருந்து இறந்து போவது மேல். பயன்படுத்துவதற்காகத்தான் பகுத்தறிவு உங்களிடம் உள்ளது. அதைச் சரியாகப் பயன்படுத்தியதாக உலகிற்கு நிரூபியுங்கள். அப்படிச் செய்தால், அதன்மூலம் உயர்ந்தவற்றை நீங்கள் அடைய முடியும்.

கடவுள் அன்பு வடிவானவர் என்பதை நாம் எப்போதும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். 'கங்கைக் கரை யோரம் வாழ்ந்து கொண்டு, நீருக்காகக் கிணறு வெட்டுபவன் முட்டாள்.' வைரச் சுரங்கத்திற்கு அருகில் வாழ்ந்து கண்ணாடி மணியைப் பொறுக்குபவன் ஒரு மடையன். அந்த வைரச் சுரங்கம்தான் கடவுள். ஆவிகள், பறக்கும் தேவதைகள் போன்ற பிதற்றல்களை நம்பிக் கடவுளை மறப்பவர்கள் முட்டாள்கள் அல்லாமல் வேறு யார்? இது மனித இனத்தை இழிநிலைக் குத் தள்ளுகிறது. நரம்புகளை பலவீனப்படுத்துகிறது; எப் போதும் பேய்களை எண்ணி நடுங்கும் நிலையில் நமது மூளையை வைக்கிறது; புதுமை காணும் ஆவலைத் தூண்டு கிறது. இந்தக் கட்டுக் கதைகள் நம்மை இயற்கைக்கு மாறான, நரம்புகள் முறுக்கேறிய நிலைக்கு அழைத்துச் செல்கின்றன. படிப்படியாக மனித இனத்தையே சீர்குலையச் செய்கின்றன. இந்தப் பொருளற்றவற்றைப் பின்பற்றுவதற்காகக் கடவுளை யும், பரிசுத்தத்தையும், புனிதத்தையும், ஆன்மீகத்தையும் விட்டு விடுவதா? பிறரது மனங்களை அறியும் வேலையைப்பற்றி என்ன சொல்வேன்! ஐந்து நிமிடம் நான் பிறரது எண்ணங்களை அறிந்தால் போதும், எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்!

நிமிர்ந்து நில்லுங்கள். ஆற்றலுடன் விளங்குங்கள். அன்பு வடிவான ஆண்டவனை நாடுங்கள். இதுதான் மிகப் பெரிய வலிமை. தூய்மையைவிட உயர்ந்த சக்தி ஏதேனும் உண்டா? அன்பும் தூய்மையும் உலகின்மீதே ஆணை செலுத்து கின்றன. அந்த அன்புக் கடவுளைப் பலவீனர்களால் அடைய இயலாது. எனவே உடல், உள்ளம், ஒழுக்கம், ஆன்மீகம் என்று எதிலும் பலவீனமாக இருக்காதீர்கள். இறைவன் மட்டுமே உண்மை. மற்றவை எல்லாம் உண்மை அல்லாதவை. இறைவனுக் காக எல்லாவற்றையும் துறக்க வேண்டும். 'இறைவனை நேசிப் பதும், அவருக்குத் தொண்டு செய்வதும் தவிர, மற்ற அனைத்தும் வீண், வெறுமை, வெறுமையில் வெறுமை! இறைவனுக்குச் சேவை செய்; அவருக்கு மட்டுமே சேவை செய்'!

## 7. நிஷ்டை

கடந்த வகுப்பில் பிரதீகங்களைப்பற்றிப் பார்த்தோம். ஆரம்பநிலை பக்தியில் இன்னும் ஒரு விஷயத்தை மட்டும் பார்த்துவிட்டு, பராபக்தியைத் தெரிந்துகொள்வோம். நாம் பார்க்கப்போவது நிஷ்டை, அதாவது ஒருமுகப்பட்ட ஈடு பாடு. வழிபாடு பற்றிய எல்லா கருத்துக்களும் சரியானவை, நல்லவை என்பது நமக்குத் தெரியும். இறைவனை, இறைவனை மட்டுமே வழிபடுவதுதான் பக்தி, வேறு யாரையும் வழிபடு வது பக்தியாகாது என்பதை ஏற்கனவே கண்டோம். இறை வனைப் பல்வேறு வடிவங்களில், பல்வேறு கருத்துக்களில் வழிபடலாம். இவை எல்லாமே சரியானவை, நல்லவை.

பிரச்சினை இங்குதான் எழுகிறது. எல்லாமே சரி என் பதற்காக எல்லாவற்றையும் வழிபடத் தொடங்கினால் நாம் எதையும் சாதிக்க முடியாது; நமது ஆற்றல்கள் சிதறி வீணா வதுதான் மிச்சமாகும். தங்களைப் பரந்த மனப்பான்மை உடையவர்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள் எல்லாவற் றிலும் மூக்கை நுழைக்கிறார்கள். ஆனால் எதையும் முழுமை யாகத் தெரிந்துகொள்வதில்லை; நுனிப்புல் மேய்வதோடு சரி. தாங்கள் எதையும் சாதிக்காததை அவர்கள் இறுதியில் தான் உணர்கிறார்கள். பல விஷயங்களைக் கேட்பதும், செயல் முறையில் எதையும் சாதிக்காமல் இருப்பதும் இந்த நாட்டில் ஒருவகையான நோயாகவே வளர்ந்து வருகிறது.

பக்தர்களுக்கு இதோ ஓர் உபதேசம்: 'எல்லா மலர் களிலிருந்தும் தேனை அருந்துங்கள். மரியாதையுடன் எல் லோரிடமும் பழகுங்கள். எல்லோருக்கும் ஆம், ஆம் என்று தலையாட்டுங்கள். ஆனால் உங்கள் இடத்திலிருந்து வில காதீர்கள்.' இப்படிச் சொந்த இடத்திலிருந்து, அதாவது சொந்தக் கருத்திலிருந்து விலகாமல் இருப்பதே நிஷ்டை என்று அழைக்கப்படுகிறது.

பிறருடைய லட்சியங்களை வெறுக்கவோ விமர்சிக்கவோ வேண்டிய தேவையில்லை. அவையெல்லாமே சரியானவை.

ஆனால் அதேவேளையில் நமது லட்சியத்தில் உறுதியான பிடிப்புடன் இருப்பது மிகவும் அவசியம்.

பெரிய ராம பக்தனான அனுமனைப்பற்றி ஒரு கதை உண்டு. கிறிஸ்தவர்கள் ஏசுவை இறைமகனாகக் கருதி வழிபடுவதுபோல் இந்துக்கள் இறைவனின் பல அவதாரங்களை வழிபடுகிறார்கள். கடவுள் ஏற்கனவே ஒன்பதுமுறை பூமியில் அவதரித்துவிட்டார், இன்னும் ஒருமுறை வரப்போகிறார் என்பது இந்துக்களின் நம்பிக்கை. அவ்வாறே இறைவன் ராமனாக வந்தபோது அனுமன் அவரது மிகப் பெரிய பக்தராக இருந்தார். அனுமன் பெரிய யோகி, மிக நீண்ட காலம் வாழ்ந்தவர். தமது காலத்திலேயே இறைவன் மீண்டும் ஒருமுறை கிருஷ்ணனாக வந்ததைப் பார்க்கும் பேறு பெற்றவர். அவர் பெரிய யோகியாக இருந்ததால் இவ்வாறு இரண்டு அவதார புருஷர்களின் காலத்திலும் வாழ முடிந்தது.

அனுமன் கிருஷ்ணனுக்குச் சேவை செய்ய அவரிடம் சென்றார். அங்கே அவரிடம், 'கிருஷ்ணா, நான் உன்னை உனது ராம வடிவிலேயே காண விரும்புகிறேன்' என்றார். அதற்குக் கிருஷ்ணர், 'ஏன், இந்த வடிவிற்கு என்ன குறை? நானே கிருஷ்ணன், நானே ராமன். எல்லா உருவங்களும் எனதே' என்றார். உடனே அனுமன் சொன்னார்: 'கிருஷ்ணா, அது எனக்குத் தெரியும். ஜானகி ராமனும், லட்சுமி நாதனும் ஒருவரே. இருவரும் பரமாத்மாவின் அவதாரங்களே. ஆனால் எனக்கு எல்லாம் ஜானகிராமனே.'—இதுதான் நிஷ்டை.

நாம் வழிபடுகின்ற பல்வேறு தேவதேவியரும் உண்மையே என்றாலும் மற்றவர்களை விட்டுவிட்டு ஒரே ஒருவரைப் பற்றிக் கொள்வதுதான் நிஷ்டை. பிறரை வெறுக்கவோ விமர்சிக்கவோ கூடாது. மாறாக, எல்லோரையும் மரியாதையுடன் பார்க்க வேண்டும். யானையின் வாயிலிருந்து இரண்டு தந்தங்கள் வெளி வருகின்றன. இவை வெறும் காட்சிக்காக மட்டுமே, இவற்றால் அது சாப்பிட முடிவதில்லை. அதன் வாய்க்குள்ளே இருக்கின்ற பற்கள்தான் அது உணவை மென்று தின்ன உதவுகிறது. எனவே எல்லா பிரிவுகளுடனும் சேர்ந்துகொள்ளுங்கள். எல்லாவற்றுக்கும் ஆம், ஆம் என்று தலையாட்டுங்கள். ஆனால் உங்கள் வழிபாட்டுமுறையில் உறுதியாக இருங்கள்.

உங்கள் இஷ்டதெய்வத்தையே வழிபடுங்கள். இல்லாவிடில் உங்களுக்கு எதுவும் கிடைக்காது, வளர்ச்சி எதுவுமே இருக்காது. செடி வளரும்போது அதை மிருகங்களிலிருந்து

காப்பாற்ற வேலியிட வேண்டியது அவசியம். அதுவே வளர்ந்து பெரிய மரமாகிவிட்டால் எந்த வேலியும் தேவையில்லை. தன்னைத்தானே அது காத்துக்கொள்ள முடியும். ஆன்மீக விதை முளைவிட்டு வளரும்போது கொஞ்சம் கிறிஸ்தவம், கொஞ்சம் பௌத்தம், கொஞ்சம் இது, கொஞ்சம் அது என்று எல்லா மதக் கருத்துக்களிலும் மனத்தை அலைபாயவிட்டு ஆற்றலைச் சிதறடிப்பது எந்தப் பயனையும் தராது. அது ஆன்மாவின் அழிவிற்கே வழிவகுக்கும். இதற்கும் பலன் இருக்கவே செய்கிறது. அதனை நாம் பின்னால் பார்ப்போம். குதிரைக்கு முன்னால் வண்டியைக் கட்டும் முயற்சி வேண்டாம்.

ஆரம்பத்தில் நாம் பிரிவினைவாதிகளாகத்தான் (Sectarians) இருக்க முடியும். ஆனால் இதையும் ஒரு லட்சியநிலையில் எடுத்துக்கொள்வோம். யாரையும் நாம் தவிர்க்க வேண்டாம். நம் ஒவ்வொருவருக்கும் ஒரு பிரிவு இருக்க வேண்டும். அந்தப் பிரிவுதான் நமது இஷ்டம். நமது பிரிவை, நமது இஷ்டத்தைக் கடைப்பிடிப்பதற்காக மற்றவனின் கழுத்தை அறுக்க வேண்டியதில்லை. நமது பிரிவு நமக்குப் புனிதமானது. அதை நமது சொந்தச் சகோதரர்களிடம்கூடச் சொல்லக் கூடாது. ஏனெனில் அது நான் தேர்ந்தெடுத்தது, எனவே புனிதமானது. அதேபோல் என் சகோதரனுடைய இஷ்டமும் புனிதமானதே.

எனவே உன் இஷ்டத்தையே உறுதியாகப் பற்றிக்கொள். பிரார்த்தனை செய்யும்போது உன் இஷ்டதெய்வத்தை மட்டுமே கருத்தில் கொள். கடவுள் பல நிலைகளில், பல வடிவங்களில் இருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அந்த நேரத்திற்கு உனது இஷ்டதெய்வம் மட்டுமே உன் நினைவில் இருக்கட்டும்.

இப்படி நீண்டகாலம் பயின்று, உனது ஆன்மீகச் செடி போதிய அளவு வளரும்போது உனது ஆன்மா வலிமை பெற்றதாகிறது. அப்போது உன் இஷ்டதெய்வத்தை நீ எங்கும் காண முடியும். அப்போது இயல்பாகவே தளைகள் எல்லாம் இற்று வீழ்கின்றன. பழம் பழுக்கும்போது, அதன் எடை காரணமாகவே அது கீழே விழுகிறது அல்லவா! இத்தகைய எண்ணம் நம்முள் வளரப் பாடுபடுவோம்.

சில சொற்பொழிவுகளைக் கேட்பதும், ஜீரணிக்க முடியாத சில கருத்துக்களை மூளையில் திணித்து, அங்கே ஒரு வாட்டர்லூ போரையே (Waterloo Battle) நிகழச் செய்வதிலும் எந்தப் பலனும் இல்லை. ஒரு லட்சியத்தில் ஈடுபாடு—இது

இருப்பவன் ஆன்மீகத்தில் வளர்வான், ஒளியைக் காண்பான். 'நான் இந்தச் சாதனையைச் செய்கிறேன்', 'நான் அந்தச் சாதனையைச் செய்கிறேன்' என்றெல்லாம் பலரும் சொல் வதைக் கேட்கலாம். அவர்கள் அப்படி என்னதான் செய் கிறார்கள் என்று கேட்டுப் பாருங்கள். 'அங்கே ஒரு சொற் பொழிவு கேட்டோம்', 'இங்கே ஒரு விரிவுரை கேட்டோம்' என்பார்கள். அதைக் கேட்டுவிட்டு மூன்று மணிநேரம், அதுவும் ஓரிரு நாட்கள் ஏதோ செய்திருப்பார்கள். இவ்வளவும் செய்ததே அவர்களுக்குப் பெரிய சாதனை ஆகிவிட்டது! இது நிறை நிலைக்கான வழி அல்ல, ஆன்மீகத்திற்கான பாதையும் அல்ல. இது முட்டாள்களின் வழி.

ஓர் இஷ்டத்தை எடுத்துக்கொள்ளுங்கள். உங்கள் முழு மனமும் அதில் ஈடுபடட்டும். ஒரு பலனைக் காணும்வரை, ஆன்மா வளரும்வரை இதனைத் தினமும் பயிற்சி செய்யுங்கள். நீங்கள் எடுத்துக்கொண்ட இஷ்டம் உங்களுக்கு உரிய தாக இருக்குமானால் அதுவே வளர்ந்து உங்களுக்கு மிக உயர்ந்த அனுபவத்தை அளிக்கும். இறுதியில் உங்கள் இஷ்ட தெய்வமே பிரபஞ்சம் எங்கும் நிறைந்திருப்பதாக, எல்லா வற்றிலும் ஊடுருவி இருப்பதாகக் காண்பீர்கள்.

அதேவேளையில், பிறரது இஷ்டதெய்வங்களையும் நாம் மதிக்க வேண்டும், போற்ற வேண்டும். இல்லாவிடில் வழிபாடு என்பது கொள்கைவெறி என்ற நிலைக்குத் தாழ்ந்துவிடும். பழைய கதை ஒன்று உண்டு— சிவ பக்தன் ஒருவன் இருந்தான். அவனுக்கு சிவ பெருமானிடம் பக்தி இருந்த அளவிற்கு மற்ற தெய்வங்களிடமும் பிற பக்தர்களிடமும் வெறுப்பும் இருந்தது. 'நாராயணா' என்று யாராவது சொல்வதைக்கூட அவனால் சகிக்க முடியாது. இந்தியாவில் வைணவர்களும் ஏராளம் உள்ள னர். எனவே நாராயண நாமத்தைக் கேட்பதை அவனால் தவிர்க்க முடியவில்லை. அதைத் தவிர்ப்பதற்காக இரண்டு காதுகளிலும் துளையிட்டு இரண்டு மணிகளைக் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டான். யாராவது நாராயணா என்று சொன்னால் உடனே தலையை அசைப்பான். அதன் காரணமாக அவனது காதுகளில் தொங்குகின்ற மணிகள் ஆடி ஒலியை எழுப்பும். அவன் அந்த நாமத்தைக் கேட்க வேண்டியிருக்காது.

அவனது வெறியைக் கண்ட சிவபெருமான் ஒருநாள் அவனது கனவில் தோன்றி, 'முட்டாளே, நானே விஷ்ணு, நானே சிவன். இருவரும் வெவ்வேறு அல்ல. வேறுபாடு

எல்லாம் பெயரில் மட்டுமே. இரண்டு கடவுள்கள் ஒருபோதும் கிடையாது' என்றார். ஆனால் அந்த பக்தன் அதைப் பொருட்படுத்தாமல், 'அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. அந்த விஷ்ணுவிற்கும் எனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை' என்று கூறிவிட்டான்.

அவனிடம் சிவபெருமானின் சிலை ஒன்று இருந்தது. அதை அவன் ஒரு சிறிய பீடத்தில் வைத்து வழிபட்டு வந்தான். ஒருநாள் அவன் சாம்பிராணி முதலானவை வாங்கி வந்து, தூபமிட்டு அவரை வழிபட்டான். சாம்பிராணிப் புகை எங்கும் சூழ்ந்திருந்த அந்த நேரத்தில் சிலை இரண்டாகப் பிளந்து, ஒன்று சிவனாகவும் மற்றொன்று விஷ்ணுவாகவும் மாறியது. அவ்வளவுதான், அந்த பக்தன் துள்ளிக் குதித்தெழுந்து ஒரே ஓட்டமாக ஓடி, விஷ்ணுவின் மூக்கைப் பொத்திக் கொண்டான். சாம்பிராணி நறுமணத்தைக்கூட விஷ்ணு முகர்ந்துவிடக் கூடாது என்ற அளவுக்கு அவனது வெறி இருந்தது. சிவபெருமானால் அவனது வெறியைத் தாங்க முடியவில்லை. எனவே கோபத்துடன் அவனை அசுரனாகப் பிறக்கும்படிச் சாபமிட்டார். கொள்கைவெறிகளுக்கு எல்லாம் தந்தையான அவனே கண்டாகர்ணன்.

இந்தியாவில் கண்டாகர்ணனை வழிபடுகிறார்கள். அந்த வழிபாடே வினோதமாக இருக்கும். ஒரு களிமண் உருவைச் செய்து, அதனைத் துர்நாற்றம் மிக்க பூக்களால் வழிபடுவார்கள். கொடிய நோய்களைப் பரப்புகின்ற, துர்நாற்றம் மிக்க சில பூக்கள் இந்தியக் காடுகளில் உள்ளன. பின்னர் பெரிய கொம்புகளால் அந்தக் களிமண் சிலையை அடிஅடி என்று அடிப்பார்கள். தங்கள் தெய்வத்தைத் தவிர பிற தெய்வங்களை வெறுக்கின்ற அனைவருக்கும் தந்தையாக இருக்கிறான் கண்டாகர்ணன். நிஷ்டை-பக்தியிலுள்ள ஒரே குறைபாடு இதுதான்—வெறிபிடித்த அசுரனாதல். உலகம் முழுவதும் அவர்கள் நிறைந்துள்ளனர்.

யாரையும் வெறுப்பது எளிது. ஒருவனை நேசிக்க வேண்டுமானால் மற்றவர்களை வெறுத்தேயாக வேண்டும் என்ற அளவிற்கு மனித குலம் பலவீனம் அடைந்திருக்கிறது. ஓர் இடத்திலிருந்து ஆற்றலை எடுத்து மற்ற இடத்தில் வைப்பது போல் உள்ளது அவர்களது செய்கை. ஒருவன் ஒருத்தியை நேசிக்கிறான். சில காலத்திற்குப் பிறகு இன்னொருத்தியை விரும்புகிறான். இரண்டாவது பெண்ணை நேசிக்க

வேண்டுமானால் அவன் முதல்பெண்ணை வெறுக்க வேண்டியிருக்கிறது. பெண்கள் விஷயமும் அப்படியே. இந்தக் குணம் நமது இயல்பின் ஒவ்வொரு பகுதியிலும் நிறைந்துள்ளது. மதத்தைப் பொறுத்தவரையிலும்கூட இது உண்மையே.

சாதாரணமான, பலவீனமான மனிதனால் ஒருவரை வெறுக்காமல் மற்றவரை நேசிக்க முடியாது. இந்த இயல்பு தான் மதத்தில் கொள்கைவெறியாக மாறுகிறது. அவர்களைப் பொறுத்தவரை தங்கள் லட்சியத்தை நேசிப்பது என்றாலே மற்ற எல்லா கருத்துக்களையும் வெறுப்பதுதான். இதைத் தவிர்க்க வேண்டும்.

அதேவேளையில் இன்னொரு அபாயமும் தவிர்க்கப்பட வேண்டும். நாம் நமது ஆற்றல்களைச் சிதறடித்து வீணாக்கக் கூடாது.

நமது வாழ்க்கையில் ஆன்மீகம் என்றால் ஒன்றுமே இல்லை. இரண்டு மூன்று சொற்பொழிவுகளைக் கேட்டால் போதும், ஆன்மீகம் என்பது அவ்வளவுதான்.

இரண்டு அபாயங்கள் உள்ளன. மிகவும் தாராள மனப் பான்மை உடையவர்களிடம் தீவிரம் இருப்பதில்லை, அவர்கள் பரந்துபரந்து செல்கிறார்கள். இப்போதெல்லாம் ஆன்மீகம் என்பது மிகவும் விரிந்து பரந்ததாகிவிட்டது. அதில் ஆழமோ தீவிரமோ இல்லை. நாள் முழுவதும் கடுமையாக உழைத்த பிறகு மனத்தைச் சற்று லேசாக்கிக் கொள்வதற்காகச் சிறிது தானதர்மங்கள் செய்கிறார்களே, அதுதான் ஆன்மீகம், அதுதான் மதம் என்றாகிவிட்டது. ஐந்து நிமிட ஆர்ப்பாட்டத்தில் மதமே அடங்கிவிட்டது. பரந்த கொள்கைகளினால் வரும் அபாயம் இதுதான்.

இனி, சில பிரிவினரிடம் தீவிரமும் ஆழமும் உள்ளது. ஆனால் அது மிகவும் குறுகியதாக உள்ளது. அவர்கள் தீவிரமாக இருக்கிறார்கள். ஆனால் அங்கே பரந்த மனப்பான்மை இல்லை. இதன் காரணமாக அவர்கள் மற்ற ஒவ்வொருவரையும் வெறுக்கத் தலைப்படுகிறார்கள்.

இந்த இரண்டு அபாயங்களையும் தவிர்த்து, மிகவும் பரந்த மனப்பான்மை உடையவர்களைப்போல் பரந்தும், அதே வேளையில், மிகத் தீவிரமான கொள்கைவெறியனைப் போல் ஆழமாகவும் இருக்க முடியுமானால் நாம் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும்.

அதனை எப்படிச் செய்வது? இந்த நிஷ்டைக் கருத்தின்மூலம்தான். நம் முன் உள்ள லட்சியங்கள் எல்லாமே உண்மையானவை, எல்லாமே ஒரே இறைவனின் பல்வேறு பகுதிகள். ஆனால் இறைவனை இந்த எல்லா வழிகள்மூலமும் வழிபடும் திறமை நம்மிடம் இல்லை. எனவே ஏதாவது ஒரு லட்சியத்தைப் பிடித்துக்கொண்டு அதையே நமது வாழ்க்கை லட்சியமாக ஆக்கிக்கொள்ள வேண்டும். இதை உங்களால் வெற்றிகரமாகச் செய்ய முடிந்தால் மற்ற அனைத்தும் தானாக நடைபெறும்.

சடங்குகள் சேர்ந்த, கிரியைகளுடன் கூடிய, ஆரம்ப நிலையிலுள்ள பக்தியின் முதற்பகுதி இங்கே நிறைவுறுகிறது. பக்தியின் முதற்பாடமே சீடனை, அதாவது சாதகனைப் பற்றியதுதான்.

சீடன் யார்? அவனுக்குரிய தகுதிகள் எவை? 'எங்கேபேசுப வர் அற்புதமானவராக இருக்கிறாரோ, அதுபோலவே கேட்ப வரும் அற்புதமானவராக இருக்கிறாரோ; எங்கே ஆசிரியர் அற்புதமானவராக இருக்கிறாரோ, அதுபோலவே மாண வனும் அற்புதமானவராக இருக்கிறானோ அங்கேதான் உண்மையான ஆன்மீகம் உருவாக முடியும்.' தங்களுக்கான எல்லாவற்றையும் குரு செய்ய வேண்டும் என்றுதான் பொதுவாக மனிதர்கள் நினைக்கிறார்கள். ஆனால் தங்களிடம் அதற்குரிய தகுதி இல்லை என்பதை அவர்கள் புரிந்துகொள்வதில்லை.

முதலில் சாதகனிடம் 'தேவை' என்பது இருக்க வேண்டும். அதாவது அவனுக்கு ஆன்மீகம் உண்மையாகத் தேவைப் பட வேண்டும். நமக்கு ஆன்மீகத்தைத் தவிர வேறு எல்லாம் தேவையாக இருக்கிறது. தேவை என்று நாம் எதைக் கூறு கிறோம்? உணவு நமக்குத் தேவை என்கிறோமே, அதுபோன்ற தேவையைத்தான். ஆடம்பரங்கள் 'தேவை'யில்லாதவை. நாம் உயிர்வாழ இன்றியமையாதவைதான் 'தேவை'கள்.

ஆன்மீகம் என்பது மிகச் சிலருக்கே தேவையானது, பலருக்கு அது ஓர் ஆடம்பரம் மட்டுமே. இந்த உலகில் உள்ள எத்தனையோ நூற்றுக்கணக்கான பொருட்கள் இல்லாமல் நாம் உயிர்வாழ முடியும். ஒரு கடைக்குப் போகிறோம். புதிய அழகான ஒன்றைப் பார்க்கிறோம். உடனே அதை வாங்க எண்ணுகிறோம். 99.9 சதவீதம் பேரும் ஆன்மீகத்திற்கு வருவது இப்படித்தான். வாழ்க்கையில் இருக்கின்ற எத்தனையோ ஆடம் பரங்களுள் ஆன்மீகமும் ஒன்று, அவ்வளவுதான். இதில்

தவறும் இல்லை. அவர்கள் விரும்பியதுபோல் செய்யட்டும். ஆனால் இதன்மூலம் இறைவனை முட்டாள் ஆக்கலாம் என்று நினைத்தால் அது தவறு. அவரை யாரும் ஏமாற்ற முடியாது; ஏமாற்ற நினைப்பவர்கள்தான் ஏமாந்து போவார்கள்; மனித நிலையிலிருந்து தாழ்ந்து மிருக நிலைக்குச் சென்று விடுவார்கள்.

எனவே உண்மையான தேவையை உணர்கின்ற, அதாவது உணவு, உடை, வேலை, காற்று போன்றவை எப்படித் தேவையோ அப்படியே ஆன்மீகமும் தேவையாக இருப்பவர்கள் மட்டுமே ஆன்மீகவாதிகளாக முடியும். எது இல்லாமல் நாம் வாழ முடியாதோ அது 'தேவை'. எது கணநேர ஆசையை வெறுமனே பூர்த்தி செய்கிறதோ அது 'ஆடம்பரம்'.

சீடனின் அடுத்த தகுதி தூய்மை. அவன் விடாமுயற்சி உடையவனாக இருக்க வேண்டும்; பாடுபட வேண்டும். குருவின் உபதேசத்தைக் கேட்பது என்பது ஒரு பகுதிதான், அதன் மறுபகுதி கேட்டதைச் செயல்படுத்துவது.

பக்தியின் அடுத்த பகுதி குரு. குரு தகுதி உடையவராக இருக்க வேண்டும். முக்கியக் கருத்து என்னவென்றால் அவரிடம் ஆன்மீகத்தின் விதை இருக்க வேண்டும் என்பதுதான். குரு என்பவர் வெறும் சொற்பொழிவாளர் அல்ல; அவர் தமது குருவிடமிருந்து, அந்த குரு தமது குருவிடமிருந்து என்று பரம்பரைபரம்பரையாக இடையீடற்றுப் பெற்று வருகின்ற ஆன்மீக ஆற்றலைப் பிறருக்குக் கொடுக்க வல்லவரே குரு. ஆன்மீக ஆற்றலைப் பாய்ச்ச வல்லவராக அவர் இருக்க வேண்டும்.

இவ்வாறு குருவும் சீடனும் இருவருமே தயாராக இருக்கும் போது பக்தியோகத்தின் முதற்படி ஆரம்பமாகிறது. பக்தி யோகத்தின் முதற்பகுதி நம்மைத் தயார்படுத்துவதற்கு உரியது. இங்கு நாம் உருவங்கள் முதலிய புற உதவிகளைக் கைக்கொள்ள வேண்டியுள்ளது.

அடுத்த சொற்பொழிவு நாமங்கள் பற்றியதாக இருந்தது. எல்லா மதங்களின் எல்லா சாஸ்திரங்களும் எவ்வாறு நாம மகிமையை எடுத்துக் கூறுகின்றன, எவ்வாறு அந்த நாமம் நமக்கு நன்மை செய்கிறது என்பதைப் பார்த்தோம். பக்தி யோகி நாமத்தை இறைவனாகவே பார்க்க வேண்டும்; இறைவனிலிருந்து வேறுபட்டதாகப் பார்க்கக் கூடாது. இறைவனும் அவனது திருநாமமும் ஒன்றே.

அடுத்து, பக்தியோகிக்குப் பணிவும் மரியாதையும் இன்றியமையாதவை என்பது கூறப்பட்டது. பக்தியோகி தன்னை இறந்த ஒருவனாகவே கருத வேண்டும். இறந்தவன் அவமதிப்பைப் பொருட்படுத்துவதில்லை, அதை எதிர்த்து எதுவும் செய்வதில்லை. அவ்வாறே பக்தியோகியும் பிறரைப் பொறுத்தவரை இறந்தவனாகவே இருக்க வேண்டும். நல்லவர்களை, புனிதமானவர்களை எப்போதும் பக்தியோகி போற்றிப் பணிய வேண்டும். ஏனெனில் இறைவனது மகிமை எப்போதும் அவரது குழந்தைகளின் வாயிலாக ஒளிர்கிறது.

அடுத்து பிரதீகங்களைப்பற்றிக் கண்டோம். இறைவனை வழிபடுவது மட்டுமே பக்தி, வேறு எதனை வழிபடுவதும் பக்தியாகாது என்பது அங்கே கூறப்பட்டது. எந்த ஒன்றையும் நாம் கடவுளாகக் கருத முடியுமானால் அதனைத் தாராளமாக வழிபடலாம். கடவுளாகக் கருத முடியாத ஒன்றை வழிபடுவது பக்தியாகாது. அதைக் கடவுள் என்று நினைத்தால் அது சரி.

யோகி ஒருவர் இருந்தார். அவர் காட்டில் நதிக்கரையில் ஓர் ஏகாந்தமான இடத்தில் தவமியற்றி வந்தார். அங்கே ஏழை ஒருவன் தினமும் பசுக்களை மேய்க்க வருவது வழக்கம். அந்த யோகியின் தவ வாழ்க்கையையும் சாதனைகளையும் அவன் தினமும் காண்பான். அவர் என்ன செய்கிறார் என்பதை அறியும் ஆவல் அவனுக்கு உண்டாயிற்று. அவரிடம் அது பற்றிக் கேட்டதற்கு அவர் தாம் கடவுளை அடையும் முயற்சியில் ஈடுபட்டிருப்பதாகக் கூறினார். உடனே அந்த ஏழை, 'சுவாமி, கடவுளை அடையும் வழியை எனக்கும் போதிப்பீர்களா?' என்று கேட்டான். அந்த யோகி மிகவும் படித்தவர். எனவே அந்த ஏழையிடம், 'நீ எப்படி இறைவனை அறிய முடியும்? நீ ஒரு பாமரன், மாடு மேய்ப்பவன். உனக்கும் கடவுளுக்கும் வெகுதூரம். மாடுகளை மேய்த்துவா. அதன்பின் வீடு செல். கடவுள் அதுஇது என்றெல்லாம் மூளையைக் குழப்பிக் கொள்ளாதே' என்று கூறிவிட்டார்.

அந்த ஏழை மனவருத்தத்துடன் வீடு திரும்பினான். அவனிடம் உண்மையான 'தேவை' இருந்தது. எனவே அவனால் அமைதியாக இருக்க முடியவில்லை. அவன் மீண்டும் அந்த யோகியிடம் சென்று, 'சுவாமி, கடவுளைப்பற்றிச் சிறிய அளவிலாவது எனக்கு ஏதேனும் சொல்லித் தாருங்கள்' என்று கேட்டான். அதற்கு அந்த யோகி கோபத்துடன், 'முட்டாளே,

நீ இறைவனை என்ன புரிந்துகொள்ள முடியும்? அமைதியாக வீடு போய்ச் சேர்' என்று கூறிவிட்டார். பாவம்! அந்த மாடு மேய்ப்பவனால் எதையும் உண்ணவும் முடியவில்லை, உறங்கவும் முடியவில்லை. கடவுளைப்பற்றி ஏதாவது அறிந்தேயாக வேண்டும் என்று அவன் துடித்தான்.

எனவே மீண்டும் அந்த யோகியிடம் வந்தான். அவனுக்கு ஏதாவது சொல்ல வேண்டும் என்பதற்காக அந்த யோகியும், 'சரி, நான் உனக்கு இறைவனைப்பற்றிப் போதிக்கிறேன்' என்றார்.

அந்த மாடு மேய்ப்பவன், 'சுவாமி, கடவுள் என்பவர் யார்? அவரது உருவம் எது? அவர் எப்படி இருப்பார்?' என்று கேட்டான்.

அதற்கு யோகி, 'நீ மேய்த்து வருகிறாயே மாடுகள், அந்த மாடுகளில் மிகப் பெரிய மாடுதான் இறைவன். அவர் உன் மந்தையிலுள்ள பெரிய மாடாகிவிட்டார்' என்று கூறினார்.

அந்தப் பாமரன் அதை அப்படியே நம்பினான். நேராகத் தனது மந்தைக்குப் போய், அந்தப் பெரிய மாட்டிடம் சென்றான். அதையே கடவுளாகக் கொண்டு வழிபடத் தொடங்கினான். மிகச் சிறந்த புல்லை அதற்குக் கொடுத்தான், அதன் அருகில் தூங்கினான், அதன் அருகிலேயே எப்போதும் இருந்தான், அது எங்கு சென்றாலும் கூடவே சென்றான். இவ்வாறு நாட்களும் மாதங்களும் வருடங்களும் ஓடின. அவனது ஆன்மா முழுவதும் அந்த மாட்டின்மீதே பதிந்திருந்தது.

ஒருநாள் அந்த மாட்டிலிருந்து வருவதுபோல் ஒரு குரல் எழுந்து, 'என் மகனே, என் மகனே' என்று அவனை அழைத்தது. 'ஆ, மாடு பேசுகிறது, மாடு பேசுகிறது' என்று ஆனந்தத்தால் கூத்தாடினான் அந்த ஏழை. ஆனால் மறுகணமே, 'மாடு என்றாவது பேசுமா?' என்ற சந்தேகம் எழுந்தது. உடனே மிகுந்த மனவருத்தத்துடன் ஓரிடத்திற்குச் சென்று அமர்ந்து தனது நிலைமையைப்பற்றிச் சிந்திக்கலானான். அப்போது மீண்டும் அதே குரல் கேட்டது: 'என் மகனே, என் மகனே!' அவன் உடனே எழுந்து மாட்டின் அருகே ஓடினான். அங்கு சென்ற போது, மாடு பேசாது என்ற எண்ணம் மீண்டும் வந்தது. உடனே திரும்பினான். இப்படிப் பல முறை நடந்தது. இறுதியாக அவன் உண்மையைக் கண்டான்: அந்தக் குரல் வேறு எங்கிருந்தும் வரவில்லை, அது தன்னுள்ளிருந்தே வந்தது

என்பது அவனுக்குத் தெரியவந்தது. இறைவன் தன்னுள்ளேயே இருக்கிறார் என்பதை அவன் அறிந்தான். அதன்பிறகு அவன், குருவுக்கெல்லாம் குருவாகிய அந்த மகாகுருவின் உபதேசமான, 'நான் எப்போதும் உன்னுடனேயே இருக்கிறேன்' என்பதன் உண்மையை உணர்ந்தான். இவ்வாறு அந்த ஏழை எல்லா ரகசியத்தையும் அறிந்தான்.

பிறகு அவன் அந்த யோகியைக் காணச் சென்றான். அந்த யோகி மிகவும் படித்தவர், நாட்டிலேயே பெரிய அறிவாளி, பல காலமாக படிப்பு, தியானம், தவம் என்று சாதனைகளில் ஈடுபட்டிருப்பவர். இந்த ஏழையோ பாமரன், வாழ்நாளில் ஒரு புத்தகத்தைக்கூடப் படிக்காதவன், எழுத்துக்கள்கூடத் தெரியாதவன். ஆனால் அதே அவன் இன்று வருகிறான். அவனது முழு உருவமும் மாறிவிட்டது, முகம் பொலிவாக உள்ளது, விண்ணின் ஒளி அவனது முகத்தில் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. அவனைக் கண்ட யோகி எழுந்தார். அவனை வரவேற்று, 'இது என்ன மாற்றம்? எப்படி உண்டாயிற்று?' என்று கேட்டார்.

'சுவாமி, இது நீங்கள் தந்ததுதான்.'

'அது எப்படி? நான் உன்னிடம் வேடிக்கையாக அல்லவா அப்படிச் சொன்னேன்!'

'ஆனால் நான் அதனை உண்மையாக எடுத்துக் கொண்டேன். எனக்கு வேண்டியதை எல்லாம் அந்த மாட்டிடமிருந்தே நான் பெற்றுக் கொண்டேன். இறைவன் எங்கும் நிறைந்தவரே அல்லவா?'

இங்கே மாடு ஒரு பிரதீகமாகச் செயல்பட்டது. அந்த ஏழை தனது மாட்டை ஒரு பிரதீகமாக, கடவுளாக வழிபட்டான். அதன்மூலமே அனைத்தையும் பெற்றான். அந்த ஆழ்ந்த ஈடுபாடு, அந்தப் பேராவல்—அதுதான் எல்லாவற்றையும் வெளியே கொண்டுவருகிறது. எல்லாம் நம்மிடம் உள்ளது. புற உலகம், புற வழிபாடு என்று எல்லாமே அதனை அதாவது உள்ளே இருப்பதை வெளியே கொண்டு வருவதற்குத் துணை செய்பவை மட்டுமே. அவை உறுதி பெறும்போது அகத்தே உள்ள இறைவன் விழித்தெழுகிறான்.

புறத்தில் உள்ள குரு என்பவர் ஒரு துணை மட்டுமே. அவரிடம் நமது நம்பிக்கை திடப்படும்போது அகத்தே உள்ள குரு, அதாவது, குருவிற்கெல்லாம் குரு பேசுகிறார். அந்த மனிதனின் இதயத்தில் அழிவற்ற ஞானம் சுடர்விடுகிறது.

அவன் அதன்பிறகு எந்த நூலையும் நாட வேண்டாம், மனிதனிடமோ தேவர்களிடமோ தேவதைகளிடமோ உபதேசத்திற்காக ஓட வேண்டாம். இறைவனே அவனுக்கு குருவாகிறார். தனக்கு வேண்டிய அனைத்தையும் அவன் தன்னுள் இருந்தே பெறுகிறான். அவன் எந்தக் கோயிலுக்கும் போக வேண்டாம், எந்த சர்ச்சிற்கும் போக வேண்டாம்; அவனது உடம்பே உலகின் மாபெரும் கோயில் ஆகிவிட்டது. அந்தக் கோயிலில் இறைவன் உறைகிறான்.

எல்லா நாடுகளிலும் எண்ணற்ற மகான்கள் பிறந்துள்ளனர். அவர்களின் அற்புத வாழ்விற்குத் தூண்டுசக்தியாக இருந்தது அன்பின் ஆற்றலே. நாம ஜபம், பிரதீக வழிபாடு, நிஷ்டை, இஷ்டம் என்று பக்தியின் புற வடிவங்கள் எல்லாமே அந்த அழிவற்ற ஆற்றல் விழித்தெழும் வரையிலுள்ள வெறும் ஆயத்தங்கள் மட்டுமே. நியதிகளையும் கட்டுப்பாடுகளையும் கடந்து செல்லும்போதுதான் ஒருவனிடம் ஆன்மீகம் உதிக்கிறது. அப்போது எல்லா நியதிகளும் விலகுகின்றன, எல்லா உருவங்களும் மறைகின்றன, கோயில்களும் சர்ச்சுகளும் மறைந்து ஒழிகின்றன. குறிப்பிட்ட ஒரு நெறியைச் சார்ந்தவனாகப் பிறப்பது நல்லது, ஆனால் அதிலேயே இறப்பது மிகவும் மோசமானது. ஒரு பிரிவில் பிறந்து, அந்தப் பிரிவினைவாத எண்ணங்களுடனேயே மாண்டு போவது மிகவும் பயங்கரமான தலைவிதி. இறைவனின் குழந்தையை எந்தப் பிரிவு பிணைக்க முடியும்? எந்த நியதிகள் கட்டுப்படுத்த முடியும்? எந்தப் பாதையில் அவன் செல்வான்? யாரை அவன் வழிபடுவான்? அவன் இறைவனை நேரடியாக வழிபடுகிறான். அவனுக்கு இறைவனே உபதேசிக்கிறார். கோயிலுக்கெல்லாம் கோயிலான மனித ஆன்மாவில் அவன் வாழ்கிறான்.

பராபக்தி என்ற இந்த மேலான லட்சியத்தை நோக்கியே நாம் செல்கிறோம். இதற்கு நம்மை இட்டுச் செல்கின்ற அனைத்தும் வெறும் ஆயத்தம் மட்டுமே. ஆனால் அவையும் தேவையானவை. சாஸ்திரங்கள், மதப்பிரிவுகள், உருவங்கள்—இந்த அனைத்துக் கட்டுக்களிலிருந்தும் எல்லையற்ற ஆன்மா வெளியேற இவை துணை செய்கின்றன. இவையனைத்தும் இறுதியில் விலகிவிடுகின்றன, எஞ்சுவது மனிதனின் ஆன்மா மட்டுமே.

காலங்காலமாக மூடநம்பிக்கைகள் நம்மைத் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. 'எனது தந்தையின் மதம்', 'எனது தேசிய

மதம்', 'எனது சாஸ்திரம்', 'எனது இது', 'எனது அது' இவை யெல்லாம் நம்மைத் தொடர்ந்து வருகின்ற மூடநம்பிக்கைகள். இவை மறைந்துவிடும். ஒரு முள் குத்திவிட்டால் அதனை எடுக்க இன்னொரு முள்ளைப் பயன்படுத்துகிறோம். பிறகு இரண்டையும் எறிந்துவிடுகிறோம்.

இவ்வாறு நம்மிடம் மூட நம்பிக்கைகள் உள்ளன. பல நாடுகளில் சிறு குழந்தைகளின் பிஞ்சுமனங்களில்கூடப் பிரி வினைவாதம் போன்ற பயங்கரக் கருத்துக்கள் விதைக்கப் படுகின்றன. பெற்றோர் குழந்தைகளுக்கு நன்மை செய்வதாக நினைக்கின்றனர். ஆனால் அவர்கள் செய்வது என்னவோ தங்களைத் திருப்திப்படுத்திக் கொள்ளத்தான். என்ன சுய நலம்! தனக்குத் தானே பயந்தோ அல்லது சமுதாயத்திற்குப் பயந்தோ மனிதன் செய்யத் தயங்காத எதுவும் இல்லை. திருமதி இன்னார் திருப்தியுறுவார், சந்தோஷப்படுவார் என் பதற்காக அவன் சொந்தக் குழந்தைகளைக் கொல்வான்; தாய் மார்கள் தங்கள் குடும்பத்தைப் பட்டினியில் வாட விடு வார்கள்; சகோதரர்கள் சகோதரர்களை வெறுப்பார்கள்.

பெரும்பாலானோர் ஒரு குறிப்பிட்ட மதப் பிரிவில் பிறக் கிறார்கள். அதிலிருந்து வெளிவருவதே இல்லை. இந்த மதங்கள் அவர்கள் ஆன்மீகத்தில் வளர உதவி செய்ததா? இந்த மதங்கள் மற்றும் உருவங்களின்மூலம் நாம் அன்பின் ஓர் உயர்தளத்தை எட்டினோம், உருவங்கள் மறைகின்ற பிரிவினைவாதங்கள் ஒழிகின்ற ஒரு நிலையை அடைந்தோம் என்றால், மனித குலத் தின் மிகப் பெரும் பகுதி இன்னும் ஏதாவது உருவங்களையும் மதங்களையும் கட்டிக்கொண்டு உழல்வது ஏன்? அவர்கள் வெறும் நாத்திகர்கள். அவர்களுக்கு எந்த மதமும் தேவை யில்லை.

சொந்த நாட்டில் போக்கிரியாக உள்ள ஒருவன் இங்கே வருவதாக வைத்துக் கொள்வோம். அவனுக்கு இங்கே எந்த நண்பர்களும் இல்லை, யாரையும் அவனுக்குத் தெரியவும் செய்யாது. அவன் முதன்முதலாகச் செய்வது என்னவாக இருக்கும்? அது, ஒரு சர்ச்சில் சேர்வதுதான். அவனிடம் ஆன்மீகம் என்பது என்றைக்காவது இருக்க முடியுமா? தங்கள் ஆடை அலங்காரங்களைக் காட்டிக் கொள்வதற்காக சர்ச்சிற் குச் செல்லும் இந்தப் பெண்களிடம் ஆன்மீகம் இருக்க முடியும் என்று நினைக்கிறீர்களா? இவர்கள் என்றாவது உருவங்கள் போன்ற சாதாரண நிலையைவிட்டு வளர்வார்கள் என்று

கருதுகிறீர்களா? ஒருபோதும் இல்லை. மாறாக, பின்னால், மேலும் பின்னால் செல்கிறார்கள்; இறக்கும்போது மிருகங்களாக இறக்கிறார்கள். பெண்களின் அழகிய முகங்களைப் பார்ப்பதற்காக சர்ச்சிற்குப் போகின்ற இந்த ஆண்கள் கூட்டம் என்றைக்காவது ஆன்மீகம் என்பதைப் பெற முடியுமா? சமுதாய மதங்களைச் சார்ந்தவர்கள், சமுதாயம் மதிக்க வேண்டும் என்பதற்காக சர்ச்சிற்குச் செல்பவர்கள், 'என் தந்தை போனார், அதற்காக நானும் போகிறேன்' என்று அங்கே செல்பவர்கள்— இவர்களுக்கெல்லாம் ஆன்மீகம் வரும் என்று நினைக்கிறீர்களா? அவர்களுக்குப் பரந்த கொள்கைகள் தெரியாது என்பதல்ல; ஆனால் சமுதாயத்தில் தங்கள் அந்தஸ்தைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. எனவே காலம் முழுவதும் அவர்கள் இப்படியேதான் இருப்பார்கள்.

உனக்கு எது தேவையோ அது கிடைக்கும். எல்லா ஆசைகளையும் இறைவன் நிறைவேற்றுகிறார். சமுதாய அந்தஸ்து வேண்டுமானால் அது கிடைக்கும். சர்ச் வேண்டுமானால் அது கிடைக்கும், ஆனால் இறைவன் கிடைக்க மாட்டார். வாழ்க்கை முழுவதும் முட்டாளாகவே இருக்க வேண்டும், கோயில்களுடனும் முட்டாள்தனமான இயக்கங்களுடனும் தான் காலம் கழிக்க வேண்டும் என்று விரும்பினால் அது நடக்கும். உன் வாழ்நாள் முழுவதும் நீ அப்படியே இருக்கலாம். 'இறந்தோரின் ஆவிகளை நாடுவோர் அந்த உலகங்களுக்குப் போகிறார்கள், பேய் பிசாசுகள் அவர்களுக்குக் கிடைக்கின்றன. இறைவனை நேசிப்பவர்கள் அவரிடம் செல்கிறார்கள்.' இறைவனை நேசிப்பவர்கள் மட்டுமே அவரிடம் வருவார்கள். மற்றவர்கள் தங்களுக்கு எங்கு விருப்பமோ அங்கு போவார்கள்.

கோயில்களிலும் சர்ச்சுகளிலும் செய்கின்ற சில உடற்பயிற்சிகள் இருக்கின்றனவே—குறித்த நேரத்தில் முழந்தாளிடுவது, எழுவது போன்றவை—இவையெல்லாம் வெறும் எந்திரமயமானவை. இதையெல்லாம் செய்யும்போது மனம் வேறு எதையோ நினைத்துக் கொண்டிருக்கிறது. இவற்றிற்கும் உண்மையான ஆன்மீகத்திற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை.

சுமார் நானூறு வருடங்களுக்கு முன் இந்தியாவில் குரு நானக் என்ற மகான் ஒருவர் இருந்தார். போர்புரியும் இனமான சீக்கியர்களைப்பற்றி உங்களுள் சிலர் கேள்விப்பட்டிருக்கலாம்.

குருநானக் சீக்கிய மதத்தைச் சார்ந்தவர். ஒருநாள் அவர் மசூதி ஒன்றிற்குச் சென்றார். கிறிஸ்தவ நாடுகளில் கிறிஸ்தவர்களுக்கு எதிராக எதுவும் சொல்ல பிறர் பயப்படுவதுபோல் முஸ்லீம்கள் தங்கள் நாடுகளிலேயே பயப்படுகிறார்கள். தங்களுக்கு, தங்கள் கருத்துக்களுக்கு ஒத்துவராத யாரையும் விமர்சிக்கவோ கொல்லவோ தங்களுக்கு உரிமை இருப்பதாக அவர்கள் நினைக்கிறார்கள்.

குருநானக் மசூதியினுள் சென்றார். அங்கே முகமதியர்கள் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். வரிசையாக நிற்பார்கள், முழந்தாளிடுவார்கள், எழுவார்கள், குறித்த வேளையில் சில வார்த்தைகளைச் சொல்வார்கள். ஒருவர் இதையெல்லாம் நடத்துவார். அவர் முல்லா என்று அழைக்கப்படுகிறார். 'கருணையும் இரக்கமும் மிக்க, ஆசிரியர்களுக்கு எல்லாம் ஆசிரியரான அல்லாவின் பெயரால்' என்று முல்லா சொல்லிக் கொண்டிருக்கும்போது உள்ளே நுழைந்த குருநானக், முல்லாவின் வார்த்தைகளைக் கேட்டதும் புன்முறுவல் பூக்க ஆரம்பித்தார். முல்லாவிற்கு வந்ததே கோபம்! 'இந்த வேஷதாரியைப் பாருங்கள்' என்று கத்தினார். பின்னர் குருநானக்கிடம், 'நீ ஏன் சிரிக்கிறாய்?' என்று கேட்டார்.

'நண்பா, நீ செய்வது தொழுகை அல்ல. அதனால்தான் சிரிக்கிறேன்.'

'என்ன, தொழுகை அல்லவா?'

'ஆம். தொழுகை அல்ல. உன் உள்ளே பிரார்த்தனை என்பதே இல்லை.'

இதைக் கேட்டதுதான் தாமதம், முல்லாவின் கோபம் கட்டுக்கு அடங்காததாயிற்று. உடனே அவர் எழுந்து, நேராக ஒரு நீதிபதியிடம் சென்று, 'இந்தத் துஷ்டன் தொழுகை வேளையில் எங்கள் மசூதிக்குள் வரத் துணிந்தது மட்டும் அல்ல, பிரார்த்திக்கின்ற எங்களைப் பார்த்துச் சிரிக்கவும் செய்கிறான். இவனுக்குரிய ஒரே தண்டனை உடனடி மரணம். இவனைக் கொல்லுங்கள்' என்று முறையிட்டார்.

குருநானக் நீதிபதியின் முன் கொண்டுவரப் பட்டார். நீதிபதி அவரிடம் அவர் சிரித்ததற்கான காரணத்தைக் கேட்டார்.

'அவர் செய்தது பிரார்த்தனை அல்ல. அதனால்தான் சிரித்தேன்.'

'அப்படியானால் அவர் என்ன செய்தார்?'

'அவரை என் முன்னால் கொண்டு வாருங்கள். அவர் என்ன செய்தார் என்பதை அப்போது சொல்கிறேன்.'

முல்லா கொண்டுவரப் பட்டார். நீதிபதி குருநானக்கிடம், 'இதோ முல்லாவைக் கொண்டு வந்துள்ளோம். நீங்கள் ஏன் சிரித்தீர்கள் என்பதை விளக்க வேண்டும்' என்று கூறினார். உடனே குருநானக், 'முல்லாவிடம் ஒரு குரானைக் கொடுங்கள். அல்லா, அல்லா என்று அவர் கூறியபோது வீட்டில் விட்டு வந்த கோழிகளை நினைத்தாரா இல்லையா என்பதைக் கேளுங்கள். குரான்மீது அவரைச் சத்தியம் செய்யச் சொல் லுங்கள்' என்றார். முல்லா திகைத்துவிட்டார். அவர் மற்றவர் களைவிடச் சற்று நேர்மையானவர். எனவே தாம் கோழி களை நினைத்தது உண்மைதான் என்று ஒத்துக் கொண்டார். குருநானக் விடப்பட்டார்.

ஆனால் நீதிபதி முல்லாவை விடவில்லை. அவர் முல் லாவிடம், 'எல்லாம் சரி. ஆனால் முல்லா, இனி நீங்கள் மசூதிக்குப் போகாதீர்கள். அங்கே போய் தெய்வநிந்தனை செய்வதைவிட, ஏமாற்றுவதைவிட போகாமல் இருப்பது மேல். பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற ஒரு மனநிலை இல்லாத போது அங்கே போகாதீர்கள். வேஷதாரியாக இருக்காதீர்கள். கருணை மயமான, ஆனந்தமயமான இறைவனது திருநாமத்தைச் சொல்லும்போது கோழியை நினைக்காதீர்கள்' என்றார்.

முகமதியர்கள் தங்கள் தொழுகையில் சிறிதும் காலம் தவறாதவர்கள். அதற்குரிய நேரம் வந்துவிட்டால், அவர்கள் எங்கிருந்தாலும் சரி, உடனே நிலத்தில் வீழ்வதும் எழுவது மாகத் தொழுகையைத் தொடங்கிவிடுவார்கள். இவ்வாறு தான் ஒரு முகமதியன் தன் தோட்டத்தில் இருந்தபோது தொழுகைக்குரிய வேளை வந்தது. அவன் உடனே அங்கேயே முழங்காலிட்டுப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தான். பின்னர் தரையில் வீழ்ந்து வணங்கினான். அதேவேளையில் அந்தத் தோட்டத்திற்கு வெளியே ஒரு பெண் தன் காதலனைச் சந்திப்பதற்காகக் காத்திருந்தாள். தோட்டத்தின் மறுபக்கம் அவனைக் கண்டதும் விரைவாக அவனை நோக்கிச் சென் றாள். அவசரத்தில், வழியில் கிடந்த முகமதியனை மிதித்து விட்டாள். இங்கே நீங்கள் பிரெஸ்பிடேரியனைச் சொல்கி நீர்களே, அதுபோன்ற கொள்கைவெறி பிடித்த முகமதியன் அவன். எனவே அவனுக்கு வந்த கோபத்தை நீங்கள் ஊகித் துக் கொள்ளலாம். அவன் அந்த பெண்ணைக் கொல்லவே

போய்விட்டான். அவள் சற்று புத்திசாலி. எனவே அவனிடம், 'நீ ஒரு முட்டாள், ஓர் ஏமாற்றுப் பேர்வழி. நீ என்னைக் கொல்லப் போகிறாயா?' என்று கேட்டாள். 'என்ன, நான் ஒரு ஏமாற்றுக்காரனா, அது எப்படி?' என்று திகைப்புடன் கேட்டான் அந்த முகமதியன். அதற்கு அந்தப் பெண் கூறினாள்: 'நான் பார்க்கப் போனது சாதாரண மானிடக் காதலனை. ஆனாலும் வழியில் படுத்திருந்த உன்னைப் பார்க்க முடியாத அளவிற்கு நான் காதல் வசப்பட்டிருந்தேன். நீ தேடுவதோ தெய்வீகக் காதலனை. நீ அவரது அன்பில் மூழ்கியிருந்தால் நான் உன்னை மிதித்ததை எப்படி உணர்ந்திருக்க முடியும்? அதனால்தான் உன்னை ஏமாற்றுக்காரன் என்றேன்.' ❦

## ஆ. உயர்நிலைப் பாடங்கள்

பராபக்தி அல்லது முதிர்ந்த பக்தி

### 1. ஆரம்பநிலை தியாகம்

இதுவரை பக்தியின் ஆரம்ப நிலையைப் பார்த்தோம். இனி பராபக்தி அல்லது முதிர்ந்த பக்திபற்றிக் காண்போம். முதலில் இந்தப் பராபக்தியைப் பழகுவதற்கான சில ஆரம்ப சாதனைகளைச் சற்று ஆராய்வோம். இந்தச் சாதனைகள் எல்லாம் மனத்தைத் தூய்மைப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டவை. ஜபம், பூஜை, உருவங்கள், சின்னங்கள் போன்ற அனைத்தும் மனத் தூய்மைக்காகவே. இவையனைத்திலும் மிக உயர்ந்த வழி தியாகம். அதன் துணையின்றிப் பராபக்தியின் எல்லைக்குள் நுழையவே முடியாது. இது பலரையும் பயப்படுத்தி விடுகிறது. ஆயினும் தியாகம் இல்லாமல் ஆன்மீக வளர்ச்சியே கிடையாது. நமது யோகங்கள் எல்லாவற்றிலும் தியாகம் இன்றியமையாதது. இதுவே ஆன்மீக வாழ்க்கைக்கு முதற்படி; மதப் பண்பாட்டின் மைய அச்சு; அதன் இதயம். தியாகம்—இதுதான் மதம்.

எப்போது மனிதன் உலகப் பொருட்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, ஆழமான விஷயங்களில் ஈடுபட முயற்சிக்கிறானோ, முற்படுகிறானோ; உணர்வுப் பொருளான தான், எப்படியோ ஜடப்பொருளாக, உருவம் பெற்றவனாக ஆகிவிட்டோம், இதனால் ஏறக்குறைய ஜடப்பொருளாகவே ஆகிவிடுவோம் என்பதை அறிந்து, ஜடப்பொருட்களிலிருந்து எப்போது முகத்தைத் திருப்பிக் கொள்கிறானோ அப்போது தொடங்குகிறது தியாகம்; அப்போது தொடங்குகிறது உண்மையான ஆன்மீக முன்னேற்றம்.

தன் செயல்களின் பலனைத் துறப்பதன் மூலம் கர்மயோகி தியாகம் செய்கிறான். தன் உழைப்பிற்கான பலனில் அவனுக்குப் பற்று இல்லை. இந்த உலகிலும் சரி, மற்ற உலகிலும் சரி, தன் செயல்களுக்கான பரிசை அவன் எதிர்பார்ப்பதில்லை.

இயற்கை முழுவதன் நோக்கமே ஆன்மா அனுபவம் பெறுவதற்காகத்தான் என்பதையும் இந்த எல்லா அனுபவங்களின்

மொத்த விளைவுமே, தான் இயற்கையிலிருந்து எப்போதும் பிரிந்து தனித்திருப்பது என்பதை ஆன்மா உணரத்தான் என்பதையும் அறிந்திருக்கிறான் ராஜயோகி. தான் நிலையான, என்றுமுள்ள உணர்வுப் பொருள், ஜடப்பொருள் அல்ல; ஜடப் பொருளோடான தனது சேர்க்கை தற்காலிகமானது என்பதை மனிதன் புரிந்துகொள்ள வேண்டும், உணர வேண்டும். இயற்கையிலிருந்து பெறும் சொந்த அனுபவத்திலிருந்தே தியாகம் என்னும் படிப்பினையைப் பெறுகிறான் ராஜயோகி.

அனைத்துள்ளும் மிகக் கடுமையான தியாகத்தை மேற்கொள்கிறான் ஞானயோகி. ஏனெனில் திடப்பொருள்போல் கண்முன் காணும் இந்த உலகம் வெறும் தோற்றமே என்று அவன் ஆரம்பத்திலேயே உணர வேண்டியுள்ளது. இயற்கையிலுள்ள எந்தவகையான சக்திவெளிப்பாடும் ஆன்மாவைச் சேர்ந்தது, இயற்கையைச் சேர்ந்தது அல்ல என்பதை அவன் புரிந்துகொள்ள வேண்டியுள்ளது. எல்லா அறிவும் எல்லா அனுபவங்களும் ஆன்மாவில்தானே தவிர, இயற்கையில் அல்ல என்பதை அவன் ஆரம்பத்திலிருந்தே அறிய வேண்டியுள்ளது. தான் இயற்கையுடன் பிணைக்கப்பட்டுள்ள எல்லா தளைகளிலிருந்தும், தனது பகுத்தறிவின் ஆற்றலால், அவன் தன்னை உடனடியாக விடுவித்துக்கொள்ள வேண்டியுள்ளது. எனவே இயற்கையும், அதைச் சேர்ந்த எல்லா பொருட்களும் தன்னை விட்டு விலகுமாறு அவன் செய்கிறான். அவற்றை மறையச் செய்து, தான் மட்டும் தனித்து நிற்க முயல்கிறான்!

எல்லா தியாகங்களிலும் மிகவும் இயல்பானது என்று நாம் சொல்லத்தக்கது பக்தியோகியின் தியாகம். காரணம், இங்கே மூர்க்கத்தனம் இல்லை. எதையும் விட வேண்டியதில்லை. எதையும் நம்மிலிருந்து கிழித்தெறிய வேண்டியதில்லை. எதிலிருந்தும் பலாத்காரமாக நம்மை விடுவித்துக்கொள்ளத் தேவையில்லை. பக்தனின் தியாகம் எளிதானது, மென்மையாகச் செயல்படுவது, நம்மைச் சுற்றியுள்ள பொருட்கள்போல் அவ்வளவு இயல்பானது.

இத்தகைய தியாகத்தின் வெளிப்பாட்டை, சற்று கேலிக்கூத்தான நிலையிலேனும் நாம் நம்மைச் சுற்றிலும் தினமும் காணத்தான் செய்கிறோம். ஒருவன் ஒரு பெண்ணைக் காதலிக்கிறான். சிறிதுகாலம் சென்றதும் வேறொருத்தியைக் காதலிக்கிறான்; முதற்காதலியை விட்டுவிடுகிறான். அவள் அவனது உள்ளத்திலிருந்து மெதுவாக அகன்று விடுகிறாள். அவனது

மனம் மீண்டும் அவளை நாடுவதில்லை. இதுபோன்றே ஒருத்தி ஒருவனைக் காதலிக்கிறாள். பிறகு அவள் வேறு ஒருவனைக் காதலிக்கத் தொடங்குகிறாள். முதல் காதலன் அவள் மனத்திலிருந்து மெல்லமெல்ல மறைந்துவிடுகிறான். ஒருவன் தான் வசிக்கும் நகரத்தை நேசிக்கிறான். பிறகு நாட்டை நேசிக்கத் தொடங்குகிறான். அப்போது, நகரத்தின்மீது அவன் கொண்ட ஆழ்ந்த பற்று மெல்ல இயல்பாக மறைகிறது. பிறகு உலகையே விரும்பத் தொடங்கியதும், சொந்த நாட்டின்மீது கொண்டிருந்த வெறித்தனமான பற்று, தானாக, பலாத்காரமாக இல்லாமல், மனத்தை வருத்தாமல் மறைந்து போகிறது.

பண்பாடற்ற மனிதன் கீழான புலனின்பங்களில் தீவிரப் பற்றுக் கொள்கிறான். பண்பட்டவனாக உயரும்போது அறிவிற்கு இன்பம் தருபவற்றில் பற்று வைக்கிறான்; அவனது புலனின்ப நாட்டம் நாளுக்குநாள் குறைகிறது. உணவில் நாயும் நரியும் இன்பம் காண்பதுபோல் ஒரு மனிதனால் காண முடியாது. ஆனால் கல்வி கேள்விகளிலும் கலைச் சாதனைகளிலும் மனிதன் காணும் இன்பத்தை நாய் நரிகள் காண்பதில்லை.

இன்பம், முதலில் கீழ்நிலைப் புலன்களால் உண்டாகிறது. ஒரு மிருகம் உயர்நிலைப் பிறவிகளை அடையும்போது, கீழான நிலையிலுள்ள இன்ப நாட்டங்களில் தீவிரம் குறையத் தொடங்குகிறது. சமுதாயத்தை எடுத்துக்கொண்டால், மனிதன் எவ்வளவு தூரம் மிருக நிலைக்கு அருகில் இருக்கிறானோ, அந்த அளவிற்கு அவனிடம் புலனின்பங்கள் மிகுந்திருக்கின்றன. அவனது நிலை உயரஉயர, பண்பாடு வளரவளர, கல்வி கேள்விகளிலும் கலைகளிலும் அவன் இன்பம் காண்பது அதிகரிக்கிறது. அறிவுத் தளத்தைவிட, சிந்தனை நிலையைவிட மேலான நிலைக்குச் செல்லும்போது, ஆன்மீகத் தளத்தை, தெய்வப் பேருணர்வு நிலையை அவன் அடைகிறான். அங்கு அவன் அடையும் பேரின்பத்திற்கு முன்னால் புலனின்பங்களும் அறிவின்பங்களும் சாரமற்றவையாகி விடுகின்றன. சந்திரன் ஒளி வீசும்போது விண்மீன்கள் ஒளிமங்கிப் போகின்றன. சூரியன் உதித்தாலோ சந்திரன் ஒளிகுன்றிப் போகிறான். பக்திக்குரிய தியாகத்தை அடைய நாம் எதையும் அழிக்க வேண்டியதில்லை. பெருகிவரும் ஒளி வெள்ளத்தில் மங்கலான ஒளிகள் தாமாகவே ஒளியிழந்து, பின்னர் அடியோடு மறைந்துவிடுவதைப் போல், இறையன்பின் முன்னால் புலனின்பமும் அறிவின்பமும் மழுங்கிக் கடைசியில் இருளில் தள்ளப்படுகின்றன.

அந்த இறையன்பு முதிர்ந்து பராபக்தி ஆகிறது. இங்கே உருவங்கள் மறைகின்றன; சடங்குகள் பறந்தோடுகின்றன; சாஸ்திரங்கள் பயனற்றுப் போகின்றன. இத்தகைய ஆழ்ந்த, உயரிய பக்தி உடையவனிடமிருந்து விக்கிரகங்கள், கோயில்கள், சர்ச்சுகள், மதங்கள், உட்பிரிவுகள், நாடு, இனம் என்ற எல்லா சின்னஞ்சிறு எல்லைகளும், தளைகளும் தாமாகவே உதிர்ந்து விடுகின்றன. எதுவும் அவனைப் பந்தப்படுத்துவதில்லை. அவனது சுதந்திரத்தைத் தடை செய்வதில்லை; அவனைக் கட்டுப்படுத்துவதில்லை. கடலில் செல்லும் கப்பல் காந்த மலையின் அருகே வந்தால் என்ன ஆகும்? இரும்பாணிகளும் பூட்டுக் களும் இழுக்கப்பட்டுக் கழன்று போய், மரச்சட்டங்கள் விடுபட்டு விலகிக் கடல்நீரில் சுதந்திரமாக மிதந்து செல்லும். அதுபோல் இறையருள், ஆன்மாவைப் பிணைத்து நிற்கும் கட்டுக் களைத் தளர்த்தி அவனை விடுவிக்கிறது.

பக்திக்குத் துணையாக இருக்கும் இந்தத் தியாகத்தில் கடுமை இல்லை, வறட்சியில்லை, போராட்டம் இல்லை, தடைகள் இல்லை, அடக்குமுறைகள் இல்லை. பக்தன் தன் உணர்ச்சிகளுள் ஒன்றைக்கூட அடக்க வேண்டியதில்லை. மாறாக, அவன் அவற்றை வலிமை உடையதாக்கி, தீவிரப்படுத்தி, இறைவனை நோக்கித் திருப்பிவிட மட்டுமே பாடுபடுகிறான். ❦

## 2. அன்பிலிருந்து எழுவது பக்தனின் தியாகம்

இயற்கை எங்கும் அன்பைக் காண்கிறோம். சமுதாயத்தில் எவையெல்லாம் நல்லவையோ, உயர்ந்தவையோ, நுண்மை மிக்கவையோ அவை எல்லாம் அன்பின் செயல்கள். தீயவையும் பேய்த்தனமானவையும்கூட அதே அன்புணர்ச்சியின் செயல் பாடுதான். ஆனால் இது முறைதவறிய செயல்பாடு. கணவன் மனைவியரிடையே தூய, புனிதக் காதலாகத் திகழ்கின்ற அதே அன்புதான் காமவெறி பிடித்த விலங்குணர்ச்சியாகவும் வெளிப் படுகிறது. உணர்ச்சி என்னவோ ஒன்றுதான். அதன் வெளிப் பாடுகள்தான் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறாக உள்ளன. நல்வழியில் செலுத்தப்படும்போது ஒருவனை நன்மை செய்யு மாறும், தன்னிடம் இருப்பதையெல்லாம் ஏழைகளுக்கு வழங்கு மாறும் செய்கின்ற அதே அன்புதான், தீய வழிகளில் செலுத்தப் படும்போது, மற்றொருவனை, தன் உடன்பிறந்தவனின் கழுத் தைத் திருகிக் கொலை செய்து அவனது சொத்துக்களை அப கரிக்கச் செய்கிறது. பின்னவன் தன்னிடம் கொள்கின்ற அதே அன்பையே முன்னவன் பிறரிடம் காட்டுகிறான். அன்பின் போக்கு பின்னவன் விஷயத்தில் தீயது. முன்னவன் விஷயத்தில் சரியானது, நியாயமானது. உணவைச் சமைப்பதற்குப் பயன் படுகின்ற அதே நெருப்பு ஒரு குழந்தையைச் சுட்டுவிடலாம். அது நெருப்பின் தவறல்ல. அதைப் பயன்படுத்திய விதம்தான் தவறானது. எனவே ஒன்றுகலந்துவிடத் துடிக்கும் தவிப்பு, இரண்டறக் கலக்க வேண்டும் என்ற தீவிரமான காதல் என் பதைச் சற்று உயர்ந்த மற்றும் தாழ்ந்த நிலைகளில் எங்கும் காணவே செய்கிறோம். எல்லோருமே ஒன்றில் கலக்க வேண்டிய வர்கள்தானே!

பக்தியோகம் என்பது உயர்நிலை அன்பைப் பற்றிய விஞ் ஞானமாகும். அன்பை எந்த வழியில் செலுத்துவது என்பதை அது கற்றுத் தருகிறது. அன்பைக் கட்டுப்படுத்துவது எப்படி? அடக்கி ஆள்வது எப்படி? பயன்படுத்துவது எப்படி? அதற்கு ஒரு புதிய குறிக்கோளை, ஒரு நோக்கத்தை அளித்து,

அதன்மூலம் மிக உயர்ந்ததும் பெருமை மிக்கதுமான பலன்களை அடைவது எப்படி, நம்மை ஆன்மீகப் பேரின்பத்திற்கு அழைத்துச் செல்லுமாறு அதைக் கையாள்வது எப்படி என்பதையெல்லாம் நமக்குப் போதிக்கிறது. பக்தியோகம் நம்மிடம் 'விட்டு விடு' என்று சொல்வதில்லை. அது சொல்வதெல்லாம் 'அன்பு செய், அனைத்திற்கும் மேலானதை நேசி' என்பதுதான். அனைத்திற்கும் மேலானதை நேசிப்பவனிடமிருந்து, கீழான அனைத்தும் தாமாகவே அகன்றுவிடுகின்றன.

'நீ என் அன்பின் திருவுருவம் என்பதைத் தவிர, உன்னைப் பற்றி என்னால் எதுவும் கூற முடியாது. நீ அழகாக இருக்கிறாய், ஓ! நீ எவ்வளவு அழகு! அழகின் திருவுருவமே நீதான்!' இந்த யோகத்தில் நம்மிடம் எதிர்பார்க்கப்படுவதெல்லாம், நாம் செய்ய வேண்டியது எல்லாம் அழகைத் தேடியலையும் நமது வேட்கையை இறைவனை நோக்கித் திருப்பிவிடுவது மட்டுமே. மனித முகத்திலோ, வானத்திலோ, விண்மீன்களிடமோ, நிலவிலோ அப்படி என்னதான் அழகிருக்கிறது? உண்மையில் எல்லாமாக விளங்கும் பரம்பொருளின் பேரழகில் அது ஒரு சிறு கிரகிப்பு, அவ்வளவே. 'அவன் ஒளிர்வதால் எல்லாம் ஒளி வீசுகின்றன. அவனது ஒளியால் எல்லாம் ஒளி பெறுகின்றன.'[1] இந்த உயர்நிலை பக்தியைப் பற்றிக்கொள். உன்னிடம் உள்ள சின்னஞ்சிறு தனித்துவங்கள் அனைத்தையும் அது மறக்கும்படிச் செய்யும்.

உலகின் சிறுசிறு தன்னலப் பிடிப்புக்களிலிருந்து உன்னை விடுவித்துக்கொள். உன் வாழ்வின் மையமாக, உன் உயர்ந்த விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளும் ஆதாரமாக மனித சமுதாயத்தைப் பார்க்காதே. ஒரு சாட்சியாக, ஒரு மாணவனாக நின்று இயற்கையின் நாடகங்களைக் கவனித்துக் கொண்டிரு. எந்த மனிதனிடமும் சொந்தப் பற்றின்றி இரு. உலகில் இந்தப் பேரன்பு எப்படியெல்லாம் செயல்பட்டு வருகிறது என்பதை அப்போது அறிந்துகொள்ளலாம். சிலவேளைகளில் சிறிது மோதல் உண்டாகலாம். ஆனால் அது உண்மையான பேரன்பை அடைவதற்கான போராட்டத்தில் உள்ளதுதான். சிலவேளைகளில் சிறிது சண்டை, சிறிது வீழ்ச்சி ஏற்படலாம். இவற்றைப் பொருட்படுத்த வேண்டாம். விலகி நில், உராய்வுகளும்

---

1. தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்
தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி ||
—கட உபநிடதம், 2.2.15.

மோதல்களும் சுதந்திரமாக வந்து போகட்டும். வாழ்க்கை நீரோட்டத்தில் இருக்கும்போதுதான் நீ இந்த மோதல்களை எல்லாம் உணர்கிறாய். வெளியே வந்து ஒரு சாட்சியாக, ஒரு மாணவனாக மட்டுமே இருப்பாயானால் ஆயிரமாயிரம் வழிகளில் இறைவன் தன்னை அன்பு வடிவில் வெளிப்படுத்திக் கொண்டிருப்பதை நீ காண முடியும்.

'எங்கெல்லாம் இன்பம் உண்டோ, மிகத் தாழ்ந்த சிற்றின் பங்களாக இருந்தாலும்கூட, அங்கெல்லாம் சச்சிதானந்தத்தின் ஒரு கிரணம் உள்ளது.' கீழான கவர்ச்சிகளிலும்கூட இறையன் பின் முளை உள்ளது. இறைவனின் திருநாமங்களுள் ஒன்று ஹரி. எல்லாவற்றையும் தன்னிடம் கவர்ந்திழுப்பவன் என்பது இதன் பொருள், உண்மையில் மனித உள்ளங்களைக் கவர்வதற் கான தகுதி படைத்தவர் அவர் ஒருவர் மட்டுமே. ஆன்மாவை உண்மையில் யாரால் கவர முடியும்? அவன் ஒருவனால்தான்! உயிரற்ற ஜடப்பொருளால் ஆன்மாவைக் கவர முடியும் என்று நினைக்கிறாயா? அப்படி இருந்ததில்லை, இருக்கப்போவதும் இல்லை. ஓர் அழகிய முகத்தைக் கண்டு, ஒருவன் அதன் பின் ஓடுகிறான் என்றால், ஒழுங்காக அமைந்த பிடியளவு அணுக்களா அவனைக் கவர்ந்தன? இல்லவே இல்லை. அந்த மூலக்கூற்றணுக்களுக்குப் பின்னால் ஒரு தெய்வீகக் கவர்ச்சி யின், ஓர் இறையன்பின் திருவிளையாடல் இருக்க வேண்டும், இருக்கவே செய்கிறது. மூட மனிதனால் இதை அறிய முடிவ தில்லை. இருந்தாலும், அறிந்தோ அறியாமலோ அந்தக் கவர்ச்சி யினால்தான் அவனும் ஈர்க்கப்படுகிறான். அதனால் கீழ் நிலைக் கவர்ச்சிகள்கூட, கவர்வதற்கான தங்கள் ஆற்றலை இறைவனிடமிருந்தே பெறுகின்றன. 'என் அன்பே, ஒருவரும் கணவனுக்காகக் கணவனை விரும்பியதில்லை. ஆன்மாவிற் காகவே, அவனுள் சுடர்விடும் இறைவனுக்காகவே அவன் காதலிக்கப்படுகிறான்.'[1] இதைக் காதல் மனைவியர் அறிந்திருக்க லாம், அல்லது அறியாமல் போகலாம்.ஆனாலும் உண்மை என்னவோ இதுதான். 'என் அன்பே,யாரும் மனைவிக்காக மனைவியை விரும்புவதில்லை. அவளிடம் குடிகொண் டிருக்கும் ஆன்மாவிற்காகவே அவள் நேசிக்கப்படுகிறாள்.'[1]

---

1. ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி, ஆத்மனஸ்து காமாய பதி: ப்ரியோ பவதி। ந வா அரே ஜாயாயை காமாய ஜாயா ப்ரியா பவதி, ஆத்மனஸ்து காமாய ஜாயா ப்ரியா பவதி।

—பிருஹதாரண்யக உபநிடதம், 2. 4. 5

அதுபோன்றே குழந்தையிடம் ஆசைகொள்வதும் குழந்தைக் காக அல்ல, அந்தக் குழந்தையினுள் உறைபவனுக்காகவே.

இறைவன் ஒரு பெரிய காந்தம், நாமெல்லாம் இரும்புத் துகள்கள். அவன் எப்போதும் நம்மைக் கவர்ந்தபடி இருக் கிறான். நாமும் அவனை அடையப் பாடுபட்டுக் கொண்டிருக் கிறோம். உலகில் நமது இந்தப் போராட்டங்களெல்லாம் உண்மையில் சுயநலத்திற்காக அல்ல. முட்டாள்களுக்குத் தாங் கள் என்ன செய்கிறோம் என்பது தெரிவதில்லை. வாழ்வில் அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் அந்தப் பெரிய காந்தக் கல்லை அணுகுவதுதான். வாழ்க்கையின் பெரிய போராட்டங் களும் சண்டைகளும் எல்லாம் அவனை அடைவதற்காகவே, அடைந்து அவனுடன் ஒன்றுகலப்பதற்காகவே.

வாழ்க்கைப் போராட்டங்களின் பொருள்பற்றி பக்தியோகி அறிந்தே இருக்கிறான். அவற்றை உணர்ந்து கொள்கிறான். நீண்ட இத்தகைய பல போராட்டங்களை அவன் ஏற்கனவே சந்தித்திருக்கிறான். அவற்றின் பொருள் என்ன என்பது அவ னுக்குத் தெரியும். மோதல்களிலிருந்து விடுபட அவன் மனப் பூர்வமாக விரும்புகிறான். சச்சரவுகளை ஒதுக்கிவிட்டு, வசிகரங் களுக்கெல்லாம் மையமாக விளங்குகின்ற ஹரியிடம் போக விரும்புகிறான். இதுதான் பக்தனின் தியாகம். இறைவனுக்காக எழும் இந்த மகத்தான கவர்ச்சி, மற்ற கவர்ச்சிகளையெல்லாம் மறையச் செய்கிறது. அவனது இதயத்தில் புகுகின்ற எல்லையற்ற ஆற்றல்மிக்க இந்த இறையன்பு, வேறு எந்த அன்பையும் அங்கே தங்க விடுவதில்லை. வேறு விதமாக எப்படி இருக்க முடியும்? பக்தி அவனது உள்ளத்தை அன்புக்கடலான இறைவனால் நிரப்புகிறது. குறுகிய அன்புகளுக்கு அங்கே இடமில்லை. தெளிவாகச் சொல்வதானால் இறைவனிடம் கொள்கின்ற அனுராகம் எனப்படும் பேரன்பு காரணமாக, இறைவன் அல் லாத மற்ற எல்லா பொருட்களிடமும் அவன் கொள்ளும் வைராக்கியம் அல்லது பற்றின்மையே பக்தனின் தியாகம்.

பக்தியின் முதிர்ந்த நிலையை, பராபக்தியைப் பெறுவதற்கு இதுவே லட்சிய சாதனையாகும். இந்தத் தியாகம் உதித்ததும் பராபக்தி என்னும் தெய்வ உலகில் ஆன்மா நுழைவதற்கான கதவு திறக்கிறது. பராபக்தி என்ன என்பதை அப்போதுதான் நாம் உணர முடியும். இவனுக்கு மட்டுமே, பராபக்தி என்னும் கோயிலுக்குள் நுழைந்தவனுக்கு மட்டுமே, ஆன்ம அனுபூதி பெறத் திருவுருவங்களும் சின்னங்களும் பயனற்றவை என்று

கூறும் தகுதி உண்டு. நாம் பொதுவாக சகோதரத்துவம் என்று கூறும் பக்திப் பெருநிலையை அவன் மட்டுமே அடைந்திருக் கிறான். மற்றவர்களெல்லாம் பேசுவதோடு சரி.

பக்தனிடம் உயர்வு தாழ்வுகள் இல்லை. அன்புக் கடல் அவனுள் புகுந்துவிட்டது. அவன் மனிதனை மனிதனாகக் காண்பதில்லை, எங்கும் அவன் இறைவனையே காண்கிறான். எல்லா முகங்களிலும் தன் ஹரி பிரகாசிப்பதையே அவன் காண்கிறான். சந்திர சூரியர்களிடம் உள்ள ஒளி அனைத்தும் இறைவனின் ஒளியே. எங்கெல்லாம் அழகும் நுண்மையும் பொலிகின்றனவோ அவையெல்லாம் அவனைப் பொறுத்த வரை இறைவனுக்கு உரியவை.

அத்தகைய பக்தர்கள் இன்றும் இருக்கிறார்கள். உலகில் அவர்கள் இல்லாத காலமேயில்லை. பாம்பு கடித்தால்கூட, தங்கள் அன்புத் தலைவனிடமிருந்து தூதன் வந்தான் என்றே அவர்கள் சொல்கிறார்கள். உலக சகோதரத்துவம்பற்றிப் பேசும் உரிமை பெற்றவர்கள் இவர்கள் மட்டுமே. இவர்களுக்கு யாரிட மும் கோபமில்லை, வெறுப்பில்லை, பொறாமை உணர்ச்சி யில்லை. புலன்களால் அறியப்படுகின்ற புற உலகம் அவர் களிடமிருந்து என்றென்றைக்குமாக மறைந்துவிட்டது. வெளி யில் காணும் காட்சிகளுக்குப் பின்னால் எப்போதும் உண்மைப் பொருளைக் காண இயலும்போது அவர்களால் எப்படிக் கோபம் கொள்ள முடியும்? ❦

## 3. பக்தியோகத்தின் எளிமையும் ரகசியமும்

‘கிருஷ்ணா! உன்னையே இடைவிடாது ஆழ்ந்து சிந்தித்து வழிபட்டு வரும் பக்தர்கள், நிர்க்குண பிரம்மத்தை வழிபடும் ஞானிகள்—இவர்களுள் சிறந்த யோகி யார்?’ என்று அர்ஜுனன் கேட்டான். அதற்கு ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்: ‘யார் தங்கள் மனத்தை என்மீது நிலைநிறுத்தி என்னிடம் அசைக்க முடியாத நம்பிக்கையுடன் எப்போதும் என்னை வழிபடுகிறார்களோ அவர்களே சிறந்த பக்தர்கள்; அவர்களே சிறந்த யோகிகள். சொற்களால் விளக்க முடியாத, புலன்களை வென்றுகொண்டு, சமநோக்குடையவர்களாக, உயிரினங்களுக்கு நன்மை செய்பவர்களாக இருந்து, வேறுபாடற்ற, அனைத்தையும் அறிகின்ற அசைவற்ற, என்றுமுள்ள பரப்பிரம்மத்தை, முழுமுதற் பொருளாகிய, என்னை வழிபடுபவர்கள் என்னை வந்தடைகின்றனர். மன வாக்குகளுக்கு எட்டாத முழுமுதற் பொருளாகிய பிரம்மத்திடம் யாருடைய மனம் நாட்டம் கொள்கிறதோ, அவனது பாதையில் போராட்டங்கள் அதிகம். உடலுணர்வு மிக்க மனிதனுக்கு பிரம்மத்தைத் தேடி அடையும் பாதை மிகக் கடினமானது. தான் செய்துவரும் செயல்கள் அனைத்தையும் எனக்கு அளித்து என்னையே தஞ்சமாகக் கொண்டு, வேறு எதனிடமும் பற்றின்றி, என்னையே தியானித்து வருபவனை, தொடர்ந்து வரும் பிறப்பு-இறப்பு என்னும் சம்சாரக் கடலிலிருந்து நான் விரைவில் உயர்நிலை அளிக்கிறேன்.’[1]

இங்கே ஞானயோகம், பக்தியோகம் என்ற இரண்டும் குறிப்பிடப் படுகின்றன. இரண்டுமே மேலே கண்ட பகுதியில் விளக்கப்படுவதாகக் கொள்ளலாம். ஞானயோகம் சிறந்தது, மிக உயர்ந்த தத்துவம். ஞானயோகம் கூறுகின்ற எல்லா நிபந்தனைகளையும் நிறைவேற்றி வாழ முடியும் என்று ஒவ்வொரு மனிதனும் நினைக்கிறான். வேடிக்கைதான்! ஆனால் அத்தகைய ஒரு தத்துவ வாழ்க்கை வாழ்வது உண்மையில் மிகவும்

---

1. கீதை, 12. 1–7

கடினமானது. தத்துவத்தை வழிகாட்டியாகக் கொண்டு வாழ்க்கையை அமைத்துக்கொள்வது பலவேளைகளில் பேராபத்தில் கொண்டுபோய் விடலாம்.

உலகினரை இரு வகையாகப் பிரிக்கலாம். அரக்க இயல்பு கொண்ட மக்கள் ஒருவகையினர். இவர்களுக்கு வாழ்க்கையில் முதலும் முடிவும் உடம்பைப் பேணுவதுதான். தெய்வீக இயல்பினர் மற்றொரு வகையினர்; உடம்பு என்பது ஒரு லட்சியத்தை அடைவதற்கும், ஆன்மாவைப் பண்படுத்துவதற்குமான கருவி மட்டுமே என்பதை இவர்கள் உணர்கின்றனர். முதல் வகையைச் சார்ந்தவனான மனிதப் பேய்கூடச் சுயநலத்திற்காக சாஸ்திர மேற்கோள்களை அள்ளி வீசலாம். நல்லவனின் செயல்களுக்குத் தூண்டுகோல்போல் இருக்கும் ஞானநெறி, தீயவனின் செயல்களுக்கு ஒப்புதல் அளிப்பதுபோல் தோன்றக்கூடும். இதுவே ஞானயோகத்தில் வரக்கூடிய பேராபத்து.

ஆனால் பக்தியோகமோ இயற்கையானது, இனிமையானது, மென்மையானது. பக்தன் ஞானயோகியைப்போல் மிக உயரே செல்வதில்லை; அதனால் கீழே விழுவதும் அதிகமில்லை. சாதகன் எந்த வழியைக் கடைப்பிடித்தாலும் சரி, ஆன்மாவின் தளைகள் நீங்கும்வரை, முக்தி கிடைக்காது.

பேறு பெற்றவளான கோபிகை ஒருத்தியின் மனத்தைக் கட்டுப்படுத்திய நன்மை, தீமை என்ற விலங்குகள் எப்படி அறுபட்டு வீழ்ந்தன என்பதைக் கீழ்வரும் பகுதி காட்டுகிறது: 'இறைவனைத் தியானித்ததன் காரணமாகப் பெற்ற பேரானந்தம் அவள் இதுவரை செய்த நல்வினைகளின் தளைகளைப் போக்கியது. இறைவனை அடையாததால் அவளது ஆன்மா அனுபவித்த கொடிய பிரிவுத் துன்பம் அவளுடைய தீவினைகளை அழித்தது. அவள் முக்தி பெற்றாள்— தச்சிந்தாவிபுலா ஹ்லாத க்ஷீண புண்யசயா ததா । ததப்ராப்தி மஹாத்து:க விலீனாசேஷ பாதகா ॥ நிருச்ச்வாஸதயா முக்திம் கதான்யா கோபகன்யகா ॥[1]

பக்தியோகத்தின் அடிப்படை ரகசியம் இதுவே. மனித இதயத்தில் எழுகின்ற பலவகை விருப்பங்கள், எண்ணங்கள், உணர்ச்சிகள் முதலிய எதுவும் தன்னளவில் தவறானவை அல்ல; ஆனால் அவை உயர்நிலையை அடையும்வரை, அவற்றைக் கவனமாகக் கட்டுப்படுத்தி அந்த உயர்நிலையை நோக்கிப் படிப்படியாக இட்டுச் செல்ல வேண்டும். நம்மை இறைவனிடம்

1. விஷ்ணு புராணம், 5. 13. 21–22.

அழைத்துச் செல்வதே மகத்தான நெறி. மற்ற நெறிகள் எல்லாம் கீழானவை.

இன்பங்களும் துன்பங்களும் நிறைந்தது வாழ்க்கை. வாழ்க்கையில் இரண்டும் மாறிமாறி வருகின்றன. செல்வமோ வேறெந்த உலகப் பொருளுமோ தன்னிடம் இல்லையென்பதற் காக வருந்துபவன் தன் உணர்ச்சிகளைத் தவறான பாதையில் செலுத்துகிறான். ஆனால் துன்பங்களாலும் பயன் உண்டு. 'நான் உயர்நிலை எய்தவில்லையே, இறைவனை அடைய முடிய வில்லையே' என்று ஒருவன் வருந்தட்டும். இந்த வருத்தம் அவனை முக்திப் பாதையில் அழைத்துச் செல்லும். கைநிறையப் பணம் இருக்கிறது என்று நீ மகிழ்ந்தால், அது மகிழ்ச்சிக்குத் தரப்பட்ட தவறான போக்கு. அதை உயர்நோக்கில் திருப்ப வேண்டும். அது மிகமிக உன்னதமான லட்சியத்திற்குப் பயன் பட வேண்டும். அத்தகைய லட்சியத்தில் இன்பம் காண்பது தான் உண்மையில் மேலான இன்பம். மற்ற உணர்ச்சிகளுக்கும் இது பொருந்தும். அவற்றுள் ஒன்றுகூடத் தவறில்லை என் கிறான் பக்தன். உணர்ச்சிகளையெல்லாம் தன் வசப்படுத்தி, எந்தத் தவறும் நிகழாமல் இறைவனை நோக்கித் திருப்புகிறான் அவன். ❦

## 4. பக்தி வெளிப்படும் வழிகள்

பக்தி வெளிப்பட்டுத் தோன்றும் சில வழிகளைக் காண்போம்.[1] முதலாவதாக வருவது மரியாதை (பஹுமானம்)—கோயில்களையும் புண்ணியத் தலங்களையும் மக்கள் மரியாதையுடன் அணுகுவது ஏன்? அங்கெல்லாம் இறைவன் வணங்கப்படுவதால்தான்; அவரது சான்னியத்தியம் அந்த இடங்களில் எல்லாம் நிறைந்திருப்பதால்தான். எல்லா நாடுகளிலும் ஆச்சாரியர்கள் ஏன் போற்றப்படுகிறார்கள்? ஏனெனில் அவர்கள் இறைவனைப்பற்றிப் பேசுகிறார்கள். அதனால் மனித இதயம் இயல்பாகவே அவர்களுக்கு மரியாதை செலுத்துகிறது. மரியாதை என்பது அன்பு என்னும் அடியாழத்திலிருந்து எழுகிறது. நாம் விரும்பாத யாரிடமும் நமக்கு மரியாதை தோன்றுவதில்லை.

அடுத்தது ப்ரீதி—இறைவனிடம் இன்பம் காணல். புலனின்பப் பொருட்களில்தான் மக்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறார்கள்! தான் விரும்புகின்ற ஒன்றை, தனது புலன்கள் நாடுகின்ற ஒன்றை அடைவதற்காக எங்கு வேண்டுமானாலும் செல்லவும் எந்தவித ஆபத்தை எதிர்கொள்ளவும் மனிதன் தயாராக இருக்கிறான். பக்தனிடம் எதிர்பார்க்கப்படுவது இது போன்ற மிகத் தீவிரமான துணிச்சலான அன்புதான். ஆனால் அந்த அன்பு செல்லும் திசை இறைவனை நோக்கியதாக இருக்க வேண்டும், அவ்வளவுதான்.

அடுத்தது வேதனைகளுள் மிகமிக இனிமையான வேதனை—விரக வேதனை, அன்பிற்குரியவரைக் காணாததால் ஏற்படுகின்ற ஆழ்ந்த மனத்தவிப்பு. இறைவனை இன்னும் அடையவில்லையே, அறிவதற்குத் தகுதியுடைய ஒரே பொருளான அவரை இன்னும் அறியவில்லையே என்ற உள்ளார்ந்த

---

1. ஸம்மான பஹுமான ப்ரீதி விரஹேதர விசிகித்ஸா மஹிமக்யாதி ததர்த்த ப்ராண ஸ்தான। ததியதா ஸர்வதத்பாவாப்ராப்திகூல்யாதீனி ச ஸ்மரணேப்யோ பாஹுல்யாத் ॥

—சாண்டில்ய பக்தி சூத்திரங்கள், 44.

ஏக்கத்தினால், நொந்துநொந்து மனம் வெறுத்து, கடைசியில் பக்தன் பித்தனைப்போல் ஆகிவிடும் நிலைதான் விரகம். இந்த மனநிலையின் காரணமாக பக்தனுக்குத் தன் அன்பிற்குரிய வரைத் தவிர பிற அனைத்தின்மீதும் வெறுப்புத் தோன்றுகிறது (இதர விசிகித்ஸா).

உலக அன்பிலும் இத்தகைய விரக வேதனை ஏற்படுவதை நாம் காண்கிறோம். ஆண் பெண்ணிடமும், பெண் ஆணிடமும் உண்மையான காதல் கொள்ளும்போது, அவர்களுக்குத் தாங்கள் நேசிக்காதவர்களைக் காணும்போது அவர்கள்மீது இயல்பாகவே வெறுப்பு எழுகிறது. பராபக்தி பக்தனைப் பிடித்து ஆட்டும்போதும், மனம் விரும்பாத பொருட்கள்மீது இதே போன்ற வெறுப்பு எழுகிறது. இறைவனைத் தவிர வேறெதை யும்பற்றிப் பேசுவதுகூட அவனுக்குச் சுவையற்றதாகத் தோன்றுகிறது.

'இறைவனை நினை. இறைவனை மட்டுமே சிந்தனை செய். மற்ற பயனற்ற சொற்களைப் பேசுவதை விட்டுவிடு.'[1] இறைவனைப்பற்றி மட்டுமே யார் பேசுகிறார்களோ அவர்களை பக்தன் நண்பர்களாகக் கருதுகிறான். பிறவற்றைப் பேசுபவர் களை நண்பர்கள் அல்லாதவர்களாகக் காண்கிறான். இதைவிட மேலானதொரு நிலையையும் அவன் அடைகிறான். அன்பு என்ற ஒரே லட்சியத்திற்காக மட்டுமே அவன் வாழ்கின்ற நிலை அது. இங்கே, அந்த அன்பின் காரணமாக அவனது வாழ்வே இன்பமயமாகவும், வாழத் தகுந்ததாகவும் விளங்குகிறது (ததர்த்த ப்ராணஸம்ஸ்தானம்). இந்த அன்பு இல்லாமல் ஒரு கணம்கூட அவனால் வாழ முடியாது. வாழ்க்கை இன்பமயமாக உள்ளது, ஏனெனில் அதில் இறைவனை நினைக்க முடிகிறது.

ஒருவன் பக்தியில் நிறைநிலையை அடையும்போது, இறைவனது அருட்பேற்றைப் பெறும்போது, இறைவனை அடையும்போது, அவனது திருவடித் தாமரைகளைத் தொடு வது போலாகும்போது ததியதா (தான் இறைவன் ஒருவனுக்கே சொந்தம்) என்ற நிலையை அடைகிறான். அப்போது அவனது இயல்பு முழுவதும் தூய்மைப்படுத்தப்பட்டு, முற்றிலுமாக மாற்றப்பட்டுவிடுகிறது. அவனது வாழ்க்கையின் நோக்கம் நிறைவேறுகிறது. ஆனாலும் பக்தர்களுள் பலர் இறைவனை

---

1. தமேவைகம் ஜானத ஆத்மானம் அன்யா வாசோ விமுஞ்சத।
—முண்டக உபநிடதம், 2.2.5.

வழிபடுவதற்கென்றே உலகில் வாழ்ந்துவருகிறார்கள். அந்த ஆனந்தத்தை, வாழ்வின் ஒரே இன்பத்தை அவர்கள் விடுவதில்லை. 'மன்னா! எல்லாவற்றிலும் நிறைவு கண்டவர்களும், இதய முடிச்சுக்கள் அனைத்தும் அவிழப் பெற்றவர்களும்கூட அன்பு ஒன்றிற்காகவே ஹரியிடம் அன்பு செய்கின்றனர்; அவரது பெருமை இத்தகையது.'[1] 'அந்த மேலான பரம்பொருளை எல்லா தேவதைகளும் வழிபடுகின்றனர். முக்தியை நாடும் எல்லா சாதகர்களும், எல்லா பிரம்மஞானிகளும் வணங்கி வழிபடுகின்றனர்—யம் ஸர்வே தேவா: நமந்தி முமுக்ஷவோ ப்ரஹ்மவாதினச்சேதி'[2] அன்பின் ஆற்றல் இத்தகையது. தன்னை முற்றிலுமாக மறந்து எந்தப் பொருளையும் தனதென்று உணராதவனாகும்போது பக்தன் 'ததீ'யதா நிலையை அடைகிறான். அவனுக்கு எல்லாமே புனிதம் வாய்ந்தவை. ஏனெனில் எல்லாமே இறைவனது உடைமை.

சாதாரண உலக அன்பில்கூட, அன்பிற்குரியவருக்குச் சொந்தமானவற்றை எல்லாம் புனிதம் வாய்ந்தவையாக, மிகவும் விரும்பத் தக்கதாகப் போற்றுவதைக் காண்கிறோம். மனத்தைக் கவர்ந்தவளின் கைக்குட்டையைக்கூட காதலன் நேசிக்கிறான். இதுபோன்று பக்தன் இறைவனை நேசிக்கும்போது, இறைவனுக்குச் சொந்தமானது என்ற காரணத்தால் உலகமே அவனது அன்பிற்கு உகந்ததாகிவிடுகிறது. ❋

---

1. ஆத்மாராமாச்ச முனயோ நிர்க்ரந்தா அப்யுருக்ரமே।
குர்வந்த்யஹைதுகீம் பக்திம் இத்தம்பூத குணோ ஹரி: ॥
—பாகவதம், 7. 10. 1.

2. ந்ருஸிம்ஹ பூர்வதாபினீ உபநிடதம், 2. 4.

## 5. உலகம்தழுவிய அன்பும் சரணாகதியும்

முதலில் சமஷ்டியை நேசிக்காமல் வியஷ்டியை எப்படி நேசிக்க முடியும்? நாம் காண்கின்ற இந்த உலகம் வியஷ்டி. இதுபோன்ற கோடிக்கணக்கான வியஷ்டிகளை உள்ளடக்கிய மொத்தம்தான் சமஷ்டி—அது இறைவன். எனவே உலகம் முழுவதையும் நேசிக்க வேண்டுமானால், அதனைத் தன்னிடத்தே ஒரு சிறுகூறாகக் கொண்டுள்ள முழுமுதற் பொருளை நேசிக்க வேண்டும்.

கூறுகளை ஆராய்வதுடன் இந்திய நாட்டுத் தத்துவ ஞானியர் நிற்பதில்லை. மேலோட்டமாக இவற்றை விரைவாக ஒரு பார்வை பார்த்துவிட்டு, இந்தக் கூறுகளைத் தன்னுள்ளே கொண்டிருக்கின்ற முழுப்பொருளை ஆராயச் சென்றுவிடுகின்றனர். உலகம்தழுவிய ஒன்றைத் தேடுவதுதான் இந்தியத் தத்துவத்தின், மதத்தின் ஒரே நோக்கமாக உள்ளது. எந்த ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகுமோ அந்த உண்மைப் பொருளை, பொதுவானதை, முழுத்தொகுதியான முழுமுதற்பொருளை அறிய விழைகிறான் ஞானி. பக்தனோ எந்த ஒருவரை நேசிப்பதன்மூலம் பிரபஞ்சம் முழுவதையும் நேசிக்கலாமோ, அந்தப் பொதுமைப் பொருளை அனுபூதியில் அறிய விரும்புகிறான். எந்த ஆற்றலை அடக்கியாள்வதன்மூலம் பிரபஞ்சம் முழுவதையும் அடக்கியாள முடியுமோ அந்தப் பிரபஞ்சப் பொது ஆற்றலை வசப்படுத்த விரும்புகிறான் யோகி. விஞ்ஞானம், மனஇயல், பக்தி, தத்துவம் என்று எந்தத் துறையை எடுத்தாலும் இந்திய மனம் இத்தகைய பொதுமையைத் தேடுவதையே ஒரே நோக்கமாகக் கொண்டிருந்ததை வரலாறு நமக்குக் காட்டுகிறது.

ஆகவே பக்தன் கண்ட முடிவு இது—ஒருவர்பின் ஒருவராக நேசித்துக்கொண்டே போனால் அதற்கு ஒரு முடிவே இருக்காது. எல்லையற்ற காலம்வரை நேசித்துக்கொண்டே போகலாம். இதன்மூலம் உலகை மொத்தமாக நேசிப்பது என்பது நடக்க முடியாது. ஆனால் எல்லா அன்பினுடையவும் ஒட்டு மொத்தமானவன் இறைவன்; முக்தரோ, கட்டுண்டவரோ, முக்தி பெற முயன்று கொண்டிருப்பவரோ யாரானாலும்

அவர்களுடைய விருப்பங்கள் அனைத்தின் நிறைவிடம் இறைவன். இந்த அடிப்படைக் கருத்தைப் புரிந்துகொண்டால்தான் உலகம்தழுவிய அன்பு என்ற ஒன்றைக் காட்ட முடியும். இறைவனே சமஷ்டி. நாம் காண்கின்ற இந்த உலகம் என்பது இறைவனின் வேறு உருவம், வெளிப்பாடு; அவ்வளவுதான். இந்த ஒட்டுமொத்தத்தை நேசித்தால் எல்லாவற்றையும் நேசித்தவர்கள் ஆகிறோம். உலகை நேசிப்பதும், அதற்கு நன்மை செய்வதும் எல்லாம் எளிதாகிவிடும். முதலில் இறைவனை நேசிப்பதால் மட்டுமே இந்த ஆற்றலைப் பெற முடியும். இல்லாமல் உலகிற்கு நன்மை செய்வது என்பதெல்லாம் எளிதல்ல.

'எல்லாம் அவன் உடைமை. அவன் என் அன்பன். அவனை நான் நேசிக்கிறேன்' என்கிறான் பக்தன். இவ்வாறு எல்லாமே அவனுக்குப் புனிதமாகத் தெரிகின்றன. ஏனெனில் எல்லாம் இறைவனுக்குச் சொந்தமானவை. எல்லோரும் அவனது குழந்தைகள், அவனுடைய சரீரம், அவனது வெளிப்பாடுகள். அப்படியிருக்க, பிறரைத் துன்புறுத்த எப்படி முடியும்? பிறரிடம் எவ்வாறு அன்பு செலுத்தாதிருக்க முடியும்? இறைவனை நேசிக்கும்போது அதன் விளைவாக, உலகிலுள்ள ஒவ்வொருவரிடமும் நமக்கு அன்பு பிறக்கும்.

இறைவனை நெருங்கநெருங்க, எல்லாமே அவனிடம் இருப்பதை அதிகமாகக் காண்கிறோம். இந்தப் பேரன்பின் பேரானந்தத்தைத் தனதாக்கிக் கொள்வதில் ஆன்மா வெற்றி காணும்போது எல்லாவற்றிலும் அவனைக் காணத் தொடங்குகிறது. அதன் பயனாக நம் உள்ளம் நிரந்தர அன்பு ஊற்றாக மாறுகிறது. இந்த அன்பின் இன்னும் உயர்ந்த நிலைகளை நாம் அடையும்போது, உலகப் பொருட்களின் இடையேயுள்ள சிறுசிறு வேற்றுமைகள்கூட நமக்கு அழிந்துவிடுகின்றன. மனிதனை மனிதனாகக் காணாமல் இறைவனாகக் காண்கிறோம். மிருகம் மிருகமாகத் தெரியாமல் கடவுளாகத் தெரிகிறது. புலிகூடப் புலியாகத் தெரிவதில்லை; இறைவனின் வெளிப்பாடாகத் தெரிகிறது. பக்தியின் இந்த உயர் நிலையில் ஒவ்வொரு மனிதனுக்கும், ஒவ்வொரு பிராணிக்கும், ஒவ்வோர் உயிருக்குமே வழிபாடு செய்யப்படுகிறது.

'ஏவம் ஸர்வேஷு பூதேஷு பக்தி ரவ்யபிசாரிணீ |
கர்த்தவ்யா பண்டிதைர்ஜ்ஞாத்வா ஸர்வபூதமயம் ஹரிம் ||[1]

1. விஷ்ணு புராணம், 1. 19. 5.

—எம்பெருமானாகிய ஹரி எல்லா உயிர்களிலும் உறைகிறான் என்பதை அறிந்து அறிஞர்கள் எல்லா உயிர்களிடமும் மாறாத அன்பு செலுத்த வேண்டும்.

அனைத்தையும் தன்னுள் ஈர்த்துக் கொள்கின்ற இந்தத் தீவிரமான அன்பினால் நமக்கு இறைவனிடம் பரிபூரணமான சரணாகதி நிலை ஏற்படுகிறது. அதாவது வாழ்க்கையில் எது நடந்தாலும் அது தனக்கு எதிரானது அல்ல என்ற திட நம்பிக்கை (அப்ராதிகூல்யம்) உண்டாகிறது. இந்த நிலையில் துன்பம் வரும்போது 'வருக, வருக!' என்று அதனை வரவேற்கிறான் பக்தன். துயரம் வந்தால் 'துயரமே வா, உன் வரவு நல்வரவாகட்டும். நீயும் என் அன்புத் தலைவனிடமிருந்து அல்லவா வருகிறாய்' என்பான். பாம்பு வந்தாலும் அதற்கும் 'வருக'தான். மரணம் வந்தாலும் புன்சிரிப்புடன் அதனை ஏற்று, 'ஆகா, நான் எவ்வளவு கொடுத்துவைத்தவன்! என்னிடம் இவை வருகின்றன. இவற்றிற்கும் என் நல்வரவு' என்று வரவேற்கிறான். இறைவன்மீதும், அவருடையவை அனைத்தின் மீதும் எழுகின்ற பேரன்பிலிருந்து பிறக்கும் இந்தப் பரிபூரண சரணாகதி நிலையில் இன்ப துன்பங்களுக்கு இடையில் அவன் வேறுபாடு காண்பதில்லை. துன்ப துயரங்கள்பற்றி முறையிடுவதும் அவனுக்குத் தெரியாது. இவ்வாறு எந்த முறையீடும் இல்லாமல், அன்பே வடிவான இறைவனது திருவுளத்தை முற்றிலுமாகச் சரணடைந்திருக்கின்ற இந்தப் பெருநிலை, வீரதீரச் செயல்களைச் செய்வதால் வருகின்ற பெருமையைவிட உண்மையிலேயே மிக உயர்ந்தது.

பெரும்பாலோருக்கு உடம்பே எல்லாம், உடம்பே உலகம். உடலின்பம்தான் அவர்களுக்கு எல்லாம். உடம்பைப் பேணுவதும் போற்றிப் பாதுகாப்பதுமான இந்தப் பேய் நம் எல்லோருள்ளும் புகுந்துள்ளது. நாம் பெரியபெரிய பேச்சுக்களைப் பேசலாம், உயர்ந்த தத்துவங்களை விளக்கலாம். ஆனாலும் நாம் கழுகைப் போன்றவர்கள். நமது மனம் கீழே கிடக்கும் அழுகிய மாமிசத் துண்டுகளையே நாடி அலைகிறது. நமது உடல் ஏன் காப்பாற்றப்பட வேண்டும்? அதாவது ஒரு புலி பாய்ந்து வருமானால் நாம் ஏன் உடம்பைக் காக்க முயல வேண்டும்? ஏன் புலிக்கே இரையாகக் கூடாது? புலிக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும்? அப்படிச் செய்வது ஏறக்குறைய தன்னலத் தியாகம்தான், வழிபாடுதான். நான் என்ற எண்ணம் அடியோடு மறைந்துவிடுகின்ற நிலையை உன்னால் அடைய

முடியுமா? தலைசுற்றுகின்ற அளவிற்கு மிக உயரமான உச்சி அந்த நிலை; பக்திநெறியின் உயர்ந்த சிகரம் அந்த நிலை. ஒரு சிலரே அதனை எட்டியிருக்கின்றனர். தன்னலத் தியாகத்திற்கு, என்றுமே உள்ளன்புடன் தயாராக இருப்பதாகிய இந்த உச்சியை அடையாதவரை யாரும் முழுமையான பக்தனாக இருக்க முடியாது.

சில நாட்களுக்கோ அதிக நாட்களுக்கோ நாம் எல்லோருமே உடம்பைப் பேணிப் பாதுகாத்துத் திருப்தி அடையலாம். ஆனால் நமது உடம்புகள் அழிய வேண்டியவை. அவை நிலைத்திருக்க முடியாது. பிறர் பணியில் ஈடுபட்டு உடம்பு அழியப் பெறுபவர்கள் பேறு பெற்றவர்கள். 'செல்வத்தை, ஏன், தங்கள் உயிரையேகூட பிறருக்குத் தொண்டு செய்வதற்காக முனிவர்கள் தயாராக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த உலகில் ஒன்று நிச்சயம். அது மரணம். இந்த உடல் ஒரு தீய காரியத்திற்காக அழிவதைவிட நல்ல காரியத்திற்காக அழிவது மேலானது அல்லவா?'[1] ஐம்பது ஆண்டுகளுக்கோ நூறு ஆண்டுகளுக்கோ நமது ஆயுளை இழுத்துச் செல்லலாம். அதற்குப் பிறகு? சேர்க்கையின் காரணமாக உருவான எதுவும் பிரிந்தேயாக வேண்டும், அழிந்தே தீர வேண்டும். அது அழிகின்ற ஒரு காலம் வந்தே தீரும். ஏசுவும், புத்தரும், முகம்மது நபியும் மறைந்துவிட்டார்கள். உலகப் பெரும் தீர்க்கதரிசிகளும் ஆச்சாரியர்களும் இறந்து போனார்கள்.

'எல்லாமே தூள்தூளாகச் சிதறி மறையப்போகின்ற நிலையற்ற இந்த உலகில், நமக்குக் கிடைத்திருக்கின்ற காலத்தை முடிந்த அளவு உயர்ந்த வழியில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்' என்கிறான் பக்தன். எல்லா உயிர்களுக்கும் சேவை செய்வதுதான் வாழ்க்கையை மிகவுயர்ந்த அளவிற்கு நல்வழியில் பயன்படுத்துவதாகும். 'நாம் உண்மையில் இந்த உடல்தான், இதனை எப்பாடுபட்டாவது பாதுகாக்க வேண்டும், இயன்ற அளவு சிறப்பாகப் பேண வேண்டும்' என்று கொண்டிருக்கின்ற பயங்கர எண்ணம்தான் உலகின் எல்லா சுயநலங்களுக்கும் காரணமாக இருக்கிறது. நீ உடம்பு அல்ல என்பது உறுதியாக உனக்குத் தெரியுமானால், யாருடனும் உனக்குப் பகையில்லை, போராட்டமில்லை; உனது சுயநல

1. தனானி ஜீவிதம் சைவ பரார்த்தே ப்ராஞ்ஜ உத்ஸ்ருஜேத் |
ஸன்னிமித்தே வரம் த்யாகோ வினாசே நியதே ஸதி ||

—ஹிதோபதேசம்

எண்ணங்கள் எல்லாம் அகன்றுவிடும். எனவே உலகப் பொருட்களைப் பொறுத்தவரையில் நம்மை இறந்துவிட்டவர்களாகவே நாம் கருத வேண்டும். இதுவே உண்மையில் சரணாகதி என்கிறான் பக்தன். பொருட்கள் வந்து போகட்டும். 'எல்லாம் உன் திருவுளப்படியே' என்பதன் பொருள் இதுதானே தவிர, வலிந்து சென்று சண்டையும் சச்சரவுகளும் செய்துவிட்டு, நம்முடைய குற்றங்குறைகளையும் ஆசாபாசங்களையும் 'எல்லாம் இறைவன் திருவுளம்' என்று கூறுவதல்ல. சுயநலம் காரணமாகச் செய்யப்படும் போராட்டங்களால் ஒருவேளை நல்லதும் ஏற்படலாம். அப்போது அது இறைவனின் பொறுப்பு ஆகிறது.

பராபக்தியில் தோய்ந்திருக்கும் பக்தன் எதையும் தனக்கென்று விரும்பாமலும் தனக்கென்று செயல்படாமலும் இருக்க வேண்டும். 'இறைவா! உன் பெயரில் பெரிய கோயில்களைக் கட்டுகின்றனர். உனக்குப் பெரும் பொருளைக் காணிக்கையாக வழங்குகின்றனர். நானோ ஏழை. எனக்கென்று எதுவுமில்லை. எனவே எனது இந்த உடலையே உன் திருவடிகளில் சமர்ப்பிக்கிறேன். என்னைப் புறக்கணித்து விடாதே. என்னைக் கைவிட்டு விடாதே. என் தலைவா!'—என்பது போன்ற பிரார்த்தனைதான் பக்தனின் மன ஆழத்திலிருந்து வெளிப்படுகிறது. இத்தகைய பக்தியில் திளைத்திருப்பவனுக்குத் தன்னையே தன் அன்புக் கடவுளுக்குக் காணிக்கையாக்கும் சரணாகதி நிலை மட்டுமே செல்வம், பதவி, பெயர், புகழ், சந்தோஷம் என்ற எல்லாவற்றைவிடவும் உயர்ந்த நிலையாக, மேலானதாகத் தெரிகிறது. இறைவனிடம் புகலடைந்திருக்கும் பக்தனிடம் காணப்படுகின்ற அமைதியும், சாந்தமும் அறிவிற்குப் புலப்படாதவை, ஈடிணையற்றவை. இந்த நிலையில் அவனுக்கு வேறு எந்தவிதமான ஆர்வமும் இல்லை. தன் இறைஆர்வத்திற்கு எதிராக எதையும் அவன் அறிவதில்லை. இத்தகைய உன்னதமான சரணாகதி நிலையில் பற்று என்ற உருவில் இருக்கின்ற எல்லாமே மறைந்துவிடுகின்றன. எல்லா பொருட்களும் யாரில் வாழ்ந்து, வளர்ந்து, ஒடுங்குகின்றனவோ அவனிடம் கொள்ளும் உலகம்தழுவிய அன்பு என்னும் ஒரே ஒரு பற்றுதான் அவனிடம் உள்ளது. இறைவனிடம் பூணும் இந்த பக்திப்பற்று உண்மையில் ஆன்மாவைக் கட்டுவதில்லை; மாறாக எல்லா பந்தங்களையும் அறுத்தெறிகிறது. ❀

## 6. உண்மையான பக்தனுக்கு உயர்ஞானமும் உயர்பக்தியும் ஒன்றே

உயர் ஞானத்தையும்(பரவித்யை), தாழ்ந்த ஞானத்தையும் (அபரவித்யை) உபநிடதங்கள் வேறுபடுத்திக் காட்டுகின்றன. ஒரு பக்தனைப் பொறுத்தவரையில் உயர் ஞானத்திற்கும், உயர் பக்தி அதாவது பராபக்திக்கும் எந்த வேற்றுமையும் இல்லை. முண்டக உபநிடதம் (1. 1. 4, 5) பின்வருமாறு கூறுகிறது: 'நாம் அறியத் தகுந்த ஞானம் இருவகைப்படும் என்று பிரம்ம ஞானிகள் கூறுகிறார்கள். அவை பர ஞானம், அபர ஞானம் என்பன. அபர ஞானம் அல்லது தாழ்ந்த ஞானம் என்பது ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்ற வேதங்கள் மற்றும் சிக்ஷை (உச்சரிப்பு பற்றியது), கல்பம் (யாகங்கள் பற்றியது) மற்றும் வியாகரணம் (இலக்கணம்), நிருக்தம் (சொற்பொருள் பற்றியது), ஜோதிடம், சந்தஸ் (கவிதை) என்ற வேத அங்கங்கள் ஆறும் சேர்ந்தது. பர ஞானம் என்பதோ மாறாத பரம்பொருளைப் பற்றிய ஞானம்.'

இதிலிருந்து பர ஞானம் என்றால் பிரம்மஞானம் என்பது தெளிவாகிறது. பராபக்தியை தேவீ பாகவதம் பின்வருமாறு விளக்குகிறது: 'ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொரு பாத்திரத் திற்கு ஊற்றப்படும் எண்ணெயின் தடைபடாத ஒழுக்குப்போல், மனம் இடைவிடாது இறைவனை நினைப்பதே பராபக்தி.'[1] இதுபோன்றே தடங்கலற்றதும் சலனமற்றதுமான மனத்தையும் இதயத்தையும், பிரிக்க முடியாத அன்புடன் இறைவனிடம் செலுத்துவது உண்மையிலேயே மனிதன் இறைவனிடம் கொள் பவற்றுள் மிக உயர்ந்த அன்பின் வெளிப்பாடு ஆகும். பக்தியின் பிற நிலைகள் அனைத்தும் இந்தப் பராபக்தியை அடைவதற்கு உதவுகின்ற பயிற்சிகளே. இந்தப் பராபக்தி, ராகானுகம் அதாவது ராகபக்திக்குப் பிறகு வரும் பற்றுடன்கூடிய பக்தி எனப்படுகிறது.

---

1. சேதஸோ வர்த்தனம் சைவ தைலதாரா ஸமம் ஸதா ।
—தேவீ பாகவதம், 7. 37. 12.

பராபக்தி பக்தனிடம் உதயமானால் அவனது உள்ளம் இடைவிடாமல் இறைவனையே சிந்தித்தபடி இருக்கும்; வேறு எதையும் சிந்திக்காது. இறைவனைத் தவிர வேறு சிந்தனைகளுக்கு அவனது மனத்தில் இடம் இருக்காது. அவனது ஆன்மா சிறிதும் களங்கமற்ற பரிசுத்தமாக இருக்கும். பராபக்தி ஒன்றே அவனது மனத்தையும் உடலையும் பற்றியிருக்கின்ற எல்லா தளைகளையும் அறுத்தெறிந்து விடுதலை அளிக்கிறது. அவன் மட்டுமே இறைவனைத் தன் உள்ளத்தில் இருத்தி வழிபட முடியும். அவனுக்கே உருவங்கள், சின்னங்கள், சாஸ்திரங்கள், கொள்கைகள், நூல்கள் இவற்றால் எந்தப் பலனும் இல்லை. அவற்றின் தேவையும் அவனுக்கு இல்லை. இந்த முறையில் இறைவனை நேசிப்பதும் அவ்வளவு எளிதல்ல.

தனது அன்புக்குப் பிரதியாக ஒன்று கிடைக்கின்ற இடத்தில்தான் பொதுவாக மனித அன்பு தழைக்கிறது. தனது அன்பிற்குப் பிரதியாக அன்பு கிடைக்காதபோது அங்கே வெறுப்பும் அலட்சியமும்தான் ஏற்படுகின்றன. இது இயற்கைதான். ஆனால் அபூர்வமாக எங்கோ ஓரிரு இடங்களில் இதற்கு மாறாக, அன்புக்குப் பிரதியாக அன்பு கிடைக்காதபோதுகூட ஒருவன் அன்பு காட்டுவதைக் காணலாம். விட்டில்பூச்சி நெருப்பிடம் கொள்ளும் அன்பை இதற்கு உதாரணமாகக் கூறலாம். அது நெருப்பை நேசித்து நெருங்குகிறது, வீழ்ந்து சாகிறது. இப்படி நெருப்பை நேசித்து அழிவது அந்தப் பூச்சியின் இயல்பிலேயே உள்ளது. 'அன்பின் இயல்பே அன்பு செய்வது, அதனால் அன்பு செய்கிறேன்' என்ற நிலை உலகில் நாம் காணக்கூடிய சுயநலமற்ற உயர்ந்த அன்பிற்கு ஒரு நல்ல, மறுக்க முடியாத எடுத்துக்காட்டாகும். ஆன்மீக வாழ்வில் இத்தகைய அன்பு செயல்படும்போது, அது சாதகனை நிச்சயமாகப் பராபக்தியை நோக்கி அழைத்துச் செல்கிறது. ❀

## 7. பக்தி—முக்கோணம்

பக்தியை ஒரு முக்கோணத்துடன் ஒப்பிடலாம். அதன் ஒவ்வொரு கோணமும் பக்தியின் பிரிக்க முடியாத ஒவ்வொரு பண்பைக் குறிக்கிறது. மூன்று கோணங்களும் சேராமல் எந்த முக்கோணமும் இருக்க முடியாது. அதுபோலவே பின்வரும் மூன்று பண்புகள் இல்லாமல் உண்மையான பக்தி இருக்க முடியாது.

நமது பக்தி-முக்கோணத்தின் முதல் கோணம், அன்பு வியாபாரப் பொருள் அல்ல என்பதாகும். ஏதாவது விதத்தில் பிரதிபலனில் நாட்டம் இருக்குமானால் அங்கு உண்மையான அன்பு இருக்க முடியாது; அது வெறும் கொடுக்கல்-வாங்கல் வியாபாரம்தான். நாம் செலுத்தும் மரியாதைக்கும் போற்றுதலுக்கும் பிரதியாகக் கடவுளிடமிருந்து 'அது வேண்டும், இது வேண்டும்' என்ற எண்ணம் இருக்குமானால் உண்மையான பக்தி வளர முடியாது. ஒரு பலனை எதிர்பார்த்து கடவுளை வழிபடுபவர்கள், தாங்கள் விரும்பிய பலன் கிடைக்காவிட்டால் வழிபடுவதை நிறுத்திவிடுவார்கள் என்பது சர்வ நிச்சயம். அன்பிற்கு உரியவன் என்ற காரணத்தினால்தான் பக்தன் இறைவனை நேசிக்கிறான். உண்மையான பக்தனிடம் இந்தத் தெய்வீக உணர்ச்சிக்கு வேறு எந்த நோக்கமோ தூண்டுதலோ இல்லை.

ஒருசமயம் பேரரசன் ஒருவன் காட்டில் முனிவர் ஒருவரைச் சந்தித்தான். சிறிதுநேரம் பேசியபோது அவரது தூய்மையும் ஞானமும் அவனது உள்ளத்தைக் கவர்ந்தன. அவருக்கு அன்பளிப்பாக ஏதேனும் தர எண்ணி அவரைக் கேட்டபோது அவர், 'என் உணவிற்கான காய்கனிகள் காட்டில் கிடைக்கின்றன. மலையிலிருந்து பாய்ந்து வரும் அருவிநீர் என் தாகத்தைத் தணிக்கிறது. மரப்பட்டை போதிய ஆடையாக உள்ளது. மலைக்குகைகள் எனக்கு வீடு. ஆகவே உன்னிடமிருந்தோ, வேறு யாரிடமிருந்தோ எதற்காக நான் வெகுமதி பெற வேண்டும்?' என்று கேட்டு அன்பளிப்பை மறுத்தார். அதற்கு அரசன், 'முனிவரே, நீங்கள் பெற்றுக்கொள்வது என் நன்மைக்காகவே.

தயவுசெய்து என்னிடமிருந்து ஏதாவது பெற்றுக் கொள் ளுங்கள். என்னுடன் என் நாட்டிற்கு வாருங்கள். அரண் மனைக்கு அழைத்துச் செல்கிறேன்' என்று வற்புறுத்தினான். முனிவரும் ஒருவாறு உடன்பட்டு அவனுடன் அரண்மனைக்குச் சென்றார். முனிவருக்கு அன்பளிப்பைக் கொடுப்பதற்கு முன் அரசன் இறைவனை நோக்கி, 'எம்பெருமானே, எனக்கு மேலும் குழந்தைகளைக் கொடு. செல்வத்தை மிகுதியாகக் கொடு. மேலும்மேலும் நான் நாடுகளைப் பெறுமாறு செய். நல்ல உடல்நலனைத் தா' என்றெல்லாம் பிரார்த்திக்கத் தொடங் கினான். அரசனுடைய பிரார்த்தனை முடிவதற்கு முன்னரே முனிவர் அமைதியாக அந்த இடத்தைவிட்டுச் செல்லலானார். அதைக் கண்டுக் குழப்பமுற்ற அரசன் படபடப்புடன் அவரைப் பின்தொடர்ந்து, 'முனிவரே, அன்பளிப்பை வாங்காமலேயே போகிறீர்களே!' என்று கேட்டான். அதற்கு அந்த முனிவர் அரசனைப் பார்த்து, 'மன்னா, நான் பிச்சைக்காரர்களிடம் பிச்சை ஏற்பதில்லை. நீயே ஒரு பிச்சைக்காரன். எனக்கு உன்னால் என்ன தர முடியும்? உன்னைப்போன்ற ஒரு பிச்சைக்காரனிடம் எதையும் பெற்றுக்கொள்ள நான் முட்டாள் அல்ல. என்னைப் பின்தொடராதே' என்று கூறிச் சென்றுவிட்டார்.

பிச்சைக்காரர்களுக்கும் உண்மையான பக்தர்களுக்கும் உள்ள வேறுபாடு இங்கே தெளிவாக்கப்படுகிறது. யாசிப்பது அன்பின் மொழியல்ல. முக்திக்காகவோ வேறெதற்காகவுமோ இறைவனை வேண்டுவதுகூட பக்தியைக் கீழ்மைப்படுத்துவ தாகும். அன்பு பிரதிபலனை எதிர்பார்ப்பதில்லை. அன்பு எப் போதும் அன்பிற்காகவே செய்யப்படுகிறது. இறைவனை பக்தன் நேசிக்கிறான் என்றால், அவனால் நேசிக்காமல் இருக்க முடி யாது. அழகிய இயற்கைக் காட்சி ஒன்றைக் கண்டு அதில் மனத்தைப் பறிகொடுக்கிறாய். அதற்காக அதனிடம் ஏதேனும் வெகுமதி எதிர்பார்க்கிறாயா? இல்லையே! அதுபோல் அந்தக் காட்சியும் உன்னிடம் எதையும் கேட்பதில்லை. அந்தக் காட்சி உனக்குப் பேரானந்தத்தைத் தருகிறது, உன் உள்ளத்தில் தேங்கிக் கிடக்கும் மனப் போராட்டங்களைத் தணிக்கிறது, உன்னை அமைதியில் திளைக்கச் செய்கிறது, அந்த நேரத்திற்கு உன்னை எங்கோ ஓர் உயர் உலகிற்கு இட்டுச் செல்கிறது, உன்னைத் தெய்வீகப் பரவசத்தில் ஆழ்த்துகிறது. உண்மை அன்பின் இந்த இயல்புதான் நமது முக்கோணத்தின் முதல் கோண மாகும். உன் அன்பிற்குப் பிரதியாக எதையும் கேட்காதே.

உன் நிலை எப்போதும் கொடுப்பவனின் நிலையாக இருக்கட்டும். இறைவனுக்கு உன் அன்பைக் கொடு. பதிலாக அவரிடமிருந்து எதையும் யாசிக்காதே.

பக்தி-முக்கோணத்தின் இரண்டாவது கோணம், அன்பு பயம் அறியாதது என்பதாகும். பயத்தின் காரணமாக இறைவனை நேசிப்பவர்கள் மனிதர்களில் கடைப்பட்டவர்கள்; மனிதர்கள் ஆனாலும் பக்குவப்படாதவர்கள். தண்டனை கிடைக்கும் என்ற பயத்தினால் இவர்கள் இறைவனை வழிபடு கிறார்கள். இவர்களுக்கு இறைவன் என்பவர் ஒரு கையில் சாட்டையும், மற்றொரு கையில் செங்கோலும் ஏந்தியிருக்கும் பெரியதோர் உருவம். அவரது கட்டளைக்கு அடிபணியாமல் போனால் சாட்டையடி கிடைக்கும் என்று நடுங்குகிறார்கள் இவர்கள். இப்படித் தண்டனைக்கு அஞ்சி இறைவனை வழிபடு வது, வழிபாடு என்பதையே தரம் தாழ்த்துவதாகும். அத்தகைய வழிபாடு—அதனை வழிபாடு கொள்வதாக இருந்தால்—சற்றும் பக்குவப்படாத தாழ்ந்தநிலை வழிபாடாகும். மனத்தில் ஏதாவது பயம் இருக்கும்வரை அங்கே அன்பு எப்படி வர முடியும்? பயங்கள் அனைத்தையும் வெற்றிகொள்வது அல்லவா அன்பின் இயல்பு! ஓர் இளம் தாய் தெரு வழியாகச் சென்று கொண் டிருக்கிறாள். அவளைப் பார்த்து ஒரு நாய் குரைக்கிறது. அவள் பயந்துபோய் அருகிலுள்ள வீட்டில் தஞ்சம் புகுகிறாள். மறு நாள் அதே தாய் தன் குழந்தையுடன் சென்று கொண்டிருக் கிறாள். திடீரென்று ஒரு சிங்கம் குழந்தையின்மீது பாய்கிறது. அவள் என்ன செய்வாள்? சிங்கத்தின் வாயில் தன்னை அர்ப் பணித்தாவது குழந்தையைக் காப்பாற்றுவாள் அல்லவா? அன்பு எல்லா பயங்களையும் வெல்கிறது.

உலகிலிருந்து தன்னைப் பிரித்துக்கொள்வதான சுயநல நோக்கம்தான் பயத்திற்குக் காரணம். சுயநலத்திற்கும் சிறுமைத் தனத்திற்கும் என்னை நான் அடிமைப்படுத்தும் அளவிற்கு பயம் என்னிடம் அதிகரிக்கிறது. தான் ஒன்றுக்கும் உதவாதவன் என்று ஒருவன் நினைப்பானானால் பயம் அவனைப் பற்றிக் கொள்வது நிச்சயம். தான் அற்பன் என்ற எண்ணம் குறையக் குறைய பயமும் குறையும். துளியளவு பயம் இருந்தால்கூட அங்கே அன்பு இருக்க முடியாது. அன்பும் பயமும் இணைந்து இருக்க முடியாதவை. கடவுளை நேசிப்பவன் அவரிடம் பயப் படக் கூடாது. 'இறைவனின் திருநாமத்தை வீணாகச் சொல் லாதே' என்ற கட்டளையைக் கேட்டு உண்மையான பக்தன்

சிரிக்கிறான். பக்தியில் தெய்வ நிந்தை எப்படி இருக்க முடியும்? இறைவனது திருநாமத்தைச் சொல்லச்சொல்ல—அதை நீ எந்த முறையில் சொன்னாலும் சரி—அதனால் உனக்கு நன்மைதான் உண்டாகும். நீ அவனது திருநாமத்தைத் திரும்பத்திரும்பக் கூறுகிறாய். ஏன்? அவனை நீ உளமார நேசிப்பதால்தான்.

பக்தி-முக்கோணத்தின் மூன்றாவது கோணமாக இருப்பது, அன்புக்குப் போட்டி கிடையாது என்பதுதான். இதுவே பக்தனின் மிக உயர்ந்த லட்சியம். நாம் நேசிப்பவர் மிக உயர்ந்த லட்சிய புருஷராக இல்லாவிட்டால் நமக்கு அவர்மீது உண்மையான அன்பு தோன்றாது. தவறானவர்களிடம் தவறான வழியில் பலர் அன்பு செலுத்தலாம். ஆனால் அன்பு செலுத்துபவனைப் பொறுத்தவரையில், அவனால் மிக அதிகமாக நேசிக்கப்படுபவர் அவனுக்கு மிகவுயர்ந்த லட்சியமாகவே விளங்குகிறார். ஒருவன் தனது லட்சியத்தை மிகமிகத் தாழ்ந்தவனிடம் காணலாம்; மற்றொருவன் மிகமிக உயர்ந்தவனிடம் காணலாம். எப்படியிருந்தாலும் தனக்கு லட்சியமாக இருப்பவரையே மனிதன் ஆழ்ந்து நேசிக்கிறான்.

ஒவ்வொரு மனிதனுடையவும் மிகவுயர்ந்த லட்சியம் இறைவனே. பண்டிதன்-பாமரன், மகான்-பாவி, ஆண்-பெண், படித்தவன்-படிக்காதவன், பண்புடையவன்-பண்பாடற்றவன் என்று அனைவருக்கும் மிகவுயர்ந்த லட்சியம் இறைவன்தான். அழகு, நுண்மை, ஆற்றல் என்னும் மூன்றும் மிகவுயர்ந்த லட்சிய நிலையில் இணைந்த இணைப்புதான் அன்பே வடிவான இறைவனைப்பற்றிய நமது கருத்தின் அறுதி எல்லை.

இந்த லட்சியங்கள் ஏதாவது ஒருவிதத்தில் ஒவ்வொருவர் மனத்திலும் இயல்பாகவே இருந்துவருகின்றன; பிரிக்க முடியாதபடி நமது மனத்தின் ஒரு பகுதியாக அமைந்துள்ளன. மனித இனத்தின் அனைத்து முயற்சிகளும் இந்த லட்சியங்களை வாழ்க்கையில் செயல்படுத்துவதற்கான போராட்டங்களே. சமுதாயத்தில் நம்மைச் சுற்றி நிகழும் எல்லா செயல்களும், தத்தம் லட்சியங்களை வெளிப்படுத்தி அவற்றைச் செயல்படுத்த மனிதன் மேற்கொள்ளும் முயற்சியின் விளைவுகளே. அகத்தேயிருப்பது புறத்தே வரத் துடிக்கிறது. இடையீடற்ற இந்த லட்சிய வேகம்தான், இந்தத் தூண்டுசக்திதான் மனித குலத்தில் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

நூற்றுக்கணக்கான பிறப்புகள் சென்றபிறகுதான், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் போராடிய பிறகுதான்,

அக லட்சியத்தைப் புறச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப முழுமையாகச் சரி செய்துகொள்வது வீணான முயற்சி என்பதை மனிதன் ஒருவேளை அறிந்துகொள்வான். இப்படி அறிந்தபின் தன் லட்சியத்தை உலகில் நிறுவுவதற்கு அவன் ஒருபோதும் முயல்வதில்லை. ஆனால் தன் லட்சியத்தையே அறுதி லட்சியமாகக் கொண்டு அன்பின் உச்சியில் நின்றபடி வழிபடத் தொடங்குகிறான். இந்த உயர் லட்சியம் எல்லா தாழ்ந்த லட்சியங்களையும் தன்னுள் அடக்கியதாக விளங்குகிறது.

காதல்கண்ணிற்கு அட்டக்கருமையானவளும் அழகின் சிகரமாகத் தெரிவாள் என்று சொல்லப்படுவது உண்மைதான். மூன்றாம் மனிதனுக்கு அவள் அப்படித் தெரிய மாட்டாள்; அந்தக் காதலனின் காதல் தவறான இடத்தில் செலுத்தப்பட்டதாகவே அவனுக்குத் தெரியும். ஆனால் காதலனோ காதலியிடம் அழகின் சிகரத்தையே காண்கிறான்; ஒருபோதும் அட்டக் கருப்பைக் காண்பதில்லை. அழகோ, அழகற்றதோ எதுவாயினும் சரி, நம் அன்பிற்குரிய பொருட்களே நமது லட்சியங்கள் உருவாகிச் செயல்படும் மையங்கள் ஆகின்றன. மக்கள் பொதுவாக எதை வழிபடுகின்றனர்? பராபக்தனின் லட்சிய உச்சியாக விளங்கும் முழு முதற்கடவுளை அல்ல, அல்லவே அல்ல. ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, அவரவர் உள்ளத்தில் என்ன இருக்கிறதோ அதைத்தான் ஒவ்வொருவரும் வழிபடுகின்றனர். ஒவ்வொருவரும் தனது லட்சியத்தையே புறவுலகில் கொண்டுவந்து அதன்முன் மண்டியிட்டு வணங்குகிறார்கள். அதனால்தான் கொடியவர்களும், ரத்தவெறி பிடித்தவர்களும், ரத்தவெறி கொண்ட கடவுளைப் படைக்கிறார்கள். தங்கள் லட்சியத்தைத்தான் அவர்கள் நேசிக்க முடியும். அதுபோலவே நல்லவனும் இறைவனைப் பற்றிய உயர் லட்சியத்தைக் கொள்கிறான். அவனது லட்சியம் உண்மையிலேயே மற்றவர்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்டது தான். ❦

## 8. அன்புக் கடவுளுக்குச் சான்று அந்த அன்புக் கடவுளே!

தன்னலம், கணக்குப் பார்த்தல், பேரம் பேசுதல், பயம் முதலியவற்றைக் கடந்து சென்றுவிட்ட பக்தனின் லட்சியம் எது? இத்தகையவன் இறைவனிடம்கூட, 'என்னிடம் உள்ள எல்லாவற்றையும் உனக்குத் தருகிறேன். உன்னிடமிருந்து எனக்கு எதுவும் வேண்டாம். உண்மையில் என்னுடையது என்று இந்த உலகில் எதுவுமில்லை' என்று கூறுகிறான். உள்ளத்தில் இத்தகைய உறுதி வரும்போதுதான் பக்தனின் லட்சியம் நிறைவுற்ற பக்தியாகிறது; எதற்கும் அஞ்சாத பராபக்தியாகிறது. பக்தனின் இந்த உயர்ந்த லட்சியத்தில் குறுகிய நோக்கங்களுக்கு இடமில்லை. அவனது அன்பு உலகையே அரவணைத்துச் செல்கின்ற முழுமையான அன்பு, எல்லைகளும் தளைகளும் நீங்கப்பெற்ற அன்பு, பூரண அன்பு. மகோன்னதமான இந்த பக்திலட்சியம் குறியீடுகள், புறச் சின்னங்கள் இவை எவற்றின் துணையுமின்றி லட்சிய நிலையிலேயே விரும்பப்பட்டு, வழிபடப் பெறுகிறது. இதுவே பராபக்தியின் மிகச் சிறந்த நிலை; அனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்ட லட்சியத்தின் லட்சியத்தை வழிபடுவது. பக்தியின் மற்ற வடிவங்கள் இதை அடையும் வழியில் அமைந்த பல்வேறு படிகளே.

பக்தியோகத்தைக் கடைப்பிடிப்பதில் வரும் நமது வெற்றி தோல்விகள் எல்லாம் லட்சியத்தை அடையும் பாதையில்தான் உண்டாகின்றன. தனது அக லட்சியத்தை, புறப்பொருட்கள்மீது ஒன்றன்பின் ஒன்றாகக் கற்பிக்கிறான் சாதகன். ஆனால் எல்லையின்றி வளர்ந்து செல்கின்ற தனது அக லட்சியத்தைத் தெளிவுபடுத்தும் திறனற்றவை அவை என்பதைக் காண்கிறான். எனவே இயற்கையாகவே அவை ஒவ்வொன்றையும் புறக்கணிக்கிறான். கடைசியாக, புறப்பொருட்களில் லட்சியத்தைக் காண முற்படுவது பயனற்ற செயல் என்பதையும், தன் லட்சியத்துடன் ஒப்பிடும்போது அவையெல்லாம் வெறும் வெறுமை என்பதையும் உணர்கிறான். மிக உயர்ந்ததும், பொதுவானதும்,

உண்மைப் பொருளாக விளங்குவதுமான லட்சியத்தை முழுமையாக, உயிரோடும் உணர்வோடும் காணும் சக்தியை நாளடைவில் அவன் பெறுகிறான். இந்த நிலையை அடைந்த பிறகு 'இறைவனைக் காண முடியுமா? முடியாதா? அவர் எல்லா சக்தியும் எல்லா அறிவும் படைத்தவரா, இல்லையா?' என்ற கேள்விகளைக் கேட்கும் நிலையில் அவன் இருக்க மாட்டான்.

பக்தனுக்கு இறைவன்தான் அன்புக்கடவுள்; அவர்தான் அன்பின் மிகவுயர்ந்த லட்சியம். அவனுக்கு அதுவே போதும். இறைவன் அன்புமயமானவன் என்பது வெளிப்படை. பக்தனுக்குத் தனது அன்புக்கடவுளின் இருப்பை எடுத்துக்காட்ட எந்தப் புறச்சான்றும் தேவையில்லை. நீதிபதிபோல் வீற்றிருக்கும் கடவுளைக் கொண்டாடும் மதப் பிரிவுகளில் வேண்டுமானால் அவரது இருப்பை நிரூபிக்க நிரூபணங்கள் தேவைப்படலாம். ஆனால் பக்தன் அத்தகைய கடவுள்களை எண்ணிக்கூடப் பார்க்க மாட்டான்; பார்க்கவும் முடியாது. அவனுக்கு இறைவன் முழுக்கமுழுக்க அன்பு மயமானவன். 'அன்பிற்குரியவளே, எந்த மனைவியும் கணவனைக் கணவனுக்காக விரும்புவதில்லை; கணவனிடம் இருக்கும் ஆன்மாவிற்காகவே அவனை விரும்புகிறாள். யாரும், என் அன்பே, மனைவிக்காக மனைவியை விரும்புவதில்லை; ஆனால் மனைவியிடம் இருக்கும் ஆன்மாவிற்காகவே மனைவியை விரும்புகிறான்.'

மனிதச் செயல்கள் அனைத்திற்கும் தூண்டுகோலாக இருப்பது சுயநலம் ஒன்றுதான் என்று சிலர் கருதுகின்றனர். அதுவும் அன்புதான்; ஆனால் இது குறிப்பிட்ட ஒரு மனிதனை அல்லது பொருளை விரும்புவதால் தாழ்ந்த நிலைக்கு வந்துவிடுகிறது. என்னை நான் உலகத்துடன் ஒன்றுபடுத்திக் காணும் போது கண்டிப்பாக என்னிடம் சுயநலம் இருக்க முடியாது. ஆனால் தவறுதலாக, நான் என்னை ஒரு தனிமனிதனாக, சிறியவனாகக் கருதும்போது, எனது அன்பு சுருங்கிக் குறுகிவிடுகிறது. அன்பின் எல்லையைச் சுருக்கிக் குறுக்குவதால்தான் இந்தத் தவறு நிகழ்கிறது. உலகிலுள்ள அனைத்தும் கடவுளிலிருந்து தோன்றியவை; நேசிக்கப்பட வேண்டியவை. முழுமையை நேசிக்கும்போது அதில் அடங்கிய பகுதியையும் நாம் நேசிக்கிறோம் என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். இந்த முழுமைதான் பக்தர்களின் இறைவன். மற்ற தேவதைகள், பரமண்டலத்தில் உள்ள பிதா, ஆண்டவன், படைப்புத் தெய்வம், வாதங்கள், கொள்கைகள், நூல்கள் முதலியவைகளால் பக்தனுக்கு எவ்விதப்

பயனும் இல்லை; அவற்றிற்குப் பொருளும் இல்லை. அவன் பராபக்தி எனப்படும் உயர்ந்த அன்பின் காரணமாக, மேற்கூறிய வற்றைக் கடந்து சென்றுவிட்டான். இதயம் தூய்மை அடைந்து துப்புரவாக்கப்பட்டு அன்பு என்ற தெய்வீக அமுதத்தால் நிறைக் கப்பட்டுவிட்ட பின் இறைவனைப் பற்றிய மற்ற எல்லா எண் ணங்களும் சுவையற்றுப் போகின்றன. எனவே அவை தகுதி யற்றவை, மதிப்பற்றவை என்று விலக்கிவிடுகிறான். பராபக்தி இத்தகைய வலிமை வாய்ந்தது! இத்தகைய பக்தன் இறைவனைக் காணக் கோயிலுக்கோ சர்ச்சுக்கோ போவதில்லை. அவனைப் பொறுத்தவரை இறைவன் இல்லாத இடமே இல்லை. அவன் கோயிலுக்கு உள்ளேயும் வெளியேயும் இறைவனைக் காண் கிறான்; மகானுடைய புனிதத்திலும், கொடியவனுடைய பாவத் திலும் இறைவனைக் காண்கிறான். ஏனெனில் இறைவன் வலிமை பொருந்தியவனாக, என்றும் அழியாத அன்பின் ஒளியாக என்றென்றைக்குமாக எப்போதும் மகிமையுடன் தன் இதயத்தில் பிரகாசித்துக் கொண்டிருப்பதை அவன் ஏற்கனவே உணர்ந்து விட்டான். ❦

## 9. பக்தியை மனித உறவுகளில் காணல்

உண்மை அன்பின் முழு நிறைவாக விளங்கும் இந்தப் பரா பக்தியின் இயல்பைச் சொற்களில் விளக்குவது இயலாததாகும். அதன் குறைவற்ற முழு நிறைவையும் அழகையும் அறிய, மனிதனின் எல்லை மீறிப் பறக்கும் கற்பனைகூடச் சக்தியற்றது. ஆனாலும் பக்திநெறியை அதன் தாழ்ந்த நிலையினாலும் சரி, உயர்ந்த நிலையினாலும் சரி, பின்பற்றி வருபவர்கள் பக்தியை அறிந்து கொள்ளவும், அதன் இலக்கணத்தை விளக்கிக்கூறவும், குறை வுடைய இந்த மனித மொழியைத்தான் எல்லா நாடுகளிலும் பயன்படுத்தி வந்துள்ளனர். இல்லை இல்லை, விளக்க முடியாத இந்த இறையன்பை விளக்க மனித அன்புதான் அதன் பல்வேறு தோற்றங்களில் ஏதோ ஓரளவிற்குப் பயன்படுத்தப்பட்டு வந் துள்ளது. தெய்வீக விஷயங்களை மனிதன் தன் மனித நிலைக்கு ஏற்பத்தான் சிந்திக்க முடியும். தனிப் பரம்பொருளை விளக்க வேண்டுமானால் வரையறைக்கு உட்பட்ட நமது மொழியில் புகுத்தித்தான் அவரை விளக்க முடியும். எல்லையற்றதை எல்லைக்கு உட்பட்ட மொழியில் எழுதியதுதான் இந்தப் பிரபஞ்சம். எனவேதான் பக்தர்கள் இறைவனையும் அவனது வழிபாட்டையும் விளக்குவதற்கு மனித அன்பைக் குறிப்பிடு கின்ற சொற்களையே பயன்படுத்தியுள்ளனர்.

பராபக்தியைப்பற்றி எழுதியுள்ள ஒருசில மாபெரும் ஆச்சாரியர்கள் இந்தத் தெய்வீக அன்பைப் பல்வேறு வழிகளில் அறியவும் அனுபவிக்கவும் பெரிதும் முயன்றுள்ளனர். இந்த அன்பு அதன் கீழ்நிலையில் உணரப்படும்போது சாந்தம் என்று அழைக்கப்படுகிறது. பக்தனின் உள்ளத்தில் அன்பெனும் தீ மூண்டெழாதபோது, அன்பெனும் பித்து அவன் அறிவை ஆட்டிப் படைக்காதபோது, மற்ற சாதாரண அன்பைப்போல் அவனது அன்பும் அமைதியாகச் செல்லும்போது, உருவங்கள், சடங்குகள், புறச்சின்னங்கள் இவற்றைக் கொண்டு செய்கின்ற வழிபாட்டைவிடச் சற்றே உயர்ந்து விளங்கும்போது, பித்தேறிய வனைப் போன்ற தீவிரமான அன்பின் அறிகுறிகள் எதுவும்

இல்லாமல் சரளமாகச் செல்லும்போது அது சாந்த பக்தி எனப்படுகிறது. ஒரு சிலர் ஆடி அசைந்து மிக மெதுவாக முன்னேறுவதையும், வேறு சிலர் சூறாவளிபோல் முன்னே செல்வதையும் காண்கிறோம். சாந்த பக்தன் நிதானமும் அமைதியும் மென்மையும் கொண்டவனாகத் திகழ்கிறான்.

அடுத்து வருவது, இதைவிடச் சற்று உயர்ந்ததாகிய தாஸ்ய பக்தி—தொண்டனாக இருத்தல். இறைவனுக்கு நான் தொண்டன் என்று பக்தன் கருதுகின்ற நிலை இது. உண்மையான ஊழியன் தன் எஜமானனிடம் கொள்கின்ற பற்று அவனது லட்சியமாகிறது.

அடுத்து வருவது ஸக்ய பக்தி, நட்புநிலை—'நீ எங்கள் அன்பிற்குகந்த நண்பன்'; தான் செய்த குற்றங்களுக்காகத் தன்னைக் கடிந்துகொள்ளாமல், தனக்குத் தேவைப்படுகின்ற உதவிகளை எப்போதும் செய்துவருகின்ற உண்மை நண்பனிடம் ஒருவன் தன் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறான். அது போன்றது இந்த நிலை. உண்மை நண்பர்களுக்கு இடையில் சமத்துவம் நிலவுவதுபோல், இங்கே இறைவனுக்கும் பக்தனுக்கும் இடையே உள்ளும் புறமும் ஒத்த அன்பு நிலவுகிறது. இங்கே இறைவன் நமக்கு உற்ற நண்பன் ஆகிறான், உயிர் நண்பன் ஆகிறான். இந்த நண்பனிடம் நமது முழு வரலாற்றையுமே தாராளமாகக் கூறலாம். நமது உள்ளத்தின் ஆழத்தில் புதையுண்டு கிடக்கின்ற எல்லா ரகசியங்களையும் தைரியமாக எடுத்துக் கூறலாம். அவரிடமிருந்து ஆறுதலும் பாதுகாப்பும் நிச்சயமாகக் கிடைக்கும்.

இங்கே பக்தன் பகவானைத் தனக்குச் சமமாகக் கொள்கிறான்; விளையாட்டுத் தோழனாகக் கருதுகிறான். இந்த உலகில் நாம் அனைவரும் விளையாடிக் கொண்டிருக்கிறோம். சின்னஞ்சிறு குழந்தைகள் தங்கள் விளையாட்டை விளையாடுவது போல், பெரிய பெரிய மன்னர்களும் சக்கரவர்த்திகளும் தங்கள் விளையாட்டை விளையாடுவதுபோல், அன்பே வடிவான இறைவனும் இந்தப் பிரபஞ்சத்துடன் விளையாடி வருகிறான்.

இறைவன் பூரணமானவன். அவனுக்கு எதுவும் தேவையில்லை. அவன் ஏன் படைக்க வேண்டும்? ஒரு தேவையை நிறைவேற்றிக் கொள்ளவே நாம் எல்லோரும் செயல்படுகிறோம். தேவை இருக்கிறது என்றாலே நம்மிடம் நிறைவு இல்லை என்பதுதான் பொருள். கடவுளோ முழு நிறைவானவர். அவருக்கு எந்தத் தேவையும் இல்லை. அப்படியிருக்க, தொடர்ந்து

செயல்படும் இந்தப் படைப்புத்தொழிலை அவர் ஏன் செய்ய வேண்டும்? அவரது நோக்கம்தான் என்ன? ஏதோ சில நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே இறைவன் உலகத்தைப் படைத்தான் என்ற நமது கற்பனைகள் எல்லாம் நல்ல கதைகளாக இருக்கலாம், அதற்குமேல் அவை எதுவுமில்லை. உண்மையில் எல்லாமே அவனது விளையாட்டு. பிரபஞ்சத்தில் அவனது விளையாட்டு தொடர்ந்தவண்ணமே உள்ளது.

இவையெல்லாமே அவனுக்கு ஒரு வேடிக்கை என்பதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? நீ ஏழையாக இருந்தால், அதை ஒரு வேடிக்கையாக ரசித்து மகிழ். பணக்காரனாக இருந்தால், பணக்காரனாக இருப்பதில் உள்ள வேடிக்கையைக் கண்டு களி. ஆபத்துக்கள் வந்தால் அவையும் நல்ல வேடிக்கை தான். இன்பம் வந்தால் இன்னும் சற்று நல்ல வேடிக்கை, உலகம் வெறும் ஒரு விளையாட்டு அரங்கம் மட்டுமே. விளையாடுவதற்கும் வேடிக்கையை ரசித்து மகிழ்வதற்கும்தான் நாம் இங்கு இருக்கிறோம். காலங்காலமாக இறைவன் நம்முடன் விளையாடி வருகிறான். நாமும் அவனுடன் விளையாடி வருகிறோம். அவன் நமது நிரந்தரமான விளையாட்டுத் தோழன். அவன்தான் எவ்வளவு அற்புதமாக விளையாடுகிறான்! ஒரு கல்பம் முடியும்போது விளையாட்டும் ஒரு முடிவுக்கு வருகிறது. சிறிது காலத்திற்கு அல்லது நெடுங்காலத்திற்கு ஓய்வு. மீண்டும் எல்லோரும் வெளிப்பட்டு விளையாடத் தொடங்குகிறோம்.

எல்லாம் வெறும் விளையாட்டே, இந்த விளையாட்டு தொடர்ந்து நடைபெற நாம் உதவிவருகிறோம் என்ற உண்மையை மறப்பதால்தான் துன்பங்களும் துயரங்களும் சூழ்கின்றன; இதயம் கனக்கிறது; உலகம் உன்னை மிகுந்த ஆற்றலோடு அழுத்தத் தொடங்குகிறது. ஆனால் மாறிமாறிச் செல்லும் நிகழ்ச்சிகளைத் தன் இயற்கையாகப் பெற்றுள்ள இந்த மூன்று நிமிடநேர வாழ்க்கையை உண்மை என்று எண்ணும் ஆழ்ந்த நம்பிக்கையை எப்போது நீ கைவிடுகிறாயோ, இந்த உலகம் ஒரு விளையாட்டு மேடை, அதில் நாம் விளையாட வந்திருக்கிறோம், அவனது விளையாட்டிற்குத் துணை செய்ய வந்திருக்கிறோம் என்ற எண்ணத்தை எப்போது அறிகிறாயோ, அந்தக் கணமே உனது துயரங்கள் மறைகின்றன.

அணுக்கள்தோறும் அவன் விளையாடிவருகிறான். உலகங்கள், சூரியசந்திரர்கள் இவற்றையெல்லாம் விளையாட்டாகவே அவன் படைக்கிறான். மனித உள்ளங்களோடு,

மிருகங்களோடு, தாவரங்களோடு அவன் விளையாடுகிறான். நாமெல்லாம் அவனுக்குச் சொக்கட்டான் காய்கள். காய்களைப் பலகைமீது வைக்கிறான். பகடைகளைக் குலுக்கிப் போடு கிறான். நம்மை இப்படியும் அப்படியுமாக நகர்த்துகிறான். அறிந்தோ அறியாமலோ அவன் விளையாடும் விளையாட்டில் நாம் அவனுக்கு உதவுகிறோம். ஆஹா! பேரானந்தம்! அவனுடைய விளையாட்டுத் தோழர்கள் அல்லவா நாம்!

அடுத்தது வாத்சல்ய பக்தி. இறைவனைத் தந்தையாகக் கருதாமல், குழந்தையாகக் கருதி வழிபடுவது. இது கேட்பதற்கு வினோதமாக இருக்கலாம். ஆனால் இறைவன் எல்லாம் வல்ல வன் என்ற கருத்தை நம்மிடமிருந்து முற்றிலுமாக நீக்குவதற் கான ஒரு வழி இது. ஆற்றல் என்ற எண்ணமே நம்மிடம் ஒரு வகை அச்சத்தை உண்டாக்குகிறது. அன்பில் பயம் இருக்கக் கூடாது. மரியாதை, பணிவு போன்ற கருத்துக்கள் பண்பாட்டை வளர்ப்பதற்கு இன்றியமையாதவை. பண்பாடு நம்மிடம் உருக் கொண்ட பிறகு, அமைதியும் சாந்தமும் மிக்க அன்பினை உள்ளம் சற்று சுவைத்து மகிழ்ந்த பிறகு, அந்த அன்பு தீவிர மாகிப் பித்தாகியதும், அந்தப் பித்தினைச் சிறிது அனுபவித்து முடித்த பக்தன், அறவழி பற்றியும் ஒழுக்கநெறி பற்றியும் பேச வேண்டிய தேவையில்லை. இறைவனை எல்லாம் வல்லவன், தனித் தலைவன், பெருமை மிக்கவன், உலக நாயகன், தேவாதி தேவர்களுக்கும் தேவன் என்றெல்லாம் அவன் கருதுவதில்லை.

நமக்கு இறைவனிடம் உண்டாகக்கூடிய ஒருவித பயத் திற்குக் காரணமான ஆற்றல் என்பதைக் கடவுள்கருத்திலிருந்து விலக்கவே பக்தன் இறைவனைத் தன் சொந்தக் குழந்தையாக வழிபடுகிறான். குழந்தையைக் கண்டு பெற்றோர் பயம் கொள் வதில்லை, மரியாதை காட்டுவதில்லை. குழந்தையிடமிருந்து அவர்கள் எதையும் கேட்பதில்லை. குழந்தை என்றுமே ஏற்கின்ற நிலைமையில்தான் இருக்கிறது. குழந்தையின்மீதுள்ள பாசத் திற்காகப் பெற்றோர் தங்கள் உடம்பை நூறு தடவை வேண்டு மானாலும் இழக்கத் தயாராக இருக்கின்றனர். தங்கள் ஒரு குழந்தைக்காகத் தங்கள் ஆயிரம் பிறவிகளைப் பலியிடவும் அவர்கள் தயங்குவதில்லை. இந்தக் காரணத்தினால்தான் கடவுளைக் குழந்தையாகக் கருதி அன்பு செய்கின்றனர்.

அவதாரக் கொள்கையில் நம்பிக்கை கொண்ட மதப் பிரிவுகளில்தான் வாத்சல்ய பக்திக் கருத்து இயல்பாகத் தோன்றி வளர்ந்து வந்துள்ளது. முகமதியர்களுக்கு, இறைவனைக்

குழந்தையாகப் பாவிப்பது இயலாத செயலாகும். இதைக் கேட்டாலே அவர்கள் நடுங்கிப் பின்வாங்குவார்கள். ஆனால் கிறிஸ்தவர்களும் இந்துக்களும் இந்தப் பாவனையை எளிதில் ஏற்றுக் கொள்ள முடியும். ஏனெனில் அவர்களுக்குக் குழந்தை ஏசுவும், பால கோபாலனும் உள்ளனர். இந்தியப் பெண்கள் பெரும்பாலும் தங்களைக் கண்ணனின் தாயாகவே கருதுகின்றனர். கிறிஸ்தவத் தாய்மார்களும் ஏசுவின் தாயாகத் தங்களை எண்ணிக் கொள்ளலாம். இது மேலை நாட்டிற்கு இன்று மிகவும் தேவையான, இறைவனின் தாய்மை நிலை பற்றிய அறிவை வழங்கும்.

இறைவனிடம் நாம் கொண்டுள்ள பயம், மரியாதை போன்ற மூட நம்பிக்கைகள் நமது உள்ளத்தின் அடிமட்டத்தில் ஆழ வேரூன்றியுள்ளன. மதிப்பு, மரியாதை, பயம், ஆற்றல், மகிமை என்ற இவையெல்லாம் பக்தி என்ற கருத்தில் மூழ்கிக் கரைவதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கும்.

பக்தியில் இன்னொரு உறவு முறை உள்ளது. அது மதுர பக்தி. அது மிகமிக இனிமையானது; எல்லா நிலைகளிலும் மிகமிக உயர்ந்தது; அன்பின் மிக உயர்ந்த வெளிப்பாடு; மனிதன் அறிந்தவற்றுள் சக்தி வாய்ந்தது; காதலை அடிப்படையாகக் கொண்டது. எந்த அன்பு மனிதனின் இயல்பையே ஆட்டிப் படைத்து, அவனது அணுக்கள்தோறும் பாய்ந்து பரவி அவனைப் பித்தனாக்கி, தன்னையே மறக்கச் செய்து, முற்றிலுமாக மாற்றி அவனைத் தேவனாகவோ அசுரனாகவோ செய்ய வல்லதோ, அது ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் தோன்றும் காதலைத் தவிர வேறேது? மதுர பக்தியில் இறைவனே நமக்குக் கணவன். நாமெல்லாம் பெண்கள். இவ்வுலகில் யாரும் ஆண் இல்லை. ஒரே ஆண்தான் உண்டு. அது இறைவன். நம் காதலுக்கு அவனே உகந்தவன். ஓர் ஆண் பெண்ணிடமோ, பெண் ஆணிடமோ கொள்ளும் காதலை இங்கே இறைவனிடம் செலுத்த வேண்டும்.

அன்பின் பல்வேறு வெளிப்பாடுகளை உலகில் நாம் காண்கிறோம். அத்தனை அன்புகளோடும் நாம் ஒருவகையில் விளையாடிவருகிறோம். அவை எல்லாம் இறைவனையே தமது முடிவாக, இலக்காகக் கொண்டுள்ளன. ஆனால் துரதிர்ஷ்டவசமாக மனிதன் இதை அறியவில்லை. இந்த மாபெரும் அன்புநதி இடைவிடாமல் ஓடிக் கலக்கின்ற கங்குகரையற்ற கடலை அவன் அறியவில்லை. எனவே முட்டாள்தனமாக அந்த அன்பைச் சிறுசிறு விளையாட்டுப் பொம்மைகளான மனிதர்களிடம்

செலுத்துகிறான். மனிதனுக்குக் குழந்தையிடம் இயல்பாகப் பிறக்கின்ற பேரன்பு உண்மையில் அந்த ஒரு பொம்மையான குழந்தைக்காக அல்ல. இந்த அன்பைக் கண்மூடித்தனமாகக் குழந்தையிடம் மட்டுமே செலுத்தினால், அதன் விளைவாக நீ அவதிப்படப் போவது நிச்சயம். ஆனால் இத்தகைய துன்பங்கள் உன்னை விழிப்புறச் செய்கிறது; உன்னிடம் உள்ள அன்பை மனிதனிடம் செலுத்தினால் அது உடனடியாகவோ, பின்னரோ வேதனையையும் துயரத்தையுமே தரும் என்பதை நீ அறிந்து கொள்கிறாய். எனவே அழிவற்றவனும், மாறுதலற்றவனும், ஏற்ற இறக்கமற்ற சச்சிதானந்தக் கடலாக உள்ளவனுமான தெய்வத்திடமே நாம் அன்பு செலுத்த வேண்டும். அன்பு தனக்குரிய இடத்தை அடைய வேண்டும்; எல்லையற்ற அன்புக்கடலாக விளங்குகின்ற அவனைச் சென்று சேர வேண்டும். எல்லா ஆறுகளும் கடலில் சென்று கலக்கின்றன. மலையிலிருந்து ஓடி வரும் சிறுதுளி நீர்கூட வாய்க்காலையோ ஆற்றையோ அடைகிறது. அந்த வாய்க்காலோ ஆறோ எவ்வளவுதான் பெரிதாக இருந்தாலும் சரி அந்த நீர்த்துளியின் பயணம் நிற்பதில்லை. அது எப்படியோ கடலைச் சென்று அடைந்துவிடுகிறது.

நம் ஆசைகள், உணர்ச்சிகள் எல்லாவற்றிற்கும் முடிவிடம் இறைவனே. உனக்குக் கோபம் வருமானால் இறைவனிடம் கோபித்துக் கொள். உன் காதலனாகிய இறைவனைக் கடிந்து கொள். உன் தோழனாகிய இறைவனைக் கடிந்துகொள். பயமின்றி இப்படி வேறு யாரை நீ கண்டிக்க முடியும்? மனிதன் உன் கோபத்தைப் பொறுத்துக்கொள்ள மாட்டான்; பதிலுக்குக் கோபிப்பான். என்னிடம் நீ கோபம் கொண்டால் நானும் உடனே என் கோபத்தைக் காட்டுவேன். இது நிச்சயம். உன் கோபத்தை என்னால் பொறுத்துக்கொள்ள முடியாது. 'நீ ஏன் இன்னும் என்னிடம் வராமல் இருக்கிறாய்? என்னை ஏன் இவ்வாறு தனியாகத் தவிக்கவிட்டாய்?' என்று இறைவனிடம் கேள். அவனிடம் அல்லாமல் வேறு எங்கு இன்பம் இருக்க முடியும்? வெறும் மண்ணாங்கட்டிகளில் என்ன இன்பத்தைக் காண முடியும்? பேரானந்த ரசக்கட்டி அல்லவா நாம் நாட வேண்டிய இன்பம்! அது இறைவனே.

நம்முடைய ஆசாபாசங்கள் எல்லாம், உணர்ச்சிகள் எல்லாம் அவனை நோக்கிச் செல்லட்டும். அவை அவனுக்காகவே அமைந்தவை. குறி தவறி அவை கீழே செல்லுமானால் தீயவை ஆகிவிடும். இலக்காகிய இறைவனை நேராக அடையுமானால்,

மிகக் கீழான உணர்ச்சிகள்கூட உருமாறி விடுகின்றன. உடலும் உள்ளமும் தங்கள் சக்திகளை எப்படி வெளிப்படுத்தினாலும் அவற்றின் முடிந்த முடிவாக இருப்பவன் இறைவனே (ஏகாயனன்).

மனித உள்ளத்தில் எழும் அன்பனைத்தும் ஆசையனைத்தும் இறைவனிடமே செல்ல வேண்டும். அவனே நமது அன்பிற்கும் ஆசைக்கும் உரியவன். அவனைத் தவிர வேறு யாரை நம் உள்ளம் காதலிக்க முடியும்? ஒப்பற்ற அழகுடையவன் அவன். மிக மேலானவன் அவன். அவனே அழகு. அவனே மேன்மை. இந்தப் பிரபஞ்சத்தில் அவனைவிட அழகானவர் வேறு யார்? நமக்குக் கணவனாக இருக்க அவனைவிட இந்தப் பிரபஞ்சத்தில் தகுதி வாய்ந்தவர் வேறு யார்? நாம் அன்பு செய்ய இந்தப் பிரபஞ்சத்தில் அவனைவிடத் தகுதியுடையவர் யார்? எனவே அவனே கணவனாக இருக்கட்டும்; அவனே காதலனாக இருக்கட்டும்!

இந்தத் தெய்வீகக் காதலைப் போற்றிப் பாடும் பக்தர்கள், மனிதக் காதலின் பல்வேறு நிலைகளையும் விவரிக்கின்ற மொழி போதுமென்று முடிவு செய்து, அவ்வாறே பாடியுள்ளனர். மூடர்கள் இதை அறிவதில்லை; அறியவும் மாட்டார்கள். அவர்கள் இதை ஊனக்கண்களால் மட்டுமே காண்கிறார்கள். இந்தப் பராபக்தியின் தீவிர வேதனைகள் அவர்களுக்குத் தெரியாது. அவர்களுக்கு எப்படித் தெரியும்? 'ஓ! என் அன்பே! உன் இதழ்களின் அந்த ஆசை முத்தம்! உன் முத்தமொன்று கிடைக்கப் பெற்றவனுக்கு உன்மீது வேட்கை என்றென்றும் அதிகரித்துக் கொழுந்துவிட்டு எரிகிறது. அவனது துன்பங்கள் எல்லாம் ஒழிகின்றன. உன்னைத் தவிர பிற அனைத்தையுமே அவன் மறக்கிறான்.'[1] யாருடைய இதழின் ஸ்பரிசம் பக்தனை வெறி கொள்ளச் செய்கிறதோ, மனிதனைத் தெய்வமாக்குகிறதோ, அந்த அன்பரின் அன்பு முத்தத்தை ஏக்கத்துடன் நாடிச் செல். அந்த அன்பு முத்தத்தைப் பெற்றவனுக்கு இயற்கை முழுவதுமே மாறுகிறது; உலகங்கள் மறைகின்றன; சூரிய சந்திரர்கள் மறைகின்றனர்; பிரபஞ்சமே மெதுவாகக் கரைந்து எல்லையற்றதான அன்புக்கடலில் கலந்துவிடுகிறது. இதுவே பராபக்தியின், அன்புவெறியின் நிறைநிலை.

---

1. ஸுரதவர்த்தனம் சோகநாசனம் ஸ்வரிதவேணுனா ஸுஷ்டு சும்பிதம்।
இதரராக விஸ்மாரணம் ந்ருணாம் விதர வீர! நஸ்தேதராம்ருதம்॥
—ஸ்ரீமத் பாகவதம், 10. 31. 14.

உண்மையான தெய்வீகக் காதல் கொண்ட பக்தன் இத்துடன் நின்றுவிடுகிறானா? இல்லை. கணவன்-மனைவிக்கு இடையிலுள்ள அன்புகூட அவனைப் பித்தேற்றப் போதுமானதாக இல்லை. எனவே அவன் கள்ளக் காதலை நாடுகிறான். காரணம், கள்ளக் காதலுக்கு ஆற்றல் மிக அதிகம். அது தவறானது என்பதைக்கூட அவன் பார்ப்பதில்லை. இந்தக் கள்ளக் காதலின் இயல்பு என்னவென்றால், தடைகள் அதிகரிக்க அதிகரிக்க அது வீறுகொண்டு எழுகிறது. கணவன்-மனைவியரிடையே நிலவுகின்ற அன்பில் தடைகள் இல்லை. அது மென்மையாகச் செல்லும் அன்பு. எனவே இந்த பக்தன் காதலனிடம் மட்டற்ற அன்புகொண்ட ஓர் இளம் பெண்ணாகத் தன்னைக் கருதிக் கொள்கிறான். அந்தப் பெண்ணின் தாய், தந்தை, கணவன் எல்லோருமே இந்தக் காதலை எதிர்க்கின்றனர். அவர்களின் எதிர்ப்பு வலுக்கவலுக்க, கள்ளக் காதலனிடம் இந்தப் பெண்ணின் காதலும் தீவிரம் அடைகிறது. கண்ணனிடம் காதல்கொண்ட கோபியர் பித்தேறி பிருந்தாவனத் தோட்டங்களில் எப்படி அவனைத் தேடித் திரிந்தனர்! பெரும் பேறு பெற்ற அந்தக் கோபியர்கள் அவனது கானக்குரல் கேட்டு, அவனை அடைய எப்படி ஓடினர்! உலகம், உலகக் கடமைகள், உறவுகள், அவற்றால் வரும் இன்பதுன்பங்கள் எல்லாவற்றையும் மறந்து, துறந்து கண்ணனாகிய காதலனை அடைய எப்படித் துடித்தனர்! இவற்றையும் மனித மொழியில் விளக்க ஒருபோதும் இயலாது.

மனிதா! ஓ மனிதா, நீ பக்தியைப்பற்றி வானளாவப் பேசுகிறாய். அதேவேளையில் உலகின் வீண் பொருட்களில் கருத்தைச் செலுத்தவும் செய்கிறாய். நீ நேர்மையானவனா? 'எங்கு ராமனோ அங்குக் காமன் இல்லை, எங்குக் காமனோ அங்கு ராமன் இல்லை. இருவரும் சேர்வதில்லை. இருளும் ஒளியும் போல் இருவரும் இணைந்து இருக்க மாட்டார்கள்.'[1] ❦

---

1. ஜஹாம் ராம் தஹாம் காம் நஹீம் ஜஹாம் காம் தஹாம் நஹிம் ராம்।
துஹூ மிலத் நஹீம் ரப்ரஜனீ நஹீம் மிலத் ஏக் டாம்॥
—துளஸிதாசர்

# 10. நிறைவுரை

பக்தியின் இந்த உயர்ந்த லட்சியத்தை அடைந்த பிறகு தத்துவ விளக்கங்கள் வீசியெறியப்படுகின்றன. அவற்றை யார் பொருட்படுத்துவது? சுதந்திரம், முக்தி, நிர்வாணம் எல்லாம் உதறப்பட்டு விடுகின்றன. தெய்வீக இன்பத்தில் திளைத்திருக்கும்போது யார்தான் முக்தியை விரும்புவார்? 'ஓ என் பிரபோ, எனக்குச் செல்வம் வேண்டாம், நண்பர்கள் வேண்டாம். அழகு, கல்வி, முக்தி எதுவும் வேண்டாம். மீண்டும்மீண்டும் பிறக்கவும் நான் தயார். ஆனால் நீ எனது அன்புத் தெய்வமாக இருக்க வேண்டும். ஒவ்வொரு பிறவியிலும் நீயே என் அன்புத் தெய்வமாக விளங்க வேண்டும்.'[1] 'சர்க்கரையாக இருக்க யார் விரும்புவார்? நான் சர்க்கரையைச் சுவைக்கவே விரும்புகிறேன்' என்கிறான் பக்தன். முக்தி பெற்று இறைவனுடன் கலக்கவே அவன் விரும்புவான். 'நானே அவன் என்பது எனக்குத் தெரிந்திருக்கலாம். ஆனாலும் என்னை அவனிடமிருந்து விலக்கிக்கொண்டு தனியாக இருப்பேன். அப்போதுதான் என் அன்புக் கடவுளை நான் அனுபவிக்க முடியும்.' இதுதான் பக்தனின் விண்ணப்பம். அன்பிற்காக அன்பு என்பதுதான் பக்தனின் உயர்பேரின்பம். தன் அன்புக் காதலனை அனுபவிப்பதற்காக ஆயிரமாயிரம் முறைகள் கை கால்கள் கட்டுப்பட்டுக் கிடக்க யார்தான் தயாராக இருக்க மாட்டார்கள்? அன்பைத் தவிர வேறு எதையும் எந்த பக்தனும் பொருட்படுத்துவதில்லை; இறைவன் தன்னிடம் அன்பு செலுத்துவது, தான் இறைவனை நேசிப்பது, அவ்வளவுதான். அதுபோதும் அவனுக்கு. உலகியல் கலவாத இந்த அன்பு, ஆற்றின்மீது புரண்டோடும் அலைகள் போன்றது. அது ஆற்றின் வேகத்தை எதிர்த்து மேல்நோக்கிச் செல்கிறது. உலகம் அவனைப் பித்தன் என்கிறது. உலகம் பித்தன் என்று அழைத்த ஒருவரை எனக்குத் தெரியும். அதற்கு அவரது பதில் இதுதான்; 'நண்பர்களே, உலகமே ஒரு பைத்தியக்கார விடுதி. சிலர் உலக இன்பத்திற்காகப் பித்தர்களாக உள்ளனர். சிலர் பெயருக்காக,

---

1. ந தனம் ந ஜனம் ந ஸுந்தரீம் கவிதாம் வா ஜகதீச காமயே ।
மம ஜன்மனி ஜன்மனீச்வரே பவதாத்பக்திரஹைதுகீ த்வயீ ॥
—சைதன்யர், சிக்ஷாஷ்டகம்.

சிலர் புகழுக்காக, சிலர் பணத்திற்காக, சிலர் முக்தியடைவதற்காக, இன்னும் சிலர் சொர்க்கம் செல்ல. இந்தப் பித்தர்கள் கூட்டத்தில் நானும் ஒரு பித்தன். நான் இறைவனுக்காகப் பித்தனாக ஆனேன். நீ பணத்திற்காகப் பித்துப் பிடித்து அலைகிறாய். நான் கடவுளுக்காகப் பித்தன் ஆனேன். நீயும் பைத்தியம். நானும் பைத்தியம். என் பைத்தியம்தான் மிகச் சிறந்தது என்றே நான் நினைக்கிறேன்'.

உண்மையான பக்தனின் அன்பு, கொழுந்துவிட்டு எரியும் இந்த அன்புப் பித்து—இதன் முன்னிலையில் மற்ற எல்லாம் அப்படியே மறைந்துவிடுகின்றன. பிரபஞ்சமே அன்புமயம், அன்புமயமானது மட்டுமே என்றுதான் பக்தன் காண்கிறான். அவனுக்கு அப்படித்தான் தெரிகிறது. இத்தகைய பராபக்தியைப் பெற்ற பக்தன் அழிவிலா வாழ்வு பெறுகிறான்; அழிவிலா ஆனந்தம் அடைகிறான். இந்தத் தெய்வீக அன்புப்பித்துதான், நம்மிடமுள்ள உலகியல் நோயிலிருந்து நம்மைக் குணப்படுத்த முடியும். நமது பற்றும் சுயநலமும் மறைந்துவிடும். நாம் இறைவனை அணுகி அவனுக்கு வெகு அருகில் வந்துவிடுவோம். முன்பு தன்னிடம் குடிகொண்டிருந்த வீண் ஆசைகளை எல்லாம் இப்போது பக்தன் எறிந்துவிட்டான்.

பக்தியோகத்தில் நாம் துவைதிகளாகத் தொடங்குகிறோம். இங்கே இறைவன் நமக்கு வேறுபட்டவன்; நாமும் அவனிடமிருந்து வேறுபட்டவர்கள். இடையில் பக்தி வந்துசேர்கிறது. அதன் பயனாக மனிதன் இறைவனை நாடுகிறான்; இறைவனும் மனிதனை நோக்கி அருகில் வருகிறான். தந்தை, தாய், மகன், நண்பன், எஜமான், காதலன் என்று வாழ்க்கையின் பல்வேறு உறவுகளைத் தன் அன்புக் கடவுளின்மீது பொருத்துகிறான். அந்த பக்தனுக்கு இறைவன் இதில் எல்லாம் இருக்கிறான். எப்போது பக்தன், தான் வழிபடும் கடவுளுடன் ஒன்றுபடுகிறானோ, அப்போது அவன் தனது முன்னேற்றத்தின் கடைசிப்படியை அடைந்துவிடுகிறான். நாமெல்லோரும் நம்மை நேசிப்பதில்தான் தொடங்குகிறோம். இப்படி முறை தவறி நம்மை நேசிப்பது, அன்பைச் சுயநலம் உள்ளதாக்குகிறது. இறுதியில் பிரகாசமான ஒளி புலப்படுகிறது. அந்தப் பேரொளியில் இந்த ஆன்மா பரமாத்மாவுடன் கலக்கிறது. அந்த அன்புப் பேரொளியின் முன் மனிதன் மாறிவிடுகிறான். பக்தி, பக்தன் எல்லாம் ஒன்றே என்ற பரவசமளிக்கும் சிறந்த பேருண்மையை இறுதியில் உணர்கிறான். ❦

# 2. சொற்பொழிவு

## பக்தி நெறி

9 பிப்ரவரி 1896

ஏதோ ஒருசில மதங்கள் தவிர, அனேகமாக எல்லா மதங்களும் உருவக் கடவுள்பற்றிய கருத்தைக் கொண்டுள்ளன. புத்த, சமண மதங்கள் நீங்கலாக, ஏறக்குறைய உலகிலுள்ள பிற மதங்கள் எல்லாமே உருவக் கடவுள் கருத்தைப் பெற்றவையாகவே உள்ளன. உருவக் கடவுள் பற்றிய கருத்துடன் பக்தி மற்றும் வழிபாடு பற்றிய கருத்துக்கள் இயல்பாகவே எழுகின்றன. பௌத்தரும் சமணரும் உருவக் கடவுளை வழிபடவில்லை என்றாலும், பிறர் உருவக் கடவுளை வணங்குவது போன்று, தங்கள் மதங்களை நிறுவியவர்களை அதேமுறையில் வழிபடவே செய்கிறார்கள்.

நாம் பக்தி செய்யவும் வழிபடவும் ஒருவர் இருக்கிறார், அவரும் மனிதனை நேசிக்கிறார் என்ற கருத்து உலகிற்கே பொதுவானது. அன்பு மற்றும் பக்திபற்றிய இந்தக் கருத்துக்கள் பல்வேறு மதங்களிலும் வெவ்வேறு நிலைகளில், வெவ்வேறு அளவுகளில் வெளிப்படுகின்றன. இதில் மிகத் தாழ்ந்த நிலை புற வழிபாடு. தனிக் கருத்துநிலையில் (Abstract Idea) மனிதனால் எதையும் புரிந்துகொள்ள முடியாதபோது, அவன் அவற்றையெல்லாம் தூல நிலைக்குக் கொண்டு வருகிறான். இவ்வாறுதான் உருவங்களும், அவற்றோடு பல்வேறு சின்னங்களும் தோன்றுகின்றன. நுண்ணிய கருத்துக்களை எண்ணங்கள் வாயிலாகவோ, சின்னங்கள் வாயிலாகவோ புரிந்துகொள்வதற்கு மனிதன் முயல்வதை உலக வரலாறு முழுவதிலும் காண்கிறோம். மதத்தின் புறச் சாதனங்களான மணி, இசை, வழிபாடு, சாஸ்திரங்கள், சிலைகள் என்று எல்லாமே அதன்கீழ் வருகின்றன. புலன்களுக்கு இதமாக இருக்கின்ற எதுவும், உருவமற்றதற்கு உருவமளிக்க மனிதனுக்குத் துணை செய்கின்ற எதுவும், ஏற்றுக்கொள்ளப்பட்டு வழிபாட்டிற்கு உரியதாகக் கொள்ளப்படுகிறது.

ஒவ்வொரு மதத்திலும் அவ்வப்போது சீர்திருத்தவாதிகள் வருகின்றனர். சின்னங்களையும் சடங்குகளையும் எதிர்த்துக் குரல் கொடுக்கின்றனர். ஆனால் அவர்களின் எதிர்ப்பு

வீணாயிற்று. இந்த நிலையில் இருக்கும்வரை பெரும் பாலோருக்கு, பற்றி நிற்பதற்கென ஏதேனும் ஓர் உருவம், தங்கள் கருத்தைச் சமர்ப்பிப்பதற்கு ஏதாவது ஒரு பொருள், தங்கள் எண்ணங்கள் அனைத்திற்கும் மையமாக அமைகின்ற ஏதோ ஒன்று தேவைப்படுகிறது. எல்லா சடங்குகளையும் ஒழிக்க வேண்டும் என்ற ஒரே முடிவுடன் முகமதியரும் பிராட்டஸ்டன்ட்களும் பெருமுயற்சிகள் செய்தனர். ஆனால் அவர்களிடமும் சடங்குகள் புகுந்திருப்பதைக் காண்கிறோம். அவற்றை விலக்க முடியாது. எவ்வளவுதான் போராட்டம் நடத்தினாலும் ஒருவேளை, மக்கள் ஒரு சின்னத்தை மாற்றிவிட்டு வேறொன்றைப் பற்றக்கூடும், அவ்வளவுதான்.

முகமதியன் அல்லாதவன் பயன்படுத்துகின்ற எந்தவொரு சடங்கும், வடிவமும், சிலையும், வழிபாடும் பாவம் என்று நினைக்கின்ற முகமதியன் தன் சொந்தக் கோயிலாகிய காபா வுக்கு வரும்போது அவ்வாறு நினைப்பதில்லை. ஒவ்வொரு முகமதியனும் பிரார்த்தனை செய்யும்போது, தான் காபாவுக்கு[1] முன் நிற்பதாக நினைக்க வேண்டும். அங்கே செல்லும்போது கோயிலின் சுவரில் உள்ள கருங்கல்லை அவன் முத்தமிட வேண்டும். லட்சக்கணக்கான யாத்திரிகர்களால் அந்தக் கல்லின் மீது பதிக்கப்பட்டுள்ள முத்தங்கள் அனைத்தும் இறுதித் தீர்ப்பு நாளன்று, நம்பிக்கை உடையவர்களின் நன்மைக்குச் சாட்சியாக நிற்கும். அங்கு ஜிம்ஜிம் என்னும் கிணறு உள்ளது. அந்தக் கிணற்றிலிருந்து சிறிது நீரை இறைப்பவர் பாவங்களிலிருந்து மன்னிக்கப்படுவார் என்றும், உயிர்த்தெழும் மீட்சித்திரு நாளுக்குப் பின்னர் அவர் புதிய உடல் பெற்று நிரந்தரமாக வாழ்வார் என்றும் முகமதியர்கள் நம்புகின்றனர்.

பிற மதங்களில் இந்தச் சின்னங்கள் கட்டிட வடிவில் இருப்பதைக் காண்கிறோம். சர்ச்சுகள் மற்ற இடங்களைவிட மிகவும் புனிதமானவை என்று பிராட்டஸ்டன்ட் பிரிவினர் நம்புகின்றனர். அவர்களுக்கு சர்ச் ஒரு சின்னமாகவே விளங்கு கிறது. அடுத்து பைபிள் உள்ளது. வேறெந்த சின்னங்களையும் விட இந்த நூல் மிகமிகப் புனிதமானது என்பது அவர்கள் கருத்து. கத்தோலிக்கர்கள் புனிதர்களின் திருவுருவங்களுக்குக் கொடுக்கின்ற இடத்தை பிராட்டஸ்டன்ட் பிரிவினர் சிலுவைக்குக் கொடுக்கிறார்கள்.

---

1. முகமதியர்களின் புனிதத் தலமான மெக்காவிலுள்ள பள்ளிவாசல்.

சின்னங்களைப் பயன்படுத்துவதை எதிர்த்துப் பேசுவது பயனற்றது. எதற்காக எதிர்த்துப் பிரச்சாரம் செய்ய வேண்டும்? மனிதன் சின்னங்களைப் பயன்படுத்தக் கூடாது என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. ஒவ்வொரு சின்னமும் தனக்குப் பின்னால் உள்ள ஒரு பொருளைச் சுட்டி நிற்கிறது. பிரபஞ்சமே ஒரு சின்னம். அதற்குள்ளும் அதைக் கடந்தும் நிற்கின்ற ஒன்றைப்பற்றி அறிய அதனை ஊடுருவியும் அதன் வாயிலாகவும் நாம் முயன்று கொண்டிருக்கிறோம். ஒரு சாதாரண மனிதனின் மன இயல்பிற்கு இந்தச் சின்னங்கள் தேவை. நாம் அவற்றை ஏற்றுக்கொண்டேயாக வேண்டும். அதேவேளையில் அந்தச் சின்னங்களுக்குப் பின்னால், ஜடப் பொருளுக்குப் பின்னால் நிற்கின்ற ஆன்மப் பொருளை அடையப் போராடுகிறோம் என்பதும் உண்மை. ஆன்மாவே லட்சியம், ஜடப்பொருள் லட்சியம் அல்ல. உருவங்கள், சிலைகள், மணிகள், மெழுகுவர்த்திகள், சாஸ்திரங்கள், கோயில்கள், புனிதச் சின்னங்கள் எல்லாமே நல்லவை; வளரும் ஆன்மீகச் செடிக்கு உதவுபவை. ஆனால் அந்த அளவோடு சரி. அதற்கு மேல் போகக் கூடாது. பெரும்பாலான இடங்களில் அந்தச் செடி வளராமல் போய்விட்டதையே காண்கிறோம். ஒரு கொள்கையைச் சேர்ந்தவனாகப் பிறப்பது நல்லதுதான்; ஆனால் வளர்ச்சியடையாமல் அதிலேயே இறப்பது நல்லதல்ல. ஆன்மீகம் என்னும் இளஞ்செடிக்குத் துணை செய்கின்ற சில குறிப்பிட்ட வழிபாடுகளைக் கொண்ட பிரிவுகளின் வரையறைக்குள் பிறப்பது மிக நல்லது. ஆயினும் சின்னங்கள் என்கின்ற இந்த வரையறைக்குள்ளேயே ஒருவன் இறக்க நேருமானால் அது, அவன் வளரவில்லை, அவனது ஆன்மா மலரவில்லை என்பதையே உறுதியாகக் காட்டுகிறது. ஆதலால் சின்னங்களும் சடங்குகளும் உருவங்களும் எப்போதும் இருக்க வேண்டும் என்று யாராவது கூறினால், அது தவறு. சின்னங்களும் சடங்குகளும் கீழ்நிலையில் ஆன்ம வளர்ச்சிக்கு உதவுபவை என்று அவர் சொன்னால் அது சரி.

ஆனால் ஆன்ம வளர்ச்சியை அறிவு சம்பந்தமான ஏதோ ஒன்றாகப் பொருள்படுத்தும் குற்றத்திற்கு நீங்கள் ஆளாகக் கூடாது. ஒரு மனிதன் பேரறிஞனாக இருக்கலாம். ஆயினும் ஆன்மீகத்தைப் பொறுத்தவரை அவன் ஒரு குழந்தையாக இருக்கலாம்; அதைவிடக்கீழ் நிலையிலும் இருக்கலாம். இதை நீங்கள் இந்தக் கணமே சோதித்துப் பார்க்க முடியும். இறைவன்

எங்கும் நிறைந்தவன் என்பதை அறிவுபூர்வமாக நம்ப வேண்டும் என்று கூறுகின்றனர். ஆனால் 'எங்கும் நிறைகின்ற தன்மை' என்றால் என்ன என்பது எத்தனை பேருக்குத் தெரியும்? அரும் பாடுபட்டால் ஒருவேளை வானத்தையோ, பரந்த பசும்புல் தரையையோ நினைப்பீர்கள். நீங்கள் கடலையோ பாலைவனத்தையோ பார்த்திருந்தால் அதை நினைப்பீர்கள். இவை எல்லாம் வெறும் தூலமான உருவங்கள் மட்டுமே. நுண்ணியதை (Abstract) நுண்ணியதாகவும், லட்சியத்தை லட்சியமாகவும் உங்களால் கருத இயலாதவரை, வடிவங்களையும் இந்தத் தூலமான உருவங்களையும் துணையாகப் பயன்படுத்தியே ஆக வேண்டும். அவை உங்கள் மனத்தின் உள்ளே இருந்தாலும் சரி, வெளியே இருந்தாலும் சரி—அது பெரிய விஷயம் அல்ல.

நாம் எல்லோரும் பிறப்பிலிருந்தே உருவத்தை வழிபடுகிறோம். உருவ வழிபாடு நல்லது. அது மனிதனின் இயல்பிலேயே ஊறியுள்ளது. அதற்கு அப்பால் செல்ல யாரால் முடியும்? நிறை மனிதருக்கே, தெய்வ மனிதருக்கே அது இயலும். மற்றவர் அனைவரும் உருவத்தை வழிபடுபவர்களே. பிரபஞ்சமும் அதன் பல்வேறு வடிவங்களும் உருவங்களும் நம் கண்முன் தெரியும்வரை நாம் அனைவரும் உருவ வழிபாட்டினரே. மூளையில் தூல உருவங்கள் வருவதில்லை. அங்கு எழுவதெல்லாம் சிறுசிறு உணர்ச்சிகள் மட்டுமே. அப்படியிருந்தாலும் இந்தப் பிரபஞ்சத்தை, உருவம், வடிவம், நிறம் கலந்த இந்தப் பிரபஞ்சத்தை இந்த மாபெரும் சின்னத்தை நாம் காண்கிறோம். இந்தப் பிரபஞ்சமே நாம் வழிபட்டு வருகின்ற ஒரு மாபெரும் உருவம் அல்லவா? தன்னை உடலென்று கருதுபவன் பிறப்பிலிருந்தே உருவ வழிபாடு செய்பவன்தான். நாம் ஆன்மா; உருவமோ வடிவமோ அற்ற ஆன்மா; எல்லையற்ற ஆன்மா; ஜடப்பொருள் அல்ல. ஆதலால் நுண்ணியதை மனத்தால் பற்ற இயலாதவன், ஜடப்பொருளிலும் அதன் வழியாகவும் அல்லாமல் தன்னை எண்ணிப் பார்க்க முடியாதவன் உருவ வழிபாடு செய்பவனே. இருந்தாலும் உருவ வழிபாட்டினர் என்று கூறி மக்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொள்வதை என்ன என்பது! வேறு வகையாகச் சொன்னால் ஒவ்வொருவரும் தான் வழிபடும் உருவமே சரியானது என்றும், பிறர் வழிபடுகின்ற உருவம் தவறானது என்றும் கூறுகின்றனர்.

எனவே சிறுபிள்ளைத்தனமான கருத்துக்களை விட்டுவிட வேண்டும். மதம் என்பது பொருளற்ற சொற்களின் வெறும்

தொகுதி; மதம் என்பது வெறும் கொள்கைகளின் அமைப்பு; மதம் என்பது ஏதோ சிறிது அறிவால் ஒன்றை ஒப்புக்கொள்வதோ மறுப்பதோ மட்டுமே; மதம் என்பது தங்கள் புரோகிதர்கள் கூறுகின்ற சில வார்த்தைகளில் நம்பிக்கை வைப்பதே; மதம் என்பது தங்கள் முன்னோர் நம்பிய ஏதோ ஒன்று; தேசியமானவை என்னும் காரணத்தால் தாம் பற்றி நிற்கும் ஒரு வகையான மூடக் கொள்கைகளும் கருத்துக்களுமே மதம் என்றெல்லாம் உள்ள பிதற்றலுக்கு அப்பால் நாம் செல்ல வேண்டும். இவை அனைத்தையும் கடந்து, மெல்லமெல்ல ஒளியை நோக்கிச் செல்கின்ற மாபெரும் ஓர் உயிராக மனித இனத்தைக் காண வேண்டும்; கடவுள் என்னும் வியப்புக்குரிய மெய்ப்பொருளை நாடி மெல்ல முதிர்ந்துவரும் ஓர் ஆச்சரியமான செடி என்று மனித இனத்தைக் கொள்ள வேண்டும். அதற்கான ஆரம்ப முயற்சிகளும் முன்னேற்றங்களும் எப்போதும் ஜடப்பொருள் வாயிலாக, சடங்குகள் வாயிலாகத்தான் நடைபெறும். அதை நாம் மாற்ற முடியாது.

இந்தச் சடங்குகளுக்கு மையமாக அமைகின்ற, அனைத்திலும் தலைசிறந்து நிற்கின்ற ஒரு கருத்து நாம வழிபாடு. கிறிஸ்தவ மதத்தின் பழைய நிலைகளிலும், பிற உலக மதங்களிலும் நாம வழிபாடு என்னும் இந்தக் கருத்து நிலவுவதை நீங்கள் ஒருவேளை கவனித்திருக்கலாம். நாமம் மிகப் புனிதமானது. ஹீப்ருக்கள் நாமத்தை இணையற்ற புனிதம் வாய்ந்ததாகக் கருதினார்கள். சாதாரண மனிதர்களால் சாதாரண நேரங்களில் சொல்லப்படக் கூடாத அளவுக்கு அது புனிதம் வாய்ந்தது; அதன் புனிதத்திற்கு ஒப்புவமை கிடையாது; அனைத்திலும் புனிதமானது அது. எல்லா நாமங்களிலும் மிகப் புனிதமானது அது, அந்த நாமமே இறைவன் என்று கருதப்பட்டது. இது முற்றிலும் உண்மை. இந்தப் பிரபஞ்சம் நாமமும் உருவமும் அன்றி வேறு என்ன?

சொற்களின்றி நினைக்க உங்களுக்கு இயலுமா? சொல்லும் எண்ணமும் பிரிக்க முடியாதவை. முடியுமானால் உங்களுள் யாராவது முயன்று பாருங்கள். நீங்கள் நினைக்கும்போது சொல்-வடிவங்கள் வாயிலாகவே நினைக்கிறீர்கள். சொல் அகப்பகுதி, எண்ணம் புறப்பகுதி—இரண்டும் சேர்ந்தே இருக்கும். அவற்றைப் பிரிக்க முடியாது. ஒன்று மற்றொன்றைக் கொண்டுவருகிறது. எண்ணம் சொல்லைக் கொண்டுவர, சொல் எண்ணத்தைக் கொண்டுவருகிறது. இவ்வாறு பிரபஞ்சம்

முழுவதும் புறச் சின்னமாக உள்ளது. அதன் பின்னால் இறைவனது திருநாமம் திகழ்கிறது.

ஒவ்வொரு குறிப்பிட்ட உடலும் ஒரு வடிவம். அந்தக் குறிப்பிட்ட உடலுக்குப்பின் அதன் நாமம் அல்லது பெயர் உள்ளது. நாம் நமது நண்பரை நினைக்கும்போது முதலில் அவரது உடலைப்பற்றிய எண்ணம்தான் நம் உள்ளத்தில் எழு கிறது; அதனுடன் கூடவே அவரது பெயரைப் பற்றிய கருத்து எழுகின்றது. இது மனிதனது அமைப்பிலேயே உள்ளது. அதா வது, மனஇயலின்படி மனிதனின் சித்தத்தில் வடிவமற்ற கருத்து என்றோ கருத்து இல்லாத உருவம் என்றோ ஒன்று கிடையாது. அவை பிரிக்க முடியாதவை. அவை ஒரே அலையின், உள்ளும் புறமும் போன்றவை. இதனால்தான் நாமங்கள் பெருமைப் படுத்தப்பட்டு உலகம் முழுவதிலும் வழிபடப்பட்டு வருகின் றன. அறிந்தோ அறியாமலோ மனிதன் திருநாமங்களின் மகிமை யைக் கண்டுகொண்டான்.

பல மதங்களில் அவதார புருஷர்கள் வணங்கப்பட்டு வரு கின்றனர். கண்ணனை வழிபடுகின்றனர், புத்தரை வழிபடு கின்றனர், ஏசுவை வழிபடுகின்றனர். இப்படிப் பல மகான்களை வழிபடுகின்றனர். உலகெங்கும் நூற்றுக்கணக்கான மகான்கள் வணங்கப் படுகின்றனர். ஏன் வணங்கக் கூடாது?

ஒளியின் அதிர்வு எங்கும் உள்ளது. ஆந்தை இருளிலும் காண்கிறது. என்றால் அங்கும் ஒளி இருக்கிறது என்பதுதானே பொருள்! ஆனால் அதை மனிதன் காண முடியாது. அவனது ஒளிநரம்புகளுக்கு ஏற்ற அதிர்வுகளுடன் வரும்போதுதான் அவனால் ஒளியைக் காண முடியும். விளக்கு, சூரியன், சந்திரன் போன்றவற்றில் அத்தகைய அதிர்வு இருப்பதால் அவன் அவற் றைக் காண்கிறான். இறைவன் எங்கும் உள்ளான். ஒவ்வோர் உயிரிலும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறான். ஆனால் மனிதனுக்கோ இறைவன் புலப்படுவதும் அறியப்படு வதும் மனிதனிடம்தான். மனிதனின் வாயிலாக அவரது ஒளி யும் சான்னித்தியமும் உணர்வும் பொலியும்போது மட்டுமே, மனிதன் அவரை அறிய முடியும். ஆகவே எக்காலமும் மனிதன் இறைவனை மனிதனின் வாயிலாகவே வணங்கி வந்துள் ளான்; அவன் மனிதனாக இருக்கின்ற வரையில் அவ்வாறே செய்தாக வேண்டும். அவன் அதனை எதிர்த்துக் கூச்சலிட லாம், போராடலாம். ஆனால் இறையனுபூதிக்கான பாதையில் செல்லத் தொடங்கியவுடனே இறைவனை மனிதனாக நினைக்க

வேண்டியதன் அவசியம் மானிட இயல்பிலேயே இருப்பதைக் காண்பான்.

ஆகவே ஏறக்குறைய, எல்லா மதங்களிலுமே இறைவழிபாட்டில் மூன்று முக்கியப் பகுதிகளைக் காண்கிறோம்—உருவங்கள் அல்லது சின்னங்கள், நாமங்கள், தெய்வ-மனிதர்கள். எல்லா மதங்களிலும் இவை ஏதாவது ஒரு விதத்தில் இருக்கவே செய்கின்றன. எனினும் அவை ஒன்றோடொன்று அடித்துக்கொள்வதை நீங்கள் காணலாம். 'நான் வழிபடும் நாமமே ஒரே நாமம், நான் வழிபடும் உருவமே ஒரே உருவம், என் மதத்திலுள்ள தெய்வ-மனிதரே உலகிலுள்ள ஒரே தெய்வ-மனிதர். உங்கள் மதம் எல்லாம் வெறும் கட்டுக்கதைகள்' என்று ஒரு மதம் சொல்கிறது. இப்போதெல்லாம் கிறிஸ்தவப் பாதிரிகளுக்கும் முன்பிருந்ததைவிட இரக்கம் அதிகரித்துள்ளது போல் தோன்றுகிறது. பழைய மதங்கள் எல்லாம் கிறிஸ்தவ மதத்தின் முன்னோடிகள் மட்டுமே என்ற அளவிலாவது அவற்றை ஒப்புக்கொள்கின்றனரே! ஆனால் அவர்களின் மதமாகிய கிறிஸ்தவ மதம் ஒன்றே உண்மையானது என்று அவர்கள் சாதிப்பது வேறு விஷயம். பழங்காலத்தில் கடவுள் தம்மையே சோதித்தார், பல மதங்களைப் படைத்து அவற்றிற்கு ஒரு வடிவம் அளிப்பதில் தமது ஆற்றல்களைச் சோதித்துக் கொண்டார், இறுதியில் கிறிஸ்தவ மதத்தில்தான் தன்னை முழுமையாக வெளிப்படுத்தினாராம்! எப்படியோ முன்பிருந்த நிலையை எண்ணும்போது இது ஒரு நல்ல முன்னேற்றம் தானே! ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இவ்வளவுகூடச் சொல்லியிருக்க மாட்டார்கள், அவர்களது மதத்தைத் தவிர வேறெதையும் ஒத்துக்கொண்டிருக்க மாட்டார்கள்; அதுவே எல்லாம் என்று பறை சாற்றியிருப்பார்கள்.

ஏதோ ஒரு மதம், ஒரு நாடு, ஒரு பிரிவு என்ற எல்லைக்குள் மட்டுமே இத்தகைய குறுகிய கருத்து வழங்கி வருகிறது என்பதல்ல. எப்போதும் தாங்கள் என்ன செய்கிறோமோ, அது தான் மற்றவர்கள் செய்வதற்கு உரிய சரியான ஒரே செயல் என்றே மக்கள் கருதுகிறார்கள். இங்கேதான் பல மதங்களையும் படிப்பது நமக்கு உதவுகிறது. நம்முடையவை என்றும், நமக்கு மட்டுமே உரியவை என்றும் நாம் எண்ணி வந்துள்ள அதே கருத்துக்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே பிறரிடமும் தோன்றியிருந்தன, சிலவேளைகளில் அவை நம்முடையதைவிட மிகச் சிறந்த முறையில்

வெளியிடப்பட்டிருந்தன என்பது அப்போதுதான் நமக்குத் தெரியவரும்.

இவை பக்தியின் புற வடிவங்கள். இவை மனிதன் கடந்து செல்ல வேண்டிய பாதை. ஆனால் அவன் உண்மையான அக்கறை உடையவனானால், மெய்ப்பொருளை அடைய உண்மையான விருப்பம் உடையவனானால், இவற்றைவிட மிக உயர்ந்த நிலைக்கு, உருவங்கள் பயனற்றதாக உள்ளதோர் உயர்ந்த இடத்திற்குச் செல்கிறான். கோயில்கள், சர்ச்சுகள், சாஸ்திரங்கள், உருவங்கள் இவையெல்லாம் மதத்தின் ஆரம்பப் பாடங்கள்; ஆன்மீக வாழ்வில் குழந்தை நிலையில் உள்ளவர்கள் உயர்ந்த படிகளில் ஏறுவதற்கு வேண்டிய வலிமையைத் தருவதற்கானவை. ஒருவனுக்கு ஆன்மீகம் வேண்டுமானால் இந்த முதற்படிகள் அவசியம்.

இறைவனை மன ஏக்கத்துடன் நாடும்போதுதான் உண்மையான பக்தி உண்டாகிறது. உண்மையான பக்தி—அது யாரிடம் உள்ளது? இதுதான் கேள்வி. மதம் என்பது கொள்கைகளிலோ சித்தாந்தங்களிலோ, வாதப் பிரதிவாதங்களிலோ இல்லை. மதம் என்பது அதுவே ஆவது, அதுவாகப் பரிணமிப்பது; அது அனுபூதி.

கடவுள், ஆன்மா என்றெல்லாமும், பிரபஞ்ச ரகசியங்களைப்பற்றியும் எல்லோரும் பேசுகிறார்கள். அவர்களை ஒவ்வொருவராக அழைத்து, அவர்களிடம், 'நீ இறைவனைக் கண்டிருக்கிறாயா? உன் ஆன்மாவைக் கண்டது உண்டா?' என்று கேளுங்கள். 'ஆம்' என்று பதில் கூற அவர்களுள் எத்தனை பேரால் முடியும்? ஆனாலும் ஒருவரோடொருவர் போராடிக் கொண்டுள்ளனர்!

இந்தியாவில் ஒருசமயம் பல மதப்பிரிவுகளின் பிரதிநிதிகள் ஒன்றாகக் கூடி வழக்காடத் தொடங்கினர். 'சிவபெருமான்தான் ஒரே கடவுள்' என்றார் ஒருவர்; 'திருமால்தான் ஒரே தெய்வம்' என்றார் இன்னொருவர். இப்படியே அவர்களுடைய வழக்கு முடிவற்றுத் தொடர்ந்தது. அப்போது அந்த வழியாக ஒரு முனிவர் சென்று கொண்டிருந்தார். இந்த வழக்கைத் தீர்க்குமாறு அவரை அழைத்தனர். அவரும் சம்மதித்தார். முதலில், சிவனே மேலான கடவுள் என்று கூறியவரிடம், 'ஆமாம், நீ சிவபெருமானைக் கண்டிருக்கிறாயா? அவருடன் பழகியிருக்கிறாயா? இல்லாவிட்டால் அவரே உயர்ந்தவர் என்பதை நீ எவ்வாறு அறிந்தாய்?' என்று கேட்டார்.

பிறகு திருமாலை வழிபடுபவரிடமும் 'நீ திருமாலைக் கண்டிருக்கிறாயா?' என்று கேட்டார். இந்தக் கேள்வியையே எல்லோரிடமும் கேட்டார். அவர்களுள் யாரும் கடவுளைப் பற்றி எதுவும் அறிந்திருக்கவில்லை. அவர்கள் வாதப் பிரதிவாதங்களில் ஈடுபட்டதற்கு அதுவே காரணம். உண்மையிலேயே அறிந்தவர்களாக இருந்தால் வழக்கே எழுந்திருக்காது. ஜாடியை நீரால் நிரப்பும்போது ஓசை உண்டாகிறது. அது நிரம்பிய பின் ஓசை இல்லை. அதுபோலவே மதப் பிரிவுகளுள் வழக்குகளும் போராட்டங்களும் இருப்பது, அவர்களுக்கு மதத்தைப்பற்றி எதுவும் தெரியாது என்பதையே காட்டுகிறது. அவர்களைப் பொறுத்தவரை மதம் என்பது நூல்களில் எழுதி வைப்பதற்கு உரிய பயனற்ற வெறும் மொழிக் குவியல் மட்டுமே.

ஒவ்வொருவனும் பெரிய நூல் எழுதத் துடிக்கிறான். கையில் அகப்பட்ட எல்லா நூல்களிலிருந்தும் திருடிச் சேர்த்துத் தன் நூலை இயன்றவரை பெரிதாக்குகிறான். அந்தக் கருத்துக்களின் சொந்தக்காரர்களுக்கு நன்றிக்கடன் பட்டிருப்பதையும் அவன் ஒருபோதும் ஒப்புக்கொள்வதில்லை. பின்னர் அந்த நூலை உலகில் பரப்பி, ஏற்கனவே நிலவுகின்ற குழப்பத்தை மேலும் அதிகமாக்குகிறான்.

மக்களில் பெரும்பாலோர் நாத்திகரே. தற்காலத்தில் மேலை நாடுகளில் இன்னொருவகை நாத்திகர் தோன்றியிருப்பது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். நான் குறிப்பிடுவது உலோகாயதர்களையே. அவர்கள் நேர்மையான நாத்திகர்கள். நேர்மையற்றவர்களைவிட, மதத்தைப்பற்றி வெறுமனே பேசிக்கொண்டும் சண்டையிட்டுக்கொண்டும், அதேவேளையில் அதன் தேவையை உணராத, அதனைப் புரிந்துகொள்ள முயலாத மத நாத்திகர்களைவிட அவர்கள் மேலானவர்கள். ஏசு கூறியதை நினைவு கூருங்கள்: 'கேள், உனக்குத் தரப்படும். தேடு, அதனை நீ காண்பாய்; தட்டு, உனக்காகத் திறக்கப்படும்'—இது எழுத்துக்கு எழுத்து உண்மையானது. இது கற்பனையோ கதையோ அல்ல. இது, உலகில் இதுவரை தோன்றியுள்ள, இறைவனின் மிகச் சிறந்த மைந்தர்களுள் ஒருவரின் இதய ரத்தத்திலிருந்து வெளிப்பட்டது. இவை அனுபூதியின் விளைவாக வெளிவந்த வார்த்தைகள்; படித்துச் சொன்னவை அல்ல. கடவுளை உணர்ந்து அனுபவித்த ஒருவரது வார்த்தைகள் இவை. நீங்களோ நானோ இந்தக் கட்டிடத்தைப் பார்ப்பதைவிட நூறுமடங்கு மிகத் தெளிவாக இறைவனைக் கண்டு

அவரோடு பேசி, அவரோடு வாழ்ந்த ஒருவரிடமிருந்து பிறந்தவை இவை.

இறைவனை வேண்டுபவர் யார்? இதுதான் கேள்வி. இந்த உலகிலுள்ள மக்கள் அனைவரும் இறைவனை அடைய நினைத்தும், அவரை அடைய முடியவில்லை என்று நினைக்கிறீர்களா? அப்படி இருக்க முடியாது. மனிதனின் தேவைகள் எதுவானாலும் அதைத் தீர்த்து வைப்பதற்கான பொருள் புறவுலகில் உள்ளது. அப்படிப் புற உலகில் இல்லாத பொருள் ஏதாவது உண்டா? அவன் சுவாசிக்க வேண்டும், அதற்குக் காற்று உள்ளது. உண்ண வேண்டும், அதற்கு உணவு உள்ளது. இந்த ஆசைகளைப் படைப்பது எது? புறப்பொருட்கள்தான். ஒளியே கண்களை உண்டாக்கியது, ஒலியே செவிகளைப் படைத்தது. இவ்வாறு மனிதனிடமுள்ள ஒவ்வோர் ஆசையையும் புற உலகிலுள்ள ஏதோ ஒன்றுதான் படைத்துள்ளது. நிறைநிலையை அடைவதற்கான ஆசை, அதாவது லட்சியத்தை அடைந்து இயற்கைக்கு அப்பால் செல்லத் துடிக்கின்ற இந்த ஆசையையும் அவ்வாறே படைத்து, மனித மனத்தில் அதனைப் புகுத்தி, அதனை அங்கேயே வாழும்படிச் செய்யாவிட்டால் அது எப்படி இருக்க முடியும்? ஆதலால் யாரிடம் இந்த ஆசை எழுமோ அவன் அதனை அடையவே செய்வான். ஆனால் அதை யார் விரும்புகிறார்கள்?

இறைவனைத் தவிர மற்ற அனைத்தையும் நாம் விரும்புகிறோம். உங்களைச் சுற்றி நீங்கள் காண்பது மதமே அல்ல. 'என் மனைவி உலகம் முழுவதிலுமிருந்தும் சாமான்களை வரவழைத்து வரவேற்பறையில் வைத்திருக்கிறாள். இப்போதெல்லாம் ஜப்பானியப் பொருள் சிலவற்றை வைத்திருப்பதுதான் நாகரீகம்! எனவே அழகிய ஜப்பான் ஜாடி ஒன்றையும் வாங்கி அங்கே வைக்கிறாள்.'—பெரும்பாலோருக்கு மதமும் இத்தகையதாகவே உள்ளது. இன்ப நுகர்ச்சிக்கான எல்லாம் அவர்களிடம் உள்ளன. ஆனால் சிறிது மத வாசனையும் சேராவிட்டால் வாழ்க்கை நிறைவு பெறாது. சமூகம் அவர்களைக் குறை கூறும், எனவே சிறிது மதமும் இருக்க வேண்டும். இன்றைய உலகில் மதத்தின் நிலை இதுவே.

ஒரு சீடன் தன் குருவிடம் சென்று, 'ஐயா, எனக்கு ஆன்மீகம் வேண்டும்' என்றான். குரு அந்த இளைஞனைப் பார்த்து அமைதியாகப் புன்முறுவல் மட்டும் பூத்தார், எதுவுமே பேசவில்லை. இளைஞன் ஒவ்வொரு நாளும் வந்து, தனக்கு

ஆன்மீகம் வேண்டுமென வற்புறுத்தினான். அந்த முதியவர் இளைஞனைவிட விஷயம் தெரிந்தவர். ஒருநாள் வெயில் கடுமையாக இருந்தது. அன்று அவர் அந்த இளைஞனைத் தம்மோடு ஆற்றுக்கு நீராட அழைத்துச் சென்றார். அவன் நீருக்குள் இறங்கி மூழ்கியதும், முதியவர் அவனைப் பிடித்து, பலவந்தமாக நீரினுள் அமிழ்த்தி வைத்துக் கொண்டார். அவன் திணறிப்போய் வெளியே வரப் போராடினான். சிறிதுநேரம் அவர் விடவே இல்லை. பிறகு அவனை விட்டார். சோர்ந்து போய் தலையை மேலே தூக்கினான் அவன். அப்போது அவர் அவனிடம், 'நீரினுள் இருந்தபோது உனக்கு மிகவும் தேவை யாக இருந்தது எது?' என்று கேட்டார். 'மூச்சுக் காற்று' என் றான் சீடன். 'ஆம், இறைவன் வேண்டும் என்று அவ்வாறே நீ நினைக்கிறாயா? அவ்வளவு தூரம் இறைவனின் தேவையை உணர்ந்தாயானால் அவனைப் பெறுவாய்' என்றார் குரு.

அந்தத் தாகம், அந்த ஆசை உன்னிடம் எழும்வரை, உன் அறிவாலோ, உனது சாஸ்திரங்களாலோ, உருவங்களாலோ, நீ எவ்வளவுதான் பாடுபட்டாலும் ஆன்மீகத்தைப் பெற முடி யாது. அந்தத் தாகம் உன்னிடம் எழும்வரை, நீ நாத்திகனைவிட மேலானவன் அல்ல. நாத்திகன் நேர்மையாகவாவது இருக் கிறான். உன்னிடம் அதுவும் இல்லை.

ஒரு மாமுனிவர் கூறுவார்: 'ஓர் அறையில் ஒரு திருடன் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அடுத்த அறையில் ஒரு பெரும் பொற்குவியல் இருப்பதாக அவனுக்குத் தெரியவரு கிறது. இரண்டு அறைகளுக்கும் இடையே ஒரு மெல்லிய சுவர் மட்டுமே இருக்கிறது. அந்தத் திருடனின் நிலைமை எவ் வாறிருக்கும்? அவனால் உறங்க முடியாது, உண்ண முடியாது, வேறு எதையும் செய்யவே முடியாது. பொன்னை எப்படி எடுப்பது என்பதிலேயே அவனது மனம் ஆழ்ந்திருக்கும். பேரானந்தமும் பெருநன்மையும் மகிமையும் கொட்டிக் கிடக் கின்ற சுரங்கமான இறைவன் இங்கே இருக்கிறான் என்று மக்கள் அனைவரும் உண்மையாக நம்பினால், அவனை அடைய முயலாமல், இப்போது இருப்பதுபோல் இருப்பார்கள் என்று நினைக்கிறீர்களா?'

இறைவன் ஒருவன் இருக்கிறான் என்று ஒருவன் 'நம்ப'த் தொடங்கிய உடனே, அவனைக் காண்பதற்கான ஏக்கத் தால் பித்தனாவான். பிறர் தத்தம் வழியில் சென்று கொண்டிருப் பார்கள். ஆனால் இப்போது வாழ்ந்து வருகின்ற வாழ்வைவிட

மிக உயர்ந்த வாழ்வு ஒன்று உள்ளது என்ற உறுதியைப் பெற்ற வன், புலன்களே எல்லாம் அல்ல, அழிவற்ற, என்றுமுள்ள, இறவாத ஆன்ம இன்பத்தோடு ஒப்பிடும்போது எல்லைக்குட் பட்ட இந்த ஜடஉடல் வெறும் பூஜ்யம் என்ற உறுதி வரப்பெற் றவன், அந்தப் பேரின்பத்தைத் தானே உணரும்வரை பித்தனாகத் தான் ஆவான். இந்தப் பைத்தியம், இந்தத் தாகம், இந்த வெறி தான் ஆன்மீக 'விழிப்புணர்வு' எனப்படுவது. இது தோன்றிய பின்னரே ஒருவன் ஆன்மீகவாதியாகத் தொடங்குகிறான். ஆனால் இந்த நிலை தோன்ற நீண்ட காலம் தேவைப்படும்.

உருவங்கள், சடங்குகள், பிரார்த்தனைகள், தீர்த்த யாத் திரைகள், சாஸ்திரங்கள், மணிகள், மெழுகுவர்த்திகள், பூஜாரிகள் ஆகிய எல்லாமே வெறும் ஆயத்தங்கள்தான். இவை ஆன்மாவின் அழுக்குகளை நீக்குகின்றன. ஆன்மா தூய்மை அடைந்ததும், தன் சொந்த இருப்பிடத்தை இயல்பாகவே நாடுகிறது. அந்த இருப்பிடம் தூய்மை அனைத்திற்கும் உறை விடமான இறைவனே. பல நூற்றாண்டுகளாகத் தூசி படிந்து மூடிக் கிடக்கின்ற ஓர் இரும்புத்துண்டு காலங்காலமாக ஒரு காந்தத்தின் அருகே இருக்கலாம், எனினும் அதனால் கவரப் படாதிருக்கும்; தூசு அகற்றப்பட்டால் உடனே காந்தத்தால் ஈர்க்கப்படுகிறது. அதுபோலவே காலங்காலமாகப் படிந்த தூசும், மாசும், தீமையும், பாவமும் மூடியுள்ள மனித ஆன்மா, இந்த வழிபாடுகளாலும், சடங்குகளாலும், பிறருக்கு நன்மை செய்வதாலும், பிற உயிர்களை நேசிப்பதாலும், பல பிறவி களுக்குப் பிறகு போதிய அளவு தூயதாகும்போது, அதற்கு இயல்பாயுள்ள ஆன்மீகக் கவர்ச்சி வெளிப்படுகிறது. அது விழிப்படைகிறது. இறைவனை நோக்கிச் செல்லப் பாடுபடுகிறது.

என்றாலும் இந்த உருவங்களும் சின்னங்களும் வெறும் ஆரம்பமே; அவை உண்மையான இறையன்பு ஆகாது. அன்பைப்பற்றிப் பேசுவதை எங்கும் கேட்கிறோம். இறைவனை நேசி என்று ஒவ்வொருவனும் சொல்கிறான். ஆனால் அன்பு செய்வது என்றால் என்ன என்பது மக்களுக்குத் தெரியுமா என்றால், கிடையாது. தெரிந்திருந்தால் அவ்வளவு எளிதாக அதைப்பற்றிப் பேச மாட்டார்கள். ஒவ்வொருவனும் தன்னால் அன்பு செய்ய இயலும் என்கிறான். ஐந்து நிமிடம்தான்—அதற்குள் தன்இயல்பில் அன்பு இல்லை என்பதைக் கண்டு கொள்கிறான். ஒவ்வொரு பெண்ணும் தன்னால் அன்பு செய்ய

முடியும் என்கிறாள். ஆனால் அது இயலாது என்பதை மூன்று நிமிடத்தில் கண்டுகொள்கிறாள். அன்பைப்பற்றிய பேச்சு உலகில் நிறைந்துள்ளது. ஆனால் அன்பு செய்வது கடினம்.

அன்பு எங்கே உள்ளது? அன்பு உள்ளது என்று உனக்கு எப்படித் தெரியும்? அன்பிற்கான முதல் சோதனை, அது பேரம் பேசுவதை அறியாது என்பதே. ஏதாவது ஒன்றைப் பெறுவதற்காக ஒருவன் மற்றவனை நேசித்தால், அது அன்பு அல்ல; அது வியாபாரம். கொடுக்கல்-வாங்கல் பேச்சு வந்துவிட்டாலே, அது அன்பாக இருக்க முடியாது. எனவே இறைவனிடம், 'எனக்கு இதைக் கொடு, அதைக் கொடு' என்று கேட்பது அன்பு ஆகாது. அது எவ்வாறு அன்பாக முடியும்? நான் உங்களிடம் கேட்கிறேன். நீங்கள் பதிலாக ஒன்றைத் தருகிறீர்கள். அதுபோல்தான் இதுவும்—வெறும் வியாபாரம்.

மன்னன் ஒருவன் காட்டில் வேட்டையாடச் சென்றான். அங்கு ஒரு முனிவரைக் கண்டான். அவருடன் சிறிது நேரம் பேசியதிலேயே மிகவும் மகிழ்ந்த அவன் தன்னிடமிருந்து ஏதாவது பெற்றுக் கொள்ளுமாறு அவரிடம் வேண்டினான். அதற்கு அந்த முனிவர், 'எனக்கு எதுவும் வேண்டாம். இப்போது நான் திருப்தியாகவே உள்ளேன். இந்த மரங்கள், நான் உண்ணப் போதிய பழங்களைத் தருகின்றன; இந்த அழகிய, தெள்ளிய நீரோடைகள் எனக்கு வேண்டிய நீரைத் தருகின்றன; இந்தக் குகைகளில் நான் உறங்குகிறேன். நீ ஒரு மன்னாதி மன்னனானாலும் நீ தருபவற்றை நான் ஏன் பொருட்படுத்த வேண்டும்?' என்று கூறினார். அதைக் கேட்ட மன்னன், 'என்னைத் தூயவனாக்க, எனது திருப்திக்காகவாவது ஏதாவது ஒன்றைப் பெற்றுக் கொள்ளுங்கள். என்னோடு நகருக்கு எழுந்தருளுங்கள்' என்று வேண்டினான். இறுதியில் முனிவர் மன்னனோடு செல்ல இசைந்தார்.

முனிவரை அரண்மனைக்கு அழைத்துச் சென்றான் மன்னன். பொன், மணி, பளிங்கு என்று அந்த அரண்மனை விலைமதிப்பற்ற பொருட்களால் நிறைந்திருந்தது. செல்வமும் ஆற்றலும் எங்கும் வெளிப்பட்டிருந்தன. மன்னன் முனிவரைக் காத்திருக்குமாறு சொல்லிவிட்டு, ஒரு மூலைக்குச் சென்று, 'இறைவா எனக்கு இன்னும் செல்வமும் மக்களும் நாடும் தந்தருள்வாய்' என்று பிரார்த்தனை செய்யத் தொடங்கினான். இதைக் கேட்ட முனிவர் எழுந்து வெளியே செல்லத் தொடங்கினார். அவர் செல்வதைக் கண்ட மன்னன் அவரைப் பின்

தொடர்ந்து, 'சுவாமி, நில்லுங்கள். நீங்கள் எனது நன்கொடையைப் பெறாமல் செல்கிறீர்களே!' என்று கூறினான். அதற்கு முனிவர் அவனிடம், 'மன்னா, பிச்சைக்காரனிடம் நான் யாசிப்பதில்லை. உன்னால் எனக்கு என்ன கொடுக்க முடியும்? நீயே பொழுதெல்லாம் பிச்சை கேட்டுக் கொண்டிருக்கிறாய்' என்று கூறினார். அன்பின் மொழி அதுவல்ல. 'இதைத் தா, அதைத் தா' என்று நீ இறைவனிடம் வேண்டுவாயானால் அன்பிற்கும் வியாபாரத்திற்கும் என்ன வேறுபாடு?

அன்பின் முதல் பரிசோதனை பேரம் பேசுவது எதுவும் அதில் இல்லாததுதான். அது எப்போதும் கொடுக்கிறது. கொடுப்பதைத் தவிர எடுப்பது அதற்குத் தெரியாது. 'இறைவன் திருவுள்ளம் அதுவானால் என்னிடமுள்ள எல்லாவற்றையும் அவருக்கு அளிப்பேன்; அவரிடமிருந்து எனக்கு எதுவும் வேண்டாம். பிரபஞ்சத்திலுள்ள எதுவும் எனக்குத் தேவையில்லை. அவரிடம் அன்பு செலுத்த விரும்புகிறேன். அதனால் அவரை நேசிக்கிறேன்; பிரதியாக எனக்கு எதுவும் வேண்டாம். கடவுள் எல்லாம் வல்லவரா, இல்லையா என்பதைப் பற்றியெல்லாம் யார் கவலைப்படுகிறார்கள்? அவரிடமிருந்து எந்தச் சக்தியும் எனக்கு வேண்டாம். அவரது சக்தியின் வெளிப்பாடுகளும் எனக்கு வேண்டாம். அவர் அன்புத் தெய்வம் என்பதே எனக்குப் போதும். வேறு கேள்வி எதனையும் கேட்க மாட்டேன்' என்கிறான் இறைவனின் குழந்தை.

இரண்டாவது பரிசோதனை, அன்பு பயம் அறியாதது என்பதே. அன்பில் பயம் இருக்க முடியுமா? ஆடு சிங்கத்தின்மீது அன்பு செலுத்துமா? சுண்டெலி பூனையை நேசிக்குமா? அடிமைக்கு எஜமானிடம் அன்பு உண்டா? அடிமைகள் அன்பு செய்வதாகச் சிலவேளைகளில் காட்டிக்கொள்வார்கள். ஆனால் அது அன்பு ஆகுமா? பயத்தில் அன்பை எங்காவது கண்டது உண்டா? அது எப்போதும் போலியானதே. ஒரு கையில் பரிசுகளும், மற்றொன்றில் தண்டனைகளும் வைத்துக்கொண்டு மேகமண்டலத்திற்கு அப்பால் இருக்கின்ற ஒருவராக இறைவனை மனிதன் நினைக்கும்வரை, அன்பு என்பது வர இயலாது.

அன்புடன் ஒருபோதும் பயக் கருத்தோ அல்லது நமக்கு பயமூட்டக்கூடிய எந்தக் கருத்துமோ தோன்றுவதில்லை. வீதியில் ஓர் இளம் தாய் நிற்கிறாள். ஒரு நாய் அவளைப் பார்த்துக் குரைக்கிறது. அவள் என்ன செய்வாள்? அருகிலுள்ள வீட்டிற்குள் ஓடுவாள். மறுநாள் அவள் தன் குழந்தையோடு போய்க்

கொண்டிருக்கிறாள். ஒரு சிங்கம் குழந்தைமீது பாய்கிறது. அவள் என்ன செய்வாள்? சிங்கத்தின் வாயில் தன்னைக் கொடுத்தாவது குழந்தையைக் காக்கத்தானே துணிவாள்! அன்பு எல்லா பயத்தையும் வெல்கிறது. இத்தகையதே இறைவன்மீது காட்டும் அன்பும்.

இறைவன் பரிசளிப்பவரா, தண்டனை தருபவரா என்பதைப்பற்றி யார் கவனிப்பது? பக்தனின் எண்ணம் அதுவல்ல. நீதிபதி ஒருவர் தன் வீட்டிற்குத் திரும்புவதாக வைத்துக் கொள்வோம். அவரது மனைவி அவரிடம் யாரைக் காண்பாள்? நீதிபதியையா? பரிசளிப்பவரையா? தண்டனை கொடுப்பவரையா? இவர்கள் யாரையும் அல்ல, அவள் காண்பது தன் கணவரையே, தனது அன்பரையே. அவரது குழந்தைகள் அவரிடம் யாரைக் காண்பார்கள்? தங்கள் அன்புத் தந்தையையே; தண்டிப்பவரையோ பரிசளிப்பவரையோ அல்ல. அது போன்றே இறைவனின் குழந்தைகளும் ஒருபோதும் அவரைத் தண்டிப்பவராகவோ பரிசளிப்பவராகவோ காண மாட்டார்கள். அவரது அன்பை ஒருநாளும் சுவைத்து அறியாதவர்களே அவரைக் கண்டு பயப்படுகிறார்கள்; வாழ்நாள் முழுவதும் அஞ்சி நடுங்குகிறார்கள். அவர் தண்டிப்பவர், பரிசளிப்பவர் போன்ற பயங்கரமான கருத்துக்கள் பண்படாத மனங்களுக்குப் பயன்படலாம். நீங்கள் அவற்றை வீசியெறிந்து விடுங்கள். எல்லா பயத்தையும் விடுங்கள். பேரறிவு படைத்தவர்களாக இருந்தாலும் சிலர் ஆன்மீகத்தைப் பொறுத்தவரை காட்டுமிராண்டிகளாகவே உள்ளார்கள். அவர்களுக்கு இந்தக் கருத்துக்கள் உதவலாம். ஆனால் ஆன்மீக நாட்டம் கொண்டவர்களுக்கு, ஆன்மீகத்தை நெருங்கிவிட்டவர்களுக்கு, ஆன்மீக விழிப்புணர்வு பெற்றவர்களுக்கு இத்தகைய கருத்துக்கள் வெறும் சிறுபிள்ளைத்தனம்; வெறும் முட்டாள்தனம். அத்தகையோர் பயத்தைப் பற்றிய எல்லா எண்ணங்களையும் விட்டுவிடுவார்கள்.

மூன்றாவதாக, இன்னும் உயர்ந்த ஒரு பரிசோதனை உள்ளது. அன்பே எப்போதும் மிக உயர்ந்த லட்சியம். முதல் இரண்டு நிலைகளையும் கடந்தபின், அதாவது வியாபார நோக்கத்தையும் பயத்தையும் விட்டபின், அன்பே எப்போதும் மிகவுயர்ந்த லட்சியம் என்பதை ஒருவன் உணரத் தொடங்குகிறான். அழகிய பெண் அழகற்றவனைக் காதலிப்பதை நாம் எவ்வளவோ கண்டிருக்கிறோம். அழகன் அழகற்றவளைக் காதலிப்பதையும் பார்க்கிறோம். அங்கே எது கவர்ச்சியாக

உள்ளது? மூன்றாம் மனிதன் அங்கே அழகற்ற ஆணையோ, அழகற்ற பெண்ணையோதான் காண்கிறான். ஆனால் காதலர்கள் அவ்வாறு பார்ப்பதில்லை. காதலர்களுக்குத் தங்கள் காதலுக்கு உரியவர்கள்தான், இதுவரை இருந்தவர்களிலேயே மிகவும் அழகானவர்கள். அது எப்படி? அழகற்றவனைக் காதலிப்பவள் தன் உள்ளத்தில் இருக்கும் அழகு-லட்சியத்தை வெளியிலே எடுத்து, அந்த அழகற்றவன்மீது ஏற்றுகிறாள். அவள் காதலிப்பதும் கொண்டாடுவதும் இந்த அழகு-லட்சியத்தையே, தனது சொந்த எண்ணத்தையே தவிர, அந்த அழகற்ற ஆண்மகனை அல்ல. அந்த ஆடவன் நிமித்தம் மட்டுமே, அந்த நிமித்தத்தின்மீது அவள் தனது சொந்த லட்சியத்தை ஏற்றி அதை மூடிவிடுகிறாள். அது அவளது போற்றுதலுக்கு உரியதாகிறது. நமது அன்புச் செயல்கள் ஒவ்வொன்றிற்கும் இது பொருந்தும். நம்முள் பெரும்பாலோரது சகோதர சகோதரிகள் சாதாரணத் தோற்றம் உடையவர்களே. ஆனால் அவர்கள் நம் சகோதர சகோதரிகள் என்ற எண்ணமே அவர்கள் அழகானவர்கள் என்று நம்மை எண்ணச் செய்கிறது அல்லவா!

இதன் அடிப்படையில் உள்ள தத்துவம் என்னவென்றால், ஒவ்வொருவரும் தன் சொந்த லட்சியத்தை வெளிப்படுத்தி அதனை வணங்குகிறான் என்பதே. இந்தப் புறவுலகம் வெறும் நிமித்தம் மட்டுமே. நாம் காண்பன எல்லாம் நம் உள்ளங்களிலிருந்து வெளிப்படுத்தப் பட்டவை. முத்துச்சிப்பிக்குள் நுண்ணிய மணல் ஒன்று புகுந்துவிடுகிறது. அது அந்தச் சிப்பியை உறுத்துகிறது. அந்த உறுத்தலின் விளைவாகச் சிப்பியில் ஒரு விதத் திரவம் சுரக்கிறது. அது அந்த மணலை மூடிக் கொள்கிறது. அதன் இறுதிவிளைவே அழகிய முத்து. நாம் எல்லோரும் செய்வதும் இதுதான். புறப்பொருட்கள் நமக்கு சூசகங்களை மட்டுமே தருகின்றன. அவற்றின்மீது நாம் நமது லட்சியங்களை ஏற்றி நமக்கான பொருட்களை உண்டாக்கிக் கொள்கிறோம். இந்த உலகைத் தீயவர்கள் முழு நரகமாகக் காண்கின்றனர்; நல்லவர்கள் பூரண சொர்க்கமாகக் காண்கின்றனர்; காதலர்கள் காதல் நிரம்பியதாகவும், வெறுப்பவர்கள் வெறுப்பு நிரம்பியதாகவும் காண்பார்கள். போராளிகளுக்கு இந்த உலகில் போரைத் தவிர எதுவும் தெரியாது; அமைதியை நாடுவோர் அமைதியைத் தவிர வேறெதையும் காண மாட்டார்கள். அவ்வாறே நிறைமனிதன் இறைவனைத் தவிர வேறு எதையும் காண மாட்டான்.

எனவே நாம் மிக உயர்ந்த நமது லட்சியத்தையே எப்போதும் வணங்குகிறோம். லட்சியத்திற்காகவே லட்சியத்தின்மீது அன்பு செய்யும் நிலையை நாம் அடையும்போது எல்லா வாதங்களும் சந்தேகங்களும் என்றென்றைக்குமாக அழிந்துவிடும். கடவுள் இருப்பதை நிரூபிக்க முடியுமா, முடியாதா? அதுபற்றி யாருக்குக் கவலை? ஆனால் லட்சியம் ஒரு நாளும் என்னை விட்டுப் போகாது. ஏனெனில் அது எனது சொந்த இயல்பின் ஒரு பகுதி. நான் இருக்கிறேனா என்ற சந்தேகம் எழுந்தால் மட்டுமே லட்சியத்தைப்பற்றிய சந்தேகமும் எழும். அதைப்பற்றிச் சந்தேகம் வராதபோது இதைப் பற்றியும் சந்தேகம் வர வழியில்லை.

எனக்கு வெளியில் எங்கோ இருந்துகொண்டு, வேடிக்கை விளையாட்டாக இந்தப் பிரபஞ்சத்தை நடத்திக்கொண்டு, பல நாட்களாக இதனைப் படைத்தபின் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கின்ற ஒரு கடவுளை விஞ்ஞானத்தால் நிரூபிக்க முடியுமா, முடியாதா என்பதுபற்றி யாருக்குக் கவலை? எல்லாம் வல்லவராகவும் அதேவேளையில் கருணை வடிவினராகவும் கடவுளால் இருக்க முடியுமா, முடியாதா என்பதைப்பற்றி யாருக்குக் கவலை? அவர் மனித குலத்திற்குப் பரிசளிப்பவரா என்று யார் கவலைப்படுகிறார்கள்? கொடுங்கோல் மன்னனின் கண்கொண்டு நம்மை நோக்குபவரா? அல்லது செங்கோல் தவறாத மன்னனின் கண்கொண்டு பார்ப்பவரா? இதைப் பற்றியெல்லாம் கவலைப்படுவது யார்?

பரிசுகளுக்கும் தண்டனைகளுக்கும் அப்பால், பயங்களுக்கும் சந்தேகங்களுக்கும் அப்பால், விஞ்ஞான முறைப்படியோ வேறு முறைப்படியோ நிரூபிப்பதற்கும் அப்பால்—இவையனைத்திற்கும் அப்பால் பக்தன் சென்றுவிடுகிறான். இந்த அன்பு-லட்சியம் ஒன்றே அவனுக்குப் போதும். இந்தப் பிரபஞ்சமே அந்த அன்பின் வெளிப்பாடு என்பது வெளிப்படை அல்லவா! அணுக்களை அணுக்களோடு, மூலக்கூறுகளை மூலக்கூறுகளோடு ஒன்றுசேர்ப்பதும், பெரிய கோள்களை ஒன்றை நோக்கி மற்றொன்று பாயச் செய்வதும், ஆணைப் பெண்ணிடம் ஈர்ப்பதும், பெண்ணை ஆணிடம் ஈர்ப்பதும், மனிதனை மனிதனிடம் ஈர்ப்பதும், மிருகங்களை மிருகங்களிடம் ஈர்ப்பதும், பிரபஞ்சம் முழுவதையும் ஒரு மையத்தை நோக்கி ஈர்ப்பதுபோல் உள்ளதும் எது? அதுவே 'அன்பு' எனப்படுவது.

அனைத்திலும் தாழ்ந்த அணு முதல் மிக உயர்ந்த உயிர் வரை அதன் வெளிப்பாடு தெளிவாகத் தெரிகிறது. அது எங்கும் நிறைந்தது, எல்லாவற்றுள்ளும் இருப்பது. எங்குமே அன்புதான் உள்ளது. எல்லா உயிர்களிலும் எல்லா பொருட்களிலும் சிறப்பானவற்றிலும் பொதுவானவற்றிலும் கவரும் ஆற்றலாகத் தன்னை வெளிப்படுத்துவது இறையன்பே. பிரபஞ்சத்தில் விளங்கும் தூண்டுசக்தி அதுவே. அந்த அன்பின் உந்துதலினால்தான் ஏசு மனிதகுலத்திற்காகத் தமது உயிரை ஈந்தார்; புத்தர் ஒரு மிருகத்திற்காகக்கூட உயிர்விடத் துணிந்தார்; தாய் குழந்தைக்காகவும் கணவன் மனைவிக்காகவும் உயிரைவிடத் துணிகின்றனர். அதே அன்பின் உந்துதலினால்தான் மக்கள் நாட்டிற்காகத் தங்கள் உயிரையும் துறக்க ஆயத்தமாகின்றனர்.

விந்தை என்னவென்றால் அதே அன்பின் உந்துதலால் தான் திருடன் திருடவும், கொலைகாரன் கொலை செய்யவும் செய்கிறான். இந்தச் செயல்களிலுள்ள நோக்கம் ஒன்று தான், வெளிப்பாடுதான் வெவ்வேறாக உள்ளது. பிரபஞ்சத்திலுள்ள தூண்டுசக்தி இது ஒன்றே. திருடன் பொன்னில் அன்பு வைக்கிறான்; அங்கேயும் அன்புதான் உள்ளது, ஆனால் அது தவறான வழியில் செல்கிறது. ஆதலால் அத்தனை தீய செயல்களின் பின்னணியிலும், அத்தனை நற்செயல்களின் பின்னணியிலும் நிற்பது அந்த அழியா அன்பே. நியூயார்க் நகரிலுள்ள ஏழைகளுக்காக ஒருவன் ஆயிரம் டாலர்களுக்கு ஒரு காசோலை எழுதுகிறான், அதேசமயம் அதே அறையில் இன்னொருவன் ஒரு நண்பனின் பொய்க் கையெழுத்தை இடுகிறான். இருவருக்கும் எழுத உதவுகின்ற ஒளி ஒன்றே. ஆனால் அதை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதற்கு அவனவனே பொறுப்பு. ஒளியைக் குறைகூறுவதிலோ புகழ்வதிலோ பொருளில்லை. பற்றில்லாமல் ஒவ்வொன்றிலும் ஒளிர்வது அன்பே. பிரபஞ்சத்தின் தூண்டுசக்தி அதுவே. அது இல்லாவிட்டால் பிரபஞ்சம் ஒரு கணத்தில் தூள்தூளாகிவிடும். அந்த அன்பே இறைவன்.

'அன்பே! கணவனுக்காக எந்த மனைவியும் கணவனிடம் அன்பு செலுத்துவதில்லை. அவனிடம் விளங்கும் ஆன்மாவிற்காகவே அன்பு செலுத்துகிறாள். மனைவியிடம் கணவன் அன்புகொள்வது மனைவிக்காக அல்ல; மனைவியிடம் உள்ள ஆன்மாவிற்காகவே. ஆன்மாவிற்காகவே அல்லாமல் யாரும் வேறு எதிலும் அன்பு செலுத்துவதில்லை.' மிகவும் கண்டிக்கப்

படுவதான தன்னலம் என்பதுகூட அதே அன்பின் வெளிப் பாடுதான். இந்த விளையாட்டிலிருந்து விலகி நில்லுங்கள், இதில் கலந்து கொள்ளாதீர்கள். வியக்கத் தக்க இந்தத் தொடர்காட்சி, அற்புதமான இந்தப் பெரும் நாடகம், ஒவ்வொரு காட்சியாக நடிக்கப்படுவதைக் காணுங்கள். அனைத்தும் சேர்ந்து இசைக்கும் இந்த அற்புத இசையைக் கேளுங்கள். யாவும் ஒரே அன்பின் வெளிப்பாடுகளே. தன்னலத்திலும் அந்த ஆன்மா பெருகி, மேன்மேலும் வளரும். அந்த ஒரே ஆன்மா, அந்த ஒரே மனிதன், மணம் புரிந்து கொள்ளும்போது இரு ஆன்மாக்கள் ஆகிறான்; குழந்தைகளைப் பெற்றுக் கொள் ளும்போது பலவாகிறான். இவ்வாறே வளர்ச்சியடைந்து ஒரு கிராமமாகிறான், ஒரு நகரமாகிறான், இறுதியில் உலகம் முழு வதையும் தனது ஆன்மாவாக, பிரபஞ்சம் முழுவதையும் தனது ஆன்மாவாக உணர்கிறான். இவ்வாறு காலப்போக்கில் ஆன்மா எல்லா ஆண்களையும், எல்லா பெண்களையும், எல்லா குழந்தை களையும், எல்லா மிருகங்களையும், ஏன், பிரபஞ்சத்தையே தன்னுள் சேர்த்துக் கொள்கிறது. எங்கும் பரந்த எல்லை யற்ற பிரபஞ்ச அன்பின் ஒரே தொகுதியாக விரிகிறது! இந்த அன்பே இறைவன்.

உருவங்களும் சின்னங்களும் விடப்பட்ட பராபக்தி என்று கூறப்படும் உயர்பக்தி நிலையை இவ்வாறு அடைகிறோம். இந்த நிலையை அடைந்தவன் எந்தப் பிரிவையும் சேர்ந்த வனாக முடியாது. ஏனெனில் எல்லா பிரிவுகளும் அவனிடம் உள்ளன. அவன் எதில் சேர்வான்! அவன் எந்தக் கோயிலுக்கோ சர்ச்சுக்கோ போக முடியாது. எல்லா கோயில்களும் சர்ச்சுகளும் அவனிடமே உள்ளன அல்லவா! அவனுக்கு ஏற்ற போதிய அளவு பெரிய சர்ச் எங்கு உள்ளது? அத்தகையவனால் வரை யறைக்கு உட்பட்ட சில உருவங்களுள் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாது. எல்லையற்ற அன்போடு அவன் ஒன்றாகும்போது, அந்த அன்புக்கு எல்லை ஏது?

அன்பு-லட்சியத்தைக் கொண்டுள்ள மதங்களில் எல்லாம், அதை வெளிப்படுத்துவதற்கான முயற்சியைக் காண்கிறோம். இந்த அன்பின் பொருளை நாம் அறிவோம். விருப்பங்களும் கவர்ச்சிகளும் நிறைந்த இந்த உலகில் ஒவ்வொன்றும் அந்த எல்லையற்ற அன்பின் முழுமையான அல்லது பகுதியான வெளிப்பாடே என்பது நமக்குத் தெரியும். ஆனால் அதை எப்போதும் வார்த்தைகளால் வெளிப்படுத்த முடிவதில்லை.

எனினும் அதனை மொழியால் விளக்கப் பற்பல நாடுகளிலு முள்ள முனிவர்களும் மகான்களும் முயன்று வந்துள்ளனர். அதன் பரந்த மகிமையில் கடுகளவையேனும் வெளிக்கொண்டு வர மொழியின் திறன் அனைத்தையும் பயன்படுத்துகின்றனர்; மிகத் தீவிரமான காம வெளிப்பாட்டிற்குக்கூட தெய்வீக வண்ணம் கொடுக்கின்றனர். ஹிப்ரு அரசவை முனிவரின்[1] பாடல்கள் அவ்வாறே உள்ளன. இந்திய முனிவர் ஒருவர் பின் வருமாறு பாடுகிறார்—

'என் அன்பே! உன் இதழின் ஒரு முத்தம்! ஆ! நீ தந்த அந்த அன்பு முத்தம், என் ஆசையைப் பெருக்கி இடையறாது உன்பால் ஓட வைத்துவிட்டதே! துன்பங்கள் அனைத்தும் தொலைந்தன; முக்காலத்தையும் மறந்தேன். உன்னை, உன்னை மட்டுமே எண்ணியெண்ணித் திளைக்கிறேன்!'

இதுதான் பிற ஆசைகளெல்லாம் மறைந்த பின்னர் காதலன் கொள்ளும் உன்மத்த நிலை.

'முக்தி யாருக்கு வேண்டும்? மோட்சத்தைப்பற்றி யாருக் குக் கவலை? நிறைநிலையை யார் பொருட்படுத்துவது? சுதந் திரத்தை நாடுவது யார்?' என்கிறான் காதலன். 'செல்வம் வேண்டாம், உடல் நலம் வேண்டாம், அழகும் வேண்டாம், அறிவும் வேண்டாம். உலகில் உள்ள தீமைகள் அனைத்திற்கும் நடுவே மீண்டும்மீண்டும் நான் பிறக்கவும் தயாராக உள் ளேன். அதற்காக நான் முறையிடவே மாட்டேன். ஆனால் அன்பிற்காக உன்னிடம் அன்பு செய்வது மட்டுமே எனக்கு வேண்டும்.'

இந்தப் பாடல்களில் வெளிப்பட்டுள்ள அன்புப்பித்தைப் பாருங்கள். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே இழை யோடும் இந்த அன்புதான் மனித அன்பில் மிக உயர்ந்ததும், மிகவும் வெளிப்படையாக உள்ளதும், மிகுந்த வலிமை படைத் ததும், மிகவும் கவர்ச்சி கொண்டதும் ஆகும். அதனால்தான் மிக ஆழ்ந்த பக்தியை வெளிப்படுத்துவதற்கு இந்த மொழியைப் பயன்படுத்தினர். இந்த மனித அன்புப்பித்து பக்தர்களது அன்புப் பித்தின் மிக மங்கிய எதிரொலியே. இறைவனின் உண்மை யான பக்தர்கள் பித்தர்களாக விரும்புகின்றனர், இறையன்பின் போதையில் மூழ்க விரும்புகின்றனர்; 'தெய்வ-போதை மிக்க மனிதன்' ஆக விரும்புகின்றனர்.

---

1. பழைய ஏற்பாட்டில் வரும் சாலமனின் கீதங்கள்.

ஒவ்வொரு மதத்தைச் சார்ந்த பக்தர்களும் மகான்களும் ஆக்கி அளித்து, தங்கள் இதய ரத்தத்தைப் பெய்து போற்றி வைத்திருக்கும் அன்புக்கிண்ணம் ஒன்று உள்ளது. பயன் கருதாமல் இறைவனை நேசிப்பவர்களும், அன்பிற்காகவே அன்பை விரும்புபவர்களும் எதிர்பார்ப்பவை அனைத்தும் குவிந்துள்ளது அதில்தான். அந்த அன்புக்கிண்ணத்திலிருந்து பருக உண்மை பக்தர்கள் விரும்புகின்றனர். அன்பின் பரிசு அன்பே. அந்தப் பரிசைத்தான் என்னென்பது! நம் துயரங்கள் அனைத்தையும் ஒழிக்கும் ஒரே பொருள் அதுவே. உலகியல் நோயைத் தீர்க்கின்ற ஒரே கிண்ணம் அதுவே. மனிதன் தெய்வப் பித்துக் கொள்கிறான், தான் மனிதன் என்பதை மறக்கிறான்.

பல்வேறு மதங்கள் யாவும் முழு ஐக்கியம் என்னும் ஒரு மையத்தில் இறுதியில் குவிகின்றன. நாம் துவைதத்தில் தொடங்குகிறோம்—இறைவன் தனி, நான் தனி. இருவருக்கும் இடையே அன்பு அரும்புகிறது. மனிதன் இறைவனை அணுகத் தொடங்குகிறான்; இறைவனும் மனிதனை அணுகத் தொடங்குகிறார் போலும்! தந்தை, தாய், தோழன், காதலன் என்று மனித வாழ்க்கையின் பலவகை உறவுமுறைகளையும் கைக்கொள்கிறான். இறுதியில் வழிபடு பொருளோடு ஒன்றுகிறான். 'நான் நீயே; நீ நானே; உன்னை வழிபடும்போது என்னையே வழிபடுகிறேன்; என்னை வழிபடும் வேளையில் உன்னையே வழிபடுகிறேன்'. மனிதன் முதலில் எதைத் தொடங்குகிறானோ அதன் மிக உயர்ந்த முடிவை அங்கே நாம் காண்கிறோம். தொடக்கத்தில் அன்பு தனக்காக உள்ளது. அதன் காரணமாக அது தன்னல அன்பாக இருக்கிறது. இறுதியில் பூரணப் பேரொளி சுடர்விட்டுப் பொலிகிறது. அங்கே சிறிய-நான் என்பது மறைந்து அது எல்லையற்றதாகிறது. எங்கே தொடங்கினோமோ அங்கே முடிக்கிறோம். ஆரம்பத்தில் எங்கேயோ இருப்பவராயிருந்த அந்த இறைவன், எல்லையற்ற அன்பாகப் பரிணமித்தவர்போல் விளங்குகிறார். மனிதனும் மாறிவிடுகிறான். அவன் இறைவனை அணுகுகிறான். முன்பு தன்னிடம் நிறைந்திருந்த வீண் ஆசைகள் அனைத்தையும் விடுகிறான். ஆசை மறைந்தபோது தன்னலம் மறைந்தது. இறுதியில், அன்பும் அன்பு செய்பவனும், அன்பு செய்யப்படுபவனும் இணைந்து ஒன்றாவதைக் காண்கிறான். ❧

# III. கட்டுரைகள்

## பிரார்த்தனை

ஸ தன்மயோ ஹ்யம்ருத ஈசஸம்ஸ்தோ
ஜ்ஞ: ஸர்வகோ புவனஸ்யாஸ்ய கோப்தா।
ய ஈசேஸ(அ)ஸ்ய ஜகதோ நித்யமேவ
நான்யோ ஹேதுர்வித்யத ஈசனாய ॥

யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை।
தம் ஹ தேவம் ஆத்ம புத்தி ப்ரகாசம்
முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே ॥

அவர் பிரபஞ்சத்தின் ஆன்மா. அவர் அழிவற்றவர். அவரே ஆள்பவர், ஆட்சி. அவர் எல்லாம் அறிந்தவர், எங்கும் நிறைந் தவர், பிரபஞ்சத்தைக் காப்பவர், என்றென்றும் ஆள்பவர். அதனை ஆள்வதற்கு அவரைவிடத் திறமை வாய்ந்தவர்கள் வேறு யாரும் இல்லை.

படைப்பின் ஆரம்பத்தில் பிரம்மாவைத் (அதாவது பிரபஞ்ச உணர்வை) தோற்றுவித்து, வேதங்களை அவருக்கு அளித்தவர் அவர். முக்தி பெறுவதற்காக அந்த ஒளி வடிவினரை நான் அடைக்கலம் புகுகிறேன். அவரது ஒளியே புத்தியை ஆன்மாவை நோக்கித் திருப்புகிறது.

—சுவேதாஸ்வதர உபநிடதம், 6. 17–19.



# 1. பக்தியின் இலக்கணம்

உண்மையாக, இயல்பாக இறைவனைத் தேடுவதே பக்தி யோகம். இந்தத் தேடல் அன்பில் தொடங்கி, அன்பில் தொடர்ந்து, அன்பிலேயே நிறைவுறுகிறது. இறைவனிடம் தீவிர அன்புவெறி நம்மிடம் கணப்பொழுது தோன்றினால் போதும், அது அழிவற்ற முக்தியைத் தந்துவிடும். நாரதர் தமது பக்தி சூத்திரங்களில் , 'இறைவனிடம் நாம் பூணும் ஆழ்ந்த அன்பே பக்தி'[1] என்கிறார். 'அதைப் பெறுகின்ற ஒருவன் அனைவரையும் நேசிக்கிறான். யாரையும் வெறுப்பதில்லை. என்றென்றைக்கு மாகத் திருப்தியுற்று விடுகிறான்.'[2] 'உலகப் பொருட்களை அடைவதற்குரிய ஒரு சாதனமாக இந்த அன்பைப் பயன்படுத்தக் கூடாது.'[3] ஏனெனில் ஆசைகள் இருக்கும்வரை இத்தகைய அன்பு வராது. 'பக்தி, கர்மத்தைவிடச் சிறந்தது, யோகத்தைவிட மேலானது. ஏனெனில் இந்த இரு நெறிகளும் ஒரு பயனை முன்வைத்தே கடைப்பிடிக்கப்படுகின்றன. ஆனால் பக்தியின் பயன் பக்தியே. வழியாகவும் முடிவாகவும் பக்தியே விளங்குகிறது.'[4]

பக்தி நமது ரிஷிகளின் முக்கியக் கருத்தாக இருந்து வந் துள்ளது. பக்தி ஆச்சாரியர்களான சாண்டில்யர், நாரதர் போன்றோர் மட்டுமன்றி, ஞானத்தையே சிறப்பித்துப் பேசுபவர் களும், வியாச சூத்திரங்களின் உரையாசிரியர்களுமான ஆச்சாரியர்களும் பக்தியைச் சுட்டிக்காட்டியுள்ளனர். எல்லா வியாச சூத்திரங்களுக்கும் இல்லாவிடினும், பெரும்பாலான சூத்திரங்களுக்கான விளக்கவுரை எழுதும்போது, அவை ஒரு

---

1. ஸா த்வஸ்மின் பரம ப்ரேமரூபா |
2. யல்லப்த்வா புமான் ஸித்தோ பவதி, அம்ருதோ பவதி, த்ருப்தோபவதி |
—நாரத பக்தி சூத்திரங்கள், 4.
3. ஸா ந காமயமனா... |
—நாரத பக்தி சூத்திரங்கள், 7.
4. ஸா து கர்ம ஜ்ஞான யோகேப்யோऽப்யதிகதரா |
ஃபல ரூபத்வாத் |
—நாரத பக்தி சூத்திரங்கள், 25, 26

வித வறண்ட ஞானத்தைக் கூறுகின்றன என்பதை நிலைநாட்டு வதில்தான் உரையாசிரியர்கள் ஆர்வம் காட்டினர். என்றாலும் சில சூத்திரங்கள், குறிப்பாக உபாசனை காண்டத்திலுள்ள சில சூத்திரங்களுக்கு அவ்வாறு எளிதில் திரித்துப் பொருள் கூற அவர்களால் இயலவில்லை.

மக்கள் பொதுவாக எண்ணுவதுபோல், ஞானத்திற்கும் பக்திக்கும் இடையே உண்மையில் அவ்வளவு வேறுபாடு இல்லை. இறுதியில் அவை இணைந்து ஒரு மையத்தில் சந்திப் பதை இந்த நூலின் உள்ளே போகப்போக நாம் காணலாம். ராஜயோகத்தைப் பற்றிய உண்மையும் இதுதான். (துரதிர்ஷ்ட வசமாக இன்று அது மந்திரவாதிகளிடமும் ரகசிய வித்தைக் காரர்களிடமும் ஏறத்தாழ சிக்கிக் கிடக்கிறது.) பாமர மக்களை ஏமாற்றுவதற்கான ஒரு கருவியாக அதைப் பயன்படுத்தாமல், முக்தியை அடைவதற்குரிய சாதனமாகப் பின்பற்றுவோமானால் அதே லட்சியத்திற்கு அது நம்மை இட்டுச் செல்லும்.

இறைவனை அடைவதற்குரிய நெறிகளில் பக்தி எளிமை யானதும் மனித இயல்புக்கு ஏற்றதுமான நெறியாகும். இது பக்தி நெறியினால் வருகின்ற பெரியதொரு நன்மை. ஆனால் பக்தியின் ஆரம்ப காலங்களில், அதாவது கீழ்நிலைகளில், அது அருவருக்கத்தக்க கொள்கைவெறியாக மாறித் தாழ்ந்து போகின்ற ஆபத்தும் பலவேளைகளில் ஏற்பட்டுவிடுகிறது. இந்து மதத்திலும் சரி, முகமதிய, கிறிஸ்தவ மதங்களிலும் சரி, அதில் காணப்படும் மதவெறியர்களின் கூட்டம், பக்தியின் கீழ்மட்ட நிலைகளில் இருப்பவர்களிலிருந்தே உருவாகியிருப் பதைக் காணலாம். தான் அன்பு செய்கின்ற ஒருவரிடம் ஒருமித்த ஈடுபாடு (நிஷ்டை) இல்லாமல் தூய அன்பு வளர முடியாது. ஆனால் பல நேரங்களில் இந்த ஈடுபாடே மற்ற எல்லாவற்றையும் வெறுத்து ஒதுக்குவதற்குக் காரணமாக அமைந்துவிடுகிறது. எந்த மதத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, எந்த நாட்டிலும் சரி, பலவீனமான, வளர்ச்சியுறாத மனிதர்களைப் பொறுத்த வரை, தங்கள் சொந்த லட்சியத்தை நேசிப்பதற்கான ஒரே வழி பிற லட்சியங்கள் அனைத்தையும் வெறுப்பதே. அதனால்தான், தான் வழிபடுகின்ற தெய்வத்திடம் பேரன்பும் பற்றும் கொண் டவன், தனது மதத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவன், பிற மதத்தினரைக் கண்டாலோ கேட்டாலோ எதிர்க்கிறான். எஜ மானுடைய சொத்தைப் பிறர் கவர்ந்து விடாமல் காத்து நிற் கின்ற நாயின் பிறவிக் குணத்தைப் போன்றதே இத்தகைய

வெறி. சொல்லப்போனால் நாயின் குணம் மனிதனின் பகுத் தறிவைவிட மேலானது. ஏனெனில் எஜமான் எந்த வேடத்தில் வந்து நின்றாலும் நாய் அவனை அறிந்துகொள்ளும்: அவனை அது பகைவன் என்று நினைப்பதில்லை. கொள்கைவெறியனோ எல்லா பகுத்தறிவையும் இழந்துவிடுகிறான். தன் சொந்த எண்ணங்களிலேயே ஊறிப்போய் கண்மூடிக் கிடக்கின்ற இவன், மற்றவன் என்ன சொல்கிறான், அவன் சொல்வது நல்லதா கெட்டதா என்பது பற்றியே கவலைப்படுவதில்லை. சொல்பவன் யார் என்பதுதான் அவனது கவலையெல்லாம். தன் மதத்தின ரிடம் இரக்கமுடையவனாக, நல்லவனாக, நேர்மையாளனாக, அன்புடையவனாக இருக்கின்ற இவனே தனது மதக் கோட்பாடு களுக்குப் புறம்பாக உள்ளவர்களுக்குக் கொடிய ஈனச் செயல் களைச் செய்வதற்கும் தயங்குவதில்லை.

இந்த அபாயம் ஆரம்ப நிலையில் உள்ள பக்தியில்தான் (கௌணீ பக்தி) உள்ளது. பக்தி கனிந்து உயரிய (பரா) பக்தியாக உருவெடுக்கும்போது மதவெறியால் ஏற்படும் பயங்கரச் செயல்கள்பற்றி பயம் கொள்ள வேண்டியதில்லை. பராபக்திக்கு வசப்பட்டிருக்கும் பக்தன் அன்பே வடிவான இறைவனுக்கு மிகமிக அருகில் சென்றுவிடுவதால் வெறுப்பைப் பரப்புகின்ற ஒரு கருவியாக இருப்பதில்லை.

நல்ல பண்புகளை இயைபுடன் வளர்த்துக்கொள்ள நம் அனைவராலும் முடிவதில்லை. ஆனால் ஞானம், பக்தி, யோகம் என்ற மூன்றும் இயைபுடன் இணைவதே மிக உன்னதமான பண்பாடு என்பதும் நமக்குத் தெரியும். ஒரு பறவை பறப்பதற்கு மூன்று விஷயங்கள் தேவை: இரண்டு இறக்கைகள், மற்றும் வழி காட்டுகின்ற சுக்கான்போல் ஒரு வால். ஞானம் ஓர் இறக்கை, பக்தி மற்றோர் இறக்கை, சமநிலையைக் காக்கின்ற வால் யோகம். இந்த மூன்று வழிபாட்டு முறைகளை இயைபுடன் பின்பற்ற இயலாமல் அதன் காரணமாக பக்தி ஒன்றையே தங்கள் நெறியாக மேற்கொள்பவர்கள் ஒன்றை என்றும் நினை வில்கொள்ள வேண்டும்: முன்னேறிக் கொண்டிருக்கும் ஒரு வனுக்கு உருவங்களும் சடங்குகளும் மிகவும் இன்றியமையாத வைதான்; ஆனால் அவை ஆழ்ந்த பக்தியை உணர்கின்ற நிலைக்கு நம்மை இட்டுச் செல்லுமே தவிர, அதற்குமேல் அவற் றால் எந்தப் பயனும் இல்லை.

ஞான ஆச்சாரியர்களும், பக்தி ஆச்சாரியர்களும் பக்தியின் வலிமையை ஒப்புக்கொண்டாலும் அவர்களிடையே சிறிதளவு

கருத்து வேறுபாடு இருக்கிறது. முக்திக்கு பக்தி ஒரு கருவி மட்டுமே என்று ஞானிகள் நினைக்கிறார்கள். பக்தர்களோ, அதைக் கருவியாகவும், அதேவேளையில் முடிவிடமாகவும் கருதுகின்றனர். இந்த வேறுபாடு ஒரு பெரிய விஷயமாக எனக்குத் தோன்றவில்லை. உண்மை என்னவென்றால் பக்தி ஒரு கருவியாகப் பயன்படும்போது அது ஒரு கீழ்நிலை வழிபாடு. சற்று உயர்ந்த நிலையில் இதுவே உயர்நிலை வழிபாட்டிலிருந்து பிரித்தறிய முடியாத ஒன்றாகி விடுகிறது. பக்தி முதிரும்போது, பக்தன் தேடாவிட்டாலும் உண்மைஞானம் தானாகவே அவனிடம் வந்து சேர்கிறது. அதுபோல் நிறை ஞானத்திலிருந்து உண்மை பக்தியையும் பிரிக்க முடியாது. இதனை மறந்துவிட்டு ஒவ்வொருவரும் தத்தம் வழிபாட்டு முறையே சிறந்தது என்று வலியுறுத்துவதுபோல் தோன்றுகிறது.

இதை மனத்திற்கொண்டு, வேதாந்த உரையாசிரியர்கள் இதுபற்றி என்ன சொல்கின்றனர் என்பதைக் காண்போம். 'ஆவ்ருத்திரஸக்ருத் உபதேசாத்' என்ற பிரம்மசூத்திரத்தை (4. 1. 1) விளக்குகையில் பகவான் சங்கரர் கூறுகிறார்: 'இவன் அரசனிடம் பக்தி கொண்டுள்ளான், இவன் குருவிடம் பக்தி கொண்டுள்ளான் என்று மக்கள் கூறுகின்றனர். குருவையே புகலிடமாகக்கொண்டு அவரையே வழிபட்டு வருபவனைப் பற்றி இவ்விதம் கூறுகின்றனர். இதுபோலவே அன்புடைய மனைவி தனது அன்புக் கணவனையே தியானித்து வருகிறாள் என்றும் கூறுகின்றனர். இங்கும் ஒருவிதமான ஆர்வத்தோடு கூடிய தொடர்ச்சியான நினைப்புத்தான் குறிக்கப்படுகிறது.' சங்கரரின் கருத்துப்படி இதுவே பக்தி.

'அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா' என்ற சூத்திரத்தின் (1. 1. 1) உரையில் பகவான் ராமானுஜர் கூறுகிறார்: 'ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொரு பாத்திரத்திற்கு ஊற்றப்படும் இடையீடற்ற எண்ணெய் ஒழுக்கைப் போன்று, (தியானிக்கப்படும் பொருளை) இடையீடின்றிச் சிந்திப்பதே தியானம். இப்படி இடையீடின்றித் தொடர்ச்சியாக (இறைவனை) நினைக்க இயலும்போது தளைகள் எல்லாம் அறுபடுகின்றன. எனவேதான் இடையீடற்ற சிந்தனை முக்திக்கு வழி என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. மேலும், இவ்வாறு இடையறாது நினைப்பது காண்பதற்கு நிகரானது. ஏனெனில் இரண்டிற்கும் பொருள் ஒன்றுதான். இதைப் பின்வரும் பகுதியினால் அறியலாம்—

''தூரத்திலும் அருகிலும் இருப்பவர் யாரோ அவரைக் கண்டுவிட்டால் இதயத் தளைகள் அறுபடுகின்றன, சந்தேகங்கள் அகல்கின்றன. வினைப்பயன்கள் அடியோடு மறைகின்றன.''[1] அருகில் இருப்பவனைக் காணலாம். தொலைதூரத்தில் இருப்பவனை நினைக்கத்தான் முடியும். ஆனால், அருகிலும் தொலைவிலுமாக இருப்பவனைக் காண வேண்டும் என்றே கூறுகிறது சாஸ்திரம். எனவே மேற்கூறியதுபோல் நினைப்பது பார்ப்பதற்குச் சமமானதே என்பதுதான் சாஸ்திரத்தின் முடிவு என்பது தெளிவு. நினைப்பது தீவிரமாகும்போது அது காண்பதாகவே ஆகிவிடுகிறது. இடையீடற்ற நினைப்புதான் வழிபாடு என்று சாஸ்திரங்களின் முக்கியப் பகுதிகளும் கூறுகின்றன. தொடர்ந்த வழிபாடே ஞானம். இந்த ஞானம் என்பது இடையீடற்ற நினைப்பு என்று விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு நினைவு என்பது பிரத்தியட்சமாக ஒன்றைக் காண்பது என்ற நிலைக்கு உயர்ந்து விடுமானால், அது முக்திக்கு வழியாகிறது என்றும் சுருதிகள் முழங்குகின்றன. ''இந்த ஆன்மா பல்வேறு விஞ்ஞானங்களாலோ, கூர்த்த அறிவாலோ, வேதங்களைக் கரைத்துக் குடிப்பதாலோ அடையப்படுவது அல்ல. ஆன்மா யாரை விரும்புகிறதோ அவனாலேயே அது அடையப்படுகிறது. அவனுக்குத்தான் ஆன்மா தன்னை வெளிப்படுத்துகிறது.''[2] வெறுமனே கேட்பதோ, சிந்திப்பதோ, தியானிப்பதோ ஆன்மாவை அடையும் வழிகள் அல்ல என்று கூறிய சுருதி மேலும், ''இந்த ஆன்மா யாரை விரும்புகிறதோ அவனாலேயே அடையப்படுகிறது'' என்று கூறுகிறது. ஆழ்ந்த அன்பிற்குரிய பொருளே விரும்பப்படுகிறது. யார் இந்த ஆன்மாவை ஆழ்ந்து நேசிக்கிறானோ அவன் ஆன்மாவின் ஆழ்ந்த அன்பிற்கு உரியவன் ஆகிறான். தன் அன்பிற்குரிய அவன் ஆன்மாவை அடைய ஆண்டவனே அவனுக்கு உதவுகிறான். ஏனெனில் கீதையில் அவரே, ''என்னிடம் நீங்காத பற்று கொண்டவர்கள், என்மீது அன்புகொண்டு என்னையே வழிபடுபவர்கள் என்னையே வந்தடையுமாறு அவர்களது புத்தியை நான்

---

1. பித்யதே ஹ்ருதய க்ரந்தி: சித்யந்தே ஸர்வ ஸம்சயா: ।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே ॥
—முண்டக உபநிடதம், 2. 2. 9.

2. நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ ந மேதயா ந பஹுனா ச்ருதேன ।
யமேவைஷ வ்ருணுதே தேன லப்யஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தனூம் ஸ்வாம் ॥
—கட உபநிடதம், 2. 23.

தூண்டுகிறேன்"[1] என்றல்லவா கூறுகிறார். நேரில் காண்பதற்கு ஒப்பான இந்த நினைப்பு—அந்த நினைப்பின் பொருளுடைய ஆன்மாவின் நேசத்திற்கு உரியதாகையால்—அதிக நேசத்திற்கு உரியதாக யாரிடம் இருக்கிறதோ, அவனையே பரமாத்மாவாகிய இறைவன் விரும்புகிறார். அவனாலேயே ஆன்மாவும் அடையப் படுகிறது என்று அதனால்தான் கூறப்படுகிறது. இந்த இடை யீடற்ற நினைப்பே பக்தி என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.'

பதஞ்ஜலி முனிவருடைய 'ஈச்வர ப்ரணிதானாத் வா—இறைவனை வழிபடுவதால்' என்னும் யோக சூத்திர (1.28) உரையில் போஜர், 'புலனின்பங்கள் முதலான எந்தப் பலன் களையும் நாடாமல், செய்யும் செயல்களை எல்லாம் குருவுக் கெல்லாம் குருவாக விளங்கும் இறைவனுக்கு அர்ப்பணம் செய் கின்ற பக்தியே ப்ரணிதானம்' என்று கூறுகிறார். பகவான் வியாசரும் இந்தச் சூத்திரத்தின் விளக்கத்தில் 'எந்த வகை பக்தியின் விளைவாக இறைவனின் கருணை யோகியின்மீது பொழிந்து அவனது விருப்பங்களை நிறைவேற்றி வைப்ப துடன் ஆசியும் வழங்குகிறதோ அதுவே ப்ரணிதானம்' என்று கூறுகிறார். சாண்டியல்யர் 'ஆழ்ந்த இறையன்பே பக்தி'[2] என்கிறார்.

ஆனால் பக்திக்கு மிகச் சிறந்த விளக்கம் பக்த சிகாமணி யாகிய பிரகலாதனால் கூறப்பட்டுள்ளது:

யா ப்ரீதிரவிவேகானாம் விஷயேஷ்வனபாயினீ |
த்வாமனுஸ்மரத: ஸா மே ஹ்ருதயான் மாபஸர்ப்பது: ||[3]

நிலையற்ற புலனின்பப் பொருட்கள்மீது பாமரர்கள் வைக்கின்ற அழிவில்லாத அதே அன்பு, உன்னைத் தியானம் செய்யும்போது என் மனத்தில் சிறிதும் வழுவாதிருக்குமாக!'

அன்பு! யாருக்காக? மாபெரும் தலைவனாகிய இறைவனுக் காக. இறைவனைத் தவிர பிற பொருட்களின்மீது—அவை எவ் வளவுதான் உயர்ந்தவையாக இருந்தாலும்—நாம் வைக்கும் அன்பு பக்தியாக முடியாது. காரணம், ஒரு புராதன ஆச்சாரி யாரின் கூற்றை மேற்கோள் காட்டி ராமானுஜர் தமது ஸ்ரீபாஷ்யத்தில் கூறுவதுபோல்:

---

1. தேஷாம் ஸதத யுக்தானாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம் |
தாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே ||

—கீதை, 10.10

2. ஸா பரானுரக்திரீச்வரே |

—சாண்டில்ய பக்தி சூத்திரங்கள், 2.

3. விஷ்ணு புராணம், 1.20.17

'ஆப்ரஹ்மஸ்தம்ப பர்யந்தா: ஜகதந்தர்வ்யவஸ்திதா ।
ப்ராணின: கர்மஜனித ஸம்ஸாரவர்த்தின: ॥
யதஸ்ததோ ந தே த்யானே த்யானினாமுபகாரகா: ।
அவித்யாந்தர்கதா: ஸர்வே தே ஹி ஸம்ஸார கோசரா: ॥

—பிரம்மா முதல் புல் வரையில் உலகில் வாழும் எல்லாமே வினைப்பயனால் வரும் பிறப்பு மற்றும் இறப்பின் அடிமைகளாக உள்ளன. அவை எல்லாமே அறியாமையில் உழல்பவை, மாறும் இயல்புடையவை. எனவே தியானிக்கப்படும் பொருட்களாக அவை நமக்குத் தியானத்தில் உதவ முடியாது.'

சாண்டில்யர் பயன்படுத்திய அனுரக்தி என்ற சொல்லை விளக்கும்போது சுவப்னேசுவரர் தமது உரையில் கூறுகிறார்: 'அனு என்றால் பின்னர், ரக்தி என்றால் பற்று' அதாவது இறைவன் இயல்பையும் பெருமைகளையும் அறிந்தபிறகு அவரிடம் ஏற்படும் பற்று. இல்லாவிடில் மனைவிமக்களிடம் ஏற்படுகின்ற குருட்டுத்தனமான பற்று பக்தி என்றாகிவிடும். எனவே சாதாரண வழிபாட்டில் ஆரம்பித்து, ஆழ்ந்த உயரிய இறையன்பில் முடிவடைவதான இறையனுபூதிக்காக, தொடர்ந்து மனத்தால் செய்யப்படுகின்ற இடைவிடாத முயற்சியே பக்தி என்பது தெளிவாகத் தெரிகிறது. ❀

## 2. கடவுள் தத்துவம்

கடவுள் என்பவர் யார்? 'ஜன்மாத்யஸ்ய யத:—யாரிடம் பிரபஞ்சத்தின் தோற்றம், நிலைபெறல், ஒடுக்கம் இவை நடைபெறுகின்றனவோ'[1] அவரே கடவுள். அவர் என்றும் உள்ளவர், எப்போதும் தூயவர், என்றும் சுதந்திரர், எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர், கருணை வடிவினர், குருவிற்கெல்லாம் குருவானவர், எல்லாவற்றிற்கும் மேலாக 'ஸ ஈச்வர:, அநிர்வசனீய ப்ரேம ஸ்வரூப:—அந்த இறைவன் சொல்லுக்கு அடங்காத அன்பு வடிவினன்.'[2]

இந்த விளக்கங்கள் நிச்சயமாக சகுணக் கடவுளுக்கானவை. அப்படியானால் இரண்டு கடவுள்கள் இருக்கிறார்களா? தத்துவ ஞானியின் 'இதுவல்ல, இதுவல்ல' என்ற சச்சிதானந்தக் கடவுள், பக்தனின் அன்பே வடிவான கடவுள் என்று இரண்டு கடவுளரா? இல்லை. சச்சிதானந்தப் பொருள் எதுவோ அதுவே அன்புமூர்த்தியும். நிர்க்குணமும் சகுணமும் ஒருவரே. பக்தன் வழிபடுகின்ற சகுணக் கடவுள், பிரம்மத்திலிருந்து வேறானவரோ, வேறுபாடு உள்ளவரோ அல்ல என்பதை நாம் உணர வேண்டும். எல்லாமே இரண்டற்ற ஒன்றேயான பிரம்மம் தான். ஒருமையாகவும் தனிமையாகவும் உள்ள பிரம்மம், மனத்தால் உணர முடியாதபடி மிகமிக நுண்ணியதாக இருப்பதால் நம்மால் அன்பு செலுத்தவோ வழிபடவோ இயலாதபடி விளங்குகிறது. எனவே பக்தன் பிரம்மத்தை, குணங்களோடு கூடிய நிலையில் அதாவது உலகங்கள் அனைத்தையும் ஆள்பவராகிய இறைவனாகக் கொள்கிறான்.

இதை ஓர் உவமை வாயிலாக விளக்கலாம். களிமண்ணிலிருந்தோ அல்லது வேறு ஏதாவது ஒரு மூலப்பொருளிலிருந்தோ எண்ணிலடங்காத விதவிதமான பொருட்கள் செய்யப்படுகின்றன. களிமண்ணாகப் பார்க்கும்போது எல்லாமே

---

1. பிரம்ம சூத்திரம், 1. 1. 2.
2. சாண்டில்ய பக்தி சூத்திரங்கள், 3.

ஒன்றுதான். ஆனால் உருவத்தில், புறத் தோற்றத்தில் அவை பல்வேறாக உள்ளன. அவை ஒவ்வொன்றும் செய்யப்படுவதற்கு முன் தோன்றாநிலையில் மண்ணில் இருக்கவே செய்தன. மூலப்பொருள் நிலையில் அவை எல்லாம் ஒரே தன்மை உடையவை. ஆனால் வடிவம் பெற்ற பின்னர், அந்த வடிவம் நிலைத்து நிற்கும்வரை அவை தனித்தன்மை கொண்டவை, வெவ்வேறானவை. களிமண் சுண்டெலி ஒருநாளும் களிமண் யானையாக முடியாது. காரணம், களிமண்ணோடு களிமண் ணாய் ஒன்றாக இருந்த அவை, உருவம் பெற்ற அளவில், உருவம் காரணமாக வெவ்வேறாகிவிட்டன. உருவம் பெறாத களிமண் நிலையில் அவை எல்லாமே ஒன்றுதான். அது போன்றே, அறுதி உண்மையான பிரம்மத்தின் மிகவுயர்ந்த வெளிப்பாடு இறைவன். இன்னும் தெளிவாகச் சொல்வதானால், பிரம்மத்தைப்பற்றி மனித மனத்தினால் உணரமுடிந்த மிக வுயர்ந்த கருத்து இறைவன். படைப்பு அனாதி காலந்தொட்டு என்றும் இருந்துவருவது, இறைவனும் அப்படியே.

மோட்சத்தை அடைந்தபிறகு, முக்த ஆன்மா பெறுகின்ற ஏறக்குறைய எல்லையற்ற ஆற்றலையும் அறிவையும் பிரம்ம சூத்திரம் நான்காம் அத்தியாயத்தில், நான்காம் பாதத்தில் வியாச பகவான் குறிப்பிடுகிறார். 'ஆனால் பிரபஞ்சத்தைப் படைத்தல், காத்தல், ஒடுக்குதல் என்னும் முத்தொழில்களைச் செய்வதற்கான ஆற்றலை வேறு யாரும் பெற முடியாது; அது இறைவனுக்கே உரியது' என்று தொடர்கின்ற மற்றொரு சூத் திரத்தில் கூறுகிறார். துவைத உரையாசிரியர்கள், 'சார்ந்தே விளங்கும் இயல்புடைய ஜீவன், தனித்தலைமையுடைய இறை வனின் எல்லையற்ற ஆற்றலையும், முழுச் சுதந்திரத்தையும் ஒருபோதும் பெற இயலாது' என்று பொருள் கூறி இந்தச் சூத்திரத்தை வெகு எளிதாக விளக்கி விடுகிறார்கள். தீவிர துவைத உரையாசிரியரான மத்வாச்சாரியர், தமக்கே உரிய தொகுத்துக்கூறும் பாணியில் வராஹ புராணத்தில் வரும் ஒரு பாடலை மேற்கோள் காட்டி இந்தச் சூத்திரத்தை விளக்கிச் சொல்கிறார்.

இந்தச் சூத்திரத்தின் உரையில் ராமானுஜர் எழுதுகிறார்—

'இங்கு ஓர் ஐயம் எழுப்பப்படுகிறது: முக்தி பெற்ற ஜீவன்கள் பல்வேறு ஆற்றல்களைப் பெறுகின்றன. இறை வனுக்கே உரிய பிரபஞ்சப் படைப்பு முதலான சிறப்புச் சக்தி யும், எல்லா உலகங்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் ஒரே

அதிபதியாக இருப்பதும் இவற்றுள் அடங்குமா? அல்லது அவை எதுவுமின்றி, முக்தி பெற்றவர்களின் பெருமையெல்லாம் அந்தப் பரம்பொருளை நேராகக் காண்பதுடன் நின்றுவிடுமா?

'இதனைத் தொடர்ந்து பின்வரும் வாதத்தை நாம் காண்கிறோம்: முக்தி பெற்றவன் அனைத்து உலகங்களையும் இயக்கியாளும் தலைமையை எய்துகிறான் என்பது அறிவுபூர்வமானதே. ஏனெனில் சாஸ்திரங்களும், ''பரம்பொருளின் மேலான அதே நிலையை அவனும் அடைகிறான்; அவனது விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறுகின்றன'' என்றே கூறுகின்றன. இனி, மேலான அதே நிலையை அடைவதும், விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறப் பெறுவதும், பரம்பொருளின் தனிப்பேராற்றல் அதாவது பிரபஞ்சத்தை ஆளும் ஆற்றல் இன்றி நடைபெற முடியாது. எனவே முக்தி பெற்றவனின் விருப்பங்கள் நிறைவேறுகின்றன, அவன் மேலான நிலையில் இறைவனோடு ஒன்றியிருக்கிறான் என்னும்போது, உலகங்களை இயக்கியாளும் ஆற்றலையும் பெறுகிறான் என்பதை ஏற்றுக்கொண்டுதானே தீர வேண்டும்!

'இதற்கு நாம் தரும் பதில் இதுதான்: முக்தி பெற்றவன் பிரபஞ்சத்தை ஆளும் தனித்தலைமை தவிர பிற எல்லா ஆற்றல்களையும் பெறுகிறான். உலகை ஆள்வது என்பது உயிருள்ளவை, உயிரற்றவை ஆகியவற்றின் உடல், வாழ்க்கை, விருப்பங்கள் அனைத்தையும் வழிநடத்துவதைக் குறிப்பதாகும். முக்தி பெற்றவர்களுக்கு இந்த ஆற்றல் கிடையாது. அவர்களின் ஆன்ம சொரூபத்தை மறைத்துக் கொண்டிருக்கும் திரைகள் அகன்றுவிடுவதால், பிரம்மத்தின் தடையற்ற காட்சியில் எப்போதும் ஆழ்ந்து மகிழ்ச்சியில் திளைக்கிறார்கள். பின்வரும் சாஸ்திர மேற்கோளால் இது நிரூபிக்கப்படுகிறது—''யாரிடமிருந்து இந்த அனைத்துப் பொருட்களும் தோன்றியுள்ளனவோ, பிறந்தவை அனைத்தும் யாரால் வாழ்கின்றனவோ, இறந்தபின் அனைத்தும் யாரிடம் ஒடுங்குகின்றனவோ அவரே பிரம்மம்.''[1]

'உலகை ஆளும் ஆற்றல் முக்தி அடைந்தவர்களுக்கும் பொதுவானது என்றால், மேலே குறிப்பிட்ட மேற்கோள் பிரம்மத்திற்கான விளக்கம் என்பது இங்கு பொருந்தாமல்

---

1. யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேன ஜாதானி ஜீவந்தி।
யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி தத் விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி ॥
—தைத்திரீய உபநிடதம், 3.1.1

போகிறது. ஏனெனில் இந்த விளக்கம் அவர்மூலமாக மட்டுமே இந்தப் பிரபஞ்சம் நடைபெறுகிறது என்று கூறுகிறது. பிற எதற்கும் இல்லாத சிறப்புப் பண்புகளைக் கொண்டுதான் ஒரு பொருளைச் சரியாக விவரிக்க முடியும். பின்வரும் சாஸ்திரப் பகுதிகளில் பிரம்மத்தைப் பற்றிய பகுதியையும் பார்ப்போம்—

''என் அருமை மாணவனே! ஆரம்பத்தில் இரண்டற்ற ஒரே பொருள்தான் தன்னந்தனியாக இருந்தது. அது சிந்தித்தது. பின்னர், 'பலவற்றைத் தோற்றுவிப்பேன்' என்றது. அதிலிருந்து சூடு உண்டாயிற்று.''[1]

''உண்மையில் பிரம்மம் ஒன்றே ஆரம்பத்தில் இருந்தது. அது பரிணமித்தது. அது க்ஷத்திரம் என்ற புண்ணிய வடிவினைத் தோற்றுவித்தது. வருணன், சோமன், ருத்திரன், பர்ஜன்யன், எமன், மிருத்யு, ஈசானன் முதலான தேவர்கள் க்ஷத்திரங்களே.''[2]

''உண்மையில் ஆன்மா ஒன்றே ஆரம்பத்தில் இருந்தது. வேறு எதுவும் இயங்கவில்லை. ஆன்மா உலகைப் படைக்க எண்ணம் கொண்டது. பிறகு உலகைத் தோற்றுவித்தது.''[3]

''நாராயணன் மட்டுமே இருந்தார். பிரம்மனோ, ஈசானனோ, தியாவா பிருதிவியோ, நட்சத்திரங்களோ, நீரோ, நெருப்போ, சந்திரனோ, சூரியனோ யாருமே அப்போது இல்லை. தன்னந்தனியாக இருப்பதில் அவருக்கு மகிழ்ச்சி உண்டாகவில்லை. எனவே தியானத்தில் ஆழ்ந்தார். அதற்குப் பிறகு ஒரு மகளையும் பத்து அங்கங்களையும் இன்னும் பல வற்றையும் உருவாக்கினார்.''

'இன்னும் வேறு நூல்களில் பரம்பொருளைப் பற்றிப் பேசும்போது, ''பூமியில் வாழ்ந்துவந்தாலும் அது பூமியிலிருந்து வேறுபட்டது: அது ஆன்மாவில் வாழ்ந்து......''[4] என்றெல்லாம் உலகை ஆளும் அதன் செயலைக் கூறுகின்றன. இந்த விளக்கங் களில் எல்லாம் பிரபஞ்சத்தின்மீது இறைவனின் தனித்தலைமை பேசப்படுகிறதே தவிர, முக்தி பெற்ற ஆன்மாவைப் பற்றிய குறிப்போ அல்லது உலகத் தலைமை அதற்குக் கொடுக்கப் பட்டதாகவோ எந்தச் செய்தியும் இல்லை.'

அடுத்த சூத்திரத்தை விளக்கும்போது ராமானுஜர் கூறு கிறார்: 'அப்படியல்ல, இந்தக் கருத்தை நேரடியாக மறுக்கும்

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 2. 1 & 6. 2. 3
2. பிருஹதாரண்யக உபநிடதம், 1. 4. 11
3. ஐதரேய உபநிடதம், 1. 1. 1
4. பிருஹதாரண்யக உபநிடதம், 3. 7. 3

பல பகுதிகள் வேதங்களில் காணப்படுகின்றனவே என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் இந்தப் பகுதிகள் தேவர்களின் உலகில் வாழ்பவர்களான முக்த புருஷர்களின் மகிமையைத் தான் சுட்டிக்காட்டுகின்றன.' இதுவும் பிரச்சினைக்கு எளிதான தீர்வாகத்தான் உள்ளது.

ராமானுஜரின் கோட்பாடு, முழுமையின் ஒருமையை ஏற்றுக்கொள்கிறது. ஆனால் அந்த முழுமைக்குள் நிலையான வேறுபாடுகள் உள்ளன என்பது அவரது கருத்து. ஆகவே இந்த வேதாந்தம் நடைமுறையில் துவைதமாகவே இருப்பதால் முக்தியடைந்த ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் இடையில் உள்ள வேறுபாட்டை ராமானுஜர் மிகத் தெளிவாக, எளிதாக விளக்கி விடுகிறார்.

இனி, அத்வைத நெறியின் மாபெரும் பிரதிநிதி இது பற்றி என்ன சொல்கிறார் என்று பார்ப்போம். துவைதிகளின் நம்பிக்கைகளையும் எண்ணங்களையும் அத்வைதம் அப்படியே முழுமையாக ஏற்கிறது. அதேவேளையில் மனித இனத்தின் மிகவுயர்ந்த தெய்வீக லட்சியத்தைக் கருத்திற்கொண்டு இந்தப் பிரச்சினைக்கான தீர்வையும் தருகிறது.

முக்தி பெற்ற பிறகும் தங்கள் ஜீவாத்ம உணர்வை இழந்து விடாமல் தனித்து வேறாக இருக்க விரும்புபவர்கள், தங்கள் விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்ள எல்லா வாய்ப்புக்களையும் பெறுவதோடு, குணங்களோடு கூடிய பிரம்மத்தின் பேரருளையும், பேரானந்தத்தையும் அனுபவிக்கின்றனர். இத்தகையோரைப் பற்றித்தான் பாகவத புராணம் பேசுகிறது: 'மன்னா! தங்கள் பிணைப்புகள் அனைத்திலிருந்தும் விடுபட்டு, ஆத்மானந்தத்தில் மூழ்கியிருக்கின்ற ரிஷிகள்கூட, எங்கும் நிறைந்திருக்கும் இறைவனிடம் அன்புக்காகவே அன்பு செலுத்துகிறார்கள். இறைவனின் பெருமை அவ்வளவு மகத்துவம் வாய்ந்தது!'[1]

சாங்கியர்கள் இத்தகையோரை இன்னொரு விதமாகப் போற்றுகிறார்கள்: இவர்கள் ஒரு கல்பத்தில் பிரகிருதியோடு ஒன்றாகியிருக்கின்றனர். அடுத்த கல்பத்தில் இவர்கள் உலகத்தை ஆள்பவர்களாக வரக்கூடும். ஆயினும் இவர்கள் யாரும் இறைவனுக்கு நிகராக மாட்டார்கள்.

அனைத்திற்கும் அப்பாற்பட்ட ஒரு பெருநிலையை அத்வைதம் கூறுகிறது. அந்த நிலையில் படைப்பு, படைக்கப்படும்

---

1. பாகவதம், 1.7.10; பக்கம் 00 அடிக்குறிப்பு காண்க.

பொருள், படைப்பவர் என்று எதுவும் இல்லை. காண்பவன், காணப்படும் பொருள், காட்சி என்றில்லை. நான், நீ, அவன் என்பவை இல்லை. செய்பவன், செய்யப்படும் பொருள், தொடர்பு எதுவும் இல்லை. 'அங்கே யார் யாரைக் காண்பது?'[1] இத்தகைய பெருநிலையை அடைந்தவர்கள் எல்லாவற்றையும் கடந்துவிடுகின்றனர்; 'வாக்கும் மனமும் போக முடியாத நிலையை' அடைகின்றனர்; 'இதுவல்ல, இதுவல்ல' என்று வேதங்கள் கூறுகின்ற இடத்தை எட்டிவிடுகின்றனர். இந்தப் பெருநிலையை அடையாதவர்களுக்கும், அடைய இயலாத வர்களுக்கும், பிரகிருதி, ஆன்மா, இந்த இரண்டையும் காப்ப வனும் அவையிரண்டினுள் ஊடுருவியிருப்பவனும் ஆகிய இறைவன்—இந்த மூன்றின் பிரிக்கவொண்ணா பிணைப் பாகிய பிரம்மத்தின் காட்சி கட்டாயமாகக் கிடைக்கிறது.

எனவேதான் பிரகலாதன் தன்னை மறந்தபோது உல கையோ, அதன் மூலகாரணத்தையோ காணவில்லை. அவன் கண்டதெல்லாம் பெயரும் உருவமுமற்ற, பிரிக்க முடியாத, எல்லையற்றதான ஒன்றைத்தான். ஆனால், தான் பிரகலாதன் என்ற நினைவு எழுந்தபோது அவன் கண்முன் உலகம் விரிந்து, கூடவே உலகின் தலைவனான 'அனந்த கல்யாண குணங்களின் இருப்பிடமான' இறைவனும் தோன்றினார்.

பேறு பெற்றவர்களான கோபியரின் நிலையும் இதுவே. தாங்கள் இன்னார் என்பதையும், தங்கள் தனித்தன்மையையும் இழந்த நிலையில் அவர்கள் கிருஷ்ணர்களாகவே மாறிவிட் டார்கள். கிருஷ்ணன் தங்கள் வழிபடுதெய்வம் என்ற எண்ணம் எழுந்ததும் மீண்டும் கோபியரானார்கள். உடனே அவர்கள்முன்,

தாஸாமாவிரபூச்செளரி: ஸ்மயமான முகாம்புஜ: ।
பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷான் மன்மத மன்மத: ॥[2]

—தாமரை போன்ற முகத்தில் புன்னகை அரும்ப, பட்டுப் பீதாம்பரம் அணிந்து, மலர் மாலைகள் சூடி, அழகில் காதற் கடவுளான மன்மதனுக்கும் ஒரு மன்மதனாக ஸ்ரீகிருஷ்ணர் தோன்றினார்.

இப்போது நாம் ஆச்சாரிய சங்கரரிடம் திரும்புவோம். அவர் கூறுகிறார்—'சகுண பிரம்மத்தை வழிபடுவதன்மூலம்

---

1. யத் ந வா அஸ்ய ஸர்வம் ஆத்மைவாபூத் தத்கேன கிம் ஜிக்ரேத் கேன கம் பச்யேத்?

—பிருஹதாரண்யக உபநிடதம், 2. 4. 14

2. பாகவதம், 10. 32. 2.

தனிமுதல் தலைவனாகிய இறைவனுடன் இணைகின்றனர். அதேவேளையில் தங்கள் சொந்த மனத்தையும் தக்கவைத்துக் கொள்கின்றனர். இவர்களின் பெருமை எல்லைக்கு உட்பட்டதா, எல்லையற்றதா? இந்தச் சந்தேகத்திற்கு விடையாக ஒரு வாதம் வருகிறது—அவர்களுடைய பெருமை எல்லையற்றதாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில் சாஸ்திரங்கள், ''தங்களுக்குரிய அரசை அவர்கள் பெறுகிறார்கள்''[1], ''எல்லா தேவதைகளும் அவர்களை வழிபடுகின்றனர்''[2], ''எல்லா உலகங்களிலும் அவர்களின் ஆசைகள் நிறைவேறுகின்றன''[3] என்றே கூறுகின்றன. இதற்கு விடைபோல் வியாசர் ''உலகை ஆளும் ஆற்றலைத் தவிர'' என்று எழுதுகிறார்.

'படைத்தல் முதலிய சக்திகளைத் தவிர பிற அணிமா முதலிய எல்லா ஆற்றல்களையும் முக்தர்கள் பெறுகிறார்கள். உலகை இயக்கியாளும் தனித்தலைமை, என்றும் பரிபூரணனான இறைவனுக்கே எப்போதும் உரியது. ஏன்? ஏனெனில் படைப்பைப் பற்றி விளக்கும் இடங்களில் எல்லா சாஸ்திரங்களும் இறைவனையே பொருளாகக் கொண்டு பேசுகின்றன; முக்த புருஷர்களைப் பற்றிய பேச்சே இல்லை. உலகை ஆளும் தனித்தலைமை, பரம்பொருள் ஒருவருக்கே உரியது. படைப்பைப்பற்றிக் கூறும் நூல்களும் பரம்பொருளையே சுட்டுகின்றன. ''என்றும் பரிபூரணன்'' என்னும் அடைமொழியும் அவருக்கே வழங்கப்பட்டுள்ளது. மேலும், இறைவனை வழிபட்டதன் விளைவாகவே, பரம்பொருளைத் தேடியதன் பலனாகவே அணிமா முதலான சக்திகள் முக்தர்களுக்குக் கிடைத்துள்ளன என்றுதான் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகவே முக்த ஜீவர்களுக்கு உலகை ஆளும் தனித் தலைமையில் இடமில்லை என்பது தெளிவாகிறது.

'அதுமட்டுமின்றி, முக்த ஜீவர்கள் மனத்தைத் தங்களிடமே நிறுத்திக் கொள்வதால் அவர்களது எண்ணங்கள் மாற வாய்ப்பு உள்ளது. ஒருவர் படைக்க விரும்பினால் இன்னொருவர் அழிவை விரும்பக்கூடும். ஆகவே இத்தகைய விபரீதங்கள் நிகழாமலிருக்க, எல்லா எண்ணங்களும் ஒரு மகா எண்ணத்திற்கு

---

1. ஆப்னோதி ஸ்வாராஜ்யம் ||
—தைத்திரீய உபநிடதம், 1. 6. 2.
2. ஸர்வே஽ஸ்மை தேவா பலிமாவஹந்தி ||
—தைத்திரீய உபநிடதம், 1. 5. 3
3. தேஷாம் ஸர்வேஷு லோகேஷு அகாமசாரோ பவதி
—சாந்தோக்கிய உபநிடதம், 7. 25. 2.

அடக்கம் என்று கொள்வதே பொருத்தமானது. எனவே முக்த ஜீவர்கள் பரம்பொருளுக்கு அடங்கியவர்களே என்பதை நாம் முடிந்த முடிவாகக் கொள்ளலாம்.'

அதனால் பிரம்மத்தின் சகுண வடிவத்திடமே நாம் பக்தி கொள்ள முடியும். 'க்லேசோ அதிகதரஸ்தேஷாம் அவ்யக் தாஸக்த சேதஸாம்—நிர்க்குண பிரம்மத்திடம் மனத்தைப் பதிய வைக்கும் பாதையில் செல்வது மிகக் கடினமானது.'[1] ஆகையால் பக்தி நமது இயல்பிற்கு ஏற்ப இயைந்து இதமாகச் செல்ல வேண்டும். மனிதவுணர்வு கலவாத பிரம்மத்தைப்பற்றிய கருத்தை நாம் கொள்வது சாத்தியமில்லை என்பது உண்மைதான். சிந்தித்துப் பார்த்தால் நாம் அறிகின்ற அனைத்தைப் பொறுத்த வரையிலும்கூட இது உண்மையே அல்லவா! அகத்திலும் புறத் திலும் நாம் பெறுகின்ற அனுபவங்கள் மற்றும் நமது கருத் துக்கள்—இவற்றை நமக்குத் தருகின்ற பொருட்கள் எல்லாம் மனிதவுணர்வு கலந்ததாகவே இருக்கும் என்ற கருத்தை, உலகம் இதுவரை கண்டவர்களுள் மகத்தான மனஇயல் ஞானியான கபிலர் நீண்ட காலத்திற்கு முன்பே நிறுவியிருக்கிறார். மனித உடல் முதல் இறைவன் வரையிலும் நாம் அனுபவிக்கின்ற ஒவ்வொரு பொருளும் மனிதவுணர்வும் இன்னொன்றும் சேர்ந்ததே—அந்த இன்னொன்று எதுவாக இருந்தாலும் சரி. இந்தத் தவிர்க்க முடியாத கலவையைத்தான் நாம் உண்மைப் பொருள் என்று பொதுவாகக் கூறுகிறோம். அது உண்மை தான். மனிதன் தன் மனத்தினால் அறியக்கூடிய பொருட் களின் உண்மை என்பது இப்படித்தான் என்றென்றும் இருக்கவும் செய்யும். எனவே, இறைவன் மனிதவுணர்வு கலந்தவன் என்பதால் அவன் இல்லை என்பது வடிகட்டின முட்டாள்தனம்.

உண்மை (Real) என்ற சொல்லிற்குப் பொருள் காண்பதில் எழுந்த கருத்து வேறுபாட்டினால், மேலை நாட்டில் லட்சிய வாதிகளும் (Idealism) பிரத்தியட்சவாதிகளும் (Realist) பயங்கர மாக மோதிக்கொண்டனர். அஞ்சத் தகுந்த சொற்போர்கள் நிகழ்ந்தன. முட்டாள்தனமான இந்தக் கருத்தும் வாய்ச்சொல் வீரம் போன்றதே. உண்மை என்னும் சொல் இதுவரை எதை யெல்லாம் குறிப்பிட்டு வந்துள்ளதோ, எதையெல்லாம் பொரு ளாகக் கொண்டதோ அவை அத்தனையையும் தழுவி நிற்பது

---

1. கீதை, 12.5

இறைவன்பற்றிய கருத்தாகும். இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு பொருளும் எந்த அளவிற்கு உண்மையோ அந்த அளவிற்கு இறைவனும் உண்மை. பார்க்கப் போனால் உண்மை என்ற சொல் இப்பொழுது கூறப்பட்ட கருத்தைத் தவிர அதிகமாக வேறு எதையும் குறிக்கவில்லை. இறைவன் (ஈசுவரன்) என்பதற்கு நமது தத்துவ விளக்கம் இதுவே. ❀

## 3. ஆன்மீக அனுபூதியே
## பக்தியோகத்தின் குறிக்கோள்

இந்த வறட்டு விளக்கங்கள் எல்லாம் ஒரு பக்தனுக்கு மனத் திடத்தை உறுதிப்படுத்தத் தேவைப்படுகின்றனவே தவிர அதற்கு மேல் அவற்றால் அவனுக்கு எந்தப் பயனும் இல்லை. ஏனெனில் அவன் செல்கின்ற பாதை அவனை, தெளிவற்றதும் கொந்தளிப்பு மிக்கதுமான ஆராய்ச்சிநிலைகளைக் கடக்கச் செய்து, வெகுவிரைவில் ஆன்மீக அனுபூதி பெறும் நிலைக்கு உயர்த்தத் தகுதி வாய்ந்ததாக உள்ளது. இறைவனின் திருவருளால் அவன் அந்த உன்னத நிலையை விரைவில் அடைகிறான். அங்கே செருக்குமிக்க, வலுவிழந்த ஆராய்ச்சிக்கு இடமில்லை. வெற்று அறிவின் துணையுடன் இருளில் உழன்றுகொண்டிருக்கும் அலைச்சல்கள் இல்லை. அங்கே நேரடி அனுபூதியாகிய ஒளியை அவன் தரிசிக்கிறான். அதற்குப் பிறகு, அவன் ஆராய்வதும் நம்புவதும் நின்றுவிடுகிறது; அவன் ஏறக்குறைய அனுபவிக்கவே செய்கிறான். அவன் விவாதிப்பதில்லை, உணர்கிறான். இறைவனைக் காண்பதும், உணர்வதும், இறையின்பத்தை அனுபவிப்பதும் மற்ற அனைத்தையும்விட உயர்ந்தது அல்லவா! ஏன், இது முக்தியைவிட உயர்ந்தது என்று கொள்ளும் பக்தர்கள்கூட உள்ளனர். நாம் அடையக்கூடிய மிகப் பெரும் பயன் இதைவிட வேறு ஏதாவது இருக்க முடியுமா?

இதற்கு மாறாக, உலகில் சிலர் இருக்கிறார்கள்—ஏன், நிறையவே இருக்கிறார்கள்—அவர்கள் தங்களுக்குச் சுகபோகங்களைத் தருபவையே பயனுடையவை என்று உறுதியாக நம்புகிறார்கள். மதமோ, கடவுளோ, நிலைத்த தன்மையோ, ஆன்மாவோ—எதுவும் அவர்களுக்குத் தேவையில்லை. ஏனெனில் அவை அவனுக்குப் பணமோ, வாழ்க்கை வசதிகளோ தரவில்லை அல்லவா? புலன்களுக்கு இன்பம் தராத, ஆசைகளைப் பூர்த்தி செய்யாத எதுவும் அவர்களைப் பொறுத்தவரை பயனற்றவை. வாழ்க்கைக்குப் பயன்படுவது எதுவென்பதை ஒவ்வொருவரும் தங்கள் சுய தேவையை வைத்தே அளவிடுகிறார்கள்.

வயிறு புடைக்கத் தின்பது, குடிப்பது, இனப் பெருக்கம் செய்வது, பிறகு செத்து மடிவது—இவற்றிற்கு மேல் உயர முடியாதவர்களுக்கு, பயன் என்பதே புலனின்பங்களில் மட்டும்தான். அதைவிட உயர்ந்த ஏதேனும் ஒன்றின் தேவையைக் கடுகளவாவது இவர்கள் உணர வேண்டுமானால்கூட காலங்காலமாகக் காத்திருக்க வேண்டும். எத்தனையோ பிறவிகள், எத்தனையோ மறுபிறவிகள் இவர்களுக்குத் தேவைப்படும்.

இதற்கு மாறாக, கணப்பொழுதில் மறைந்தொழியும் இந்த உலக வாழ்க்கையைவிட, அழிவற்ற ஆன்மாவில் நாட்டம் கொள்வது எவ்வளவோ உயர்ந்தது என்பதை அறிந்தவர்களுக்கு, புலனின்பங்கள் அர்த்தமற்றவையாக, சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுகளாகத் தெரிபவர்களுக்கு கடவுளும் அவரிடம் பக்தி செய்வதும்தான் மனித வாழ்க்கையின் மிக உயர்ந்த பயனாக, ஒரே பயனாக உள்ளது. நல்ல வேளையாக இத்தகைய ஒருசிலர், உலகியல் தாண்டவமாடுகின்ற இந்த உலகில் இன்னும் இருக்கத்தான் செய்கின்றனர்.

பக்தியோகம், நாம் ஏற்கனவே கூறியதுபோல், தொடக்க நிலையான கௌணி பக்தி என்றும், உயர்ந்த நிலையான பரா பக்தி என்றும் இரு வகைப்படும். நாம் முன்னேறிச் செல்ல, பக்தியின் ஆரம்ப காலங்களில் நமக்குப் புற உதவிகள் மிகவும் இன்றியமையாதவை. இது ஏன் என்பதைப் போகப்போக நாம் பார்க்கலாம். எல்லா மதங்களிலும் காணப்படுகின்ற புராணக் கதைகளும், சின்னங்களைப் பயன்படுத்துவதும் இயல்பான வளர்ச்சியே ஆகும். இவை ஆன்ம தாகம் கொண்டவர்களுக்கு ஆரம்பத்தில் ஒரு பாதுகாப்பாக அமைந்து அவர்களை இறை நெறியில் செலுத்துகின்றன. பேரளவிற்குப் புராணக் கதைகளும் சடங்குகளும் செழித்து வளர்ந்துள்ள மதங்களில்தான் ஆன்மீகச் செம்மல்கள் தோன்றியுள்ளனர் என்பது குறிப்பிட வேண்டிய செய்தியாகும்.

கொள்கைவெறி பிடித்த வறண்ட மதங்கள், எதுவெல்லாம் இன்ப ஊற்றாகத் திகழும் கவிதைச் சிறப்புடையதோ, கவின் மிக்கதோ நுண்மை வாய்ந்ததோ அதையெல்லாம் அடியோடு துடைத்துவிடுகின்றன. இறைநெறியில் தளர்நடையிட்டுச் செல்லும் குழந்தைமனத்திற்கு உறுதிமிக்கப் பிடிப்பாக, ஊன்று கோலாக இருக்கின்ற அனைத்தையும் இந்த மதங்கள் அழித்து விடுகின்றன. ஆன்மீக மாளிகையின் கூரையைத் தாங்கி நிற்கும் தூண்களையே உடைத்தெறிய முயல்கின்றன. அறியாமை

மிக்கதும் மூடநம்பிக்கைகளைக் கொண்டதுமான இந்த நெறிகள், ஆன்மீகம் எனப்படும் செடிக்கு உயிரூட்டுவது எதுவோ, வளர்வதற்குத் தேவைப்படுகின்ற உரங்களாக இருப் பவை எவையோ அவற்றையெல்லாம் அடியோடு எறிந்து விடுகின்றன. இந்த மதங்களில் கடைசியாக மிஞ்சுவதெல்லாம் வெற்றுச் சொல்ஜாலங்களாலும் ஆரவாரத்தாலும் கட்டப் பட்ட வெறும் கூடு மட்டுமே. சமுதாயக் குப்பைகளை அகற் றுதல் என்ற சிறு மணமோ, சீர்திருத்தம் என்று கூறுகிறார்களே, அதன் வேகம் சிறிதோ ஒருவேளை அதில் இருக்கலாம், அவ் வளவுதான்.

இப்படிப்பட்ட மதத்தைப் பின்பற்றுவோர் அறிந்தோ அறியாமலோ உலகியலில் மூழ்கியவர்களாகவே உள்ளனர். இம்மையிலும் மறுமையிலும் இவர்களின் நோக்கம், எண்ணம் எல்லாம் வெறும் இன்ப நுகர்ச்சியே. இதுவே அவர்களின் வாழ்க்கையாக, வாழ்க்கையின் முதலும் முடிவுமாக இருக்கிறது. இதுவே இவர்களுக்கு இஷ்டாபூர்த்தம். இவர்கள் கருத்துப்படி தெருவைப் பெருக்குவது, தோட்டிவேலை செய்வது என்று மனிதனின் சொந்த சுகத்திற்காக வேலை செய்வதே வாழ்க்கை யின் எல்லாம் என்றாகிறது. அறியாமையும் வெறித்தனமும் இணைந்த இந்த வினோதக் கலவையைப் பின்பற்றுபவர்கள் தங்கள் உண்மைநிலையை வெளிப்படுத்திக் கொண்டு—இதுவே இவர்களுக்கு ஏற்றதும்கூட—நாத்திகர்களுடனும் விஷயப்பற்று மிக்கவர்களுடனும் எவ்வளவு விரைவில் சேர்ந்து கொள்வார் களோ, அவ்வளவிற்கு உலகத்திற்கு நன்மை உண்டாகும்.

வண்டிவண்டியாக வீண்பேச்சுக்களைப் பேசுவதைவிட, முறையற்ற பாவனைகளை வளர்த்துக் கொள்வதைவிட எள் ளளவு அறநெறியையும் ஆன்மீக சாதனையையும் மேற்கொள் வது எவ்வளவோ மேலானது. அறியாமை, கொள்கைவெறி என்னும் குப்பையிலிருந்து ஆன்மீக மேதை ஒருவராவது, ஒரே ஒருவராவது தோன்றியிருக்கிறாரா? காட்டுங்கள் பார்க்கலாம்! காட்ட முடியவில்லை என்றால் வாயை மூடிக் கொள்ளுங்கள். உங்கள் இதயக் கதவுகளை நன்றாகத் திறந்து வைத்துக் கொள் ளுங்கள். உண்மையின் ஒளிக் கிரணங்கள் உள்ளே நுழையட்டும். தாங்கள் எதைப் பேசுகிறார்களோ அதை முன்னரே உணர்ந்து அனுபவித்த மாமேதைகளான ரிஷிகளின் காலடிகளில் குழந்தைகள்போல் அமர்வோம். அவர்கள் கூறுவதைக் கருத் துடன் கேட்போம்! ❋

# 4. குருவின் தேவை

ஒவ்வோர் ஆன்மாவும் நிறைநிலையை அடைய வேண்டும் என்பது விதிக்கப்பட்ட நியதி. ஒவ்வோர் உயிரும் முடிவில் பரிபூரண நிலையை அடையவே செய்யும். இப்போதைய நமது வாழ்வு, முன்பு நாம் செய்த செயல்களின் பயனாக, நாம் நினைத்த நினைப்புக்களின் பயனாக வந்ததாகும். அது போன்றே, இனிமேல் வரப்போவதும், நாம் இப்போது செய்யும் செயல் களுக்கும் சிந்திக்கும் சிந்தனைகளுக்கும் ஏற்ப அமையும். இவ் வாறு நமது விதியை நாமே நிர்ணயித்துக் கொள்கிறோம் என்ப தால் புற உதவியை ஒதுக்கித்தள்ள வேண்டும் என்பதில்லை. பெரும்பாலோருக்கு இத்தகைய உதவி மிகவும் இன்றியமை யாதது. அதன் பயனாக, ஆன்மாவின் உயர் ஆற்றல்களும், அதன் சாத்தியக்கூறுகளும் விரைவாகக் கிளர்ந்தெழுகின்றன; ஆன்மீக விழிப்பு உண்டாகிறது, வளர்ச்சி விரைவு பெறுகிறது. முடிவில் மனிதன் புனிதமானவனாக, நிறைவுற்றவனாக ஆகிறான்.

விரைவுபடுத்துகின்ற இந்தத் தூண்டுதலை நூல்களிலிருந்து பெற இயலாது. ஓர் ஆன்மாவிடமிருந்துதான் மற்றோர் ஆன்மா இதைப் பெற முடியுமே தவிர, வேறு எதனிடமிருந்தும் பெற முடியாது. வாழ்நாள் முழுவதும் நூல்களைக் கற்கலாம், மகா மேதைகளாக விளங்கலாம்; ஆனால் ஆன்மீக வாழ்க்கையில் துளிகூட முன்னேறவில்லை என்பதையே இறுதியில் உணர் வோம். அறிவாற்றல் வளரும்போது ஆன்மீக வாழ்க்கையும் முன்னேறுகிறது என்பது உண்மையல்ல. நூல்களைப் படிப்ப தால் ஆன்மீக வாழ்வில் முன்னேறுகிறோம் என்பதாக ஒரு மன மயக்கம் சிலவேளைகளில் நமக்கு ஏற்படுகிறது. ஆனால் நூல் களைக் கற்பதால் வரும் பயன் என்ன என்று அலசிப்பார்ப் போமானால், அந்த அறிவு, மிஞ்சிப் போனால் நமது மூளை யைக் கூர்மைப்படுத்தியிருக்கிறதே தவிர, நமது ஆன்மீகத்தை எந்த விதத்திலும் வளர்க்கவில்லை என்பதை அறிய முடியும். நூலறிவால் ஆன்மீக வளர்ச்சியைத் தர முடியாது. அதனால்

தான் நாம் அனைவரும் ஆன்மீக விஷயங்களைக் குறித்து மிக அருமையாகப் பேசுகிறோம்; ஆனால் நடைமுறைக்கு வரும் போது, உண்மையான ஆன்மீக வாழ்வு வாழ்வதற்குச் சிறிதும் இயலாதவர்களாக இருக்கிறோம். எனவேதான் ஆன்மாவை ஊக்கிவிடுவதற்கான தூண்டுசக்தி இன்னோர் ஆன்மாவிட மிருந்து வர வேண்டியுள்ளது.

யாருடைய ஆன்மாவிலிருந்து இத்தகைய தூண்டுதல் வரு கிறதோ அவர்தான் குரு, ஆசிரியர். யாருடைய ஆன்மா இந்தத் தூண்டுதலை ஏற்கிறதோ அவன் சீடன், மாணவன். இந்தத் தூண்டுதலை ஒருவர் மற்றவருக்கு அளிக்க வேண்டுமானால், முதலில், அளிப்பவரிடம் அளிப்பதற்கான சக்தி இருக்க வேண் டும். இரண்டாவதாக, பெறுபவர் அதை ஏற்பதற்கான தகுதி படைத்தவராக இருக்க வேண்டும். விதை உயிருடையதாக இருப்பதோடு, நிலமும் விதைப்பதற்குத் தயாராக, உழுது பண் படுத்தப்பட்டதாக இருக்க வேண்டும். இந்த இரண்டு தகுதி களும் நிறைவேறும்போது, வியக்கத்தக்க முறையில் உண்மை யான ஆன்மீக வளர்ச்சி உண்டாகிறது. உண்மையான குரு அதிசயிக்கத்தக்க தகுதிகள் வாய்ந்தவராக இருக்க வேண்டும், மாணவனும் திறமைசாலியாக இருத்தல் வேண்டும்—ஆச் சர்யோ வக்தா குசலோ அஸ்ய லப்தா.[1] இருவரும் உண்மை யாகவே அற்புதமானவர்களாகவும் அசாதாரணமானவர்களாக வும் இருந்தால்தான் அபாரமான ஆன்மீக விழிப்பு ஏற்படுமே தவிர, வேறு வகையில் முடியாது. அத்தகையோர் மட்டுமே உண்மையான குருமார்கள். அத்தகையோர் மட்டுமே உண்மை யான சீடர்கள், உண்மைச் சாதகர்கள். மற்றவர்களெல்லாம் ஆன்மீகத்தை விளையாட்டிற்காகக் கைக்கொள்பவர்கள், அவ் வளவுதான். அவர்களிடம் சிறிது ஆர்வம் எழுந்துள்ளது, ஒரு சிறிது அறிவு நாட்டம் ஏற்பட்டுள்ளது. அவர்கள் ஆன்மீக வானின் ஒரு விளிம்பில் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இதிலும் சிறிது பயன் இருக்கவே செய்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. காலப்போக்கில் இது உண்மையான ஆன்மீக தாகத்தை இவர்களிடம் தோற்றுவிக்கலாம். இயற்கையின் ஓர் அற்புத நியதி என்னவென்றால் நிலம் தயாராகிவிட்டால் விதை வந்தே தீரும், வரவே செய்கிறது. அதுபோல் ஆன்மீகம் வேண்டும் என்று ஒருவர் மனமார உணரும்போது, ஆன்மீக ஆற்றலைப்

1. கடோபநிடதம், 1.2.7.

பாய்ச்சி அவனுக்கு உதவுவதற்கான ஒருவர் வந்தே தீருவார், வரவே செய்கிறார். ஆன்மீக ஒளியைத் தன்னிடம் ஈர்க்கும் சக்தி ஒருவனிடம் நிறைவுற்று வலிமை பெறும்போது, அந்த ஈர்ப்பாற்றலுக்கு உடன்பட்ட ஆன்மீக ஒளியைத் தரவல்ல ஒருவர் தாமாகவே வருகிறார்.

இருந்தாலும் இந்தப் பாதையில் பேராபத்துக்கள் சில இருக்கவே செய்கின்றன. உதாரணத்திற்கு, சீடன் ஒருவன் தன்னிடம் எழுகின்ற தற்காலிக உணர்ச்சிப் பெருக்கை உண்மையான ஆன்மீக தாகம் என்று தவறாகக் கருத நேரலாம். நம் வாழ்வில் நாம் இதைக் காண முடியும். நம் அன்பிற்குரிய ஒருவர் திடீரென்று இறந்துபோகிறார். அது ஒரு பேரிடியாக வந்து சேர்கிறது. உலகமே நம்மிடமிருந்து நழுவிவிட்டதாக நினைக்கிறோம். உடனே விரக்தியுற்று, நிலையான ஒன்று வேண்டும், உயர்ந்த ஒன்று வேண்டும் என்று விரும்புகிறோம், ஆன்மீக வாழ்வில் ஈடுபட முடிவு செய்கிறோம். ஆனால் ஒருசில நாட்களுள் இந்த உணர்ச்சிப் பெருக்கு வற்றிவிடுகிறது, பழைய இடத்திற்குத் திரும்பிவிடுகிறோம்.

நாம் எல்லோருமே சிலவேளைகளில் இத்தகைய உணர்ச்சி வேகங்களை உண்மையான ஆன்மீக தாகம் என்று தவறாக எண்ணிவிடுகிறோம். இவ்வாறு தற்காலிக உணர்ச்சிகளை நம்புகின்ற போக்கு நம்மிடம் இருக்கும்வரை தொடர்ச்சியான, உண்மையான ஆன்மீக தாகம் எழாது; நமது இயல்பினுள் ஆன்மீகத்தை உண்மையாகவே பாய்ச்சவல்ல ஒருவரை நாம் காணவும் முடியாது. எனவே, உண்மையை நாடி நாம் எவ்வளவோ விரும்பி ஈடுபட்ட முயற்சி சரியாக அமையாதது பற்றிக் குற்றம் காண்பதற்கு முன், நமது இதய தாகம் உண்மைதானா என்பதை நம்முள்ளேயே ஆராய்ந்து பார்க்க வேண்டும். நம்முள் பெரும்பாலோரும் உண்மையைப் பெறத் தகுதியற்றவர்கள் என்பதும், நம்மிடம் உண்மையான ஆன்மீக தாகம் இல்லை என்பதையும் அப்போது காண முடியும்.

குருவைப் பொறுத்தவரை இதைவிடப் பெரிய ஆபத்துக்கள் இருக்கின்றன. பலர் உள்ளனர்—அவர்கள் தாங்களே அறியாமையில் மூழ்கிக்கிடந்தும் ஆணவத்தின் காரணமாக, எல்லாம் தெரிந்தவர்கள்போல் காட்டிக்கொள்வார்கள். அத்துடனும் நிற்பதில்லை. பிறரையும் தங்கள் தோளில் ஏற்றிக் கொள்ளத் துணிகிறார்கள். இறுதியில் குருடும்குருடும் குருட்டாட்டம் ஆடிக் குழியில் விழுந்த கதைதான்.

'அவித்யாயாமந்தரே வர்த்தமானா: ஸ்வயம் தீரா:
பண்டிதம் மன்யமானா: ।
தந்த்ரம்யமாணா: பரியந்தி மூடா அந்தேனைவ நீயமானா
யதாந்தா: ॥

—அஞ்ஞான இருளில் உழலும் மூடர்கள், தங்களைப் பண்டிதர்களாகக் கருதி, கர்வம்கொண்டு குருடன் குருடனுக்கு வழிகாட்டுவதுபோல் வாழ்க்கைச் சக்கரத்தில் சுழன்றுசுழன்று வருகிறார்கள்.'[1] இத்தகையோர் உலகில் நிறைந்துள்ளனர். எல்லோரும் குருவாக இருக்கவே விரும்புகின்றனர். ஒவ்வொரு பிச்சைக்காரனும் கோடி ரூபாய் நன்கொடை வழங்க ஆசைப்படுகிறான். எப்படி இந்தப் பிச்சைக்காரர்கள் கேலிக்குரியவர்களோ, அப்படியே அந்தக் குருமார்களும் கேலிக்குரியவர்களே. ❀

---

1. கடோபநிடதம், 1. 2. 5 மற்றும் முண்டக உபநிடதம், 1. 2. 8.

## 5. குரு மற்றும் சீடனுக்கான தகுதிகள்

அப்படியானால் குருவை அறிந்துகொள்வது எப்படி? சூரியனைப் பார்ப்பதற்கு விளக்கு அவசியமில்லை; மெழுகுவர்த்தி கொளுத்தி அதைக் காண வேண்டிய தேவையில்லை. சூரியன் உதயமாகும்போது அதனை இயல்பாகவே நாம் அறிந்துகொள்கிறோம். அதுபோலவே நமக்கு உதவுவதற்காக ஒரு குரு வரும்போது, உண்மையின் ஒளி தன்மீது விழத் தொடங்கிவிட்டதை ஆன்மா இயல்பாகவே புரிந்துகொள்கிறது. உண்மைக்கு நிரூபணம் உண்மையே. அதற்கு வேறு நிரூபணம் தேவையில்லை. அது சுயம்பிரகாசமானது. அது நமது இயல்பின் மூலைமுடுக்குகளிலெல்லாம் ஊடுருவிச் செல்கிறது. உண்மையின் சன்னிதியில் உலகமே எழுந்து நின்று வணக்கம் செலுத்துகிறது; 'இதுதான் உண்மை' என்று பறைசாற்றுகிறது.

யாருடைய ஞானமும், உண்மையின் பொலிவும் சூரியனைப்போல் பிரகாசிக்கிறதோ, அந்தக் குருமார்களே உலகம் கண்டவர்களுள் மகோன்னதமானவர்கள். இவர்களை மனித குலத்தின் பெரும்பகுதி தெய்வமாக வழிபடுகிறது. இவர்களைவிடச் சற்று கீழ்நிலையிலுள்ள குருமார்களிடமிருந்தும் நாம் உதவி பெறலாம். யாரிடமிருந்து உபதேசமும் வழிகாட்டுதலும் நமக்குக் கிடைக்குமோ அவரைச் சரியாக அறிந்துகொள்வதற்கான உள்ளுணர்வு நமக்கு இல்லை, அவ்வளவுதான். அதனால்தான் குருமார்களை நிர்ணயிக்கச் சில தேர்வுகளும் நியதிகளும் அவசியமாகின்றன. அதுபோலவே சீடனுக்கும் இவை தேவைப்படுகின்றன.

சீடனுக்கு வேண்டிய தகுதிகள் தூய்மை, உண்மையான ஆன்மீக தாகம், விடாமுயற்சி என்பனவாகும். தூய்மையற்ற யாரும் ஆன்மீகவாதியாக இருக்க முடியாது. ஆன்மீக வாழ்வில் ஈடுபட விரும்பும் ஒருவருக்குச் சிந்தையில், சொல்லில், செயலில் தூய்மை முற்றிலும் இன்றியமையாதது. ஆன்மீக தாகத்தைப் பொறுத்தவரை, நாம் எதை விரும்புகிறோமோ அது கிடைக்கும் என்ற பழைய நியதி ஒன்று உண்டு. நாம் ஆத்மார்த்தமாக

விரும்பாத ஒன்று நமக்குக் கிடைக்காது. ஆன்மீக வாழ்விற்காக உண்மையாக ஏங்குவது என்பது நாம் நினைப்பதுபோல் அவ்வளவு எளிதல்ல, அது மிகவும் கடினமானது. மதச் சொற்பொழிவுகளைக் கேட்பதும் மத நூல்களைப் படிப்பதும் உண்மையான இதய தாகத்திற்கான நிரூபணங்களாகி விடாது. தொடர்ந்த போராட்டம் இருக்க வேண்டும். நமது கீழான இயல்புடன் இடைவிடாது போராடி அவற்றை அழிக்க வேண்டும். அந்த உயர்தேவையை உண்மையாக உணரும்வரை வெற்றி கிடைக்கும்வரை, விடாமுயற்சியுடன் பாடுபட வேண்டும். இந்தப் போராட்டம் ஒருநாள், இரண்டுநாள் அல்ல, சில வருடங்களாக அல்ல, சில பிறவிகள் அல்ல, ஏன், நூற்றுக் கணக்கான பிறவிகளில்கூடத் தொடர்ந்து நடைபெற நேரலாம். சிலவேளைகளில் உடனேயே வெற்றி கிடைத்துவிடலாம். இருந்தாலும் முடிவற்றதாகவே தோன்றுகின்ற காலம்வரை பொறுமையோடு காத்திருக்கத் தயாராக இருக்க வேண்டும். இத்தகைய விடாமுயற்சியுடைய சாதகன் வெற்றி பெறுவது நிச்சயம். அவன் இறுதியில் அனுபூதியும் பெறுகிறான்.

குருவைப் பொறுத்தவரையில், அவர் சாஸ்திரங்களின் சாரத்தை அறிந்தவரா என்பதைக் கவனிக்க வேண்டும். பைபிள்கள், வேதங்கள், குரான்கள் என்று உலகம் முழுவதுமே சாஸ்திரங்களைப் படிக்கிறார்கள். ஆனால் இவையனைத்தும் வெறும் சொல்வண்ணங்கள், வார்த்தைஜாலங்கள், மொழியலங்காரம் அவ்வளவுதான். இவை மதத்தின் வெறும் எலும்புக் கூடுகள். வார்த்தைஜாலங்களில் அளவுக்கு அதிகமாக மூழ்கிச் சொல்லழகின் வேகத்தில் தம்மை இழக்கின்ற குரு, சாரத்தை விட்டுவிடுகிறார். சாஸ்திரங்களின் சாரத்தை அறிந்திருப்பதே உண்மையான குருவிற்குரிய தகுதி.

சாஸ்திரங்களின் சொல்வண்ணம் என்னும் அடர்ந்த வலை காட்டைப் போன்றது. மனம் சிலவேளைகளில் அதில் சிக்குண்டு வெளிவர வழி தெரியாமல் தடுமாறுகின்றது. 'சப்த ஜாலம் மஹாரண்யம் சித்தப்ரமண காரணம்—வார்த்தை ஜாலமாகிய வலை ஓர் அடர்ந்த காடாகும். மனம் அலைந்து உழல்வதற்குக் காரணமாக இருப்பது அது.'[1] 'பல்வேறு வகைகளில் சொற்களை அடுக்கியமைப்பது, மனத்தைக் கவரவல்ல அழகிய மொழியில் பேசுவது, சாஸ்திரக் கருத்துக்களுக்குப் பல்வேறு கோணங்களில்

---

1. விவேக சூடாமணி, 60.

விதவிதமாகப் பொருள் காண்பது—இவையெல்லாம் பண்டிதர்களுக்குத் தங்கள் பெருமையையும் வாதத் திறமையையும் பறைசாற்றப் பயன்படலாமே தவிர, ஆன்மீக வளர்ச்சிக்குச் சிறிதும் பயன்படாது—

வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ரவ்யாக்யான கௌசலம்।
வைதுஷ்யம் விதுஷாம் தத்வத் புக்தயே ந து முக்தயே॥'[1]

இத்தகைய முறைகளில் மதபோதனை செய்பவர்கள், உண்மையில் தங்கள் புலமையை வெளிக்காட்டி, அதன்மூலம் உலகம் தங்களைப் பெரிய பண்டிதர்களாகப் போற்ற வேண்டும் என்றே விரும்புகின்றனர்.

ஆனால் உலக மகா போதகர்களாக விளங்கியவர்களுள் ஒருவர்கூடப் பல்வேறு வகையான சாஸ்திர விளக்கங்களுக்குப் போனதில்லை; வார்த்தைகளைத் தாறுமாறாகச் சிதைத்து சாஸ்திரங்களை விளக்க ஒருபோதும் முயன்றதில்லை. சொல்லின் பொருளோடும், அதன் மூலச்சொல்லோடும் சொல் சிலம்பம் ஆடியதில்லை. ஆனாலும் அவர்கள் அருமையாகப் போதித்தனர். மற்றவர்கள், போதிப்பதற்குத் தங்களிடம் எதுவுமே இல்லாத நிலையிலும், ஏதோ ஒரு சொல்லை எடுத்துக் கொண்டு அது எப்படிப் பிறந்தது, அதை முதன்முதலாகப் பேசியவன் யார், அவன் எதைச் சாப்பிட்டான், எவ்வளவு நேரம் தூங்கினான் என்றெல்லாம் பெரிதாக மூன்று பகுதிகளில் ஒரு புத்தகமே எழுதிவிடுவார்கள்.

இதுபற்றி பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் வேடிக்கையாக ஒரு கதை சொல்வது வழக்கம். சிலர் ஒரு மாந்தோப்பிற்குச் சென்றனர். சென்று அங்குள்ள மரங்களின் இலைகள், தளிர்கள், கிளைகள் எல்லாவற்றையும் மும்முரமாக எண்ண ஆரம்பித்தனர். இலைகளின் நிறத்தை ஆராய்ந்தனர். அளவுகள் சரியாக இருக்கின்றனவா என்று ஒப்பிட்டுப் பார்த்தனர். அக்கறையோடு குறிப்புகள் எடுத்தனர். பின்னர் இவற்றைப் பல தலைப்புக்களில் விவாதித்தனர். இப்படி ஆராய்வது அவர்களது அறிவிற்கு விருந்தாக இருந்தது என்பதில் சந்தேகமில்லை. அவர்களுள் பிறரைவிட அதிக விவேகமுள்ள ஒருவன் இவைகளைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் மாம்பழத்தைப் பறித்து உண்டு மகிழ்ந்தான். அவனல்லவா புத்திசாலி? அவனைப்போல் நீங்களும் இலை, தளிர், கிளை இவற்றை எண்ணுவது,

---

1. விவேக சூடாமணி, 58.

குறிப்பெடுப்பது என்பவற்றைப் பிறருக்கு விட்டுவிடுங்கள். இந்த வேலைக்கென்று தனித்துறை உள்ளது. ஆன்மீக உலகில் இவற்றிற்கு இடமில்லை. 'இலைகளை எண்ணுகிற' கூட்டத்தில் ஆன்மீக ஆற்றல் மிக்க யாரையும் நீங்கள் ஒருபோதும் காண முடியாது.

மனிதனின் மிகவுயர்ந்த லட்சியமும் அவனது மகிமைகளுள் தலைசிறந்ததும் ஆன்மீகமே. ஆனால் அதற்கு இவ்வளவு பாடுபட வேண்டியதில்லை. நீ ஒரு பக்தனாக இருக்க விரும்பினால், கிருஷ்ணன் மதுராவில் பிறந்தாரா, பிருந்தாவனத்தில் பிறந்தாரா, அவர் என்ன செய்து கொண்டிருந்தார், அவர் கீதையை உபதேசித்த சரியான காலம் எது என்றெல்லாம் ஆராய்ந்து கொண்டிருக்கத் தேவையில்லை. உனக்கு வேண்டியதெல்லாம் கடமையைப் பற்றியும், பக்தியைப் பற்றியும் கீதை கூறுகின்ற அற்புதமான உபதேசங்களைப் பேரார்வத்துடன் பின்பற்றுவதுதான். கீதையைப் பற்றிய பிற செய்திகளும் அதை வழங்கியவரைப் பற்றிய ஆராய்ச்சிகளும் பண்டிதர்களின் பொழுதுபோக்கிற்கு உரியவை. அவர்களுக்கு விருப்பமானதை அவர்கள் செய்து கொள்ளட்டும். அவர்களுடைய அறிவாற்றல் மிக்க வாதப் பிரதிவாதங்களுக்கு 'சாந்தி: சாந்தி:' என்று சொல்லிவிட்டு நாம் மாம்பழத்தைச் சுவைத்து மகிழ்வோம்.'

குருவிற்கான இரண்டாவது நியதி களங்கமின்மை. 'குருவின் பண்பையும் நடத்தையையும்பற்றி நாம் ஏன் ஆராய வேண்டும்? அவர் என்ன சொல்கிறார் என்பதை மதிப்பிட்டு, அதனை ஏற்றுக் கொள்ளலாமே?' என்று சிலர் கேட்பதுண்டு. இது சரியல்ல. இயற்பியலோ, வேதியியலோ அல்லது வேறு எந்த அறிவியலாகவோ இருந்தால் அதைக் கற்றுத் தருபவர் தம் சொந்த வாழ்க்கையில் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அதுபற்றிக் கவலையில்லை. ஏனெனில், அறிவியல் துறை வேண்டுவதெல்லாம் வெறும் நூலறிவு மட்டுமே. ஆன்மீகத் துறையிலோ, தூய்மையற்ற ஒருவரிடம் ஆன்மீக ஒளி வருவது என்பது தலைகீழாக நின்றாலும் சாத்தியமே இல்லை. நன்னடத்தை இல்லாத ஒருவன் என்ன ஆன்மீகத்தைக் கற்றுத் தர முடியும்! ஆன்மீக உணர்வும் சரி, அதைப் பிறருக்கு வழங்க விரும்பினாலும் சரி, ஒருவனுக்கு அடிப்படையாக இருக்க வேண்டிய பண்புகள் மனத் தூய்மையும் இதயத் தூய்மையுமே. மனம் தூய்மை பெறாதவரை இறைக்காட்சியோ, அனைத்தையும் கடந்த அந்த உண்மையின் உணர்வோ உண்டாவதில்லை.

எனவேதான் ஓர் ஆன்மீக குருவைப் பொறுத்தவரை முதலில் அவர் எத்தகையவர் என்று அறிய வேண்டும், பின்னரே அவர் என்ன கூறுகிறார் என்று பார்க்க வேண்டும். அவர் முழுக்கமுழுக்கத் தூய்மையின் வடிவாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவர்களின் உபதேசங்களுக்கு மதிப்பு இருக்கும். அந்த நிலையில்தான் அவர்கள் ஆன்மீக சக்தியைப் பிறருக்கு வழங்குபவர்களாக இருக்க முடியும். தன்னிடமே ஆன்மீக சக்தி இல்லாதபோது பிறருக்கு எதை வழங்குவது? குருவின் உள்ளத்தில் உயரிய ஆன்மீகச் சிந்தனைகள் இருந்தால்தான் சீடனின் உள்ளத்தில் அதனை உரிய முறையில் பதிக்க முடியும். குருவின் வேலை சீடனுக்கு ஒன்றை வழங்குவதே தவிர, ஏற்கனவே அவனிடமுள்ள அறிவையோ, பிற கலைகளையோ தூண்டிவிடுவது மட்டும் அல்ல. உண்மையான, போற்றுதற்குரிய ஏதோ ஒரு தாக்கம் குருவிடமிருந்து சீடனுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. ஆகவேதான் குரு தூயவராக இருக்க வேண்டியது இன்றியமையாததாகிறது.

இனி, மூன்றாவது நியதி. இது நோக்கம் பற்றியது. பணம், பெயர், புகழ் போன்ற எந்தத் தன்னல நோக்கங்களுக்காகவும் குரு போதிக்கக் கூடாது. அன்பு வசப்பட்டு மனித இனத்தின்மீது தாம் கொண்ட தூய அன்பிற்காக மட்டுமே அவர் வேலை செய்ய வேண்டும். அன்பு என்ற பாதை வழியாக மட்டுமே ஆன்மீக ஆற்றலை வழங்க முடியும். பெயர் மற்றும் புகழ் நாட்டம் போன்ற எந்தச் சுயநல நோக்கமும் அந்தப் பாதையை உடனடியாக அடைத்துவிடும். இறைவன் அன்பே வடிவானவன். இறைவனை அன்பு வடிவாகக் கண்டவர்களே இறைவனை, இறைநெறியை, போதிக்கின்ற குருவாக இருக்க முடியும்.

உன் குருவிடம் இந்த நியதிகள் நிறைவேற்றப் பட்டிருக்குமானால் உனக்கு ஆபத்தில்லை. இல்லாவிடில் நீ அவரிடம் போதனை பெறுவது நல்லதல்ல. நல்லதைத் தராவிட்டாலும் தீயதை அவர் தந்துவிடும் ஆபத்துண்டு. இந்த ஆபத்து நிகழாமல் எல்லா வழிகளிலும் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். 'ச்ரோத்ரியோ அவ்ருஜினோ அகாமஹதோ யோ ப்ரஹ்ம வித்தம:— சாஸ்திரங்களை நன்றாகக் கற்றவரும், குற்றமில்லாதவரும், காமம் என்னும் களங்கம் அற்றவரும், பிரம்மத்தை அறிந்தவரும்'[1] தான் உண்மையான குரு.

---

1. விவேக சூடாமணி, 33.

ஆன்மீக வாழ்வை நேசிப்பதற்கும், ஏற்றுக்கொள்வதற்கும், பின்பற்றுவதற்கும் எங்கு வேண்டுமானாலும், யார் வேண்டு மானாலும் கற்றுத் தர முடியாது என்பது இதுவரை கூறிய திலிருந்து தெளிவாகிறது. 'ஓடுகின்ற நீரோடை தருகின்ற காவியங்கள், கல்லும் சொல்கின்ற போதனைகள், எங்கும் எதிலும் நன்மை'[1] என்பனவெல்லாம் இலக்கியத்தில் உண்மை யாகலாம். ஆனால் ஏற்கனவே உள்ளத்தில் விதை இல்லாமல், உண்மையின் இம்மியளவைக்கூட யாராலும் யாருக்கும் கொடுக்க முடியாது. கல்லும் ஓடையும் போதிப்பது யாருக்கு? மனிதனுடைய ஆன்மாவிற்கு, அவனுடைய இதயத் தாமரையில், உள்ளக் கோயிலில் உயிர்த்துடிப்புடன் ஒளிர்ந்து கொண் டிருக்கும் ஆன்மாவிற்குத்தான். இந்த இதயத் தாமரையை, உள்ளக்கமலத்தை மலர்ந்து விகசிக்கச் செய்யும் ஆன்மீக ஒளிக்கதிர் மகானான குருவிடமிருந்தே வருகிறது. இதயம் இப்படி மலரும்போது, அது கல்லிலும் ஓடையிலும், விண்மீன், சூரியன், சந்திரன், ஏன், இந்தத் தெய்வீக உலகிலுள்ள எல்லா பொருட்களிலும் அவை வழங்கும் உபதேசங்களைப் பெறுகின்ற தகுதியைப் பெற்றுவிடுகிறது. உள்ளம் மலராதவர்களுக்கு இவை வெறும் கல்லும் ஓடையும்தான்; அவற்றில் வேறு எது வும் அவர்களுக்குத் தெரிவதில்லை. பார்வையற்றவன் பொருட் காட்சிச்சாலைக்குச் செல்லலாம். அதனால் அவனுக்கு என்ன லாபம்? முதலில் அவனது கண்கள் திறக்கப்பட வேண்டும். அதன்பிறகே பொருட்காட்சியிலுள்ள பொருட்களை அவன் அறிந்துகொள்ள முடியும்.

சாதகனுக்கு ஆன்மீக வாழ்விற்கான கண்களைத் திறப்பவர் தான் குரு. அவருக்கும் நமக்கும் உள்ள தொடர்பு, முன்னோருக் கும் அவரது சந்ததியினருக்கும் உள்ள தொடர்பைப் போன்றது. நமக்கு குருவிடம் நம்பிக்கை, அடக்கம், பணிவு, சரணாகதி, மரியாதை முதலிய பண்புகள் தோன்றாமல் ஆன்மீக வளர்ச்சி இல்லை. குரு-சீடர் தொடர்பு இப்படி அமைகின்ற இடத்தில் தான் மகத்தான ஆன்மீகச் செம்மல்கள் உருவாகியுள்ளனர். இந்த உண்மை, கருத்தில் கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும். இத்தகைய தொடர்பை வளர்க்கத் தவறிவிட்ட நாடுகளில் மதக் குருமார்கள் வெறும் சொற்பொழிவாளர்களாக, ஐந்து ரூபாய்

---

1. ஷேக்ஸ்பியரின் As You Like It என்ற நாடகத்திலிருந்து; பக்கம் 273, அடிக்குறிப்பு காண்க.

ஊதியத்திற்கு உழைப்பவர்களாக உள்ளனர். மாணவனும் ஆசிரியர் கூறும் சொற்களைக் கொண்டு தன் மூளையை நிரப்பவே விழைகிறான். கொடுக்கல்-வாங்கல் தீர்ந்ததும் இருவரும் தத்தம் வழியில் செல்கின்றனர். இந்தச் சூழ்நிலைகளில் ஆன்மீகம் என்ற ஒன்று இருப்பது ஏறக்குறைய தெரியாமலே போய்விடுகிறது. அதைக் கொடுக்கவோ ஏற்கவோ ஆளில்லாமல் போகிறது. இவர்களிடம் ஆன்மீகம் ஒரு வியாபாரமாக மாறிவிடுகிறது. ஆன்மீகத்தைப் பணத்தால் வாங்கிவிடலாம் என்று இவர்கள் நினைக்கிறார்கள். அடக் கடவுளே! ஆன்மீகம் என்பது காசு கொடுத்து வாங்கக்கூடிய அளவிற்கு ஓர் எளிய பொருளா என்ன? நல்ல வேளை! அப்படி எளிதில் பெறக்கூடிய ஒன்றாக இல்லை ஆன்மீகம்.

மிக உயர்ந்த அறிவும் மிகவுயர்ந்த மெய்ஞானமுமான ஆன்மீகத்தை விலைபேசி வாங்கவோ, புத்தகங்களிலிருந்து பெறவோ முடியாது. உலகின் மூலைமுடுக்குகளுக்கெல்லாம் போய்ப் பார்க்கலாம்; இமய மலையின் உச்சியை எட்டிப் பிடிக்கலாம்; ஆல்ப்ஸ், காகசஸ் மலைகளின்மீது ஏறி வெற்றிக் கொடி நாட்டலாம்; ஆழ்கடலின் அடிமட்டத்திற்குச் செல்லலாம்; திபெத் மற்றும் கோபி பாலைவனத்தின் சந்துபொந்துகளில் எல்லாம் தேடலாம். ஆனால் உன் உள்ளம் அதனை ஏற்பதற்கான தகுதி பெறாதவரை, உனது குரு வந்து சேராதவரை நீ ஆன்மீகத்தைக் கண்டடைய முடியாது. இறைவன் அனுப்புகின்ற அந்தக் குரு வரும்போது குழந்தை போன்ற நம்பிக்கையுடனும் எளிமையுடனும் அவருக்குத் தொண்டு செய். அவரது ஆதிக்கம் உன்மீது ஏற்படுவதற்காக உன் இதய வாசலை நன்றாகத் திறந்து வை. இறைவன் அவரிடம் பிரகாசிப்பதை உணர். இத்தகைய அன்பையும் மதிப்பையும் உள்ளத்தில் கொண்டு உண்மையை நாடிச் செல்பவர்களுக்கு, உண்மை, நன்மை, அழகு என்பவை பற்றிய மிகச் சிறந்த அற்புதங்களை உண்மை வடிவினனாகிய இறைவன் உணர்த்துகிறார். ※

## 6. அருட்குருவும் அவதாரமும்

எங்கே எம்பெருமானின் திருநாமம் ஓதப்படுகிறதோ அந்த இடம் புனிதமடைகிறது என்றால், அந்தத் திருநாமத்தை ஓதி வருகின்ற ஒருவன் இன்னும் எவ்வளவு புனிதம் வாய்ந்தவனாக இருக்க வேண்டும்! அவனிடமிருந்து அல்லவா நமக்கு ஆன்மீக உண்மைகள் வருகின்றன! அந்த மகானை நாம் எவ்வளவு பயபக்தியோடு அணுக வேண்டியது அவசியமாகிறது! அத்தகைய அருட்குருமார்கள் உலகில் மிகச் சிலர்தான் உள்ளனர் என்பது உண்மைதான். ஆனாலும் அத்தகையோர் உலகில் இல்லாத காலமே இல்லை. அவர்கள் மனித வாழ்க்கை என்னும் பசுஞ்சோலையில் மலர்ந்த வாடாத மலர்கள், 'அஹேதுக தயாஸிந்து:—பிரதியாக எதையும் எதிர்பாராத கருணைக் கடல்.' 'ஆசார்யம் மாம் விஜானீயாத்—அர்ஜுனா! நான்தான் குரு என்பதை உணர்ந்துகொள்' என்று ஸ்ரீகிருஷ்ணர் பாகவதத்தில் (11. 17. 27) கூறுகிறார். இந்த மகான்கள் மண்ணுலகில் முற்றிலும் இல்லாமல் போகின்ற அந்தக் கணமே உலகம் பயங்கர நரகமாக மாறிவிடும், அழிவை நோக்கி விரைந்து செல்லவும் செய்யும்.'

சாதாரண ஆச்சார்யர்களைவிட மிக உயர்ந்த, மிகவும் மேன்மை வாய்ந்ததோர் ஆச்சார்யப் பிரிவினர் உலகில் உள்ளனர். அவர்களே அவதார புருஷர்கள். இவர்கள் ஒருமுறை தொடுவது போதும், ஏன், அவர்களின் ஒரு விருப்பம் போதும்—அதன்மூலமே பிறருக்கு ஆன்மீகத்தை வழங்கிவிடுவார்கள். அவர்களின் சங்கல்பம் போதும், மிகத் தாழ்ந்தவனும் கொடியவனும்கூட ஒரு கணத்தில் மகானாகி விடுவான். இவர்களே குருமார்களுக்கெல்லாம் குருவாக இருப்பவர்கள்; மனித வடிவில் இறைவனது மிகவுயர்ந்த வெளிப்பாடுகள். இவர்கள்மூலமாக அல்லாமல் இறைவனை நாம் காண இயலாது. இவர்களே உண்மையில் நமது வழிபாட்டிற்கு உரியவர்கள்.

இறைவன் இப்படி மனிதனாக வராவிட்டால் யாரும் அவனைக் காண முடியாது. இதை விட்டுவிட்டு வேறு வழிகளில்

அவனைக் காண முயன்றால், நாம் அவனை ஒரு கேலிக்கூத் தாகப் படைத்துவிடுவோம்; அதையே உண்மை என்று நம்பத் தொடங்கி விடுவோம். இதுபற்றி ஒரு கதை உண்டு. பாமரன் ஒருவனிடம் சிவபெருமானின் திருவுருவைச் செய்யுமாறு கூறினார்கள். அவனும் பல நாட்களாகப் பாடுபட்டுக் கடைசி யில் ஒரு திருவுருவைச் செய்தான். முடிவில் அது குரங்காக முடிந்தது. அது போலவே முழுமுதற் கடவுளையும் அவரை உள்ளது உள்ளபடியே நினைக்க வேண்டும் என்று முயன்றால் நாம் சந்திப்பது படுதோல்வியைத்தான். நாம் மனிதர்களாக இருக்கும்வரை, இறைவனை நம்மைவிட உயர்ந்த நிலையில் வைத்துப் பார்க்க முடியாது. நாம் மனித நிலையைக் கடந்து சென்று, அவரை உள்ளது உள்ளபடி உணரும் காலம் வரவே செய்யும். அதுவரை அவரை மனித வடிவில், மனிதனாகத் தான் வழிபட வேண்டும்.

எவ்வளவோ பேசலாம், பல முயற்சிகள் செய்யலாம்; ஆனாலும் கடவுளை மனிதனாக அல்லாமல் வேறு எப்படியும் நினைக்க நம்மால் முடியாது. கடவுளைப்பற்றிப் பெரியபெரிய சொற்பொழிவுகள் செய்யலாம்; இந்த உலகில் காணப்படும் எல்லா பொருட்களைப் பற்றியும் மிக சாமர்த்தியமாகப் பேச லாம். பகுத்தறிவுவாதியாக மாறி இறைவன் எடுத்த அவதாரங் கள் அனைத்தும் மடத்தனமானவை என்று பேசி மனத்திருப்தி கொள்ளலாம். ஆனால் ஒரே ஒரு கணம் நம் மூளையைப் பயன் படுத்தி நிஜ உலகிற்கு வருவோம். இந்தப் பிரமாதமான புத்தி சாலித்தனத்திற்குப் பின்னால் இருப்பது என்ன? ஒன்றுமில்லை. வெறும் பூஜ்யம்; வாய் கிழியப் பேசியதுதான் நாம் கண்ட பலன்.

இறைவனின் திரு அவதாரங்களை வழிபடுவதற்கு எதிராக, யாராவது பிரமாதமாகச் சொற்பொழிவாற்றுவதைக் கேட்க நேர்ந்தால் இனி சும்மா இருக்காதீர்கள். 'கடவுள் என்றால் நீ என்ன புரிந்துகொள்கிறாய்? ''எல்லாம் வல்லவன்'' ''எங்கும் நிறைந்தவன்'' என்றெல்லாம் சொல்லும்போது அந்த வார்த்தை களை எழுத்துக்கூட்டிப் படிப்பதைத் தவிர வேறு உனக்கு என்ன தெரியும்?' என்று கேளுங்கள். அவனுக்கு எதுவும் தெரிந் திருக்காது. மனித இயல்பு கலவாத எந்த உயர்ந்த கருத்தையும் அந்த வார்த்தைகளில் அவன் கண்டிருக்க மாட்டான். இந்த விஷயத்தில், இவனுக்கும் தெருவில் போகின்ற படிப்பு வாசனை யற்ற ஒருவனுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. தெருவில்

போகின்றவன், தானுண்டு, தன் வேலையுண்டு என்று உலகின் அமைதியையாவது கெடுக்காமல் இருக்கிறான். இந்த வாய்ச் சொல் வீரனோ குழப்புகிறான்; மனித இனத்திற்கே தீங்கு செய் கிறான். பார்க்கப்போனால், ஆன்மீகம் என்பது அனுபூதியே. எனவேதான் வாய் வார்த்தைக்கும் உள்ளுணர்வு அனுபவத் திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டை நாம் நன்றாக உணர்ந் திருக்க வேண்டும். நமது ஆன்மாவின் அடித்தளத்தில் அனு பவித்து உணர்வதே அனுபூதி. இதைப் புரிந்துகொள்ளச் சாதாரண அறிவு போதுமானது. ஆனால் இந்த விஷயத்தில் சாதாரண அறிவைப்போல் அவ்வளவு அசாதாரணமாகக் காணப்படுவதும் வேறொன்றும் இல்லை.

நாம் இப்போது பெற்றுள்ள மனித இயல்பு காரணமாக எல்லைக்கு உட்பட்டவர்களாக இருக்கிறோம். இந்த நிலையில் இறைவனை மனிதனாகத்தான் நம்மால் காண முடியும். எடுத்துக் காட்டாக, எருமை ஒன்று இறைவனை வழிபட விரும்புவதாக வைத்துக் கொள்வோம். அது தன் இயல்பிற்கு ஏற்ப அவரை ஒரு மிகப் பெரிய எருமையாகப் பார்க்கும். ஒரு மீன் இறைவனை வழிபட விரும்பினால் அது அவரைப் பெரியதொரு மீனாகக் காணும். மனிதனும், இறைவனை மனிதனாகவே நினைக்க முடியும். இந்தப் பல்வேறு கருத்துக்கள் எல்லாம் நலிந்த மனத்தின் கற்பனைக் கோளாறுகள் அல்ல. மனிதன், எருமை, மீன் அனைத்தையும் வெவ்வேறு பாத்திரங்கள் என்று வைத்துக் கொள்வோம். இந்தப் பாத்திரங்கள் எல்லாம் நீரை நிரப்பிக் கொள்ளக் கடவுளாகிய கடலுக்குச் செல்கின்றன. ஒவ்வொன் றும் தங்கள் வடிவத்திற்கும், கொள்திறனுக்கும் ஏற்ப நீரை நிரப்பிக் கொள்கின்றன. மனிதனில், நீர், மனித வடிவைக் கொள்கிறது; எருமையில் எருமையின் வடிவம்; மீனில் மீனின் வடிவம். இந்த ஒவ்வொரு பாத்திரத்திலும் கடவுள் என்னும் கடலின் அதே நீர்தான் இருக்கிறது. மனிதன் இறைவனை மனிதனாகவே காண்பான். மிருகங்களுக்கு இறைவனைப்பற்றிய ஒரு கருத்து இருக்குமானால் அவை அவரை ஒரு மிருகமாகத் தான் காணும். ஒவ்வொன்றும் தத்தம் லட்சியத்திற்கு ஏற்றபடி இறைவனைக் காண்கிறது. எனவே இறைவனை மனித வடிவில் காண்பதை நம்மால் தவிர்க்க முடியாது. அவனை மனிதனாகத் தான் வழிபட்டாக வேண்டும். வேறு வழியில்லை.

இரண்டுவகை மனிதர்கள் இறைவனை மனிதனாக வழிபடு வதில்லை: ஒன்று, மதம் என்பதே இல்லாத மனித மிருகங்கள்;

மற்றொன்று, மனித இனத்தின் பலவீனங்களை எல்லாம் தாண்டிச் சென்றுவிட்ட பரமஹம்சர்கள். பரமஹம்சருக்கு இயற்கை அனைத்துமே ஆத்ம சொரூபமாக விளங்குகிறது. அவர் மட்டுமே இறைவனை உள்ளது உள்ளபடி வணங்க முடியும். இங்கும், மேலே கூறியபடி, இரு துருவங்கள் சந்திக்கின்றன; ஒருவர் அறியாமையின் எல்லையில் நிற்கிறார், மற்றொருவர் அறிவின் எல்லையில் நிற்கிறார். இருவருமே வழிபாட்டுச் செயல்களில் ஈடுபடுவதில்லை. மிருகம்போல் வாழும் மனிதன் தன் அறியாமை காரணமாக வழிபடாமல் இருக்கிறான். ஜீவன்முக்தனோ தன்னிடமே இறைவனைக் கண்டுவிட்டதால் வழிபடுவதில்லை. இந்த இரண்டு துருவங்களுக்கு இடையில் வாழ்ந்து கொண்டிருப்பவர்களுள் யாராவது, தாம் இறைவனை மனித வடிவில் வழிபடப் போவதில்லை என்று சொன்னால் அவனிடம் தயவுசெய்து ஜாக்கிரதையாக இருங்கள். அவனைப்பற்றி வேறென்ன சொல்வது? கடுமையாக எதுவும் பேச வேண்டாம் என்பதற்காக, அவன் பொறுப்பின்றிப் பேசுபவன் என்று சொல்வதுடன் மட்டும் விட்டுவிடுவோம். அவனது மதம் பித்துப்பிடித்த காலியான மூளைகளுக்கு மட்டுமே.

மனிதனுடைய குறைபாடுகளைக் கடவுள் அறிந்துகொள்கிறார். எனவே மனித குலத்தின் நன்மைக்காக மனிதனாக வருகிறார்.

'யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத ।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥
பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥[1]

—எப்போதெல்லாம் தர்மம் குன்றி, அதர்மம் மேலோங்குகிறதோ, அப்போதெல்லாம் என்னை நான் பிறப்பித்துக் கொள்கிறேன். தர்மத்தை நிலைநாட்டவும், தீமையை அழிக்கவும், நல்லவர்களைக் காக்கவும் யுகந்தோறும் நான் வருகிறேன்.'

'அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் ।
பரம் பாவமஜானந்தோ மம பூத மஹேச்வரம் ॥[2]

—நான் பிரபஞ்சத்திற்கே தலைவன் என்ற எனது உண்மை நிலையை அறியாமல், மனித வடிவம் தாங்கியுள்ள என்னைக் கேலி செய்கிறார்கள் முட்டாள்கள்'. அவதாரத்தைப்பற்றி ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் அருளியது இது.

1. கீதை, 4.7, 8.
2. கீதை, 9.11.

'வெள்ளம் பெருக்கெடுத்து வரும்போது சிறுசிறு குளங் குட்டைகளும் சாக்கடைகளும்கூட எந்த முயற்சியுமின்றி, நிரம்பிவிடுகின்றன. அதுபோல், அவதார புருஷர் ஒருவர் உல கிற்கு வரும்போது உலகில் ஆன்மீக வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. எங்கும் எதிலும் ஆன்மீகம் நிறைந்து வான் வரைக்கும் பரவியிருப்பதை மக்கள் உணர்கிறார்கள்' என்றார் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர். ❦

# 7. மந்திரம்: ஓம்—சொல்லும் பொருளும்

இப்போது நாம் அவதாரங்களான இந்த மகாபுருஷர்களைப் பற்றி பார்க்கப் போவதில்லை. லட்சியத்தை அடைந்தவர்களான சித்த குருக்களைப் பற்றியே படிக்கப் போகிறோம். இவர்கள் சீடனுக்கு தியானத்திற்குரிய மந்திரங்களைக் கற்பித்து, அதன் மூலம் அவனிடம் ஆன்மீக ஞானத்தைத் துளிர்விடச் செய்வதை நியதியாகக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த மந்திரங்கள் என்பன எவை?

இந்த உலகம் வெளிப்பட வேண்டுமானால் பெயர், வடிவம் (நாமரூபம்) என்ற இரண்டு நியதிகள் (உபாதிகள்) வேண்டுமென்று இந்தியத் தத்துவ சாஸ்திரம் கூறுகிறது. நாமரூபமற்ற எண்ண அலை ஒன்றுகூட மனித உள்ளத்தில் எழ முடியாது. இயற்கை முழுவதுமே ஒரே நியதிப்படி அமைக்கப்பட்டிருப்பது உண்மையானால், நாமரூபம் என்ற அதே நியதிக்கு உட்பட்டே பிரபஞ்சமும் உருவாகியிருக்க வேண்டும். 'யதா ஸோம்யைகேன ம்ருத்பிண்டேன ஸர்வம் ம்ருன்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்—பிடியளவு களிமண்ணை அறிந்தால் களிமண்ணால் அமைந்த அனைத்துப் பொருட்களையும் அறியலாம்.'[1] ஆகவே பிண்டத்தைப் பற்றிய அறிவு, அண்டத்தைப் பற்றிய அறிவிற்கு இட்டுச் செல்கிறது.

நாமரூபம் இரண்டுள் ரூபம் என்பது ஒரு பொருளின் புறத் தோற்றம்; நாமம் எனப்படுவது அந்தப் பொருளின் சாரமாகும், அகச் சத்தாகும். உடல் என்பது ரூபம், மனம் அல்லது அந்தக்கரணம் என்பது நாமம். பேசும் திறன் பெற்ற உயிரினங்கள் அனைத்திலும் ஒலிக் குறியீடுகள் நாமத்துடன் தொடர்புடையனவாக உள்ளன. தனிமனித மனத்தில் எழுகின்ற எண்ண அலைகள் முதலில் வார்த்தைகளாக வெளிப்பட்டுப் பிறகு மேலும்மேலும் தூல வடிவத்தைப் பெறுகின்றன.

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 1. 4

பிரபஞ்சத்தில் பிரம்மா என்றும் ஹிரண்யகர்ப்பன் என்றும் அழைக்கப்பெறும் பிரபஞ்ச மகத் முதலில் நாமமாக வெளிப் பட்டு, பின்னர் ரூபமாக அதாவது இந்தப் பிரபஞ்சமாக ஆகிறது. நாம் அறிகின்ற இந்த உலகம்தான் ரூபம். இதை வெளிப்படுத்திக் கொண்டு இதற்குப் பின்னால் நிற்பது ஒலி சக்தியாகும். இது ஸ்ஃபோடம் என்று அழைக்கப்படுகிறது. இது அழிவற்றது, விளக்க முடியாதது. அதன் வெளிப்பாடாக லோகாஸ் (Logos) அல்லது சொல் உள்ளது. அழிவற்ற இந்த ஸ்ஃபோடம்தான் அனைத்து எண்ணங்களுக்கும் அதாவது நாமங்களுக்கும் மிக இன்றியமையாத, நிலையான மூலப்பொருளாக இருக்கிறது. அந்தச் சக்தியைக் கொண்டே கடவுள் உலகைப் படைக்கிறார்—இல்லை, கடவுள் முதலில் ஸ்ஃபோடமாக ஓர் எல்லைக்கு உட்படுகிறார். பின்னர், இன்னும் தூலமாக நாம் உணர்கின்ற உலகமாகப் பரிணமிக்கிறார். இந்த ஸ்ஃபோடத்தை ஒரே ஒரு சொல்லால்தான் குறிக்க முடியும். அதுதான் ஓம். எந்தப் பகுப்பு முறையைக் கையாண்டாலும் ஒரு சொல்லிலிருந்து அதன் கருத்தை எப்படிப் பிரிக்க முடியாதோ, அதுபோல் ஓம் என் பதும் நிலையானதான ஸ்ஃபோடமும் பிரிக்க இயலாதவை. எனவேதான் புனிதமான சொற்கள் அனைத்துள்ளும் புனித மானதும், நாமரூபங்களுக்கெல்லாம் தாயானதும், அழிவற்றதும் ஆன இந்த ஓங்காரத்திலிருந்துதான் பிரபஞ்சம் முழுவதும் படைக்கப்பட்டுள்ளது.

எண்ணமும் சொல்லும் பிரிக்க முடியாதவை. அதே வேளையில் ஒரு பொருளைக் குறிக்கப் பல சொற்களும் இருக் கின்றன. எனவே எந்தவோர் எண்ணத்திலிருந்து பிரபஞ்சம் தோன்றியதோ, அந்த எண்ணத்தைக் குறிப்பிட இந்த ஓம் என்ற சொல் ஒன்றினால்தான் முடியும் என்று கூறத் தேவையில்லையே என்ற கேள்வி எழலாம். இதற்கு நாம் கூறும் பதில் இதுவே: அனைத்தையும் தன்னகத்தே அடக்கியதாக விளங்கக் கூடி யது இந்த ஓங்காரம் ஒன்றுதான். இதற்கு நிகராக எந்தச் சொல்லும் இல்லை. எல்லா சொற்களுக்கும் மூலகாரணம் ஸ்ஃபோடம்தான். ஆனாலும் அது முழு வடிவம் பெற்ற ஒரு தனித்த சொல் அல்ல. ஒரு சொல்லை மற்றொரு சொல்லிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்ற எல்லா இலக்கணங்களையும் நீக்கிக்கொண்டே வரும்போது, மேலும் நீக்க முடியாதபடி எஞ்சியிருக்கும் மூல நாதம் எதுவோ, அதாவது வேறுபட்ட தோற்றத்திற்கு வருவதற்கு முன் இருந்த முழுமுதல் நாதம்

எதுவோ அதுவே ஸ்ஃபோடம். எனவேதான் ஸ்ஃபோடத்தை நாதப் பிரம்மம் என்று அழைக்கிறோம்.

இவ்வாறு, எந்த இலக்கணங்களாலும் குறிப்பிட்டு விளக்க முடியாத ஸ்ஃபோடத்தை விளக்கவே ஒவ்வொரு சொற்குறியீடும் எழுந்துள்ளன. ஆனால் ஒரு சொல்லால் அதைக் குறிப்பிடும்போது அது இலக்கணங்களையே குறிப்பிடுவதால் ஸ்ஃபோடத்தின் முற்றமுடிந்த இயல்பை, அதாவது ஸ்ஃபோடத்தின் உண்மை இயல்பைக் குறிப்பிட இயலாததாகி விடுகிறது. எனவே, எந்தச் சொல்வடிவம் கூடியவரையில் அதன் இலக்கணங்களைச் சொல்லாமல் முடிந்தவரைக்கும் சரியாகச் சொல்கிறதோ, மிகமிக நெருங்கிய நிலைக்கு வந்து அதன் இயல்பை வெளிப்படுத்துகிறதோ அதுவே ஸ்ஃபோடத்தைக் குறிக்கும் உண்மையான, பொருத்தமான சொல்லாகும். அந்தச் சொல்தான் ஓம், ஓம் ஒன்றே.

எப்படியென்றால், அகர உகர மகர ஒலிகளின் சேர்க்கையாகிய ஓங்காரம், எழக்கூடிய எல்லா வகை ஒலிகளுக்கும் பொதுமைக் குறியீடாக விளங்குகிறது. அகர ஒலி பிற ஒலிகளிலிருந்து பிரித்து அறிய முடியாததாக, எப்போதும் அவற்றோடு சேர்ந்திருப்பதால் ஸ்ரீகிருஷ்ண பகவான், 'அக்ஷராணாம் அகாரோऽஸ்மி'—எழுத்துக்களில் நான் அகரமாக இருக்கிறேன்' என்று கீதையில் (10. 33) கூறினார். மேலும், உச்சரிக்கப்படுகின்ற ஒலிகள் எல்லாமே அடிநாக்கிலிருந்து உதட்டு நுனி வரையிலுள்ள இடைப்பட்ட இடத்தில்தான் உருக்கொள்கின்றன. முதலில் தொண்டையிலிருந்து உண்டாகின்ற ஒலி அகரம். உதட்டில் முடிகின்ற கடைசி ஒலி மகரம். நாக்கின் அடிப்பகுதியிலிருந்து உதடு வரைக்கும் முன்னோக்கி உந்திவரும் ஒலி உகரம். சரியானபடி உச்சரித்தால், ஓங்காரம் ஒலியமைப்பு முறை முழுவதையுமே தன்னுள் அடக்கியதாகும். வேறு எந்த ஒலியும் இப்படி இல்லை.

எனவேதான் ஸ்ஃபோடத்தின் மிகப் பொருத்தமான குறியீடாகவும் அதன் பொருளாகவும் ஓம் உள்ளது. குறியீடும் அது குறிக்கும் பொருளும் இணைபிரியாதவை, பிரிக்க இயலாதவை. ஆதலால் ஓம் என்னும் குறியீடும் ஸ்ஃபோடமும் ஒன்றே. வெளிப்பட்டுத் தோன்றுகின்ற இந்தப் பிரபஞ்சத்தின் நுண் பகுதியாக ஸ்ஃபோடம் இருப்பதால், இதுவே கடவுளுக்கு மிக அருகில் இருப்பதாகிறது. ஆகவே இறைஞானத்தின் முதல் வெளிப்பாடு இதுவே. இந்த ஓங்காரம்தான் உண்மையில்

இறைவனைக் குறிக்கின்ற குறியீடாகும். 'ஒன்றே ஒன்று' ஆகவும், அகண்ட சச்சிதானந்தப் பொருளாகவும் விளங்கும் நிறைவான பிரம்மத்தை, குறைபாடுடைய மனிதன், தன் தகுதிக் கேற்ப ஒருசில நிலைகள் உடையவராக, ஒருசில பண்புகளுடன் கூடியவராக உணர்கிறான். அதுபோல் அவரது திருமேனியாக விளங்குகின்ற இந்த உலகமும் மனிதனின் மனப்பாங்கிற்கு ஏற்பவே உணரப்படுகிறது.

பக்தனின் இந்த மனப்பாங்கு, அவனது மனத்தில் மேலிட்டு நிற்கின்ற மூலகங்கள் அல்லது தத்துவங்களால் தீர்மானிக்கப் படுகிறது. இதன் பயனாக, ஒரே கடவுள் பலவகை வடிவங்களில், பலவகைக் குணங்களுடன் அறியப்படுகிறார்; ஒரே பிரபஞ்சம் பல்வேறு விதமாகக் காட்சியளிக்கிறது. வேறுபாட்டுக் கருத்துக் களை அவ்வளவாகக் கொண்டிராத, உலகம்தழுவிய குறியீடான ஓங்காரத்தைப் பொறுத்தவரைகூட, எண்ணமும் ஒலிக்குறியீடும் இணைபிரியாமல் இருக்கும் நியதியைக் காண்கிறோம். கடவுளைப்பற்றியும், உலகைப்பற்றியும் எழுந்துள்ள கணக்கற்ற கருத்துக்களுக்கும் இந்த நியதி பொருந்தும். இதன்படி ஒவ் வொரு கருத்தும் ஒரு தனிப்பட்ட சொல்வடிவத்தைப் பெற் றுள்ளது. இந்தச் சொற்கள் (மந்திரங்கள்) முனிவர்களின் மிக ஆழ்ந்த ஆன்மீகக் காட்சிகளில் வெளிப்பட்டவையாகும். இவை இறைவனுடைய ஒரு தனிப்பட்ட இயல்பையும் அவை குறிக்கும் உலகத்தையும் நமக்குச் சொல்வடிவில் தெரிவிக்கின்றன. ஓங்காரம் முழுமுதற் பொருளின் வேறுபாடற்ற வடிவத்தைக் குறிப்பதுபோல், மற்ற மந்திரங்கள் அதே பிரம்மத்தின் தனித் தனியான இயல்புகளைக் குறிக்கின்றன. இவை எல்லாமே இறைவனைப்பற்றி தியானம் செய்யவும் உண்மையறிவை அடையவும் உதவியாக இருக்கின்றன. ❋

## 8. உருவ வழிபாடு

அடுத்ததாக நாம் கருத வேண்டியவை பிரதீக வழிபாடும் பிரதிமை வழிபாடு அல்லது உருவ வழிபாடுமாகும். இறைவனின் இடத்தை ஓரளவு திருப்திகரமாக நிறைவேற்றுகின்ற ஒரு பொருளே பிரதீகம்.

பிரதிகத்தின்மூலம் இறைவனை வழிபடுவது என்பது என்ன? 'அப்ரஹ்மணி ப்ரஹ்மத்ருஷ்ட்யா அனுஸந்தானம்—பிரம்மம் அல்லாததை பிரம்மமாகக் கருதி அதில் பக்தியுடன் மனத்தை இணைப்பது'[1] என்கிறார் பகவான் ராமானுஜர். 'மனத்தை பிரம்மமாக வழிபடுவது அக வழிபாடு. ஆகாசத்தை பிரம்மமாக வழிபடுவது தேவ வழிபாடு' என்கிறார் சங்கரர்.[2] மனம் அகப் பிரதீகம், ஆகாசம் புறப் பிரதீகம். இரண்டையுமே இறைவனின் இடத்தில் வழிபட வேண்டும். மேலும் சங்கரர் கூறுகிறார்: 'அதுபோல், ''சூரியனும் பிரம்மம். இது ஓர் ஆணை'', ''நாமத்தைப் பிரம்மமாக உபாசிக்கின்றவன்'' இது போன்ற சுருதி வாக்கியங்களில் சொல்லப்பட்ட பிரதீகங்களை எப்படி வழிபடுவது என்பதுபற்றிச் சந்தேகம் எழுகிறது.'[2]

பிரதீகம் என்ற சொல் 'நோக்கிச் செல்வது' என்று பொருள் படுகிறது. பிரதீக வழிபாடு என்பது இறைவனுக்குப் பதிலாக ஒன்றினை வழிபடுவது. அந்த ஒன்று பல விஷயங்களில் பிரம்மத்தை ஒத்திருந்தாலும் உண்மையில் பிரம்மம் அல்ல. வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பிரதீகங்களைத் தவிர புராணங்களிலும் தந்திரங்களிலும் பல்வேறு பிரதீகங்கள் காணப்படுகின்றன. இத்தகைய பிரதீக வழிபாட்டில் பல்வேறு வகையான முன்னோர் வழிபாடுகளையும் தேவ வழிபாடுகளையும் சேர்த்துக் கொள்ளலாம்.

---

1. பிரம்ம சூத்திரம் 4.15 விளக்கவுரையில் ராமானுஜர்.

2. 'மனோ ப்ரஹ்மேத்யுபாஸீதேத்யத்யாத்மம் அதாதிதைவதமாகாசோ ப்ரஹ்மேதி' (சாந்தோக்கிய உபநிடதம் 3.18.1) ததா 'ஆதித்யோ ப்ரஹ்மேத்யாதேச:' (சாந். உப 3.19.1.) 'ஸ யோ நாம ப்ரஹ்மேத்யுபாஸ்தே' (சாந். உப. 7.1.5) இத்யேவமாதிஷு ப்ரதீகோபாஸனேஷு ஸம்சய:।
—பிரம்ம சூத்திரம் 4.1.3 விளக்கவுரையில் சங்கரர்.

இறைவனை வழிபடுவது மட்டுமே பக்தி. தேவர்களையோ முன்னோர்களையோ அல்லது வேறு யாரையானாலும் சரி, வழிபடுவது பக்தி ஆகாது. அது பக்தியல்ல. பல்வேறு தேவதைகளைப் பலவிதமாக வழிபடுவது எல்லாமே கர்மச் சடங்கு என்னும் பிரிவைச் சேர்ந்தவை. இவை மேலுலக சுகபோகங்கள் எதையாவது தருமே தவிர பக்தியைத் தராது; முக்திநிலைக்கு அழைத்துச் செல்லவும் செய்யாது. எனவே நாம் ஒரு விஷயத்தைக் கருத்தில்கொள்வது இன்றியமையாதது—சிலவேளைகளில் இப்படி நிகழ்வதற்கு வாய்ப்பு உண்டு: மிக உயர்நிலை லட்சியமான பரம்பொருள் வழிபாட்டைப் பிரதீகத்தின் மூலம் செய்ய முற்படும்போது, பரம்பொருளையே பிரதீகத்தின் நிலைக்கு இறக்கி, அந்தப் பிரதீகத்தையே தன் ஆன்மாவாக, தன்னுள் உறைந்து வழி நடத்துகின்ற அந்தர்யாமியாகக் கருத நேரிடலாம். அப்படி வழிபடுபவன் முற்றிலும் தவறான பாதையில் செல்கிறான். உண்மையில் எந்தப் பிரதீகமும் அவனது ஆன்மாவாக இருக்க முடியாது.

எங்கு பிரம்மமே வழிபடுபொருளாக இருந்து, பிரதீகம் அதை நினைவுகூர்வதற்கான ஒரு சின்னமாக மட்டுமே இருக்கிறதோ, அதாவது எல்லாவற்றிற்கும் மூலகாரணமான பிரம்மம் பிரதீகத்தின்மூலமாக வழிபடப்படுகிறதோ அந்த வழிபாடு நிச்சயமாகப் பலன் தருகிறது. அது மட்டுமல்ல. மனம் ஆரம்ப வழிபாட்டு நிலைகள் எல்லாவற்றையும் கடந்து செல்லாத வரை மனித குலத்திற்குப் பிரதீக வழிபாடு மிகமிகத் தேவையானது.

எனவே தேவதைகளையோ தேவர்களையோ அவர்களுடைய நிலையில் வைத்து, அவர்களுக்காக வழிபடுவது வெறும் கர்மச் சடங்கு மட்டுமே. அது ஒரு வித்யை என்ற நிலையில் அதற்குரிய பலனை மட்டுமே தரும். ஆனால் தேவதைகளையும் தேவர்களையும் பிரம்மமாகக் கருதி வழிபட்டால், இறைவனை வழிபடுவதற்குரிய பலன் கிடைக்கிறது. அதனால்தான் ஒரு தேவதையோ, முனிவரோ, அல்லது மகானோ வழிபடுவதற்குரிய பொருளாகக் கொள்ளப்பட்டு, பின்னர் அவர்கள் அவர்களின் நிலையிலிருந்து பிரம்ம நிலைக்கு உயர்த்தப் பெற்று வழிபடப்படுவதை சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் பல இடங்களில் காண்கிறோம்.

'நாமரூபங்கள் நீக்கப்பட்டால் இருப்பது எல்லாமே பிரம்மம் அல்லவா?' என்று கேட்கிறான் அத்வைதி.

விசிஷ்டாத்வைதியும் 'இறைவன் நம் ஒவ்வொருவருடைய அந்தராத்மா அல்லவா?' என்று கேட்கிறான்.

சங்கரர் தமது பிரம்ம சூத்திர விளக்கவுரையில் (4.1.4) எழுதுகிறார்—

'பலம் ஆதித்யாத்யுபாஸனேஷு ப்ரஹ்மைவ தாஸ்யதி ஸர்வாத்யக்ஷத்வாத்... ஈத்ருசம் சாத்ர ப்ரஹ்மண உபாஸ்யத்வம் யத: ப்ரதீகேஷு தத் அத்ருஷ்ட்யாத்யாரோபணம் ப்ரதிமாதிஷு இவ விஷ்ணு ஆதீனாம்:—பிரம்மமே அனைத்தையும் ஆட்சி செய்வதால் ஆதித்தன் போன்றோரை வழிபடுவதன் பலனையும் அவரே தருகிறார்... பிரம்மம் இவ்வாறு வழிபாட்டிற்கு உரிய தாகிறது. விஷ்ணு முதலான தெய்வங்களைத் திருவுருவங் களில் ஏற்றி வழிபடுவதுபோல், பிரம்மம் பிரதீகங்களில் ஏற்றி வழிபடப் படுகிறது.'

மேலே கூறப்பட்ட கருத்துக்கள் அனைத்தும் உருவ வழி பாட்டிற்கும் பொருந்தும். திருவுருவம் ஒரு தேவதைக்காகவோ மகானுக்காகவோ இருக்குமானால் அந்த வழிபாடு பக்தியையும் தராது; முக்திக்கும் அழைத்துச் செல்லாது. அது ஒரே கடவுளுக் காக அமையுமானால் அது பக்தி, முக்தி இரண்டையுமே தரும்.

உலகின் முக்கிய மதங்களுள் வேதாந்தம், பௌத்தம், கிறிஸ்தவத்தின் ஒருசில பிரிவுகள்—இவை உருவங்களைத் தாராளமாகப் பயன்படுத்துகின்றன. இஸ்லாம் மற்றும் பிராட் டஸ்டன்ட் மதங்கள் உருவ வழிபாட்டின் உதவியை ஏற்ப தில்லை. இருந்தபோதிலும் முகமதியர்கள் தங்கள் மகான்கள் மற்றும் வீரத் தியாகிகளின் கல்லறைகளை உருவங்களுக்குப் பதிலாக வழிபடவே செய்கிறார்கள். பிராட்டஸ்டன்ட்களைப் பொறுத்தவரை அவர்கள் எல்லா உருவ உதவிகளையும் புறக் கணித்து, ஆன்மீகத்திலிருந்து நாளுக்குநாள் வெகுதூரம் விலகிச் சென்றுகொண்டிருக்கின்றனர். இதன் பலனாக இன்றைய முன்னேறிய பிராட்டஸ்டன்ட்களுக்கும், அகஸ்ட் காம்டேயைப் (Auguste Comte) பின்பற்றுவோருக்கும், மற்றும் நல்வழியை மட்டும் போதிக்கின்ற ஆஜ்ஞேயவாதிகளுக்கும் இடையே பெரி தாக எவ்வித வேறுபாட்டையும் காண முடிவதில்லை. கிறிஸ்த வத்திலும் இஸ்லாமிலும் நடைமுறையில் காணப்படும் உருவ வழிபாடுகூடப் பிரதீகங்களையும் உருவங்களையும் மட்டிலுமே வணங்குகின்ற கீழ்நிலைப் பிரிவிலேயே உள்ளது; இறைக்காட்சி பெற உதவுகின்ற (த்ருஷ்டி ஸௌகர்யம்) வகையில் அமைய வில்லை. ஆகவே அவர்கள் செய்கின்ற வழிபாடு கர்மச் சடங்கு

என்ற நிலையில் அமைகிறதே தவிர, அது பக்தியையோ முக்தியையோ தர முடியாது. இத்தகைய உருவ வழிபாட்டிலும் ஆன்மா இறைவனை நாடும் கடமையை விட்டுவிட்டு, திருவுருவங்கள், கல்லறைகள், கோயில்கள், ஸ்தூபிகள் முதலியவற்றை வழிபடுகிறது. உண்மையில் இதுதான் உருவ வழிபாடு என்று சொல்ல வேண்டும். இதில் பாவமோ தீமையோ எதுவும் இல்லை. இது ஒரு சடங்கு, அவ்வளவுதான். அதற்கான பலனை, வழிபடுவோர் கண்டிப்பாகப் பெறத்தான் செய்கிறார்கள். ❀

## 9. இஷ்ட நிஷ்டை

அடுத்ததாக நாம் காணப்போவது இஷ்ட நிஷ்டை. பக்தனாக இருக்க விரும்பும் ஒருவன் 'எத்தனை கொள்கைகளோ, அத்தனையும் வழிகள்' என்பதை உணர வேண்டும். பல்வேறு மதங்களும் அவற்றின் பல்வேறு பிரிவுகளும் எல்லாம் ஒரே இறைவனுடைய மகிமையின் பல்வேறு வெளிப்பாடுகள் என்பதை அறிய வேண்டும்.

'என் இறைவா! உன்னைப் பல பெயர்களால் அழைக்கின்றனர். பல்வேறு பெயர்கள் சூட்டி அழைப்பதால் நீயும் பலவாகத் தோற்றம் அளிக்கிறாய். ஆனால் உன் ஒவ்வொரு வடிவத்திலும் முழுச் சக்தி வெளிப்படுகிறது... இவை அனைத்தின் மூலமாகவும் நீ பக்தர்களைச் சென்று அடைகிறாய். பக்தனின் இதயம் உனக்காகத் தீவிரமாக ஏங்கி நிற்குமானால் உன்னை வழிபடுவதற்கு நேரம் காலம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை. நீ மிக எளிதில் அணுகக்கூடியவன். உன்னிடம் பக்தி கொள்ளாமலிருப்பது என் துரதிர்ஷ்டமே அல்லவா!'[1]

அது மட்டுமின்றிப் பல்வேறு நெறிகளைத் தோற்றுவித்த ஞானசூரியர்களான மகான்களை வெறுக்கக் கூடாது; விமர்சிக்கவும் கூடாது. அவர்களைப் பிறர் குறை சொல்வதையும் கேட்கக் கூடாது. அபூர்வமாக ஏதோ ஒருசிலர்தான் பிற நெறியினரையும் பரிவுடன் ஏற்றுக்கொண்டு, அவர்களிடம் அன்புணர்வுடன் நடக்கின்றனர்.

ஆனால் ஒன்று: பரந்த மனப்பான்மையும் பரிவும் கொண்டுள்ள நெறிகள் தங்கள் ஆன்மீக ஈடுபாட்டில் தீவிரத்தை இழந்துவிடுவதைப் பொதுவாகக் காண்கிறோம். அத்தகையோரின் கையில் மதம் என்பது ஒரு வகையான அரசியல்-சமுதாய மன்றம் என்ற அளவில் கீழ்நிலைக்கு வந்துவிடுவது நிச்சயம். இனி, குறுகிய மதப் பிரிவுகளைச் சார்ந்தவர்கள்

---

1. பக்கம் 00 அடிக்குறிப்பு காண்க.

தத்தம் கோட்பாடுகளில் காட்டுகின்ற தீவிரமான பற்று போற்றக் கூடியதாகவே உள்ளது. ஆனால் அவர்களது இந்தத் தீவிரப் பற்றின் ஒவ்வொரு துளியும், தங்களுக்கு மாறான கருத்து உடையவர்களை வெறுப்பதன்மூலமே பெறப்பட்டிருப்பது போல் தோன்றுகிறது. தங்கள் லட்சியத்தில் தீவிரமான பற்றும் அதே அளவு பிற நெறியினரிடம் உலகம்தழுவிய பரிவும் கொண்ட மக்கள் நிறைந்திருக்குமாறு இந்த உலகை இறைவன் ஆசீர்வதிக்க மாட்டானா! ஆனால் அத்தகையோர் ஒருசிலரே அங்குமிங்குமாக இருக்கின்றனர்.

ஆழ்ந்த அன்பும் பரந்த மனப்பான்மையும் ஒருங்கே கொண்ட பெருவாரியான மக்களை உருவாக்க முடியும். அதற்கான வழியே இஷ்ட நிஷ்டை அல்லது இஷ்டதெய்வத்திடம் நிலைத்த பக்தி.

ஒவ்வொரு மதத்தின் ஒவ்வோர் உட்பிரிவும் தனது லட்சியம் ஒன்றை மட்டுமே மனித குலத்தின் முன் வைக்கிறது. ஆனால் என்றென்றும் இருப்பதான வேதாந்த மதமோ, எந்த மனிதன் ஆனாலும் அவன் தெய்வத்தின் திருசன்னிதியில் செல்வதற்கு, தெய்வீகம் என்னும் கருவறைக்குள் நுழைவதற்கு எண்ணற்ற கதவுகளை மனித குலத்தின் முன் திறந்து வைத்துள்ளது; கணக்கற்ற லட்சியங்களைக் காட்டித் தந்துள்ளது. இவை ஒவ்வொன்றிலும் அழிவற்ற அந்தப் பரம்பொருளின் வெளிப்பாடே நிலவுகிறது. பண்டைக் காலத்திலும் இன்றும் மனிதகுல மாணிக்கங்களாகத் திகழ்ந்த, திகழ்கின்ற மகான்களும் அவதார புருஷர்களும் மனித வாழ்வின் உண்மைகளாகிய கடினப் பாறையைச் செதுக்கி, செம்மையாக்கி, நன்முறையில் ஆக்கித் தந்த எண்ணற்ற வழிகளை, ஆன்மீக வாழ்வில் முன்னேறத் துடிக்கும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பரிவுடன் வேதாந்தம் காட்டிக் கொடுத்தது. அது மட்டுமின்றி, இனி பிறக்க இருப்போரையும் நேசக்கரங்கள் நீட்டி வரவேற்று, மாயையாகிய வலையிலிருந்து அவர்கள் விடுபட்டு, முழுமையான சுதந்திரத்தையும் அழியா ஆனந்தத்தையும் பெற்று, உண்மையென்னும் வீட்டை அடையவும் ஆனந்தப் பெருங்கடலில் திளைக்கவும் வழி வகுக்கிறது.

அதனால்தான், முக்திக்கு வழி காட்டும் பாதைகளுள் எதையும் வெறுக்கவோ மறுக்கவோ கூடாது என்று பக்தி யோகம் நமக்குத் திட்டவட்டமாக ஆணையிடுகிறது. அதே வேளையில் செடி நன்கு வளர்ந்து மரமாகும் வரையில் அதைச்

சுற்றி வேலியிட்டுக் காக்க வேண்டுவதும் அவசியம். தொடர்ந்து மாறி வருகின்ற சிந்தனைகளுக்கும் லட்சியங்களுக்கும் மிக ஆரம்பத்திலேயே இடம் கொடுக்க ஆரம்பித்துவிட்டால், ஆன்மீகம் ஆகிய இந்த இளஞ்செடி மாய்ந்து போகும்.

பலர், தங்களைப் பரந்த மனப்பான்மை கொண்ட மதத்தினர் என்று கருதிக்கொண்டு, தொடர்ந்து பல்வேறு லட்சியங்களைப் பின்பற்றுவதன்மூலம் தங்கள் வீண் ஆர்வத்தைத் தீர்த்துக் கொள்கின்றனர். இப்படிப் புதுப்புது கருத்துக்களைக் கேட்பது என்பது இவர்களிடம் ஒரு நோயாகவே வளர்ந்து வருகிறது; ஒருவகையான மதக்-குடிவெறியாகவே ஆகி வருகிறது. தற்காலிகமான உள்ளக்கிளர்ச்சியைப் பெறவே இவர்கள் இப்படிப் புதியவற்றைத் தேடித் திரிகின்றனர். ஒன்றின் போதை தெளிந்ததும் மற்றொன்றை நாடத் தயாராகின்றனர். இவர்களுக்கு மதம் என்பது, அறிவைக் கிளரச் செய்யும் ஒரு போதைப் பொருள். அறிவைத் தூண்டுவதோடு அதன் வேலை முடிந்துவிடுகிறது.

முத்துச்சிப்பி போன்ற மனிதர்களும் இருக்கிறார்கள் என்பார் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்—'முத்துச்சிப்பி தன் இருப்பிடமான கடலின் ஆழ்மட்டத்திலிருந்து மேலே வந்து சுவாதி நட்சத்திரத்தன்று பெய்யும் மழைத்துளிக்காக ஏங்கிக் காத்திருக்கிறது. வாயைத் திறந்தவண்ணம் கடலின் மேற்பரப்பில் அங்கு மிங்குமாக மிதக்கிறது. மழைத்துளியைப் பெற்ற மாத்திரத்திலேயே வாயை மூடிக்கொண்டு, கடலின் அடிமட்டத்திற்குச் சென்றுவிடுகிறது. அங்குப் பொறுமையாகக் காத்திருந்து மழைத்துளியை முத்தாக மாற்றுகிறது.'

இஷ்ட நிஷ்டை என்னும் தத்துவத்தை இவ்வளவு கவிதை நயத்துடனும் ஆற்றலுடனும் கூறியிருப்பதை வேறெங்கும் காண முடியாது. இந்த ஏக நிஷ்டை அல்லது ஒரே லட்சியத்தில் பக்தி என்பது ஆரம்ப நிலை பக்தர்களுக்கு மிகவும் இன்றியமையாதது. 'லட்சுமி நாராயணனும், ஜானகிராமனும் ஒரே பரம் பொருளின் இருவேறு தோற்றங்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனாலும் தாமரைக் கண்ணனாகிய ராமன்தான் எனக்கு எல்லாம்'[1] என்று ராமாயணத்தில் அனுமன் கூறுவார். 'எல்லாவற்றின் இனிமையையும் எடுத்துக்கொள். எல்லோருடனும்

---

1. ஸ்ரீநாதே ஜானகீ நாதே அபேத: பரமாத்மனி |
தத்தாபி மம ஸர்வஸ்வம் ராம: கமல லோசன: ||

சேர்ந்திரு. எல்லா நாமங்களையும் ஏற்றுக்கொள். சரி சரி என்று சொல். ஆனால் உனது இருக்கையில் உறுதியாக, விடாப்பிடியாக இரு'[1] என்பார் துளசிதாசர். இதுவே பக்தனின் போக்காக இருக்க வேண்டும். பக்த சாதகன் இப்படியிருந்து, அவனிடம் உண்மையும் இருக்குமானால், இந்தச் சின்னஞ்சிறு விதையிலிருந்து பெரியதொரு ஆலமரம் வரவே செய்யும். நாலாபக்கமும் கிளைகளைப் பரப்பி, விழுதுகளைத் தொங்கவிட்டு ஆன்மீகம் என்னும் துறை முழுவதையும் ஆக்கிரமித்துக் கொள்ளும். இவ்வாறு, உண்மையான பக்தன் ஒருவன், தான் வணங்கும் தெய்வம்தான் பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்தவர்களால், பல பெயர்களிலும் பல உருவங்களிலும் வணங்கப்படுகிறார் என்பதை இறுதியில் தெள்ளத்தெளிவாக அறிகிறான். ❀

---

1. ஸப்ஸே பஸியே ஸப்ஸே ரஸியே ஸப்கா லீஜியே நாம் ।
ஹாம்ஜீ ஹாம்ஜீ கர்த்தே ரஹியே பைட்டியே ஆப்னா டாம் ॥

## 10. வழிமுறைகள்

பக்தியோகத்திற்கான வழிமுறைகளைப்பற்றி பகவான் ராமானுஜர் வேதாந்த சூத்திர உரையில் பின்வருமாறு கூறு கிறார்: 'விவேகம், புலனடக்கம், பயிற்சி, யாகம் முதலிய கிரியைகள், தூய்மை, ஆற்றல், அளவுக்கு மீறிய மகிழ்ச்சியைக் கட்டுப்படுத்துதல்—இவை அதற்குரிய சாதனைகளாகும்.'

ராமானுஜரின் கருத்துப்படி, விவேகம் என்பது பல்வேறு விஷயங்களுள், தூய உணவு எது, தூய்மையற்ற உணவு எது என்று அறிவதாகும். மூன்று காரணங்களினால் உணவு தூய்மையை இழக்கிறது என்கிறார் அவர்—

(1) இயற்கையாகவே தூய்மையில்லாத உணவு—பூண்டு முதலியவை. (ஜாதி தோஷம்)

(2) தீயவர்கள், பண்பற்றவர்கள்—இவர்களிடமிருந்து வருவதால். (ஆச்ரய தோஷம்)

(3) புறத் தூய்மை இல்லாததால், அதாவது அழுக்கு, முடி முதலியவை விழுவதால். (நிமித்த தோஷம்)

'உணவு தூய்மையுடன் இருந்தால் சத்வம் தூய்மை யாகிறது. நினைவாற்றல் நிலைபெறுகிறது.' என்று வேதங்கள் கூறுகின்றன. ராமானுஜர் இதனை சாந்தோக்கிய உபநிடதத் திலிருந்து எடுத்தாள்கிறார்.

பக்தர்களைப் பொறுத்தவரை உணவுக் கட்டுப்பாடு ஒரு முக்கியமான விஷயமாக இருந்துவருகிறது. சில பக்திநெறிகள் இதனைத் தேவைக்கு அதிகமாகவே பெரிதுபடுத்தியிருப்பது உண்மை. எனினும் உணவுக் கட்டுப்பாட்டில் பெரியதோர் உண்மை இருக்கவே செய்கிறது.

சாங்கியக் கருத்துப்படி, சத்வம், ரஜஸ், தமஸ் மூன்றும் சமச்சீர் நிலையில் இருக்கும்போது பிரகிருதியாகவும், சமநிலை குலைந்து ஏற்றத்தாழ்வாக இருக்கும்போது பிரபஞ்சமாகவும் உருக்கொள்கின்றன. இந்த மூன்றும் பிரகிருதிக்கு மூலப்பொரு ளும் இயல்பும் ஆகின்றன. ஒவ்வொரு மனித உருவமும் இவற் றிலிருந்தே படைக்கப்பட்டுள்ளது. ஆன்மீக முன்னேற்றம்

வேண்டுமானால், சத்வப் பொருள் மேலாதிக்கம் செலுத்த வேண்டுவது மிகவும் இன்றியமையாதது.

உணவின் மூலமாக நமது உடலுள் நாம் பெறும் சத்துப் பொருட்கள் நமது மனத்தின் இயல்பை நிர்ணயிப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன. எனவேதான் உணவில் நாம் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். அதற்காக, வேறு பல விஷயங்களில் நடப்பதுபோல், உணவு விஷயத்திலும் பொதுவாக சாதகர்கள் காட்டும் வெறித்தனத்திற்கு ஆச்சாரியர்களின்மீது குற்றம் சுமத்துவது நியாயம் ஆகாது.

உணவு விஷயத்தில் நாம் மேற்கொள்ளும் விவேகம் வெறும் இரண்டாம் பட்சமானது மட்டுமே. மேற்கண்ட உபநிடத மந்திரத்தில் வரும் ஆஹாரம் என்ற சொல் பொது வாக உணவு என்றே பொருள் கொள்ளப்படுகிறது. ஆனால் சங்கரர் தமது உரையில், அதற்கு வேறுவிதமாகப் பொருள் கூறுகிறார்: 'ஆஹாரம் என்பது உள்ளிழுப்பது. ஆன்மாவின் இன்ப அனுபவத்திற்காக பொறிகள் வாயிலாக, ஒலி முத லான புலனறிவுகள் உள்ளே இழுக்கப்படுகின்றன. இந்த அறி வினைத் தூய்மைப் படுத்துவதைத்தான் உணவைத் (ஆஹாரம்) தூய்மைப்படுத்துவது என்கிறோம். ''உணவைத் தூய்மைப்படுத் தல்'' என்ற சொல், பற்று, வெறுப்பு, மன மயக்கம் போன்ற மாசுகள் நீங்கப்பெற்று புலனறிவைப் பெறுதல் என்று பொருள் படுகிறது. இப்படித் தூய்மைப்படுத்தப் பெற்ற அறிவின் பய னாக, நமது மனத்தின் சத்வப் பொருள் தூய்மைப்படு கிறது. சத்வம் தூய்மை பெறுவதால், யாருடைய உண்மையான இயல்பு சாஸ்திரங்களின் வாயிலாக அறியப்படுகிறதோ அந்த எல்லையற்ற பரம்பொருளின் இடையீடற்ற நினைவு உண்டாகிறது.'

இந்த இரு விளக்கங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட் டவைபோல் தோன்றினாலும் இரண்டும் உண்மையானவை; அவசியமானவையும்கூட. நுண்ணுடலை அதாவது மனத்தைக் கட்டுப்படுத்துவதும் வசப்படுத்துவதும் தூல உடலைக் கட்டுப் படுத்துவதைவிட உயர்வானது, மேலானது. ஆனால் உள்ளத் தைக் கட்டுப்படுத்த வேண்டுமானால் உடலைக் கட்டுப்படுத்து வது மிகமிக இன்றியமையாதது. எனவே ஆரம்ப நிலை சாதகர்கள் போற்றுதற்குரிய தங்கள் ஆச்சாரிய பரம்பரையினர் கடைப்பிடித்து வந்த உணவுநியதிகளைப் பின்பற்ற வேண்டுவது அவசியமாகிறது.

அதேவேளையில், சில நெறிகளில் உணவு விஷயத்தில் காட்டப்பட்ட பொருளற்ற தீவிரவெறி மதம் என்பதையே சமையலறைக்கு இழுத்து வந்துவிட்டது. அந்த நெறிகள் பலவற்றிலும், அவற்றிலுள்ள உன்னத உண்மைகள் ஆன்மீகம் எனப்படும் சூரிய ஒளிக்கு வருவதான நம்பிக்கை இல்லாமல் போய்விட்டதையே நாம் காண்கிறோம். அது வினோதமான வெற்று உலகாயத வாதம், அவ்வளவுதான். அது ஞானமும் அல்ல, பக்தியும் அல்ல, கர்மமும் அல்ல. அது ஒரு விசேஷப் பைத்தியக்காரத்தனம். அந்த வழியில் செல்பவர்கள் பிரம்ம லோகத்திற்கு அல்ல, பைத்தியக்கார விடுதிக்குத்தான் செல்ல நேரும். எனவே உணவு விஷயத்தில் விவேகத்தோடு இருக்க வேண்டியது அவசியமாகிறது. அப்போதுதான் மனம் மிக உயர்ந்த நிலையை அடைய முடியும். அதை வேறு வழியில் எளிதாக அடைய முடியாது.

அடுத்து நாம் காண வேண்டியது புலனடக்கம். புறப் பொருட்கள்மீது புலன்களைச் செல்லவிடாமல் தடுத்து, அவற்றை அடக்கி, சங்கல்பத்தின் ஆதிக்கத்தின் கீழே கொண்டு வருவது ஆன்மீக வாழ்வின் மூல அடிப்படை ஆகும்.

அடுத்து வருவது சுயக்கட்டுப்பாடும் தன்னல மறுப்பும் ஆகும். இத்தகைய சாதனைகளில் ஈடுபட்டு, தொடர்ந்து பாடு படாமல், போராடாமல் ஒரு சாதகன் ஆன்ம அனுபூதியின் எல்லையற்ற பேறுகளைப் பெற இயலாது.

'மனம் எப்போதும் இறைவனை நினைக்க வேண்டும்.' ஆரம்ப காலத்தில் மனத்தை இடைவிடாமல் இறைவனிடம் திருப்புவது கடினமாகவே இருக்கும். ஆனால் ஒவ்வொரு முறை நாம் முயலும் போதும் அதற்கான வலிமை நம்மிடம் வளர்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் (6. 35), 'குந்தி மகனே! பயிற்சியினாலும் பற்றின்மையாலும் அடையப்படுகிறது' என்கிறார்.

அடுத்து யஜ்ஞம் முதலிய கிரியைகளில் நாம் செய்ய வேண்டியது. பஞ்சமஹா யஜ்ஞம்—ஐந்து பெரிய வேள்விகள்.[1]

---

1. அத்யாபனம் ப்ரஹ்மயஜ்ஞ: பித்ருயஜ்ஞஸ்து தர்ப்பணம் ।
ஹோமோ தைவோ பலிர்பௌதோ ந்ருயஜ்ஞோऽதிதி பூஜனம் ॥
—மனு ஸம்ஹிதை, 3. 70.

i. ப்ரஹ்ம யஜ்ஞம்: ரிஷிகளுக்கு நாம் செய்ய வேண்டியது—தெய்வீக நூல்களைப் படித்தல் போன்றவை.
ii. பித்ரு யஜ்ஞம்: முன்னோர்களுக்கு, தர்ப்பணம் முதலியவை.
iii. தேவ யஜ்ஞம்: தேவர்களுக்கு, ஹோமம் முதலியவை
iv. பூத யஜ்ஞம்: தேவதைகளுக்கு, பலி முதலியவை
v. ந்ரு யஜ்ஞம்: மனிதர்களுக்கு, விருந்துபசாரம் போன்றவை.

தூய்மை என்னும் அஸ்திவாரத்தின் மீதுதான் பக்தியாகிய கட்டிடம் எழும்பி நிற்கிறது. உடம்பைத் தூய்மைப்படுத்துவதும், உணவில் விவேகத்தை மேற்கொள்வதும் சுலபமானவை. ஆனால் அகத் தூய்மையும் புனிதமும் இல்லாமல் புறத் தூய்மைகளால் எந்தப் பயனுமில்லை.

தூய்மையை அளிப்பதற்கு உதவக்கூடிய பண்புகளாக ராமானுஜர் கூறுபவை: ஸத்யம்—உண்மை; ஆர்ஜவம்—நேர்மை; தயை—பிரதிபலனை எதிர்பாராமல் பிறருக்கு நன்மை செய்தல்; அஹிம்சை—மனம், வாக்கு, செயல்களினால் பிறருக்குத் துன்பம் செய்யாமை; அனபித்யம்—பிறர் பொருளுக்கு ஆசைப்படாதிருத்தல்; வீண் சிந்தனைகளுக்கு இடம் கொடுக்காதிருத்தல்; பிறர் செய்த துன்பங்களை எண்ணிக் கலங்காதிருத்தல்.

இந்தத் தொகுப்பில் நம் விசேஷ கவனத்திற்குரியது அஹிம்சை. அஹிம்சை என்னும் கடமை உயிரினங்கள் அனைத்தின்மீதும் நாம் கொள்ள வேண்டிய ஒரு பண்பாகும். சிலர் நினைப்பதுபோல் மனிதர்களுக்கு மட்டுமே துன்பம் செய்யாமல் இருப்பது, மிருகங்களிடம் கருணையின்றி நடந்துகொள்வது என்பது இதன் பொருள் அல்ல. இன்னும் சிலர் நினைப்பது போல் பூனைகளையும் நாய்களையும் காப்பாற்றுவதும், எறும்புகளுக்குச் சர்க்கரை இடுவதும் அதேவேளையில் மனிதர்களிடம் மனிதாபிமானம் சிறிதும் இன்றிக் கொடூரமாக நடந்துகொள்வதும் அல்ல. விஷயம் என்னவென்றால் ஏறக்குறைய இந்த உலகிலுள்ள நல்ல கருத்து ஒவ்வொன்றையும், வெறுப்பின் எல்லைக்கே போகும் அளவிற்கு நாம் நீட்டியிழுக்க முடியும். ஒரு நல்ல பழக்கத்தை எழுத்துக்கு எழுத்து விடாமல் பின்பற்ற வேண்டும் என்று, அதையே ஒரு நியதியாக்கிக் கடைப்பிடிக்கும் போது அது தீமையைத் தவிர வேறெதையும் தராத ஒன்றாகி விடுகிறது. சில பிரிவுகளைச் சேர்ந்த துறவிகள் குளிப்பதில்லை, நாற்றம் சகிக்காது. குளித்தால் எங்கே உடம்பிலுள்ள கிருமிகள் இறந்துவிடுமோ என்ற ஜீவகாருண்யம்தான் அதற்குக் காரணம். கிருமிகளுக்காக மனம் இரங்கும் இவர்கள் பக்கத்தில் இருக்கும் சகோதர மக்களுக்கு எவ்வளவு சங்கடத்தை உண்டாக்குகிறோம், எத்தனை நோய்களைப் பரப்புகிறோம் என்று சற்றும் எண்ணிப் பார்ப்பதில்லை. நல்லவேளை! அவர்கள் வேத மதத்தைச் சார்ந்த துறவிகள் அல்ல!

அஹிம்சைக்கான உரைகல் பொறாமை இல்லாமலிருப்பதுதான். கணநேர எழுச்சியின் வசப்பட்டோ, அல்லது,

மூட நம்பிக்கை காரணமாகவோ, அல்லது மதத்தலைவர் கூறுகிறார் என்பதற்காகவோ யார் வேண்டுமானாலும் ஒரு நல்ல காரியத்தைச் செய்துவிடலாம்; பெரியதொரு நன் கொடையை வழங்கிவிடலாம். ஆனால் உண்மையாகவே மனித குலத்தை மனப்பூர்வமாக நேசிப்பவன் யாரிடமும் பொறாமை கொள்ள மாட்டான். உலகின் மாமனிதர்கள் என்று கூறப்படுபவர்களும் கொஞ்சம் பெயர், கொஞ்சம் புகழ், கொஞ்சம் பணம் என்று அற்ப விஷயங்களுக்காக ஒருவர்மீது ஒருவர் பொறாமைப்படுவதைக் காண்கிறோம். உள்ளத்தில் பொறாமை இருக்கும்வரை நாம் அஹிம்சை என்ற பண்பிற்கு வெகு தொலைவில்தான் நிற்போம்.

பசு எங்கேயும் இறைச்சி உண்பதில்லை; ஆடும் மாமிசம் சாப்பிடுவதில்லை. அதனால் இவை யோகிகளாகிவிடுமா? அல்லது இவை பெரிய அஹிம்சாவாதிகளாகி விடுமா? ஒரு மூடன்கூட இதையும் அதையும் உண்ணாமல் இருக்கலாம். அதற்காக, அவன் இலைதழைகளை உண்டு வாழ்கின்ற மிருகங் களைவிட எந்தவகையிலும் உயர்ந்தவனாகிவிட மாட்டான். விதவைகளையும், அனாதைகளையும் ஏமாற்றித் தின்று, பணத் திற்காக எது வேண்டுமானாலும் செய்யத் துணிகின்ற ஒருவன் புல்லை மட்டுமே உண்டு வாழ்ந்தாலும் அவன் கொடிய மிருகத்தைவிடக் கேவலமானவன். மனத்தாலும் யார் மற்றவர் களுக்குத் திங்கு செய்வதில்லையோ, பகைவனின் வளர்ச்சி யைக் கண்டும் யார் மனம் மகிழ்கிறானோ அவனே பக்தன், அவனே யோகி. அன்றாடம் பன்றி இறைச்சியைத் தின்று வந் தாலும் அவனே எல்லோருக்கும் குரு.

ஆகவே நாம் மனத்தில்கொள்ள வேண்டியது என்னவென் றால் அகத் தூய்மையை வளர்க்க உதவி செய்தால் மட்டுமே, புறப் பயிற்சிகளுக்கு மதிப்பு உண்டு என்பதே. புறப்பயிற்சிகளை எழுத்துக்கு எழுத்து பின்பற்ற முடியாவிட்டால் அகத்தூய்மை மட்டுமே போதும். ஆனால் உண்மையான ஆன்மீக சாரத்தை மறந்து, புறப் பழக்கங்களை உடும்புப்பிடிபோல் கெட்டியாகப் பிடித்துகொண்டு, எந்திரகதியில், உணர்ச்சி செத்துச் செயல் படும் மனிதன், அந்தோ இரங்கத் தக்கவன்! அந்த நாடு, ஐயோ பாவம்! அக வாழ்க்கையின் வெளிப்பாடுகளாக இருக்கும் வரையில்தான் இந்தப் புறப் பழக்கங்களுக்கு மதிப்பு உண்டு. அவற்றால் வாழ்க்கையை வெளிப்படுத்த முடியாவிட்டால், சிறிதும் இரக்கமின்றி அவற்றை அழித்துவிடுங்கள்.

பக்தியோகத்தை அடைவதற்கான அடுத்த வழி அனவஸாதம் அல்லது வலிமை. 'வலிமையற்றவனால், இந்த ஆன்மாவை அடைய முடியாது' என்று சுருதி கூறுகிறது. பலவீனம் என்பது உடல் பலவீனம், மன பலவீனம் இரண்டையுமே குறிப்பிடுவதாகும். வலிமையான, தீரம் மிக்கவர்களே இதற்கேற்ற மாணவர்கள். பலமற்ற நோஞ்சான்களால் என்ன சாதிக்க முடியும்? யோகங்களில் ஏதேனும் ஒன்றைப் பயிலும் போது உடலிலும் உள்ளத்திலும் மறைந்து கிடக்கும் ஆற்றல் சிறிது விழித்தெழுந்தால் போதும், அதைத் தாங்க முடியாமல் இவர்கள் சிதறிப் போவார்கள். 'இளமையும் ஆரோக்கியமும் வலிமையும்'[1] உடையவர்களே வெற்றி பெற முடியும். எனவே உடல் வலிமை மிகவும் இன்றியமையாதது. பொறிகளை அடக்கி ஆளும்போது ஏற்படக்கூடிய அதிர்ச்சிகளை, ஆற்றல் படைத்த உடம்புகளினால் மட்டுமே தாங்க முடியும். பக்தனாக இருக்க விரும்புபவன் வலிமையும் ஆரோக்கியமும் கொண்டவனாக இருப்பது அவசியம். வலிமை அறவே அற்றவன் எந்த யோகத்தைப் பழக முயன்றாலும் சரி, கடைசியில், தீர்க்க முடியாத ஏதேனும் ஒரு நோய்க்கு ஆளாவான். அல்லது மன பலவீனத்திற்கு ஆளாவான். வேண்டுமென்றே உடலைப் பலவீனப்படுத்துவது ஆன்மீக அனுபூதிக்கு நிச்சயமாக வழி வகுக்காது.

மன வலிமை அற்றவர்களாலும் ஆன்மாவை அடைய முடியாது. பக்தனாக இருக்க விழைபவன் உற்சாகமாக இருக்க வேண்டும். மேலைநாட்டுக் கருத்துப்படி, ஒருவன் ஆன்மீக வாழ்வில் ஈடுபட்டால் அவன் சிரிக்கக் கூடாது; அவனது முகத்தில் எப்போதும் துயர மேகம் ஒன்று படிந்திருக்க வேண்டும்; துயரத்தினால் இரண்டு தாடைகளும் இறுகி முகம் நீண்டு தொங்க வேண்டும். இப்படி ஒட்டியுலர்ந்த உடலும் நீண்ட முகமும் உடையவர்கள் மருத்துவமனைக்குச் செல்ல வேண்டியவர்களே தவிர, யோகிகள் அல்ல. உற்சாகமானவர்களே முயற்சியுடையவர்கள். உறுதியான உள்ளம் படைத்தவர்களே ஆயிரக்கணக்கான துன்பங்கள் முளைத்தாலும் அவற்றை வெட்டிச் சாய்த்து முன்னேறுபவர்கள். மிகமிகக் கடினமான இந்தக் காரியம், மாயையின் வலையிலிருந்து விடுபட்டு வெளியேறும் இந்தச் செயல், அபாரமான மன உறுதி கொண்டவர்களுக்கு மட்டுமே ஒதுக்கப்பட்ட பணியாகும்.

---

1. ஆசிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட:। —தைத்திரீய உபநிடதம், 2. 8. 1

அதேவேளையில் அளவுக்கு மீறிய சந்தோஷமும் (அனுத்தர்ஷம்) தவிர்க்கப்பட வேண்டியதே. ஆர்ப்பாட்டம் நம்மை ஆழ்ந்த சிந்தனைக்குத் தகுதியற்றவர்களாகச் செய்து விடும். மனத்தின் ஆற்றல்களையும் அது வீணாக்குகிறது. சங்கல்பம் வலுவாக இருக்கும் அளவிற்கு உள்ளம் உணர்ச்சிப் பெருக்குகளால் அலைக்கழிக்கப்படாதிருக்கும். அளவுக்குமீறிய உற்சாகம், அளவுக்கு மீறிய துன்பம் நிறைந்த அழுத்தத்தைப் (seriousness) போல் தவிர்க்கப்பட வேண்டியதே. மனம் ஒரே நிதானத்துடன் சமநிலையில் அமைதியாக இருந்தால்தான் ஆன்மீக அனுபூதி வாய்க்கும்.

இறைவனிடம் பக்தி கொள்வது எவ்வாறு என்பதை ஒருவன் இவ்வாறு அறியத் தொடங்க வேண்டும். ❦

# IV. சொற்பொழிவுக் குறிப்புகள்

## 1. பக்தியோகப் பாடங்கள்

1896

### i. பக்திமூலம் யோகம்

ராஜயோகம் மற்றும் சுவாசப் பயிற்சிகள்பற்றி இதுவரை கண்டோம்.[1] இனிமேல் பக்திமூலம் யோகம்பற்றிப் பார்ப்போம். எல்லோருக்கும் ஒரு குறிப்பிட்ட யோகம்தான் தேவை என்பதில்லை என்பதை நீங்கள் நினைவிற்கொள்ள வேண்டும். பல வழிகளையும் பல லட்சியங்களையும் உங்கள் முன் வைக்கிறேன். நீங்கள் உங்களுக்கு ஏற்ற ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். ஒன்று இல்லாவிட்டால் மற்றொன்று பொருந்தக்கூடும்.

நமது உடல், ஆன்மா, அறிவு, செயல் ஆகிய அனைத்தும் இயைபுடன் வளர்ந்து முழு மனிதர்களாகத் திகழ நாம் விரும்புகிறோம். நாடுகளும் தனிமனிதர்களும் இவற்றில் ஏதாவது ஒன்றில் அதிக வளர்ச்சி பெற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கு அதைத் தவிர மற்றவை விளங்குவதில்லை. ஏதாவது ஒன்றில் அவர்கள் தீவிரமாக ஈடுபட்டிருப்பதால் மற்ற எதையும் பார்க்கவும் முடியாதவர்களாக இருக்கின்றனர். நாம் பலமுகப் பரிமாணம் உடையவர்களாக இருப்பதுதான் லட்சியம். ஒருவருக்கொருவர் அனுதாபமோ ஆதரவோ காட்ட முடியாத அளவிற்கு நாம் ஒருபக்கச் சார்புடையவர்களாக இருக்கிறோம். உலகின் துன்பங்களுக்கு இதுதான் காரணம். பூமிக்கு அடியில் ஒரு சுரங்கத்திலிருந்து ஒருவன் சூரியனைப் பார்ப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அவன் சூரியனின் ஒரு தோற்றத்தைக் காண்கிறான். ஒருவன் பூமியிலிருந்து சூரியனைப் பார்க்கிறான். மற்றொருவன் மூடுபனி வழியாகப் பார்க்கிறான். இன்னொருவன் மலையுச்சியிலிருந்து பார்க்கிறான். இவர்கள் ஒவ்வொருவருக்கும் சூரியன் ஒவ்வொரு விதமாகத் தோன்றுவான். தோற்றங்கள் பல, ஆனால்

1. இதற்கு முந்தின நாட்களில் மற்ற யோகங்களைப்பற்றிப் பேசியதை இங்கே குறிப்பிடுகிறார் சுவாமிஜி.

உண்மையில் சூரியன் ஒன்றே. தோற்றங்கள் பல; காட்சிப் பொருள், அதாவது சூரியன் ஒன்றுதான்.

ஒவ்வொரு மனிதனும் தனது இயல்பிற்கு ஏற்ப ஒரு தனிப் போக்கு உள்ளவன். சில லட்சியங்களை எடுத்துக்கொண்டு, அவற்றை அடைவதற்காக ஒரு குறிப்பிட்ட பாதையையும் வகுத்துக் கொள்கிறான் அவன். ஆனால் லட்சியம் என்பது எப்போதும் எல்லோருக்கும் ஒன்றே. ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவன் ஆழமும் ஆன்மீகமும் உடையவனாக இருக்கிறான். ஆனால் அவனிடம் பரந்த மனப்பான்மை இல்லை. யூனிடேரியன் (Unitarian) பிரிவைச் சேர்ந்தவனுக்குப் பரந்த மனப்பான்மை இருக்கிறது, ஆனால் அவன் ஆன்மீகத்தை இழந்துவிட்டான். மதத்திற்கு ஒரு குறிப்பிட்ட அளவுதான் முக்கியத்துவம் உள்ளது என்று அவன் கருதுகிறான். ரோமன் கத்தோலிக்க மதத்தின் ஆழமும், யூனிடேரிய நெறியின் பரந்த மனப்பான்மையுமே நமக்குத் தேவை. நாம் வானம் போன்று பரந்தும், கடல் போன்று ஆழமும், உடையவர்களாக இருக்க வேண்டும். கொள்கைவெறியனின் உற்சாகமும், இறையுணர் வாளரின் (Mystic) ஆழமும், ஆஜ்ஞேயவாதியின் பரந்த நோக்க மும் நமக்கு வேண்டும்.

'சகிப்புத்தன்மை' என்பதற்கு இப்போது தவறான பொருள் கொள்ளப்படுகிறது. தான் உயர்ந்த நிலையில் இருப்பதாக எண்ணும் கர்வம்பிடித்த ஒருவன் பிறர்மீது இரக் கத்துடன் கீழ்நோக்கிப் பார்ப்பதைச் 'சகிப்புத்தன்மை' என் கிறார்கள். இது ஆபத்தான கருத்து.

நாமெல்லோரும் ஒரே லட்சியத்தை நோக்கி ஒரே திசை யில் சென்று கொண்டிருக்கிறோம். அவரவர் மனோநிலைக்கு ஏற்றவாறு பல்வேறு பாதைகளில் போகிறோம். நாம் பல முகப் பரிமாணம் உடையவர்களாக வேண்டும். இதற்கும் மேலே சென்று, எந்த மாறுதல்களையும் ஏற்றுக்கொள்கின்ற ஆற்றல் பெற்றவராக வேண்டும். பிறருடைய வழியை நாம் சகிப்புத் தன்மையுடன் ஏற்றுக்கொள்வது மட்டும் போதாது. அதைவிடக் கடினமான காரியம் ஒன்றைச் செய்ய வேண்டும். அதாவது மற்றொருவரின் நெறியில் ஆதரவுடன் சென்று, இறைவனை நாடும் அவரது முயற்சிகளிலும் நோக்கங்களிலும் அவருடன் உணர்ச்சிமயமாக ஒன்றுபட வேண்டும்.

ஒவ்வொரு மதத்திலும் உடன்பாடு, எதிர்மறை என்று இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. கிறிஸ்தவ மதத்தில்

உள்ள அவதாரம், மூவர், ஏசுவின்மூலம் மோட்சம் அடைதல் ஆகியவற்றைப்பற்றி நீங்கள் சொல்லும்போது, நான் அவற்றை ஆமோதிக்கிறேன்; 'நல்லது, இவைகளெல்லாம் உண்மை என்று ஏற்றுக்கொள்கிறேன்' என்கிறேன். ஆனால் (கிறிஸ்தவ மதத்தைத் தவிர) உண்மையான மதம் வேறு இல்லை; (பைபிளைத் தவிர) தெய்வீக நூல்கள் வேறு இல்லை' என்று சொல்ல வரும்போதுதான், 'நிறுத்துங்கள், உங்கள் கதவை அடைக்கும்போது, பிற மதங்களின் உண்மையை நீங்கள் மறுக்கும்போது, என்னால் ஒப்புக்கொள்ள முடியாது' என்று சொல்வேன். ஒவ்வொரு மதமும் தெரிவிக்க வேண்டிய செய்தி இருக்கிறது; கற்பிக்க வேண்டிய பாடம் இருக்கிறது. ஆனால் ஒரு மதம் மற்ற மதங்களை மறுக்கும்போது, மற்ற மதங்களுக்குத் தொந்தரவு கொடுக்கும்போது, அது எதிர்மறையான, ஆதலால் ஆபத்தான ஒரு போக்கைப் பின்பற்றுகிறது. எங்கே தொடங்குவது, எங்கே முடிப்பது என்று அதற்குத் தெரியவில்லை.

ஒவ்வொரு சக்தியும் ஒரு சுற்று வந்து முடிவடைகிறது. மனிதன் என்று நாம் சொல்லும் சக்தி எல்லையற்ற இறைவனிடமிருந்து வந்தது. ஆகையால் அவரிடமே திரும்பிச் சென்றாக வேண்டும். இரண்டு வழிகளில் கடவுளிடம் மனிதன் திரும்பிச் செல்லலாம். இயற்கையை அனுசரித்து நிதானமாகத் திரும்பிச் செல்வது ஒரு வழி. மனிதனை இந்த வழியிலேயே விட்டுவிட்டால் அவன் ஒரு சுற்றை முடித்துக் கடவுளிடம் திரும்பிச் செல்வான். ஆனால் அந்தப் பாதையில் மேலும் செல்லாமல், நமது அக ஆற்றலின் பலத்தால் பலவந்தமாகப் பின்புறம் திரும்பிக் கடவுளைக் காண்பது மற்றொரு வழி. இதனைக் குறுக்கு வழி எனலாம். இதைத்தான் யோகி செய்கிறான்.

ஒவ்வொரு மனிதனும் தனது இயற்கைக்கு ஏற்ற ஒரு லட்சியத்தையே தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சொன்னேன். இந்த லட்சியமே ஒரு மனிதனின் இஷ்டம் என்று கூறப்படுகிறது. நீங்கள் அதைப் புனிதமானதாக (ஆகவே ரகசியமானதாக) வைத்திருக்க வேண்டும். உங்கள் இஷ்டத்தையே வழிபடுங்கள். நமக்கு உரிய முறையைத் தெரிந்துகொள்வது எப்படி? அது கடினமானதுதான். ஆனால் தொடர்ந்து வழிபாட்டில் ஈடுபட்டு வந்தால் அது தானே வரும்.

கடவுள் மனிதனுக்கு அளித்த சிறப்புக் கொடைகள் மூன்று. அவை: மனித உடல், முக்தியில் நாட்டம், முக்த புருஷர் ஒருவரின் உதவி.

சகுணக் கடவுள் இல்லாமல் நாம் பக்தி செய்ய முடியாது. அன்பு செய்பவர் இருந்தால் அதை ஏற்கவும் ஒருவர் வேண்டும். எல்லையற்ற ஒரு மனிதனாகவே கடவுள் இருந்தாக வேண்டும். நாம் மனிதர்களாக இருக்கும்வரை மனித உருவத்தாலான கடவுள் நமக்கு வேண்டும். மனித உருவத்திலுள்ள ஒரு கடவுளை, அப்படிப்பட்ட கடவுளையே நாம் கண்டாக வேண்டும். நாம் இந்த உலகப் பொருட்களைப் பார்க்கும்போது வெறும் பொருளை மட்டும் நாம் பார்க்கவில்லை. அந்தப் பொருளுடன் நமது மனத்தையும் சேர்த்தே காண்கிறோம். நாற்காலியுடன், நாற்காலி நமது மனத்தில் எழுப்பிய எதிர்ச்செயலையும் சேர்த்து தான் நாம் பார்க்கிறோம். முதலில் ஒவ்வொரு பொருளையும் உனது மனத்தால் மூட வேண்டும். பின்னரே நீ அதைக் காண முடியும். உதாரணம்: வெள்ளையான, சதுரமான, பளபளப் பான, கடினமான பெட்டி ஒன்றை முதலில் மூன்றறிவு உள்ள மனிதன் ஒருவன் பார்க்கிறான். பின்னர் நான்கறிவுள்ள மனிதன் பார்க்கிறான். பின்னர் ஐந்தறிவுள்ள மனிதன் பார்க்கிறான் என்று வைத்துக்கொள்ளுங்கள். இவர்களில் கடைசியாகக் குறிப்பிடப்படும் மனிதனே, மேற்கண்ட பெட்டியின் எல்லா பண்புகளையும் காண்கிறான். முதல் மனிதன் கண்டதைவிட அதிகமான ஒன்றை அடுத்தவன் கண்டிருப்பான். இப்படியே ஒவ்வொருவரும். இதே பெட்டியை ஆறறிவு படைத்த ஒருவன் பார்ப்பதாக இருந்தால் எல்லோரையும்விட அதிகமான ஒரு பண்பைக் கண்டிருப்பான்.

அன்பையும் அறிவையும் நான் காண்பதால் பிரபஞ்சத் திற்குக் காரணமான பொருளே அன்பாகவும் அறிவாகவும் வெளிப்படுகிறது என்பதை அறிவேன். என்னிடம் அன்பைத் தோற்றுவிக்கும் ஒரு பொருள் எப்படி அன்பில்லாத தாக இருக்க முடியும்? பரம்பொருளை மனிதப் பண்புகள் இல்லாதவராகச் சிந்திக்க முடியாது. இந்தப் பிரபஞ்சத் தில், முதலில் கடவுளை நம்மிடமிருந்து தனித்து நிற்பவராகப் பிரித்துப்பார்ப்பது அவசியமாகிறது. கடவுளின் தரிசனம் மூன்று வகைப்படும்:

1. கீழான நிலை: நம்மைப் போன்று கடவுளுக்கும் ஓர் உடல் இருப்பதாகக் காண்பது. [ரோமானியக் கலை(Byzantine Art)காண்க.]

2. உயர்ந்த நிலை: மனிதனின் குணங்களை எல்லாம் ஒவ்வொன்றாகக் கடவுளுக்கு ஏற்றிக் காணும் நிலை.

3. மிக உயர்ந்த நிலை: இவ்வாறே, படிப்படியாக மேலே சென்று உயர்ந்த காட்சியை அடைகின்ற நிலை, கடவுளை நேரில் காணும் நிலை.

இந்த மூன்று நிலைகளிலுமே நாம் கடவுளை மட்டுமே காண்கிறோம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இதில் மனமயக்கம் இல்லை, தவறும் இல்லை. பல்வேறு இடங்களிலிருந்தும் பார்த்தது சூரியனைத்தானே தவிர, சந்திரனையோ வேறு எதையுமோ அல்ல. நம்மைப் போன்றவராகத்தான் நாம் கடவுளைக் காண இயலும். இதைத் தவிர்க்க முடியாது. அவரை எல்லையற்றவராக எண்ணலாம், ஆனாலும் அவர் நம்மைப் போன்றவராகவே இருப்பார். தனிப் பரம்பொருளாக நாம் அவரைக் கற்பனை செய்ய முயல்கிறோம் என்று வைத்துக் கொண்டாலும், அன்பை அனுபவிக்க வேண்டுமானால் நாம் ஒரு எல்லைக்கு உட்பட்ட சார்புநிலைக்கு வந்தாக வேண்டும்.

ஒவ்வொரு மதத்திலும் நாம் காணும் பக்தி இரண்டு பகுதிகள் கொண்டதாகும்: 1. சின்னங்கள், உருவங்கள், சடங்குகள், மந்திரங்கள் ஆகியவற்றின்மூலம் செயல்படுகின்ற பக்தி. 2. அன்பின் மூலம் செயல்படுகின்ற பக்தி. இந்த உலகில் நாம் சில நியதிகளுக்குக் கட்டுப்பட்டு இருக்கிறோம். இந்த நியதிகளை உடைத்தெறிய எப்போதுமே முயன்றுகொண்டிருக்கிறோம்; கீழ்ப்படியாமலிருக்க, இயற்கையை நசுக்க எப்போதுமே முயன்றுகொண்டிருக்கிறோம். உதாரணமாக, இயற்கை நமக்கு வீடுகள் தருவதில்லை, நாம் அவற்றைக் கட்டிக்கொள்கிறோம். இயற்கை நம்மை நிர்வாணமாகப் படைக்கிறது, நாம் உடை உடுத்திக் கொள்கிறோம். சுதந்திரமாக இருப்பதே மனிதனின் லட்சியம். எவ்வளவு தூரம் இயற்கையின் நியதிகளை உடைக்க முடியாதவர்களாக இருக்கிறோமோ அந்த அளவிற்குத் துன்புறுகிறோம். இயற்கையின் நியதிகளுக்குப் பணிந்து நாம் நடப்பது, அதனை மீறிச் செல்வதற்காகவே—அதாவது நியதிக்கு அப்பால் செல்வதற்காகவே. பணியாமல் இருப்பதுதான் வாழ்க்கை முழுவதும் நாம் நடத்தும் போராட்டம். அதனாலேயே கிறிஸ்தவ விஞ்ஞானிகள் (Christian Scientist) கூறுவதை நான் ஏற்றுக்கொள்கிறேன். மனிதனுடைய சுதந்திரத்தையும் ஆன்மாவின் தெய்வீகத்தையும் அவர்கள் போதிக்கின்றனர். ஆன்மா எல்லா சூழ்நிலைகளுக்கும் மேம்பட்டது. 'இந்தப் பிரபஞ்சம் என் தந்தையின் பேரரசு. நான் அவரது முறையான வாரிசு; என் ஆன்மா எல்லாவற்றையும்

அடக்கி வென்றுவிடும்' என்னும் மனப்பான்மையையே மனிதன் மேற்கொள்ள வேண்டும்.

நாம் சுதந்திரம் பெறுவதற்கு முன்பு, நியதிகளை அனுசரித்தே செயலாற்ற வேண்டும். புறஉதவிகள், முறைகள், உருவங்கள், சடங்குகள், கொள்கைகள், கோட்பாடுகள் ஆகிய எல்லாவற்றிற்குமே உரிய இடம் உண்டு. நாம் வலிமை பெறும் வரை நமக்கு ஆதாரமாக இருக்கவும் நம்மைப் பலப்படுத்தவும் இவை அவசியம். அதன் பின்னர் அவசியமில்லை. இவை நம்மை வளர்க்கும் தாதிகள். இளம் பருவத்தில் இவை தவிர்க்க முடியாதவை. சாஸ்திரங்களும் தாதிகளே. மருந்துகளும் அப்படியே. மனிதன் தன் உடல்மீது தனக்குள்ள அதிகாரத்தை உணரும்வரை உழைக்க வேண்டும். நாம் அனுமதிக்கும்வரை தான் மூலிகைகளும் மருந்துகளும் நம் மீது ஆதிக்கம் செலுத்தும். நாம் பலமடைந்த பின்பு, இந்தப் புற முறைகள் எல்லாம் அவசியமில்லை.

## ii. சொற்கள்மூலமும் அன்பின்மூலமும் வழிபாடு

உடல் என்பது மனத்தின் தூல வடிவம். மனம் நுண்ணிய அடுக்குகள் கொண்டது, அதன் அடர்த்திமிக்க அடுக்கே உடல். மனிதன் உடலை முற்றிலும் அடக்கியாளும் சக்தி பெறும்போது, மனத்தையும் அடக்கும் சக்தி பெறுவான். ஒவ்வொரு மனத்திற்கும் அதற்கென்றே ஒரு தனி உடல் இருப்பது போல், ஒவ்வொரு சொல்லிற்கும் ஒரு தனிக்கருத்து இருக்கிறது. கோபம் வரும்போது, 'முட்டாள், மடையன்' என்று அழுத்தந்திருத்தமாகச் சொல்கிறோம். வருத்தமாக இருக்கும் போது 'ஆ, ஐயோ' என்றெல்லாம் மென்குரலில் சொல்கிறோம். இவை தோன்றி மறையும் உணர்ச்சிகள். ஆனால் அன்பு, அமைதி, சாந்தம், இன்பம், புனிதம் போன்ற நிரந்தர உணர்ச்சிகள் இருக்கின்றன. இந்த உணர்ச்சிகளுக்கான சொல்வெளிப்பாடுகள் ஒவ்வொரு மதத்திலும் உள்ளன. மனிதனுடைய உயர் உணர்ச்சிகளின் ஒரே சின்னமாக இருப்பது சொற்களே. எண்ணம் அல்லது கருத்து சொல்லைப் படைக்கிறது. அதேபோல் சொற்கள் எண்ணம் அல்லது உணர்ச்சியைப் படைக்கின்றன. இங்குதான் சொற்களின் உதவி நமக்குத் தேவை. இத்தகைய சொற்கள் ஒவ்வொன்றும் ஒரு லட்சியத்தைக் குறித்து நிற்கின்றன. புனிதமான, அற்புத சக்தியுள்ள இந்தச் சொற்களை நாம் அறிவோம். ஆனாலும் இவற்றை நூல்களிலிருந்து

படிப்பதால் அவை நம்மீது எந்த விளைவையும் ஏற்படுத்தாது. அவை பலனளிக்க வேண்டுமானால், அவற்றில் உயிர் ஊட்டப் பட வேண்டும், இறையுணர்வு பெற்றவரும் தற்போது வாழ்ந்து கொண்டிருப்பவருமான ஒருவர் அதைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். அவரால்தான் இந்தச் சொற்களில் உள்ள சக்தியைத் தூண்டிவிட முடியும். அப்படி ஏசு தூண்டிவிட்ட சக்திதான் இன்றைய 'கை வைத்து ஆசிர்வதித்தல்' போன்ற நிகழ்ச்சிகள் மூலம் தொடர்ந்து செயலாற்றிக் கொண்டிருக்கிறது. இப்படி சக்தியைப் பாய்ச்ச வல்லவரே குரு என்று அழைக்கப் படுகிறார். ஏசுவைப் போன்ற பெரிய ஆச்சாரியர்களுக்குச் சொற்கள் அவசியமில்லை. ஆனால் சாதாரண நிலையில் உள்ள குருமார்கள் சொற்கள்மூலமே சக்தியைப் பாய்ச்சு கிறார்கள்.

பிறருடைய குற்றங்களைக் கவனிக்காதே. ஒரு மனிதனின் தவறுகளைக்கொண்டு அவனை எடைபோட முடியாது. கீழே விழுந்து அழுகிப்போன அல்லது பழுக்காத ஆப்பிள்களை வைத்து நாம் ஒரு ஆப்பிள் மரத்தை நிர்ணயித்தால், அந்த முடிவு சரியானதாக இருக்காது. அதுபோலவே, ஒரு மனித னுடைய தவறுகள் அவனுடைய குணத்தைக் காட்டாது. உலகம் முழுவதிலும் கெட்டவர்கள் ஒரே மாதிரியாகத்தான் இருக் கிறார்கள். ஆசியாவிலும் சரி, ஐரோப்பாவிலும் சரி, அமெரிக்கா விலும் சரி, திருடர்களும் கொலைகாரர்களும் ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு தனி நாட்டினர் என்றே சொல்லிவிடலாம். நல்லவர்கள், தூயவர்கள், பலசாலிகள்— இவர்களிடையேதான் பல்வேறு வகையினரைக் காண முடியும். பிறரது துர்க்குணங்களைப் பொருட்படுத்தாதே. துர்க்குணம், தீமை என்பதே அறியாமை, பலவீனம். ஒருவனிடம் சென்று அவனிடம் பலவீனம் இருக்கிறது என்று சொல்வதால் என்ன பயன்? குறை கூறுவதும் அழிப்பதும் எந்தப் பலனையும் தரப் போவதில்லை. இவற்றைவிட மேலானவற்றை அவர்களுக்கு அளிக்க வேண்டும். அவர்களது மகோன்னத இயல்பை, அவர் களுடைய பிறப்புரிமையை அவர்களுக்கு எடுத்துக் கூறுங்கள். ஏன் அதிகம் பேர் இறைவனை நாடக் கூடாது? ஏனெனில் மிக மிகச் சிலரே புலன்களுக்கு அப்பாற்பட்ட இன்பங்களை அனு பவிக்கக் கூடியவர்களாக உள்ளனர். பெரும்பாலோர் அகஉலகைக் காணவோ கேட்கவோ முடியாதவர்கள்.

இப்போது அன்பு வழிபாட்டிற்கு வருவோம்.

'ஒரு மத அமைப்பிற்குள் பிறப்பது நல்லது, ஆனால் அதிலேயே சாவது நல்லதல்ல' என்று கூறப்பட்டிருக்கிறது. ஒரு மரம் சிறு செடியாக இருக்கும்போது அதைச் சுற்றியுள்ள வேலி அதற்கு ஆதரவாக உள்ளது, வலிமை தருகிறது. ஆனால் பின்னர் இந்த வேலி நீக்கப்படாவிட்டால் அந்த மரத்தின் வளர்ச்சியும் வலிமையும் தடைப்படும். உருவ வழிபாடு அவசிய மான ஒரு கட்டம் என்பதை நாம் முன்பே கண்டோம். ஆனால் படிப்படியாக, மெதுவாக அதைக் கடந்து உயர்ந்த நிலைக்கு வர வேண்டும். ஆண்டவனிடம் நமக்குள்ள அன்பு நிறைவு பெறும்போது, 'அவர் எல்லாம் வல்லவர், எங்கும் நிறைந்தவர்' என்றெல்லாம் அவரது வல்லமைகளைப்பற்றி நாம் சிந்திப்ப தில்லை. கடவுளிடமிருந்து எதுவும் நமக்குத் தேவையில்லை, ஆகையால் அவரது வல்லமைகளில் எதைப்பற்றியும் நமக்கு அக்கறையில்லை. நமக்கு வேண்டியது அவரது அன்பு, அவ் வளவுதான். ஆனால் அப்போதும் அவரிடம் மனித குணங் களைக் காணும் இயல்பு நம்மைத் தொடர்கிறது. நாம் நமது உடலிலிருந்து குதித்து வெளியேறிவிட முடியாது. ஆகை யால் நாம் ஒருவரை ஒருவர் நேசிப்பது போல்தான் கடவுளை நேசிக்க முடியும்.

மனித அன்பில் ஐந்து படிகள் உள்ளன:

1. சாதாரணமான, அமைதியான, தாழ்ந்தநிலை அன்பு. இந்தக் கட்டத்தில் நமக்கு வேண்டிய பாதுகாப்பு, உணவு போன்ற எல்லாவற்றிற்கும் இறைவனை எதிர்பார்க்கிறோம்.

2. நம்மைச் சேவை செய்யத் தூண்டும் அன்பு. இங்கே மனிதன் கடவுளைத் தன் எஜமானனாகக் கொண்டு சேவை செய்கிறான். சேவையார்வம் மற்ற உணர்ச்சிகளை எல்லாம்மீறி நிற்கிறது. இறைவன் நல்லவரா, கெட்டவரா, அன்புள்ளவரா, அன்பில்லாதவரா என்றெல்லாம் நாம் பார்ப்பதில்லை.

3. நண்பனின் அன்பு; தோழர்கள், உடன் விளையாடு பவர்கள் போன்ற சமமானவர்களின் அன்பு. கடவுளைத் தனது தோழனாக மனிதன் உணர்கிறான்.

4. தாயன்பு. கடவுள் ஒரு குழந்தையாகக் கருதப்படு கிறார். முன்பு கூறப்பட்டவற்றைவிட உயர்ந்த அன்பாக இது இந்தியாவில் கருதப்படுகிறது. ஏனெனில் இதில் பய உணர்ச்சி இல்லை.

5. கணவன்-மனைவி அன்பு, காதலுக்காகக் காதல். கடவுளைத் தூய காதலன் அல்லது காதலியாகக் கருதுதல்.

'நான்கு கண்கள் சந்திக்கின்றன, இரண்டு உயிர்களில் மாறுதல் ஏற்படுகிறது. இரண்டு உயிர்களுக்கு இடையே காதல் ஏற்படுகிறது, இரண்டும் ஒன்றாகின்றன' என்று அழகாகக் கூறப்பட்டிருக்கிறது.

கடைசியில் கூறப்பட்ட மிகவும் தூயதான இந்த அன்பு ஏற்பட்டுவிட்டால் எல்லா ஆசைகளும் மறைகின்றன; உருவங்கள், தத்துவங்கள், பிரிவினை உணர்ச்சிகள் ஆகிய எல்லாம் அவனை விட்டுப் போய்விடுகின்றன, முக்தி ஆசைகூட (பிறப்பு இறப்பு ஆகியவற்றிலிருந்து விடுதலை அடைவதே எல்லா மதங்களின் குறிக்கோளாகும்) விட்டுப் போகிறது. மிக உயர்ந்த அன்பில் ஆண்-பெண் பால்உணர்ச்சி இல்லை, ஏனெனில் பூரண ஒருமை அல்லது ஐக்கியமே உயர் அன்பில் வெளிப்படுகிறது, பால் உணர்ச்சியோ உடல்களைப் பிரித்து வைப்பது. எனவே ஆன்ம நிலையில்தான் ஐக்கியம் சாத்திய மாகும். உடல்பற்றிய எண்ணம் குறைவாக இருக்கின்ற அளவிற்கு நமது அன்பு பூரணமானதாக இருக்கும். இறுதியில் உடல் பற்றிய எண்ணமெல்லாம் மறைந்து இரண்டு உயிர்களும் ஒன்றாகிவிடும்.

நாம் அன்பையே காதலிக்கிறோம். அன்பு, உருவங்களை ஊடுருவி அவற்றிற்கும் அப்பால் பார்க்கிறது. குரூபியான பெண் ணும் அவளது காதலனுக்கு ரம்பையாகவே தோன்றுவாள். அழகற்ற பெண் என்பது நிமித்தம் மட்டுமே, அதன் மீதுதான் அந்தக் காதலன் தன் அன்பைச் சொரிகிறான். முத்துச்சிப்பிக்குள் வேற்றுப் பொருள் நுழைந்து அரிப்பை ஏற்படுத்துகிறது. முத்துச் சிப்பி அந்த அரிப்புப்பொருளையே அழகிய முத்தாக மாற்றக் கூடிய மற்றொரு பொருளை அதன்மீது சொரிகிறது. அதே போன்றுதான் மனிதனும் அன்பைச் செலுத்துகிறான், மிக உயர்ந்த லட்சியத்தையே அவன் எப்போதும் நேசிக்கிறான். மிக உயர்ந்த லட்சியத்தில் சுயநலம் இல்லை. எனவே அவன் அன்பையே காதலிக்கிறான். கடவுள் அன்புருவானவர். நாம் கடவுளை நேசிக்கிறோம், அல்லது அன்பை நேசிக்கிறோம்.

நாம் அன்பைக் காண்கிறோம், அதை வெளிப்படுத்த முடியாது. ஊமை ஒருவன் வெண்ணெய் உண்டாலும், அது எப்படியிருக்கும் என்பதை உங்களுக்கு எடுத்துச் சொல்ல அவனால் இயலாது. வெண்ணெய் வெண்ணெய்தான். அதைச் சுவைக்காதவர்களுக்கு அதன் ருசியை விளக்கிச் சொல்ல முடியாது. அன்பிற்காகவே அன்பு செய்தல் என்பதையும்,

அதை அனுபவிக்காதவர்களுக்கு விளக்கிச் சொல்ல முடியாது.

அன்பை ஒரு முக்கோணமாகக் கொள்ளலாம். அன்பு ஒருபோதும் யாசிப்பதில்லை, எதையும் கேட்பதில்லை என்பதே இதில் முதல் கோணம். இரண்டாவது, அன்பு அச்சம் அறியாதது. மூன்றாவதான உச்சிக் கோணம் அன்பிற்காக அன்பு செய்தல்.

அன்பின் சக்தியால் புலன்கள் நுண்மையாகின்றன, உயர் நிலையை அடைகின்றன. மனித உறவில் பரிபூரண அன்பு என்பது அபூர்வமானது. ஏனெனில் மனித அன்பு ஒருவரையொருவர் சார்ந்தது, பரஸ்பரமானது. இறைவனின் அன்போ இடையீடற்ற ஒரு நீரோட்டம், யாரும் அதைத் தடுக்கவோ குலைக்கவோ முடியாது. பிச்சைக்காரனாக அல்லாமல், எதையும் விரும்பாமல், கடவுளைத் தனது உயர்ந்த லட்சியமாக எண்ணி ஒருவன் அன்பு செலுத்தும்போது, அன்பு பரிணாம வளர்ச்சியின் உச்சக்கட்டத்தை அடைகிறது; இந்தப் பிரபஞ்சத்திலேயே மகத்தான சக்தியாகிறது. இந்தச் சக்திகளை அடைய நீண்ட காலம் ஆகும். ஆகையால் நமது இயல்பை அனுசரித்து, அதற்கு உரிய இடத்திலிருந்து நாம் தொடங்க வேண்டும். சிலர் சேவை செய்யப் பிறந்தவர்கள்; சிலர் தாயாக இருந்து அன்பு செலுத்தப் பிறந்தவர்கள். எப்படியும் பலன் இறைவனின் கையிலேயே உள்ளது. இயற்கையினால் கிடைக்கும் உதவியை நாம் உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

## iii. உலகிற்கு நன்மை செய்தல்

'**உ**ங்கள் மதத்தால் சமுதாயத்திற்கு என்ன நன்மை?' என்று நம்மைக் கேட்கிறார்கள். சத்தியத்தின் சோதனைக்களமாகச் சமுதாயம் வைக்கப்படுகிறது. இது நியாயமற்றது, ஏனெனில் நமது வளர்ச்சிப் பாதையின் ஒரு கட்டம்தான் சமூகம். ஒரு விஞ்ஞானக் கண்டுபிடிப்பின் உபயோகம், அதன் நன்மை இவற்றை, அது ஒரு குழந்தைக்கு எவ்வாறு உதவுகிறது என்பதைக் கொண்டு நிர்ணயிப்பது போன்றதே இது. இதை எண்ணிப் பார்ப்பதே ஆபத்தானது. சமுதாயம் மாறாமல் ஒரே நிலையில் இருப்பது என்பது, குழந்தை குழந்தையாகவே இருப்பதுபோன்றது. முழுமை அடைந்த 'குழந்தை-மனிதன்' இருக்க முடியாது, இந்தக் கருத்தே முரணானது. அதுபோலவே பரிபூரண நிலை அடைந்த சமுதாயமும் இருக்க முடியாது.

இப்படிப்பட்ட ஆரம்பக் கட்டங்களிலிருந்து மனிதன் வளர்ச்சியடைய வேண்டும்; நிச்சயம் வளரவும் செய்வான். ஒரு கட்டத்தில் சமுதாயம் நல்லதுதான். ஆனால் அது நமது லட்சியமாக இருக்க முடியாது, ஏனெனில் அது தொடர்ந்து மாறிக் கொண்டேயிருக்கிறது. தற்போதுள்ள வர்த்தக நாகரீகம், அதன் தில்லுமுல்லுகள், பகட்டுகள் அனைத்துடனும் ஒழிந் தேயாக வேண்டும். இவையெல்லாம் வெற்று ஆரவாரம்.

தனி மனிதர்கள்மூலம் சிந்தனைச் சக்தி வளர்ச்சி அடை வதே இப்போது உலகத்திற்குத் தேவை. 'உனது தாமரை மலருமாறு நீ ஏன் செய்யக் கூடாது? அப்போது வண்டுகள் தாமாகவே அங்கு வந்துசேரும்' என்று என் குருதேவர் கூறுவது வழக்கம். ஆண்டவன்மீது பிரேமையால் பித்துப் பிடித்தவர்கள் உலகிற்குத் தேவை. உங்கள்மீது உங்களுக்கு நம்பிக்கை வேண்டும். அப்போதுதான் இறைவன்மீது உங்களுக்கு நம்பிக்கை ஏற்படும். உலக வரலாறே, நம்பிக்கையுள்ள ஆறு மனிதர்கள், தூய ஒழுக்கமுடைய ஆறே மனிதர்கள் சாதித்ததுதான்.

மூன்று விஷயங்கள் நமக்கு வேண்டும்: உணர்வதற்கான இதயம், சிந்தனைத் திறனுள்ள மூளை, வேலை செய்யக்கூடிய கைகள். முதலில் நாம் உலகத்தை விட்டு வெளியேறி, நம்மைத் தகுதியான கருவிகளாக ஆக்கிக்கொள்ள வேண்டும். முதலில் உங்களை ஆற்றலின் சுரங்கங்களாக்கிக் கொள்ளுங்கள். முதலில் உலகிற்காக உணர்ச்சிகொள்ளுங்கள். எல்லோரும் உழைக்கத் தயாராக இருக்கிறார்கள், உணர்ச்சியில் கரைபவன் எங்கே? ஒரு இக்னேஷியஸ் லயோலாவை உருவாக்கிய உணர்ச்சி எங்கே? உங்கள் அன்பையும் பணிவையும் சோதித்துப் பாருங்கள். பொறாமை கொண்டவன் அன்பு உடையவனாகவோ, பணிவு உடையவனாகவோ இருப்பதில்லை. பொறாமை என்பது ஒரு பயங்கரமான, அருவருக்கத்தக்க பாவம். அது எப்படியோ மாயமாக மனிதனுள் புகுந்து விடுகிறது. உங்கள் மனம் வெறுப்பி லும், பொறாமையிலும் எதிர்விளைவை ஏற்படுத்துகிறதா என்று உங்களையே கேட்டுப்பாருங்கள். உலகின்மீது சொரியப் படுகின்ற வெறுப்பாலும் கோபத்தாலும், தொடர்ந்து நல்ல காரியங்கள் பலனற்றுப் போய்க் கொண்டிருக்கின்றன. நீங்கள் தூயவர்களாக, பலசாலிகளாக இருந்தால், நீங்கள் ஒருவர் உலகத்தில் உள்ள அத்தனை பேருக்கும் சமமாக இருப்பீர்கள்.

நல்ல காரியங்கள் செய்வதற்கு வேண்டிய அடுத்த சாதன மான சிந்தனைத் திறனுள்ள மூளை இருக்கிறதே, அது ஒரு

வறட்சியான சஹாரா பாலைவனம். உணர்ச்சியின் பக்கபல மில்லாமல் அதனால் தனியாக எதுவும் செய்ய முடியாது. அன்பு செய்யுங்கள், அது ஒருபோதும் உங்களைக் கைவிடாது. பிறகு மூளை தானாகச் சிந்தனை செய்ய ஆரம்பித்துவிடும், கைகள் தானாகவே நல்ல காரியங்களைச் செய்யத் தொடங்கும். ரிஷிகள் இறை சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்து, அவரைக் கண்டார்கள். 'இதயத்தில் தூய்மை உடையவர்கள் கடவுளைக் காண்பார்கள்'. மகான்கள் எல்லோரும் தாங்கள் கடவுளைக் கண்டிருப்பதாகவே கூறினார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே அவர்கள் கண்டார்கள், அப்பால் உள்ள ஒருமையை அறிந்தார்கள். இனி நாம் செய்யக்கூடியதெல்லாம் அவர்கள் வகுத்த அந்தப் பெருமைக்குரிய வழியைப் பின்பற்றுவதேயாகும். ✽

## 2. பக்தியோகம்பற்றி

கையில் கோல் ஒன்றை ஏந்தி, நம்மைத் தண்டிக்கத் தயாராக இருக்கும் கடவுள் ஒருவர் இல்லாமல் நாம் நல்ல நெறியில் வாழ முடியாது என்பது துவைதிகளின் கருத்து. இது எப்படி? வண்டி இழுக்கின்ற குதிரை ஒன்று, சாட்டையடி ஒன்றினாலேயே நகரும் குதிரை ஒன்று, நன்னெறி பற்றிச் சொற்பொழிவு செய்வதாக வைத்துக் கொள்வோம். அது மக்களை நெறி தவறியவர்கள் என்று சொல்லும். ஏன்? 'மனிதர்களுக்கு ஒழுங்காகச் சாட்டையடி கிடைக்காததே அவர்கள் நெறி தவறுவதற்குக் காரணம்' என்று அது கூறும். சாட்டையடி கிடைக்கும் என்ற பயம் ஒருவன் நெறி தவறும் வாய்ப்பையே அதிகமாக்கும்.

கடவுள் ஒருவர் உண்டு, அவர் எங்கும் நிறைந்தவர் என்று எல்லோருமே சொல்கிறீர்கள். கண்களை மூடித் தியானம் செய்யுங்கள். என்ன காண்கிறீர்கள்? எங்கும் நிறைந்தவர் என்ற சிந்தனை எழும்போது, உங்களுக்குத் தெரிந்த கடலோ, நீல வானமோ, பசுமையான புல்வெளியோ அவைபோன்ற ஒன்றோ உங்கள் மனத்தில் தோன்றுகிறது. இதுதான் நேர்கிறது என்றால், 'எங்கும் நிறைந்த கடவுள்' என்பதை நீங்கள் புரிந்து கொள்ளவே இல்லை; உங்களைப் பொறுத்தவரையில் அதற்கு எந்தப் பொருளும் இல்லை. இது போன்றதுதான் கடவுளின் ஒவ்வொரு குணத்தைப்பற்றிய அறிவும். எல்லாம் வல்லவர், எங்கும் நிறைந்தவர் என்ற கருத்துக்களைப்பற்றி நமக்கு என்ன தெரியும்? எதுவும் இல்லை. அனுபூதியே மதம். எனவே கடவுளின் குணங்களை உள்ளபடி நீங்கள் அனுபவித்து அறிய முடிந்தால்தான் இறைவனை வழிபடுபவர்கள் என்று உங்களைச் சொல்ல முடியும். அதற்குமுன் உங்கள் வழிபாடு வெறும் எழுத்துக் கூட்டலே தவிர வேறு எதுவும் அல்ல. அனுபூதியின் ஆற்றலே மதம். கொள்கைகளையும் தத்துவங்களையும் ஒழுக்கநெறி நூல்களையும் மூளையில் நீங்கள் ஏராளமாக நிரப்பி இருக்கலாம். அது பெரிதல்ல; நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள், எந்த அளவு அனுபூதி பெறுகிறீர்கள், அது ஒன்றே கருத்தில் கொள்ளப்படும்.

மாயை என்னும் திரை வழியாக நாம் காணும் தனிப் பரம்பொருளே உருவக் கடவுள். ஐம்புலன்களால் அவரை அறிய முற்படும்போது அவரை உருவக் கடவுளாகத்தான் காண முடியும். அதாவது ஆன்மா ஓர் அறியப்படும் பொருளாக இருக்க முடியாது. அறிபவன் எப்படித் தன்னையே அறிவது? அதன் நிழலை—அப்படி நாம் அழைக்க முடியுமானால்—அதனைப் பார்க்கலாம். இந்த நிழலின் மிக உயர்ந்த தோற்றமே, ஆன்மா தன்னையே அறியப்படுகின்ற பொருளாக்கிக் கொள்கின்ற முயற்சியின் உயர்ந்த விளைவே உருவக் கடவுள். ஆன்மா எப்போதுமே அறியும் பொருள். அதை அறியப்படும் பொருளாகக் காண்பதற்காக நாம் போராடிக் கொண்டிருக்கிறோம். நாம் ஜடப்பொருள் என்று அழைக்கின்ற இந்தப் பிரபஞ்சமும் மற்ற அனைத்தும் இந்தப் போராட்டத்தின் விளைவாக வந்தவையே. ஆனால் இவையெல்லாம் பலவீனமான முயற்சிகள். நமது ஆன்மாவை உருவக் கடவுளாகக் காண்பதே முயற்சியின் சிகரம். இந்த முயற்சியும் நமது சொந்த இயல்பை வெளிப் படுத்துவதற்கான முயற்சியே.

சாங்கியத் தத்துவத்தின்படி பிரகிருதியே ஆன்மாவிற்காக இந்த அனுபவங்களை எல்லாம் உண்டாக்குகிறது. உண்மையான அனுபவம் பெறும்போது ஆன்மா சொந்த இயல்பை உணர்கிறது. அத்வைத வேதாந்தத்தின்படி ஆன்மா தன்னை வெளிப்படுத்திக்கொள்ளப் போராடுகிறது. நீண்டகாலப் போராட்டத்திற்குப் பிறகு, தானே எல்லாம், தன்னிலும் வேறாக ஒன்றும் இருக்க முடியாது என்ற உண்மை அதற்கு விளங்குகிறது. அதன்பிறகு அது தனது பற்றுகளை விட்டு முக்தி பெறுகிறது.

இத்தகைய நிறைநிலை அடைந்தவன் உருவக் கடவுளின் இயல்பைப் பெறுகிறான். 'நானும் என் தந்தையும் ஒருவரே'[1] என்ற ஏசுவின் சொற்கள் இதையே தெரிவிக்கின்றன. தானும் பரப்பிரம்மமும் ஒன்று என்பதை அவன் உணர்கிறான், உருவக் கடவுளாக மலர்கிறான், ஆற்றல் மிகுந்த சக்கரவர்த்திகளும் சிலவேளைகளில் பொம்மைகளுடன் விளையாடுவதுபோல் இவ்வுலகில் திருவிளையாடல் புரிகிறான்.

சில கற்பனைகள், மற்ற கற்பனைகளால் ஏற்படும் தளைகளை வெட்டப் பயன்படுகின்றன. பிரபஞ்சமே ஒரு கற்பனை. ஒரு கற்பனைத் தொகுதி இன்னொரு கற்பனைத் தொகுதியின் குறைகளை நிரப்ப உதவும். இந்தப் பிரபஞ்சம் பாவமும் துயரமும் மரணமும் நிறைந்த இடம் என்று சொல்கின்ற கற்பனைத்

1 ஜான் 10:30

தொகுதி பயங்கரமானது. 'நீ புண்ணியன், இறைவன் உண்டு, துயரமே இல்லை' என்கின்ற கற்பனைத் தொகுதி நல்லது. இது மற்ற கற்பனைத் தளைகளை அறுத்தெறிய உதவுகிறது. கற்பனைச் சங்கிலியின் எல்லா வளையங்களையும் தெறிக்கச் செய்கின்ற சக்தி வாய்ந்த உயர்ந்த கற்பனை, உருவக் கடவுளே.

'இறைவா, இதைக் கவனித்துக் கொள், அதை எனக்குக் கொடு, என்னுடைய சிறு பிரார்த்தனைக்காக எனக்குத் தினமும் தேவையான அந்தப் பொருளைக் கொடு. பிரபோ, என் தலைவலியைப் போக்கு' என்றெல்லாம் வேண்டுவது பக்தி அல்ல. இது மதத்தின் மிகத் தாழ்ந்த நிலை, மிகத் தாழ்ந்த செயல். உடலையும் அதன் தேவைகளையும் திருப்திப்படுத்தவே ஒருவன் தன் மன ஆற்றல் முழுவதையும் உடயோகிப்பானானால், அவனுக்கும் மிருகத்திற்கும் என்ன வேறுபாடு? பக்தி உயர்ந்தது, சொர்க்க ஆசையைவிட உயர்ந்தது. சொர்க்கம் என்றால் போகம் நிறைந்த இடம் என்பதுதான். அது எப்படி இறைவனாக முடியும்?

முட்டாள்கள்தான் புலனின்பங்களை நாடி ஓடுகிறார்கள். புலனின்பங்களில் உழல்வது எளிது. உண்பது, உறங்குவது என்ற பழைய பாதையிலேயே செல்வது எளிது. நவீனத் தத்துவவாதிகளின் கருத்து என்ன? புலன்களின் திருப்திக்குக் காரணமான கருத்துக்களைக் கூறி அதற்கு மதம் என்ற முத்திரை குத்துவதுதான். இது ஆபத்தானது. புலன்வழிச் செல்லும் வாழ்வில் மரணம்தான் இருக்கிறது. ஆன்ம நிலையில் நிலை பெற்று வாழ்வதே வாழ்க்கை. வேறு எந்தவிதமான வாழ்க்கையும் மரணமே. வாழ்க்கை முழுவதுமே ஓர் உடற்பயிற்சிக்கூடம் எனலாம். உண்மையான வாழ்வை அனுபவிக்க வேண்டுமானால் இதைக் கடந்து அப்பால் செல்ல வேண்டும்.

தீண்டாமையே உங்கள் மதமாகவும், சோற்றுப்பானையே உங்கள் தெய்வமாகவும் இருக்கும்வரை உங்களுக்கு ஆன்மீக வளர்ச்சி கிடையாது. மதங்களுக்கிடையில் காணப்படும் சிறுசிறு வேற்றுமைகள் எல்லாம் வெறும் சொற்போர்களே, முட்டாள்தனமே. ஒவ்வொருவரும் 'இது என் சொந்தக் கருத்து' என்று நினைக்கின்றனர்; தங்கள் விருப்பப்படி இருக்க வேண்டும் என்று விரும்புகின்றனர். இவ்வாறுதான் போராட்டங்கள் உண்டாகின்றன.

நாம் ஒருவரை விமர்சிக்கும்போது, நமது வாழ்க்கையின் மிகச் சிறந்த பகுதியை எடுத்துக்கொண்டு அதை அவரது

வாழ்க்கையின் மிக மோசமான பகுதியுடன் ஒப்பிடுகிறோம். இந்த முட்டாள்தனத்தாலேயே பிறரை மதிப்பிடுவதில் தவறு செய்கிறோம்.

கொள்கை வெறியாலும் குருட்டுப் பிடிவாதத்தாலும் ஒரு மதத்தை மிக விரைவில் பரப்பிவிடலாம். அதில் சந்தேகம் இல்லை. ஆனால் எந்த மதம் ஒருவனது கருத்துக்களுக்குச் சுதந்திரம் கொடுத்து, அவனை உயர்ந்த நெறிக்குச் செலுத்துகிறதோ, அந்த மதம்தான் உறுதியான அடிப்படையில் நிலை பெற்றதாகும். இந்தப் பாதை மெதுவானதாக இருந்தாலும் தவறில்லை.

முதலில் நாட்டை (இந்தியாவை) ஆன்மீகக் கருத்துக்களால் நிறையுங்கள். மற்றக் கருத்துக்கள் தாமே அவற்றைப் பின்தொடரும். ஆன்மீகமும் ஆன்மீக அறிவும் மிகப் பெரிய பரிசு. ஏனெனில் இது பிறவித் தொடரிலிருந்து விடுவிக்கிறது. உலக அறிவை அளிப்பது அடுத்த படியாகும். ஏனெனில் இது ஆன்மீக அறிவு பெற ஒரு கருவியாக அமைகிறது. அடுத்த புண்ணியம் உயிரைக் காப்பது; அடுத்த பெரும் புண்ணியம் அன்ன தானம்.

(ஆன்மானுபவம் பெறுவதற்கான) சாதனைகளால் உடலே அழிந்துவிடும் என்றாலும், அழியட்டும். அதனால் என்ன? இடைவிடாத சத்சங்கத்தின்மூலம் உரிய காலத்தில் அனுபூதி பெறலாம். புகை பிடிக்கும் சாதாரண மண்குழாய் தயாரித்துக் கொடுப்பது பல்லாயிரம் தியானங்களைவிட உயர்ந்தது என்பதைப் புரிந்துகொள்கின்ற நிலை மனிதனுக்கு ஒருநாள் வரவே செய்யும். மண்குழாயைச் சரியாகச் செய்ய வல்லவனால் தியானத்தையும் முறையாகச் செய்ய முடியும்.

மிகவும் பக்குவமுற்ற, மறைந்த முன்னோர்களே தேவர்கள். நாம் இவர்களிடமிருந்து உதவி பெறலாம்.

எல்லோரும் ஆச்சாரியர்கள் ஆகிவிட முடியாது. ஆனால் பலர் முக்தர்களாக முடியும். முக்தனுக்கு உலகமே ஒரு கனவு போல் தோன்றுகிறது. ஆச்சாரியர்கள் இரண்டு நிலைகளுக்கு நடுவில் நிற்க வேண்டியிருக்கிறது. பிரபஞ்சம் உண்மை என்ற அறிவு அவருக்கு இருக்க வேண்டும். இல்லையானால் அவர் ஏன் உபதேசம் செய்ய வேண்டும்? அதேவேளையில் உலகம் ஒரு கனவு என்ற அனுபவம் அவருக்கு இல்லையென்றால், அவருக்கும் சாதாரண மனிதனுக்கும் எந்த வேறுபாடும் இல்லாமல் போய்விடும். அத்தகையவர் எதை உபதேசம்

செய்வார்? குரு தன் சீடர்களின் பாவ மூட்டையை ஏற்றுக் கொள்ள வேண்டும். சக்தி மிகுந்த ஆச்சாரியர்களின் உடலும் பல நோய்களுக்கு உள்ளாவதற்கு இதுவே காரணம். அவர் குறை உடையவரானால் இந்தப் பாவங்கள் அவரது மனத்தை யும் பாதிக்கும், அவர் வீழ்ச்சியடைகிறார். எனவே ஆச்சாரிய ராக இருப்பது மிகவும் கடினம்.

ஆச்சாரியராக இருப்பதைவிட ஜீவன்முக்தனாவது எளிது. உலகம் ஒரு கனவு என்ற அனுபவத்தில் இருப்பதால் ஜீவன்முக்தனுக்குப் பிரபஞ்சத்தைப் பற்றிய கவலையே இல்லை. ஆச்சாரியரோ உலகம் கனவு என்று அறிந்திருந்தாலும், அதை உண்மையாக எண்ணி, அதில் வாழ்ந்து, அதில் செயல்பட வேண்டியிருக்கிறது. எல்லோரும் ஆச்சாரியர்கள் ஆவது என் பது முடியாத ஒன்று. யார்மூலமாக தெய்வசக்தி செயலாற்று கிறதோ, அவரே ஆச்சாரியர் ஆக முடியும். ஆச்சாரியராகும் ஒருவரது உடலுக்கும் மற்றவர்களின் உடலுக்கும் பெரிய வேறு பாடு உண்டு. இந்த உடலைக் குறைவற்ற நிலையில் வைத் திருக்க வழிகாட்டும் சாஸ்திரம் ஒன்று உண்டு. இவர்களுடைய உடல் மிகவும் நுட்பமான ஓர் எந்திரம்; சிறு செயலும் இதை மிகவும் பாதித்துவிடும். துன்பமும் சரி, இன்பமும் சரி, இந்த உடலை அளவுக்கு மீறிப் பாதிக்கும். இவர் அசாதாரணமானவர்.

எந்த வாழ்க்கையின் நிலையிலும் அக மனிதனே வெற்றி பெறுகிறான். இந்த ஆளுமைதான் வெற்றியின் ரகசியம்.

நதியாவில் தோன்றிய பகவான் ஸ்ரீகிருஷ்ண சைதன்யரிடம் காணப்பட்டது போன்ற உணர்ச்சிப்பெருக்கு வேறு எங்கும் யாரிடமும் தோன்றியதே இல்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு சக்தி. அவருடைய உபதேசம் இது என்றோ, அது என்றோ நினைக்கக் கூடாது. இன்றும் உலகில் இருந்து தமது சீடர்கள்மூலம் செயல் புரிந்துவருகின்ற ஒரு சக்தி அவர். தமது கருத்துக்கள் மூலம் அவர் வளர்வதை நான் கண்டேன். இன்றும் அவை வளர்ந்து கொண்டே இருக்கின்றன. ஸ்ரீராமகிருஷ்ணர் ஜீவன்முக்தராகவும் இருந்தார், ஆச்சாரிய ராகவும் இருந்தார். ❀

## 3. பக்தியோகம்பற்றி

7 மே 1896

தனிப் பரம்பொருளுடன் ஒன்றுபடுவதற்கான ஒழுங்கு படுத்தப் பெற்ற பக்தியே பக்தியோகம். மதத்திற்கும் அனுபூதிக் கும் அதுவே எளியதும் நிச்சயமானதுமான பாதை.

இந்தப் பாதைமூலம் இறைநிலை அடைவதற்குத் தேவை யானது ஆண்டவன்மீது அன்பு மட்டுமே.

அந்த அன்பில் ஐந்து நிலைகள் உள்ளன.

முதல் நிலை: இங்கே மனிதனுக்கு உதவி தேவைப்படு கிறது. அவனிடம் சிறிது பயமும் உள்ளது.

இரண்டாம் நிலை: இறைவனைத் தந்தையாக கருதுதல்.

மூன்றாம் நிலை: இறைவனைத் தாயாகக் காணல். அப் போது பெண்கள் எல்லோரும் அன்னை பராசக்தியின் வடிவங் களாகப் பார்க்கப்படுகிறார்கள். இறைவனைத் தாயாகக் கருது கின்ற இந்தக் கருத்திலிருந்தே உண்மை அன்பு உதயமாகிறது.

நான்காம் நிலை: பக்திக்காகவே பக்தி. இது, குணங்கள் எல்லாவற்றையும் கடந்த நிலை.

ஐந்தாம் நிலை: இறைவனுடன் ஒன்றி நிற்கின்ற அன்பு நிலை. ஒருமை நிலை அல்லது உணர்வுகடந்த நிலைக்கு இது அழைத்துச் செல்கிறது.

நம்மைப்போலவே இறைவனும் குணங்களோடு கூடிய வராகவும் குணங்கள் அற்றவராகவும் இருக்கிறார்.

பிரார்த்தனையும் தோத்திரங்களுமே வளர்ச்சிக்கான முதல் வழி. இறைவனின் நாமத்தை ஜபிப்பது அற்புத சக்தியை அளிக்கிறது.

விசேஷச் சொல், அல்லது புனித வாக்கியம், அல்லது சிடன் மீண்டும்மீண்டும் ஜபிப்பதற்காகவும் சிந்திப்பதற்காக வும் குருவால் அளிக்கப்படுகின்ற இறைநாமமே மந்திரம். பிரார்த்தனை செய்யவும் துதிக்கவும் ஏதாவது ஒரு மூர்த்தி யைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அதுவே அவனுடைய இஷ்ட தெய்வம்.

இந்த மந்திரங்கள் எல்லாம் வெறும் சொல்லோசை மட்டும் அல்ல; அவை கடவுள். அவை நம்முள் உள்ளன. இறைவனைப்பற்றிச் சிந்தியுங்கள், அவனைப் பற்றியே பேசுங்கள். உலகின்மீது ஆசை வேண்டாம். நீ எதை நினைக்கிறாயோ அதுவே ஆகிறாய் என்பதுதான் புத்தர் மலைமீது செய்த உபதேசம்.

உணர்வுகடந்த நிலையை அடைந்த பிறகு பக்தன் கீழே வந்து மீண்டும் பக்தியிலும் வழிபாட்டிலும் ஈடுபடுகிறான்.

தூய்மையான அன்பிற்கு உள்நோக்கம் எதுவும் இல்லை; அடைய வேண்டியது எதுவும் இல்லை.

பிரார்த்தனைக்கும் தோத்திரத்திற்கும் பின்னர் தியான நிலை வருகிறது. அதன் பின்னர் இறைவனுடைய நாமத்தையும் இஷ்டதெய்வத்தையும் பக்தன் சிந்திக்கிறான்.

நமது தாயாகவும் தந்தையாகவும் விளங்கும் இறைவன், நமது பந்தபாசங்களை அறுக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்.

'தந்தை மகனின் கையைப் பிடித்து அழைத்துச் செல்வது போல் இறைவா, நீயும் எங்கள் கரங்களைப் பற்றி அழைத்துச் செல், விட்டுவிடாதே' என்று பிரார்த்தனை செய்.

'எனக்குச் செல்வம் வேண்டாம்; அழகு வேண்டாம், இந்த உலகமோ மறுவுலகமோ வேண்டாம். எம்பெருமானே, பிரபோ, நீ மட்டும் வேண்டும். நான் மிகவும் சோர்ந்துவிட்டேன். என் தலைவா, என்னைக் கைப்பிடித்து அழைத்துச் செல். உன்னிடம் சரண்புகுந்துவிட்டேன். என்னை ஆட்கொள். நீயே சரண்' என்று பிரார்த்தனை செய்.

'எங்கள் தந்தையே, எங்கள் தாயே, எங்கள் ஆருயிர் நண்பனே, இந்தப் பிரபஞ்சத்தையே தாங்குபவனே, இந்த வாழ்வின் சிறு சுமையைத் தாங்க எங்களுக்கு அருள் செய். எங்களைக் கைவிடாதே. உன்னிடமிருந்து நாங்கள் ஒரு போதும் பிரியாதிருக்க வேண்டும். எப்போதும் உன்னில் வாழ்வோம்' என்று பிரார்த்தனை செய்.

இறைவனிடம் கொண்டுள்ள பக்தி வெளிப்படும்போது, அதுவே எல்லாமாக இருக்கும்போது, இந்த உலகம் ஒரு சிறு துளிபோல் தோன்றும்.

நிலையாமையைக் கடந்து நிலையானதற்குச் செல். இருளைக் கடந்து ஒளிக்குச் செல்.

## 4. வழிபடுபவனும் வழிபடுபொருளும்[1]

சான்பிரான்சிஸ்கோ, 9 ஏப்ரல் 1900

மனித இயல்பின் பகுத்து ஆராயும் பகுதியையே இது வரை அதிகம் கண்டோம்.[2] இந்தத் தொடரில் நாம் உணர்ச்சிப் பகுதியைப் பார்ப்போம். ... முன்னதில் மனிதன் அளவற்ற ஒன்றான தத்துவமாக கருதப்படுகிறான், பின்னதில் அவன் எல்லைக்கு உட்பட்டவனாகக் கொள்ளப்படுகிறான். ... முற்பிரிவில் குறிப்பிடப்பட்டவனைச் சில கண்ணீர்த் துளிகளோ, வேதனைகளோ தடுத்து நிறுத்த இயலாது. பின்னே சொல்லப்பட்டவன் கண்ணீரைத் துடைக்காமல், துன்பத்தை ஆற்றாமல் முன்னேறிச் செல்ல மாட்டான். முதலில் கூறியவன் பெரியவன், மிகப் பெரியவன். அவனது மகிமையைக் கண்டு சிலவேளைகளில் நாம் தடுமாறிப் போகிறோம். மற்றவன் சாதாரண மனிதன், ஆனால் மிகவும் இனியவன், நமக்கு உற்றவன். ஒருவன் நம்மைப் பிடித்து உயர, மேலும் உயர நமது நுரையீரலே கிட்டத்தட்ட வெடித்துவிடுகின்ற உயரத்திற்குக் கொண்டு செல்கின்றான். நமக்கு மூச்சு முட்டுகிறது. மற்றவன் நாமிருக்குமிடத்தே நம்மை விட்டுவிட்டு, வாழ்க்கைப் பொருட்களைப் பார்க்க முயல்கிறான், [எல்லைக்கு உட்பட்டது] அவனது காட்சி. பகுத்தறிவு என்னும் தெளிவான முத்திரை இல்லாமல் ஒருவன் எதையும் ஒப்புக்கொள்ள மாட்டான். மற்றவனுக்கு நம்பிக்கை உள்ளது; காண இயலாததை அவன் நம்புகிறான். நமக்கு இரண்டும் தேவை. ஒரு இறக்கையால் மட்டும் எந்தப் பறவையும் பறக்க முடியாது. ...

---

1. இந்தச் சொற்பொழிவையும், தொடர்கின்ற இரண்டு சொற்பொழிவுகளையும் குறிப்பெடுத்தவர் மிஸ் ஈடா ஆன்செல். சுமார் 50 ஆண்டுகளுக்குப் பின்னர்தான் இவை சரியாக எழுதப்பட்டன. அதற்குள் ஈடா மிகவும்வயதாகிவிட்டிருந்தார். அவரால் சில பகுதிகளை நினைவுகூர முடியவில்லை. அந்தப் பகுதிகள் மூன்று புள்ளிகளால் குறிக்கப்பட்டுள்ளன. தொடர்ச்சிக்காக அவர் சேர்த்த பகுதிகள் சதுர அடைப்பிற்குள் தரப்பட்டுள்ளன.

2. இதற்கு முன்பு 'தியானம்', 'மன ஒருமைப்பாடு' 'வேதாந்தம்' என்ற பொருள்பற்றி ஆற்றிய சொற்பொழிவுகளைக் குறிப்பிடுகிறார்.

இயைபுடன் முன்னேறிய மனிதனைப் பார்க்கவே நாம் விரும்புகிறோம். ... அவன் விசாலமான இதயம், பரந்த மனம், [உயர்ந்த செயல்] இவற்றைப் படைத்திருக்க வேண்டும். ... உலகத்தின் துயரையும் துன்பத்தையும் தீவிரமாக உணரும் இதயம் படைத்தவனே நமக்குத் தேவை. ... உணர்வதோடு நில்லாமல், பொருட்களின் கருத்தை அறிந்து, இயற்கையினுள்ளும் அறிவிலும் ஆழமாக ஊடுருவிக் காண்பவனே நமக்குத் தேவை. அத்துடன் நிற்காமல், [அந்த உணர்ச்சியையும் அறிவையும்] செயலாக்குபவனே நமக்கு மிகவும் வேண்டப்படுபவன். மூளை, இதயம், செயல் இவை ஒருங்கிணைந்து செயல்படுவதே தேவை.

உலகில் எத்தனையோ குருமார்கள் உள்ளனர். [அவர்களுள் பெரும்பாலோர்] ஒருதலைப்பட்சமாக இருப்பதைக் காணலாம். ஒருவர் பிரகாசமான நடுப்பகல் சூரிய ஒளி போன்ற அறிவைத்தவிர வேறொன்றையும் காண்பதில்லை. இன்னொருவர் அன்பின் அழகிய இசையைத் தவிர வேறொன்றையும் கேட்பதில்லை. மற்றுமொருவர் செயலில் மூழ்கியிருக்கிறார்; உணரவோ, சிந்திக்கவோ அவருக்கு அவகாசமில்லை. செயல் திறன், அறிவுத்திறன், உணரும் திறன்—இவற்றைச் சரிசமமாகக் கொண்ட ஒரு மகான் ஏனிருக்கக் கூடாது? அது இயலாதததா? நிச்சயமாக இயலும். அவனே எதிர்கால மனிதன். அத்தகையோர் இப்போது ஒருசிலரே உள்ளனர். உலகம் முழுவதும் மனிதத்தன்மை வாய்ந்த மக்கள் நிரம்பும்வரை அத்தகையோரின் எண்ணிக்கை [அதிகமாகிக் கொண்டே] வரும்.

இதுவரையில் நான் உங்களோடு புத்தியைப் பற்றியும், பகுத்தறிவைப் பற்றியும் பேசி வந்தேன். வேதாந்தம் முழுவதும் நாம் கேட்டுவிட்டோம். மாயையின் திரை கிழிந்தாயிற்று, குளிர்கால மேகங்கள் கலைகின்றன, சூரியன் நம் மீது ஒளி வீசுகிறான். இமயமலை உச்சியில் ஏற நான் முயன்று வந்தேன். மேகங்களால் சிகரம் மறைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது உங்களுடன் மறு பாகத்தை ஆராய விரும்புகிறேன். இயற்கையின் அற்புத எழில் கொஞ்சும் பள்ளத்தாக்குகள் அங்கே உள்ளன. உலகில் எத்தனையோ துன்பங்கள் இருந்த போதிலும் நம்மை இங்கே பிடித்துவைக்கும் அந்த அன்பை ஆராய்வோம். அந்த அன்புதான் நமக்கு நாமே இந்தத் துன்பச் சங்கிலியைப் பிணைத்துக் கொள்ளச் செய்தது. அந்த அன்பிற்காகத்தான் மனிதன் தன்னைப் பலியிடவும் தானாகவே

முன்வருகிறான். மனிதன் எதற்காகத் தன் கையாலேயே தனக்குச் சங்கிலியிட்டுக்கொண்டானோ, எதற்காகத் துயருறுகிறானோ, அந்த அழிவிலா அன்பைப்பற்றி நாம் ஆராய விழைகிறோம். அறிவுப் பகுதியை நாம் மறக்கப்போகிறோம் என்பதல்ல இதன் பொருள். இமயத்தின் பனிப்படலங்கள் காஷ்மீரின் நெல் வயல்களுடன் ஒருங்கிணைய வேண்டும்; இடி முழக்கம், பறவைகளின் பாட்டுடன் இயைந்து இழைய வேண்டும்.

இந்தத் தொடர் சொற்பொழிவு இனிமையான, அழகான ஒவ்வொன்றையும் குறித்து ஆலோசனை செய்யும். எங்கும் வழிபாடு உள்ளது. ஒவ்வோர் ஆன்மாவிலும் வழிபாடு உள்ளது. ஒவ்வொருவரும் கடவுளை வழிபடுகின்றனர். எந்தப் பெயரிலாகட்டும், ஒவ்வொருவரும் கடவுளையே வழிபடுகின்றனர். அழகிய தாமரை சேற்றில் மலர்கிறது. வாழ்க்கை, மண்ணிலிருந்து உதயமாகிறது. அதுபோல்தான் வழிபாடும் ஆரம்பிக்கிறது. ... முதலில் அதில் சிறிது பயத்தின் சாயல் இருக்கிறது; உலகியல் லாபங்கள் வேண்டும் என்ற ஆசை உள்ளது. பிச்சைக்காரத்தனமான வழிபாடும் இருக்கிறது. உலகில் வழிபாட்டின் ஆரம்பங்கள் இவை. இவையெல்லாம் இறைவனை நேசிப்பதிலும், மானிடனின்மூலமாக அவரை வழிபடுவதிலும் நிறைவுறுகிறது.

இறைவன் என்று ஒருவர் இருக்கிறாரா? அன்பு செலுத்தவும், செலுத்தும் அன்பை ஏற்றுக்கொள்ளவும் தகுதி படைத்த ஒருவர் உள்ளாரா? கல்லை நேசிப்பதில் பெரிய பயனில்லை. அன்பைப் புரிந்துகொள்கின்ற ஒன்றிடமே, நமது அன்பை ஈர்க்கின்ற ஒன்றிடமே அன்பு செய்ய வேண்டும். வழிபாடு விஷயத்திலும் இது உண்மையே. இந்த உலகில் ஒருவன் கல்லைக் [கல்லாக] வழிபடுகிறான் என்று சொல்லாதீர்கள். அவன் [எங்கும் நிறைந்த பரம்பொருளையே அந்தக் கல்லில்] வழிபடுகிறான்.

எங்கும் நிறைந்த அந்தப் பரம்பொருள், நம்முள் இருப்பதாகக் காண்கிறோம். [ஆனால்] அவர் நம்மிலிருந்து வேறுபட்டிருந்தால்தானே அவரை நாம் வழிபட இயலும்? நான் உன்னை வழிபடலாம், என்னையே வழிபட முடியாது. நான் உன்னிடமே பிரார்த்திக்க முடியும், என்னிடமே நான் பிரார்த்திக்க முடியாது. 'நீ' என்ற ஒன்று உண்டா?

ஒன்றே பலவாக ஆகிறது. அந்த ஒன்றை நாம் பார்க்கும் போது, மாயைமூலம் பிரதிபலிக்கும் எல்லைகள் மறைகின்றன.

ஆனால் பல என்பது மதிப்புடையது—இது மிகவும் உண்மை. பலவின் மூலமாகவே நாம் ஒன்றை அடைகிறோம். ...

சிந்திக்கின்ற, புரிந்துகொள்கின்ற, நமக்கு வழிகாட்டு கின்ற சகுணக் கடவுள் ஒருவர் இருக்கிறாரா? இருக்கிறார். நிர்க்குணக் கடவுளுக்கு இந்தக் குணங்களுள் ஒன்றும் இல்லை. நீங்கள் ஒவ்வொருவரும் தனி மனிதர். நீங்கள் சிந்திக் கிறீர்கள், அன்பு செய்கிறீர்கள், வெறுக்கிறீர்கள், கோபம் கொள்கிறீர்கள், வருந்துகிறீர்கள். இருப்பினும் நீங்கள் உருவம் இல்லாதவர்கள், எல்லையற்றவர்கள். நீங்கள் உருவமும் அருவமும் ஒருங்கே கொண்டவர்கள். உருவுள்ள தன்மையும், உருவற்ற தன்மையும் உங்களுக்கு உண்டு. உருவம் அற்றதற்குக் கோபம், வருத்தம், துன்பம்—இவை இருக்க முடியாது. துன்பத் தைப்பற்றி நினைக்கவும் அதற்கு இயலாது. அது சிந்திக்க முடியாது, அறிய முடியாது. அறிவே அது. ஆனால் உருவ முள்ளது அறிகிறது, சிந்திக்கிறது, சாகிறது. ஆகவே உலகப் பொதுவான சார்பற்றதற்கு இரண்டு பகுதிகள் இருக்க வேண்டும். ஒன்று அனைத்தின் எல்லையற்ற உண்மையைக் காட்டுவது. மற்றொன்று உருவம், நம் ஆன்மாக்களின் ஆன்மா, தேவர்களுக்கெல்லாம் தேவர். அவரே இவ்வுலகைப் படைக் கிறார். அவர் வழிகாட்டுவதால் இந்த உலகம் நிலைபெறுகிறது. ...

அவர் எல்லையற்றவர், எப்போதும் தூயவர், என்றும் சுதந்திரர். அவர் நீதிபதி அல்ல. அவர் அப்படி ஒருவராக இருக்க முடியாது. அவர் சிங்காசனத்தில் வீற்றிருந்து நல் லோருக்கும் தீயோருக்கும் நீதி வழங்குவதில்லை. ... அவர் நீதி பதியோ, சேனைத் தலைவரோ, எஜமானரோ அல்ல. எல்லையற்ற கருணையும் அன்பும் நிறைந்தவரே அவர்.

இன்னொரு கோணத்திலிருந்து இதைப் பார்ப்போம். நமது உடலிலுள்ள ஒவ்வொரு சிற்றறையிலும் (Cell) அந்த அறையை உணர்கின்ற ஓர் ஆன்மா உள்ளது. அது தனியான ஒன்று. அதற்கென்று சிறு சங்கல்பமும், செயலாற்றும் இடமும் உள்ளன. சிற்றறைகளெல்லாம் சேர்ந்தே ஒரு தனி மனிதன் ஆகிறான். [அதுபோன்றே] தனிப் பிராணிகள் அனைத்தும் சேர்ந்தவர் இந்தப் பிரபஞ்சத்தின் சகுணக் கடவுள்.

இன்னும் ஒருவிதமாக இதைப் பார்ப்போம். உங்களை நான் காண்கிறேன் என்பதற்கு என்ன பொருள்? உங்களது எல் லையற்ற இயல்பை எவ்வளவு எல்லைக்கு உட்படுத்த இய லுமோ அதையே நான் காண்கிறேன். என் கண்கள் மற்றும்

புலன்களின் வலிமையால் உங்களைக் காண நான் உங்களை எல்லைக்கு உட்படுத்தியிருக்கிறேன். எவ்வளவிற்கு உங்களை என் கண்கள் காண இயலுமோ, அவ்வளவே நான் காண்கிறேன். என் மனம் உங்களைக் கிரகிக்கும் அளவிற்கே நான் உங்களைத் தெரிந்துகொள்கிறேன், அதற்கு அதிகமாக அல்ல. அதுபோலவே நான் வழிபடுவதும் சார்பற்றது, உருவமில்லாதது. [அதையே உருவக் கடவுளாகக் காண்கிறேன்.] நமக்கு உடலும் மனமும் உள்ளதுவரை நாம் எப்போதும் இறைவன், இயற்கை, ஆன்மா என்ற மூன்றும் கலந்த ஒன்றைக் காண்போம். எப்போதும் ஒன்றில் மூன்றான இது, பிரிக்க முடியாதது. இயற்கை உள்ளது மனித ஆன்மாக்கள் உள்ளன இயற்கையையும் ஆன்மாக்களையும் தன்னுள் அடக்கும் அதுவும்[உள்ளது] .

பிரபஞ்சமயமான ஆன்மா உருவத்திற்கு உட்பட்டுள்ளது. எனது ஆன்மாவே இறைவனின் ஒரு பங்குதான். அவர் நம் கண்களுக்குக் கண், நமது உயிருக்கு உயிர், நமது மனத்திற்கு மனம், நமது ஆன்மாவிற்கு ஆன்மா. இதுவே உருவக் கடவுளைப்பற்றி நம்மால் நினைக்க முடிந்த மிக உயர்ந்த குறிக்கோள்.

நீங்கள் துவைதிகளாக இல்லாமல் அத்வைதிகளாக இருந்தாலும், உருவக் கடவுளை ஏற்கலாம். ... இரண்டல்லாத ஒன்றேயான ஒருவன் இருக்கிறான். அவன் தன்னையே காதலிக்க விரும்பினான். ஆகவே அந்த ஒன்றிலிருந்து பலவற்றைப் படைத்தான். ... பெரிய உண்மையான 'நான்' என்பதைச் சிறிய 'நான்' வழிபடுகிறது. ஆகவே எல்லா நெறிகளிலும் உருவக் கடவுள் இருக்கலாம்.

மற்றவர்களைவிட மகிழ்ச்சியில் திளைக்கும் நிலைமையில் சிலர் பிறந்திருக்கிறார்கள். நீதியுள்ள ஆண்டவனின் ஆட்சியில் இது ஏன் நிகழ்ந்தது? இந்த உலகில் மரணமும் உள்ளது. இத்தகைய பல இடையூறுகள் குறுக்கிடுகின்றன. [இந்தப் பிரச்சினைகளுக்கு] இன்னும் தீர்வு கிடைக்கவில்லை. துவைத நிலையிலிருந்து அந்தத் தீர்வு கிடைக்கவும் இயலாது. பொருட்களை உள்ளது உள்ளபடி ஆராய்ச்சி செய்ய நாம் தத்துவத்திற்குத் திரும்பிச் செல்ல வேண்டும். நாம் நமது வினைப்பயனாலேயே துயருறுகிறோம். அது கடவுளின் குற்றம் அல்ல. நாம் செய்வது நமது குற்றமே தவிர வேறல்ல. இறைவன்மீது ஏன் குற்றம் சாட்ட வேண்டும்?

தீமை ஏன் உள்ளது? இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கான ஒரே வழி நன்மை, தீமை இரண்டையும் கடவுள் படைத்தார் என்று கொள்வதே. உருவக்கடவுள்-கொள்கையின் பெரிய பிரச்சினை இதுவே—அவர் நன்மை மட்டுமே, தீமை அவர் அல்ல என்று நீங்கள் சொன்னால், உங்கள் வாதத்தின் வலையில் நீங்களே சிக்கிக் கொள்வீர்கள். கடவுள் இருப்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? அவர் இந்த உலகின் தந்தை என்றும், நல்லவர் என்றும் சொல்கிறீர்கள். உலகில் தீமையும் இருக்கிறதே, எனவே தீயவரும் அவரே. ... அதே பிரச்சினை.

நன்மையும் இல்லை, தீமையும் இல்லை. கடவுளே இருக்கிறார். ... நன்மை எது என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? அதை உணர்கிறீர்கள். [எது தீமை என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?] அது வந்தால் அதையும் உணர்கிறீர்கள். ... நன்மை, தீமை என்பவற்றை நம் உணர்ச்சிகளால் தெரிந்து கொள்கிறோம். நல்ல இன்பமான உணர்ச்சிகள் மட்டும் உள்ளவன் ஒருவனும் இல்லை. அதேபோல், துன்பமான உணர்ச்சிகள் மட்டுமே உள்ள ஒருவனும் இல்லை. ...

எல்லா துன்பத்திற்கும் இன்பத்திற்கும்கூடக் காரணங்கள் தேவையும் கவலையுமே. தேவை அதிகமாகிறதா, குறைகிறதா? வாழ்க்கை எளிதாகிறதா, சிக்கலாகிறதா? உண்மையாகச் சிக்கலே ஆகிறது. தேவைகள் பெருகுகின்றன. உங்களுக்கு வேண்டிய அளவு உடையோ பணமோ உங்கள் முப்பாட்டனாருக்கு தேவைப்படவில்லை. அவர்களுக்கு மின் வண்டிகளோ, ரயில் பாதைகளோ இருக்கவில்லை. அதனால்தான் அவர்கள் குறைவாக வேலை செய்தார்கள். புதிய சாதனங்கள் வரும்போது தேவையும் அதிகமாகிறது, நீங்கள் இன்னும் அதிகம் உழைக்க வேண்டியிருக்கிறது. மேலும்மேலும் கவலை, இன்னும் அதிகம் போட்டி.

பணம் கிடைப்பது மிகவும் கடினம். அதைக் காப்பாற்றுவது இன்னும் கடினம். சிறிது பணம் சேர்க்க நீங்கள் உலகத்துடன் போராட வேண்டியிருக்கிறது. அதைப் பாதுகாக்கவோ, வாழ்நாள் முழுவதும் போராடுகிறீர்கள். [எனவே] ஏழைகளை விடப் பணக்காரர்களுக்கே கவலை அதிகம். ... இதுவே உலகின் போக்கு. ...

உலகில் நன்மையும் தீமையும் எங்கும் உள்ளன. சில வேளைகளில் தீமையே நன்மையாகிறது; உண்மைதான். ஆனால் வேறு சிலவேளைகளில் நன்மையும் தீமையாகிறது. ஏதாவது ஒருசமயம்

நமது புலன்கள் தீமை விளைவிக்கவே செய்கின்றன. ஒருவன் மது அருந்துகிறான்; [முதலில்] எந்தப் பிரச்சினையும் இல்லை. ஆனால் அவன் தொடர்ந்து குடிக்கட்டும். விளைவு தீமைதான். ... ஒருவன் பணக்காரத் தாய்தந்தையருக்குப் பிறக்கிறான். அது நல்லது. அவன் முட்டாளாகிறான், உடலுக்கோ மூளைக்கோ உரிய பயிற்சி தருவதில்லை. நன்மையால் தீமை விளைவதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

வாழ்வின்மீது நமக்குள்ள பற்றைப் பாருங்கள். குதித்துக் களிக்கிறோம்—கணநேரம்தான். ஏதோ ஒருசில கணங்களே வாழ்கிறோம். கடுமையாக உழைக்கிறோம். சிறிதும் வலுவில்லாத குழந்தைகளாகப் பிறந்தோம். மீண்டும் எல்லாவற்றையும் அறிவதற்குள் பல ஆண்டுகள் கழிந்துவிடுகின்றன. அறுபது, எழுபது வயதில் கண்ணைத் திறக்கும்போது, 'வெளியே செல்' என்னும் கட்டளை பிறக்கிறது. இதுதான் வாழ்க்கை.

நன்மை, தீமை என்பவை ஒன்றையொன்று சார்ந்தவை என்பதை நாம் கண்டுகொண்டோம். எனக்கு நன்மை தருவது உங்களுக்குத் தீமை விளைவிக்கலாம். நான் சாப்பிடுவதை நீங்கள் சாப்பிட்டால் அழ ஆரம்பிப்பீர்கள்; நானோ சிரிப்பேன். ... நாமிருவரும் நடனமாடலாம்; ஆனால் நான் மகிழ்ச்சியாலும், நீங்கள் துன்பத்தாலுமே ஆடுவோம். ... ஒரே பொருள் நம் வாழ்க்கையின் ஒரு பகுதியில் நன்மையாகவும், இன்னொரு பகுதியில் தீமையாகவும் இருக்கலாம். இது முழுவதும் நன்மை, அது முழுவதும் தீமை என்று நன்மையும் தீமையும் தீவிரமாகப் பாகுபடுத்தப்பட்டவை என்று எப்படிக் கூற முடியும்?

இறைவன் எப்போதும் நல்லவரேயானால், இந்தத் தீமையனைத்திற்கும் பொறுப்பாளி யார்? சாத்தான் என்று ஒரு பேர்வழி இருப்பதாகக் கிறிஸ்தவரும் முகமதியரும் கூறுகின்றனர். இரண்டு பேர்வழிகள் செயல்படுவதாக நீங்கள் எப்படிச் சொல்லலாம்? ஒருவர் மட்டுமே இருக்க இயலும். ... குழந்தையைச் சுடுகின்ற தீயே சமையல் செய்யவும் பயன்படுகிறது. தீ நல்லது என்றோ, தீயது என்றோ எப்படிச் சொல்வீர்கள். அதைப் படைத்தவர் வேறுபட்ட இருவரென்று எப்படிச் சொல்ல முடியும்? தீயதென்று சொல்லப்படுவதையும் படைத்தவர் யார்? கடவுளே. வேறு வழியில்லை! உயிரையும் மரணத்தையும் வாந்திபேதி முதலிய தொற்று நோய்கள் அனைத்தையும் அவரே அனுப்புகிறார். ஆண்டவர் அத்தகையவரானால் அவர் நல்லவர், அவரே தீயவர்; அழகுள்ளவரும் அவரே,

பயங்கரமானவரும் அவரே; வாழ்க்கையும் அவரே, மரணமும் அவரே.

அத்தகைய கடவுளை வழிபடுவது எப்படி? பயங்கரமானதை உண்மையாகவே வழிபட ஆன்மா எப்படிக் கற்றுக் கொள்ளும் என்பதை நாம் அறிந்துகொள்வோம். அப்போதே அந்த ஆன்மா அமைதி பெறும். உங்களுக்கு அமைதி இருக்கிறதா? நீங்கள் கவலைகளை விட்டுவிட்டீர்களா? திரும்புங்கள். முதலில் பயங்கரத்தை எதிர்கொள்ளுங்கள். முகமூடியைக் கிழித்தெறியுங்கள். அதே [கடவுள்] அங்கிருப்பதைப் பாருங்கள். நன்மையாகத் தோன்றுபவரும் தீமையாகத் தோன்றுபவரும் உருவக் கடவுளாகிய அவரே. வேறு ஒருவரும் இல்லை.

இரண்டு கடவுளர் இருந்தால் இயற்கை ஒரு கணமும் நிலைநிற்க இயலாது. வேறான ஒருவர் இயற்கையில் இல்லை. எல்லாம் இயைபாகவே உள்ளன. கடவுள் ஒரு பங்கும், சாத்தான் இன்னொரு பங்கும் செயல்பட்டால் இயற்கை அனைத்தும் [குழப்பமாகிவிடும்].

நியதியை யார் மீற இயலும்? இந்தப் பளிங்குக் கிண்ணத்தை நொறுக்கினால் இது கீழே விழும். ஓர் அணுவைத் தனது இடத்தை விட்டு நகரச் செய்தால் போதும். மற்ற அணுக்கள் எல்லாம் சமநிலை பிறழ்ந்துவிடும். ... நியதியை ஒருபோதும் மீற இயலாது. ஒவ்வோர் அணுவும் அதனதன் இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றும் குறிப்பிடப்பட்டு, அளக்கப்பட்டு, அதனதன் கடமையைச் செய்கிறது. அவரது ஆணையால் காற்று வீசுகிறது, சூரியன் ஒளிர்கிறான். அவரது ஆட்சியில் உலகங்கள் தத்தம் இடங்களில் அமைகின்றன. அவரது ஆணையால் மரண தேவன் இந்த உலகில் விளையாடுகிறான். பிரபஞ்சத்தில் இரண்டோ மூன்றோ கடவுளர் மல்யுத்தப் போட்டி புரிவதாக எண்ணிப் பாருங்கள்! அது இயலாத ஒன்று.

உலகைப் படைத்தவரான சகுணக் கடவுள் கருணை வடிவினரும் கொடூரமானவருங்கூட ஆகலாம் என்பதை இப்போது காண்கிறோம். ... அவரே நன்மை, அவரே தீமை. அவர் புன்முறுவல் பூக்கிறார், கோபப் பார்வையும் பார்க்கிறார். ஒருவரும் அவரது நியதியை மீற இயலாது. அவரே பிரபஞ்சத்தைப் படைத்தார்.

படைப்பு என்பது என்ன? சூன்யத்திலிருந்து ஏதாவது வருவதா? ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் கடவுள் தம் கனவு

கலைந்து எழுந்து உலகைப் படைத்தாராம்! அதற்குமுன் ஒன்றுமே இருக்கவில்லையே? அப்போது அவர் என்ன செய்து கொண்டிருந்தார்? நன்றாக உறங்கிக் கொண்டிருந்தாரா? கடவுளே பிரபஞ்சத்திற்குக் காரணம். காரியத்தின் மூலமாக நாம் காரணத்தைத் தெரிந்துகொள்ளலாம். காரியம் இல்லையெனில் காரணம், காரணமாகாது. காரியத்திலும் அதன் மூலமாகவுமே காரணம் எப்போதும் அறியப்படுகிறது. ... படைப்பு எல்லையற்றது. ... காலத்திலோ இடத்திலோ (Space) தொடக்கம் என்பதை நீங்கள் கற்பனை செய்ய முடியாது.

இறைவன் ஏன் படைக்கிறார்? அவர் விரும்புவதால். அவர் சுதந்திரமானவர், ஆதலால். ... நீங்களும் நானும் நியதியால் கட்டப்பட்டுள்ளோம். நாம் சில வழிகளிலேயே செயலாற்ற இயலும், வேறு வகையில் முடியாது. அவரால் கைகளின்றி எல்லாவற்றையும் பற்ற முடியும், கால்கள் இல்லாமல் [விரைந்து செல்ல முடியும்]. உடலின்றி அவர் எல்லாம் வல்லவராக உள்ளார். எந்தக் கண்களும் யாரைப் பார்க்க முடியாதோ, ஆனால் யார் ஒவ்வொரு கண்ணின் காட்சிக்கும் காரணமோ அவரே இறைவன் என்று தெரிந்துகொள். வேறெதையும் நீங்கள் வழிபட இயலாது. சர்வ வல்லமை உள்ளவரான கடவுளே இந்த உலகைத் தாங்குகிறார். 'நியதி' என்பது அவருடைய சங்கல்பத்தின் வெளிப்பாடு. அவர் தமது நியதிகளால் பிரபஞ்சத்தை ஆள்கிறார்.

நாம் இதுவரையில் கடவுளையும் இயற்கையையும்—என்றுமுள்ள கடவுளையும், என்றுமுள்ள இயற்கையையும் ஆராய்ந்தோம். ஆன்மாக்கள்? அவையும் எப்போதும் உள்ளவைதாம். எந்த ஆன்மாவும் [ஒருபோதும்] படைக்கப்படவில்லை. அது சாகவும் இயலாது. தன் மரணத்தைக் கற்பனை செய்ய யாராலும் இயலாது. ஆன்மா எல்லையற்றது, என்றும் உள்ளது. அது எப்படிச் சாக முடியும்? அது உடல்களை மாற்றுகிறது. மனிதன் தன் பழைய, கிழிந்த உடைகளைக் களைந்துவிட்டு புதியவற்றை அணிவதுபோல், தேய்ந்த உடலைக் களைந்து புதிய உடலை ஏற்கிறான்.

ஆன்மாவின் இயல்பு என்ன? ஆன்மாவும் [எல்லாம் வல்லது;] எங்கும் நிறைந்தது. அதற்கு நீளம், அகலம், பருமன் என்று எதுவும் இல்லை. ... அது இங்கோ அங்கோ இருப்பதாக எப்படிச் சொல்ல முடியும்? இந்த உடல் வீழ்கிறது, [ஆன்மா] வேறோர் உடல்மூலமாகச் செயலாற்றுகிறது.

ஆன்மா ஒரு வட்டம், அதன் பரிதி எங்குமில்லை, அதன் மையம் உடலில் உள்ளது. கடவுளும் ஒரு வட்டம், அதன் பரிதி எங்குமில்லை, ஆனால் அதன் மையமோ எங்கும் உள்ளது. ஆன்மாவின் இயல்பே ஆனந்தம், தூய்மை, நிறைவு. அதன் இயல்பு தூய்மை அல்லாததானால் அது தூய்மை பெறவே முடியாது. ஆன்மாவின் இயல்பே தூய்மை, அதனால்தான் ஆன்மாக்கள் தூய்மை பெற முடிகிறது. இயல்பால் ஆன்மா ஆனந்தமயமானது, ஆகவே அது ஆனந்தம் பெற இயலும். அது அமைதி, [ஆதலால் அது அமைதி பெற இயலும்.]

இப்போதைய நிலையில் இருக்கும் நாம் அனைவரும் உடலால் ஈர்க்கப்படுகிறோம்; உயிர் வாழ்வதற்காகப் பாடு பட்டு உழைக்கிறோம்; பொறாமை, சண்டை, துன்பம் இவற் றிற்கு ஆளாகி இறுதியில் மாய்ந்து போகிறோம். நாம் என்ன வாக இருக்க வேண்டுமோ, அதுவாக நாம் இல்லை என்பது இதிலிருந்து தெளிவாகிறது. நாம் சுதந்திரமாக இல்லை. இயல்பான தூய்மை முதலியவற்றையும் பெற்றிருக்கவில்லை. ஆன்மா சுருங்கிவிட்டதுபோல் உள்ளது. இப்போது அதற் குத் தேவையானது விரிவே. ...

அதைச் செய்வது எப்படி? நீங்களாகவே இதைச் செய்ய முடியுமா? முடியாது. முகத்தில் தூசு படிந்திருந்தால் அதைத் தூசியாலே துடைக்க முடியுமா? விதையை நட்டால் அது மர மாகிறது; மரத்திலிருந்து விதை உண்டாகிறது; அதனின்று இன்னொரு மரம் உண்டாகிறது. கோழியிலிருந்து முட்டையும், முட்டையிலிருந்து கோழியும் உண்டாகின்றன. நீங்கள் ஏதேனும் நல்லது செய்தால் அதனை அனுபவிக்க இன்னொரு பிறவி எடுக்க நேரும். அப்போது வருந்துவீர்கள். முடிவற்ற இந்தச் சங்கிலியில் ஆரம்பித்துவிட்டால் நீங்கள் நிற்க முடியாது. கீழும் மேலும், விண்ணுலகத்திற்கும், மண்ணுலகத்திற்கும் தொடர்ந்து போய்க்கொண்டே இருக்க வேண்டியதுதான். ... இத்தனை உடல்களையும் ஏற்கவேண்டியதுதான். ... வேறு வழி இல்லை.

இவற்றிலிருந்து கரையேறுவது எப்படி? நாம் எதற்காக இங்கே இருக்கிறோம்? ஒரு காரணம், துயரைத் தொலைப் பது. அதற்காகவே நாம் இரவுபகலாகப் பாடுபடுகிறோம். ... ஆனால் உழைப்பால் அதைப் பெற முடியாது. செயல் மேலும் செயலையே உண்டாக்குகிறது. சுதந்திரரான ஒருவர் நமக் குக் கைகொடுத்து உதவினால்தான் அது இயலும். 'அழியா

அமரத்துவத்தின் குழந்தைகளே, இந்த உலகிலும் உயர்ந்த சொர்க்கங்களிலும் வாழ்பவர்களே, செவிசாயுங்கள்! நான் ரகசியத்தை அறிந்துவிட்டேன்' என்கிறார் முனிவர் ஒருவர். 'இருளுக்கெல்லாம் அப்பாலுள்ள அந்த இறைவனை நான் கண்டுவிட்டேன். அவரது கருணையால் மட்டுமே நாம் இந்தப் பிறவிக்கடலைத் தாண்ட இயலும்' என்கிறார் அவர்.

குறிக்கோளைப்பற்றிய கருத்து இந்தியாவில் இதுதான். சொர்க்கங்கள் உள்ளன, நரகங்கள் உள்ளன, பூமிகள் உள்ளன. ஆனால் அவையெல்லாம் நிலையற்றவை. என்னை நரகத்திற்கு அனுப்பலாம், அது நிலையானது அல்ல. நான் எங்கிருந்தாலும் அதே போராட்டம் தொடர்கிறது. இந்தப் போராட்டம் அனைத்திலிருந்தும் மீள்வது எப்படி என்பதே பிரச்சினை. நான் சொர்க்கத்திற்குச் சென்றால், அங்கு ஒருவேளை சிறிது ஓய்வு கிடைக்கலாம். என் தீவினைக்காகத் தண்டனை பெற்றால், அதுவும் [என்றைக்கும்] நிலையானது அல்ல. ... சொர்க்கத்திற்குச் செல்வது இந்திய லட்சியம் அல்ல. ... பூமியிலிருந்து வெளியேறு, நரகத்திலிருந்து வெளியேறு, சொர்க்கத்திலிருந்து வெளியேறு. அது லட்சியம். அது சுதந்திரம். நீங்கள் அனைவரும் சுதந்திரர் ஆக வேண்டும். ஆன்மாவின் மகிமை மறைந்திருக்கிறது. அதை மீண்டும் வெளிக்கொணர வேண்டும். ஆன்மா இருக்கிறது; அது எங்கும் உள்ளது. அது எங்கு செல்லும்?. ... அது எங்கு செல்ல இயலும்? அது இல்லாத இடமிருந்தால் அங்கே செல்லக்கூடும். அது எப்போதும் உள்ளது என்பதைத் தெரிந்துகொண்டால். ... நீங்கள் நிறைந்த இன்பத்தை என்றென்றும் பெறுவீர்கள். ... அதற்குப்பின் பிறத்தலோ இறத்தலோ இல்லை. ... நோய் இல்லை; உடல் இல்லை, உடலே மிகப் பெரிய நோய்!. ..

ஆன்மா ஆன்மாவாகவே இருக்கும். உயிர் உயிராகவே வாழும். இதை எவ்வாறு செய்வது? இயல்பாகவே என்றுமுள்ள, தூய, நிறைவுற்ற ஆன்மாவில் [இறைவனை] வழிபடுவதால்தான். எல்லாம்வல்ல இரண்டு இறைவர்கள் இருக்க முடியாது. சர்வ வல்லமையுள்ள இரண்டு மூன்று கடவுளர் இருப்பதாக எண்ணிப் பாருங்கள். ஒருவர் உலகைப் படைப்பார், இன்னொருவர் 'நான் அதை அழிப்பேன்' என்பார். அது ஒருபோதும் நடக்காது. இறைவன் ஒருவரே இருக்க வேண்டும். ஆன்மா நிறைநிலையை அடைகிறது. அது அனேகமாக எல்லாம் வல்லதாக, எல்லாம் அறிந்ததாக ஆகிறது. இதுவே

வழிபடுபவர். வழிபடப்பட்டவர் யார்? கடவுளே. அவர் எங்கும் நிறைந்தவர், எல்லாம் அறிந்தவர், எல்லா குணங்களும் நிரம்பியவர். இவற்றிற்கெல்லாம் மேலாக அன்பே உருவானவர் அவர். ஆன்மா இந்த நிறைநிலையை எப்படிப் பெறுவது? வழிபாட்டின்மூலமே. ❀

## 5. புற வழிபாடு

10 ஏப்ரல் 1900

நீங்கள் எல்லோரும் பைபிளைப் படிப்பவர்கள். ... யூத வரலாறும் யூதக் கருத்துக்களும் புரோகிதர்கள், தீர்க்கதரிசிகள் என்ற இரண்டுவகை ஆசிரியர்களால் உருவாகியுள்ளது உங்களுக்குத் தெரியும். இவர்களுள் புரோகிதர்கள் பழமையைப் பாதுகாக்கும் சக்தியின் பிரதிநிதிகளாகவும், தீர்க்கதரிசிகள் முன்னேற்றச் சக்தியின் பிரதிநிதிகளாகவும் விளங்குகிறார்கள். விஷயம் என்னவென்றால் பழமையான சடங்குமுறைகள் எப்படியோ நுழைகின்றன, ஒவ்வொன்றிலும் மரபு புகுந்துவிடுகிறது. ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு மதத்திலும் இது நடக்கிறது. அப்போது புதுமைக் கருத்துக்களுடன் புதிய தீர்க்கதரிசிகள் சிலர் தோன்றுகிறார்கள். இவர்கள் புதிய லட்சியங்களையும் கோட்பாடுகளையும் பிரச்சாரம் செய்கிறார்கள். சமூகத்திற்கு ஒரு புதிய உந்துதலை அளிக்கிறார்கள். இவர்களைப் பின்பற்றுபவர்கள் சில சந்ததிகளுக்குப் பின்னர் இவர்களுடைய கொள்கைகளில் மட்டுமே தீவிர நம்பிக்கை உள்ளவர்களாகி, மற்ற எதையும் ஆமோதிக்க இயலாதவர்களாகி விடுகிறார்கள். இன்று பரந்த நோக்கமும் முற்போக்குச் சிந்தனையும் கொண்ட பிரச்சாரகர் என்று கூறப்படுவோர், சில ஆண்டுகளுள் பழமைவாதப் புரோகிதர்கள் ஆகிவிடுகிறார்கள். முற்போக்குச் சிந்தனையாளர்கள் தங்கள் பங்கிற்குத் தங்களைவிட முற்போக்கானவர்களுக்கு முட்டுக்கட்டையிடுவார்கள். யாரும் தங்களைவிட முன்னேறிச் செல்வதை அவர்கள் விட்டுக்கொடுக்க மாட்டார்கள். இருக்கும் நிலையில் இருப்பதிலேயே அவர்கள் திருப்தியடைகிறார்கள்.

ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு மதத்திலும் சில அடிப்படைக் கோட்பாடுகள் இருக்கின்றன. அந்தக் கோட்பாடுகளின்மூலம் செயல்படுகின்ற சக்தியே அந்தந்த மதங்களின் எல்லா அம்சங்களிலும் வெளிப்படுகின்றன. ... கோட்பாடுகளும், சாஸ்திரங்களும், சில நியதிகளும், எழுந்திருப்பதும்

உட்காருவதுமான சில அனுஷ்டானங்களும் எல்லாமே வழிபாட்டு முறைகள்தான். பெரும்பான்மை மனித இனம் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காக, ஆன்மீக உபாசனை உலகியலுக்கு ஏற்ற வழிபாடாக மாறுகிறது. எந்த நாட்டிலும் சரி, பெரும்பாலோரால் பரம்பொருளைப் பரம்பொருளாக வழிபட இயலாது. இதுவரை அது சாத்தியமாகவில்லை. அப்படி வழிபடுகின்ற ஒரு காலம் வருமா என்பதும் சந்தேகமே. இந்த நகரத்தில் உள்ளவர்களில் எத்தனைபேர் இறைவனை இப்படி ஓர் உயர்தத்துவமாக வழிபடத் தயாராக இருக்கின்றனர்? வெகுசிலரே. பெரும்பாலோரால் இது இயலாது. அவர்கள் புலன்களுக்கு அடிமையாக வாழ்பவர்கள். அவர்களுக்குத் திட்டவட்டமான கருத்துக்களை நீங்கள் கூற வேண்டும். சில செயல்முறைகளைச் சொல்லுங்கள். 'இருபதுமுறை எழுந்து நிற்க வேண்டும்; இருபதுமுறை உட்கார வேண்டும்' என்றெல்லாம் கூறுங்கள், அவர்கள் புரிந்துகொள்வார்கள். ஒரு நாசி வழியாக மூச்சை இழுத்து மற்றொரு நாசி வழியாக வெளியே விட வேண்டும் என்று கூறுங்கள், அவர்கள் புரிந்துகொள்வார்கள். பரமாத்மா, பரம்பொருள் என்றெல்லாம் உயர்ந்த கருத்துக்களை அவர்களால் ஏற்க இயலாது. அது அவர்களின் குற்றமல்ல. ...

கடவுளை ஒரு தத்துவமாக வழிபடக்கூடிய சக்தி உங்களுக்கு இருக்கிறதென்றால், நல்லது. ஆனால் அது உங்களால் முடியாத ஒரு காலம் இருந்தது. ... மக்கள் பண்படாதவர்களாக இருந்தால், மதக் கருத்துகளும் மதக் கோட்பாடுகளும் பண்படாதவைகளாக ஆரம்ப நிலையில் இருக்கின்றன; வழிபாட்டு முறைகளும் தூலமானவையாக, விகாரமானவையாக இருக்கின்றன. மக்கள் பண்பட்டவர்களாகவும் நாகரீகமுள்ளவர்களாகவும் இருந்தால் அவை பண்பட்டவையாக உள்ளன. வழிபாட்டுச் சடங்குகள் என்றும் இருக்கும். ஆனால் அவை காலத்திற்கு ஏற்றவாறு மாறும், அவ்வளவுதான்.

ஒரு வினோதம் பாருங்கள். முகமதிய மதத்தைவிட [உருவ வழிபாட்டைக்] கடுமையாக எதிர்த்த ஒரு மதம் தோன்றியதில்லை. ... இது ஒரு வியப்பான நிகழ்ச்சி! முகமதிய மதத்தில் ஓவியத்திற்கோ சிற்பத்திற்கோ இசைக்கோ இடமில்லை. ... இவை உருவ வழிபாட்டில் கொண்டுபோய்விடும் என்று அவர்கள் கருதினர். முல்லாகூட கூட்டத்தினரைப் பார்த்துப் பேசுவதில்லை. அவ்வாறு செய்தால் அது அவரை மட்டும்

வேறுபடுத்தியதாகிவிடுமே! ஆகவே எல்லாரும் ஒரே முகமாகத் திரும்பியிருந்தால், அதில் வேறுபாடு இல்லை. இவ்வாறெல்லாம் அவர்களுடைய முறை இருக்கிறது. ஆனால் நபி இறந்து இரண்டு நூற்றாண்டுகளுக்கு உள்ளாகவே அங்கு மகான்களின் வழிபாடு தொடங்கிவிட்டது. இங்கே அந்த மகானின் கால் விரல் இருக்கிறது, அங்கே அவரது தோல் இருக்கிறது என்றெல்லாம் வழிபட ஆரம்பித்தார்கள். உருவ வழிபாடு என்பது நாம் கடக்க வேண்டிய கட்டங்களுள் ஒன்று. எனவே அதை எதிர்த்துப் போராடுவதற்குப் பதிலாக, அதன் சிறந்த பகுதிகளை எடுத்துக் கொள்வோம். அதன் அடிப்படைக் கோட்பாடுகளை ஆராய்வோம்.

[மர வழிபாடு, கல் வழிபாடு என்றெல்லாம் சொல்கிறோமே] அவை மிகவும் கீழான வழிபாடு. பண்படாத, நாகரீகமற்ற ஒவ்வொரு மனிதனும் ஏதாவது ஒன்றைப் பற்றிக்கொண்டு, அதில் [தன் சொந்தக் கருத்தை] சேர்த்துக் கொள்வான். அது அவனுக்கு உதவும். ஒரு சிறு எலும்புத் துண்டு, கல் அல்லது ஏதாவது ஒன்றை அவன் வழிபடலாம். இந்தப் பண்படாத வழிபாடுகளிலும் மனிதன் ஒருபோதும் கல்லைக் கல்லாகவோ, மரத்தை மரமாகவோ வழிபட்டதில்லை. சற்று யோசித்தாலே இது புரிந்துவிடும். மனிதன் கற்களையும் மரங்களையும் வழிபட்டான் என்று சிலவேளைகளில் அறிஞர்கள் கூறுகிறார்கள். அது வெறும் பிதற்றல். மனித இனம் கடந்து சென்ற கட்டங்களுள் மர வழிபாடு ஒரு படி. பரமாத்மாவைத் தவிர வேறு எதையுமே மனிதன் ஒருபோதும் வழிபட்டதில்லை. அவன் ஆன்மா, ஆன்மாவைத் தவிர வேறு எதையும் அவனால் உணர முடியாது. [ஆன்மாவை ஜடப்பொருளாக வழிபடக்கூடிய] அவ்வளவு பெரிய தவறைத் தெய்வீக மனத்தால் செய்ய இயலாது. இந்த வழிபாட்டு முறையில் மனிதன் கல்லையும் மரத்தையும் உணர்வுப் பொருளாகவே வழிபட்டான். இறைவனின் ஒரு சிறு அம்சம் அந்தக் கல்லிலும் மரத்திலும் இருக்கிறது, அந்தக் கல்லிற்கும் மரத்திற்கும் ஆன்மா இருக்கிறது என்றுதான் அவன் எண்ணினான்.

மர வழிபாடும் பாம்பு வழிபாடும் இணைந்தே இருந்து வந்திருக்கின்றன. அறிவென்னும் மரம் இருக்கிறது. எப்போதும் அந்த மரம் இருந்துகொண்டேதான் இருக்கும். மரத்திற்கும் பாம்பிற்கும் எப்படியோ தொடர்பு இருக்கிறது. இவை மிகமிகப் புராதனமான வழிபாடுகள். இதிலும்கூடச் சில குறிப்பிட்ட

மரங்களும் சில குறிப்பிட்ட கற்களும்தான் வழிபடப்பட்டன; மரங்களையும் கற்களையும் மனிதர்கள் வழிபடவில்லை.

[உருவ வழிபாட்டில்] இதைவிட உயர்ந்த நிலை, முன்னோர்களின் உருவங்களையும் தெய்வ உருவங்களையும் வழிபடுவதாகும். இறந்தவர்களின் உருவங்களைச் செய்கிறார்கள், தெய்வங்களின் கற்பனை உருவங்களை அமைக்கிறார்கள். பின்னர் அந்த உருவங்களை வழிபடுகிறார்கள்.

மகான்கள், காலஞ்சென்ற ஆண்கள் மற்றும் பெண்கள்—இவர்களை வழிபடுவது மேலும் உயர்ந்தது. அவர்களை நினைவூட்டக்கூடிய பொருட்களை வழிபடுகிறார்கள். அந்தப் பொருட்களில் அவர்களின் சான்னித்தியம் இருக்கிறது என்றும், அவர்கள் தங்களுக்கு உதவுவார்கள் என்றும் நம்புகிறார்கள். ஒரு மகானின் எலும்பைத் தொட்டால் நோய் குணமாகும் என்று நம்புகிறார்கள். அந்த எலும்பு நோயைத் தீர்க்கிறது என்பது அல்ல, அந்த எலும்பிலிருக்கும் மகானே நோயைக் குணப்படுத்துகிறார் என்பதே அவர்களின் நம்பிக்கை. ...

இவை கீழான வழிபாட்டு முறைகள். ஆனால் இவைகளும் வழிபாடுகளே. நாமெல்லோரும் இவற்றைக் கடந்து சென்றாக வேண்டும். பகுத்தறிவால் பார்க்கும்போது இவை சரியல்ல. ஆனால் நமது இதயத்திலிருந்து இவற்றை அகற்றிவிட முடியாது. ஒருவன் வணங்கும் மகான்கள், மற்றவர்களின் உருவங்கள் எல்லாவற்றையும் அவனிடமிருந்து அப்புறப்படுத்துங்கள், கோயிலுக்குப் போவதற்கு அவனை அனுமதிக்காதீர்கள், அப்போதும் அவன் எல்லா தெய்வங்களையும் மனத்தில் கற்பனை செய்துகொள்வான், அவ்வாறு செய்துதான் ஆக வேண்டியிருக்கிறது. மேகங்களின்மீது அமர்ந்திருக்கும் நீண்ட தாடியுள்ள ஒரு கிழவராகத்தான் நம்மால் கடவுளைக் கற்பனை செய்ய இயல்கிறது என்றும், வேறு முறையில் எண்ணிப் பார்க்க இயலவில்லை என்றும், எண்பது வயதான கிழவர் ஒருவர் என்னிடம் கூறினார். இது எதைக் காட்டுகிறது? அவரது கல்வி முற்றுப் பெறவில்லை என்பதைத்தான். அவர் ஆன்மீக போதனை எதையும் பெறவில்லை. மனிதராக அல்லாமல் வேறு எவ்வகையிலும் அவரால் இறைவனைக் கற்பனை செய்ய முடியவில்லை.

இதைவிட உயர்ந்த வழிபாடு ஒன்றும் இருக்கிறது. அதுதான் சின்னங்களை வழிபடுவது. அங்கும் உருவங்கள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் அவை மரங்களோ கற்களோ

அல்ல, விக்கிரகங்களோ படங்களோ அல்ல, அடியார்களின் எஞ்சிய அடையாளங்களும் அல்ல. அவை சின்னங்கள். உலகம் முழுவதிலும் எத்தனையோ சின்னங்கள் இருக்கின்றன. எல்லை யற்றதன் ஒரு மாபெரும் சின்னம் வட்டம். சதுரம் இருக்கிறது, எல்லோரும் நன்கு அறிந்த சிலுவைச் சின்னம் இருக்கிறது. S, Z போன்ற வளைந்த இரண்டு ஒன்றுக்கொன்று குறுக்கே இருக்கும் சின்னம் இருக்கிறது.

சின்னங்கள் பொருளற்றவை என்று சிலர் எண்ணு கின்றனர். ...

சிலருக்கோ எவ்விதப் பொருளுமற்ற மாயஜாலங்கள் வேண்டும். தெளிவான, சாதாரண உண்மைகளைச் சொல் லுங்கள், அதை ஏற்க மாட்டார்கள். ... மனித இயல்பு இப்போது உள்ள அளவில், நீங்கள் சொல்வதில் எவ்வளவு குறைவாக அவர்கள் புரிந்து கொள்கிறார்களோ, அந்த அளவிற்கு உங் களைப் பெரியவர்கள் என்று எண்ணுகிறார்கள். இத்தகை யோர் சில படங்களினாலும் சின்னங்களினாலும் எல்லா நாடு களிலும் எப்போதும் ஏமாற்றப்படுகிறார்கள். வரைகணிதம் (Geometry) மிகப் பெரிய ஒரு விஞ்ஞானம். மிகப் பெரும் பாலோருக்கு அதில் எதுவும் தெரியாது. ஒரு வரைகணித மேதை ஒரு சதுரத்தை வரைந்து, அதன் நான்கு மூலைகளிலும் ‘சூ மந்திரக்காளி!’ என்று சொல்வானானால், இந்த உலகமே சுற்றும், சொர்க்கம் வழிவிடும், கடவுள் தாவிக் கீழே வந்து நமக்கு அடிமையாக இருப்பார் என்றெல்லாம் அவர்கள் எண்ணினார்கள். இன்றுகூட அல்லும்பகலும் இதைப்பற்றியே ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கும் பைத்தியங்கள் ஏராளம் உண்டு. இது ஒரு வகை வியாதி. இது சித்தர்கள் குணப்படுத்தக் கூடிய நோயல்ல, வைத்தியன் போக்க வேண்டிய நோய்.

நான் கிண்டல் செய்கிறேன், உண்மைதான். அதற்காக வருந்தவும் செய்கிறேன். இந்தப் பிரச்சினை இந்தியாவில் மிகவும் அதிகமாக உள்ளது. இது அந்த இனத்தின் அழிவிற்கு, தாழ்விற்கு அறிகுறி. வலிமையே ஆற்றலின் அறிகுறி, வாழ்வின் அறிகுறி, நம்பிக்கையின் அறிகுறி, உடல்நலத்தின் அறிகுறி, எவை நல்லனவோ அவை எல்லாவற்றிற்குமான அறிகுறி. இந்த உடல் உயிருடன் இருக்கும்வரை நமது உடலில் பலம் இருக்க வேண்டும், மனத்தில் வலிமை இருக்க வேண்டும், கையில் ஆற்றல் இருக்க வேண்டும். இந்த மாதிரி மாயாஜாலங்களின் மூலம் ஆன்மீகச் சக்தியைப் பெற வேண்டுமென்று நினைப்பதில்

பயம்தான், வாழ்க்கையைப் பற்றிய பயம்தான் அடிப்படையாக இருக்கிறது. அத்தகைய சின்னங்களைப் பற்றியல்ல நான் பேசுவது. ஆனால் சின்னங்களில் ஓரளவு உண்மை இருக்கிறது. பின்னணியில் ஏதோ ஓர் உண்மை இல்லாத பொய்யே இல்லை. ஏதோ உண்மை இல்லாமல் அதன் போலி இருக்கவே முடியாது.

எல்லா மதங்களிலும் மதச் சின்னங்கள் வாயிலாக நடைபெறுகின்ற வழிபாட்டுமுறை இருக்கிறது. புத்தம் புதிய, வலிமை வாய்ந்த, கவிதைநயம் பொருந்திய நல்ல சின்னங்கள் இருக்கின்றன. கோடிக்கணக்கான மக்களிடம் சிலுவை என்னும் சின்னத்திற்கு இருக்கின்ற அற்புதச் சக்தியை எண்ணிப் பாருங்கள். பிறைச் சின்னத்தை நினைத்துப் பாருங்கள், அதன் வசீகரச் சக்தியைச் சிந்தித்துப் பாருங்கள். சிறந்த மகத்தான சின்னங்கள் உலகம் முழுவதிலுமே இருக்கின்றன. அவை ஆன்மாவுக்கு விளக்கமளித்து, மனத்தில் சில குறிப்பிட்ட நிலையை ஏற்படுத்துகின்றன. பொதுவாக அளவற்ற நம்பிக்கை மற்றும் அன்பின் ஆற்றலை அவை நிச்சயமாக உண்டாக்குகின்றன.

பிராட்டஸ்டன்ட்களைக் கத்தோலிக்கர்களுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். கடந்த நான்கு நூற்றாண்டுகளில் அந்த இரு பிரிவுகளுமே இருந்திருக்கின்றன. ஆனால் எந்தப் பிரிவினர் அதிக மகான்களை, அதிக உயிர்த்தியாகிகளை உண்டாக்கியுள்ளனர்? கத்தோலிக்க மதத்திலுள்ள சடங்குகளுக்கும், அதன் சின்னங்களான விளக்கு, சாம்பிராணி, மெழுகுவர்த்தி, பாதிரிகளின் அங்கி போன்றவற்றிற்கு மிகப் பெரிய பலன் இருந்திருக்கிறது. பிராட்டஸ்டன்ட் மதம் கண்டிப்பானதாகவும், இனிமையற்றதாகவும் இருக்கிறது. அவர்கள் பல காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள். சில அம்சங்களில் கத்தோலிக்கர்களைவிட அதிகச் சுதந்திரம் அளித்திருக்கிறார்கள். எனவே அவர்களிடம் தெளிவான, தனிப்பட்ட கண்ணோட்டம் இருக்கிறது. இவையெல்லாம் நல்லனவே. ஆனால் அவர்கள் பலவற்றை இழந்துவிட்டார்களே!. ... சர்ச்சுகளிலுள்ள வண்ணச் சித்திரங்களை எடுத்துக் கொள்ளுங்கள். அவை ஒருவகைக் கவிதை. நமக்குக் கவிதைப் பசி இருக்கும்போது அவற்றை வைத்துக் கொண்டாலென்ன? உள்ளம் எதை விரும்புகிறதோ அதை அதற்குக் கொடுத்தால் என்ன? நமக்கு இசை வேண்டும். ஆனால் பிரெஸ்பிடீரியர்கள் இசையைக்கூட எதிர்த்தார்கள். இவர்கள் கிறிஸ்தவர்களில்

'முகமதியர்கள்', இவர்கள் 'கவிதை ஒழிக! சடங்குகள் ஒழிக!' என்று முழங்கினார்கள். இப்போது இவர்கள் பாடுகிறார்கள். அது புலன்களைக் கவர்கிறது. ஆலயப் பிரார்த்தனை மேடையிலிருந்து வரும் ஒளிக்கதிருக்காக இவர்கள் எவ்வாறு கூட்டமாகத் திரள்கிறார்கள் என்பதை நான் கண்டிருக்கிறேன்.

புறத்தில் உள்ள மத அனுஷ்டானங்களும், கவிதையும் உள்ளத்தில் நிறையட்டும். ஏன் கூடாது? [புற வழிபாட்டு முறையை] நீங்கள் எதிர்த்துப் போராட முடியாது. அது மீண்டும்மீண்டும் வெற்றியடைந்து மேலே வந்துவிடும். ... கத்தோலிக்கர்கள் செய்வது உங்களுக்குப் பிடிக்காவிட்டால், அவர்களைவிடச் சிறந்த காரியங்களைச் செய்யுங்கள். ஆனால் நாம் அப்படி நல்லது எதுவும் செய்யவும் மாட்டோம். ஏற்கனவே இருக்கின்ற கவிதையும் நமக்குப் பிடிக்காது. இது பயங்கரமான நிலைதான். கவிதை கட்டாயமாக வேண்டும். நீ உலகிலேயே மிகப் பெரிய அறிஞனாக இருக்கலாம். ஆனால் தத்துவமும் மிக உயர்ந்த கவிதையே. அது வெறும் சக்கையல்ல, அது பல விஷயங்களின் சாரம். உண்மை என்பது வேறெந்த துவைதக் கருத்துக்களைவிடவும் கவிதைநயம் மிக்கது.

புத்தகப் படிப்பிற்கு மதத்தில் இடமேயில்லை. பெரும்பாலோருக்கு படிப்பு ஒரு தடங்கலாகவே இருக்கிறது. ... ஒருவன் உலகிலுள்ள நூல் நிலையங்களின் நூல்களையெல்லாம் படித்திருக்கலாம், ஆனாலும் மதவாதியாக இல்லாமல் போகலாம். இன்னொருவன் தன் பெயரைக்கூட எழுதத் தெரியாதவனாக இருக்கலாம், அவன் மதத்தை உணர்ந்து அனுபவித்தவனாக இருக்கலாம். மதம் முழுவதுமே நம்முடைய சொந்த உள்ளறிவுதான். 'மனிதனை உருவாக்குகின்ற மதம்' என்று நான் சொல்லும்போது, நூல்கள், தத்துவங்கள், கொள்கைகள் எதையும் குறிப்பிடவில்லை, அனுபூதி பெற்ற மனிதனை எல்லையற்ற பரம்பொருளைத் தன் சொந்த இதயத்தில் பூரணமாகக் கண்டு உணர்ந்த மனிதனையே கூறுகிறேன்.

என்னுடைய வாழ்நாள் முழுவதும் யாருடைய காலடியில் நான் உட்கார்ந்திருந்தேனோ, அந்த மனிதருக்குத் தமது பெயரைக்கூடச் சரியாக எழுதத் தெரியாது. அவரது கருத்துக்களில் ஒரு சிலவற்றைத்தான் நான் இப்போது போதிப்பதில் முனைந்துள்ளேன். நானும் விரிந்த உலகம் முழுவதும் சுற்றியிருக்கிறேன். அப்படிப்பட்ட இன்னொருவரை என் வாழ்நாளிலேயே பார்த்ததில்லை. அந்த மனிதரை எண்ணும்போது, நான்

ஒரு முட்டாள்போல் உணர்கிறேன். ஏனெனில் நான் நூல்களைப் படிக்க விரும்புகிறேன்; அவர் ஒருபோதும் படித்ததில்லை. மற்றவர்களின் எச்சில் தட்டுகளை நக்கிப் பார்க்க அவர் விரும்பவில்லை. அதனால்தான் அவர் தமக்குத்தாமே ஒரு நூலாக விளங்கினார். குப்பனும் சுப்பனும் சொன்னதையே நான் என் வாழ்நாள் முழுவதும் திருப்பித்திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறேன், நான் எதையும் சொந்தமாகச் சொல்வதில்லை. குப்பன் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்போ, சுப்பன் ஐந்து ஆண்டுகளுக்கு முன்போ சொன்னதை அறிவதில் உங்களுக்கு என்ன பெருமை? நீங்கள் என்ன சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லுங்கள்.

படிப்பில் மதிப்பு எதுவும் இல்லை என்பது கவனத்தில் இருக்கட்டும். படிப்பு என்ன என்பதை நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். அறிவின் ஒரே நன்மை, மனத்தை உறுதிப்படுத்தி அதை ஒரு கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வருவதுதான். நூல்களில் உள்ளவற்றை எல்லாம் இடைவிடாமல் விழுங்கிக் கொண்டிருக்கிறோமே, நமக்கெல்லாம் அஜீரணம் வராதது விந்தைதான்! இதை நிறுத்துவோம். நூல்களையெல்லாம் எரிப்போம். நம்மை நாமே பற்றிக்கொண்டு சிந்தித்துப் பார்ப்போம். உங்கள் 'தனித்துவம்' போய்விடுமோ என்பது பற்றிப் பேசுகிறீர்கள், மனம் கலங்குகிறீர்கள். ஆனால் இவ்வாறு ஓயாமல் 'நூல்களை விழுங்குவதன்'மூலம், ஒவ்வொரு நொடியும் உங்கள் தனித்தன்மையை இழந்து கொண்டிருக்கிறீர்கள்.

உங்களுள் யாராவது நான் போதிப்பதை நம்பினால் அது எனக்கு வருத்தத்தையே தரும். சிந்தித்துப் பார்க்கும் சக்தியை உங்களுள் தூண்ட முடியுமானால் நான் மகிழ்வேன். ... ஆண், பெண் என்று மனிதர்களுடன் பேசவே எனக்கு ஆசை, ஆடுமாடுகளுடன் அல்ல. ஆண், பெண் என்னும்போது தனித்தன்மை படைத்தவர்களையே நான் குறிப்பிடுகிறேன். தெருக்களில் உள்ள அழுக்குக் கந்தல்களைப் பொறுக்கி எடுத்து, அவற்றை ஒரு பொம்மையாகச் சுற்றிக் கட்டுவதற்கு நீங்கள் குழந்தைகள் அல்ல.

'இந்த இடம் ஒரு கல்விக்கூடம். அவர் இந்தப் பல்கலைக் கழகத்திற்கு வந்துள்ளார்! மிஸ்டர் பிளாங்க் சொன்னவையெல்லாம், அவருக்குத் தலைகீழ்ப் பாடம்!'—எல்லாம் சரிதான். ஆனால் மிஸ்டர் பிளாங்க் எதைத்தான் சொல்லிவிட்டார்? ஒன்றுமே இல்லையே! எனக்கு மட்டும் சந்தர்ப்பம் கிடைத்தால்,

'வெளியே போய்விடுங்கள், உங்களுக்கு ஒன்றும் தெரியாது' என்று. ... அந்தப் பேராசிரியரிடம் கூறுவேன். என்ன வந்தாலும் சரி, இந்தத் தனித்தன்மையை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தவறாக வேண்டுமானாலும் சிந்தியுங்கள். உண்மையை நீங்கள் அறிய முடிகிறதோ இல்லையோ, அதைப்பற்றிக் கவலையில்லை.

மனத்தை ஓர் ஒழுங்கிற்குக் கொண்டுவர வேண்டுவது தான் அவசியம். மற்றவர்களிடமிருந்து வாங்கி 'விழுங்குகிறீர்கள்'. அது உங்களுடையதாகாது. வாய்மூலம் நீங்கள் போதிக்க இயலாது. அதேபோல் வாயிலிருந்து நீங்கள் உண்மையை அறிந்துகொள்ளவும் முடியாது. யாரும் மற்றவருக்குக் கற்பிக்க இயலாது. நீங்களே உண்மையை உணர வேண்டும்; உங்கள் இயல்புக்கு ஏற்ப நீங்களே அதனைச் செயல்படுத்தவும் வேண்டும். ...

எல்லோரும் தனித்தன்மை உள்ளவர்களாக விளங்க முயல வேண்டும். பலம் வாய்ந்தவர்களாக, சொந்தக்காலில் நிற்பவர்களாக, சுயமாகச் சிந்திக்கக்கூடியவர்களாக, தங்கள் ஆன்மாவை அறிபவர்களாகத் திகழ வேண்டும். மற்றவர்களின் கொள்கையை அப்படியே விழுங்குவதில் எந்தப் பயனும் இல்லை. சிறைக் காவலர்களைப் போல், ஒன்றாக எழுவதும் ஒன்றாக உட்காருவதும் ஒரே உணவை உண்பதும், ஒன்றாகத் தலையாட்டுவதும் எந்தப் பலனையும் தராது. மாறுதல்களே வாழ்க்கையின் அறிகுறி. மாறுதல்கள் இல்லாதிருப்பது மரணத்தின் அடையாளம்.

ஒருமுறை நான் இந்திய நகரம் ஒன்றில் இருந்தேன். அப்போது ஒரு முதியவர் என்னிடம் வந்தார்; 'சுவாமி, எனக்கு வழி காட்டுங்கள்' என்று கேட்டார். இதோ இருக்கும் இந்த மேஜையைப் போன்றே அவரிடம் எந்தத் துடிப்பும் இல்லாததை நான் கண்டேன். மனோரீதியாக, ஆன்மீகரீதியாக அவர் ஏற்கனவே செத்துவிட்டார். நான் கேட்டேன்: 'நான் சொல்வதை நீங்கள் செய்வீர்களா? உங்களால் திருட முடியுமா? உங்களால் மது அருந்த முடியுமா? உங்களால் இறைச்சி உண்ண முடியுமா?'

'என்ன போதிக்கிறீர்கள்?' என்று அவர் திகைப்புடன் என்னைக் கேட்டார்.

அதற்கு நான், 'இந்தச் சுவர் என்றாவது திருடியிருக்கிறதா? இந்தச் சுவர் எப்போதாவது மது அருந்தியிருக்கிறதா?' என்றேன்.

'இல்லை, சுவாமி' என்றார் அவர்.

'மனிதன் திருடுகிறான், மது அருந்துகிறான், இறை வனாகவும் மாறுகிறான். நீங்கள் இந்தச் சுவரல்ல என்பது எனக்குத் தெரியும். முதியவரே, ஏதாவது செய்யுங்கள், ஏதாவது செய்யுங்கள்' என்று நான் அவருக்குக் கூறினேன். அவர் திருடி னாரானால், அவரது ஆன்மா முக்தி வழியில் செல்லும் என் பதை நான் உணர்ந்தேன்.

நீங்களெல்லோரும் தனித்தன்மை படைத்தவர்கள் என் பதை நான் எவ்வாறு அறிவது? எல்லோரும் ஒன்றைத்தான் சொல்கிறீர்கள். எல்லோரும் ஒன்றுபோலவே எழுகிறீர்கள், உட்காருகிறீர்கள். இது மரணத்தின் வழி. உங்கள் ஆன்மாக் களுக்காக ஏதாவது செய்யுங்கள். வேண்டுமானால் தவறையே செய்யுங்கள், ஆனால் ஏதாவது செய்யுங்கள். உங்களால் இப்போது என்னைப் புரிந்துகொள்ள முடியாவிட்டால் நாள டைவில் சிறிதுசிறிதாகப் புரிந்து கொள்வீர்கள். ஆன்மா முதுமையடைந்துவிட்டது போன்றிருக்கிறது. அதில் துருப் பிடித்துவிட்டது. துருவைப் போக்க வேண்டும், அப்போது தான் நாம் முன்னேறுவோம். உலகில் ஏன் தீமை இருக்கிறது என்பதை இப்போது நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். வீட்டிற்குப்போய் இதைச் சிந்தித்துப் பாருங்கள். துருப்பிடித் திருப்பதை அகற்றுவதற்காகவாவது சிந்தியுங்கள்.

உலகப் பொருட்களுக்காக நாம் பிரார்த்திக்கிறோம். ஏதா வது ஒரு காரியத்தை நோக்கமாகக்கொண்டு, கடவுளை நாம் வழிபடுகிறோம். இது வியாபார வழிபாடு. உணவுக்காகவும் உடைக்காகவும் இறைவனைப் பிரார்த்தித்துக்கொண்டே போகி றீர்கள். வழிபாடு நல்லதுதான். ஒன்றுமே செய்யாமல் இருப் பதைவிட ஏதாவது செய்வது நல்லதுதான். 'மாமனே இல்லா திருப்பதைவிட, ஒரு குருட்டு மாமனாவது இருப்பது நல்லது அல்லவா?' செல்வந்தனான இளைஞன் நோயுறுகிறான். நோய் குணமாவதற்காகத் தானம் செய்கிறான். அது நல்லதுதான். ஆனால் அது மதம் அல்ல, கட்டாயமாக ஆன்மீக மதம் அல்ல. இவையெல்லாம் உலகியல் நிலையில் உள்ளவை. எது உலகியல்? எது உலகியல் அல்ல? உலகம்தான் லட்சியம், அதை அடை வதற்குக் கடவுள் ஒரு சாதனம் என்று கருதுவது உலகியல். கடவுள் லட்சியம், அதை அடைவதற்கு உலகம் ஒரு சாதனமாக மட்டும் கருதப்படும்போது, ஆன்மீகம் தொடங்குகிறது.

ஆகவே இந்த [உலகியல்] வாழ்வே போதும் என்ற எண் ணம் உள்ளவன் செல்கின்ற சொர்க்கங்கள் எல்லாம் அவனது

இந்த வாழ்வின் தொடர்ச்சியாகவே இருக்கும். இறந்தவர்கள் எல்லோரையும் பார்க்கவும், மீண்டும் அவர்களுடன் அளவளாவி மகிழவும் அவன் விரும்புகிறான்.

ஆவியுலக நடுவினரான (Medium) ஒரு பெண் இருந்தார். சற்று பருத்த சரீரம் உடையவர். அவர் என்னிடம் அதிக அன்பு வைத்திருந்தார். தமது இருப்பிடத்திற்கு என்னை அழைத்தார். ஆவிகளெல்லாம் என்னிடம் மரியாதையாக நடந்துகொண்டன. அங்கு எனக்கு ஒரு வினோதமான அனுபவம் ஏற்பட்டது. அப்போது நள்ளிரவு என்பதை நீங்கள் நினைவில்கொள்ள வேண்டும். அவர் சொன்னார்: 'இதோ ஒரு ஆவி நிற்பதை நான் காண்கிறேன். ''அந்த பெஞ்சின்மீது ஓர் இந்து கனவான் அமர்ந்திருக்கிறார்'' என்று அந்த ஆவி என்னிடம் சொல்கிறது.' 'இதைச் சொல்வதற்கு ஓர் ஆவி தேவையில்லை' என்று கூறி நான் எழுந்தேன்.

அங்கு ஓர் இளைஞனும் இருந்தான். அவன் திருமணமானவன், புத்திசாலி, நன்கு படித்தவன். இறந்த தன் தாயைக் காண அவன் அங்கு வந்திருந்தான். 'இன்னாருடைய தாய் இங்கு இருக்கிறார்' என்று நடுவினரான அந்தப் பெண் கூறினார். அந்த இளைஞர் தன் தாயைப்பற்றி என்னிடம் ஏற்கனவே சொல்லியிருந்தார். இறந்தபோது அவர் மிகவும் ஒல்லியாக இருந்தாராம். ஆனால் இங்கே திரையிலிருந்து வெளியே வந்தபோது!. ... அவளை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். அந்த இளைஞன் என்ன செய்வான் என்பதைப் பார்க்க நான் விரும்பினேன். என்ன ஆச்சரியம்! அவன் தன் இருப்பிடத்தை விட்டுத் தாவிக் குதித்து எழுந்தான், அந்த ஆவியைக் கட்டித் தழுவிக்கொண்டே, 'அம்மா, ஆவி உலகத்தில் நீ எவ்வளவு அழகாகப் பருத்திருக்கிறாய்!' என்று கூறினான்! 'நல்ல வேளையாக நான் இங்கு இருக்கிறேன். மனித இயல்பை ஊடுருவி நன்றாகத் தெரிந்துகொள்வதற்கு இது உதவுகிறது' என்று எனக்குள் நான் சொல்லிக் கொண்டேன்.

நாம் மீண்டும் புற வழிபாட்டிற்குத் திரும்புவோம். ... இந்த வாழ்வையும் உலகத்தையும் லட்சியமாகக் கொண்டு அதற்குக் கடவுளை ஒரு சாதனமாகக் கருதி வழிபடுவது கீழான வழிபாடு. இந்தச் சதைப் பிண்டத்திற்கும், உலக இன்பங்களுக்கும் அப்பாற்பட்ட உயர்ந்த எதைப்பற்றியும் பெரும்பாலோருக்கு எதுவும் தெரிவதே இல்லை. இந்த வாழ்க்கையில்கூட இந்த அப்பாவிகள் காணும் இன்பங்களெல்லாம்

மிருகங்கள் காணும் இன்பங்களே. ... இவர்கள் மிருகங்களை உண்கிறார்கள். தங்கள் குழந்தைகளை நேசிக்கிறார்கள். இவ் வளவுதானா மனிதனின் மகிமை? இதில் எல்லாம் வல்ல இறைவனை வேறு நாம் பிரார்த்திக்கிறோம். எதற்காக? உலகப் பொருட்களை நமக்குத் தருவதற்காகவும் அவற்றை எப்போதும் பாதுகாத்துக் கொடுப்பதற்காகவும். [மிருகங்கள்] மற்றும் பறவைகளின் நிலைக்கு அப்பால் நாம் செல்ல வில்லை என்பதையே இது காட்டுகிறது. நாம் அவற்றைவிட உயர்ந்தவர்கள் அல்ல. பெரிதாக நமக்கு எதுவும் தெரியாது. கடவுள்தான் நம்மைக் காக்க வேண்டும். இதைவிட உயர்ந்ததை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். மிருகங்களுக்கும் நமக்கும் உள்ள ஒரே வேறுபாடு, நமக்கு இருப்பதுபோல் ஒரு கடவுள் அவற்றிற்கு இல்லை என்பதுதான். [அவற்றைப் போன்று] நமக்கும் ஐம்புலன்கள் இருக்கின்றன. அவற்றின் புலன்கள் நமது புலன்களைவிடச் சிறந்தவை. நாய் ஓர் எலும்பை எவ்வளவு சுவையுடன் கடிக்கிறதோ அந்தச் சுவையோடு நாம் ஒரு கவள உணவை உட்கொள்ள முடியாது. வாழ்க்கையில் நம்மைவிட அவற்றிற்கு அதிக இன்பம் இருக்கிறது. ஆகையால் மிருகங் களைவிட நாம் ஓரளவு தாழ்ந்தவர்களே.

இயற்கையில் உள்ள ஏதாவதொரு சக்தி உங்களைவிட நன்றாகச் செய்யக்கூடிய ஒரு காரியத்தை, நீங்களும் ஏன் செய்ய விரும்புகிறீர்கள்? நீங்கள் சிந்திக்க வேண்டிய மிக முக்கியமான பிரச்சினை இது. உங்களுக்கு என்னதான் வேண்டும்? இந்த வாழ்க்கையா? இந்தப் புலன்களா? இந்த உடலா? அல்லது இவற்றைவிட எல்லையற்ற உயர்ந்த, சிறந்த ஒன்றா? எதிலிருந்து உங்களுக்கு வீழ்ச்சி இல்லையோ, எதை அடைந்தால் மீண்டும் மாறுதல் இல்லையோ அதுவா?

இதன் பொருள் என்ன? 'எம்பெருமானே, எனக்கு உணவைத் தா, பணத்தைத் தா, என்னுடைய நோய்களைக் குணப்படுத்து, இதைச் செய், அதைச் செய்' என்று கூறுகிறீர்கள். ஒவ்வொரு தடவை இவ்வாறு நீங்கள் சொல்லும் போதும், 'நான் ஜடப்பொருள், இந்த ஜடப்பொருளே என் லட்சியம்' என்ற எண்ணத்தில் உங்களை மனவசியம் செய்து கொள்கிறீர்கள். உலகியல் ஆசை ஒன்றை நிறைவேற்ற நீங்கள் முயலும்போதெல்லாம், 'நான் இந்த உடம்புதான்; ஆன்மாவல்ல' என்று உங்களுக்குள்ளேயே எண்ணிக்கொள் கிறீர்கள்.

இது ஒரு கனவாக இருக்கிறதே அதற்காக ஆண்டவனுக்கு நன்றி கூறுவோம்! இது மறைந்துபோகும் என்பதற்காக இறைவனுக்கு நன்றி கூறுவோம். மரணம், மகத்தான அந்த மரணம் இருக்கிறதே, அதற்காகக் கடவுளுக்கு நன்றி கூறுவோம்! ஏனெனில் அது அல்லவா இந்த மனமயக்கத்திற்கு, இந்தக் கனவிற்கு, இந்த உடற்பற்றுக்கு, இந்தக் கடுந்துயரத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கிறது! எந்தக் கனவும் நிலையானதாக இருக்க முடியாது. எப்போதாவது அது கலைந்துதான் ஆக வேண்டும். தன் கனவு கலையாமல் நிரந்தரமாக வைத்திருக்கக்கூடியவர் உலகில் யாரும் இல்லை. அதற்காக நான் இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன். ஆனாலும் இந்த வழிபாட்டுமுறை சரியானதுதான். தொடர்ந்து செய்யுங்கள். ஒன்றும் செய்யாமலிருப்பதைவிட ஏதாவது ஒன்றுக்காகப் பிரார்த்தனை செய்வது சிறந்ததே. நாம் கடந்து செல்கின்ற கட்டங்களே இவையெல்லாம். இவையெல்லாம் ஆரம்பப் பாடங்கள். இந்தப் புலன்களைவிட உயர்ந்த ஒன்றை, இந்த உடலையும் உலக இன்பங்களையும்விட உயர்ந்த ஒன்றை மனம் படிப்படியாகச் சிந்திக்க ஆரம்பிக்கிறது.

இதை [மனிதன்] எவ்வாறு செய்கிறான்? முதலில் அவன் ஒரு சிந்தனையாளனாகிறான். நீங்கள் ஒரு விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கும்போது, அங்குப் புலனின்பம் எதுவும் இல்லை. அதற்குப் பதிலாகச் சிந்தனையால் விளையும் உன்னதமான மகிழ்ச்சி இருக்கிறது. ... அதுதான் மனிதனை உருவாக்குகிறது. ... ஒரு பெரிய கருத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அது ஆழமாக ஆழமாக ஒருமைப்பாடு உருவாகிறது. அப்போது உங்கள் உடம்பை நீங்கள் உணர்வதில்லை. உங்கள் புலன்களெல்லாம் நின்றுவிடுகின்றன. புலன்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட மேலான நிலைக்கு நீங்கள் வந்துவிடுகிறீர்கள். புலன்களின் மூலமாக வெளிப்பட்ட எல்லாமே இப்போது அந்த ஒரே கருத்தில் ஒருமுகப்பட்டு விடுகின்றன. அந்தக் கணமே நீங்கள் மிருகத்தைவிட உயர்ந்தவர்கள் ஆகிறீர்கள். வேறு யாரும் உங்களிடமிருந்து பறித்துவிட முடியாத ஒரு நேரடியான அனுபவத்தை, உடலைவிட உயர்ந்த ஒன்றின் நேரடி அனுபவத்தை நீங்கள் பெறுகிறீர்கள். ... அதில்தான் மனத்தின் குறிக்கோள் இருக்கிறது; புலன்களின் தளத்தில் இல்லை.

இவ்வாறு புலன்களின்மூலமாகத் துவங்கி, நீ படிப்படியாக உயர்ந்த உலகங்களுக்குள் நுழையும் தகுதி பெறுகிறாய்.

அந்த நிலையில் உலகம் உன்னிடமிருந்து மறைகிறது. ஆன்மாவின் ஒரு காட்சி உனக்குக் கிடைக்கிறது. அதன்பின் உன் புலன்கள், புலனின்பங்கள், உடல்மீது நீ வைத்துள்ள பற்று எல்லாமே பறந்தோடிவிடும். ஆன்மீக உலகின் அற்புதக் காட்சிகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வரும். நீ யோக நிலையை அடைவாய். ஆன்மா ஆன்மாவாக உனக்குத் தன்னை வெளிப்படுத்தும். அதன்பிறகு கடவுளை ஆன்மாவாக வழி படத் தொடங்குவாய். ஏதோ ஒரு லாபத்திற்காகச் செய்யப் படுவது வழிபாடு அல்ல என்பதையும் அப்போது புரிந்து கொள்வாய். எல்லைக்கு அப்பாற்பட்டதானாலும் எல்லைக்கு உட்பட்டதாக இருக்கிறதே அன்பு, அதுதான் நமது மனப் பூர்வமான வழிபாடு ஆகும். அன்புதான் ஆண்டவனின் கமலப் பாதங்களில் ஆன்மா செய்கின்ற நிரந்தரத் தியாகம். 'நீ தான் எல்லாம், நான் அல்ல. நான் மடிந்துவிட்டேன். நீ இருக் கிறாய். நான் இல்லை. எனக்குச் சொத்து வேண்டாம், அழகு வேண்டாம், படிப்புக்கூட வேண்டாம். முக்தியும் எனக்குத் தேவையில்லை. உனது விருப்பம் அதுவானால், இரண்டு கோடி நரகங்களில் வாழவும் நான் தயார். ஆனால் இறைவா! நீ என் அன்பனாக இருப்பாயாக! நான் வேண்டுவதெல்லாம் அது ஒன்றுதான்.' ❈

## 6. தெய்விக அன்பு

12 ஏப்ரல் 1900

[அன்பை ஒரு முக்கோணமாக உருவகப்படுத்தலாம். அதன் முதல் கோணமாவது] அன்பு கேள்வி கேட்காது; அது பிச்சைக்காரன் அல்ல. ... பிச்சைக்காரத்தனமான அன்பு, அன்பே அல்ல. அன்பு எதையும் கேட்பதில்லை. மாறாக அது எல்லாவற்றையும் கொடுக்கிறது. இதுதான் அன்பின் முதல் அடையாளம். அன்பின்மூலம் வழிபாடு செய்வதே உண்மையான ஆன்மீக வழிபாடு. கடவுள் இரக்கம் உள்ளவரா என்ற கேள்வியே இங்கு எழுவதில்லை. அவர் கடவுள், அவர் எனது அன்பர். அவர் எல்லாம் வல்லவரான சர்வ சக்தி வாய்ந்தவரா, ஓர் எல்லைக்கு உட்பட்டவரா, உட்படாதவரா என்ற கேள்விகளுக்கும் இங்கே இடமில்லை. அவர் நல்லது செய்தால் நல்லது. தீமை செய்தாலும் அதனால் என்ன? எல்லையற்ற அந்த அன்பைத்தவிர மற்ற எல்லா குணங்களும் மறைகின்றன.

பண்டைய இந்தியச் சக்கரவர்த்தி ஒருவர் காட்டில் வேட்டையாடச் சென்றபோது ஒரு மாமுனிவரைச் சந்தித்தார். அந்த முனிவரால் மிகவும் கவரப்பட்டு, அவரைத் தம் தலை நகருக்கு வந்து, தம்மிடமிருந்து சில பரிசுகள் வாங்கிச் செல்லுமாறு வற்புறுத்தினார். [முதலில்] முனிவர் மறுத்தார். மன்னர் வற்புறுத்தவே, இறுதியில் அரண்மனைக்குச் சென்றார். அவரது வருகை மன்னருக்குத் தெரிவிக்கப்பட்டது. 'சற்று பொறுங்கள், இதோ எனது பிரார்த்தனையை முடித்துக்கொண்டு வந்துவிடுகிறேன்' என்று கூறிப் பிரார்த்தனையில் அமர்ந்தார் மன்னர். 'இறைவா, எனக்கு அதிக சொத்தும், அதிக நாடும், உடல்நலமும், குழந்தைகளும் தந்தருள்வாய்' என்று பிரார்த்தனை செய்தார். அப்போது முனிவர் எழுந்து வெளியே செல்லத் தொடங்கினார். அதைக் கண்ட மன்னர், 'நீங்கள் பரிசு வாங்கிக் கொள்ளவில்லையே?' என்று கேட்டார். அதற்கு முனிவர், 'பிச்சைக்காரர்களிடம் நான் யாசகம் கேட்பதில்லை. ''நிலம் வேண்டும், பணம் வேண்டும், இது வேண்டும், அது வேண்டும்''

என்று நீங்கள் இவ்வளவு நேரம் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தீர்கள். உங்களால் எனக்கு என்ன கொடுக்க இயலும்? முதலில் சொந்தத் தேவைகளை நீங்கள் பூர்த்தி செய்துகொள்ளுங்கள்' என்று சொன்னார்.

அன்பு ஒருபோதும் எதையும் கேட்பதில்லை, அது எப்போதும் கொடுக்கிறது. ... ஓர் இளைஞன் தனது காதலியைச் சந்திக்கச் செல்கிறான். ... அங்கே வியாபார உறவு முறை எதுவும் இல்லை. அவர்களது உறவு அன்புமயமானது. அன்பு எதையும் யாசிப்பதில்லை. [அதுபோலவே] உண்மையான ஆன்மீக வழிபாட்டின் ஆரம்பம் பிச்சை கேட்பது அல்ல என்பதை நாம் அறிந்து கொள்ளலாம். 'பெருமானே! இதைத் தா, அதைத் தா' என்றெல்லாம் யாசிப்பதை முற்றிலுமாக நிறுத்திய பின்னரே மதம் தொடங்குகிறது.

அன்பின் இரண்டாவது கோணம்: அன்பு பயம் அறியாதது என்பதே. நீங்கள் என்னைத் துண்டுதுண்டாக வெட்டிப் போடலாம். அப்பொழுதும் நான் உங்களை நேசிப்பேன். இங்குள்ள தாய்மார்களில் அவ்வளவு வலிமையில்லாத ஒருவர் தெருவில் செல்கிறார், திடீரென ஒரு புலி வந்து அவரது குழந்தையைத் தாக்குகிறது. அந்தத் தாய் என்ன செய்வாள்? புலியைத் தைரியமாக எதிர்த்துச் சண்டையிடுவாள். மற்றொரு சமயம் இதே பெண் தெருவில் குரைத்துக்கொண்டு வரும் நாயைக் கண்டு பறந்தோடியிருப்பாள். இவளே புலியின் முன்னே தாவிச் சென்று தனது குழந்தையைக் காப்பாற்றியவள். அன்பு பயம் அறியாது. எல்லா தீமையையும் எதிர்த்து அது வெற்றி காண்கிறது. கடவுள்மீது நாம் கொள்கின்ற பயம்தான் மதத்தின் துவக்கம்; அவர்மீது கொள்ளும் அன்பே மதத்தின் முடிவு. இங்கு பயம் அனைத்தும் பறந்துவிட்டது.

அன்பே அன்பின் நோக்கமும் முடிவும்—இது [அன்பு முக்கோணத்தின்] மூன்றாவது கோணம். அன்பு ஒரு சாதனம் அல்ல. 'இன்ன காரியத்திற்காக உன்னை நேசிக்கிறேன்' என்பவன் நேசிப்பதில்லை. அன்பு ஒருபோதும் சாதனமாக இருக்க முடியாது, நிறைவு செய்கின்ற குறிக்கோள் அது. அன்பின் முடிவும் குறிக்கோளும் எது? இறைவனை நேசிப்பது, அவ்வளவுதான். இறைவனை ஏன் நேசிக்க வேண்டும்? 'ஏன்' என்ற கேள்விக்கே இங்கு இடமில்லை. ஏனெனில் அது ஒரு சாதனம் அல்ல. ஒருவர் அன்பு செலுத்த முடியுமானால் அதுவே முக்தி, அதுவே நிறைநிலை, அதுவே சொர்க்கம்

எல்லாம். இதற்குமேல் என்ன வேண்டும்? இதைத்தவிர வேறு என்னதான் லட்சியமாக இருக்க முடியும்? அன்பைவிட உயர்ந்ததாக வேறு எதைத்தான் நீங்கள் கொள்ள முடியும்?

அன்பு என்னும்போது சாதாரணமாக நாம் என்ன பொருள் கொள்கிறோமோ அதை நான் இங்குக் குறிப்பிடவில்லை. இந்த வளவள கொளகொள அன்பும் பரவாயில்லை, நன்றாகத்தான் இருக்கிறது. ஆண் பெண்ணைக் காதலிக்கிறான், அவனுக்காக அவள் சாகவும் துணிகிறாள். நல்லது. இதற்கு மற்றொரு பக்கமும் இருக்க முடியும். ஐந்தே நிமிடங்களில் அவன் அவளை உதறிவிடலாம், அல்லது அவள் அவனை விட்டு விலகலாம். இது உலகியல், அன்பு அல்ல. உண்மையில் அவளை அவன் காதலிக்க முடியுமானால், அந்தக் கணமே அவன் நிறை மனிதனாகிவிடுவான். [அவனது உண்மையான] இயல்பே அன்புதான். அவன் தன்னளவில் நிறைமனிதன்தான். மதத்தையோ, மனஇயலையோ, தத்துவங்களையோபற்றி ஓர் எழுத்துக்கூட அவன் அறியாமல் இருக்கலாம். ஆனால் அவளைக் காதலிப்பதன்மூலமே, யோகத்தினால் கிடைக்கும் சக்திகளை எல்லாம் அவன் அடைவான். ஓர் ஆணும் பெண்ணும் உண்மையிலேயே ஒருவரை ஒருவர் காதலிக்க முடியுமானால், யோகிகள் தங்களுக்குக் கிடைத்திருப்பதாகக் கூறும் எல்லா சக்திகளையும் அவர்கள் அடைவார்கள் என்று நான் நம்புகிறேன். ஏனெனில் அன்பே கடவுள். கடவுளோ எங்கும் நிறைந்தவர். [ஆகையால்] உங்களுக்குத் தெரிந்தாலும் தெரியாமல் போனாலும் அந்த அன்பு உங்களிடம் உள்ளது.

அன்றொரு நாள் மாலை. ஓர் இளைஞன் ஒரு பெண்ணிற்காகக் காத்திருப்பதைக் கண்டேன். ... இந்தப் பையனை ஆராய்வது ஒரு நல்ல படிப்பினையாகும் என்று எண்ணினேன். தனது காதல் வேகத்தினால், வெகுதூரத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பார்க்கவும், அங்குப் பேசுவதைக் கேட்கவும் சக்தி பெற்றிருந்தான் அவன். அந்தப் பெண் சுமார் இருநூறு மைல் தூரத்திற்கு அப்பால் இருந்தாள். ஆனாலும் இந்த இளைஞன் அறுபது எழுபது தடவை அவளைப்பற்றிக் கூறிய தகவல்கள் முற்றிலும் சரியாக இருந்தன. 'அவள் இன்ன உடை உடுத்தியிருக்கிறாள், இந்த இடத்திற்குப் போகிறாள்' என்று சரியாகச் சொன்னான். இதை என் கண்ணாலேயே நான் கண்டேன்.

கேள்வி இதுதான்: உங்கள் கணவன் கடவுள் அல்லவா? உங்கள் குழந்தை கடவுள் அல்லவா? உங்களால் உங்கள்

மனைவியை நேசிக்க முடியுமானால், உலக மதங்கள் எல்லாவற்றின் சாரமும் உங்களிடம் உள்ளது; மத ரகசியம், யோகம் எல்லாவற்றையும் நீங்கள் அறிந்துவிட்டீர்கள். ஆனால் உங்களால் நேசிக்க முடியுமா? இதுதான் கேள்வி: 'நான் நேசிக்கிறேன், மேரி, உன்னை நான் நேசிக்கிறேன். உனக்காக உயிரையும்விடுவேன்' என்று சொல்கிறீர்கள். ஆனால் மேரி வேறொருவனை முத்தமிடுவதைக் கண்டால் போதும், அவனது தலையைச் சீவ நினைக்கிறீர்கள். ஜான் வேறொரு பெண்ணிடம் பேசிக் கொண்டிருப்பதை மேரி பார்த்துவிட்டால் அவளால் அன்றிரவு தூங்க முடியாது. ஜானின் வாழ்க்கையையே ஒரு நரகமாக்கிவிடுவாள் அவள். இது அன்பு அல்ல. இது வியாபாரம், காமம் சம்பந்தமான விற்பனை. இதை அன்பு என்று கூறுவது பழிச்சொல்.

இருபத்துநான்கு மணி நேரமும் கடவுள், மதம் என்றெல்லாம் பேசுகிறார்கள், அன்பைப் பற்றியும் அளக்கிறார்கள். எல்லாம் வெளிவேடம், செய்வதும் அதைத்தான். எல்லோரும் அன்பைப்பற்றிப் பேசுகிறீர்கள். ஆனால் தினமும் பத்திரிகைகளில் விவாகரத்துக்களைப்பற்றி அல்லவா படிக்கிறோம்! ஜானை நேசிக்கிறாய் என்றால், ஜானுக்காக அவனை நேசிக்கிறீர்களா, உங்களுக்காகவா? [உங்களுக்காக என்றால்] ஜானிடமிருந்து ஒன்றை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். [அவனுக்காக என்றால்] அவனிடமிருந்து எதையும் எதிர்பார்க்க மாட்டீர்கள். அவன், தான் விரும்பியதுபோல் எப்படி நடந்துகொண்டாலும், நீங்கள் எப்போதும் போலவே அவனை நேசிப்பீர்கள்.

மேலே குறிப்பிட்டவை [அன்பு] முக்கோணத்தின் படி மூன்று புள்ளிகள், மூன்று கோணங்கள். அன்பு இல்லாத தத்துவம் வெறும் வறட்டுச் சக்கை; ஒருவகை மனஇயல் கொள்கை; வேலை, கேவலம் கூலி வேலை. அன்பு இருந்தாலோ தத்துவம் கவிதையாக மலர்கிறது, மனஇயல் இறையியல் (Mysticism) ஆகிறது, வேலை என்பது உலகிலேயே இன்பமானதாகிறது.

வெறும் புத்தகங்களைப் படிப்பதால் மனிதன் வறட்சி அடைகிறான். படித்தவன் யார்? துளியளவாவது அன்பை உணர்பவனே படித்தவன். கடவுளே அன்பு, அன்பே கடவுள். கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார். கடவுளே அன்பு என்பதையும் அவர் எங்கும் நிறைந்தவர் என்பதையும் உணர்ந்துவிட்டால் ஒருவனுக்குத் தலைகால் தெரிவதில்லை. மது உண்ட

நிலையை அவன் அடைகிறான். அவன் எங்கிருக்கிறான் என்பதே அவனுக்குத் தெரிவதில்லை. இறைவனுக்காகப் பத்து நிமிடங்கள் நம்மால் அழ முடியுமானால், அடுத்த இரண்டு மாதங்களில் நாம் எங்கிருப்போம் என்பது நமக்கே தெரியாது. ... உணவு அருந்தும் நேரத்தைக்கூட நாம் மறந்துவிடுவோம். நாம் என்ன சாப்பிடுகிறோம் என்பதே நமக்குத் தெரியாது. ... இறைவனையும் நேசித்துக்கொண்டு, அதேவேளையில் இவ்வளவு நேர்த்தியாகவும் வியாபார ரீதியிலும் எவ்வாறு உங்களால் இருக்க முடியும்? எல்லாவற்றையும் வெற்றிகொள்ளும் சர்வசக்தி வாய்ந்த அன்பு எவ்வாறு உங்களிடம் வர முடியும்?. ...

மற்றவர்களை எடை போடாதீர்கள். எல்லாம் பைத்தியம். குழந்தைகளுக்குத் தங்கள் விளையாட்டின்மீது பைத்தியம். இளையவர்களுக்கு இளையவர்கள்மீது பைத்தியம். வயதானவர்களுக்குக் கடந்த காலத்தை அசைபோடுவதில் பைத்தியம். சிலருக்குப் பொன்னின்மீது பைத்தியம். சிலர் ஏன் கடவுள்மீது பைத்தியம் கொள்ளக் கூடாது? ஆணும் பெண்ணும் ஒருவர்மீது ஒருவர் பித்துக்கொள்வதுபோல் கடவுள் மீதும் பைத்தியம் கொள்ளுங்கள். 'நாங்கள் இதை விட்டுவிட வேண்டுமா? அதை விட்டுவிட வேண்டுமா?' என்று சிலர் கேட்கின்றனர். 'நான் திருமணம் செய்துகொள்ளாமலிருக்க வேண்டுமா?' என்று ஒருவர் கேட்டார். நீங்கள் எதையும் விட வேண்டாம்! எல்லாம் உங்களை விட்டுவிடும். பொறுத்திருங்கள். நீங்கள் அவற்றை மறந்துவிடுவீர்கள்.

[முழுமையாக] தெய்வீக அன்பாக மாறிவிடுவதுதான் உண்மையான வழிபாடு! ரோமன் கத்தோலிக்க சர்ச்சில் இதை நீங்கள் அவ்வப்போது ஓரளவு காணலாம். பாதிரிகள் மற்றும் கன்னியர் அற்புதத் தெய்வீக அன்பில் தோய்ந்து போவதை நீங்கள் காணலாம். உங்களுக்கு இப்படிப்பட்ட அன்பு இருக்க வேண்டும். இறைவனிடம் இத்தகைய அன்பு கொள்ள வேண்டும்—எதையும் கேட்கக் கூடாது, எதையும் நாடிச் செல்லக் கூடாது. ...

எவ்வாறு வழிபடுவது என்ற கேள்வி எழுகிறது. உங்கள் உடைமைகளிலேயே உங்கள் நெஞ்சுக்கு உகந்த உடைமையாக, உங்கள் உறவினர் எல்லாரினும் நெருங்கியவராக, உங்கள் குழந்தைகளைவிட அன்பிற்கு உரியவராக அவரை வழிபடுங்கள். அன்பின் உருவமாக எண்ணி வழிபடுங்கள். எல்லையற்ற அன்பு அவரது பெயர். இது ஒன்றே அவரைப்பற்றிய விளக்கம்.

இந்தப் பிரபஞ்சமே அழிந்துவிட்டாலும். ... கவலைப்படாதீர்கள். அவர் எல்லையற்ற அன்புள்ளவராக இருக்கும்வரை நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? வழிபாடு என்னவென்று தெரிகிறது, மற்ற எண்ணங்கள் எல்லாம் மறைய வேண்டும், கடவுளைத் தவிர எல்லாம் மறைய வேண்டும். தகப்பன் அல்லது தாய்க்குக் குழந்தைமீது உள்ள பாசம், கணவனுக்கு மனைவி மீதும் மனைவிக்குக் கணவன்மீதும் உள்ள காதல், நண்பர்களுக்கிடையே உள்ள நட்பு—இவையனைத்தும் ஒன்றாகத் திரண்ட பேரன்பை இறைவன்மீது செலுத்த வேண்டும். ஒருத்தி ஒருவனை நேசித்தால் மற்றொருவனை அவளால் நேசிக்க முடியாது. ஒருவன் ஒரு பெண்ணை நேசிப்பானானால் மற்றொருத்தியை அவன் நேசிக்க இயலாது. இது அன்பின் இயல்பு.

எனது குருதேவர் கூறுவார்: 'இந்த அறையில் ஒரு பை நிறைய பொற்காசுகளும் அடுத்த அறையில் ஒரு திருடனும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இந்த அறையில் பொற்காசுப் பை இருப்பது திருடனுக்கு உறுதியாகத் தெரியுமானால் அவனால் தூங்க முடியுமா? நிச்சயமாக முடியாது. இந்தப் பொற்காசுகளை எப்படி எடுப்பது என்பதுபற்றித் தான் அவன் நாள் முழுவதும் சிந்தித்துக் கொண்டிருப்பான். ... அதைப்போலவே ஒருவன் இறைவனை நேசிப்பானானால் வேறு ஒன்றை அவனால் எவ்வாறு நேசிக்க முடியும்? அந்தத் தெய்வீக அன்பு என்னும் மாபெரும் சக்தியின் முன் வேறு எதுதான் நிற்க இயலும்? [அதன் முன்] மற்றவையெல்லாம் மறைந்துவிடும். அந்த அன்பைக் கண்டு, உணர்ந்து, அதில் வாழும் மனம் பித்துப்பிடிக்காமல் எப்படி இருக்க முடியும்?

கடவுள்மீது நாம் அன்பு செலுத்த வேண்டிய முறை இதுவே: 'எனக்குச் செல்வம் வேண்டாம், [நண்பர்களோ அழகோ] உடைமை வேண்டாம், கல்வி வேண்டாம், முக்தியும் வேண்டாம். உன் திருவுள்ளம் அதுவானால் ஆயிரம் முறை இறக்கவும் சித்தமாக உள்ளேன். ஆனால் ஒன்றுமட்டும் அருள்வாய்—நான் உன்னை நேசிக்க வேண்டும், அதுவும் அன்பிற்காக அன்பு செலுத்த அருள்வாய்! உலகியல் மனிதன் உலகப் பொருட்களின்மீது வைத்திருக்கும் ஆசை எனக்கு ஏற்படட்டும்—உலகியல் பொருட்களுக்காக அல்ல, அழகின் வடிவான உன்னை நேசிப்பதற்காக! இறைமகிமை ஓங்கட்டும்! அன்பின் வடிவான அவன் புகழ் ஓங்கட்டும்.' கடவுள், அன்பைத் தவிர வேறு எதுவுமே அல்ல. யோகிகள் செய்கின்ற

அற்புதச் செயல்களை அவர் பொருட்படுத்துவதில்லை. செப்படி வித்தைக்காரர்கள் சிறுசிறு வித்தைகள் செய்கிறார்கள். ஆனால் கடவுள் பெரிய மந்திரவாதி. அவரால் எல்லா ஜால வித்தையும் செய்ய முடியும். இந்தப் பிரபஞ்சத்தில் எத்தனை உலகங்கள் இருந்தால் என்ன? அதைப்பற்றி யாருக்குக் கவலை?...

மற்றொரு [வழி] இருக்கிறது. அதுதான் அனைத்தையும் வெற்றிகொள்வது, ஒவ்வொன்றையும் நமது கட்டுப்பாட்டின் கீழே கொண்டுவருவது—உடலையும் மனத்தையும் வெற்றி கொள்வதே வழி; ஆனால் 'ஒவ்வொன்றையும் அடக்குவதால் என்ன பயன்? என் தொடர்பு கடவுளுடன் மட்டுமே' [என்று பக்தன் கூறுகிறான்.]

ஒரு யோகி இருந்தார். அவர் ஒரு பெரிய பக்தர். அவருக்குத் தொண்டையில் புற்றுநோய் ஏற்பட்டு மரணப்படுக்கையில் கிடந்தார். மற்றொரு யோகி வந்து அவரைப் பார்த்தார். வந்தவர் ஒரு தத்துவ அறிஞர். அவர் அந்த பக்தரிடம், 'நண்பரே, உங்கள் மனத்தைத் தொண்டைப் புண்மீது செலுத்தி அதை நீங்கள் ஏன் குணப்படுத்தக் கூடாது?' என்று [இருமுறை] கேட்டார். மூன்றாவது முறையாகக் கேட்டபோது அந்த மகா யோகி, 'நான் ஏற்கனவே இறைவனிடம் பரிபூரணமாக அர்ப்பணித்துவிட்ட மனத்தைக் கேவலம் இந்த உடல்கூட்டின் மீது செலுத்த முடியும் என்று நினைக்கிறீர்களா?' என்று கேட்டார். தேவதைகளின் பெருங்கூட்டத்தைத் தமது உதவிக்கு அழைத்துக்கொள்ள ஏசு மறுத்துவிட்டார். 'இன்னும் இரண்டு மூன்று நாட்கள் அதிகம் வாழ்வதற்காக, இருபதாயிரம் தேவதைகளை அழைத்துவரும் அளவுக்கு இந்த உடல் அவ்வளவு மேலானதா என்ன?' என்று கேட்டார் அவர்.

உலகக் கண்ணோட்டத்தில் இந்த உடம்பே எனக்கு எல்லாம். என்னுடைய உலகமே இந்த உடல்தான். இந்த உடலே எனக்குக் கடவுள். நான் இந்த உடல். நீங்கள் என்னைக் கிள்ளினால் எனக்கு வலிக்கிறது. ஒரு தலைவலி வந்தால் போதும், கடவுளை நான் மறந்துவிடுகிறேன். நானே இந்த உடல்தானே? கடவுளானாலும் சரி, வேறு யாரானாலும் சரி, உடல் என்னும் இந்த உயரிய லட்சியத்தின் பொருட்டுக் கீழே இறங்கி வர வேண்டும். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், ஏசுநாதர் சிலுவையில் மாண்டபோது [தமது உதவிக்குத்] தேவதைகளை அழைக்காதது அறிவீனம். அவர் தேவதைகளை அழைத்துச் சிலுவையிலிருந்து விடுபட்டிருக்க வேண்டும். ஆனால்

பக்தனின் கண்கொண்டு பார்த்தால் அவனுக்கு இந்த உடல் ஒன்றுமே இல்லை. இந்த அற்ப உடலுக்காக யார் கவலைப் படுவார்? வந்து போய்க்கொண்டிருக்கின்ற இந்த உடலைப்பற்றி ஓயாமல் சிந்தித்து ஏன் தொல்லைப்பட வேண்டும்? ரோமா னியப் படைவீரர்கள் போட்டுக் கழற்றும் துணிகளைவிட அதிக மதிப்பு இதற்கு இல்லை.

உலகப் பார்வைக்கும் பக்தனின் பார்வைக்கும் பெரிய வேறுபாடு இருக்கிறது. அன்பு செலுத்திக்கொண்டே இருங்கள். ஒருவன் கோபமாக இருக்கிறான் என்பதற்காக நீங்களும் ஏன் கோபப்பட வேண்டும்? ஒருவன் தன்னைத் தாழ்த்திக்கொண் டான் என்பதற்காக, நீங்களும் உங்களைத் தாழ்த்திக்கொள்ள வேண்டும் என்பதில்லை. ... ஒருவன் முட்டாள்தனமாக நடக் கிறான் என்பதற்காக நாம் ஏன் கோபப்பட வேண்டும்? தீமை யைத் தடுக்காதீர்கள். இப்படித்தான் பக்தர்கள் சொல்கிறார்கள். உலகம் என்ன செய்தாலும், அது எந்தப் போக்கில் போனாலும் அவை பக்தர்களைப் பாதிப்பதில்லை.

ஒரு யோகி அசாதாரண சக்திகளைப் பெற்றிருந்தார். 'என்னுடைய சக்திகளைப் பாருங்கள்! என்னால் மேகங் களைத் திரட்டி வானத்தை மறைக்க முடியும்' என்றார் அவர். அவர் சொன்னதும் மழைபெய்யத் தொடங்கியது. அதைக் கண்ட ஒருவர், 'சுவாமி, நீங்கள் ஆச்சரியமானவர்தான். ஆனால் எனக்கு இது வேண்டாம். எதை அறிந்தால் நான் வேறொன்றைக் கேட்க மாட்டேனோ அதை எனக்குக் கற்றுக் கொடுங்கள்' என்று சொன்னார். ... நம்மிடமுள்ள சக்தியை அகற்றிவிட வேண்டும். ஒரு சக்தியும் இல்லாமல் இருக்க வேண்டும். சக்தியை விரும்பாமலும் இருக்க வேண்டும். [இதன் பொருள்] என்ன என்பதைச் சாதாரண அறிவால் புரிந்துகொள்ள முடியாது. ... ஆயிரக்கணக்கான நூல்களைப் படித்தாலும் இதை அறிய முடியாது. ... அறிய ஆரம்பிக்கும் போது, இந்த உலகம் முழுவதுமே நம் வசமாகத் தொடங்கும். சிறு பெண், பொம்மைகளை வைத்து விளையாடுகிறாள். ஒவ் வொரு முறையும் ஒரு புதுப் பொம்மையைத் தன் கணவன் என்று கூறுகிறாள். ஆனால் அவளுடைய உண்மையான கணவன் வரும்போது இந்தப் பொம்மைகளை எல்லாம் [நிரந்தரமாகத்] தூக்கி எறிந்து விடுவாள். ... உலகில் உள்ள பந்தபாசங்களும் அப்படிப் பட்டவையே. இறையன்பு என் னும் சூரியன் உதயமாகும்போது, நாம் பெற்ற சக்தி, நமது

பந்தபாசங்கள் போன்ற பொம்மைச் சூரியன்களெல்லாம் மறைந்து விடுகின்றன. இந்தச் சக்திகளைக்கொண்டு நாம் என்ன செய்யப் போகிறோம்? உங்களிடமுள்ள அற்புதச் சக்தியை ஆண்டவன் அகற்றிவிடுவானானால் அவனுக்கு நன்றி கூறுங்கள். அன்பு செலுத்துத் தொடங்குங்கள். இந்த அற்புதச் சக்திகள் எல்லாம் போகட்டும். எனக்கும் ஆண்டவனுக்கும் இடையே அன்புதவிர வேறு எதுவும் இருக்கக் கூடாது. இருக்கின்ற ஒரே அன்பு கடவுள்தான், வேறெதுவும் இல்லை. ஆரம்பத்தில் அன்பு, இடையில் அன்பு, கடைசியிலும் அன்பே!

இறைவனை நேசிப்பதுபற்றி ஓர் அரசி தெருக்களில் உபதேசித்து வந்ததாகக் கதை ஒன்று உண்டு. ஆத்திரமடைந்த அவளது கணவன் அவளுக்குப் பெரும் தொல்லை தந்தான். அவள் நாடு முழுவதும் இங்குமங்குமாக விரட்டப்பட்டாள். தன் அன்பை விவரித்து அவள் பாடல்களைப் பாடுவாள். எல்லா இடங்களிலும் அவளது பாடல்கள் ஒலித்தன: 'என்றும் அழியாத அந்த அன்புக் கொடியை, என் கண்ணீரால் வளர்த்தேன்.' இதுதான் அறுதி லட்சியம், மாபெரும் குறிக்கோள். வேறு என்ன இருக்கிறது? [மக்கள்] எதையெதையோ விரும்புகிறார்கள். தனக்கு வேண்டும், இன்னும் வேண்டும் என்றே எல்லோரும் நினைக்கின்றனர். அதனால்தான் சிலரே பக்தியைப் புரிந்துகொள்கின்றனர், பக்தியில் ஈடுபடுகின்றனர். அவர்களை விழிப்படையச் செய்யுங்கள், அவர்களுக்கு பக்தியின் பெருமையை எடுத்துக் கூறுங்கள், மேலும் உதவி அவர்களுக்குக் கிடைக்கும்.

அன்பு நிரந்தரமானது, முடிவற்ற தியாகம் அது. எல்லாவற்றையும் நீங்கள் விட்டுவிட நேரும். அன்பை நீங்கள் அறிந்தீர்களானால், உங்களுக்கு வேறு எதுவும் எப்போதும் தேவைப்படாது. ... 'எம்பெருமானே! நீ என்றென்றும் என் அன்பனாக இரு'. பக்திக்கு இதுவே தேவை. 'என் அன்பே! உனது அதரங்களால் ஒரு முத்தம் போதும்! உன் முத்தம் பெற்றவர்களின் துன்பங்கள் அனைத்தும் பறந்துவிடுகின்றன. ஒருமுறை உனது முத்தம் கிடைத்தால், மனிதன் இன்பக் கடலில் ஆழ்ந்து விடுகிறான். மற்ற எதன்மீதும் அவன் ஆசைப்படுவதில்லை. அவன் உன்னை மட்டுமே துதிக்கிறான். உன்னை மட்டுமே காண்கிறான்.' மனித அன்பில்கூடத் [தெய்வீக அம்சங்கள் தென்படவே செய்கின்றன.] ஆழ்ந்த அன்பின் முதற்கணத்தில் உலகமே உங்கள் இதயத்துடன்

இயைந்திருப்பதாகத் தோன்றுகிறது. பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பறவையும் உங்கள் அன்பையே பாடுகின்றன. பூக்கள் மலர்வது உங்களுக்காகவே. எல்லையற்ற, நிரந்தரமான அன்பிலிருந்துதான் [மனித] அன்பு வருகிறது.

இறைவனுடைய அன்பன் ஏன் பயப்பட வேண்டும்? திருடர் பயம், துன்பத்தைக் கண்டு பயம், ஏன், இந்த வாழ்க்கையைக் குறித்துதான் ஏன் பயப்பட வேண்டும்? பக்தன் கொடிய நரகத்தில் வாழ நேரலாம். ஆனால் அது நரகமாக இருக்குமா? சொர்க்கம், [நரகம்] போன்ற எண்ணங்களையெல்லாம் விட்டுவிட்டு உயர்ந்த [அன்பைப்] பெற வேண்டும். ... இந்த அன்பு வேண்டும் என்று பித்துப் பிடித்து அலைபவர் நூற்றுக் கணக்கானோர் இருக்கின்றனர். அந்தப் பைத்தியத்தின் முன்பு [இறைவனைத் தவிர] மற்ற எல்லாம் மறைந்துவிடுகின்றன.

இறுதியில் அன்பு, அன்பு செய்பவன், அன்பு செய்யப்படுபவன் எல்லாம் ஒன்றாகிவிடுகின்றன. அதுதான் லட்சியம். ... ஆன்மாவிற்கும் மனிதனுக்கும், இறைவனுக்கும் ஆன்மாவிற்கும் இடையே ஏன் வேறுபாடு இருக்க வேண்டும்?. ... பக்தியின் இந்த இன்பத்தை அனுபவிப்பதற்காகத்தான் இறைவன் தன்னையே நேசிக்க விரும்பினான். அதற்காகத் தன்னையே பல பகுதிகளாகப் பிரித்துக் கொண்டான். ... இதுதான் படைப்பின் முழு ரகசியம் என்கிறான் பக்தன். நாமெல்லாம் ஒன்றே. 'நானும் எனது தந்தையும் ஒன்றே.' நான் இப்போது வேறுபட்டிருப்பது இறைவனை நேசிப்பதற்காகவே. .. எது நல்லது?. .. சர்க்கரையாக ஆவதா, சர்க்கரையைச் சுவைப்பதா? சர்க்கரையாக மாறுவதா—அது என்ன வேடிக்கை? சர்க்கரையைச் சாப்பிட வேண்டும். அதுதான் அன்பின் எல்லையற்ற இன்பம்.

[கடவுளை] நமது தந்தையாக, தாயாக, நண்பனாக, குழந்தையாக நேசிக்கலாம். [நம்மிடமுள்ள பக்தி உணர்ச்சியை வளர்ப்பதற்காக இத்தனைப் பிரிவுகளும் வகுக்கப்பட்டுள்ளன. ஆண்டவன்மீது நெருங்கிய அன்பும், உணர்வும் கொள்ளச் செய்யவே இத்தனை பாதைகளும்.] ஆணிற்கும் பெண்ணிற்கும் இடையே உள்ள காதல் உணர்வுதான் மிகவும் தீவிரமானது. அத்தகைய உணர்வுடன் இறைவனை நேசிக்க வேண்டும். பெண் தன் தந்தையை நேசிக்கிறாள், தாயை நேசிக்கிறாள், குழந்தையை நேசிக்கிறாள். ஆனால் தந்தை, தாய், குழந்தையாகட்டும், அல்லது தோழியாகட்டும், அவர்களிடம் அவள் தன்னை முழுமையாக வெளிப்படுத்த முடியாது. ஒரே

ஒருவனிடம்தான் அவள் எதையும் மறைப்பதில்லை. அதேபோல் தான் ஆணும். .. கணவன்-மனைவி உறவுதான் முழு உறவு. ஆண்-பெண் காதல் என்பது மற்ற எல்லா அன்பும் ஒருங்கிணைந்த ஒன்றாகும். தந்தை, தோழி, குழந்தை எல்லோரும் ஒரு பெண்ணுக்கு அவளது கணவனில் உள்ளனர். அதுபோல் தாய், மகள், மற்றவர் எல்லோரும் ஓர் ஆணுக்கு அவனது மனைவியில் உள்ளனர். இந்த ஆண்-பெண் நேசமான முழுமைக் காதல் இருக்கிறதே, அதைப்போன்ற அன்பை இறைவன்மீது செலுத்த வேண்டும். ரத்த சம்பந்தம் இல்லாத ஓர் ஆண் மகனிடம் இதயத்தைத் திறந்து, பயமின்றி வெட்கமின்றி எல்லாவற்றையும் ஒரு பெண் கூறுகிறாளே! இதில் மறைவு என்பதே இல்லை! தன் நெஞ்சம் அறிவதையெல்லாம் எப்படி மறைக்க முடியாதோ, அப்படியே காதலனிடமும் அவள் எதையும் மறைக்க மாட்டாள். அத்தகைய அன்பை இறைவன்மீது செலுத்த வேண்டும். இவற்றைப் புரிந்துகொள்வது கடினம். நாளடைவில் புரிந்துகொள்வீர்கள். அப்போது பால்வேறுபாட்டுக் கருத்துக்கள் எல்லாம் மறைந்துவிடும். ஆற்றங்கரை மணலில், கோடைக் காலத்தில் விழும் ஒரு துளி நீர் எவ்வளவு விரைவில் மறையுமோ, அதுபோன்றவையே இந்த வாழ்க்கையும் இதில் உள்ள உறவுகளும்.

'இறைவன்தான் படைத்தவர்' என்பது போன்ற கருத்துக்களெல்லாம் குழந்தைகளுக்குத்தான் தகுதியானவை. 'அவன் என் காதலன், என் வாழ்க்கையே அவன்தான்' என்று இதயம் ஏங்க வேண்டும். ...

'எனக்கு ஒரு நம்பிக்கை உள்ளது. உன்னை உலகின் பிரபு என்று அழைக்கிறார்கள். நான் நல்லவனோ, கெட்டவனோ, பெரியவனோ, சிறியவனோ இந்த உலகத்தில் ஓர் அங்கமே. நீயும் என் அன்பனே, என் உடல், என் மனம், என் ஆன்மா எல்லாவற்றையும் உனது பீடத்தில் வைத்துவிட்டேன். அன்பே, இந்தப் பரிசுகளை ஏற்க மறுத்துவிடாதே!' ※

## 7. அன்பு மதம்

லண்டன், 16 நவம்பர் 1895

அனுபூதியின் உச்சியை அடைவதற்கு ஒருவன் சின்னங்களையும் சடங்குகளையும் கடந்து போக வேண்டும். 'ஒரு மதத்தில் பிறப்பது நல்லது; ஆனால் ஒரு மதத்தினனாகவே சாவது தீயது' என்று நாங்கள் இந்தியாவில் கூறுவதுண்டு. சிறு செடியைப் பாதுகாக்க வேலி வேண்டும். அது மரமான பிறகு வேலி இடையூறாகிவிடும். பழைய முறைகளைக் குறை கூறுவதும் கண்டிப்பதும் தேவையில்லை, மதத்தில் வளர்ச்சி இருக்க வேண்டும் என்பதை நாம் மறந்துவிடுகிறோம்.

முதலில் நாம் ஓர் உருவக் கடவுளை நினைக்கிறோம். படைப்பவர், எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர் என்றெல்லாம் அவரைப் பலவாறு அழைக்கிறோம். ஆனால் அன்பு தோன்றும்போது, கடவுள் அன்பு மட்டுமே ஆகிவிடுகிறார். கடவுள் எப்படிப்பட்டவர் என்பதைப் பற்றியெல்லாம், அன்பு நிறைந்த பக்தன் கவலைப்படுவதில்லை. ஏனெனில் அவன் கடவுளிடமிருந்து எதையும் விரும்பவில்லை. 'நான் பிச்சைக்காரன் அல்ல' என்று இந்திய மகான் ஒருவர் கூறுகிறார். பக்தன் பயப்படுவதும் இல்லை. கடவுளை மனிதராகவே கருதி, அவன் அன்பு செலுத்துகிறான்.

அன்பை அடிப்படையாகக்கொண்ட சில முறைகளை இங்கே காணலாம்:

1. சாந்தம்: கடவுளே எல்லோருக்கும் தந்தை, பிறருக்கு உதவி செய்ய வேண்டும் போன்ற கருத்துக்களுடன் கூடிய பொதுவான, அமைதியான அன்பு.

2. தாஸ்யம்: சேவை-லட்சியம். நன்மையும் தண்டனையும் தருகின்ற தலைவராகவோ, அதிகாரியாகவோ, அரசனாகவோ கடவுளைக் கருதுதல்.

3. வாத்ஸல்யம்: கடவுளைத் தாயாகவோ, குழந்தையாகவோ பாவிக்கும் முறை. இந்தியாவில் தாய் ஒருபோதும் தண்டிப்பதில்லை.

---

இது சகோதரி நிவேதிதை எடுத்த குறிப்பு.

இந்த ஒவ்வொரு முறையிலும் பக்தன் கடவுளைத் தனக்கு ஏற்றாற்போல் கற்பித்துக்கொண்டு வழிபடுகிறான்.

4. சக்யம்: கடவுளை நண்பனாகப் பாவிக்கும் முறை. இங்கே அச்சம் என்பதே இல்லை; சமத்துவ உணர்வும் நெருக்கமும் நிலவுகிறது. கடவுளை நண்பனாகவும் விளையாட்டுத் தோழனாகவும் கருதி வழிபடுகின்ற இந்துக்கள் இருக்கிறார்கள்.

5. மதுரம்: கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள இனிய காதல்முறை. புனிதையான தெரசாவும், வேறு பல புனிதர்களும் இதற்கு உதாரணங்கள். கடவுளை மனைவியாக எண்ணும் பாவனை பாரசீகர்களிடம் உண்டு. இந்துக்கள் கடவுளைக் கணவராகப் பாவிக்கிறார்கள். 'தெய்வமே என் கணவர், எனக்கு எல்லாம் அவரே' என்று பிரச்சாரம் செய்த பேரரசியான மீராவை இங்கு நினைவுகூரலாம்.

பாவனையைப் பெரிதாக்கி, மிகைப்படுத்தி, கடவுளை எல்லாம் வல்லவர் என்றும், தந்தை என்றும் கூறுவது தெய்வ நிந்தனை என்று கூறுபவர்களும் இருக்கின்றனர். இந்த வழிபாட்டு முறையின் மொழி காமம் நிறைந்ததாக இருக்கும். சிலர் கள்ளக்காதலின் மொழியையும் பயன்படுத்துகின்றனர். கண்ணனும் கோபியரும் கொண்ட காதல் இதைச் சார்ந்தது. இந்த முறையைப் பின்பற்றுபவன் மிகக் கீழான நிலையை அடைவான் என்று உங்களுக்குத் தோன்றலாம். நெறி பிறழத்தான் செய்கிறது, என்றாலும் இந்த நெறியின்மூலமும் மகான்கள் பலர் தோன்றியுள்ளனர். மனிதர்களால் ஏற்படுத்தப்படுகின்ற எந்த முறையும் தவறாகப் பயன்படுத்தப்படாமல் இருப்பதில்லை. பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள் என்று நீங்கள் சமையல் செய்யாமலிருப்பீர்களா? திருடர்கள் இருக்கிறார்கள் என்று நீங்கள் உடைமை எதுவும் இல்லாதிருப்பீர்களா? 'என் அன்பே, உன் உதடுகள் உதிர்த்த அந்த ஒரு முத்தத்தை ஒரே தடவை சுவைத்து, நான் வெறிபிடித்தவன் ஆனேன்!'

ஒருவன் ஒரு நெறியைச் சார்ந்தவனாகவோ, சடங்குகளில் ஈடுபாடு உடையவனாகவோ நெடுங்காலம் இருக்க முடியாது என்பதே இந்தக் கருத்தின் விளைவாகும். முக்தி என்ற இறுதி நிலையே இந்திய மதத்தின் குறிக்கோள். இதையும் துறந்து, 'எல்லாம் அன்புதான், எல்லாம் அன்பிற்காகவே' என்ற நிலை அதன்பிறகு ஏற்படுகிறது.

இவற்றின் இறுதியில் தோன்றுவது வேறுபாடற்ற அன்பு. அதுவே ஆன்மா. ஒரு பாரசீகப் பாடல் உண்டு. ஒரு

காதலன் தன் காதலியின் வீடு சென்று கதவைத் தட்டினான். 'யார்?' என்று அவள் கேட்டாள். 'நான்தான் உன் காதலன்' என்று அவன் பதில் கூறினான். 'போய்விடு, அப்படி யாரையும் எனக்குத் தெரியாது' என்று அவள் சொன்னாள். ஆனால் அவள் அதே கேள்வியை நான்காவது முறை கேட்டபோது, 'நானே நீ; என் அருமைக் காதலியே, எனக்காக நீ கதவைத் திற' என்றான் அவன். உடனே கதவு திறக்கப்பட்டது.

ஒரு பெண்ணின் மொழியை உபயோகித்துக் காதலை விளக்குகிறார் ஒரு பெரிய மகான்: 'நான்கு கண்கள் சந்தித்தன. இரண்டு உயிர்களில் மாற்றங்கள் ஏற்பட்டன. இப்போது நான் அவளை ஆண் என்றோ, என்னைப் பெண் என்றோ கூற இயலாது; அல்லது அவளைப் பெண் என்றோ என்னை ஆண் என்றோ கூற இயலாது. இது மட்டும் எனக்கு நினைவில் இருக்கிறது. முன்பு நாங்கள் இரண்டு உயிர்கள்; காதல் தோன்றிற்று, இப்போது இருப்பது ஒரே ஆன்மா.'

மிக உயர்ந்த அன்பில் ஆன்மாக்களின் ஐக்கியமே உள்ளது. வேறுவிதமான அன்பு எல்லாம் விரைவில் அழிந்துவிடும். ஆன்மீக அன்பு ஒன்றே நிலைத்திருப்பது, அதுவே வளரும்.

காதல் ஒரு குறிக்கோளைக் காண்கிறது. இது முக்கோணத்தின் மூன்றாவது கோணம். கடவுளே காரணமாகவும், படைப்பவராகவும், தந்தையாகவும் இருக்கிறார். அன்பே இறுதி நிலை.

தான் பெற்ற குழந்தை கூன்முதுகோடு இருக்கிறதே என்று தாய் வருந்துகிறாள். ஆனால் சிலநாள் பாலூட்டி வளர்த்ததும், அவனை அன்புடன் பாராட்டுகிறாள்; அவனே மிகமிக அழகிய குழந்தை என்று கருதுகிறாள். [கறுத்த] எதியோப்பியப் பெண்ணின் உருவத்தில் [சிறந்த அழகியும் கிரேக்க அரசிளங்குமரியுமான] ஹெலனின் அழகையே ஒரு காதலன் காண்கிறான். என்ன நடக்கிறது என்பதை நாம் பொதுவாக உணர்வதில்லை. எதியோப்பியப் பெண்ணின் புருவம் வெறும் ஒரு தூண்டுதல். அங்கே காதலன் ஹெலனைக் காண்கிறான். முத்துச்சிப்பி மணலை முத்தாக்குவதுபோல் அவனது லட்சியமான அழகு, அந்தத் தூண்டுதலில் படிந்து அதை மறைத்து, அதை அந்த லட்சியமே அதாவது ஆக்கிவிடுகிறது. கடவுளே இந்த லட்சியம், இதன்மூலம் ஒருவன் எல்லாவற்றையும் காணலாம்.

ஆதலால் அன்பையே நேசிக்கின்ற நிலைக்கு வருகிறோம். இதனை விளக்க இயலாது. இதனைச் சொல்லும் திறமை சொற்களுக்கு இல்லை. இங்கே நாம் ஊமையாகி விடுகிறோம்.

அன்புநிலையில் புலன்கள் பேரூக்கம் பெறுகின்றன. மனித அன்பு பல குணங்களோடு விரவியது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். அன்பு செய்யப்படுகின்ற மற்றவரின் மனப்போக்கையும் சார்ந்தது அது. இப்படி அன்பு ஒருவரையொருவர் சார்ந்திருக்கும் தன்மையை விளக்குகின்ற சொற்கள் இந்திய மொழிகளில் உண்டு. மிகமிகத் தாழ்ந்த காதல் தன்னலம் மிக்கது; நேசிக்கப்படுவதால் ஏற்படுகின்ற மகிழ்ச்சியைச் சார்ந்தது அது. 'ஒருவர் கன்னத்தைக் காட்டுகிறார், மற்றவர் முத்தமிடுகிறார்' என்று நாங்கள் இந்தியாவில் சொல்வதுண்டு. இதைவிட உயர்ந்தது இருவரிடமும் முகிழ்த்து நிற்கும் இருதலைக் காதல். ஆனால் இதுவும் பின்னர் மறைந்து போகும். உண்மைக் காதல், தன் அனைத்தையும் தந்துவிடுகிறது. நேசிப்பவரைப் பார்க்க வேண்டும் என்றுகூட நாம் விரும்புவதில்லை. நமது உணர்ச்சியை வெளிப்படுத்துவதற்கு நாம் எதையும் செய்வதில்லை. கொடுத்துக்கொண்டே இருக்கும் நிலையே நமக்குப் போதுமானது என்ற எண்ணம் அங்கே வந்துவிடுகிறது. மனிதர்களுக்குள் இந்த அன்பு சாத்தியமில்லை. ஆனால் இறைவனை இவ்வாறு நேசிக்க முடியும்!

தெருவில் சண்டையிட்டுக்கொள்கின்ற சிறுவர்கள் கடவுள் பெயரால் ஆணையிட்டால் இந்தியாவில் அதைத் தெய்வ நிந்தனையாகக் கருதுவதில்லை. 'நெருப்பிலே கையை வை. அதன் சூட்டை நீ உணர்ந்தாலும் சரி, உணராவிட்டாலும் சரி; அது உன்னைச் சுடவே செய்யும். அதுபோல், இறைவனின் திருநாமத்தைச் சொல்வதனால் நன்மை மட்டுமே ஏற்படும்' என்று நாங்கள் சொல்வதுண்டு.

தெய்வ நிந்தனை என்ற கருத்து யூதர்களிடமிருந்து வந்தது. பாரசீகர்களது அரச பக்தியால் அவர்கள் பெரிதும் கவரப்பட்டார்கள். கடவுள் ஒரு நீதிபதி, தண்டிப்பவர் போன்ற கருத்துக்கள் தன்னளவில் தீயவை அல்ல, ஆனால் தாழ்ந்தவை; காட்டுமிராண்டித்தனமானவை.

முக்கோணத்தின் மூன்று கோணங்கள்: அன்பு யாசிப்பதில்லை, அன்பு பயம் அறியாது, அன்பு எப்போதும் லட்சியமாகவே இருக்கும்.

அன்புப் பரம்பொருள் இந்த உலகத்தை நிறைத்து நிற்கவில்லை என்றால், யாரால் ஒரு நிமிடம் வாழ முடியும்? யாரால் இமைப்பொழுது சுவாசித்திருக்க முடியும்?

நாம் சேவை செய்யவே பிறந்துள்ளோம் என்பதை நம்முள் பலரும் அறியலாம். பலன்களை இறைவனிடம் விட்டுவிட வேண்டும், இறையன்புக்காகவே வேலை செய்ய வேண்டும். தோல்வியில் கலங்க வேண்டுவதில்லை. இறையன்புக்காகவே நாம் வேலை செய்கிறோம்.

பெண்களிடம் தாய்மை இயல்பு அதிகமாக வளர்ச்சி பெற்றுள்ளது. அவர்கள் இறைவனைக் குழந்தையாக வழிபடு கிறார்கள். அவர்கள் எதையும் கேட்பதில்லை, ஆனால் எதை யும் செய்வார்கள்.

கத்தோலிக்க மதம் இந்த ஆழ்ந்த கருத்துக்களில் பல வற்றைப் போதிக்கிறது. அது குறுகிய போக்குக் கொண்டதாக இருந்தாலும், மிகமிக உயர்ந்த மதப் பண்பு உடையது. தற்கால சமுதாயத்தில், பிராட்டஸ்டன்ட் மதம் பரந்த போக்குடையது, ஆனால் ஆழமில்லாதது. ஒரு விஞ்ஞானக் கண்டுபிடிப்பினால் ஏற்படும் பயனைப்பற்றிக் குழந்தையிடம் கேட்பது எவ்வளவு தவறோ, உண்மையை, அதனால் ஏற்படும் நன்மையைக் கொண்டு நிர்ணயம் செய்ய முயல்வதும் அவ்வளவு தவறாகும்.

சமூகத்தைக் கடந்து நாம் வளர வேண்டும். நியதிகளை உடைத்தெறிந்து அவற்றிற்கு அப்பால் செல்ல வேண்டும். இயற்கையை வெல்வதற்காகவே இயற்கைக்கு அடங்கி வாழ்கிறோம். கடவுள், பணம் என்ற இரண்டையும் ஒரே நேரத் தில் யாரும் கொள்ள முடியாது என்பதே துறவு என்பதன் பொருள்.

உங்கள் எண்ணத்தின் ஆற்றலையும் அன்பின் சக்தியை யும் ஊக்கப்படுத்துங்கள். உங்கள் தாமரையை மலரவிடுங்கள். தேனீக்கள் தாமே வந்து சேரும். முதலில் உங்களிடம் நம்பிக்கை வையுங்கள்; பிறகு கடவுளிடம் நம்பிக்கை கொள்ளுங்கள். ஆற்றல்மிக்க சிலர் இந்த உலகத்தையே ஆட்டிவைக்க முடியும். நமக்கு வேண்டியது உணர ஓர் இதயம், சிந்திக்க ஒரு மூளை, வேலை செய்வதற்கு வலிய கைகள். மிருகங்களுக்காக புத்தர் தம்மைத் தியாகம் செய்தார். வேலை செய்வதற்குத் தகுந்த ஒரு கருவியாக உங்களை ஆக்கிக் கொள்ளுங்கள். ஆனால் செயல் புரிவது நீங்கள் அல்ல, கடவுளே. உலகம் முழுவதும் ஒரு தனி மனிதனிடம் அடங்கியிருக்கிறது. உலகத்துச் சக்திகள் அனைத் தும் ஓர் அணுப் பொருளின் உள்ளே உள்ளது. இதயத்திற்கும் மூளைக்கும் கருத்து வேறுபாடு ஏற்படும்போது, இதயத்தையே பின்பற்றுங்கள்.

நேற்று, போட்டி என்பது நியதியாக இருந்தது. இன்று, கூட்டுறவு என்பது நியதியாக உள்ளது. நாளை நியதியே இருக்காது. உங்களை மகான்கள் புகழட்டும், அல்லது உலகம் இகழட்டும். உங்களுக்குச் செல்வ வளம் வரட்டும், அல்லது வறுமையும் கந்தையும் உங்களைச் சேரட்டும். ஒரு நாள் காட்டிலுள்ள தழைகளையும் கிழங்குகளையும் உணவாகக் கொள்ளலாம், மறுநாள் ஐம்பதுவித உணவுகளுடன் விருந்து உண்ணலாம். இடதோ வலதோ பக்கம் பார்க்காமல் உன்னையே தொடர்ந்து செல்.

[பவஹாரி பாபா என்ற மகான் எவ்வாறு தம் பாத்திரங்களை அவசரமாக எடுத்துக்கொண்டு, திருடனைப் பின் தொடர்ந்து ஓடி, அவன் காலில் விழுந்து, 'பிரபோ, அங்கிருந்தது நீர் என்பதை நான் அறியாது போனேன். இவற்றையும் எடுத்துக்கொள்ளும். இவையும் உமது உடைமையே. உங்கள் குழந்தையாகிய என்னை மன்னியுங்கள்' என்று கூறியதை, ஒரு கேள்விக்கு விடையாக சுவாமிஜி கூறத் தொடங்கினார்.

அந்த மகானை ஒரு நல்ல பாம்பு கடித்ததையும், அன்றிரவே அவர் குணமடைந்த செய்தியையும், 'என் அன்பு தெய்வத்திடமிருந்து ஒரு தூதன் வந்தான்' என்று அவர் கூறியதையும் சுவாமிஜி தெரிவித்தார்.] ❁

## 8. மந்திரமும் மந்திர சைதன்யமும்

குரு சிஷ்ய பரம்பரையாக வருகின்ற சில சொற்கள் உள்ளன, அவற்றை ஜபிப்பதாலேயே ஒருவித அனுபூதி பெறலாம் என்று மந்திர சாஸ்திரிகள் நம்புகிறார்கள். மந்திர சைதன்யம் என்னும் சொல் இரண்டு வகையில் பொருள்கொள்ளப் படுகிறது. ஒரு குறிப்பிட்ட மந்திரத்தை ஜபித்தால் அதன் அதிதேவதை யான உங்கள் இஷ்டதெய்வத்தை நீங்கள் காண்பீர்கள் என்பது சிலரது கருத்து. தகுதியற்ற குருவிடமிருந்து மந்திரோபதேசம் பெற்று அதனை ஜபிக்க நேர்ந்தால் அதற்குச் சில பரிகாரங்கள் செய்ய வேண்டும். அப்போதுதான் அந்த மந்திரம் சைதன்யம் பெறும், உயிர்பெறும். அதன்பிறகு அதை ஜபித்தால்தான் பலன் உண்டாகும். இது வேறு சிலரின் கருத்து. இவ்வாறு உயிர்பெறுகின்ற வெவ்வேறு மந்திரங்கள் வெவ்வேறு அடை யாளங்களைக் காட்டுகின்றன. எல்லாவற்றிற்கும் பொதுவான அறிகுறி ஒன்று உண்டு: அப்படி உயிரூட்டப்பட்ட மந்திரத்தைச் சிரமமின்றி நீண்ட காலம் ஜபம் செய்ய இயலும், விரைவில் மனம் ஒருமுகப்படும். இது தாந்திரீக மந்திரம் பற்றியது.

வேதகாலத்திலிருந்தே மந்திரங்கள்பற்றி இருவகைக் கருத்துக்கள் நிலவுகின்றன. யாஸ்கரும் பிறரும் வேதங்கள் பொருள் உள்ளவை என்கிறார்கள். ஆனால் புராதன மந்திர சாஸ்திரிகளோ, 'வேத மந்திரங்கள் பொருளற்றவை, யாக காலத்தில் பாராயணம் செய்வது மட்டுமே அவற்றின் ஒரே பலன், யாகங்களில் அவற்றை ஓதும்போது அவை கட்டாய மாக உலக இன்பங்களையோ ஆன்மீக ஞானத்தையோ தர வல்லவை' என்கிறார்கள். பின்னையது உபநிடதங்களை ஓதுவ தால் ஏற்படுவது. ❋

# V. நாரத பக்தி சூத்திரங்கள்[1]

**அத்தியாயம் 1**

1. தீவிரமான இறையன்பே பக்தி.

2. அது அன்பின் அமுதம்;

3. எதைப் பெற்றால் மனிதன் பூரணனாகவும் அழியாத் தன்மை பெற்றவனாகவும், என்றும் திருப்தியுள்ளவனாகவும் ஆவானோ அதுதான் பக்தி.

4. எதை அடைந்தால் அதற்குமேல் மனிதனுக்கு ஆசைகள் ஏற்படாதோ, எதைக் கண்டும் பொறாமைப்படாத நிலையை அவன் அடைவானோ, வீண்கர்வம் கொள்ளமாட்டானோ அதுதான் பக்தி.

5. எதை அறிந்தால் மனிதன் ஆன்மீகத்தில் நிலைபெறு வானோ, அமைதி பெறுவானோ, இறைவனிடம் மட்டுமே இன்பம் காண்பானோ அதுவே பக்தி.

6. எல்லா ஆசைகளையும் தடுப்பது பக்தி. எனவே எந்த ஆசையையும் நிறைவேற்றுவதற்கு அதைப் பயன்படுத்த முடியாது.

7. பொதுவான மற்றும் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள வழிபாட்டு முறைகளை விட்டுவிடுவதே சன்னியாசம்.

8. யாருடைய உள்ளம் முழுவதுமே இறைவனை நாடு கிறதோ அவனே பக்தி-சன்னியாசி. இறையன்பிற்கு இடை யூறாக இருக்கின்ற அனைத்தையும் அவன் ஒதுக்கிவிடுவான்.

9. வேறு புகலிடங்களை விட்டு இறைவனையே அவன் புகலிடமாகக் கொள்கிறான்.

10. வாழ்க்கை நிலைபெறாதவரை சாஸ்திரங்களைப் பின்பற்ற வேண்டும்.

11. இல்லையேல் சுதந்திரம் என்ற பெயரில் தீயவற்றைச் செய்யும் அபாயம் இருக்கிறது.

---

1. சம்ஸ்கிருத சூத்திரங்களின் திரண்ட மொழிபெயர்ப்பு. சுவாமிஜி சொல்லச்சொல்ல எழுதப்பட்டது.

12. அன்பு நிலைபெற்ற பின்பு, உயிரைப் பாதுகாப்ப தற்கு அத்தியாவசியமானவை தவிர மற்ற சமூக மரபுகள்கூடக் கைவிடப்படுகின்றன.

13. அன்பிற்குப் பல விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. ஆனால் அன்பின் அடையாளங்கள் என்று நாரதர் இவை களைக் கூறுகிறார்: எல்லா சிந்தனைகளும், எல்லா பேச்சும், எல்லா செயல்களும் இறைவனிடம் அர்ப்பணிக்கப்பட்டு, அவரைக் கணநேரம் மறப்பதுகூடத் தாங்க முடியாத துயரம் தரும்போது அன்பு ஆரம்பமாகிவிட்டது.

14. கோபியரிடம் இருந்தது போன்ற அன்பு வேண்டும்.

15. ஏனெனில் கண்ணனைத் தங்கள் காதலனாகக் கொண் டாலும் அவனது கடவுள் தன்மையை அவர்கள் ஒருபோதும் மறக்கவில்லை.

16. இல்லாவிட்டால் அவர்கள் கற்பிழந்த பாவத்திற்கு உள்ளாகியிருப்பார்கள்.

17. இதுதான் அன்பின் உயர்ந்த நிலை. ஏனெனில் பிரதி பலன் வேண்டுமென்ற விருப்பம் இதில் இல்லை. மனித அன்பிலோ பிரதிபலன் வேண்டுமென்ற விருப்பம் இருக்கிறது.

### அத்தியாயம் 2

1. பக்தி கர்மத்தைவிடச் சிறந்தது, ஞானத்தைவிடச் சிறந்தது, யோகத்தை (ராஜயோகம்)விடச் சிறந்தது. ஏனெ னில் பக்தியின் பலனும் பக்தியே. வழி, குறிக்கோள் இரண் டும் பக்தியே.

2. உணவை வெறுமனே அறிவதாலோ பார்ப்பதாலோ பசி தீராது. அதுபோல் அன்பு இல்லாதவன் வெறும் இறை அறிவாலோ இறையுணர்வாலோ திருப்தி அடைய முடியாது. அன்பே உயர்ந்தது.

### அத்தியாயம் 3

1. பக்தியைப்பற்றி இவ்வாறெல்லாம் மகான்கள் கூறியிருக் கிறார்கள்:

2. இந்த பக்தியை விரும்பும் ஒருவன் புலனின்பங்களை, ஏன், மக்களின் சகவாசத்தைக்கூட விட வேண்டும்.

3. இரவும் பகலும் அவன் பக்தியைப் பற்றியே நினைக்க வேண்டும்; வேறு எந்த எண்ணமும் கூடாது.

4. எங்கே பஜனை செய்கிறார்களோ, எங்கே கடவுளைப் பற்றிப் பேசுகிறார்களோ, அங்கே [அவன்] செல்ல வேண்டும்.

5. ஒரு மகானின் [முக்த புருஷனின்] அருளே பக்தி தோன்றுவதற்கு முக்கியக் காரணமாக உள்ளது.

6. மகானைக் காண்பது அரிது. கண்டுவிட்டால் நமக்கு நற்கதி உறுதி.

7. இறையருளால்தான் இத்தகைய குருமார்கள் நமக்குக் கிடைக்கிறார்கள்.

8. இறைவனுக்கும் அவனது அடியார்களுக்கும் இடையே வேறுபாடு எதுவும் இல்லை.

9. எனவே அவர்களைத் தேடு.

10. தீயோர் உறவை எப்போதும் விலக்க வேண்டும்.

11. ஏனெனில் அது காமத்தையும் கோபத்தையும் மன மயக்கத்தையும் ஏற்படுத்துகிறது, நாம் லட்சியத்தை மறக்கும் படிச் செய்கிறது, சங்கல்பத்தை (விடாமுயற்சியை) அழிக்கிறது, எல்லாவற்றையுமே அழித்துவிடுகிறது.

12. இந்தத் தொந்தரவுகள் எல்லாம் முதலில் சிறு அலைகள்போல் தோன்றுகின்றன. ஆனால் தீயவர்களின் தொடர்பு அவற்றைக் கடல்போல் பெரிதாக்குகிறது.

13. யார் எல்லா பற்றுகளையும் விடுகிறானோ, மகான்களுக்குச் சேவை செய்கிறானோ, தனிமையில் வசிக்கிறானோ, இந்த உலக பந்தங்களைத் துறக்கிறானோ, இயற்கையின் சட்டதிட்டங்களுக்கு அப்பால் செல்கிறானோ, தன் வாழ்விற்குக் கூடக் கடவுளை நம்பியிருக்கிறானோ அவன் மாயையைக் கடந்து செல்வான்.

14. யார் கர்மத்தின் பலன்களைத் துறக்கிறானோ, யார் எல்லா செயல்களையும் விடுகிறானோ, யார் இன்ப துன்பமாகிய இருமையை விடுகிறானோ, யார் சாஸ்திரங்களைக்கூட விட்டுவிடுகிறானோ அவனுக்குக் கடவுள்மீது இடையீடற்ற பக்தி ஏற்படுகிறது.

15. அவன் இந்த நதியைத் தாண்டுகிறான், மற்றவர்களும் தாண்ட உதவுகிறான்.

### அத்தியாயம் 4

1. அன்பின் இயல்பை வார்த்தைகளால் விளக்க முடியாது.

2. தான் உண்ணும் பொருட்களின் ருசியை ஓர் ஊமை கூற முடியாது. ஆனால் அவனுடைய செயல்களிலிருந்து, அவனுடைய உணர்ச்சிகளைப் புரிந்துகொள்ளலாம். அது போல் இந்த அன்பை ஒருவன் சொற்களால் விவரிக்க முடியாது.

ஆனால் அவனுடைய செயல்கள் அவனது உணர்ச்சிகளைக் காட்டிவிடும்.

3. சில அபூர்வமான மனிதர்கள் இந்த உணர்ச்சியை விவரித்திருக்கிறார்கள்.

4. எல்லா குணங்களுக்கும் அப்பால், எல்லா ஆசைகளுக்கும் அப்பால், எப்போதும் குறைவற்று வளர்ந்து கொண்டே போகின்ற தடைபடாத உயர்ந்த உணர்வே அன்பு.

5. ஒருவனுக்கு இந்த அன்பு ஏற்பட்டால் அவன் எல்லா இடங்களிலும் அன்பைக் காண்கிறான், எல்லா இடங்களிலும் அன்பையே கேட்கிறான், எல்லா இடங்களிலும் அன்பு பற்றியே பேசுகிறான், எல்லா இடங்களிலும் அதையே சிந்திக்கிறான்.

6. குணங்கள் அல்லது நிலைகளுக்கு ஏற்ப இந்த அன்பு பல விதங்களில் வெளிப்படுகிறது.

7. குணங்கள்: தாமஸம் (மந்தம், புத்திக் குறைவு), ராஜஸம் (அமைதியற்ற தன்மை, செயலாற்றும் தன்மை), ஸத்வம் (தூய்மை, சாந்தம்).

நிலைகள்: ஆர்த்தி (துன்பத்தில் உழலும் நிலை), அர்த்தார்த்தி (எதையோ விரும்பும் நிலை), ஜிஜ்ஞாஸு (சத்தியத்தைத் தேடும் நிலை), ஞானி (அறிவு பெற்ற நிலை).

8. இவற்றில் முன்னால் கூறப்பட்டவற்றைவிடப் பின்னால் கூறப்பட்டவை உயர்ந்தவை.

9. வழிபாட்டு முறைகளில் பக்திதான் எளியது.

10. பக்திக்கு அத்தாட்சி அதுவே. அதற்கு மற்ற அத்தாட்சி தேவையில்லை.

11. அதன் இயல்பு அமைதியும் பரிபூரண ஆனந்தமும் ஆகும்.

12. பக்தி யாருக்கும் எதற்கும் தீங்கு விளைவிக்க ஒரு போதும் முயல்வதில்லை. சாதாரண வழிபாட்டு முறைகளுக்கும் அது குறுக்கே நிற்பதில்லை.

13. காமம், கடவுளைப் பற்றிய சந்தேகம், எதிரிகளைப் பற்றிய பேச்சு—இவைபற்றிய உரையாடல்களைக் கேட்கக் கூடாது.

14. அகங்காரம், தற்பெருமை முதலியவற்றை விட்டுவிட வேண்டும்.

15. இந்த உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்றால், அவற்றைக் கடவுளிடம் சமர்ப்பியுங்கள். உங்களுடைய செயல்களை எல்லாம் அவரது பொறுப்பில் விடுங்கள்.

16. அன்பு, அன்பு செய்பவர், அன்பு செய்யப்படுபவர் ஆகிய மூன்றையும் இணைத்து இறைவனுடைய நிரந்தரத் தொண்டனாக, அவரது நிரந்தர மணமகளாக நம்மை எண்ணி வழிபட வேண்டும். இத்தகைய அன்பை இறைவனிடம் கொள்ள வேண்டும்.

**அத்தியாயம் 5**

1. கடவுள்மீது செலுத்தப்படும் அன்பே அனைத்திலும் உயர்ந்தது.

2. இத்தகைய அன்பு உடையவர்கள் பேசும்போது, அவர்களுடைய தொண்டை அடைத்துக்கொள்ளும். அவர்கள் அழுவார்கள், சுதறுவார்கள். புனிதத்தலங்களுக்குப் புனிதத்தை அளிப்பவர்கள் அவர்களே. அவர்களிடம் இறையுணர்வு ஊடுருவி இருப்பதால், நல்ல காரியங்களை மேலும் நல்ல காரியங்களாகவும், நல்ல நூல்களை மேலும் நல்ல நூல்களாகவும் செய்கிறார்கள்.

3. ஒருவன் கடவுளிடம் ஆழ்ந்த அன்பு கொள்ளும்போது, அவனது மூதாதையர்கள் மகிழ்கிறார்கள், தேவர்கள் ஆனந்த நர்த்தனமிடுகிறார்கள், பூவுலகிற்கு ஒரு மகான் கிடைக்கிறார்.

4. இத்தகைய பக்தர்கள் ஜாதியிலோ, ஆண்-பெண் என்றோ அறிவிலோ, அழகிலோ, குலப் பெருமையிலோ, செல்வத்திலோ வேற்றுமை பாராட்டுவதில்லை.

5. ஏனெனில் இவர்கள் எல்லோரும் இறைவனுக்கு உரியவர்கள்.

6. வாக்குவாதங்களைத் தவிர்க்க வேண்டும்.

7. ஏனெனில் அவற்றிற்கு முடிவே இல்லை. அவை திருப்தியான முடிவுக்கு இட்டுச் செல்வதும் இல்லை.

8. இந்த அன்பைப்பற்றிக் கூறும் நூல்களைப் படியுங்கள், அதனை வளர்க்கக்கூடிய செயல்களைச் செய்யுங்கள்.

9. இன்பதுன்பங்கள், லாபநஷ்டங்கள் பற்றிய ஆசைகளை எல்லாம் விட்டு, இறைவனை இரவும்பகலும் வழிபடுங்கள். ஒரு கணத்தைக்கூட வீணாகச் செலவிடக் கூடாது.

10. அஹிம்சை, சத்தியம், பரிசுத்தம், இரக்கம், இறையுணர்வு ஆகியவற்றை எப்போதும் கடைப்பிடிக்க வேண்டும்.

11. மற்ற சிந்தனைகளை எல்லாம் விட்டுவிட்டு, முழு மனத்துடன், இரவும்பகலும் இறைவனை வழிபட வேண்டும். இவ்வாறு செய்தால் அவர் தம்மை வெளிப்படுத்துவார்; பக்தர்கள் உணருமாறு செய்வார்.

12. கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று முக்காலத்திலும் அன்பே சிறந்தது.

ஆகையால் புராதன மகான்களைப் பின்பற்றி, உலகத்தினரின் ஏளனத்திற்கு அஞ்சாமல், அன்பின் தத்துவத்தைப் போதிக்க நாங்கள் தைரியமாக முன்வந்துள்ளோம். ❋

஽ சுடர் 1 முற்றும் ஽

## சொல்லடைவு

---

